அத்யாயம் பக்கம்

121 ஸாத்யகி துரியோதனாதியரைக் தாங்களே கொன்று பாண்டவர்களின் வனவாஸ முடியுமவரை அபிமன்யுவை அரசனாக்குவோமென்றது . . . 440- 443
கோவிந்தர் பாண்டவர்கள் பிறர் வலிமையை அடுத்தல் பிழையாமென்பதையும் அவர்களுடைய மனக்குறைகளையும் சொல்லி, ஸாத்யகியைத் தடுத்தது . 443
122 கயன் யாகங்கள் செய்தது ... ... 444- 445
வைசாய பர்வதம், நாமத்தை இவற்றின் மகிமை ... 446
123-126 சர்யாதி சயவனராச்ரமம் வந்ததும், ஸுகன்னி சயவனர் கண்களைக் குத்தியதும் .. .. 447- 448
சயவனர் அரசன் சேனைக்கு மலஜல பந்தம் கட்டியதும், அவன் ஸுகன்னியை அவருக்குக் கொடுத்ததும் ... 448- 449
அச்வினீ தேவர்கள் ஸுகன்னியை மனைவியாக விரும்பியதும், அவள் மறுத்ததும் . . ... 449- 450
அச்வினீ தேவர்கள் சயவனருக்கு இளமையையும் அழகையும் கொடுத்து அவருடன் ஒத்த வடிவங்கொண்டதும், அப்பொழுதும் ஸுகன்னி சயவனரையே அடைந்ததும் .. ... 451
சயவனர் அச்வினீ தேவர்களுக்கு யாகத்தில் ஸோமபானம் செய்வியப்பதாகச் சொல்லியது .. ... 451- 452
சர்யாதி யாகம் செய்ததும், சயவனர் அச்வினீ தேவர்களுக்காக ஸோமத்தைக் க்ரஹித்ததும் ... ... 452-453
இந்திரன் வஜ்ராயுதத்தை எறிந்ததும், ச்யவனர் அவன் கையை ஸ்தம்பிக்கச் செய்ததும் ... ... 453
சயவனர் க்ருத்யையை உண்டுபண்ணியதும், அது இந்திரனைத் தின்ன ஓடியதும் ... ... 453- 454
இந்திரன் வேண்டினதும், ச்யவனர் மதத்தை மதுபான முதலியவற்றில் பகுத்து வைத்ததும் ... ... 454- 455
127 யுவனாச்வன் ஸந்ததிக்காக வைத்திருந்த நீரைக் குடித்தது . . ... 458
யுவனாச்வன் மரியாமலே குழந்தையை ஈன்றது ... 459
மாந்தாதா எனனும் பெயர்க் காரணம் ... ... 459- 460
மாந்தாதாவின் மகிமை ... ... 460- 461
128 ஸோமகனுக்கு ஒரே பிள்ளை பிறந்ததும், அவன் பல பிள்ளைகளை விரும்பியதும் ... ... 461- 463
புரோகிதர் ஸோமகனுக்குப் பல பிள்ளைகளை அடைய உபாயங் கூறியது ... ... 463

அத்யாயம் பக்கம்

129 புரோகிதர் யாகஞ் செய்வித்ததும், ஸோமகனுக்கு நூறு பிள்ளைகள் பிறந்ததும் ... .. 463-464
புரோகிதர் நரகத்தில் உழன்றதும், ஸோமகன் தானும் அந்நரகத்தை விரும்பியதும் .. ... 464
ஸோமகனும் புரோஹிதரும் சேர்ந்து நரகத்தை அனுபவித்து ஸ்வர்க்கஞ் சென்றது ... ... 465
130 மார்க்கண்டேயர் தவம் செய்ததும், பிராணிகள் மார்க்கண்டேயரைச் சரணமடைந்ததும் ... . . 466-467
மார்க்கண்டேயர் பிராணிகளைக் காப்பாற்றியதும், ஈச்வரர் அவருக்கு வரமளித்ததும் ... ... 467-468
131 லோமசர் பல தீர்த்தங்களின் மகிமையைச் சொல்லியது ... 469-472
பலக்ஷாவதரண தீர்த்த மகிமை ... ... 471
ஸரஸ்வதி நதியின் மகிமை ... ... 471
132 133 பல தீர்த்த மகிமை .. ... 472-474
ஸ்யேனகபோதோபாக்யானம் ... ... 474-477
எது எதற்குப் பாவம் ஸமமென்பது ... ... 475
தர்மலக்ஷணம் ... ... 475
134-136 ஶ்வேதகேது ஸரஸ்வதியை நேரில் கண்டது ... 477-478
அஷ்டாவக்ரோபாக்யானம் ... ... 478-492
உத்தாலகர் கஹோளருக்குக் கல்வி கற்பித்துப் பெண்ணையும் கொடுத்தது ... ... 478
ஸுஜாதை கர்ப்பந்தரித்ததும், அது பிதாவை இகழ்ந்து சாபம் பெற்றதும் ... ... 479
ஸுஜாதை பொருளுக்காகக் கவன்றதும், கஹோளர் ஜனகனிடம் சென்றதும் ... ... 479
கஹோளர் வந்தியினால் வாதத்தில் வென்று ஜலத்தில் அமிழ்த்தப்பட்டதும், உத்தாலகரும் ஸுஜாதையும் அதனை அஷ்டாவக்ரருக்குத் தெரிவியாமலிருந்ததும் ... 479
அஷ்டாவக்ரர் தமது பிதா ஜலத்திலமிழ்த்தப்பட்டதை அறிந்து ஶ்வேதகேதுவுடன் ஜனகனுடைய யாகத்துக்குச் சென்றது ... ... 480
யார் யாருக்கு வழிவிடவேண்டுமென்பது .. ... 480
அஷ்டாவக்ரருக்கும் வாயில் காப்பவனுக்கும் வாக்குவாதமும், கற்றறிந்தவரே பெரியவரென்பதும் ... 481 483
அஷ்டாவக்ரர் அரசனோடு பேசி யாகசாலையில் நுழைய அனுமதி பெற்றது ... ... 483-485
அஷ்டாவக்ரருக்கும் வந்திக்கும் வாதமும், வந்தி தோற்றதும் ... ... 486 490
அஷ்டாவக்ரர் வந்தியை ஜலத்தில் அமிழ்த்தச் சொல்லியதும், வந்தி தன்னைத் தெரிவித்து அவரைப் புகழ்ந்ததும் ... ... 490
அஷ்டாவக்ரர் ஜனகனை இடித்துரைத்ததும், ஜனகன் அவரைப் புகழ்ந்ததும் ... ... 490-491

| அத்யாயம் | | பக்கம் |
|---|---|---|
| | பிராமணர்கள் வருணலோகத்திலிருந்து வந்ததும், கஹோளர் தம் புத்திரரைப் புகழ்ந்ததும் .. .. | 491-492 |
| | வந்தி விடைபெற்றுச் சென்றதும், அஷ்டாவக்ரர் முதலியோர் தமதாச்ரமம் வந்ததும் ... | 492 |
| | அஷ்டாவக்ரரின் கோணல் நிமிர்ந்தது ... .. | 492 |
| | ஸமங்கா நதியின் மகிமை ... ... | 492 |
| 137-140 | யவக்ரீதோபாக்யானம் ... ... | 494-506 |
| | ரைப்யரும் அவர் புத்ரர்களும் மகிமைபெற்றதும், பரத்வாஜர் மகிமைபெறாமலிருந்ததும் ... ... | 494 |
| | யவக்ரீதர் தவஞ்செய்ததும், இந்திரனுக்கும் அவருக்கும் வாக்குவாதமும .. ... | 494-497 |
| | யவக்ரீதர் வரம்பெற்று வந்ததும், பரத்வாஜர் அகங்காரம் தகாதென்னும் விஷயத்தில் பாலதியின் கதையைச் சொல்லியதும் ... ... | 497-498 |
| | மனிதன் விதியைக் கடக்க முடியாதென்பது ... | 498 |
| | யவக்ரீதர் பராவஸுவின் மனைவியை அழைத்ததும், அவள் அதனை ரைப்யருக்குத் தெரிவித்ததும் ... ... | 499-500 |
| | ரைப்யர் பிசாசையும் ராக்ஷஸியையும் உண்டுபண்ணி யவக்ரீதரைக் கொல்ல ஏவியது ... ... | 500 |
| | பிசாசு யவக்ரீதரின் கமண்டலுவைப் பறித்துக்கொண்டதும், அரக்கன் அவரைத் துரத்தியதும் .. ... | 500 |
| | காவற்காரன் யவக்ரீதரைத் தடுத்ததும், அரக்கன் அவரைக் கொன்றதும் ... ... | 500 |
| | பரத்வாஜர் புத்ரரைப்பற்றிப் புலம்பியதும், ரைப்யரைச் சபித்ததும் ... ... | 502 |
| | பரத்வாஜர் புத்ரரைத் தகனஞ்செய்து தாமும் தீக்குளித்தது ... ... | 502 |
| | பராவஸுவும் அர்வாவஸுவும் பிருஹத்யும்னன் யாகத்துக்குப் போனது ... ... | 503 |
| | பராவஸு தந்தையைக் கொன்றதும், அர்வாவஸு பிராயச்சித்தஞ் செய்துகொண்டதும் . ... | 503-504 |
| | பிருஹத்யும்னன் பராவஸுவின் சொல்லினால் அர்வாவஸுவைத் துரத்தச் செய்தது ... .. | 504 |
| | அர்வாவஸு ஸௌரிய மந்திரத்தை அநுஷ்டித்ததும், தேவர்கள் வரமளித்ததும், ரைப்யர் முதலியோர் பிழைத்தெழுந்ததும் ... ... | 505 |
| | யவக்ரீதர் தம்மை ரைப்யர் கொல்லக் காரணம் கேட்டதும், தேவர்கள் கூறியதும், யவக்ரீதர் பிரம்மசரியம் அனுஷ்டித்ததும் ... ... | 505-506 |
| 141 | லோமசர், ஸ்ரீமேரு முதலிய மலைகளைப்பற்றி யுதிஷ்டிரருக்குச் சொல்லி வருணன் முதலியோரை யுதிஷ்டிரருக்கு, மங்களமுண்டாகுமாறு வேண்டியது. ... ... | 506-507 |

ஸ்ரீ:

ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீக்ருஷ்ணத்வைபாயனாய நம:

# ஸ்ரீ மஹாபாரதம்.

# வனபர்வம்.

## முதலாவது அத்யாயம்.

## கிர்மீரவத பர்வம்.

1 நாராயணம் நமஸ்க்ருத்ய நரம் சைவ நரோத்தமம் ।
தேவீம் ஸரஸ்வதீம் வ்யாஸம் ததோ ஜயமுதீரயேத் ॥ ॥

(பாண்டவர்கள் சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்டுத் திரௌபதியுடன் காட்டுக்குப் புறப்பட்டதும், பட்டணத்துஜனங்கள் பின் தொடர யுதிஷ்டிரர் அவர்களை நன்மொழி கூறித் திருப்பி விட்டு ஸாயங்காலம் கங்கைக்கரை சேர்ந்து அன்றிரவு அங்கே தங்கியதும்.)

ஜனமேஜயர் வினவலானார்: "பிராமண ச்ரேஷ்டரே! ([illegible]) மந்திரிகளுடன் கூடினவர்களும் கெட்ட மனமுள்ளவர்களுமான திருதராஷ்டிரபுத்ரர்களால் இவ்விதம் கபடமான சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்டவர்களும் மிக்க பகையை உண்டு

* [illegible]

1 [illegible] ஆரம்பம் முதற்பக்கம் குறிப்பில் [illegible]

பணனும் கடுஞ்சொற்களைச் சொல்லக் கேட்டவர்களும் கோபமூட்டப்பட்டவர்களும் குருவம்சத்திலுதித்தவர்களும் என் பிதாவான பரீக்ஷித்தின் பாட்டனார்களுமான பாண்டவர்கள் என்ன செய்தார்கள்? மிக்க செல்வமுள்ளவர்களும் திடீரென்று துக்கத்தை அடைந்தவர்களும் இந்திரனுக்கு ஒப்பான வல்லமை பொருந்தியவர்களுமான பாண்டவர்கள் வனத்தில் எவ்விதம் ஸஞ்சரித்தார்கள்? கடுந்துயரடைந்த அவர்களை எவர்கள் பின்தொடர்ந்தார்கள்? மேன்மைக்குணமுள்ள அவர்களுடைய ஆசாரமென்ன? ஆகாரமென்ன? வாஸம் எங்கே? பிராம்மணசிரேஷ்டரே! சூரர்களும் புருஷர்களிற் சிறந்தவர்களும் மகாத்மாக்களுமான அவர்களுக்கு வனத்தில் எவ்விதம் பன்னிரண்டுவருஷங்கள் சென்றன? எப்பொழுதும் இனிமையாகப் பேசுந்தன்மையுள்ளவளும் எல்லாஸ்திரீகளுள்ளும் சிறந்தவளும் மிக்க மகிமையுள்ளவளும் துக்கத்தை அடையத்தகாதவளும் பதிவிரதையுமான அந்த ராஜபுத்திரியும் எவ்விதம் பயங்கரமான வனவாஸத்தை அடைந்தாள்? தபோதனரே! இவை யாவற்றையும் விரிவாக எனக்குச் சொல்லும் பிராம்மணரே! உம்மால் சொல்லப்படும் அதிக பராக்கிரமமும் சரீரகாந்தியுமுள்ள அவர்களுடைய அவையனைத்தையும் கேட்க விரும்புகின்றேன். எனக்கு மிகுந்த ஆவலிருக்கிறது" என்று கேட்டார்.

வைசம்பாயனர் சொல்லலானார்: "(கர்ணன் முதலிய) மந்திரிகளுடன் கூடினவர்களும் கெட்டமனமுள்ளவர்களுமான திருதராஷ்டிரபுத்திரர்களால் இவ்விதம் சூதாட்டத்தில் ஜயிக்கப்பட்டவர்களும் கோபமூட்டப்பட்டவர்களுமான பார்த்தர்கள் ஹஸ்தினாபுரத்திலிருந்து புறப்பட்டார்கள். அப்பொழுது, அவர்கள் சஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு திரௌபதியுடன் வர்த்தமானபுரமெனனும் கிராமத்துக்கு நேரேயுள்ள வாயிலால் வெளிப்பட்டு வடக்குமுகமாகச் சென்றார்கள். இந்திரசேனன் முதலிய [1] பதின்மருக்கதிகமான வேலைக்காரர்கள் எல்லா ஸ்திரீகளையும் அழைத்துக்கொண்டு வேகமாகச் செல்லும் தேர்களுடன் இவர்களைப் பின்தொடர்ந்தனர். பாரதரே! பிறகு, அந்தப் புருஷசிரேஷ்டர்கள் ரதங்களிலேறிச்சென்று கங்கைக்கரையில் பிரமாணமென்ற பெயருள்ள பெரிய ஆலமரத்தைப் பார்த்தார்கள். பட்டணத்துஜனங்களோ,

1 'பதின்மர்' என்பது மூலம்; 23-ஆம் அத்தியாயத்தில் [illegible] 'இந்திரசேனன் முதலிய வேலைக்காரர்கள் இருபதின்மர்' என்று கூறியிருத்தலால், இங்ஙனம் மொழிபெயர்க்கப்பட்டது.

அவர்கள் போகிறதை அறிந்து சோகத்தால் மிகவும் பீடிக்கப்பட்ட வர்களாகிப் பீஷ்மரையும் விதுரரையும் துரோணரையும் கிருபரை யும் அடிக்கடி நிந்தித்துக்கொண்டும் பிரதிஜ்ஞையைச் செய்துகொண் டும் ஒன்றுசேர்ந்து ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

'சகுனியாலும் கர்ணன் துச்சாஸனன் முதலியோர்களாலும் காக்கப்பட்ட பாவியான துரியோதனன் ராஜ்யத்தை நடத்த விரும்புகின்றானாதலால் இந்தக்குலம் முழுவதும் இராது; நாமுமிரோம்; நம்முடைய மனைவிகளுமிரார். பாவிகளின் சகாயத்தை அடைந்த இந்தப் பாவியானவன் ராஜ்யத்தை ஆளவிரும்புகின்ற இடத்தில் அவனது குலமும் ஆசாரமும் தர்மமும் அர்த்தமுமிரா; ஸுகம் எங்கிருந்து உண்டாகும்? துரியோதனனோ, குருவைப் பகைப்பவன்; ஆசாரத்தை விட்டவன்; பொய்யில் பிரியமுள்ளவன்; பொருளில் ஆசைகொண்டவன்; கர்வமுள்ளவன்; தாழ்ந்த ஸ்வபாவமுள்ளவன்; இயற்கையில் தயையற்றவன்; அந்தத் துரியோதனன் ஆளுகின்ற நாடு முழுவதும் இராது. தயையுள்ளவர்களும் நல்ல ஸ்வபாவ முள்ளவர்களும் இந்திரியங்களையும் பகைவர்களையும் வென்றவர்களும் [1] லஜ்ஜையுள்ளவர்களும் கீர்த்தியுடையவர்களும் தர்மானுஷ்டா னத்தை முக்கியமாகக்கொண்டவர்களுமான பாண்டவர்கள் எங்குச் செல்லுகிறார்களோ அங்கு யாவரும் நமக்கு செல்வோம்' என்றனர். அவர்கள் யாவரும் இவ்விதம் சொல்லி அந்தப் பாண்டவர்களைப் பின் தொடர்ந்தார்கள்; குந்திமாத்ரிகளின் புத்திரர்களான அவர்களை அடைந்து கைகளைக் கூப்பிக்கொண்டு சொல்லலானார்கள் :

'உங்களுக்கு க்ஷேமமுண்டாகுக. துக்கத்தையடைந்தவர்க ளான எங்களை விட்டு எங்கே போகின்றீர்கள்? எங்கு நீங்கள் செல்லுகின்றீர்களோ அங்கே நாங்களும் வருகிறோம். தயையில் லாத பகைவர்களால் அதர்மமாக நீங்கள் ஜயிக்கப்பட்டீர்களென்று கேட்டு எல்லாரும் மிக்க கவலை அடைந்திருக்கிறோம். (உங்களுக் குப்) பணிசெய்பவர்களும் அன்புள்ளவர்களும் உபகாரத்தை எதிர் பாராது நன்மைபுரிகின்றவர்களும் எப்பொழுதும் பிரியத்திலும் நன்மையிலும் ஆசையுள்ளவர்களுமான எங்களை இங்கு விட்டுவிடு வது தகுதியன்று. கெட்ட அரசனால் ஆளப்பட்ட ராஜ்யத்திலிருந்து எல்லாரும் நாசத்தை அடையாமலிருக்க வேண்டுகிறோம். ஆண்மை யிற் சிறந்தவர்களே! நல்லவர் கெட்டவர்களின் சேர்க்கையாலுண்

---

1 லஜ்ஜை = வெட்கம்; அநுக்ரமம் 240-ம் பக்கம் குறிப்பிற் காண்க.

மாகச் செய்யக்கூடாது. அஸ்தினபுரத்தில் பாட்டனான பீஷ்மரும் திருதராஷ்டிரரும் விதுரரும் என்தாயாரும் எங்களுடைய அனேகம் ஸ்நேகிதர்களும் (இருக்கிறார்கள்). துக்கத்தினாலும் மனவருத்தத்தினாலும் கலங்கினவர்களும் (எமக்கு வேண்டிய) நன்மையைச் செய்பவர்களுமான அவர்களெல்லாரும், நாங்கள் நன்மை அடைவதில் (உங்களுக்கு) விருப்பமிருந்தால், உங்களாலே நல்ல முயற்சியுடன் காப்பாற்றப்படத்தக்கவர்கள். என்வரவை விரும்பி நெடுந்தூரம் வந்துவிட்டீர்கள். திரும்புங்கள். அடைக்கலம்போலான என் பந்துக்கள் விஷயத்தில் மனத்தில் அன்புபாராட்டவேண்டும். இதுவே (செய்யவேண்டிய) காரியங்களுள் சிறந்ததாக என் மனத்திலிருக்கின்றது. அதனாலே எனக்கு மரியாதையும் சந்தோஷமும் செய்யப்பட்டனவாகும்' என்றார். அந்தத் தர்மபுத்திரரால் அவ்விதம் வேண்டப்பட்ட அந்த ஜனங்கள், துக்கத்தை அடைந்து, 'அரசரே!' என்று பயங்கரமான தீனஸ்வரத்துடன் அழுதார்கள். பிறகு, தர்மபுத்திரருடைய குணங்களை நினைத்துத் துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்களும் மிக்க விருப்பமில்லாதவர்களுமான (ஜனங்கள்) தங்களிஷ்டமில்லாமலே பாண்டவர்களிடத்தில் விடைபெற்றுக்கொண்டு திரும்பினார்கள். பாண்டவர்களோ, பட்டணத்து ஜனங்கள் திரும்பினவுடன், தேர்களிலேறிக்கொண்டு அந்த ஸாயங்காலத்தில் கங்கைக்கரையிலிருக்கும் பிரமாணமென்னும் பெரிய ஆலமரத்தை அடைந்தார்கள். வீரர்களான அந்தப் பாண்டவர்கள் பிற்பகலில் அவ்வாலமரத்தை அடைந்து சுத்தமான ஜலத்தில் ஸ்நானம் செய்து அந்த ராத்திரி (முழுவதும் அங்கே) வாஸம் செய்தார்கள். துக்கத்தால் இளைத்த அவர்கள் அந்த ராத்திரியை ஜலபானத்தாலேயே போக்கினார்கள். அந்த ஜனங்களுள் பத்தினிகளுடன் கூடினவர்களும் சிஷ்யக் கூட்டங்களுடனும் பந்துக்களுடனும் கூடினவர்களும் [1] ஸ்நாதகப் பிரமசாரிகளுமான பிராமணர்கள் சிலர் இவர்களைச் சிநேகத்தால் பின்றொடர்ந்தார்கள். வேதபாராயணம் பண்ணும் ஸ்வபாவமுள்ள அந்த அந்தணர்களால் சூழப்பட்ட அந்த அரசன் பிரகாசித்தான். [2] ரம்யமாயும் [3] பயங்கரமாயுமிருக்கிற [4] ஸந்த்யாகாலத்தில், பிரகாசிக்கப்பட்ட அக்னியுள்ள அந்தப்

1 [illegible] 70 [illegible]
2 [illegible] ரமணீயம்.
3 [illegible] பயங்கரம்.
4 [illegible]

பிராம்மணர்கள், ' ஓ! அரசரே! உங்களுக்குள்ள கதி எதுவோ அதனை நாங்களும் அடைய விரதமாயிருக்கிறோம். நல்ல தர்மத்தை அறிந்தவர்களும் உங்களிடத்தில் பற்றுள்ளவர்களுமான எங்களை விடுவது நியாயமன்று. தேவர்களும் பக்தர்கள் விஷயத்தில் அனேக காரியங்களைச் செய்கின்றனர். நல்ல ஆசாரத்தையுடையவர்களான பிராம்மணர்கள் விஷயத்திலோ அதிகம் செய்கின்றனர்' என்றார்கள். தர்மபுத்திரர், 'பிராம்மணர்களே! எனக்கும் பிராம்மணர்களிடத்தில் மேலான பக்தி எப்போதும் உண்டு. இப்போதுள்ள ஸஹாயத்தின் குறைவோ என்னைக் கஷ்டப்படுத்துகின்றது. கனி கிழங்குகளையும் மிருகங்களையும் கொண்டுவருகிற அந்த என்னுடைய எல்லாத் தம்பிகளும் சோகத்தாலுண்டான துக்கத்தால் மிகவும் மயக்கத்தை அடைந்திருக்கின்றார்கள். திரௌபதிக்கு நேர்ந்த துன்பத்தாலும் ராஜ்யம் கவரப்பட்டதாலுமுண்டான துக்கத்தால் பீடிக்கப்பட்ட இவர்களை இப்போது நான் துன்பப்படுத்துதற்குத் துணியவில்லை' என்றார்.

பிராம்மணர்கள், ' ஓ! அரசரே! எம்மைக் காப்பாற்றும் விஷயமான கவலையானது உமது மனத்தில் உண்டாகவேண்டாம். நாங்களே காட்டிலுள்ளவைகளைச் ஸம்பாதித்துக்கொண்டு உம்மைத் தொடர்ந்து வருகிறோம். உங்களுக்கு க்ஷேமத்தைத் தியானம் செய்வதாலும் (மங்களார்த்தமான) மந்திர ஜபத்தைச் செய்வதாலும் உமக்கு மங்களத்தைச் செய்வோம். அநுகூலமான கதைகளைச் சொல்லிக்கொண்டு காட்டில் கூடவே ஸந்தோஷமாக வஸிக்கின்றோம்' என்றார்கள். தர்மபுத்திரர், 'இது இவ்விதமே ஆகுக; ஸந்தேகமில்லை. நானும் பிராம்மணர்களுடன் மகிழ்வேன். ஆனால், செல்வக்குறைவால் (இதனை) எனக்குக் குறைவுபோல நினைக்கிறேன். (துக்கத்தை) அடையத்தகாதவர்களும் என்னிடத்தில் ஸ்னேகத்தால் கஷ்டப்படுகிறவர்களுமான நீங்களனைவரும், தாங்களே ஸம்பாதித்துச் சாப்பிடுகிறதை எப்படிப் பார்ப்பேன்? பாவிகளான திருதராஷ்டிர புத்திரர்களை நிந்திக்கவேண்டும்' என்றார். அரசர் இவ்விதம் சொல்லித் துக்கித்துக்கொண்டு தரையில் உட்கார்ந்தார். வேதாந்த சாஸ்திரத்தில் பயிற்சியுள்ளவரும் யோகத்திலும் ஸாங்கியத்திலும் ஸமர்த்தரும் சௌனகரென்று பிரசித்திபெற்றவரும் வித்துவானுமான பிராம்மணர் அந்த அரசரைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லத் தொடங்கினார்:

மெய்யின் துக்கம் தணிதலையடையும். மனோதுக்கத்திற்கு மூலம் ஆசையென்று அறியப்படுகின்றது. பிராணியானது பற்றினால் (கர்மாவில்) செல்லுகிறது; துக்கத்தின் சேர்க்கையையும் அடைகிறது. பற்றுதலாலேயே துக்கம், பயம், சோகம், மனக்களிப்பு, துன்பம் ஆகிய எல்லாம் உண்டாகின்றன. எல்லாம் பற்றினாலேயே உண்டாகின்றன. பற்றினால் கருணையும் அன்பும் ஜனங்களிடத்தில் அஸூயை முதலியவையும் உண்டாகின்றன. (ஸ்நேகம் அநுராகம்) இவ்விரண்டும் கெடுதலை விளைவிப்பவை. அவற்றுள், முதலாவதான ஸ்நேஹமானது வலிதென்று எண்ணப்பட்டிருக்கிறது. பொந்திலுள்ள நெருப்பானது எப்படி மரத்தை வேருடன் மிச்சமில்லாமல் எரிக்கின்றதோ அப்படியே ஆசையாகிற தோஷம் சிறிதானாலும் தர்மத்தில் விருப்பமுள்ளவனைக் கெடுத்துவிடும். விஷயங்களில்லாதபோது தியாகியென்னப்படமாட்டான்; (விஷயங்கள்) வரும்போது, (அவற்றில்) தோஷத்தைப் பார்ப்பவனே (தியாகியென்னப்படுவான்). அந்த மனிதனே வைராக்கியத்தை அடைகிறான்; வைரமில்லாதவனும் (த்வேஷமில்லாததால்) [1] பிரதிபந்தங்களற்றவனுமாகிறான். ஆகையால், உறவினர், நண்பர், பொருள் இவற்றிலிருந்து பற்றுதலை விலக்கவேண்டும். தன் உடம்பிலுள்ள அபிமானத்தையும் அறிவால் விலக்க வேண்டும். (நித்தியாநித்திய) ஞானமுள்ளவர்களும் (நித்திய வஸ்துவை அடைவதற்கு) முயற்சிசெய்பவர்களும் சாஸ்திரத்தை அறிந்தவர்களும் சீர்ப்படுத்திய மனமுள்ளவர்களுமான அந்தப் பெரியவர்களிடத்தில் தாமரையிலைகளில் ஜலம்போல ஆசை பற்றாது. [2] ராகத்தால் பற்றப்பட்ட மனிதன் [3] காமத்தால் இழுக்கப்படுகிறான். அவனுக்கு [4] இச்சை உண்டாகிறது. பிறகு, [5] த்ருஷ்ணை விருத்தியடைகிறது. த்ருஷ்ணையோ ஸகலபாபத்திற்கும் காரணம்; மனிதர்களுக்கு எப்பொழுதும் சஞ்சலத்தை உண்டுபண்ணக் கூடியது; அதர்மம் நிறைந்தது; பயங்கரமானது; பாவத்தை உண்டுபண்ணக் கூடியது. எந்தத் திருஷ்ணையானது, கெட்ட புத்தியுள்ளவர்களால் விடமுடியாததோ, (மனிதன்) ஜரையை அடைந்தாலும், எது ஜரையை அடையாததோ, எது

---

1 வேறுபாடும். 2 அழகிய வஸ்துவைப் பார்க்கும்போது மனத்திற்கு உண்டாகும் மகிழ்ச்சி, ராகம். 3 அதை அடையவேண்டுமென்ற விருப்பம், காமம். 4 கிடைத்த பிறகு பிரயோஜனமும் அடைய விரும்புவது, இச்சை. 5 அடிக்கடி கிடைத்தாலும் திருப்தியின்மை, த்ருஷ்ணை எனப்படும்.

பிராணனை அபகரிக்கக் கூடிய ரோகமோ அந்தத் திருஷ்ணையை விட்டவனுக்கே ஸுகம் உண்டாகும். ஆதியும் அந்தமுமில்லாத அந்தத் திருஷ்ணையோ மனிதர்களின் மனத்திலிருந்துகொண்டு இரும்பை அதனிடத்துள்ள தீ அழிப்பதுபோலப் பிராணிகளை நாசம் செய்கிறது. தன்னிடத்திலுண்டான நெருப்பினால் விறகு எவ்விதம் நாசத்தை அடைகின்றதோ அதுபோல மனத்தை அடக்காதவன் உடன் பிறந்த லோபத்தால் நாசமடைகின்றான். அரசன், ஜலம், நெருப்பு, திருடன், உறவினன், யாசகன், காலன் ஆகிய இவர்களிடமிருந்து பணமுள்ளவர்களுக்கு எப்பொழுதும் பயமுண்டு. பிராணிகளுக்கு யமனிடம் எப்பொழுதும் பயமிருப்பது போலப் பணமுள்ளவர்களுக்கு எப்பொழுதும் பயமுண்டு. எவ்விதம் ஆகாசத்தில் பக்ஷிகளாலும், பூமியில் துஷ்டமிருகங்களாலும், ஜலத்தில் மீன்களாலும் மாம்ஸம் உண்ணப்படுமோ அவ்விதம் (எவ்விடத்திலும்) யாவராலும் பணமுள்ளவன் உண்ணப்படுகிறான். சில மனிதர்களுக்குப் பணமே அனர்த்தமாகிறது. பணத்தால் செய்யக்கூடிய [1] ஜ்யோதிஷ்டோமத்தில் விருப்பமுள்ள மனிதன் மோக்ஷத்தை அடையமாட்டான். ஆகையால், அர்த்தப்ராப்திகள் யாவும் மனத்திற்கு விசேஷமாக மயக்கத்தை விருத்திசெய்யக்கூடியவை. கார்ப்பண்யம், கொழுப்பு, அகங்காரம், பயம், மனக்கலக்கம் முதலிய இந்த துக்கங்கள் மனிதர்களுக்குப் பொருளால் உண்டாகின்றனவென்று புத்திமான்கள் கூறுகிறார்கள். பொருளைத் தேடுவதிலும் துக்கமே; ஸம்பாதித்ததை ரக்ஷணத்திலும் துக்கமே; நாசத்திலும் துக்கமே; செலவிலும் துக்கமே; பொருள் நிமித்தமாகவே கொலையும் செய்கிறார்கள். பொருள்களை விடுவதும் துக்கமே. காப்பாற்றப்பட்டாலும் அவை சத்துருக்களாகின்றன. துக்கத்தாலேயே அடையப்படுகின்றன. அவற்றின் நாசத்தைச் சிந்திக்கக்கூடாது. மூடர்கள் திருப்தியற்றவர்கள். பண்டிதர்கள் ஸந்தோஷத்தை அடைகிறார்கள். ஆசைக்கு முடிவில்லை. ஸந்தோஷம் மேலான ஸுகம். ஆகையால், இவ்வுலகில் பண்டிதர்கள் ஸந்தோஷத்தையே மேலானதாக எண்ணுகிறார்கள். யௌவனம், ரூபம், ஜீவிதம், ரத்தினக்குவியல், ஐச்வர்யம், இஷ்டவஸ்துவினுடைய சேர்க்கை ஆகியயாவும் அநித்தியம். பண்டிதன் அவற்றில் ஆசைவைக்கக்கூடாது. ஆகையால் அர்த்தங்களை விடவேண்டும். கிலேசங்களையும்

---

1 'ஜ்யோதிஷ்டோமம் முதலிய காமத்தினால் மாத்திரம் மோக்ஷம் கிடைக்காது' என்பது கருத்து.

சகித்துக்கொள்ளவேண்டும். பணமுள்ள ஒருவனும் கஷ்டமில்லாதவனாகக் காணப்படவில்லையல்லவா? ஆனதுபற்றியே, தார்மிகர்களான புருஷர்களால் விரும்பாமற்கிடைத்த அர்த்தம் புகழப்படுகின்றது. தர்மத்துக்காகவேண்டி எவனுக்குப் பொருளில் விருப்பமிருக்கின்றதோ அவனுக்கு ஆசையில்லாமை மேலானது. சேற்றைப் (பூசி) அலம்புவதைக் காட்டிலும் தொடாமலிருப்பது மனிதர்களுக்கு மேலானதன்றோ?' என்பது. ஓ! யுதிஷ்டிரரே! ஆகையால், செல்வத்தை நீர் பற்றவேண்டாம். தர்மத்தினால் உமக்குச் செய்யத்தக்கது இருக்குமானால் அர்த்தத்தில் இச்சையை விட்டவராகிவிடும்' என்றார்.

யுதிஷ்டிரர், 'ஓ! பிராம்மணரே! விஷயானுபவத்தில் ஆசைகொண்டு பொருளை அடையவேண்டுமென்ற இந்த எண்ணம் எனக்கு இல்லை. ஆனால், பிராம்மணர்களைப் போஷிக்கவேண்டி ஆசைப்படுகின்றேன். லோபத்தால் அன்று. ஓ! பிராம்மணரே! கிருஹஸ்த ஆசிரமத்திலிருக்கிற என்போன்றவன் பின்தொடர்ந்து வருபவர்களைப் போஷிப்பதையும் காப்பாற்றுதலையும் எப்படிச் செய்யாமலிருப்பான்? [1] (பஞ்சமஹாயஜ்ஞங்களில்) எல்லாப் பிராணிகளுக்குமே பாகம் காணப்படுகின்றது. சமையல் செய்யாதவர்களான ஸந்யாஸி முதலானவர்களுக்கும் அப்படியே கிருஹஸ்தன் கொடுக்கவேண்டும். தர்ப்பாஸனங்கள், இடம், நீர்த்தம், நாலாவதான ஸத்யமும் பிரியமுமான வார்த்தை ஆகிய இவைகள் ஸாதுக்களின் வீடுகளில் ஒருபோதும் அற்றுப்போகா நிற்றலால் களைத்தவனுக்கு ஆஸனமும், தாகமுள்ளவனுக்கு உண்ணீரும், பசியுள்ளவனுக்குப் போஜனமும் கொடுக்கவேண்டும்; கண்ணால் பார்க்கவேண்டும்; மனத்தில் நினைக்கவேண்டும்; பிரியமான வார்த்தையைச் சொல்லவேண்டும்; எழுந்து ஆஸனம் கொடுக்கவேண்டும்; இதுவே நெடுங்காலமாயுள்ள தர்மம். எழுந்து பின்தொடர்தலையும் நியாயமாகப் பூஜையையும் செய்யவேண்டும். அக்நிஹோத்திரமும், காளைமாடும், ஞாதிகளும், அதிதிகளும், உறவினர்களும், மக்களும், பத்னிகளும், வேலைக்காரர்களும் பூஜிக்கப்படாவிட்டால், எரித்துவிடுவார்கள். தனக்காக அன்னத்தைச் சமைப்பது கூடாது. (யாகம் முதலிய) காரணமில்லாமல் பசுவைக் கொல்லக்கூடாது. தான் ஒருவனாகச் சாப்பிடவும் கூடாது. விதிக்கு விலக்காகக் கொடுத்தல் கூடாது.

---

1 ஆதிபர்வம் 559-ம் பக்கம் குறிப்பில் பார்க்க.

காரணமாகவுடைய காமத்தால் விஷயங்களாகிற பாணங்களால் அடிக்கப்பட்டு விட்டிற்பூச்சி நெருப்பில் (பழம் என்னும்) ஆசையால் விழுவதுபோல லோபமாகிற நெருப்பில் விழுகிறான். பிறகு, மனைவிகளாலும், இஷ்டப்படி விளையாட்டினாலும், மோஹத்தை அடைந்து அஜ்ஞானத்தில் முழுகி ஆத்மாவை அறிகிறதில்லை. இவ்விதமாகவே ஸம்ஸாரத்தில் சக்கரம்போல அஜ்ஞானம், காமம், காமம் ஆகிய இவைகளால் சுற்றும்படி செய்யப்பட்டவனாகிய பிறவிகளில் விழுகிறான். நீரிலோ நிலத்திலோ ஆகாசத்திலோ அடிக்கடி பிறவியை அடைந்து பிரமன்முதல் துரும்புவரையிலுமுள்ள பிராணிகளில் சுற்றிக்கொண்டிருக்கிறான். இது அஜ்ஞானிகளின்வழி. (மோக்ஷத்தில் விருப்பமுற்று அதற்குரிய சிறந்த தர்மத்தில் ஆசையுள்ள) ஞானிகளின் வழியையும் சொல்லுகிறேன்; கேள். 'கர்மாவைச்செய்' என்றும், 'அதை (பலனை) விட்டுவிடு' என்றும் வேதவாக்கியம் இருக்கின்றது. ஆகையால், அபிமானத்துடன் இந்தத் தர்மங்களையெல்லாம் செய்தல் கூடாது. யாகம், அத்தியயனம், தானம், தவம், ஸத்தியம், பொறுமை, அடக்கம், ஆசையின்மை யென்கிற இந்த எட்டுவித மார்க்கங்கள் தர்மத்திற்குச் சொல்லப்பட்டிருக்கின்றன. இவற்றுள், முன்சொல்லிய நான்கும் [1] பித்ருயானமாகத்திற்குக் காரணமானவை. அவசியம் செய்யவேண்டிய எந்தக் காமாவையும் அபிமானத்துடன் செய்யக்கூடாது. பின் சொல்லிய நான்கும் தேவயான மார்க்கம். இவை எப்பொழுதும் ஸாதுக்களால் அனுஷ்டிக்கப்பட்டவை. (இவற்றைப்) பின்வரும் எட்டு அங்கமுள்ள மார்க்கத்தால் சித்தசுத்தியை அடைந்தவனே அனுஷ்டிக்கவேண்டும். நன்கு ஸங்கல்பத்தை அடக்குவதாலும் நன்கு இந்திரியத்தை அடக்குவதாலும் நன்கு (எல்லாத் தேசங்களிலும் எல்லாச்சமயங்களிலும் எவ்வகையாலும் செய்யப்படும் அஹிம்ஸை முதலிய) விரத விசேஷங்களினாலும் நன்கு குருபணிவிடைசெய்வதனாலும் நல்ல ஆகாரத்தை உட்கொள்ளுவதனாலும் நன்கு வேதாத்யயனம் செய்வதனாலும் நன்கு காமாதியை ஸன்யாஸத்தாலும் நன்கு சித்தத்தை அடக்குதலாலும் ஸம்ஸார பந்தத்தை நீக்கவேண்டுமென்று எண்ணமுள்ளவர்கள் இவ்விதம் கர்மாக்களைச் செய்கின்றார்கள். விருப்பு வெறுப்பு அற்றவர்களும் ஐச்வரியத்தை அடைந்தவர்களுமான ருத்திரர்களும் ஸாத்

---

1 பித்ருக்களுடைய லோகத்துக்குப் போகும் வழி பித்ருயான மார்க்கம் என்று சொல்லப்படும்.

தியர்களும் ஆதித்யர்களும் அஸ்வினீதேவதைகளும் யோகபலவீர்யத்தோடு கூடினவர்களாக இந்தப்பிரஜைகளைக் காப்பாற்றுகின்றார்கள். ஓ! பாரதரே! குந்திபுத்திரரே! நீரும் அதுபோலப் பூர்ணமான மனவடக்கத்தை அடைந்து தவத்தினால் (அஷ்டாங்க) யோகத்தின் ஸித்தியை அடையும். மாதாபிதாக்களால் வரக்கூடியதும் கர்மாவால் வரக்கூடியதுமான ஸித்தியோ உமக்கு உண்டாயிருக்கிறது. தேவதையின் தியானத்தால் பிராம்மணர்களைக் காப்பாற்றுவதற்காக ஸித்தியை அடையும். ஸித்தர்கள் எதை எதை விரும்புகின்றார்களோ அதைஅதைத் [1] தவத்தின்மஹிமையால் செய்கிறார்கள். ஆகையால், தேவதாத்தியானத்தைச் செய்து உம் இஷ்டத்தை நிறைவேற்றும்' என்றார்.

---

## மூன்றாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி)

(யுதிஷ்டிரர் தௌமியர் உபதேசப்படி ஸூரியனைத் துதித்ததும், ஸூரியன் அக்ஷயபாத்திரம் கொடுத்ததும்)

சௌனகர் இவ்விதம் சொல்லியதைக்கேட்ட குந்திபுத்திரரான யுதிஷ்டிரர், பிராம்மணஸ்ரேஷ்டரும் கௌரவிக்கத்தக்க வாக்கியத்தை யுடையவரும் இன்சொல் சொல்லுபவரும் புரோகிதருமான தௌமியருக்குச் சமீபத்தில்வந்து நமஸ்கரித்து ஸகோதரர்களின் மத்தியில் பின்வருமாறு சொல்லலானார்: '(வனத்துக்குப் புறப்பட்ட) எங்களை வேதத்தின்கரையை அடைந்த பிராம்மணர்கள் பின்தொடர்ந்து வந்திருக்கின்றார்கள். அதிக துக்கத்துடன் கூடியவனான (இவர்களைப்) போஷிப்பதற்குச் சக்தியுள்ளவனாக இல்லை; விடுவதற்கும் சக்தியுள்ளவனாகவில்லை. தானசக்தியும் எனக்கு இல்லை. ஓ! பகவானே! இந்த விஷயத்தில் என்னால் என்ன செய்யத்தக்கது? அதனை எனக்குச் சொல்லும்' என்றார். யோகதர்மாநுஷ்டானம் செய்கிறவர்களுள் சிறந்தவரான அந்தத் தௌமியர் ஒரு முஹூர்த்தம் தியானம் செய்து யோகத்தால் அந்தக் காரணத்தைக் கண்டு யுதிஷ்டிரரைப் பார்த்துப் பின் வருமாறு சொல்லலானார்:

---

1 பேறுபட்டம்.

'முற்காலத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிராணிகள் பசியால் மிகக் கஷ்டப்பட்டன. அப்பொழுது, ஸூரியன பிதாவைப்போல அவற்றின் விஷயத்தில் தயைபின்மேல உத்தராயணம் சென்று கிரணங்களால் ஜலங்களை எடுத்துத தக்ஷிணாயனத்தைத திரும்பவும்அடைந்து ஜலத்தால் பூமியை நிறைத்தான். பிறகு, (சந்திரன்) க்ஷேத்திரமான அந்தப் பூமியில் ஸூரியனுடைய தேஜஸை எடுத்து ஜலத்தால ஓஷதிகளை உண்டுபண்ணினன. சந்திரன்தேஜஸினல் (மேகத்தினல) நனைக்கப்பட்ட ஸூரியன் ஜகத்தை உண்டுபண்ணினன். ஆகையால, பரிசுத்தமான ஆறுரஸமுள்ள ஓஷதிகள் பூமியில பிராணிகளுக்கு அன்னமாகின்றன. இவவிதம ஸூரியவிகாரமான அன்னமன்றே பிராணிகளுக்குப் பிராணதாரணமாகிறது. இந்த ஸூரியன் எல்லாப் பிராணிகளுக்கும ரக்ஷகன. ஆகையால், அவனைச சரணமடை. பூர்ணமான தவத்தைச் செய்து பிறப்பாலும் செய்கையாலும் சுத்தியை அடைந்த எல்லாப் பிரஜைகளையும மஹாத்மாக்களான அரசர்கள் காப்பாற்றுகிறார்கள். விரதானுஷ்டானத்துடனகூடிய தியானத்திலிருக்கும [1] பௌமன், கார்த்தவீரியன், வேனபுத்திரனன பிருது, நகுஷன் ஆகிய இவர்களால பிரஜைகள் ஆபத்திலிருந்து காப்பாற்றப்பட்டன. பாரதரே! அப்படியே, தாமாத்மாவான நீரும கர்மாவால் சுத்தி அடைந்து தவத்தைச செய்து, தர்மத்தால் பிராமமணர்களைக் காப பாற்றும' என்றார்.

இவ்விதம அந்தக்காலத்திற்கேற்ற வார்த்தையைத் தௌம்யர் சொல்லக்கேட்ட யுதிஷ்டிரர, அவரிடமிருந்து எல்லாப புருஷார்த்தங்களையும் கொடுக்கக்கூடிய மந்திரத்தை உபதேசம பெற்றார். அஷ்டாக்ஷரமென்னும் சிறந்த மந்திரமானது ஸம்ஸார துக்கத்தை அடைந்தவர்களுக்கு எப்போதும் பிரியமானது. பிராமமணர்களுக்கு அன்னத்திற்காக நியமத்திலிருக்கிறவரும் மனத்தை அடக்கியவரும் உறுதியான வ்ரதமுள்ளவரும் (ஸ்நானத்தால்) சுத்தமான சரீரமுள்ளவருமான தர்மபுத்திரர் மேலான தவத்தைச் செய்தார். அந்த அரசர புஷ்பமுதலிய பூஜைக்குரிய பொருள்களாலும் பலிகளாலும் ஸூரியனைப் பூஜித்து ஸூர்யனுக்கு எதிர்முகமானர். தர்மாத்மாவான தர்மபுத்திரர் கங்காஜலத்தை ஆசமனம்செய்து இந்திரியங்களை ஜயித்துக் காற்றைப்புசித்து மனோவியாபாரத்தை நிறுத்தி

---

1 'பீமேன' என்பது வேறு பாடம். இதனைக் கார்த்தவீர்யனுக்கு அடைமொழியாக்குவது ஆங்கில மொழிபெயர்ப்பு.

கின்றன. விஷ்ணுவினால் அஸுரர்களின் கொழுப்பானது எந்த ஸுதர்சனமென்கிற சக்கரத்தால் நாசமடைவிக்கப்பட்டதோ அது விஸ்வகர்மாவினால் உம்முடைய தேஜஸினால் செய்யப்பட்டது. நீர் கோடைக்காலத்தில் எல்லாப்பிராணிகளுடைய ஸாரத்தையும் எல்லா ஓஷதிரஸங்களுடைய ஸாரத்தையும் கிரணங்களால் எடுத்துத் திரும்பவும் மழைக்காலத்தில் விடுகிறீர். உம்முடைய சில கிரணங்கள் கொளுத்துகின்றன; சில தாபத்தை உண்டு பண்ணுகின்றன; மழைக்காலத்தில், சில அப்படியே மேகங்களாகக் கர்ஜிக்கின்றன; மின்னுகின்றன; மழையையும் பெய்கின்றன. குளிராலும் காற்றாலும் பீடிக்கப்பட்ட பிராணிகளை உம்முடைய கிரணங்கள் எவ்விதம் சுகப்படுத்துமோ அவ்விதம் நெருப்பும் போர்வைகளும் கம்பளங்களும் ஸுகப்படுத்துகிறதில்லை. [1] பதின்மூன்று தீவுகளுடன் கூடிய பூமியைக் கிரணங்களால் பிரகாசப்படுத்துகிறீர். மூன்று உலகங்களின் க்ஷேமத்திற்குமாக நீர் ஒருவரே பிரவிருத்திக்கிறீர். உம்முடைய உதயமில்லாவிட்டால் இவ்வுலகமானது இருளடைந்து விடும். தர்மம், அர்த்தம், காமம் இவைகளில் புத்திமான்கள் பிரவிருத்தியார். பிராம்மண க்ஷத்ரிய வைசியர்களின் கூட்டங்களால், உம்முடைய அனுக்ரகத்தாலேயே, அக்னிஹோத்ரம், பசுபந்தம், இஷ்டி, மந்திரம், யாகம், தவம் முதலிய காரியங்கள் செய்து முடிக்கப்படுகின்றன. ப்ரம்மாவின் எந்தப் பகலானது ஆயிரம் யுகம் அளவுள்ளதென்று சொல்லப்பட்டிருக்கிறதோ அதற்கு முதலாயும் கடைசியாயும் நீரே இருக்கிறீரென்று கால(தத்துவ)ம் தெரிந்தவர்களால் சொல்லப்படுகிறீர். மனுக்களுக்கும் மனுபுத்ரர்களுக்கும் மனிதரில்லாத ஜகத்துக்கும் எல்லா மன்வந்தரங்களுக்கும் அவற்றிலுள்ள ஈஸ்வரர்களுக்கும் நீர் ஈஸ்வரர். பிரளயகாலம் வந்தவுடன், உம்முடைய கோபத்தால் வெளிவந்த ஸம்வர்த்தகமென்னும் நெருப்பானது மூவுலகத்தையும் சாம்பலாக்கிவிட்டு நிற்கின்றது. உம்முடைய கிரணத்தாலுண்டான அநேக நிறமுள்ள பெரிய மேகங்கள் [2] ஐராவதமென்னும் மேகங்களுடனும் இடிகளுடனும் கூடிக்கொண்டு [3] நான்கு விதமான எல்லாப் பிராணிகளையும் ஜலத்தில் முழுகச் செய்

1 'ஸுதர்சனத்வீபம் முதலிய அவாந்தரத்வீபங்களைச் சேர்த்து பதின்மூன்று' என்பது பழையவுரை. பீஷ்மபர்வம் 5 முதல் 8 அத்யாயங்கள்.

2 மேகங்களுக்கு மேலுள்ள மேகங்களுக்கு ஐராவதமென்று பெயர்.

3 'அண்டஜம் = முட்டையிலிருந்துண்டானது; ஸ்வேதஜம் = வேர்வையிலிருந்துண்டானது; உத்பிஜ்ஜம் = பூமியைப் பிளந்துண்டானது; ஜராயுஜம் = கருப்பையிலிருந்துண்டானது' என்று நால்விதமாம்

கின்றன. சரீரத்தைப் பன்னிரண்டாகப் பிரித்துக்கொண்டு பன்னிரண்டு ஸூரியராக இருக்கும் தன்மையை அடைந்திருக்கும் நீர், 1 ஒன்று சேர்ந்து, ஒரே சமுத்திரமாயிருக்கிற யாவற்றையும் கிரணங்களால் உலர்த்திவிடுகிறீர். உம்மை இந்திரன் என்கிறார்கள்; நீரே ருத்ரர்; நீரே விஷ்ணு; நீரே பிரம்மா; நீரே அக்நி; ஸூக்ஷ்மமான மனமும் நீரே. ப்ரபுவும் நீரே; நித்யமான ப்ரம்மமும் நீரே; நாசம் பண்ணுகிறவரும் நீரே; உண்டுபண்ணுகிறவரும் பிரகாசிப்பவரும் கிரணங்களின் வரிசையுள்ளவரும் 2 விருஷாகபியும் ஜகத்துக்கு இருப்பிடமானவரும் மேகரூபமாகி வர்ஷிக்கிறவரும் போஷிக்கிறவரும் மித்ரரும் தர்மரூபமானவரும் ஆயிரம் கிரணங்களுள்ளவரும் அதிதியின் புத்திரரும் காலத்தை உண்டாக்குகிறவரும் கிரணங்களுக்குப் பதியும் நீரே; மார்த்தாண்டரும் பூஜிக்கத் தக்கவரும் ரவியும் ஸூர்யரும் ரக்ஷகரும் பகலைச் செய்பவரும் பகலைப் பிரகாசமாக்குகிறவரும் ஸப்த என்ற குதிரையையுடையவரும் பிரகாசமான கிரணமுள்ளவரும் மிக்க ப்ரீதியை உண்டுபண்ணுகிறவரும் விரைவாகச் செல்லுகிறவரும் இருளைப்போக்குகிறவரும் பச்சை நிறமுள்ள குதிரையை உடையவருமாகச் சொல்லப்படுகிறீர். ஸப்தமியிலோ அல்லது ஷஷ்டியிலோ எவன் வெறுப்பும் அஹங்காரமுமில்லாதவனாகிப் பக்தியுடன் (உம்மைப்) பூஜை செய்கிறானோ அந்த மனிதனை லக்ஷ்மி அடைகிறாள். எவர்கள் பூஜாகாலத்தில் வேறிடத்தில் மனத்தைச் செலுத்தாமல் உம்முடைய பூஜையையும் நமஸ்காரத்தையும் செய்கிறார்களோ அவர்களுக்கு ஆபத்துக்களும் மனோவியாதிகளும் உண்டாகா. உம்முடைய த்யானத்தில் பிரியமுள்ளவர்கள் எல்லா வியாதிகளாலும் விடுபட்டவர்களும் எல்லாப் பாவங்களாலும் விடுபட்டவர்களும் ஸுகமுள்ளவர்களும் வெகுகாலம் ஜீவிக்கின்றவர்களும் ஆகிறார்கள். ஓ! அன்னபதியான ஸூர்யனே! விருப்பங்களை நிறைவேற்ற முடியாத நிலையிலிருப்பவனும் ச்ரத்தையுடன் எல்லோருக்கும் அதிதிபூஜை செய்ய விருப்பமுள்ளவனுமாயிருக்கிற எனக்கு நீர் அதிகமாக அன்னத்தைக் கொடுக்க வேண்டும். உம்முடைய பாதமூலத்தை அடுத்தவர்களும் மின்னல் இடிகளை உண்டுபண்ணுகிறவர்களும் உம்மைத் தொடர்ந்து வருபவர்களுமான

---

1 'ஸம்ஹ்ருத்ய' என்பது மூலம்; 'ஸம்ஹாரம் செய்து' என்றும் கொள்ளலாம் 2 'சிவனாகவோ விஷ்ணுவாகவோ இருப்பவர்' என்பது பழைய வுரை.

மாடரன், அருணன், தண்டன் முதலிய எல்லாப் பக்தர்களையும் தனித்தனி நமஸ்கரிக்கிறேன். (நிக்கிரகம் செய்யும்) க்ஷமை யென்னும் தேவதையுடன் கூடிய (அனுக்கிரகம் செய்யும்) மைத்ரியென்னும் தேவதை, மற்றுமுள்ள [1] பூதமாதாக்கள் ஆகிய அவர்கள் யாவரையும் நமஸ்கரிக்கிறேன். சரணாகதனான என்னைக் காப்பாற்றுக' என்றார்.

பிறகு, கழுத்தளவு ஜலத்தில் நின்று மந்திரங்களாலும் ஸ்தோத்திரங்களாலும் சந்தோஷப்படுத்தப்பட்டவரும் அக்னிபோலத் தமது சரீரத்தால் பிரகாசிக்கின்றவருமான ஸூர்யர் பிரீதியுடன் தர்மபுத்திரருக்குத் தரிசனம் அளித்தார். ஸூரியர், 'உனக்கு எது விருப்பமோ அது அனைத்தையும் நீ அடைவாய். பன்னிரண்டு வருஷம் நான் உனக்கு அன்னத்தைத் தருகிறேன். ஓ! நராதிபனே! என்னால் கொடுக்கப்பட்ட தாம்ரமயமான பரிமாறுகிற பாத்திரத்தைப் பெற்றுக்கொள். நல்ல விரதமுள்ளவனே! திரௌபதியானவள் இப்பாத்திரத்துடன் எவ்வளவுகாலம்வரை அன்னமளிக்க விரும்புவளோ அதுவரை ஸித்தம்செய்யப்பட்ட பழம், கிழங்கு, மாமிசம், கீரை, லேஹ்யம் சோஷ்யம் பக்ஷ்யம் பேயம் ஆகிய நான்குவிதமான உணவுப்பதார்த்தங்களும் சமையலறையில் உனக்குக் குறைவற்றிருக்கும். இதிலிருந்து பதினான்காவது வருஷத்தில் திரும்பவும் ராஜ்யத்தை அடைவாய்' என்றார். பூஜ்யரான ஸூர்யர் இவ்விதம் சொல்லி அங்கேயே மறைந்துவிட்டார். தர்மத்தையறிந்த குந்திபுத்திரரோ, வரத்தையடைந்து ஜலத்திலிருந்து கரையேறி, தௌம்யரின் பாதங்களில் வணங்கித் தம்பிகளையும் ஆலிங்கனம்செய்துகொண்டார். அப்பொழுது, பிரபுவான பாண்டுபுத்திரர் திரௌபதியுடன் சேர்ந்து (பாத்திரத்தைப்) பார்த்துக்கொண்டு சமைக்கும் இடம் சென்று அன்

---

[1] 'கௌரீ, பத்மை முதலியவர்கள்' என்பதும், 'பிராம்மீ, மாஹேச்வரீ முதலியவர்கள்' என்பதும் பழையவுரை. சாந்தி பர்வம் 716-ம் பக்கம் குறிப்பினைக் காண்க.

பிராம்மீ, மாஹேச்வரீ, ஐந்த்ரீ, வாராஹீ, வைஷ்ணவீ, கௌமாரீ, சாமுண்டா, [illegible] என எட்டென்றும், பிராம்மீ, வைஷ்ணவீ, ஐந்த்ரீ, ரௌத்ரீ, வாராஹீ, சௌபேரீ, கௌமாரீ, என ஏழென்றும், கௌரீ, பத்மை, சசீ, மேதை, ஸாவித்ரீ, விஜயை, ஜயை, தேவஸேனை, ஸ்வதை, ஸ்வாஹை, சாந்தி, புஷ்டி, த்ருதி, துஷ்டி, ஆத்மதேவதை (=இஷ்டதேவதை); குலதேவதை [illegible] பதினாறென்று மூன்றுவிதமாகக் கூறுவது சப்தகல்பதருவும்.

னத்தைச் சித்தம் செய்தார். சமையல் செய்யப்பட்ட நான்கு விதமான சிறிது அன்னமும் வளர்வதாயிற்று. அன்னம் குறைவில்லாமலும் வளர்ந்தது. அந்த அன்னத்தால் பிராம்மணர்களைப் போஜனம் செய்வித்தார். தம்பூர் பிராம்மணர்கள் சாப்பிட்டபிறகு தம்பிகளையும் போஜனம் செய்வித்து விகஸமென்று பெயருள்ள மிகுதியான அன்னத்தைப் பின்பு புஜித்தார். தர்மபுத்திரரை உண்பித்து மிகுதியானதைத் திரௌபதி புஜித்தாள். திரௌபதி சாப்பிட்டவுடன், அதில் அன்னம் இல்லாமற் போய்விடும். ஸூரியனுக்கு ஒப்பான காந்தியுள்ள பிரபுவான தர்மபுத்திரர் இவ்விதம் ஸூரியனிடமிருந்து (அப்பாத்திரத்தை) அடைந்து மனத்தினால் எண்ணப்பட்ட ஸகலவஸ்துக்களையும் பிராம்மணர்களுக்குக் கொடுத்தார். பாண்டவர்கள், உபாத்தியாயரை முன்னிட்டு, (விசேஷமான) திதிகளிலும் நக்ஷத்திரங்களிலும் பர்வங்களிலும் விதிவாக்யங்களையும் மந்திரங்களையும் ப்ரமாணமாகக்கொண்டு யாகம் செய்யவும் ஆரம்பித்தார்கள். பிறகு, பாண்டவர்கள் [1] க்ஷேமத்தையுடையவர்களாகித் தௌம்யருடன் பிராம்மணக்கூட்டங்களால் சூழப்பட்டுக் காம்யகமென்னும் வனத்தைக்குறித்துச் சென்றார்கள்'' என்றார்.

ஜனமேஜயர், ''பிரம்மரிஷியே! புலன்களை அடக்கினவரும் பிராணன்களை அடக்கினவருமான அந்த யுதிஷ்டிர அரசர் பிராம்மணர்களுக்காக மிகுதியான புஷ்பங்களாலும் காணிக்கைகளாலும் பலிகளாலும் முறைப்படி பூஜித்து ஸர்வாத்மாவும் ஆச்சரியமான பராக்ரமமுள்ளவனுமான ஸூரியனை எந்த ஸ்தோத்திரத்தால் ஆராதித்தார்? பூஜ்யரான பிராம்மணரே! என்னிடத்தில் ஸ்நேகம் இருக்குமானாலும், நான் அனுக்ரஹத்தை அடைந்தவனானாலும், மறைக்கக் கூடியதாக இல்லாவிடில் இப்பொழுது எனக்கு அதைச் சொல்லவேண்டும்'' என்றார். வைசம்பாயனர், ''அரசரே! சுத்தராயிருந்து ஒரே இடத்தில் மனத்தை நிறுத்தி ஸாவதானமாகக் கேளும். ராஜஸிம்மமே! வேறு வேலையில்லாமலிரும். உமக்கு நன்மையைத்தரும் ஒரு விஷயத்தைச் சொல்லுகின்றேன். ப்ரியரே! நல்ல சிறந்த புத்தியுள்ள குந்திபுத்திரரான யுதிஷ்டிரருக்குத் தௌம்யரால் சொல்லப்பட்ட புண்ணியமான [2] நூற்றெட்டு நாமங்களைக் கேளும்.

ஸூரியர், அர்யமர், பகர், த்வஷ்டா, பூஷா, அர்க்கர், ஸவிதா, ரவி, கபஸ்திமான், அஜர், காலர், ம்ருத்யு, தாதா, ப்ரபாகரர், ப்ருதிவீ,

1 'ஆரோக்யமும் க்ஷேமம் பாட்டையாக்கியவர்' என்பது பழம் பொருள்.

2 பின் வரும் நாமங்களின் எண்ணிக்கை நூற்றிருபத்தைந்துக்கு அதிகமாகின்றன.

ஆபர், தேஜஸ், கம், வாயு, பராயணர், ஸோமர், ப்ருஹஸ்பதி, சுக்ரர், புதா, அங்காரகர், இந்திரர். விவஸ்வான, தீப்தாமசு, சுசி, சௌரி, சனைசரா, பரம்மா, விஷ்ணு, ருதரிரர், ஸ்கந்தர், வைஶ்ரவணர், யமர், வைத்யுதர், ஜாடரர், அக்னி, ஐந்தனர், தேஜஸாமபதி, தாம தவஜர், வேதகர்ததர், வேகாஙகர், வேதவாஹனர், க்ருதம், திரேதை, துவாபரம, கலி, ஸர்வாமராஶரயர், கலை, காஷடை, முஹூர்த்தம், பக்ஷம், மாஸம், ருது, ஸமவதஸரகரர், அஶவத்தர், காலசக்ரா, விபாவஸு, புருஷர், சாஶவதர், யோகி, வ்யகதாவ்யக்தர், ஸநாதனர், லோகாதயக்ஷர், ஸுராதயக்ஷா, விஶவகர்மா, தமோனுதர், வருணா, ஸாகரர், அமசர், ஜீமூதர், ஜீவனா, அரிஹா, பூதாஶரயர், பூத பதி, ஸாவபூதநிஷேவிதர், 1 [மணி, ஸுவர்ணா, பூதாதமா, காமதர், ஸர் வதோமுகா, ஸரஷ்டா, ஸமவாததகர், வஹ்நி, ஸர்வஸயாதி, அலோலு பா, அனநதா, கபிலர், பாநு, காமதர், ஸர்வதோமுகர்] ஜயர், விசாலர், வரதா, ஸர்வதாதுநிஷேசிதர், மனம, ஸுபர்ணா, பூதாதி, சீகரகா, பிராணதாரகா, தனவந்தரி, தூமகேது, ஆதிதேவர், அதிதேஸஸுதர், துவாதசாதமா, அரவிநதாக்ஷர், பிதா, மாதா, பிதாமஹர், ஸ்வாககதவா ரா, பரஜாதவாரா, மோக்ஷதவாரர், தரிவிஷ்டபர், தேவகாததர், பாசாந் தாதமா, விஶவாதமா, விஶவதோமுகா, சராசராதமா, ஸூக்ஷமாதமா, 2 மைதநதிரேயா, கருணான்விதா என்பன. துதிககததக்கவருமா அதிக தேஜஸுள்ளவருமான ஸூரியருடைய இந்தப புண்யமான நூற் றெட்டு நாமஙகள் மாகாதமாவான இந்திரனால் சொல்லபபட்டன. இந்திரனிடமிருநது நாரதர் அடைந்தார். பிறகு, தௌம்யர் அடைந் தார். தௌமயரிடமிருந்து யுதிஷ்டிரரடைந்து எலலா விருப்பங்களை யும் அடைந்தார். தேவகணஙகள, பிதருக்கள், யக்ஷாகள் இவர்க ளால் வணங்கபபட்டவரும் அஸுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் ஸித தர்களாலும் நமஸ்கரிக்கப்பட்டவருமா மேலான தங்கததிற்கும் அக் னிக்குமொப்பான காந்தியுள்ளவருமான சூரியரை நீரும் மனததில தியானம் செய்யும். எவன ஸூரயோதயகாலததில் நனகு மனததை அடக்கிக்கொண்டு இதனைப் படிப்பானோ அவன் எப்பொழுதும் புத திரன், ஸ்திரீ, தனம், ரததினக்குவியல் இவர்களை அடைவன். எப் போதுமா முறபிறப்பை அறியுமா தன்மையையும் தைரியததையும் மேதையையும் அடைவான். எந்தமனிதன் தேவஶ்ரேஷ்டரான ஸூர்யனுடைய இந்த ஸ்தோத்திரததைச் சுத்தனும் நல்ல மனமுள்ள

1 [] இதற்குட்பட்டவை அதிக பாடம.

2 வேறு பாடம; 'மைத்ரேஸாவபுஷான்வித:' என்பது மூலம்.

வனுமாகித் தியானம் செய்துகொண்டு சொல்லுவானே அவன் காட்டுத்தீப்போன்ற துக்கஸாகரத்திலிருந்து விடுபடுகிறான். மனத்தால் விரும்பப்பட்டபடி இஷ்டங்களை அடைவான். எவனொருவனும் ஒருவரை விரும்பிக்கொண்டு இந்த ஸ்தோத்திரத்தைச் சுத்தமுள்ளவனாகத் த்யானத்துடன் இவ்வுலகில் படிப்பானால் ஸூரியனும் அவனுக்கு அவ்விருப்பத்தைக் கொடுப்பான். அது கிடைப்பதற்கரிதானாலும், அப்பொழுதே அடைந்து விடுகிறான். புருஷனோ, அல்லது, ஸ்திரீயோ, எப்பொழுதும் மனத்தில் பக்தியைச் செய்பவரும் அடிக்கடி கேட்பவரும் புத்திரனை விரும்பினால் புத்திரனை அடைவார்; செல்வத்தை விரும்பினால் செல்வத்தை அடைவார்; வித்தையை விரும்புகிறவர் வித்தையையும் அடைவார். ஆபத்தையடைந்த ஸ்திரீயோ, அல்லது, புருஷனோ ஒவ்வொரு நாளும் இரண்டுசந்தியிலும் படித்தால் அந்த ஆபத்திலிருந்து விடுபடுகிறார். கட்டுண்டவன் கட்டிலிருந்து விடுபடுகிறான். யுத்தத்திலும் எப்பொழுதும் ஜயத்தை அடைவான். அதிகமான செல்வத்தையும் அடைவான். எல்லாப் பாவத்திலிருந்தும் விடுபடுகிறான். ஸூர்யலோகத்தை அவன் அடைகிறான்.

---

## நான்காவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்கள் வனஞ் சென்றபின் திருதராஷ்டிரன் விதுரரை ஆலோசனை கேட்டதும், விதுரர் பாண்டவர்களை அழைத்து ராஜ்யத்தில் ஸ்தாபிக்கச் சொல்லியதும், திருதராஷ்டிரன் விதுரரை நிந்தித்ததும், விதுரர் பாண்டவர்களிடம் சென்றதும்.)

பிறகு, பாண்டவர்கள் காட்டையடைந்தவுடன், அறிவைக் கண்ணாகவுடையவனும் அம்பிகையின் புத்திரனுமான திருதராஷ்டிர ராஜன், தாபத்தையடைந்து ஸுகமான ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு, தர்மசிந்தையுள்ளவரும் ஆழ்ந்த புத்தியுள்ளவருமான விதுரரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான். 'சுக்கிராசாரியருடைய அறிவுபோல உன்னுடைய அறிவும் சுத்தமானது. நுட்ப

மானதும் மேலானதுமான தர்மத்தையும் நீ அறிவாய். குருவம்சத்தில் உதித்தவர்களுக்கு நீ பொதுவானவனென்றும் எண்ணப்பட்டவன். விதுர! இவ்விதம் நடந்திருக்கையில், இப்பொழுது எது செய்யத்தக்கது? இந்தப் பட்டணத்துஜனங்கள் எவ்விதம் நம்மை அனுஸரிப்பார்கள்? அந்தப் பாண்டவர்களும் நம்மை வேருடன் நாசம் செய்யாமலும் நானும் அவர்களை நாசம் செய்ய விரும்பாமலும், அவர்களுக்கும் எனக்கும் நன்மையானதைச்சொல்லு. க்ஷத்தாவே! துரியோதனனுக்கு நன்மையை விரும்பினவனும் பாவியுமான சகுனியாலேயே இங்கு செய்யப்பட்டது. அப்படிச் செய்யப்பட்டது, எனக்கு விருப்பமில்லாதது. ஆகையால், அவ்விதமே அங்கீகரிக்கப்பட்ட அவ்விஷயத்தில் நீ பரிகாரம் சொல்லவேண்டும். காலத்துக்கேற்றவாறு வேறு எதை இனிமேல் உசிதமாக நினைக்கிறாய்? எந்தத் தர்மவிஷயத்தில் பாண்டுபுத்திரர்கள் யாவரும் காட்டையடைந்து கஷ்டப்படுகின்றார்களோ (அந்தத்) தர்ம விஷயத்தில் உதவும்படி இல்லையே என்று என்மனம் வெடிக்கின்றது' என்று கேட்டான்.

விதுரர் சொல்லுகிறார்: 'நரேந்திரரே! இந்தத் தர்மார்த்தகாமங்கள் தர்மத்தைக் காரணமாகவுடையவை. இந்த ராஜ்யத்துக்கும் தர்மம் மூலமென்று சொல்லுகின்றார்கள். அரசரே! உமது சக்திக்கேற்றவாறு தர்மத்திலிருந்துகொண்டு உம்முடைய எல்லாப் புத்திரர்களையும் குந்தியின் புத்திரர்களையும் காப்பாற்றும். அந்தத் [1] தர்மமானது சகுனியை முக்கியமாயுடைய தீயசிந்தையுடையவர்களால் ஸபையில் வஞ்சிக்கப்பட்டது. உமது புத்திரன் சூதாட்டத்திற்கு அழைத்துச் சத்தியசந்தனான குந்தியின் புத்திரனைத் தோல்வியடைவித்தனன். கௌரவரே! அரசரே! உமது புத்திரன் பாவத்திலிருந்து விடுபட்டு உலகத்தில் நன்கு நிலைபெறும்படி உம்மால் கபடமாக உண்டுபண்ணப்பட்ட இந்தத் துவேஷ நிவிருத்தியின் உபாயத்தை நான் நன்கு ஆலோசிக்கின்றேன். அரசரே! உம்மால் கொடுக்கப்பட்டவற்றையெல்லாம் பாண்டு புத்திரர்கள் அடையட்டும். 'அரசன் தன்னுடையதிலேயே சந்தோஷிக்கவேண்டும்; பிறர் செல்வத்தில் இச்சை வைக்கக்கூடாது' என்பது மேலான தர்மம். இவ்விதம் செய்யப்பட்டால் உம்முடைய புகழ் அழியாது. ஞாதிக

1 'ஸபை தர்ம:' என்பது மூலம்; 'அந்தத் தர்மரூபியான யுதிஷ்டிரர்' என்பது பழையவுரை.

ருள் கலகமுண்டாகாது. தர்மம் உண்டாகாதென்பதில்லை. நீர் இதைச் செய்தால் எல்லாவற்றிலும் முக்கியமான உம்முடைய இந்தக் கார்யமானது பாண்டவர்களுக்குச் சந்தோஷமாகவும் சகுனிக்கு அவமானமாகவுமாகும். இவ்விதம் செய்தால் மிகுந்த பாக்கியமே உம்முடைய புத்திரர்களிடம் நிற்கும். அரசரே! இதைச் சீக்கிரமாகச் செய்யும். அரசரே! இதை இவ்விதம் செய்யாமலிருப்பீராகில் குரு வம்சத்தார்களுக்கு அழிவு வருமென்பது நிச்சயம். கோபங்கொண்ட பீமனோ அர்ஜுனனோ பகைவர்களின் படையில் மிச்சம் வைக்கமாட்டார்கள். எவர்களுள் அஸ்திரத்தில் தேர்ச்சியுள்ளவனான அர்ஜுனன் யுத்தம் செய்பவனோ, எவர்களுக்கு லோகத்தில் சிறந்ததான காண்டீவமென்ற வில்லானது (இருக்கின்றதோ) எவர்களுள் தோள்வலிமையுள்ள பீமன் யுத்தம் செய்பவனோ, அவர்கள் உலகத்தில் அடையத்தகாதது என்ன இருக்கின்றது? முந்தி உமது புத்திரன் பிறந்தவுடன், 'குலத்திற்குக் கெடுதலான இந்தப் புத்திரனை விடும்' என்று மேலான ஹிதமானது என்னால் உமக்குச் சொல்லப்பட்டது. அதனை நீர் செய்யவில்லை. இப்பொழுதும் உமக்கு அந்த ஹிதம் உரைக்கப்பட்டது. இவ்விதம் நீர் செய்யீராயின், பிறகு, தாபத்தை அடைவீர். இவ்விதம் பாண்டவர்களுடன் சேர்ந்து ஒன்றாக அரசாட்சி செய்ய உமது புத்ரன் சந்தோஷத்துடன் சம்மதிப்பானானால் உமக்குத் தாபமுண்டாகாது. (ராஜ்யத்தில்) ஆசைவைத்துச் சம்மதியாவிடில், (வேறு) சகாயங்களால் அனுகூலனல்லாத புத்திரனை அடக்கிப் பாண்டுபுத்திரனை ஆதிபத்தியத்தில் நிலைநிறுத்தும். புத்திரனோ! ராஜேந்திரரே! ராஜஸிம்ஹமே! அரசர்களுடனும் உறவினர்களுடனும் புத்திரனுடனும் உமக்கு நாசம் நிச்சயம். பதின்மூன்றாவது வருஷத்திலேயே குலத்தின் நாசத்தை அடைவீர். நரேந்திரரே! ஆகையால், தர்மம் செய்பவர்களுள் சிறந்த தர்மபுத்திரனை அரசாட்சியில் நிலைநிறுத்தும். இப்போது ஆசையற்ற அஜாதசத்ருவே இந்தப் பூமியைத் தர்மமாக ஆளட்டும். அரசரே! பிறகு, எல்லா அரசர்களும் வைசியர்களைப்போல உடனே நம்முடன் சிநேகம் செய்துகொள்ளட்டும். அரசரே! துரியோதனன், சகுனி, கர்ணன் இவர்கள் பாண்டு புத்திரர்களைப் ப்ரீதியுடன் அனுசரிக்கட்டும். துச்சாஸனன் நடுச்சபையில் துருபதன் புத்ரியையும் பீமனையும் வேண்டிக்கொள்ளட்டும். நீரும் யுதிஷ்டிரனைச் சமாதானம் செய்யும். அவனைப் பூஜித்து ராஜ்யத்தில் நிலைநிறுத்தும். அரசரே!

நீர் கேட்டதற்கு யான் வேறு எதைச் சொல்வேன்? இதனைச் செய்து கிருதகிருதயராவீர்' என்றார்.

திருதராஷ்டிரன், 'ஓ! விதுரனே! இந்தச் சபையில் பாண்டவர்களையும் என்னையும் குறிதது உன்னால சொல்லப்பட்டதும அவர்களுக்கு நனமையும என்னைச சாரந்தவாகளுக்கு விரோதமுமான இந்த வார்ததை முழுமையையும என் மனம் அஙகிகரிக்கவிலலை. நீ பாண்டவாகளுக்கு அனுகூலமாகப பேசியதால, நீ அவர்களைச் சார்ந்தவனென்று இபபொழுது நிசசயிததேன; எனககு ஹிதனல்லனென்றும எண்ணுகிறேன. பாணடவர்களுக்காகப புத்திரனை எவ்விதம் விட்டுவிடுவேன்? அவர்களும் என புததிராகளோ என்பதில் ஸநதேகமிலலை. துரியோதனனோ என் தேகததிலிருந்து உண்டானவன. பொது நிலைமையை எதிர்பார்க்கும் எவனதான், 'பிறனுககாக உன தேகத்தை விடு' எனறு சொலலுவான? விதுரனே! நீ என்னைக்குறிதது எல்லாவற்றையும் கபடமாகச சொலலுகிறாய். உன விஷயததில நான அதிக கோபததை அடைகிறேன். நீ இஷ்டமபோலப் போகலாம்; அலலது இருக்கலாம். கெட்ட நடையுள்ள ஸ்திரீயானவள் மிக்க நல்வார்ததை சொலலப்பட்டாலும் (நாயகனை) விட்டுவிடுகிறாள்' என்றான. அரசரே! திருதராஷ்டிரன் இவ்வளவையும் சொலலி விரைவில எழுநது நடுவீட்டினுள் அடைந்தான். பிறகு, விதுரர், 'இந்தக்குலம் இராது' என்று சொலலிக்கொண்டு, பார்ததர்கள் இருககிற இடததிற்கு விரைவாகச் சென்றார்.

---

## ஐந்தாவது அத்யாயம்.

## கிர்மீரவத பர்வம். (தொடர்ச்சி.)

**(விதுரர் காம்யகவனத்தில் பாண்டவர்களிடம் வந்ததும், அவர் தம் வரவின் காரணத்தை அவர்களுக்குக் கூறியதும்.)**

பரதஸ்ரேஷ்டர்களான பாண்டவர்களோ, உடன்வந்தவர்களோடு, வனவாஸததை உத்தேசிததுக் கங்கைக் கரையிலிருந்து குருக்ஷேத்திரத்தைக் குறித்துச் சென்றார்கள். அவர்கள் ஸரஸ்வதியையும் திருஷத்வதியையும் யமுனையையும் அடைந்து காட்டின் வழியே எப்பொழுதும் மேற்றிசையிலேயே செனறார்கள். பிறகு, ஸரஸ்வதிக்கரையில் ஸமமாயுளளதும் ஜலமில்லாததுமான காய்ந்த தரை

வெளியில் முனிஜனங்களுக்குப் பிரியமான காம்யகமென்னும் வனத்தைக் கண்டார்கள். பாரதரே! அவ்வீரர்கள், முனிவர்களால் பின்தொடரப்பட்டும் அவர்களால் தேற்றல் சொல்லப்பட்டும், அனேக மிருகங்களுடனும் பறவைகளுடனுமுள்ள அவ்வனத்தில் வசித்தார்கள். பிறகு, விதுரரோ எப்பொழுதும் பாண்டவர்களைப் பார்ப்பதில் ஆசைகொண்டு ஒரேரதத்துடன் வளமுள்ள காம்யகமென்னும் வனத்தைக் குறித்துச் சென்றார். பிறகு, வேகமான குதிரைகளால் (இழுக்கப்பட்ட) தேரிலே சுமக்கப்பட்ட விதுரர், காம்யகமென்னும் அவ்வனத்தை அடைந்து, திரௌபதி, பிராம்மணர்கள், தம்பிமார்கள் இவர்களுடன் பரிசுத்தமான இடத்தில் உட்கார்ந்திருக்கும் தர்மாத்மாவான (அவரைப்) பார்த்தார். பிறகு, ஸத்யஸந்தரான அந்த அரசர் வேகமாகத் தூரத்தில் வரும் விதுரரைப் பார்த்தார். பிறகு, சகோதரனான பீமஸேனனைப் பார்த்து, 'விதுரர் நம்மிடம் வந்து என்ன சொல்லப்போகிறாரோ? இவர் சகுனியின் வார்த்தையைக் கேட்டுச் சூதாடுவதற்குக் கூப்பிட வராமலிருப்பாரா? (சூதாட்டத்தில்) தேர்ந்த அற்பனான (சகுனி) திரும்பவும் சூதாட்டத்தில் நமது ஆயுதங்களையும் ஜயிக்கப் போகின்றானோ? பீமஸேன! ஒருவரால் யுத்தத்திற்கு அழைக்கப்பட்டால் யான் திரும்புவதற்குச் சக்தனல்லேன். காண்டீவம் நம்மிடம் நிலைப்பது [1] ஸந்தேகமாகிவிட்டால் நமக்கு ராஜ்யம் கிடைப்பதும் எப்படியும் ஸந்தேகமே ஆகும்' என்றார்.

ஓ! அரசரே! பிறகு, எல்லாப் பாண்டவர்களும் (ஆஸனத்திலிருந்து) எழுந்து விதுரரை வரவேற்றார்கள். அவர்களால் பூஜிக்கப்பட்ட அந்த விதுரரும் அந்தப் பாண்டுபுத்திரர்களை அவரவர்களுக்குத் தக்கபடி மரியாதை செய்தார். பிறகு, அந்த நரச்ரேஷ்டர்கள், ச்ரமபரிகாரம் செய்துகொண்ட விதுரரை நோக்கி வந்ததற்குக் காரணத்தைக் கேட்டார்கள். அவரும் அம்பிகாபுத்திரனான திருதராஷ்டிரனிடத்தில் நடந்தபடி அவர்களுக்கு விரிவாகச் சொல்லலானார். 'அஜாதசத்துருவே! திருதராஷ்டிரர் (அவரால்) ரக்ஷிக்கப்படுகின்ற என்னை அழைத்து மரியாதைசெய்து, 'இவ்விதம் நடந்த விஷயத்தில் பொதுநிலையை அடைந்து அவர்களுக்கும் எனக்கும் ஹிதத்தைச் சொல்லு' என்று சொன்னார். கௌரவர்களுக்கும் திருதராஷ்டிரருக்கும் தக்கதும் நன்மையானதும் அனுகூலமானதுமான வார்த்தை என்

---

1 'ஸம்சயிதே' என்பது மூலம், 'பந்தயம் வைக்கப்பட்டால்' என்பது பழையவுரை.

ளால் சொல்லப்பட்டது. அந்த நன்மையை அவர் மனம் ஏற்றுக்கொள்ள வில்லை. அதைவிட மற்றொன்றையும் நான் யோக்யமாக நினைக்க வில்லை. பாண்டுபுத்திரர்களே! என்னால் மேலான ஹிதம் சொல்லப் பட்டது. என்னுடைய அந்த (நன்மையையும்) அம்பிகாபுத்திரர் கேட்கவில்லை. வியாதியை அடைந்தவனுக்குப் பத்தியமான மருந்து ருசிக்காததுபோல இவருக்குச் சொல்லப்படும் அந்த வார்த்தை ருசிக்கவில்லை. அஜாதசத்ருவே! ச்ரோத்ரியனுடைய வீட்டில் மிக்க தோஷமுள்ள ஸ்திரீயானவள் எவ்விதம் நல்ல காரியத்தில்[1] சேர்க்கப் படமாட்டாளோ அவ்விதம் திருதராஷ்டிரர் நல்வழியில் திருப்பப்படக் கூடியவராயில்லை. அறுபது வயதான பதியானவன் இளம்பருவமுள்ள ஸ்திரீக்கு ருசியாததுபோலத் திருதராஷ்டிரருக்கு (என் வார்த்தை) ருசிக்கவில்லை. இது நிச்சயம். அரசனே! கௌரவர்களுக்கு நாசமானது நிச்சயம். திருதராஷ்டிரர் க்ஷேமத்தை[2] ஆலோசியார். தாமரை இலையில் விடப்பட்ட ஜலம் போல இவரிடத்தில் சொல்லப்பட்ட ஹிதமும்[3] தங்காது. பிறகு, திருதராஷ்டிரர் சினங்கொண்டு, 'எவ் விடத்தில் உனக்கு ச்ரத்தையோ அங்கே போய்விடு; நான் இப் பூமியையோ பட்டணத்தையோ ஆளுவதற்கு உன்னை ஸகாயமாகத் திரும்பவும் விரும்பேன்' என்று என்னைப் பார்த்துச் சொன்னார். நரேந்திரனே! திருதராஷ்டிர ராஜரால் விடப்பட்ட அப்படிப்பட்ட நான் உனக்கு உபதேசிக்க வந்தேன். ஸபையில் எது என்னால் சொல் லப்பட்டதோ அது முழுமையையும், திரும்பவும் எதைச் சொல்லப் போகின்றேனோ அந்தனைத்தையும், உறுதிப்படுத்திக்கொள்ளு. பகை வர்களால் கடுமையான துன்பங்களுடன் சேர்க்கப்பட்ட எவன் சிறு நெருப்பை விருத்திபண்ணுகிறவனைப்போலப் பொறுமையை அடைந்து காலத்தை எதிர்பார்க்கிறானோ புத்திமானான அவன் ஒருவனுக்கே பூமியை அனுபவிக்கின்றான். எவனுடைய தனமானது துணைவர் களுக்குப் பொதுவானதோ அவனுடைய துணைவர்கள் அவனுடைய துக்கத்தில் பாகத்தை அடைவார்கள். துணைவர்களைச் சேர்ப்பதில் இது தக்க உபாயம். துணைவர்கள் கிடைத்தால் பூமி கிடைக்கும் என் கிறார்கள். பாண்டவர்களே! உபயோகமற்ற வார்த்தையல்லாத ஸத்யமே சிறந்தது. ஒரேவிதமான உணவைத் துணைவர்களுடன்

---

1 வேறுபாடம். 2 'ந பஸ்யதி' என்பது மூலம்; 'ந பராமருசதி' என்பது பாடபேதம்; அதற்கு, 'ஆலோசிக்கவில்லை' என்பது பொருள். 3 'நிஷ்டேத' என்பது மூலம்.

சேர்ந்து உண்ணவேண்டும். தான் துணைவர்களுக்குமுன் முதன்மை வகிப்பதிலிருந்து தவறக்கூடாது. இவ்விதச் செய்கையுள்ளவன் விருத்தியை அடைகின்றான்' என்றார். யுதிஷ்டிரர், 'எவ்விதம் சொல்லுகின்றீர்களோ அவ்விதமே மேலான புத்தியை அடைந்து தவறுதலில்லாமல் செய்கின்றேன். தேசகாலங்களுக்கு ஏற்றவாறு மற்றும் எது உண்டோ அதனையும் சொல்ல வேண்டும்; அது முழுதையும் செய்கின்றேன்' என்றார்.

---

## ஆறாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

**(விதுரர் பிரிவால் வருந்திய திருதராஷ்டிரன் அவரை அழைத்துவர ஸஞ்சயனை அனுப்பியதும், ஸஞ்சயனாலழைக்கப்பட்ட விதுரர் திருதராஷ்டிரனிடம் வந்ததும்.)**

அரசரே! விதுரரானவர் பாண்டவர்களிருக்கும் ஆச்ரமத்தை அடைந்தவுடன், மிக்க புத்திமானான திருதராஷ்டிரன் மனக்கவலையுற்றுத் தாபத்தை அடைந்தான். ஸந்தியிலும் பகைமையிலும் (நீதியை யறிந்திருப்பதால்) ஏற்பட்ட விதுரருடைய திறமையையும் வருங்காலத்தில் பாண்டவர்களுக்குண்டாகும் மேலான பெருமையையும் நினைத்துக்கொண்டு மிகவும் தாபத்தை அடைந்தான். அவன் ஸபையின் வாயிலில் வந்து விதுரரின்[1] நினைவால் மயக்கங்கொண்டு ராஜ ஸ்ரேஷ்டர்களுக்கு எதிரில் பிரஜ்ஞையற்றுப் பூமியில் விழுந்தான். அவ்வரசன் சிலநேரத்தில் பிரஜ்ஞையை அடைந்து தரையிலிருந்து எழுந்து சமீபத்திலிருக்கும் ஸஞ்சயனை நோக்கி வார்த்தை சொல்லுகிறான். 'என் தம்பியானவன் உபகாரத்தை எதிர்பாராது நன்மை செய்பவன்; நேரில்வந்த வேறு தாயம் போன்றவன், அவனை நினைத்து இப்பொழுது என் மனமானது மிகவும் வெடிக்கிறதுபோலிருக்கின்றது. தர்மத்தை அறிந்தவனும் என் பிராதாவுமான அவனைச் சீக்கிரம் அழைத்து வா' என்றான். இவ்விதம் சொல்லி அவ்வரசன் தீனமாக அழுதான். அரசன், பச்சாத்தாபத்தால் வாட்டப்பட்டவனாகி, விதுரரை நினைத்துக்கொண்டு மோகத்தையடைந்து, பிராதாவினிடத்தில் சிநேகத்தால் ஸஞ்சயனை நோக்கிப் பின்வரும் வாக்கியத்தைச் சொன்னான்.

---

1 'ஸ்மர' [illegible]

'ஸஞ்சயனே! போ. பாவியான என்னால் சினங்கொண்டு துரத்தப்பட்ட என் பிராதாவான விதுரன் ஜீவித்திருக்கிறானோ என்று தெரிந்துகொள். மிகவும் கற்றறிந்தவனும் அளவற்ற புத்தியுள்ளவனுமான என் பிராதாவினால் எனக்கு மிகச் சிறிதான ஓர் அப்பிரியமும் முன்புசெய்யப்படவில்லை. அறிவிற் சிறந்த ஸஞ்சயனே! மேலான புத்தியுள்ள அவன் என்னிடமிருந்து அப்பிரியத்தை அடைந்து எவ்விதம் உயிரை விடாமலிருப்பன்? போ; அவனை அழைத்துவா' என்றான். அப்பொழுது ஸஞ்சயன் அவ்வரசனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு அவனைக் கொண்டாடி, 'அப்படியே' என்று சொல்லிக் காம்யக வனத்தைக் குறித்து வேகமாகப் புறப்பட்டான். பிறகு, அவன் எங்குப் பாண்டவர்கள் (இருக்கின்றார்களோ) அந்த வனத்தை விரைவில் அடைந்து, மான்தோலை உடுத்துக்கொண்டிருக்கும் யுதிஷ்டிரரைப் பார்த்தான். ஆயிரக்கணக்கான பிராமணர்களுடனும் விதுரருடனும் உட்கார்ந்திருப்பவரும் தம்பிகளால் நான்கு பக்கத்திலும் காக்கப்பட்டவரும் தேவதைகளுடன் கூடிய இந்திரனைபோன்றவருமான யுதிஷ்டிரரை ஸஞ்சயன் சமீபத்தில் சென்று வணங்கினான். பீமனும் அர்ஜுனனும் இரட்டையர்களும் (அப்பொழுது) அவனால் செய்யப்பட்ட மரியாதையைப் பெற்றுக்கொண்டார்கள். அரசரால் க்ஷேமம் விசாரிக்கப்பட்டவனும் ஸுகமாக உட்கார்ந்தவனுமான ஸஞ்சயன், தன்வரவின் காரணத்தைப் பின்வருமாறு சொல்லத்தொடங்கினான். 'ஓ! விதுரரே! அம்பிகாபுத்திரரான திருதராஷ்டிரராஜர் உம்மை நினைக்கின்றார். நீர் சீக்கிரம் சென்று அவரைப் பாரும். அரசரைப் பிழைப்பியும். ஸாதுக்களுள் சிறந்தவரே! குருவம்சத்திலுதித்தவர்களும் ஆண்மையிற் சிறந்தவர்களுமான பாண்டவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு ஸிம்ஹமான திருதராஷ்டிரருடைய கட்டளைப்படி போகவேண்டும்' என்றான்.

இவ்விதம் சொல்லக்கேட்டவரும் புத்திமானும் உறவினர்களிடத்தில் அன்புள்ளவருமான விதுரர், யுதிஷ்டிரரின் அனுமதியின்மேல், திரும்பவும் ஹஸ்தினபுரத்தை அடைந்தார். மிக்க சக்திபொருந்தியவனும் அம்பிகா புத்திரனுமான திருதராஷ்டிரன், அவரைக் குறித்து, 'தர்மத்தை அறிந்தவனே! தோஷமில்லாதவனே! தெய்வச் செயலால் வந்து சேர்ந்தாய்; தெய்வச் செயலால் என்னை நினைக்கின்றாய். பரதஸ்ரேஷ்டனே! நான் இப்பொழுது உன்னிமித்தம் இரவும் பகலும் தூக்கமில்லாததால் என்தேகத்தைச் சோபையற்றதாகப் பார்க்கிறேன்' என்றான். அவன், விதுரரை மடியில் வைத்துக்கொண்டு

தலையில்மோந்து 'குற்றமற்றவனே! என்னால் சொல்லப்பட்டதைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்' என்று சொன்னான். விதுரர், 'அரசரே! என்னால் பொறுத்துக்கொள்ளப்பட்டது. எனக்கு நீர் மேலான குரு. அவ்விதமே நான் உம்மைப் பார்ப்பதற்காகவே சீக்கிரம் வந்தேன். நரச்ரேஷ்டரே! தர்மசிந்தையுள்ள மனிதர்கள் கஷ்டப்படுகிறவர்களிடம் தயையுள்ளவர்களாக இருக்கின்றார்களல்லவா? அரசரே! இந்த விஷயத்தில் ஆலோசனை வேண்டாம். எனக்கு இத்தப் பாண்டுபுத்திரர்கள் எவ்விதமோ, அவ்விதமே உமது புத்திரர்களும். இப்பொழுது கஷ்டத்தை அடைந்தார்களென்று என்னுடைய புத்தியானது அவர்களைக் குறித்துச் செல்லுகிறது' என்றார். மிக்க காந்தியுள்ளவர்களும் பிராதாக்களுமான விதுரரும் திருதராஷ்டிரரும் இவ்வாறு ஒருவருக்கொருவர் ஸமாதானம் செய்துகொண்டு மிகுந்த ஸந்தோஷத்தை அடைந்தார்கள்.

---

## ஏழாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

**(விதுரர் திரும்பிவரக்கண்ட துரியோதனன் வருந்திக் கர்ணன் முதலியோருடன் ஆலோசித்துப் பாண்டவர்களைக் கொல்லப் புறப்பட்டதும், வியாஸர் வந்து தடுத்ததும்.)**

கெட்ட புத்தியுள்ளவனும் திருதராஷ்டிர புத்திரனுமான துரியோதனன், விதுரர் வந்ததாகவும் திருதராஷ்டிரரால் ஸமாதானம் செய்யப்பட்டதாகவும் கேட்டு, மிக்க மனவருத்தமடைந்தான். அவ்வரசன், சகுனியையும் கர்ண துச்சாஸனர்களையும் வருவித்து, அறியாமையாலுண்டான மயக்கத்தையடைந்து வார்த்தை சொல்லலானான்: 'பாண்டவர்களுக்கு ஸுஹ்ருத்தும் நன்மையில் பற்றுள்ளவரும் வித்வானும் திருதராஷ்டிரருக்குப் பிரிய மந்திரியுமான இந்த விதுரர் திரும்பி வந்துவிட்டார். விதுரர் பாண்டவர்களை வருவிக்கும் விஷயத்தில் இவருடைய புத்தியைத் திருப்பவும் வசப்படுத்திக்கொள்வதற்குள் எனக்கு நன்மையானதை ஆலோசனை செய்யுங்கள். பிறகு, எவ்விதமாவது திரும்பவும் இங்கு வந்த பாண்

டவர்களை நான் பார்ப்பேனாகில், ஒன்றையும் வேண்டாதவனும் உயி ரற்றவனுமாகி நாசமடைவேன். விஷம் குடித்தலையோ தூக்குப் போட்டுக் கொள்ளுதலையோ சஸ்திரம் பிரயோகித்துக்கொள்ளு தலையோ தீயில் குதிப்பதையோ செய்வேன். திரும்பவும் ஐஸ்வரி யத்தையடைந்த அவர்களைப் பார்க்க இங்கு விரும்பேனன்றோ ?' என்றான்.

சகுனி, 'ஓ! அரசனே! ஏன் அறியாமையை அடைந்தாய்? அவர்கள் பிரதிஜ்ஞைசெய்துகொண்டு போனார்கள். (அவர்கள் திரும்பி வரமாட்டார்கள்.) இது இவ்விதமாகாது பரதஸ்ரேஷ்டனே! எல்லாப் பாண்டவர்களும் ஸத்யத்தில் இருப்பவர்களாதலால் உன் பிதாவின் வார்த்தையை ஒருபொழுதும் அங்கீகரிக்கமாட்டார்கள். அல்லது, அவர்கள் யாவரும் அங்கீகரித்தாலும் பிரதிஜ்ஞையைத் தள் ளித் திரும்பவும் பட்டணத்தையடைந்தாலும் நம்முள் (அப்படி வந் தது தக்கதா தகாததா என்னும்) ஆலோசனை வரும். எல்லாரும் அரசரின் இஷ்டத்தை அநுஸரித்தவர்களும் நன்கு மறைக்கப்பட்ட வாகளும் பாண்டவர்களின் இடைவெளியை வெகுவாகப் பார்ப்பவர் களுமாகி மத்தியஸ்தர்களா யிருப்போம்' என்றான்.

துச்சாஸனன், 'மஹா புத்திமானான அம்மானே! இது நீ எவ் விதம் சொல்லுகின்றையோ அவ்விதமே. எப்பொழுதும் நீ பேசும் போது உன்புத்தி எனக்கு மிகவும் பிடிக்கின்றது' என்றான். கர்ணன், ஓ! துரியோதனராஜனே! எல்லாரும் உன்னிஷ்டத்தை எதிர் பார்க்கின்றோம். நாமெல்லாரும் ஒரே புத்தியாயிருப்பதையும் காண் கின்றேன். அந்தத்தீரர்கள் பிரதிஜ்ஞைசெய்த காலங் கழித்தலைச் செய்யாமல் வரமாட்டார்கள். மோகத்தால் வந்தால், திரும்பவும் அவர்களைச் சூதினால் ஜயித்துவிடு' என்றான்.

அப்பொழுது, இவ்விதம் கர்ணன் சொல்லியதைக்கேட்ட அந் தத் துரியோதனராஜன், மனத்தில் அதிக ஸந்தோஷமில்லாதவனாகிச் சீக்கிரம் முகத்தைத் திருப்பிக்கொண்டான். பிறகு, கர்ணன், (துரி யோதனன் அபிப்பிராயத்தை) அறிந்து அழகிய கண்களைக் கோபத் தால் பரக்கவிழித்துத் தானே தன் உடம்பை நிமிர்த்துக்கொண்டு மிகவும் கோபங்கொண்டவனாகித் துச்சாஸனனையும் அந்தச் சகுனி யையும் (பார்த்துச்) சொல்லத் தொடங்கினான்: 'ஓ! அரசர்களே! எனது இஷ்டம் எதுவோ அதைத் தெரிந்துகொள்ளுங்கள். எல்லா ரும் வேந்தனுக்கு விருப்பத்தைச் செய்வோம். (அரசரான திருத

ராஷ்டிரரின் கட்டளைப்படி நடக்கவேண்டியவர்களால்) நாம் என்ன செய்வோம்? ரோமபனின்றி எல்லாரும் இவனுடைய பிரியத்திலேயிருக்கச் சக்தியற்றவர்களாயிருக்கிறோம். நாம் ஒன்றுசேர்ந்து ஆயுதங்களை எடுத்துக்கொண்டும் கவசம் பூண்டுகொண்டும் ரதத்திலேறிக்கொண்டும், வனவாஸம் செய்யும் பாண்டவர்களைக் கொல்லச் செல்வோம். அவர்கள் யாவரும் அறியப்படாததியை அடைந்து நாசத்தை அடைந்தவுடன், திருதராஷ்டிர புத்திரர்களுடன் அவ்வாறே நாமும் கலகமற்றவர்களாவோம். (அவர்கள்) கஷ்டத்தை அடைந்தவர்களும் சோகத்தில் முழுகினவர்களும் சினேகிதரற்றவர்களுமாயிருக்கையிலேயே செல்வோம்; நாமதம் வேண்டாம்' என்றான். அப்பொழுது, கர்ணனது அவ்வார்த்தையைக் கேட்டு யாவரும் மனத்தில் களிப்படைந்து அவனை அடிக்கடி புகழ்ந்துகொண்டு சொன்னார்கள். இவ்விதம் சொல்லி, யாவரும், தனித்தனி ரதங்களுடன் யுத்தஞ்செய்யத் தாகளாகி ஒன்றுசேர்ந்து பாண்டவர்களைக் கொல்ல நிச்சயஞ்செய்து கொண்டு புறப்பட்டார்கள்.

சுத்தமனமுள்ளவரும் பிரபுவுமான வியாஸர், அவர்களின் எண்ணம் பின்னதாகத் திவ்யதிருஷ்டியால் அறிந்து (அங்கு) வந்தார். மகிமையுள்ளவரும் உலகத்தில் பூஜிக்கப்பட்டவருமான அவர், அவர்களை யாவரையும் தடுத்து, பிறகு, உட்கார்ந்திருக்கும் திருதராஷ்டிரனிடம் வேகமாய்வந்து சொல்லலுற்றார்.

---

## எட்டாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

**(வியாஸர், பாண்டவரைப் பகைத்தலால் தீமைவிளையுமென்பதையும் அவர்களுடன் ஸமாதானம் செய்துகொள்ள வேண்டுமென்பதையும் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியது.)**

வியாஸர், 'மஹா புத்திமானான திருதராஷ்டிரனே! என் வார்த்தையை அறி. குருவம்சத்திலுதித்த எல்லாருக்கும் மேலான ஹிதத்தை உன்னை நோக்கிச் சொல்லுகிறேன். நீண்டபுஜமுள்ளவனே! துரியோதனன் முதலியோர்களால் கபடமாய் ஜயிக்கப்பட்டு யாதுகாரணம்பற்றிப் பாண்டவர்கள் வனம் சென்றார்

களோ அது எனக்குப் பிரியமில்லை. பாரதனே! அவர்கள், கஷ்டங்களை நினைத்துக்கொண்டு, பதினமூன்றாவது வருஷம் நிறைந்தவுடன், கோபத்தையடைந்து, கௌரவர்களிடத்தில் விஷம்போன்ற பாணத்தை விடப்போகின்றார்கள். ஆகையால், மிக்க மந்தபுத்தியுள்ளவனும் பாவத்தில மனமுள்ளவனுமான இந்த உனது புத்திரன் எப்பொழுதும மிக்க கோபங்கொண்டு ராஜ்யத்திற்காகப் பாண்டவர்களை ஏன் கொல்ல விரும்புகின்றான்? இந்த மூடன நனகு தடுக்கப்படவேண்டும். உன்னுடைய புத்திரன ஸமாதானத்தை அடையட்டும். காட்டிலிருக்கும அவர்களைக் கொல்லவிரும்பினால இவன் உயிரை இழப்பான. புத்திமானான விதுரனும் பீஷ்மரும நாமும கிருபரும துரோணரும் எவ்விதம சொல்லுகின்றோமோ அவ்விதம நனகு செய்யப்படவேண்டும. அரசனே! மிக்க அறிவுள்ளவனே! தன் ஜனங்களோடு சண்டை செய்வது நிந்திக்கப்படுகிறதல்லவா? அதர்மத்தையும் அகீர்த்தியையும கொடுக்கும் காரியத்தைச்செய்யாதே. பாரத! அரசனே! பாண்டவர்கள்விஷயத்தில இவனுடைய விசாரபூர்வமான புத்தியானது உபேக்ஷிக்கப்பட்டால பெரிய தீங்கைச் செய்யும். அரசனே! அல்லது, மிக்க மந்தபுத்தியுள்ள இந்த உனது புத்திரன் ஒருவனாகவே, சகாயமில்லாதவனாகக் காட்டை அடைந்து பாண்டவர்களுடன் சேரட்டும். ஆண்மையிற் சிறந்தவனே! பிறகு, உனது புத்திரனுக்குப் பாண்டவர்களுடன் சேர்க்கையாலுண்டான ஸ்நேகம் நேருமானால் நீ கார்யஸித்தி பெற்றவனாவாய். ஆனாலும், இது இவ்விதம் நேராது. மஹாராஜனே! 'ஒருவனுக்கு எந்தக்குணம் உடன்பிறக்கின்றதோ அது உயிருடனிருக்கிறவரையில் விலகாது' என்று கேட்கப்படுகின்றது. பீஷ்மரும நீயும விதுரனும துரோணரும் எப்படி நினைக்கிறீர்கள்? இவ்விஷயத்தில் எது சிறந்ததோ (அது) முதலில செய்யத்தக்கது; (இல்லாவிடில்) கருதிய பயன கைகூடாது' என்றார்.

---

## ஒன்பதாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

(வியாஸர் மக்களிடத்து அன்பு விடற்கரிதென்பதற்கு உதாரண மாகக் காமதேனுவின் கதையைக் கூறித் துரியோ தனாதியர் உயிர்வாழ்தல் பாண்டவர்களின் ஸமாதானத்தைப் பொறுத்துள்ள தென்றது.)

திருதராஷ்டிரன், 'பூஜ்யரான முனிவரே! நானும் இந்தச் சூதாட்டத்தில் நடந்ததைச் சம்மதிக்கவில்லை. ஆகையால், தெய்வத்தால் இழுத்து அதற்கு அனுமதிக்கும்படி செய்விக்கப்பட்டே னென்று எண்ணுகின்றேன். இந்தச் சூதைப் பீஷ்மர் விரும்ப வில்லை; துரோணரும் விரும்பவில்லை; விதுரனும் விரும்பவில்லை; காந்தாரியாலும் விரும்பப்படவில்லை. அறியாமையால் செய்யப்பட் டது. விரதங்களைச்செய்த பகவானே! துரியோதனனை அறிவற்றவ னென்று அறிந்திருந்தும் புத்திரஸ்னேகத்தால் விடுவதற்குச் சக்தி யற்றவனாயிருக்கின்றேன்' என்றான். வியாஸர், 'விசித்திர வீரியன் புத்திரனான அரசனே! நீ சொல்வது உண்மையே. [1] புத்திரனை மேலென்றும் புத்திரனைக்காட்டிலும் மேலில்லையென்றும் நன்கு அறி வோம். பரிபூர்ணமான அர்த்தங்களோடு கூடினதானாலும் மற்ற தைப் புத்திரனைக்காட்டிலும் மேலாக நினைக்கவில்லையென்று இந்திர னும் காமதேனுவால் கண்ணீர் விட்டுக்கொண்டு போதிக்கப்பட்டான். ஜனங்களின் பதியே! இவ்விஷயத்தில் இந்திரனுக்கும் காமதேனுவுக் கும் நடந்த ஸம்வாதரூபமானதும் சிறந்ததுமான பெரிய கதையை உனக்குச் சொல்லுகின்றேன்.

அரசனே! முற்காலத்தில் கோக்களுக்கு மாதாவும் ஸ்வர்க்கத்தி லுள்ளதுமான காமதேனு அழுதது. இந்திரன் அதைப் பார்த்து இரக்கமுற்றான். அவன், 'சுபமானவளே! என் இவ்விதம் அழு

1 இந்த வாக்யத்தில் 'பரம்' என்னும் பதம் இரண்டுமுறை வந்திருக்கிறது. முதலிலுள்ளதற்கு 'மேல், அல்லது, பகைவன்' என்று பொருள் கொண்டு, 'புத்திரனே பகைவன் என்பதை நன்கு அறிவோம். ஏனெனில், கெட்ட புத்திர னிருந்தால் அவனே பகையாகிறான்' என்றும், இரண்டாவதற்கு, 'நல்ல புத்தி ரனிருந்தால் அவனைக்காட்டிலும் சிறந்தபொருள் இல்லை' என்றும் பொருள் கூறுகிறது.

கிருய்? தேவதைகளுக்கும் மனிதர்களுக்கும் கோககளுக்கும் விக்ஷமமா? நீ இப்படி அழுகிறது அல்ப நிமித்தமாக இராது' என்முன. ஸுரபி, 'தேவராஜனே! உங்களுககு கஷ்டமொன்றும் காணபபடவில்லை. நானே புததிரனைககுறிததுத துககிககிறேன். இந்திரனே! அதனுல் அழுகினறேன. ஸுராதிபனே! பலமற்றதும் தாறுக்கோலால் குததபபடுகினறதும் கலபையால பீடிக்கப்பட்டதும (ஆகாரததில்) ஆசையுள்ளதும் கஷடபபடுகின்றதும துன்புறுத்தபபடுகின்றதுமான இநத என சினனப புததிரனைப் பார். ஸுராதிபனே! தேவேநதிரனே! ஹிமஸிககப்படுகின்றதும் மிகக தளர்ச்சியை அடைந்ததுமான இதைப பார்தது இரக்கமுள்ளவளாயினேன். என் மனமும மிகவும நடுஙகுகின்றது. அவைகளில் பலத்துடன கூடின ஒன்று அதிக பாரததைச சுமககினறது; மற்முென்று பலமும் பிராணனும் குறைநததும் இளைத்ததும நரம்புகளடாநததுமாகக் கஷ்டததுடன் பாரத்தைச் சுமக்கினறது. அதைக்குறித்துத துக்கிக்கின்றேன. இநதிரனே! அடிக்கபபடுகினறதும் தாறுால அடிக்கடி குததப்படுகின்றதுமாகி அந்தப் பாரததைச சுமககச சக்தியற்றிருக்கின்றது. ஓ! இந்திரனே! பார். ஆனதுபற்றி யான் அதன் சோகத்தால பீடிக்கப்பட்டவளும் மிகவும் துக்கததை அடைந்தவளும் கணகளினுல நீரைப்பெருக்குபவளும் இரக்கமுள்ளவளுமாகி அழுகின்றேன்' என்றது. இந்திரன், 'அழகானவளே! உன் ஆயிரம் புததிரர்கள் கஷ்டப்படுததப்படுமபோது இஙகு ஒரு புததிரன் கஷ்டப்படுத்தப்படுகிறதென்று ஏன் இரஙகுகிருய்?' எனமுன. காமதேனு, 'ஆயிரக்கணக்கான எல்லாப புததிரர்களும எனக்குச் சமமே. இந்திரனே! ஆனுல், கஷ்டப்படும புததிரன்விஷயததில அதிக இரக்கம் (உணடாகின்றது)' என்றது. கௌரவனே! (அப்பொழுது) இந்திரன் சுரபியின் அந்த வார்ததையைக் கேட்டு மிகவும் ஆச்சரியததையடைந்து உயிரைக்காட்டிலும் புததிரனை மேலாக நினைத்தான். பூஜ்யனுன இநதிரன் கிருஷிசெய்கின்றவனுக்கு இடையூற்றை விளைவிக்கவேண்டிச சீக்கிரம் அவ்விடத்தில் அதிக ஜலத்தைப் பெய்தான். அரசனே! ஆகையால, சுரபி எவ்விதம் சொல்லிற்றே அவ்விதம் உனக்கு எல்லாப் புத்திரர்களிடததிலும் கிருபை பொதுவாயும், கஷ்டப்படுகிறவர்களிடம் அதிகமாயும் இருக்கவேண்டும். புததிரனே! எனக்குப் பாண்டு எவ்விதம் புத்திரனே அவ்தேமே நீயும் இருக்கிருய். மஹாபுததிமானுன விதுரனும் (அவ்

விதமே). நான் இதனைச் சிநேகத்தால் சொன்னேன். பாரதனே! வெகு காலமாக உனக்கு நூற்றொரு பிள்ளைகள் இருக்கின்றனர். பாண்டுவுக்கு ஐந்து பேர்களே காணப்படுகின்றார்கள். அவர்களும் கபடமில்லாதவர்கள்; மிகவும் துக்கமடைந்திருக்கிறார்கள். 'எவ்விதம் ஜீவிப்பார்கள்? எவ்விதம் விருத்தியடைவார்கள்?' என்று கஷ்டப்படும் பாண்டவர்கள் விஷயத்தில் என் மனம் மிக்க தாபத்தை அடைகின்றது. பாரதவினே! இங்குக் கௌரவர்கள் ஜீவிக்க விரும்புவையானால் உன்னுடைய புத்திரனை துர்யோதனன் பாண்டவர்களுடன் ஸமாதானத்தை அடையவேண்டும்' என்றார்.

---

## பத்தாவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி.)

(திருதராஷ்டிரனால் வேண்டப்பட்ட வியாஸர், மைத்ரேயர் துரியோதனனுக்கு உபதேசிப்பரென்று சொல்லிச் சென்றதும், துரியோதனன் மைத்ரேயர் சொல்லை அநாதரணை செய்து தொடையைத் தட்டியதும், மைத்ரேயர் அவனைச் சபித்ததும்.)

திருதராஷ்டிரன், 'அறிவிற் சிறந்த முனிவரே! என்னை நோக்கிச் சொல்லிய இது இவ்விதமுள்ளதே. நானும் அறிகிறேன். இந்த எல்லா அரசர்களும் அறிகிறார்கள். ஓ! முனிவரே! நீங்கள் என்னுடைய கௌரவர்களுக்கு நன்மையாகவும் நமக்கு வெற்றியை உண்டுபண்ணுவதாகவும் நினைக்கிறீர்களோ அதையே விதுரனும் பீஷ்மரும் துரோணரும் என்னிடம் சொல்லுகிறார்கள். நான் அனுக்கிரகிக்கத் தகுந்தவனானாலும் குருவம்சத்தில் உதித்தவர்களிடத்தில் உங்களுக்குத் தயையிருக்குமானாலும் கெட்ட எண்ணமுள்ள என் புத்திரனை துரியோதனனைக் குறித்து உபதேசிக்கக்கடவீர்' என்றான். வியாஸர், 'அரசனே! பூஜ்யரான இந்த மைத்ரேயரிஷியானவர் ப்ராதாக்களான பாண்டவர்களைப் பார்த்துவிட்டு நம்மைப் பார்க்க வேண்டுமென்ற விருப்பத்தால் இங்கேயே வருகின்றார். அரசனே! இந்தப் பெரிய ரிஷியானவர் இந்தக் குலத்தின் ஸமாதானத்திற்காக உனது புத்திரனை துரியோதனனுக்கு நியாயம் தவறாது உபதேசிப்பார். கௌரவனே! இவர் என்னத்தைச் சொல்லுவாரோ அது சங்

மீதகமின்றிச் செய்யத்தக்கது. காரியத்தைச் செய்யாவிடில் கோபத்துடன் உனது புத்திரனைச் சபிப்பார்' என்றார். இவ்விதம் சொல்லிவிட்டு வியாஸர் சென்றனர். மைத்திரேயர் காணப்பட்டார். அவரைப் புத்திரனுடன் கூடின அரசன் மரியாதையுடன் வரவேற்றான். அர்க்கிய முதலிய எல்லாக்காரியங்களையும் செய்து களையாறின முனிஸ்ரேஷ்டரைப் பார்த்து, அம்பிகா புத்திரனான திருதராஷ்டிர ராஜன் வணக்கத்துடன் சொல்லலானான். 'ஓ! பகவானே! உமக்கு நல்வரவா? வீரர்களும் பராக்கிரமசாலிகளுமான ஐந்து பாண்டவர்களும் குருஜாங்கலத்தில் ஸௌக்கியமாயிருக்கின்றார்களா? பரதஸ்ரேஷ்டர்கள் பிரதிஜ்ஞைப்படி இருக்க விரும்புகின்றார்களா? கௌரவர்களின் ஸஹோதர ஸ்னேகமானது குறைவற்றதாக இருக்குமா?' என்றான்.

மைத்திரேயர், 'தீர்த்தயாத்திரைக்காக ஸஞ்சரித்துக்கொண்டு குருஜாங்கலத்தை அடைந்தேன். காம்யக வனத்தில் தற்செயலாகத் தர்மபுத்திரரைப் பார்த்தேன். பிரபுவே! ஜடையையும் மான் தோலையும் தரித்துக்கொண்டவரும் தபோ வனத்தில் வஸிப்பவரும் சிறந்த குணமுள்ளவருமான அவரைப் பார்ப்பதற்காக முனிவர்கள் வந்தார்கள். மஹாராஜரே! அவ்விடத்தில் உமது புத்திரர்களுக்குச் சண்டைக்குக் காரணமானதும் சூதாட்ட உருவமாக வந்ததும் மஹா பயங்கரமுமான அநியாயத்தையும் கேட்டேன். பிரபுவே! அதனால் கௌரவர்களின் நன்மைக்காக நான் உம்மை வந்தடைந்தேன். உம்மிடம் ஸ்னேகமும் பிரீதியும் எனக்கு எப்பொழுதும் அதிகமன்றோ? அரசரே! உமது புத்திரர்கள் எவ்விதமேனும் ஒருவருக்கொருவர் விரோதப்படுகின்றார்களென்பதாகிய இது, நீரும் பீஷ்மரும் உயிருடனிருக்கும்போது, யோக்கியமன்று. அரசரே! நீர் களத்தில் தாமணிக் கயிற்றின் நடு முளைபோன்றவர்; தண்டிக்கவும் அனுக்கிரகிக்கவும் தக்கவர்; வரப்போகிற பயங்கரமான அநியாயத்தை ஏன் உபேக்ஷிக்கிறீர்? ஓ! குருநந்தனரே! திருடர்களின் நடைபோல் ஸபையில் நடந்த நடையால் ரிஷிக்கூட்டத்தில் விளங்குகிறீரில்லை' என்றார். பூஜ்யரான மைத்திரேய ரிஷியானவர், அங்கிருந்து திரும்பி பொறுமை கொண்ட துரியோதன ராஜனை நோக்கி, இனிய சொல்லால் சொல்ல ஆரம்பித்தார். 'பெரிய தோளுள்ளவனும் பேசுபவர்களுள் சிறந்தவனும் பெருஞ் செல்வமுள்ளவனுமான துரியோதனா! உனக்கு நன்மையான வார்த்தையைச் சொல்லுகிறேன். அதனை என்னிடமிருந்துகேள். நரஸ்ரேஷ்டனான ராஜனே! பாண்டவர்களை மோசம்

செய்யாதே. உனக்கும் பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் உலகத்திற்கும் நன்மையைச் செய்வாயாக. ராத்திரியில் கிர்மீரனென்னும் பெயர் பூண்டவனும் பயங்கரமான சரீரமுள்ளவனுமான அரக்கன் அப்பாண்டவர்களை அடைந்து மலைபோல அசைவற்று வழியை மறைத்துக்கொண்டு நின்றான். யுத்தத்தில் பராக்ரமம்பெற்றவனும் பலமுள்ளவர்களுள் சிறந்தவனுமான பீமன் ஒரு புலி முயலைக் கொல்வது போல, ஒரு மிருகத்தைக் கொல்லும் மாதிரியாக, பலத்தால் அவனைக் கொன்றுவிட்டான். அரசனே! திக்விஜயத்தில், பீமனால், பெரிய வில்லுள்ளவனும் பதினாயிரம் யானை பலமுள்ளவனுமான ஜராஸந்தன் எவ்விதம் யுத்தத்தில் நாசம் செய்யப்பட்டான்; பார்! கிருஷ்ணனும் பந்து; எல்லாத் துருபத புத்திரர்களும் மைத்துனர்கள். நயச்ரேஷ்டர்களான அவர்கள் யாவரும் சூரர்கள்; பயங்கரமான யுத்தம் செய்யும் தன்மையுள்ளவர்கள்; யாவரும் பதினாயிரம் யானையின் பலமுள்ளவர்கள்; வஜ்ரம்போன்ற சரீரமுள்ளவர்கள்; உறுதியுள்ளவர்கள்; உண்மைபேசுதலையே விரதமாகக் கொண்டவர்கள். யாவரும் நாம ப்ரஸித்தியும் அபிமானமுள்ளவர்கள். இஷ்டப்படி உருவத்தையடையக் கூடியவர்களும் தேவசத்துருக்களுமான ஹிடிம்பன் பகன் முதலிய ராக்ஷஸர்களையும் கிர்மீரனென்னும் ராக்ஷஸனையும் கொன்றவர்கள். ஜரையும் மரணமுமுள்ள எந்த மனிதன் யுத்தத்தில் அவர்களை எதிர்த்து நிற்பன்? பரதச்ரேஷ்டனே! உனக்குப் பாண்டவர்களுடன் ஸமாதானமே உண்டாகட்டும். அரசனே! என் வார்த்தையின்படி செய். யமனுக்கு வசமாகாதே' என்றார். அரசனே! அந்த மைத்ரேயர் இவ்விதம் சொல்லும்போது அவன் யானைத் துதிக்கை போன்ற (தனது) தொடையைக் கையால் தட்டினான். கெட்ட புத்தியுள்ள அவன் புன்னகை செய்து காலால் பூமியைக் கீறிக்கொண்டு ஒன்றும் சொல்லாமல் சிறிது தலைகுனிந்து நின்றான். அரசனே! கேட்க விருப்பமில்லாதவனும் பூமியைக் கீறுகின்றவனுமான அந்தத் துரியோதனனைப் பார்த்து மைத்ரேயருக்குக் கோபம் உண்டாயிற்று. கோபத்தை அடைந்த முனிச்ரேஷ்டரான அந்த மைத்ரேயர் தெய்வத்தால் ஏவப்பட்டு அவனைச் சபிக்க எண்ணங்கொண்டார். பிறகு, அந்த மைத்ரேயர் கோபத்தால் கண் சிவந்து ஜலத்தைத்தொட்டுக் கெட்ட எண்ணமுள்ள அந்தத் துரியோதனனைச் சபிக்கலானார். 'என்னை மதியாமல் என் சொற்படி செய்ய விரும்பாமையால் இந்த அதிக கர்வத்தின் பலனை உடனே அடைவாய். பலமுள்ள

பீமன் கதையின் அடிகளால் உன் தொடையைப் பிளந்து உன்னைக் கொல்லுவதற்கேற்ற பெரிய யுத்தம் உண்டாகும்' என்றார்.

இவ்விதம வார்த்தை சொல்லப்பட்டவுடன, பூபதியான திருத ராஷ்டிரன, 'இது இவவிதம் உணடாகவேணடாம்' என்று முனி வரைப பிரார்த்திததான். மைத்திரேயர், 'அரசரே! உமது புதகி ரன் ஸமாதானததை அடைநதால் அப்பொழுது சாபத்தின் பயன் உண்டாகாது. ஐயா! இல்லாவிடில் உணடாகும்' என்றார். அப் பொழுது துரியோதனனுக்குப் பிதாவான ராஜஶ்ரேஷ்டன, மனக் குழப்பமடைந்து, 'கிர்மீரன் பீமனால எவ்விதம கொல்லபபட்டான்?' என்று மைததிரேயரை வினவினன். மைத்திரேயர், 'நான் சொல் லேன்; உமக்கோ [1] அஸூயையிருக்கின்றது. உமது புதகிரனே கேட்க விருமபவிலலை. நான் போனபிறகு, இந்த விதுரர் யாவற்றை யும் உமக்குச் சொலலுவர்' என்றார். மைததிரேயர் இவ்விதம் சொல்லி விட்டு வந்தபடியே திருமபிசசென்றார். கிர்மீரவததததால கவலையை அடைந்த துரியோதனன பயததை அடைநதான்.

---

## பதினோராவது அத்யாயம்.

## கிர்மீரவதபர்வம். (தொடர்ச்சி)

(விதுரர் கிர்மீரவதத்தைத் திருதராஷ்டிரனுக்குச் சொல்லியது)

திருதராஷடிரன், 'விதுர! கிர்மீரனுடைய வதததைக் கேட்க விருமபுகினறேன. சொலலவேண்டும். பீமனுக்கு ராக்ஷஸனுடன் எதிர்ப்பு எவவிதம் உணடாயிற்று?' எனறான். விதுரர் சொல்லு கிறார்: 'மனிதனால செய்யமுடியாத செயகையையுடைய பீமனுடைய இந்தசசெய்கையைச் சொல்லுகிறேன்; கேளும். அவர்களுடன் வார்த்தை சொலலும்போது, நடுவில், அடிக்கடி என்னால் முன் கேட் கப்பட்டது. ராஜேநதிரரே! சூதினால் ஜயிக்கபபட்ட பாணடவர் கள் இங்கிருந்து புறபபட்டு மூனறுபகலிரவுகளில பயங்கரமான பாதி ராத்திரியில [2] ஜனங்கள் தூஙகுமபொழுது பயஙகரமான செய்கையுள்ளவர்களும் மனிதர்களைததின்பவர்களுமான ராக்ஷஸர் களின் சஞ்சாரகாலத்தில் காம்யகமென்னும் அவ்வனத்தை அடைந்

---

[1] பிறர் குணங்களில தோஷததை வெளியிடுதல; உததியோகபாவம் 173-ம பக்கம் குறிப்பிற காணக. [2] ஒரு சொல விடபபட்டது.

தார்கள். வனத்தில் சஞ்சரிப்பவர்களான எல்லாத் தவசிகளும் ராக்ஷஸபயத்தால் வெகுதூரத்திலே அவ்வனத்தை எப்பொழுதும் விலக்குகின்றார்கள். பாரதரே! அவ்விடத்தில் பாண்டவர்கள் பிரவேசிக்கும்போது பிரகாசிக்கும் கண்ணுள்ளவனும், குருசிரேஷ்டர்கள் எவ்வழியால் செல்லுகின்றார்களோ அவ்வழியை மறைத்துக் கைகளைப் பெரியவைகளாகவும் முகத்தைப் பயங்கரமாகவும் செய்துகொண்டு நிற்கின்றவனும், உதட்டைக்கடித்த தெற்றுப்பல்லுள்ளவனும், சிவந்த கண்ணுள்ளவனும், பிரகாசிக்கின்ற மேல்நோக்கிய தலைமயிருள்ளவனும், சூரியகிரணத்துடனும் மின்னல் கூட்டத்துடனும் கூடியதும் கொக்குக்களுடனும் கூடியதுமான மேகம் போன்றவனும், ராக்ஷஸர்களுக்குரிய மாயையை வெளியிடுகிறவனும், பெரிய முழக்கத்தைச் செய்கின்ற நீருண்ட மேகம்போலச் சப்தங்களைச் செய்பவனும், பயங்கரனுமான ராக்ஷஸன் எரிகொள்ளியுடன் வழியை மறைத்துக்கொண்டு நின்றான். அவனுடைய சப்தத்தினால் பறவைகளும் நீர்ப்பிராணிகளும் ஸ்தலஜந்துக்களும் பயந்து சப்தித்துக்கொண்டு நாற்றிசைகளிலும் [1] ஓடின. அவனது சத்தத்தால் நன்கு ஓட்டம்பிடித்த மான், புலி, எருமை, கரடி (இவைகளால்) கலங்கின அவ்வனமானது கிளம்பிப்போவதுபோலாயிற்று. அவனது தொடைக் காற்றினால் அடிக்கப்பட்டனவும், சிவந்த தளிர்களாகிற கைகளுள்ளனவும் வெகுதூரத்தில் முளைத்தனவுமான கொடிகளும் மரங்களைத் தழுவிக்கொண்டன. பிறகு, அந்த ஸமயத்தில் மிக்க பயங்கரமான காற்று வீசிற்று. ஆகாயமானது, அந்தக் காற்றினால் புழுதிகளால் மறைக்கப்பட்டதாகி, நக்ஷத்திரங்கள் மறைந்ததாயிற்று. ஒப்பற்ற சோகாவேசமானது ஐந்து இந்திரியங்களுக்கும் [2] அறியப்படாதது போல, பெரிய சத்துருவானவன் ஐந்து பாண்டுபுத்திரர்களுக்கும் [3] அறியப்படாதவனானான். அவன் மான்தோலால் போர்த்தப்பட்ட பாண்டவர்களைத் தூரத்தில் பார்த்து அவ்வனத்தின் வாயிலை மைநாகபர்வதம்போல மறைத்துக்கொண்டான். முன்பார்த்திராத அவனைப் பார்த்து தாமரையிதழ் போன்ற கண்ணுள்ள திரௌபதியானவள் பயந்து பயத்தால் கண்களை மூடிக்கொண்டாள். துச்சாஸனனின் கையால் விழுக்கப்பட்டு அவிழ்ந்த கூந்தலுள்ள (அவள்) ஐந்து மலைகளுக்கு

1 'ஸம்பேதுஃ' என்பது மூலம், '[illegible]' [illegible] வுரை 2 '[illegible] [illegible] இந்திரியங்களை [illegible]' [illegible] 3 அறிய முடியாத [illegible].

நடுவிலுள்ள நதிபோலக்[1] கலக்கத்தை அடைந்தனள். அப்பொழுது, பஞ்சபாண்டவர்கள், விஷயங்களிற்சென்ற இந்திரியங்கள் ஆசையைப் பற்றிநிற்பதுபோல, மயக்கத்தையடைந்த அவளை ஆதரித்தார்கள். தபோவீர்யமுள்ள தௌமியர், பயங்கரமான காட்சியுடன் கிளம்பின தான அந்த ராக்ஷஸமாயையை, பாண்டவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, நன்றாக ஜயிக்கப்பட்டனவும் ராக்ஷஸர்களை நாசம்செய்கின்றனவுமான அனேக மந்திரங்களால் நாசம் செய்தார். மிக்க வலிமையுள்ளவனும் குரூரனுமான அவன், மாயையற்றவனும் கோபத்தால் நன்கு விழிக்கின்ற கண்களுள்ளவனும், இஷ்டப்படி வடிவத்தை எடுத்துக்கொண்டவனும், யமனுக்கொப்பானவனுமாகக் காணப்பட்டான். பிறகு, விசாலமான அறிவுள்ள யுதிஷ்டிரராஜன் அவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினன். 'நீ யார்? எவனைச் சார்ந்தவன்? உனக்கு என்ன காரியம் செய்யப்படவேண்டும்? சொல்லலாம்' என்றான்.

பிறகு, அவ்வரக்கன் தர்மராஜனான யுதிஷ்டிரனைப் பார்த்துச் சொல்லலானன. 'நான் பகனுடைய சகோதரன்; கிம்மீரன் என்று பிரசித்திபெற்றவன்; ஜனமற்ற இக் காம்யகவனத்தில் பயமற்றவனாகி மனிதர்களை யுத்தத்தில் ஜயித்து எப்பொழுதும் ஆகாரமாகச் செய்துகொண்டு வஸிக்கின்றேன். ஆகாரமாக என்சமீபத்தில் வந்த நீங்கள் யார்? உங்கள் யாவரையும் யுத்தத்தில் ஜயித்து அச்சமற்றவனாகச் சாப்பிடுவேன்' என்றான். பாரதரே! தாமபுத்திரன், கெட்ட எண்ணமுள்ள அவனுடைய அந்த வார்த்தையைக் கேட்ட பிறகு, குலம் பெயர் முதலிய எல்லாவற்றையும் சொல்லத் தொடங்கினன். 'நான் பாண்டு புத்திரனான தர்மராஜன். நீயும் காதால் கேட்டிருக்கலாம். பீமன் அர்ஜுனன் முதலிய எல்லாத் தம்பிமார்களுடனும் ராஜ்யத்தைப் பறிகொடுத்துக் காட்டில் வஸிக்க எண்ணங்கொண்டு அங்கிருந்து உனக்குச் சொந்தமும் பயங்கரமுமான இந்த வனத்தை அடைந்தேன்' என்றான். பயங்கரமான தோற்றமுள்ள கிம்மீரனென்னும் அரக்கன், மிக்க ஆச்சரியத்தை அடைந்து, அவனை நோக்கிச் சொல்லத் தொடங்கினன். 'வெகு காலமாயுள்ள என்னுடைய இந்த மனோரதமானது இப்பொழுது என் அதிருஷ்டத்தினால் சம்பாதித்துக் கொடுக்கப்பட்டது. பீமஸேனனைக் கொல்வதற்கன்றோ எப்பொழுதும் ஆயுதத்தைத் தாங்கிப் பூமி முழுவதும் ஸஞ்சரிக்கின்றேன். நான் (இதுவரை) இவனை அடைந்ததில்லை. வெகு காலமாக

1 'அவர்களுக்கு நடுவில் பதுங்கிக்கொண்டாள்' என்பது கருத்து.

எதிர்பார்க்கப்பட்டவனும் பிராதாவைக் கொன்றவனுமான அப்படிப்பட்ட இவன் தெய்விகமாக இப்போது கிடைத்துவிட்டான். அரசனே! பகனென்னும் எனது அருமைத் தமையனை வேத்திரகீய வனத்தில் பிராமணனென்கிற கபட உருவமெடுத்த இவனல்லனோ வித்தியா பலத்தைக்கொண்டு கொல்லப்பட்டான்? இவனுக்கு இயற்கையான சரீரபலமில்லையன்றோ? முன்னொருகால், கெட்ட எண்ணமுள்ள இவனாலே எனக்குப் பிரியமுள்ளவனும் காட்டில் சஞ்சரிப்பவனும் தோழனுமான ஹிடிம்பனும் கொல்லப்பட்டான். அவனது தங்கையும் அபகரிக்கப்பட்டாள். அப்படிப்பட்ட இம்மூடன், சரியான நடுராத்திரியில், எம்முடைய சஞ்சாரகாலம் வந்தவுடன், என்னுடையதான பிரவேசிக்கமுடியாத இந்த வனத்தையடைந்தான். இப்பொழுது வெகுகாலமாக வளர்ந்துவந்த இவன் விஷயமான அந்த வைரத்தைப் போக்கிக்கொள்ளப் போகிறேன். இவனுடைய அதிகமான இரத்தத்தால் பகனைக்குறித்துத் தர்ப்பணம் செய்யப்போகின்றேன். நான், இப்பொழுது தமையன்விஷயத்திலும் தோழன்விஷயத்திலும் கடனில்லாதவனாகி ராக்ஷஸ கணங்களைக்கொண்டு மேலான சாந்தியை அடையப்போகின்றேன். யுதிஷ்டிரனே! முன் அந்தப் பகனால் பீமஸேனன் விடப்பட்டானாயினும், இப்பொழுது நீ பார்த்துக்கொண்டிருக்கையிலேயே, இவனைச் சாப்பிடுகின்றேன். இப்பொழுதே நான், மிகுந்தபலமுள்ள பீமனைக்கொன்று அகஸ்தியர் மஹாஸுரனான வாதாபியைத்தின்று ஜீரணித்துக்கொண்டதுபோலத் தின்று ஜீரணஞ் செய்கின்றேன்' என்றான்.

இவ்விதம் சொல்லக்கேட்டவனும் ஸத்தியஸந்தனும் தர்மாத்மாவுமான யுதிஷ்டிரன், கோபங்கொண்டு, 'இது நடவாது' என்று ராக்ஷஸனை அதட்டினான். பிறகு, நீள்வலிமையமைந்த பீமன், அப்பொழுது வேகமாக ஒரு மரத்தைப் பிடுங்கி, பத்துப்பாகம் நீளமுள்ளதாக முறித்து, இலையில்லாததாகச் செய்தான். அதுபோலவே, ஜயசீலனான அர்ஜுனன், அதிக திடமுள்ள வஜ்ராயுதத்தை ஒறுக்கக்கூடிய வலிமையமைந்த காண்டீவத்தை நாணுடன் கூடினதாகச் செய்தான். பாரதனே! பீமன் அந்த அர்ஜுனனைத் தடுத்து மேகம்போலச் சப்திக்கும் அந்த ராக்ஷஸனை எதிர்த்தோடி 'நில், நில்' என்று சொன்னான். அப்பொழுது மரத்தை ஆயுதமாகக்கொண்டவனும் பாண்டுபுத்திரனும் பலமுள்ளவனுமான பீமன், அவனை இவ்விதம்சொல்லி, மிக்ககோபங்கொண்டு, ஆடையை இறுக்கிக்கட்டிக் கையினால் கையைப் பிசைந்துகொண்

டும் உதட்டைக் கடித்துக்கொண்டும் வேகமாக அவனை எதிர்த்துச் சென்றான். பிறகு, யமதண்டத்திற்கொப்பான அம்மரத்தை அவன் தலையில், இந்திரன் வஜ்ராயுதத்தை எறிவதுபோல, வேகமாக எறிந்தான். அவ்வரக்கனோ யுத்தத்தில் பரபரப்பில்லாதவனாகக் காணப்பட்டான். பிரகாசிக்கும் இடிக்கொப்பான எரிகொள்ளியையும் விட்டெறிந்தான். யுத்தஞ்செய்கிறவர்களுள் சிறந்தவனான பீமன், எறியப்பட்ட அந்தக்கொள்ளியை இடக்காலால் தள்ளிவிட்டு, அந்த ராக்ஷஸனைக்குறித்தும் திரும்பவும் ஓடினான். கிர்மீரனும் வேகமாக மரத்தைப் பிடுங்கிக்கொண்டு கோபங்கொண்ட யமன்போல யுத்தத்தில் பாண்டவனைக்குறித்து எதிர்த்து ஓடினான். மரங்களை நாசமாக்கக் கூடிய அந்த மரயுத்தமானது, முன்காலத்தில் ஸ்திரீயை (அடைய) விரும்பின பிராதாக்களான வாலி சுக்ரீவர்களுக்கு உண்டானதுபோல உண்டாயிற்று. அவர்களுடைய தலையில் விழுந்த மரங்கள் மதங்கொண்ட யானைகளின் தலையில் விழுந்த நீலோத்பல மலர்த்தழ்கள் எவ்விதமோ அவ்விதம் பலவாறாகச் சிதறின. அந்தப் பெருங்காட்டில் அவர்களின் தலையில் அடிக்கப்பட்டுச் சிதறிக் கிடக்கும் அனேக மரங்கள், இறைக்கப்பட்டுக் கிடக்கும் மரவுரிகள் போல விளங்கின. பரதஸ்ரேஷ்டரே! ராக்ஷஸ ஸ்ரேஷ்டனுக்கும் நரஸ்ரேஷ்டனுக்கும் (அப்பொழுது) ஒரு முகூர்த்தம் அம்மரயுத்தம் நடந்தது. பிறகு, ராக்ஷஸன் கோபங்கொண்டு கற்பாறையைப் பிடுங்கி யுத்தத்தில் நிற்கும் பீமன்மீது எறிந்தான். பீமன் கலக்கத்தை அடைந்தான். ராக்ஷஸன் கற்பாறையினடியால் அறிவற்ற அவனை, ராகுவானவன் கைகளால் கிரணங்களைத் தள்ளிக்கொண்டு சூரியனை நோக்கிச் செல்வதுபோல எதிர்த்து ஓடினான். அவ்விருவர்களும் ஒருவரையொருவர் தழுவி ஒருவரையொருவர் இழுத்து, கொழுத்த எருதுகள்போல விளங்கினார்கள். நகம் தெற்றுப்பல் இவைகளை ஆயுதமாகவுடைய கொழுத்த புலிகளுக்குச் சண்டை நடப்பதுபோல அவ்விருவர்களுக்கும் மிகவும் பயங்கரமும் நெருக்கமுமான யுத்தம் நடந்தது. துரியோதனன் (செய்த) அவமானத்தாலும் தோள்வலிமையாலும் கொழுப்பமைந்தவனும் திரௌபதியின் கண்ணால் பார்க்கப்பட்டவனுமான பீமன் விருத்தியடைந்தான். கன்னங்களில் மதஜலம் பெருகும் வழியையுடைய யானையை யானை அடிப்பதுபோலக் கோபங்கொண்டு அடித்துக் கைகளால் பிடித்தான். பிறகு, வீர்யமுள்ள அந்த ராக்ஷஸனும் இவனைப் பிடித்தான். பலமுள்ளவர்களுள் சிறந்த பீமன் பலத்தால் அவனை உதறினான். அப்பொழுது, யுத்தத்தில் பலமுள்ள அவ்

விருவர்களுடைய கைகளினுறைதலால் மூங்கில் பிளந்ததுபோல கொடியதான பயங்கரமான சப்தம் உண்டாயிற்று. பிறகு, பீமன் அவனை வலிந்து இடுப்பில் பிடித்திழுத்துப் பெருங்காற்று மரத்தைச் சுழற்றுவதுபோல வேகமாகச் சுழற்றினான். யுத்தத்தில் பலமுள்ள பீமனால் பிடிக்கப்பட்ட அவன் பலமற்றுச் சிறிது சலித்தவனாகிச் சக்திக்கேற்றவாறு பீமனையும் இழுத்தான். பிறகு, பீமன் அவன் களைத்திருப்பதைக் கண்டு, பசுவைக் கயிற்றினால் கட்டுவதுபோல அவனைக் கைகளால் கட்டினான். பலமுள்ள பீமன், உரக்க அடிக்கப்பட்ட பேரி சப்திப்பதுபோலப் பெரிய சப்தம் செய்கின்றவனும் பிரஜ்ஞையற்றுத் துடிக்கின்றவனுமான அவனை நெடுநேரம் சுழற்றினான். அவ்வராக்ஷஸன் அழுவதைக் கண்டு, பாண்டுகுமாரன் வலிந்து கைகளால் பிடித்து (அவனை) மிருகத்தைக் கொல்லுவதுபோலக் கொன்றான். பீமன் முழங்காலால் அதமனான ராக்ஷஸனை இடையில் மிதித்துக்கொண்டு கைகளால் அவனது கழுத்தை நெரித்தான். பிறகு, எல்லா அங்கங்களும் தளர்ந்தவனும், வெளிவந்த கண்களால் பயங்கரனுமான (அவனைப்) பூமியில் புரட்டிப் பின்வருஞ் சொற்களையும் சொன்னான். 'பாவியே! நீ யமன் வீட்டை அடைந்தும், இனிப் பாண்டவர்கள் இவர்களின் கண்ணீரைத் துடையாய்' என்றான். இவ்விதம் சொல்லிப் புருஷர்களுள் சிறந்த (பீமன்) கோபம் முதிய மனமுள்ளவனும் வஸ்திராபரணங்கள் நழுவியவனும் சித்தம் கலங்கியவனும் துடிப்பவனும் உயிரிழந்தவனுமான அவ்வரக்கனை எறிந்துவிட்டான். மேகத்திற்கொப்பான உருவமுள்ள அவன் அடிபட்டவுடன், பாண்டுபுத்திரர்கள், திரௌபதியை முன்னிட்டுக்கொண்டு, பல குணங்களால் பீமனைப் புகழ்ந்து சந்தோஷித்து, பிறகு, அங்கிருந்து துவைதவனத்திற்குச் சென்றார்கள்.

அரசரே! கௌரவரே! அந்தத் தர்மபுத்திரன் சொற்படி வீமீரன் பீமனால் இவ்விதம் யுத்தத்தில் கொல்லப்பட்டான். தர்மம் அறிந்தவனும் வெற்றி அடைந்தவனுமான யுதிஷ்டிரன், காட்டைப் பகைவரற்றதாகச் செய்து, திரௌபதியுடன் அங்கு வாஸஞ் செய்தான். பரதஸ்ரேஷ்டர்களான அவர்களெல்லோரும் திரௌபதியைச் சமாதானம்செய்து மனத்தில் களிப்புற்றுப் பிரீதியுடன் பீமனைப் புகழ்ந்தார்கள். பீமனது தோள்வலிமையால் ராக்ஷஸன் பொடிசெய்யப்பட்டு நாசமடைந்தவுடன், அவ்வீரர்கள் அங்கிருந்து பகைவரற்ற காட்டில் க்ஷேமமாகப் பிரவேசித்தார்கள். பீமனுடைய பலத்தினால் கொல்லப்பட்டு எறியப்பட்டவனும் பயத்தை

உண்டுபண்ணக்கூடியவனும் கெட்டமனமுள்ளவனுமான அவ்வரக்கன் பெரிய காட்டில் போகும் என்னுல் வழியில் பார்க்கப்பட்டான். பாரதரே! அந்த இடத்தில் வந்திருந்த பிராமணர்கள் சொல்லும் போது, நான் அங்குப் பீமனுடைய இந்தக் காரியத்தைக் கேட்டேன்' என்றார். இவ்விதம் ராக்ஷஸர்களுள் சிறந்த கிர்மீரன் யுத்தத்தில் கொல்லப்பட்டதைக் கேட்டு, அரசன், கவலையுள்ளவனாகி வருத்தத்தை அடைந்து, அப்பொழுது பெருமூச்சுவிட்டான்.

கிர்மீரவதபர்வம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமன பர்வம்.

(கோவிந்தர் தம்மவர்களுடன் பாண்டவர்களிடம் வந்ததும் அர்ஜுனன் அவரைத் துதித்ததும், திரௌபதி தன் துயரத்தைச் சொல்லி அழுததும், கோவிந்தர் அவளைத் தேற்றியதும்.)

போஜர்களும் வ்ருஷ்ணிகளும் அந்தகர்களும், பாண்டவர் துக்கத்தால் வாட்டப்பட்டு நாட்டைத் துறந்து வெளிப்பட்டதைக் கேள்வியுற்று, பெரிய காட்டில் வந்து சேர்ந்தார்கள். பாஞ்சால ராஜனுக்குத் தாயாதனும், சேதிதேசத்திற்கு அதிபதியுமான திருஷ்டகேதுவும், உலகத்தில் கீர்த்திபெற்றவர்களும் அதிகவீர்யமுள்ளவர்களும் பிராதாக்களுமான கேகயர்களும், கோபமும் பொறாமையும் அடைந்து, பாண்டவர்களைப் பார்ப்பதற்காகக் காட்டிற்குச்சென்றார்கள். திருதராஷ்டிர புத்திரர்களை நிந்தித்துக்கொண்டு, 'என்ன செய்வோம்?' என்றும் சொன்னார்கள். அந்த க்ஷத்திரியச்ரேஷ்டர்கள் யாவரும் கிருஷ்ணரை முன்னிட்டுக்கொண்டு தர்மராஜரான யுதிஷ்டிரரைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். வாஸுதேவர், தர்மபுத்திரரை நமஸ்கரித்து, துக்கத்துடன் சொல்லலானார்.

'துரியோதனன், கர்ணன், கெட்ட எண்ணமுள்ள சகுனி, நான்காமவனான துச்சாஸனன் ஆகிய இவர்களுடைய உதிரத்தைப் பூமி

குடிக்கப்போகின்றது. யுத்தத்தில் அவர்களைக்கொன்று அவர்களைத் தொடர்ந்துவருபவர்களும் துணை அரசர்களும் அவர்களுக்கு நன்மை புரிபவர்களுமான அவர்கள் யாவரையும் ஜயித்து, பிறகு, யாவரும் தர்மராஜரான யுதிஷ்டிரரை அபிஷேகம்செய்வோம். 'கபடமாக நடப்பவன் கொல்லப்படத் தக்கவன்' என்னும் இது ஸநாதனமான தர்மம்' என்றார். பாண்டவர்களின் துக்கத்தால் பிரஜைகளை எரிக்க விரும்புகின்றவர்போல அவ்விதம் கோபங்கொண்ட க்ருஷ்ணரை அர்ஜுனன் ஸமாதானஞ்செய்தான். அர்ஜுனன், மஹாத்மா கோபங் கொண்டதைக்கண்டு, ஸத்தியகீர்த்தியுள்ளவரும் மஹாத்மாவும் அளவிடமுடியாதவரும் அழிவற்றவரும் அளவற்ற தேஜஸ்ஸுள்ளவரும் [1] ஸ்ருஷ்டிகர்த்தாக்களுக்குப்பதியும் ஸர்வஜ்ஞரும் லோகநாதரும் புருஷருமான விஷ்ணுவினுடையவையான அஸாதாரணமாக நடந்த செய்கைகளைச் சொல்லத் தொடங்கினான்:

'கோவிந்தரே! நீர் முன் (ஒருகால்) கந்தமாதன பர்வதத்தில், பதினாயிரம் வருஷகாலம், பொழுதுபோன இடமே வீடாகக் கொண்ட முனிவராகிச் சஞ்சரித்தீர். கோவிந்தரே! நீர், முந்தி, பதினோராயிரம் வருஷகாலம் புஷ்கரத்தில் ஜலத்தை மாத்திரம் பக்ஷித்துக்கொண்டு வாஸம் செய்தீர். மதுஸூதனரே! விசாலமான பதரிகா வனத்தில் கைகளை உயரத்தூக்கிக்கொண்டும், காற்றைப் புசித்துக்கொண்டும் ஒற்றைக் காலினால் நூறுவருஷம் நின்றீர். மாதவரே! கருப்பு மான்தோலை மேலாடையாகச் செய்துகொண்டு இளைத்த நரம்புகள் அடர்ந்தவராக ஸரஸ்வதீநதிக்கரையில் பன்னிரண்டு வருஷம் செய்யவேண்டிய ஸத்ரம் என்னும் யாகத்தில் இருந்தீர். க்ருஷ்ணரே! பிறகு, புண்ய ஜனங்களால் பூஜிக்கப்பெற்ற பிரபாஸமென்னும் தீர்த்தத்தையும் அடைந்து, அதிக காந்தியுள்ளவராகி அவ்விடத்தில் ஆயிரம் தேவ வருஷம் வ்ரதத்திலிருந்து லோகப்ரவ்ருத்திக்கு வேண்டி ஒற்றைக் காலினால் நீரே நின்றீரென்று வியாஸர் எனக்குச் சொல்லியிருக்கின்றார். கேசவரே! வாஸுதேவரே! நீரே [2]க்ஷேத்ரஜ்ஞர்; எல்லாப்பிராணிகளுக்கும் முதலும் முடிவும் ஆனவர். (நீரே) தவங்களுக்கு இருப்பிடமும் அழிவற்ற யஜ்ஞருமானவர். யோகத்தைச் செய்தவரும் புலன்களை அடக்குகிறவரும் அழிவற்றவரும் ஸாங்கிய கர்த்தாவும் ஸநாதனரும்

---

1 'ப்ரஜாபதிபதிः' என்பது மூலம். 'ஸ்ருஷ்டிகர்த்தாக்களுக்கும் மேலிருக்கும் தலைவர்' என்பது பொருள்.

2 சாந்திபர்வம் 1125-ம் பக்கத்தில் காண்க.

சிலரும் எல்லா யோகங்களுக்கும் நியமத்திறகும் உதவியும் நீரே. கிருஷ்ணரே! முன் (உம்மால்) உண்டுபண்ணப்பட்ட பூமிபுத்திரனான நரகனைக் கொன்று மணிகுண்டலங்களை அபகரித்து [1] யாகத்திற்குரிய குதிரையை விடுவித்தீர். லோகங்களில் சிறந்தவரும் எல்லா லோகத்தையும் ஜயித்தவருமான நீர் அக்குதிரையை விட்டுப் போரில் வந்து எதிர்த்த தைத்யதானவர்கள் யாவரையும் நாசம் செய்தீர். நீண்ட புஜங்களையுடைய கேசவரே! பிறகு, எல்லாருக்கும் தலைவனுயிருக்கும் தன்மையை இந்திரனுக்குக் கொடுத்து, மனிதர்களிடத்தில் அவதரித்தீர். பரந்தபரே! அப்படிப்பட்ட நீர் நாராயணராயிருந்து ஹரியும் பிரம்மாவும் சந்திரனும் ஸூர்யனும் தர்மமும் தாதாவும் யமனும் அக்னியும் வாயுவும் குபேரனும் ருத்திரரும் காலனும் ஆகாயமும் பூமியும் திக்குகளும் ஆனீர். [2] புருஷோத்தமரே! பிறவாதவரும் சராசர(மான உலக)த்திறகுத் தலைவரும் (அவற்றைப்) படைப்பவரும் நீரே. கிருஷ்ணரே! சைத்ராத மென்ற வனத்தில் அதிக சக்தியுள்ளவராக அதிக தக்ஷிணையுள்ள த்ராயணம் முதலிய யாகங்களைச் செய்தீர். ஜனார்த்தனரே! அப்பொழுது, ஒவ்வொரு யாகத்திலும் நூறுலக்ஷம் பொன்னைக் குறைவில்லாமல் கொடுத்தீர். ஓ! யாதவநந்தனரே! கிருஷ்ணரே! பரந்தபரே! விபுவான நீர் அதிதிக்கும் புத்ரராயிருப்பதை அடைந்து விஷ்ணுவென்று பிரஸித்திபெற்று இந்திரனுக்குப் பின்னுண்டான குழந்தையாயிருந்து ஸ்வர்க்கத்தையும் ஆகாயத்தையும் பூமியையும் மூன்று அடிவைப்புகளால் சக்தியால் அளந்தீர். பிராணிகளின் அந்தர்யாமியே! ஸூர்ய சரீரத்திலிருந்து ஸ்வர்க்கத்தையும் ஆகாயத்தையும் நன்கு பரவி, ஸூர்யமண்டலாபிமானிஜீவனை உமது காந்தியால் பிரகாசிக்கவும் செய்தீர். விபுவே! கிருஷ்ணரே! அந்த அந்தப் பல்லாயிரம் அவதாரங்களில், உம்மால் அதர்மத்தில் ருசியுள்ள நூற்றுக்கணக்கான அஸுரர்கள் கொல்லப்பட்டார்கள். நரம்பினால் செய்யப்பட்ட பாசங்கள் அறுக்கப்பட்டன. நிசும்பனும் நரகனும் கொல்லப்பட்டார்கள். பிராக்ஜோதிஷ பட்டணத்தைக் குறித்துச் செல்லும் வழி திரும்பவும் செம்மை செய்யப்பட்டது. ஆகுதியென்பவன் ஜாருதிநகரத்திலும், க்ராதனும் அரசர்

---

1 'அது முதல் அச்வமேத முதலிய யாகங்களை நடைபெறச் செய்தீர்' என்பது.

2 'புருஷோத்தமரே! விஷ்ணுவும் ருத்ரரும் தக்ஷப்ரஜாபதி முதலான வர்களும் நீரே' என்பது பழயவுரை.

கருடனுடன்கூடின சிசுபாலனும் ஜராஸந்தனும் சைப்யனும் தந்தவக்ரனும் (மற்றிடங்களிலும்) கொலைபட்டார்கள். அதுபோலவே, மேகசப்தமுள்ளதும் ஸௌந்தர்யமுள்ளதுமான ரதத்தால் போரில் ருக்மியை ஜயித்துப் பிரேமபுத்திரியான ருக்மிணியைக் கொண்டுவந்தீர். உம்மால் இந்திரத்யும்னனும் யவனனும் கசேருமானும் கோபத்தால் கொல்லப்பட்டனர்; ஸௌபபதியான ஸால்வனும் கொல்லப்பட்டான். ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் ஸௌபமும் பிளக்கப்பட்டது. இவ்விதம் இவர்கள் யுத்தத்தில் கொல்லப்பட்டார்கள். திரும்பவும் மற்றவைகளையும் கேளும். யுத்தத்தில் கார்த்தவீர்யனுக்கு ஒப்பான போஜன் இராவதியில் கொல்லப்பட்டான். கோபதி தாலகேது என்ற இருவர் உம்மால் கொல்லப்பட்டார்கள். ஜனார்த்தனரே! ரிஷிகளுக்குப் பிரியமானதும் புண்யமானதும் ஸகலவைபவத்திற்கு வேண்டும் பொருள்கள் நிரம்பினதுமான அந்தத் துவாரகையை உம்முடையதாகச் செய்து ஸமுத்திரத்தில் முழுகச்செய்யப்போகின்றீர். மதுஸூதனரே! தாசார்ஹரே! உம்மிடத்தில் கோபமில்லை; பொறாமையில்லை; பொய்யில்லை; கொடுமைத்தன்மையுமில்லை, வக்ரம் எது? அச்யுதரே! எல்லா ரிஷிகளும் [1] சைத்யத்தின் நடுவிலிருந்து உமது தேஜஸால் பிரகாசிக்கும் உம்மிடம் வந்து மோக்ஷத்தை யாசித்தார்கள். பகைவரை வாட்டுபவரே! மதுஸூதனரே! யுகமுடிவில் நீரே எல்லாப் பூதங்களையும் சுருக்கி உம்மிடத்தில் அடக்கம் செய்துகொண்டு ஜகத்தாயினீர். விருஷ்ணிகுலத்தில் பிறந்தவரே! இந்த எல்லா ஜகத்தையுமுடையவரும் ஸ்தாவர ஜங்கமப் பொருள்களுக்குக் காரணமானவருமான பிரம்மாவானவர் யுகத்தின் ஆதியில் உம்முடைய நாபிக்கமலத்திலிருந்து உண்டாயினர். பயங்கரர்களான மதுகைடபர் என்ற அஸுரர்கள் அவரைக் கொல்ல முயன்றார்கள். அவர்களின் அதிக்ரமத்தைக் கண்டு கோபங்கொண்ட ஹரியான உம்முடைய நெற்றியிலிருந்து மூன்றுகண்ணுள்ளவரும் சூலத்தைக் கையில் தாங்கினவருமான பரமசிவனார் உண்டானார். இவ்விதம் தேவேசர்களான அவர்களும் உம்முடைய சரீரத்திலிருந்து உண்டாயினர். இவர்கள் உமது கட்டளையைச் செய்கின்றவர்களென்று எனக்கு நாரதர் சொன்னார். நாராயணரே! கிருஷ்ணரே! நீர் அவ்விதமே சைத்ரரதமென்னும் வனத்தில் அதிக தக்ஷிணையுள்ள யாகங்களுடன் பெரிய ஸத்திரயாகத்தைச் செய்தீர்.

---

1 யக்ஞத்தில் அக்னி [illegible] படுமிடம்.

தேவரே! புண்டரீகாக்ஷரே! அதிக பலமுள்ள நீர் குழந்தையா யிருந்துகொண்டே பலராமரை உதவியாகக்கொண்டு செய்த இவ்விதச் செயல்களைப் பிந்தினவர்களும் செய்யார்; முன்னுள்ளவர்களும் செய்ததில்லை. [1] வைராஜபவனத்திலும் பிரமமாவுடன் நீர் வஸித்தீர்' என்றான்.

இவ்விதம், கிருஷ்ணருடைய ஆத்மாவான அர்ஜுனன் மஹாத்மாவான அவரைக்குறித்துச் சொல்லிவிட்டு மௌனமாயிருந்தான். பிறகு, வாஸுதேவர் அர்ஜுனனைப்பார்த்து இவ்விதம் சொல்லலானார். 'நீ என்னையே சேர்ந்தவன். நான் உன்னையே சேர்ந்தவன். எவர்கள் என்னைச் சார்ந்தவர்களோ அவர்கள் உன்னைச் சார்ந்தவர்கள். எவன் உன்னைப் பகைக்கின்றானோ அவன் என்னை பகைக்கின்றவனே. எவன் உன்னை அநுஸரிக்கின்றானோ அவன் என்னை அநுஸரிக்கின்றான். பிறரால் மீறமுடியாதவனே! நீ நரனாயிருக்கின்றாய். நான் ஹரியான நாராயணனாக இருக்கின்றேன். நரநாராயணர்களென்ற ரிஷிகளாகி ஒரு சமயத்தில் இவ்வுலகத்தை அடைந்தோம். பார்த்த! நீ என்னைவிட வேறில்லை; அப்படியே, நானும் உன்னைவிட வேறில்லை. பரதரில் சிறந்தவனே! நமமிருவர்களுக்கும் பேதம் அறிய முடியாதது' என்றார். இவ்விதம் தாமரைக் கண்ணரும் புலன்களுக்கு ஈசருமான அந்த மாதவர் அர்ஜுனனை நோக்கி மிக்க பிரியவார்த்தை சொல்லிச் சந்தோஷத்துடன் அப்பொழுது மௌனமாயிருந்தார்.

மஹாத்மாவான கேசவரால் இவ்விதம் சொல்லப்பட்ட பிறகு, அந்த வீரர்களின் அக்கூட்டத்தில் அரசர்கள் கோபத்தை அடைந்தவுடன், த்ருஷ்டத்யும்னன்முதலிய வீரர்களான ஸகோதரர்களால் சூழப்பட்டவளும், பாஞ்சாலராஜன் புத்திரியுமான திரௌபதியானவள், யாதவர்களுடன் வீற்றிருக்கும் ரக்ஷகரான தாமரைக் கண்ணரை அடைந்து, ரக்ஷணத்தை விரும்பினவளாகிச் சொல்லலானாள். 'வாஸுதேவரே! ஹ்ருஷீகேசரே! இந்திரனுக்குத் தம்பியானவரே! அச்சுதரே! தேவரே! (உம்மைத்) தேவர்களுக்கும்தேவர் என்று வியாஸர் சொன்னார். முன்னோர்கள், பிரஜைகளின் ஸ்ருஷ்டியில் உம்மொருவரையே பிரஜைகளுக்குப் பதியென்றார்கள். எல்லா உலகங்களையும் படைப்பவராக, அஸிதருமதேவலருமசொன்னார்கள். பகைவரால் மிஞ்சமுடியாதவரே! மதுஸூதனரே! நீர் விஷ்ணுவாகின்றீர். நீர் யஜ்ஞமாகின்றீர். யாகம் செய்பவராயிருக்கிறீர்; யாகத்தால் பிரீதியடைபவர் நீரே என்று ஜாமதக்நியர் சொன்னார். புரு

[1] 'கைலாயமாகும வீட்டிலும் பிராமமணருடன்' எனபது வேறுபாடம.

ஷோத்தமரே ! உம்மை ரிஷிகள் பொறுமையென்றும் ஸத்தியமென்றும் சொல்லுகின்றார்கள். ஸத்தியத்திலிருந்து உண்டான யஜ்ஞம் என்று உம்மைக் கச்யபர் சொல்லியிருக்கின்றார். ஸாத்யர்களுக்கும் தேவர்களுக்கும் [1]ருத்திரர்களுக்கும் ஈச்வரேச்வரரே ! லோகத்தை உண்டுபண்ணுகிறவரே ! லோகேசரே ! நீர் இவ்விதம் இருக்கிறீரென்று நாரதரும் சொன்னார். பரமேச்வரரே ! நீர் பிரமா சங்கரர் இந்திரன் முதலிய தேவக்கூட்டங்களுடன், குழந்தை பாவைகளுடன் விளையாடுவது போல, அடிக்கடி விளையாடுகிறீர். பிரபுவே ! உமது சிரஸால் தேவலோகமும் கால்களால் பூமியும் பரவப்பட்டிருக்கின்றன. [2] உமது வயிறு இந்த லோகங்கள். நீர் ஸநாதனரான புருஷராகிறீர் ; வித்தையிலும் தவத்திலும் கஷ்டப்பட்டவர்களும், தவத்தினால் சுத்தமான மனமுள்ளவர்களும், ஆத்மஜ்ஞானத்தினால் திருப்தி அடைந்தவர்களுமான ரிஷிகளுக்குச் சிறந்தவராயிருக்கின்றீர். புருஷோத்தமரே ! யுத்தங்களில் புறங்காட்டாதவர்களும் எல்லாத் தர்மங்களுடனும் கூடினவர்களும் புண்ணியம் செய்தவர்களுமான ராஜரிஷிகளுக்கு அடையும் பொருளாயிருப்பவர் நீரே. பிரபுவும் நீரே ; விபுவும் நீரே, பிராணிகளுக்கு அந்தர்யாமி நீரே ; நீரே வேலை செய்கிறீர். லோகபாலர்களும் லோகங்களும் நக்ஷத்திரங்களும் பத்துத் திக்குகளும் ஆகாசமும் சந்திரனும் சூரியனும் யாவரும் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றனர். புஜபலமுள்ளவரே ! (மஹாபு) பிராணிகளுக்கு மரணமடையும் தன்மையும் தேவர்களுக்கு அமரத்தன்மையுமான லோக காரியம் யாவும் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றன. மதுஸூதனரே ! ஸ்நேகத்தினால் அப்படிப்பட்ட நான் உம்மிடத்தில் துக்கத்தைச் சொல்லுகின்றேன். மனுஷ்யர்களும் தேவர்களுமாகிய எல்லாப் பிராணிகளுக்கும் நீர் பிரபுவர். விபுவே ! கிருஷ்ணரே ! பாண்டவர்களுக்கு மனைவியும், உமக்குத் தோழியும், திருஷ்டத்யும்னனுடைய தங்கையுமான என்னைப் போன்றவள் எவ்விதம் ஸபையைக் குறித்து இழுக்கப்படலாம் ? வீட்டுக்கு விலக்காயிருப்பவளும் நடுங்குகிறவளும் [3] ஒற்றைவஸ்திரத்தையுடையவளும் துக்கத்தை அடைந்தவளுமான (நான்) கௌரவர்களின் ஸபையில் இழுக்கப்பட்டேன். ஸபையில் அரசர்களுக்கு நடுவில், [4] பாவத்தில் மனமுள்ள திருதராஷ்டிரபுத்திரர்களா

1 'ஈச்வரா' என்பது மூலம். 2 வேறு பாடம்.

3 'ரீசா ரித்தை ஸமுக்ஷிதா' என்னும் பதங்கள் விடப்பட்டன.

4 'ரஜஸா அபிபரிப்லுதா' என்னும் பதங்கள் விடப்பட்டன.

என்னைப் பார்த்துச் சிரித்தார்கள். மதுஸூதனரே! பாண்டு புத்திரர்களும் பாஞ்சாலர்களும் யாதவர்களும் ஜீவித்திருக்கும்போது அந்தத் துரியோதனுடைய அடிமையென்னும் எண்ணத்துடன் என்னை அனுபவிக்க விரும்பினார்கள். கிருஷ்ணரே! பீஷ்மர், திருதராஷ்டிரர் இருவருக்கும் முறைப்படி மருமகளாகின்றேனல்லவா? அப்படிப்பட்ட நான் பலாத்காரமாகத் தாஸியாக்கப்பட்டேன். நற்கீர்த்தியுள்ள தர்மபத்தினி கஷ்டப்படப் பார்த்திருந்தார்களென்பது பற்றி, யுத்தத்தில் சிறந்தவர்களும் அதிக வலிமையுள்ளவர்களுமான பாண்டவர்களையே நிந்திக்கின்றேன். ஜனார்த்தனரே! அற்பர்களால் துன்பப்படுத்தப்பட்ட என்னைப் பார்த்துப் பொறுத்திருந்தவர்களான அந்தப் பீமஸேனரின் பலத்தை நிந்திக்கவேண்டும். அர்ஜுனரின் காண்டீவத்தையும் நிந்திக்கவேண்டும். கணவர்கள், அற்ப பலமுள்ளவர்களாயினும் மனைவியை ரக்ஷிக்கின்றார்கள் என்கிற இந்தச் சாசுவத தர்மமானது எப்பொழுதும் ஸாதுக்களால் நடத்தப்பட்டது. மனைவி காப்பாற்றப்படும்போது பிரஜை காப்பாற்றப்பட்டதாகின்றது. பிரஜை காக்கப்படும்போது ஆத்மா ரக்ஷிக்கப்பட்டதாகின்றது. அவளிடத்தில் (பதி) தானே ஜனிப்பதுபற்றியன்றோ ஜாயை ஆகின்றாள்? பாரியையினால் ரக்ஷிக்கப்படவேண்டிய பர்த்தா (ஆகிய புத்திரன்) நான் ரக்ஷிக்கப்படாவிடில் எவ்விதம் என் வயிற்றில் உண்டாவன்? இந்தப் பாண்டவர்களோ சரணமடைந்தவனை ஒரு ஸமயத்திலும் விடார். அப்படிப்பட்ட இவர்கள் சரணமடைந்த என்னைக் காப்பாற்றவில்லையன்றோ? ஜனார்த்தனரே! எனக்கு ஐந்து பதிகளாலும் மஹா பலமுள்ள குமாரர்கள் உண்டானார்கள். இவர்களுக்காகவாவது காப்பாற்றப்பட வேண்டியவளாகின்றேன். யுதிஷ்டிரரிடமிருந்து உண்டான பிரதிவிந்தியனும் பீமஸேனரிடமிருந்து உண்டான ஸுதஸோமனும் அர்ஜுனரிடமிருந்து உண்டான ச்ருதகீர்த்தியும் நகுலபுத்திரனான சதானீகனும் ஸஹதேவரிடமிருந்து உண்டான ச்ருதகர்மாவுமான யாவரும் உண்மையான பராக்ரமமுள்ளவர்கள். கோவிந்தரே! பிரத்யும்னன் எவ்விதமோ அவ்விதமே அவர்கள் மஹாரதர்கள்; வில்லில் சிறந்தவர்கள்; யுத்தத்தில் பகைவர்களால் வெல்லமுடியாதவர்களல்லரோ? இவர்கள் எல்லாரும், அற்ப பலமுள்ளவர்களான திருதராஷ்டிர புத்திரர்களுக்கு வேலைக்காரர்களாகச்செய்யப்பட்டு அதர்மமாக ராஜ்யம் அபகரிக்கப்பட்டதை எதற்காகப் பொறுக்கின்றார்கள்? ஒற்றை வஸ்திரம் உள்ளவளும் விட்டுக்கு விலக்கானவளுமான நான் ஸபையில் இழுக்கப்பட்டேன். மதுஸூத

னரே! கோவிந்தரே! (பல தீமைகளைச் செய்த) துரியோதனன் ஒரு முகூர்த்தமும் உயிரோடிருக்கிறானாதலால் அர்ஜுனர், பீமஸேனர், நீர் ஆகிய உங்களைத் தவிர மற்றவனால் நாணேற்றுவதற்கும் முடியாத காண்டீவத்தை நிந்திக்கவேண்டும். பீமஸேனருடைய பலத்தையும் அர்ஜுனருடைய ஆண்மையையும் நிந்திக்கவேண்டும். மதுஸூதனரே! முற்காலத்தில், துரியோதனன், ஹிம்ஸை செய்யாதவர்களும் நியமத்திலிருக்கிறவர்களும் அத்தியயனஞ் செய்கிறவர்களும் பாலர்களுமான இவர்களை மாதாவுடன் ராஜ்யத்திலிருந்து துரத்தினான். பாவியான அவன் பீமஸேனரின் ஆகாரத்தில் புதியதும் கொடியதும் விதரணஞ்செய்யப்பட்டதும் மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணக் கூடியதுமான காலகூட விஷத்தை அதிகமாகப் போடுவித்தான். ஜநார்த்தனரே! புருஷோத்தமரே! மிக்க புஜபலமுள்ளவரே! பீமஸேனருக்கு (ஆயுள்) மிச்சமிருப்பதால் அன்னத்துடன் அவ்விஷம் துன்பமில்லாமலே ஜீர்ணமாயிற்று. கோவிந்தரே! அவ்விதமே கங்கைக்கரையிலுள்ள பிரமாணகோடியென்னுமிடத்தில் நம்பிக்கையடைந்து தூங்கும் இந்தப் பீமஸேனனைக் கட்டிக் கங்கையிலெறிந்து பட்டணம் வந்தான். மிகுந்தவலிமையுள்ளவரும் அதிக பலமுள்ளவரும் குந்திபுத்திரருமான பீமஸேனர் விழித்துக்கொண்டு கட்டை அறுத்துக்கொண்டு எழுந்தார். பின்பு விஷமுள்ள கருநாகங்களைக்கொண்டு தூங்கும் இவரை எல்லா அங்கங்களிலும் கடிக்கவும் செய்தான். பகைவனைக் கொல்லும் (பீமஸேனர்) மரணத்தையடையவில்லை. இவர் விழித்து எல்லாப் பாம்புகளையும் கொன்றார்; அந்தத் துரியோதனனுக்கு இஷ்டனான ஸாரதியையும் புறங்கையால் அடித்துக் கொன்றார். திரும்பவும், வாரணாவதமென்னுமிடத்தில் படுத்துத் தூங்கும் பாலர்களை மாமியுடன் எரிக்க முயன்றான். எவன்தான் அந்தக் கொடிய செய்கையைச் செய்யத் தக்கவன்? மாமியானவள் பயத்தையடைந்தும், அக்கினியால் சூழப்பட்டும், அதிக துக்கத்தை அடைந்தும், அழுதுகொண்டும், 'அந்தோ! கெட்டுவிட்டேன். இப்பொழுது எவ்விதம் இவ்வக்கினியிலிருந்து நிவிருத்தியுண்டாகும்? பாலர்களான புத்திரர்களுடன் காப்பாற்றுபவர்களில்லாதவர்களாய் நாசமடையப்போகின்றேன்' என்று இவ்வார்த்தையைப் பாண்டவர்களை (நோக்கிச்) சொல்லியபொழுது, பெரிய தோளுள்ளவரும் வாயுவின் வேகமும் பராக்கிரமமும்போன்ற வேகமும் பராக்கிரமமுமுள்ளவரும் செந்நாயினுடைய வயிறுபோன்ற வயிறுள்ளவருமான பீமஸேனர், 'விநதையின் புத்திரனும் பக்ஷி

ராஜனுமான கருடபக்ஷிபோலத் தாவிக்குதிக்கின்றேன். இதில் உங்க ளுக்குப் பயமில்லை' என்று சொல்லி, மாமியையும் பிராதாக்களையும் தேற்றினர். மாமியை இடப்பக்கத்திலும் அரசரான தாமபுத்திரரை வலப்பக்கத்திலும் நகுல ஸஹதேவர்களைத் தோள்களிலும் அர்ஜு னரை முதுகிலும் வைத்துக்கொண்டு, வீர்யமுள்ளவரும் பலமுள்ள வருமான அவர் யாவரையும் தூக்கிக்கொண்டு வேகத்துடன் சீக்கிரம் கிளம்பி ஸஹோதரர்களையும் மாமியையும் நெருப்பிலிருந்து விடுவித் தார். கீர்த்தியுள்ள அவர்கள் யாவரும் இரவில் தாயாருடன் கிளம்பிப் பெரிய காட்டில் சமீபத்திலுள்ள ஹிடிம்பவனத்தை அடைந்தார்கள். அந்த இடத்தில் மிகவும் துக்கத்தையடைந்து வாடின இவர்கள் தாயாருடன் தூங்கினார்கள். தூங்கும் இவர்களை நோக்கி ஹிடிம்பை என்கிற ராக்ஷஸி வந்தனள். அவள், அவ்விடத்தில் தாயுடன் பூமியில் தூங்கும் பாண்டவர்களைக் கண்டு, காமனால் கலக்கப்பட்ட மனமுள்ள வளாய்ப் பீமஸேனரை விரும்பினள். பிறகு, அழகிய ஸ்திரீயான அவள் பீமஸேனருடைய கால்களைத் தன் மடியில் வைத்துக்கொண்டு சந்தோஷமுள்ளவளாகி மெதுவாகக் கையால் பிடித்தனள். உண்மை யான பராக்கிரமமுள்ளவரும் அளவற்ற சக்தியுள்ளவரும் பலவானு மான பீமஸேனர் அவளை அறிந்து, 'குற்றமற்றவளே! இங்கே என்ன விரும்புகின்றாய்?' என்று வினவினர். இவ்விதம் பீமஸேனரால் சொல் லப்பட்டவளும் இஷ்டப்படி உருவமமாறக்கூடியவளும் குற்றமற்றவளு மான ராக்ஷஸியானவள், மஹாத்மாவான பீமஸேனரைப்பார்த்து, 'இங்கிருந்து சீக்கிரம் ஓடிவிடுங்கள். பலமுள்ள இந்தச் சகோதரன் உங்களைக் கொல்வதற்கு வருவான். ஆகையால், போய்விடுங்கள். தாம தம் வேண்டாம்' என்று சொன்னாள். பிறகு, பீமஸேனர் அகங்காரத் துடன் அவளை நோக்கிப் பின்வரும் வார்த்தையைச் சொன்னர்: 'அவ னிடமிருந்து நான் பயப்படேன். வந்தவனை நான் கொல்லுவேன்' என்றார். பயங்கரமான உருவமுள்ளவனும் பயமான தோற்றமுள்ள வனும் ராக்ஷஸர்களுள் இழிந்தவனுமான (அவன்) அவர்களின் வார்த் தையைக் கேட்டுப் பெரிய சப்தத்தைச் செய்துகொண்டு வந்து சேர்ந்தான். அவன், 'ஹிடிம்பையே! எவனுடன் பேசுகின்றாய்? அவனை என் சமீபத்தில் அழைத்து வா; பக்ஷித்துவிடுவோம். தாம தம் செய்யத்தக்கவளல்லை' என்றான். அப்பொழுது, குற்றமற்றவ ளும் நல்ல மனமுள்ளவளுமான அவள், கருணையால் பற்றப்பட்ட மனத்துடன் தமையனால் இவரை அவன் சொன்னபடி செய்வதற்கு இச்சிக்கவில்லை. மனிதர்களைத் தின்னும் அந்த ராக்ஷஸன் பயங்கர

மான சப்தங்களைச் செய்துகொண்டு, அப்பொழுது பீமஸேனனைக் குறித்து வேகமாக ஓடி வந்தான். பலமுள்ள ராக்ஷஸன் கோபம் கொண்டு மிகுந்த வேகத்துடன் பீமஸேனரை எதிர்த்துச் சென்று அவர்கையைக் கையால் பிடித்தான். இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கொப்பான தொடுகையுள்ளதும் வஜ்ரம்போன்ற உருவமுள்ளதுமான கையை உறுதியாக மடக்கிய பீமஸேனரைச் சீக்கிரமாகக் குத்தினன். அப்பொழுது, தோள்வலி மிகுந்த பீமஸேனர் தமது கை ராக்ஷஸனுடைய கையால் பிடிக்கப்பட்டிருப்பதைப் பொறுமல் கோபங்கொண்டனர். அப்பொழுது எல்லா அஸ்திரங்களையும் அறிந்த பீமஸேனருக்கும் ஹிடிம்பனுக்கும், இந்திரனுக்கும் விருத்திரனுக்கும் நடந்தது போல, பயங்கரமும் நெருங்கியதுமான சண்டை நடந்தது. குற்றமற்றவரே! அப்பொழுது அதிக வீரியமும் பலமுமுள்ள பீமஸேனர் அரக்கனுடன் நெடுநேரம் விளையாடிப் பலமற்ற அவனைக் கொன்றார்.

பிறகு, பீமஸேனர், ஹிடிம்பனைக் கொன்று, கடோத்கசனைப் பெற்றவளான ஹிடிம்பையை முன்னிட்டுக்கொண்டு ஸஹோதரர்களுடன் கிளம்பினர். பகைவர்களை வாட்டுபவர்களான யாவரும் அன்னையுடன்கூட அநேகம் கூட்டங்களால் நிரம்பிய இடங்களிலிருந்து ஏகசக்ர நகரத்தை நோக்கிப் போனர்கள். போகும்பொழுது, இவர்களுக்குப் பிரியத்திலும் ஹிதத்திலும் விருப்பமுள்ள வியாஸர் ஆலோசனை சொல்பவரானர். கடுமையான விரதமுள்ள பாண்டவர்கள் அங்கிருந்து ஏகசக்ர நகரத்தை அடைந்தார்கள். அவ்விடத்திலும், ஹிடிம்பனோடு ஒப்பானவனும் பயத்தை விளைவிக்கக் கூடியவனும் மனிதர்களைத் தின்பவனும் அதிக பலமுள்ளவனுமான பகனென்பவனை எதிர்த்தார்கள். யுத்தம் செய்பவர்களுள் சிறந்த பீமஸேனர் பயங்கரனுன அவனையும் கொன்று ஸஹோதரர்களெல்லாருடனும் த்ருபதனுடைய பட்டணம் சென்றார். கோவிந்தரே! பீஷ்மகபுத்திரியான ருக்மிணி உம்மால் ஜயிக்கப்பட்டதுபோல அவ்விடத்திலேயே வஸிக்கும் அர்ஜுனரால் நானும் அடையப்பட்டேன். மதுஸூதனரே! இவ்விதம் ஸ்வயம்வரத்தில் பிறரால் செய்ய அரிதான பெரியகாரியத்தைச் செய்து பெரியயுத்தத்தில் அர்ஜுனரால் நான் ஜயிக்கப்பட்டேன். இவ்விதம் அநேகமான கஷ்டங்களால் வாட்டப்படுகிறவளும், அதிக துக்கத்தையடைந்தவளும், மாமியை விட்டுப் பிரிந்தவளுமான நான், தௌம்யரை முன்னிட்டுக்கொண்டு வஸிக்கின்றேன். சிங்கம்போன்ற வலிமையுள்ளவர்களும் வீர்யத்

தால் மேலானவர்களுமான இவர்கள் அற்பர்களான பகைவர்களால் துக்கங்களை அனுபவிக்கிறவர்களாக ஏன் என்னை அலக்ஷியம் செய்கின்றார்கள்? மிக்க அற்ப பலமுள்ளவர்களும், பாவமான செய்கையைச்செய்பவர்களுமான பாவிகளின் இவ்வித துக்கங்களைப் பொறுத்துக்கொண்டு நீடித்த காலமாக எரிக்கப்படுகிறவளாகின்றேன். [1] மனிதர்களுக்குரிய முறையல்லாத முறையாலன்றோ பெரியகுலத்தில் ஜனித்தேன். மாதவரே! மஹாத்மாவான பாண்டுவின் மருமகளும், பாண்டவர்களுக்குப் பிரியமான பார்யையுமாகி, இந்திரனுக்கு ஒப்பான ஐந்துபேர்களும் பார்த்திருக்கும்போது, தலைமயிரின் இழுப்பை அடைந்து என்னைப்போன்ற எவள் உயிருடனிருப்பாள்?' என்று சொல்லி, மிருதுவாகப் பேசும் திரௌபதி, [2] தாமரைமலர் போன்ற காந்தியுள்ள மிருதுவான கையினால் முகத்தை மறைத்துக்கொண்டு அழுதாள்.

திரௌபதியானவள், பருத்தவைகளும் நன்கு அமைந்தவைகளும் அழகிய லக்ஷணங்களுள்ளவைகளும் சாய்ந்தவைகளுமான ஸ்தனங்களைத் துக்கத்தால் உண்டான கண்ணீர்த்துளிகளால் நனைத்தாள்; கண்களைத் துடைத்துக்கொண்டும், கோபத்துடன் அடிக்கடி பெருமூச்சு விட்டுக்கொண்டும், கண்ணீர்நிரம்பித (தடைப்பட்ட) குரலுடன் வார்த்தைசொன்னாள். 'மதுஸூதனரே! எனக்குப் பதிகளில்லை; புத்திரர்களில்லை; பந்துக்களில்லை, சகோதரர்களில்லை; பிதாவுமில்லை; நீருமில்லை. ஏனெனில், நீங்கள் அற்பர்களால் துன்புறுத்தப்பெற்ற என்னைத் துக்கமற்றவர்போல அலக்ஷியம் செய்தீர்கள். அப்பொழுது, கர்ணன் சிரித்தானென்பதுபற்றின துக்கமும் எனக்கு ஆறவில்லை. கேசவரே! [3] ஸம்பந்தம் [4] கௌரவம் [5] சிநேகம் [6] பிரபுத்தன்மை ஆகிய நான்குகாரணங்களால் எப்பொழுதும் உம்மால் ரக்ஷிக்கப்படத்தகுந்தவளாகிறேன்' என்று கூறினாள். பிறகு, கிருஷ்ணர், அவ்வீரர்களின் கூட்டத்தில் அவளைநோக்கி, 'கோபமுள்ளவளே! எவர்கள் விஷயத்தில் கோபங்கொண்டவளாகிறாயோ அவர்களின் மனைவியரும், அர்ஜுனன் பாணங்களால் மறைக்

---

1 'வயிற்றிலிருந்து பிறவாமல் யாககுண்டத்திலிருந்து பிறந்தேன்' என்பது. 2 'பத்மகோச' என்பது மூலம், 'மலரும் தருணத்திலிருப்பது' என்பது பொருள். 3 அத்தையின் பிள்ளையின் பார்யை என்ற ஸம்பந்தம்.

4 அக்னிகுண்டத்திலிருந்துண்டான கௌரவம்.

5 பக்தியிருப்பது. 6 உமது ஸாமர்த்தியம்.

கப்பட்டவர்களும் இரத்தப்பெருக்கால் நனைக்கப்பட்டவர்களும் கொல்லப்பட்டுப் பூதலத்தில் படுத்தவர்களுமான பர்த்தாக்களைப் பார்த்து இவ்விதமே அழப்போகின்றார்கள். பாண்டவர்கள் விஷயத்தில் எது செய்யத்தக்கதோ அதைச் செய்கின்றேன். சோகப்படாதே. உன்னிடம் உண்மையான பிரதிஜ்ஞை செய்கிறேன். அரசர்க்கரசியாவாய். திரௌபதி! ஸ்வர்க்கம் விழுந்தாலும் ஹிமயமலை வெடித்தாலும் பூமி பொடியானாலும் கடல் வற்றினாலும் என் வார்த்தை வீண்போகாது' என்றார்.

அந்தப் பாஞ்சாலகுமாரியான திரௌபதியானவள், கிருஷ்ணரிடமிருந்து அந்தச்சொல்லை மறுமொழியாகக்கேட்டு, அர்ஜுனனைக் குறுக்காகப் பார்த்தாள். மஹாராஜரே! அப்பொழுது, அர்ஜுனன், திரௌபதியை நோக்கி, 'அழகிய சிவந்த கண்களுள்ளவளே! சிறந்த நிறமுள்ள தேவியே! அழாதே. கண்ணபிரான் என்னசொன்னாரோ அது அவ்விதமே நடக்கும், மாறாது' என்றுசொன்னான். த்ருஷ்டத்யும்னன், 'நான் த்ரோணரைக் கொல்லுவேன். சிகண்டி பீஷ்மரையும், பீமன் துரியோதனனையும், அர்ஜுனன் கர்ணனையும் கொல்லுவார்கள். தங்கையே! ராமகிருஷ்ணர்களை அடுத்து, யுத்தத்தில் இந்திரனாலும் ஜயிக்கமுடியாதவர்களாயிருக்கின்றோம். யுத்தத்தில் திருதராஷ்டிர புத்திரர்களால் (ஜயிக்க முடியாதவர்களென்பதில்) என்ன விருக்கின்றது?' என்றான். இவ்விதம் சொல்லப்பட்டவுடன், வீரர்கள் வாஸுதேவருக்கு எதிர்முகமாக ஸபையில் உட்கார்ந்தார்கள். அவர்களுக்கு நடுவில் நீண்ட கைகளுள்ள கிருஷ்ணர் (பின்வரும்) வார்த்தையைச் சொன்னார்.

---

## பதின்மூன்றாவது அத்யாயம்.

# அர்ஜுநாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

(கோவிந்தர் சூதாட்டக்காலத்தில் தாம் துவாரகையிலில்லாமையால் யுதிஷ்டிரருக்குக் கஷ்டம் நேர்ந்ததென்பதைச் சொல்லி அவரைத் தேற்றியது)

வாஸுதேவர், 'பூபதியே! ஓ! அரசரே! நான் துவாரகையில் இருந்திருப்பேனேயானால் சமீபத்தில் வந்திருப்பேன்; நீர் இந்தக் கஷ்டத்தை அடைந்தவராகமாட்டீர். ஓ! எதிர்க்கப்பட முடியாதவரே! அம்பிகா புத்திரரான அரசராலும் துரியோதனனாலும் கௌரவர்களாலும் அழைக்கப்படாதவனாயினும், நான் வந்திருப்பேன். அதிக தோஷங்களைக் காட்டி நான் சூதைத் தடுத்திருப்பேன். பீஷ்மர், துரோணர், கிருபர், பாஹ்லீகர் இவர்களை அழைத்து உமக்காக விசித்ரவீர்ய புத்ரரான அரசரை நோக்கி, 'கௌரவரே! ராஜேந்திரரே! பிரபுவே! உமது புத்திரர்களுக்குச் சூதாட்டம் போதும்' என்று, நீர் துரத்தப்பட்டதற்குக் காரணமாயிருந்த தோஷங்களையும் முன்பு வீரஸேன குமாரனான நளன் ராஜ்யத்திலிருந்து துரத்தப்பட்டதற்குக் காரணமான தோஷங்களையும் அந்த விஷயத்தில் தெளிவாகச் சொல்லியிருப்பேன். அரசரே! சூதாட்டத்தினால் எதிர்பாராத நஷ்டத்தையும் (தோற்றாலும் இனி வெல்லலாமென்னும் ஆசையால்) ஆட்டத்தின் இடையறாமையையும் உள்ளபடி விரித்துரைத்திருப்பேன். ஸ்திரீகள், சூது, வேட்டை, குடி இந்நான்கும் ஆசையாலுண்டானவை. மனிதன் ஐஸ்வரியத்திலிருந்து நழுவிவிடக் காரணமான இவை துக்கமென்றே சொல்லப்படுகின்றன. சாஸ்திரம் அறிந்தவர்கள் அவை எல்லாவற்றிலும் தோஷத்தை எண்ணுகின்றார்கள். சூதையறிந்தவர்கள் அதில் அதிகமான குற்றத்தைப் பார்க்கின்றார்கள். இவற்றில் ஒரே நாளில் பொருள் நாசமும் நிச்சயமான துக்கமும் பொருள்களின் அநுபவமின்றி அழிவும் மிகவும் கடினமான வார்த்தையுமட்டுமே நேரும். கடுமையான உத்பத்தியுள்ளதும் தொடர்ந்து வரக்கூடியதுமான இதையும் மற்றதையும் அம்பிகையின் புத்திரரை அடைந்து சூது விஷயத்தில் சொல்லுவேன். குரு வம்சத்தை விருத்தி செய்பவரே! இவ்விதம் என்னால் சொல்லப்பட்டு என் வார்த்தையை அங்கீகரிப்பாரானால் குருக்களுக்கு க்ஷேமமும் தர்மமும் உண்டாகும். ஓ! ராஜேந்திரரே! பரத

ஸ்ரேஷ்டரே! அவர் பத்தியமான என்று இனிய வார்த்தையை அங்கீகரியாவிடில் வலிமையால் அவரை அடக்கிவிடுவேன். சத்ருக்கள் என்னுடைய பகைவர்களான ஸௌபரிஜனங்களாக அநியாயத்துடன் அவரை அனுஸரிப்பார்களானால், அந்நாட்டம் செய்கிற அவர்களையும் கொல்லுவேன். கௌரவரே! அப்பொழுது எனக்கு 1 ஆனர்த்த தேசத்தில் வாஸமில்லாமை நேர்ந்துவிட்டது. அதனால், நீங்கள் சூதால் ஏற்பட்ட இந்தத் துக்கத்தை அடைந்தீர்கள். பாண்டு நந்தனரே! குரு ஸ்ரேஷ்டரே! அப்படிப்பட்ட நான் துவாரகையை அடைந்ததும், நீர் துக்கப்படும்படியானதை நடந்தபடி ஸாத்யகியினிடமிருந்து கேட்டேன். அரசரே! பார்த்திவரே! கேட்டவுடனேயே, நான் மனத்தில் மிகத் துயரமடைந்து, உம்மைப் பார்க்க விரும்பி, வேகமாக வந்தேன். பரதஸ்ரேஷ்டரே! அஹோ! நீங்கள் எல்லோரும் கஷ்டத்தை அடைந்தவர்களாயிருக்கின்றீர்கள். அப்படிப்பட்ட நான் உம்மைத் தம்பிகளுடன் துக்கத்தில் மூழ்கினவர்களாகப் பார்க்கின்றேனே!' என்றார்.

---

## பதினான்காவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

---

(கோவிந்தர் தாம் வர முடியாமைக்குக் காரணமான ஸால்வ யுத்தத்தைக் கூறியது.)

யுதிஷ்டிரர், 'ஹே! வ்ருஷ்ணி நந்தனரே! கிருஷ்ணரே! உமக்கு (அங்கு) வாஸமில்லாமை எதனால் உண்டாயிற்று? உமக்கு வெளியில் எங்கே செல்லவேண்டியிருந்தது? வெளியில் வசித்து என்ன செய்தீர்?' என்று வினவினர். கேசவர், 'பரதஸ்ரேஷ்டரே! கௌரவஸ்ரேஷ்டரே! ஸௌபமென்கிற ஸால்வனுடைய பட்டணத்தை அழிப்பதற்கு நான் போனேன். அவ் விஷயத்தில் காரணத்தை என்னிடமிருந்து கேளும். பரதஸ்ரேஷ்டரே! மிக்க ஒளியுள்ளவனும் பெரிய கையுள்ளவனும் அதிக கீர்த்தியுள்ளவனும் தமகோஷனுக்குப் புத்திரனும் வீரனுமான அந்த சிசுபாலன், கெட்ட எண்ணமுள்ளவனாகி, உம்முடைய ராஜஸூயமென்கிற யாகத்தில் நடந்த பூஜையைக் குறித்துக் கோபத்தை அடைந்து பொறுக்கவில்லை யாதலால் என்னால் கொல்லப்பட்டான். ஹே! பாரதரே!

---

1 [illegible] இருக்குமிடம்

அவன் கொல்லப்பட்டது கேட்டு, ஸாலவன கடுமையான கோபத்துடன் நான் இங்கு இருக்கும்போது ஒருவருமில்லாத துவாரகையை அடைந்தான். அவன் இஷ்டப்படி செல்லும் ஸௌபமென்னும் (ஆகாய விமானத்தில்) ஏறிக்கொண்டு க்ரூர [1]ஸ்வபாவமுள்ளவனாகி அவ்விடத்தில் குழந்தைகளான வ்ருஷ்ணிச்ரேஷ்டர்களுடன் சண்டை செய்தான். பரமமாவின் அனுக்கிரகத்தால் பலகாலம் ஜீவிப்பவனும் கெட்ட எண்ணமுள்ளவனுமான அவ்வரசன் அப்பொழுது வ்ருஷ்ணிகளுள் சிறந்த வீரர்களான அந்த அநேகம் பாலர்களைக் கொன்று, பிறகு, பட்டணத்துத் தோட்டங்களையெல்லாம் நாசமாக்கினான். ஓ! மிக்க புஜபலமுள்ளவரே! அந்த ஸௌபராஜன், 'விருஷ்ணிகுலத்தில் தாழ்ந்தவனும் வஸுதேவன் புத்திரனும் அற்ப புத்தியுள்ளவனுமான இப்படிப்பட்ட அந்தக் கிருஷ்ணன் எங்குப் போயினன்? யுத்தத்தில் விருப்பமுள்ள அவனுடைய கொழுப்பை யுத்தத்தில் நான் நாசமாக்கப் போகின்றேன். ஓ! ஆனர்த்தர்களே! உண்மையைச் சொல்லுங்கள்; அவன் எங்கே இருக்கின்றானோ அங்கே போகின்றேன். கம்ஸனையும் கேசியையும் கொன்ற அவனைக் கொன்று திரும்பிவருவேன்; கொல்லாமல் திரும்பேன். ஆணையுடன் ஆயுதத்தைத் தொடுகின்றேன். அவன் எங்கே? அவன் எங்கே?' என்று சொல்லிக்கொண்டு போரில் என்னுடன் யுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவனாகத் திரும்பவும் அங்கங்கு ஓடினான். 'பாவச் செய்கையுள்ளவனும் நம்பிக்கைத் துரோகம் செய்பவனும் அற்பனுமான அவனை இப்பொழுது சிசுபாலனைக் கொன்ற கோபத்தால் யமன் வீட்டை அடையச் செய்வேன். கெட்ட ஸ்வபாவமுள்ள எவனால் என்பிராதாவான சிசுபாலராஜன் கொல்லப்பட்டானோ அவனைப் பூதலத்தில் கொல்லுவேன். பிராதாவும் பாலனும் யுத்தத்திறமையில்லாதவனும் அவதானமில்லாதவனும் வீரனுமான ராஜன் எவனால் கொல்லப்பட்டானோ அந்த ஜனார்த்தனனைக் கொல்லுவேன்' என்றான்.

ஓ! மஹாராஜரே! குருநந்தனரே! இவை முதலிய சொற்களைப் பிதற்றிக்கொண்டு அவன் இஷ்டப்படிசெல்லும் ஸௌபமென்னும் பட்டணத்துடன் என்னை நிந்தித்துக்கொண்டு ஆகாயத்தில் நின்றான். கௌரவரே! மார்த்திகாவதமென்ற தேசவாஸியும் கெட்ட எண்ணமுள்ளவனும் கெட்டஸ்வபாவமுள்ளவனுமான அந்த அரசன் என் விஷயத்தில் நடந்துகொண்டதை நான் சென்று கேள்வியுற்றேன்.

---

1 க்ரூர் சொல் விடப்பட்டது.

துவாரகா பட்டணத்துடன் சண்டைசெய்தான். அப்பொழுது, நான்கு பக்கத்திலும் எல்லா (ஆயுத) வருஷத்தாலும் சண்டை நடந்தது. பரதஸ்ரேஷ்டரே! அரசரே! துவாரகா பட்டணமானது, கொடிமரத்துடன் கூடியதும், வெளிவாசலுடன் கூடியதும், (யுத்தம் செய்பவர்களின்) கூட்டத்துடன் கூடியதும், (அவர்களிருக்கும்) இடங்களுடன் கூடியதும், (பீரங்கி) யந்திரங்களுடனும் சுரங்கவழியாக ரகஸ்யவழியைச் செய்கிறவர்களுடனும் கூடியதும், இருப்பு முனையுள்ள முளைகளுடனும் தோவீதிகளுடனுங் கூடியதும், அன்னத்துடன் கூடிய உபரிகைகளையும் கோபுரங்களையுமுடையதும், சைனியத்தைச் சிறையிடுமிடத்துடன் கூடியதும், எரிகின்ற பந்தங்களுள்ளதும், எந்திரத்தில் கட்டப்பட்ட (கவண்முதலிய) பகைவரை நாசஞ்செய்யும் பொருள்களுள்ளதும், மணலுல அல்லது தோலால் மூட்டைகமுதுருபோலச் செய்யப்பட்ட பாத்திரங்களுள்ளதும், பேரீ பணவம் ஆனகமென்னும் வாத்தியங்களுள்ளதும், தோமரங்களும் அங்குசங்களுமுள்ளதும், சதக்நியுடனும் கலபையுடனுங்கூடியதும், புசுண்டிகளும் உருண்டைக்கற்களுமுள்ளதும், ஆயுதங்களுள்ளதும், கோடாலிகளுள்ளதும், இருமபினாலும், தோலினாலும் செய்யப்பட்ட கேடகங்களுள்ளதும், வெடிமருந்துகளுள்ளதும், கவண்கற்களும் கணைகளும் உள்ளதுமாகச் சாஸ்திரத்தில் சொல்லிய முறைப்படி நான்கு பக்கத்திலும் நன்கமைந்ததாகச் செய்யப்பட்டிருந்தது. குருபரேஷ்டரே! அந்தத் துவாரகை மத்யம[1] குலமத்தினால் காப்பாற்றுகிறவர்களான வெவவேறுவிதமான பல தோவீரர்களாலும், கதன், ஸாமபன், உத்தவன் முதலானவர்களாலும், போரில் எதிர்த்துத் தடுக்கவல்லவர்களும் (முன்பு நடந்த) சண்டையில் காணப்பட்ட வீரியமுள்ளவர்களும் பிரஸித்த குலமுள்ளவர்களும் வீரர்களுமான காலாட்களாலும் பிறர் குலமத்தைத் துரத்துகிற கொடிபிடித்த குதிரைவீரர்களாலும், நன்குகாப்பாற்றப்பட்டது. அஜாக்ரதையைத் தடுக்கிறவர்களான உக்கிரஸேனன், உத்தவன் முதலியோர்களால் கள்குடிக்கக்கூடாதென்று பட்டணத்தில் முரசறைவிக்கப்பட்டது. 'சால்வராஜன் மதிமயங்கினவர்களை அடித்துவிடுவானன்றோ?' என்று ஆலோசனைசெய்து அந்த எல்லா விருஷ்ணிகளும் அந்தகர்களும் ஜாக்ரதையாக இருந்தார்கள். அவ்வாறே, பணக்குவியலைக் காப்பாற்றுகிறவர்களால், ஆனர்த்ததேசத்தார்களான நடர், நர்த்தகர்,

---

1 அரணை, சேனையின் ஒரு வகுப்பு.

காயகாரர்களியாவரும் 1 சீக்கிரம் வெளியில் துரத்தப்பட்டார்கள். எல்லாப் 2 பாலங்களும் உடைக்கப்பட்டன. கப்பல்கள் தடுக்கப்பட்டன. ஓ! கௌரவரே! அகழ்களும் சூலங்களால் நன்கு அடர்த்தியாகச் செய்யப்பட்டன. ஓ! குருசிரேஷ்டரே! கிணறுகளும் அம்பரீஷகமென்னும் மறைக்கப்பட்ட தெருக்களும் உண்டாக்கப்பட்டன. ஒரு க்ரோச தூரம் விசேஷமாக (இருப்புமுட்கள் அடர்த்தாக்க) செய்யப்பட்டது. பாலங்கள் உடைக்கப்பட்டன. எல்லா மதில்களும் பழுதுபார்க்கப்பட்டன. குற்றமற்றவரே! நகரக்கோட்டையானது இயற்கையாகவே பிரவேசிக்க முடியாதது; இயற்கையாகவே நன்கு காப்பாற்றப்பட்டது; இயற்கையாகவே ஆயுதங்களுடன் கூடியது. அப்பொழுது, மிகவும் மறைவுடையதாகவும் மிகவும் காக்கப்பட்டதும் மிகவும் ஆயுதங்களுள்ளதுமாயிருந்து. ஓ! பரதசிரேஷ்டரே! அப்பட்டணமானது எல்லா ஆயுதங்களுடனும் கூடினதாகவும் நன்கு ரக்ஷிக்கப்பட்டதாகவும் மறைக்கப்பட்டதாகவும் இந்திர மாளிகைபோல இருந்தது. அரசரே! சௌபன் வந்த அக்காலத்தில், வ்ருஷ்ணி அந்தகபுரத்தில் (யாரும்) முத்திரையின்றி வெளியே போகிறதுமில்லை, முத்திரையின்றி உள்ளே விடப்படுகிறதுமில்லை. கௌரவரே! ராஜேந்திரரே! எல்லா வீதிகளிலும் சதுக்கங்களிலும் அதிகமான யானைகளும் குதிரைகளும் நிறைந்த சேனை இருந்தது. அப்பொழுது, சேனையானது பலமும் ஆகாரமும் கொடுக்கப்பட்டதும் ஆயுதங்களும் வஸ்திரங்களும் கொடுக்கப்பட்டதும் விசேஷப் பொருளுதவி செய்யப்பட்டதுமாயிருந்தது. ஒருவனும் பொன் வெள்ளியல்லாத நாணயத்தைச் சம்பளமாக அடையவில்லை. காலங்கடந்து சம்பளம் வாங்கினவனுமில்லை. ஒருவனும் சேனையின் பாகத்தில் புதிதாகச் சேர்க்கப்பட்டவனுமில்லை, பராக்ரமம் பார்க்கப்படாதவனுமில்லை. அரசரே! இவ்விதம் நன்கு அமைக்கப்பட்ட துவாரகையானது உக்ரஸேன ராஜரால் திறமையுள்ள மந்திரிகளைக் கொண்டு நன்கு ரக்ஷிக்கப்பட்டது.

---

1 [illegible] 2 [illegible]

## பதினாறுவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

(கோவிந்தர் ஸால்வனுக்கும் யாதவர்களுக்கும் நடந்த சண்டையைச் சொல்லியது.)

ராஜேந்திரரே! அப்பொழுது வந்த ஸௌபபதியான ஸால்வனே, மிகுதியான மனிதர்களும் யானைகளும் நிறைந்த சேனையுடன் அப்பட்டணத்தில் பிரவேசித்தான். ஸால்வ ராஜனால் காப்பாற்றப் பட்டதும் தேர் யானை குதிரை காலாட்களுடன் கூடியதுமான அந்தச் சேனையானது அதிகமாகக் குளங்களுள்ள ஸமமான இடத்தில் நிறுத்தப்பட்டது. சேனையானது, சுடுகாடுகளையும் தேவாலயங்களையும் கறையான் புற்றுகளையும் புண்ணிய விருக்ஷங்களுள்ள மேடைகளையும் விலக்கி, நன்கு அமர்ந்ததாயிற்று. அரசரே! சைனியங்கள் அணிவகுக்கப்பட்டதனால் ஸால்வனுடைய பாசறையில் வெளிப்படையான வழிகளும் மறைக்கப்பட்டன. அவ்வாறே, ரகஸ்யமான வழிகளும் இல்லையே இல்லை. நரஶ்ரேஷ்டரே! கௌரவரே! எல்லா ஆயுதங்களுடனும் கூடினதும், எல்லா சஸ்திரங்களிலும் தேர்ந்ததும், தேர் யானை குதிரைகளடர்ந்ததும், காலாட்களடர்ந்ததும், மனமகிழ்ச்சியுடனும் நல்ல போஷணையுடனும் கூடிய வீரர்களுள்ளதும், வீரர்களின் லக்ஷணங்களுள்ளதும், நானாவிதமான கொடிகளும் கவசங்களுமுள்ளதும், பலவிதமான தேர்களும் விற்களுமுள்ளதுமான (சைனியத்தை) நிறுத்தி, அப்பொழுது கருடன்போல வேகமாகத் துவாரகையில் புகச் செய்தான்.

எதிர்த்துவரும் ஸால்வபதியின் அந்தச் சேனையை அப்பொழுது கண்டு, சிறுவர்களான வ்ருஷ்ணிபுத்திரர்கள் வெளிவந்து சண்டை செய்தார்கள். கௌரவரே! ஸால்வனுடைய அந்த எதிர்ப்பைப் பொறாதவர்களான சாருதேஷ்ணன், ஸாம்பன், மஹாரதனான ப்ரத்யும்னன் ஆகிய அவர்கள் யாவரும் கவசம் அணிந்து அழகிய ஆபரணமும் த்வஜமுமுள்ளவர்களாய்த் தேரேறி ஸால்வராஜனுடைய மிகுதியான வீரஶ்ரேஷ்டர்களுடன் நன்கு எதிர்த்தார்கள். ஸாம்பன், யுத்தத்தில் மிக்க ஊக்கத்தையடைந்து வில்லை யெடுத்துக்கொண்டு ஸால்வனுடைய மந்திரியும் சேனாபதியுமான க்ஷேமவ்ருத்தியுடன் யுத்தம் செய்தான். பரதஶ்ரேஷ்டரே! அவன்மீது ஜாம்ப

வஹ்நியின் புத்திரன், இந்திரன் மழைபெய்வதுபோல, பெரிய அம்பு மழையைப் பொழிந்தான். ஓ! மஹாராஜரே! சேனாபதியான அந்த க்ஷேமவ்ருத்தி இமயமலைபோல அசைவற்றவனாக நெருக்கமான அந்த அம்புமழையைப் பொறுத்துக்கொண்டான். ராஜேந்திரரே! பிறகு, க்ஷேமவ்ருத்தி, ஸாம்பனைக் குறித்து மாயையால் செய்யப்பட்ட அதிகமான சரக்கூட்டத்தை விட்டான். பிறகு, அந்த ஸாம்பன், மாயாமயமான சரக்கூட்டத்தை மாயையாலேயே பிளந்து, ஆயிரம் பாணத்தால் அவனுடைய ரதத்தின்மீது பொழிந்தான். ஸாம்பனால் அடிக்கப்பட்ட சேனாபதியான அந்த க்ஷேமவ்ருத்தி, பிறகு, ஸாம்பன் பாணங்களால் துன்புறுத்தப்பட்டு, வேகமுள்ள குதிரைகளுடன் ஓடினான். ஸால்வனுடைய சேனாபதியான அந்தக் க்ரூரன் ஓடினவுடன், வேகவானென்னும் பலமுள்ள அஸுரன் என் பிள்ளையை எதிர்த்தான். ராஜேந்திரரே! எதிர்க்கப்பட்டவனும் வ்ருஷ்ணி குலச்ரேஷ்டனுமான வீரனான ஸாம்பன் வேகவானுடைய வேகத்தைப் பொறுத்துக்கொண்டு நின்றான். ஓ! கௌந்தேயரே! உண்மையான பராக்கிரம முள்ளவனும் வீரனுமான அந்தச் சாம்பன் வேகவான்மீது வேகமுள்ள கதையைச் சுழற்றி பலத்துடன் எறிந்தான். அரசரே! காற்றினால் தள்ளப்பட்டதும் (யானை முதலியவற்றால்) மிதிக்கப்பட்டதும் வேர் அறுந்ததுமான மரம் போல, அந்தக் கதையால் அடிக்கப்பட்ட வேகவான் பூமியில் விழுந்தான். கதையால் முறிய அடிக்கப்பட்ட அந்த வீரனான பெரிய அஸுரன் விழுந்தவுடன், என் புத்திரன் பெரிய சேனையில் நுழைந்து சண்டை செய்தான். ஓ! மஹாராஜரே! மஹாரதனென்று ப்ரஸித்தி பெற்றவனும் பெரிய வில்லாளியுமான விவிந்தியனென்னும் பலமுள்ளவனுமான அஸுரன் சாருதேஷ்ணனுடன் எதிர்த்தான். பிறகு, முன்பு இந்திரனுக்கும் விருத்திரனுக்கும் யுத்தம் உண்டானது போலச் சாருதேஷ்ணனுக்கும் விவிந்தியனுக்கும் மிக நெருக்கமான யுத்தம் உண்டாயிற்று. மிகுந்த வலிமையடைந்த சிங்கங்கள் போலச் சப்தித்துக்கொண்டு ஒருவர்மேலொருவர் மிகவும் கோபங்கொண்டு ஒருவரை ஒருவர் பாணங்களால் அடித்தார்கள். பிறகு, ருக்மிணியின் புத்திரன் அக்நிக்கும் ஸூரியனுக்கும் ஸமான காந்தியுள்ளதும் சத்ருவை நாசம் செய்வதுமான பாணத்தை மஹாஸ்திர மந்திரத்தால் ஜபித்துத் தொடுத்தான். வேந்தரே! மஹாரதனான அந்த என்னுடைய புத்திரன் கோபத்துடன் உரக்கக் கூப்பிட்டு விவிந்தியனைக் குறித்து (அந்த அம்பை) விடுத்தான்.

அவன் உயிர்போய்க் கீழே விழுந்தான். விவிந்தியன் கொல்லப்பட்டதையும் அந்தச் சேனை மிக்க கலக்கப்பட்டதையும் பார்த்து, அந்த ஸால்வன், இஷ்டப்படி செல்லுகின்ற ஸௌபத்துடன் திரும்பவும் ஸமீபம் வந்தான். ஓ! மிக்க கைவன்மையுள்ளவரே! பிறகு, ஸௌபத்திலிருக்கும் ஸால்வனைப் பார்த்துப் பூமியிலிருக்கும் த்வாரகையிலுள்ள அந்தச் சேனை யாவும் கலக்கமடைந்தன. மஹாராஜரே! கௌரவரே! பிறகு, ப்ரத்யும்னன் வெளியில் வந்து ஆநர்த்தர்களின் அச்சேனையை நிலைநிறுத்தி வார்த்தையும் சொன்னான்: 'நீங்கள் யாவரும் நில்லுங்கள். யுத்தகளத்தில் அரசனுடன்கூடின ஸௌபத்தைப் போரில் வலிமையால் நான் தடுப்பதைப் பாருங்கள். ஓ! யாதவர்களே! பாம்புகள் போன்றவையும் வில்லிலிருந்து நன்கு இழுத்துவிடப்பட்டவையுமான பாணங்களால் இப்படிப்பட்ட நான் இப்பொழுது ஸௌபபதியின் சேனையை நாசமாக்குகிறேன். இதைப் பாருங்கள்; பயப்படவேண்டாம். ஸௌபராஜன் இப்பொழுது நாசமடைகிறான். கெட்ட எண்ணமுள்ள அவன் என்னால் எதிர்க்கப்பட்டு ஸௌபத்துடன்கூட நாசமடையப் போகிறான்' என்றான். பாண்டு நந்தனரே! ப்ரத்யும்னன் மிக்க ஊக்கம் கொண்டு இவ்விதம் சொல்லும்போது, போர்முகத்தில் நிற்கும் அந்தச் சேனையானது மகிழ்ந்து சண்டை செய்தது.

---

## பதினேழாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் ஸால்வனுக்கும் ப்ரத்யும்னனுக்கும் நடந்த யுத்தத்தைக் கூறியது.)**

[1] பரதஶ்ரேஷ்டரே! ருக்மிணியின் புத்திரன் யாதவர்களை நோக்கி இவ்விதம் சொல்லிக் கவசம் பூண்ட குதிரைகளுடன் கூடிய பொற்றேரை அடைந்து, திறந்தவாயுள்ளதும் அலங்கரிக்கப்பட்டதுமான மகரக்கொடியை உயர்த்தி, ஆகாயத்தின்மேல் பறப்பனபோன்ற அதிக பலமுள்ள அந்தக் குதிரைகளுடன் பகைவர்களை நெருங்கினான். உயர்ந்த வில்லைச் சுழற்றிக்கொண்டும், மிக்க பலசாலிகளைப் பார்த்துக் காஜிக்கச் செய்துகொண்டும், தூணீரம் கத்தி இவைகளைத்

1 வேறுபாடம்.

திரித்துக்கொண்டும், உடும்புத் தோலாலாகிய விரலுறையை அணிந்துகொண்டும், மின்னல் அசைவுக்கொப்பான வில்லை ஒருகையிலிருந்து மற்றொரு கையில் வாங்கி விளையாடிக்கொண்டும், சூரனான ப்ரத்யும்னன் ஸௌபத்தில் வஸிக்கும் எல்லா அஸுரர்களையும் மோஹிக்கச் செய்தான். வில்லை இழுக்கிறவனும் அடிக்கடி (பாணங்களைத்) தொடுக்கிறவனும் போரில் பகைவர்களைக் கொல்லுகிறவனுமான அவனுடைய (அச்செயல்களில்) இடைநேரத்தை ஒருவரும் பார்க்கவில்லை. அவனுடைய முகத்தின் நிறம் வேறுபடவில்லை. அவனுடைய அங்கங்களும் அசையவில்லை. ஸிம்ஹத்திற்கு மேலாயிருக்கும்படி [1] கர்ஜிக்கும் அவனுடைய சிறந்த ஆச்சரியமான வீர்யத்தை உலகம் செவியுற்றது. ஜலத்தில் ஸஞ்சரிப்பதும் ஸேனா ஸ்தம்பத்திலிருப்பதும் திறக்கப்பட்ட வாயுள்ளதும் சத்ருவின் பலத்தை அழிக்கக் கூடியதும் ஸால்வனின் சேனாமுகத்தில் பயத்தை விளைவிக்கக் கூடியதுமான சிறந்த மகரக்கொடியானது சிறந்த தேரில் பிரகாசித்தது. அரசரே! பிறகு, சத்ருவைக்கொல்லுகிற ப்ரத்யும்னன், வேகமாய்க் கிளம்பிச் சண்டைசெய்ய விரும்பி ஸால்வனையே எதிர்த்துச் சென்றான். குருகுலச்ரேஷ்டரே! பெரிய யுத்தத்தில் வீரனான ப்ரத்யும்னன் எதிர்த்து வந்ததை மிக்க கோபங்கொண்ட ஸால்வன் பொறுக்கவில்லை. பகைவரது பட்டணத்தை ஜயிப்பவனும் கோபத்தாலும் மதத்தாலும் கொழுத்தவனுமான அந்த ஸால்வன், இஷ்டப்படி செல்லுகிற (ஸௌபத்திலிருந்து) இறங்கி ப்ரத்யும்னனுடன் யுத்தம் செய்தான். ஸால்வனுக்கும் வ்ருஷ்ணிகளுள் சிறந்த வீரனான ப்ரத்யும்னனுக்கும், மஹாபலிக்கும் இந்திரனுக்கும் நேர்ந்ததுபோல, நேர்ந்த மிக நெருக்கமான யுத்தத்தை (அங்குக்) கூடிய ஜனங்கள் பார்த்தார்கள். ஓ! வீரரே! அவனுடைய மாயாமயமான ரதமானது தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டதும் கொடிமரத்துடன் கூடியதும் கொடியாடையுடன் கூடியதும் கீழுள்ள கட்டையுடன் கூடியதும் பாணப்பையுடன் கூடியதுமாக இருந்தது. ஓ! பிரபுவே! மிக்க பலமுள்ளவனும் காந்தியுள்ளவனுமான அவன் அந்தச் சிறந்த ரதத்திலேறிக்கொண்டு ப்ரத்யும்னனைக் குறித்துப் பாணங்களை எய்தான். பிறகு, ப்ரத்யும்னன் புஜவேகத்தால் ஸால்வனை நன்கு மோஹிக்கச் செய்துகொண்டு யுத்தத்தில் அம்புமழையை வேகமாகப் பெய்தான். அந்த ஸௌபராஜன் அவைகளால் யுத்தத்தில் அடிக்கப்பட்டுப் பொறுக்கவில்லை; எரியும் அக்னிக்கொப்பான அம்புகளை என் புத்திரன்மேல் விட்டான். மிக்கவலிமையுள்ள

1 கர்ஜனத்தைக் கேட்டு ஸிம்ஹத்தையும் பரிதபிக்கும்படி என்பது கருத்து.

அந்த ப்ரதயும்னன் அந்தப் பாணகூட்டத்தை வெட்டினான். பிறகு, பிரகாசிக்கும வேறு அம்புகளை என் புதரனிடததில் பிரயோகம் செய்தான். ராஜேந்திரரே! அந்த ருக்மிணிபுததிரன, ஸாலவன் பாணஙகளால் அடிக்கப்பட்டு யுததததில வேகததையடைந்து மர்மத தைப் பிளக்கும் பாணததைவிட்டான். என் புததிரனால் விடப்பட்ட சிறகுள்ள அந்தப் பாணமானது அவனது கவசததை உடைதது வேகமாக மார்பில நுழைநதது. அவன மிகவும அடிபட்டு விழுந்தான். அந்த வீரனான ஸால்வராஜன அறிவற்று விழுந்தவுடன், சிறந்த அஸுராகள பூமியைப் பிளககின்றவாகளாக வேகமாக ஓடினார்கள். ஓ! அரசரே! அப்பொழுது, ஸௌபபதியான அரசன அறிவற்று விழுந்தவுடன, அவனுடைய சேனையானது, 'ஆ! ஆ!' என்று அலறுவதாயிற்று. அரசரே! மஹா பலமுள்ள (ஸால்வன்) பிறகு, பிரஜ்ஞையையடைந்து எழுந்து பிரதயுமனனை நோககி வேகமாக அமபுகளை விட்டான். யுததததில நிற்கிற பிரதயும்னன் அப்பொழுது பெரிய அந்தப பாணததால கழுததெலும்பில மிகவும அடிக்கப்பட்டுத துன்பததை அடைநதவனாகக் காணபபட்டான. மஹாராஜரே! அந்த ஸால்வன் அந்த ருக்மிணி புததிரனை அடுதது ஒலியால பூமியை நிரம் பச் செயகிறவனாகிச சிஙகநாததைதச் செய்தான். பாரதரே! பிறகு, கெட்ட மனமுள்ள அவன், மோகததையடைந்த என் புதரன்மீது வேகம்கொண்டு திரும்பவும் வேறு பாணங்களை விட்டான். கௌரவ ஶ்ரேஷ்டரே! அந்தப் பிரத்யுமனன போர்க்களததில் அந்த அதிகமான அம்புகளால அடிககப்பட்டு அதனால் மோகஙகொண்டு (கைகால்) அசைவற்றவனானான்.

---

பதினெட்டாவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(பிரத்யும்னன் மயங்க, ஸாரதி அவனை வேறிடம் கொண்டு சென்றதும், அவன் களைதெளிந்து ஸாரதியிடம் வருந்திக் கூறியதும்.)

பலமுள்ளவர்களுள் சிறந்த அந்தப் பிரதயுமனன், ஸால்வனுடைய பாணங்களால் பீடிக்கப்பட்டவுடன், சேனாமுகததிலுள்ள

கிறவனைக் கொல்லுகிறவனும், ஸ்திரீயையும் பாலனையும் கிழவனையும் தோற்றவனையும் தலைமயிரவிழ்ந்தவனையும் சஸ்திரமும் ஆயுதமும் ஒடிந்தவனையும் கொல்லுகிறவனும் வ்ருஷ்ணிகுலத்தில் பிறந்தவரல்லர். நீயும் ஸூத குலத்தில் பிறந்தவன்; தேரோட்டுவதில் ஞானத்தை அடைந்தவன்; யுத்தங்களில் வ்ருஷ்ணிகளின் வழக்கத்தை அறிந்தவனாகவுமிருக்கிறாய். போர்முனையில் வ்ருஷ்ணிகளின் செயலை முழுமையும் அறிந்த அப்படிப்பட்ட நீ, இவ்விதம் விலக்ஷ செயலைதை எக்காரணம் பற்றியும் திரும்பவும் செய்யாதே. பின்வாங்கினவனும் மூர்ச்சையடிக்கப்பட்டவனும் மயக்கத்தை அடைந்தவனும் யுத்தத்திலிருந்து ஓடினவனுமான என்னை, நெருங்கமுடியாதவரும் கர்த்தனுக்குத் தமையனுருமான மாதவர் என்ன சொல்லுவார்? கேசவருக்கு முன்னுண்டானவரும் நீலவஸ்திரமுள்ளவரும் மிக்க மதமுள்ளவரும் பெரிய தோளுள்ளவருமான பலதேவரும் வந்து சேர்ந்தால் என்ன சொல்வார்? ஓ! ஸூத! யுத்தத்தில் சிங்கம்போன்றவனும் மஹாரதனும் சினியின் பேரனுமான ஸாத்யகியும் சண்டையில் ஜயிப்பவனான ஸாம்பனும் யுத்தத்திலிருந்து பின்வாங்கின (என்னை) என்ன சொல்லுவார்? ஸாரதியே! ஜயிக்கமுடியாத சாருதேஷ்ணனும் கதனும் ஸாரணனும் மஹாபாஹுவான அக்ரூரனும் என்னை என்ன சொல்லுவர்? சூரனும் நன்குமதிக்கப்பட்டவனும் சாந்தனும் எப்பொழுதும் ஆண்மையிற் சிறந்தவனென்ற செருக்குள்ளவனுமான என்னை வ்ருஷ்ணி வீரர்களின் மனைவியர் ஒன்றுசேர்ந்து என்ன சொல்லுவார்கள்? 'இந்தப் ப்ரத்யும்னன் பயந்து பெரிய சண்டையை விட்டு வருகின்றான். இவனை நிந்திக்கவேண்டும்' என்று சொல்வார்கள்; 'நன்கு செய்தான்' என்று சொல்லார். ஓ! ஸூதபுத்திர! எனக்கோ என்னைப்போன்றவனுக்கோ, 'நிந்திக்கத்தக்கது' என்ற வார்த்தையால் செய்யும் பரிகாஸமும் மரணத்தைவிட அதிகமானது. அப்படிப்பட்ட நீ திரும்பவும் பின்போகாதே. மதுவைக்கொன்ற ஹரியானவர் பாரத்தை என்னிடம்வைத்துவிட்டுப் பரதஸ்ரேஷ்டருடைய யாகத்திற்குப் போயிருக்கிறார். இப்பொழுது நான் பொறுத்திருத்தல் கூடாது. ஓ! ஸூதகுமார! வெளிக்கிளம்பப்போகிற வீரரான க்ருதவர்மா, 'நான் ஸால்வனைத் தடுக்கப்போகின்றேன். நீர் நில்லும்' என்று என்னால் தடுக்கப்பட்டார். ஹ்ருதிகரின் புத்திரரான அவரும் என்னைப் புகழ்ந்துகொண்டே திரும்பினார். யுத்தத்தை விட்டு அந்த மஹாரதரை அடைந்து என்னசொல்வேன்? சங்க சக்ரகதாதாரியும் பகைவரால் மீறமுடியாதவரும் பெரிய கைகளுள்ள

தரும புருஷருடைய புண்டரீகாக்ஷனை நோக்கி என்ன சொல்வேன்? சாத்யகியையும் பலதேவனையும் என்னுடன் எப்பொழுதும் போட்டி போடுகின்ற மற்றுமுள்ள அந்தக விருஷ்ணிகளையும் நோக்கி நான் என்ன சொல்லுவேன்? ஓ! ஸௌதபுத்திர! இந்த யுத்தத்தைவிட்டு பாணங்களால் முதுகில் அடிபட்டவனும் ஸைந்யத்தையும் உன்னால் பின்கொண்டுபோகப்பட்டவனுமாகி எவ்விதத்திலும் உயிருடன் இரேன். தாருகநந்தன! மறுபடியும் தேருடன் சேனைமாந்த திரும்பு. ஆபத்துக்களிலும் எக்காரணமாயினும் இவ்வாறு பிறகும் செய்யாதே. ஓ! ஸௌதபுத்ர! நான் யுத்தத்திலிருந்து பயந்து முதுகில் பாணங்களால் அடிக்கப்பட்டு பின்வாங்குவதை மரணத்திலும் பெரிதாக நினைப்பேன். ஓ! ஸௌதபுத்ர! நான் பயத்தால் பீடிக்கப்பட்டுச் சண்டையைவிட்டு இழிவானவர்களைப்போலப் பின் வாங்கியதை நீ எக்காலத்திலாவது அறிந்திருக்கிறாயா? ஓ! தாருகபுத்திரனே! சண்டையை விட்டுவிடுவதற்கு நான் தக்கவனல்லேன். யுத்தத்தை மிக விரும்புகின்றவனாக அப்படிப்பட்ட நீ யுத்தம் நடக்கிற இடத்துக்குப் போவாய்' என்றான்.

---

## பத்தொன்பதாவது அத்யாயம்.

# அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(ஸால்வன் ப்ரத்யும்னனால் தோல்வியடைந்து திரும்பிச் சென்றது.)

ஓ! கௌந்தேயனே! இவ்விதம் சொல்லக்கேட்ட ஸௌதபுத்திரன், பிறகு, யுத்தவிஷயத்தில் ப்ரத்யும்னனை நோக்கிச் சாதுரியமானதும் இனியதுமான வாக்கியத்தை உடனே சொல்லலானான். 'ஓ! ருக்மிணி குமாரா! குதிரைகளை ஓட்டுகின்ற எனக்கு யுத்தத்தில் பயமில்லை. விருஷ்ணிகளுடைய யுத்தங்களை அறிந்தவனாகவும் இருக்கின்றேன். இவ்விஷயத்தில் இவ்வாறன்றி வேறுவிதம் செய்யத்தக்கதன்று. ஓ! ஆயுஷ்மானே! தேரோட்டுங் காரியத்திலிருக்கிறவர்களுக்கு எல்லாக் காரியங்களிலும் தேராளியைக் காப்பது முக்கியமென்பது உபதேசமாகக் கருதப்பட்டது. நீயும் மிகவும் பீடிக்கப்பட்டிருக்கிறாய். ஓ! வீர! நீயோ ஸால்வனால் பிரயோகிக்கப்பட்ட

பாணத்தால் மிகவும் அடிக்கப்பட்டாய். குழப்பங்கொண்ட நான் அங்கிருந்தும் வேறிடம்போனேன். ஸாத்வதர்களுட் சிறந்தவனே! கேசவநந்தன! அப்படிப்பட்ட நீ இப்பொழுது தற்செயலாக அறிவை அடைந்தாய். குதிரையோட்டுவதில் என்னுடைய பயிற்சியைப்பார். தாருகனுலுண்டானவனும் முறைப்படியே கற்பிக்கப்பட்டவனுமான நான் பயமற்றவனாக ஸால்வனுடைய பெரிதான இந்தச் சேனையில் பிரவேசிக்கின்றேன்' என்றான்.

இவ்விதம் சொல்லிய பிறகு, வீரனான ஸாரதி, அப்பொழுது, குதிரைகளைக் கடிவாளங்களால் இழுத்துத்தூண்டி வேகமாகப் போரில் எதிர்த்துச் சென்றான். அரசரே! சவுக்கினால் அடிக்கப்பட்டவை களும் கடிவாளங்களால் இழுக்கப்பட்டவைகளுமான அந்தச் சிறந்த குதிரைகள் ஸமமானவைகளும் ஏற்றத் தாழ்வானவைகளுமான நானாவித மண்டலகதிகளையும் பலவிதமான வலசாரி இடசாரிகளையும் எல்லாவிதத்தாலும் (செய்துகொண்டு) ஆகாயத்தில் தாவுவனபோல விளங்கின. ஓ! அரசரே! அப்பொழுது அவைகள் தாருக புத்திரனைக் கைதேர்ந்தவனென்று அறிந்து, (அவனால்) உயரத் தூக்கப்படு வனபோலக் கால்களால் பூமியைத் தொடவில்லை. பரதஸ்ரேஷ்டரே! அவன் சிறு முயற்சியாலேயே அந்த ஸால்வனுடைய சேனையை இட மாகச் சுற்றிவந்தான். அது ஆச்சரியமாயிருந்தது. யுத்தத்தில் பயங் கரனான ஸால்வன், இடமாக வந்ததைப்பொறாமல் ப்ரத்யும்னனுடைய தேர்ப்பாகனை மூன்று பாணங்களால் சீக்கிரமாக நன்கு அடித்தான். ஓ! புஜபலமிக்கவரே! தாருகனுடைய புத்திரனோ, அந்தப் பாணவேகத்தை மதியாமல் மறுபடியும் இடப்பக்கமாகவே போனான். வீரரே! பிறகு, அந்த ஸௌபராஜன், பலவித பாணங்களை மறுபடியுமே ருக்மிணி புத் ரனான என்னுடைய மகன்மீது விடுத்தான். பகைவீரர்களைக் கொல் பவனான ருக்மிணியின் புத்திரன், புன்னகைசெய்து கைத்திறமையைக் காண்பித்துக்கொண்டு, அந்தப் பாணங்களைத் (தன்னிடம்) வருமுன் னரே கூர்மையான பாணங்களால் துண்டாக்கினான். ஸௌபராஜன் அந்த அம்புகள் ப்ரத்யும்னனால் அறுக்கப்பட்டதைக்கண்டு பயங்கர மான ஆஸுரமாயையை அடைந்து அம்புகளை எய்தான். பிரத்யும் னன், மஹாபலமுள்ள தைதேயாஸ்திரம் பிரயோகிக்கப்படுதலை அறி ந்து, பிரம்மாஸ்திரத்தினால் அதனை வரும் வழியிலேயே துண்டாக்கி வேறு பாணங்களை விட்டான். இரத்தத்தைக் குடிக்கும் அந்தப் பாணங்கள் அவனால் விடப்பட்ட (வேறு) அஸ்திரத்தைச் சீக்கிரம் தள்ளி (அவனைத்) தலையிலும் மார்பிலும் முகத்திலும் அடித்தன.

அவன் மயக்கத்தை அடைந்தான்; (கீழேயும்) விழுந்தான். அந்த அற்பனான ஸால்வன் பாணத்தால் நன்கு பீடிக்கப்பட்டு விழுந்தவுடன், பகைவரை வாட்டுகின்ற ருக்மிணிபுத்திரன் வேறு பாணத்தைத் தொடுத்தான். கூட்டமான ராசாஹரர்களாலும் அரிவாந்தகர்களால் பூஜிக்கப்பட்டதும், ஸூரியனுக்கும் அக்னிக்கும் ஒப்பான காந்தியுள்ளதும் நாணில் பூட்டப்படுகின்றதுமான அந்தப் பாணத்தைக் கண்டு அந்தரமானது 'ஆ! ஆ!' என்று கூவியுள்ளதாயிற்று.

பிறகு, இந்திரனுடனும் குபேரனுடனும் கூடின தேவக்கூட்டத்தாரனைவரும் நாரதரையும் மற்று வேகமுள்ள வாயுவையும் அனுப்பினார்கள். அவர்கள் ருக்மிணிபுத்திரனை அடைந்து, 'ஓ! வீர! ஸால்வராஜன் உன்னால் எவ்விதத்திலும் கொல்லத்தக்கவனல்லன். திரும்பவும் பாணத்தை இழுத்துக்கொள். யுத்தத்தில் உன்னால் இவன் கொல்லப்படான். இந்தப் பாணத்தினால் யுத்தத்தில் கொல்லத்தகாத மனிதன் ஓரிடத்திலுமில்லை. மிக்க புஜபலமுள்ளவனே! தேவகீபுத்திரனான கிருஷ்ணன் யுத்தத்தில் இவனுக்கு மரணத்தைச் செய்பவனென்று பிரமனால் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அது பொய்யாகாது' என்னும் தேவர்களின் வசனத்தைச் சொல்லினர். பிறகு, பிரத்யும்னன் மிக்க களிப்படைந்து, மேலான பாணத்தைச் சிறந்த வில்லிலிருந்து எடுத்து அம்புப்பெட்டியிலும் வைத்துவிட்டான். ஓ! ராஜேந்திரரே! பிரத்யும்னனது பாணத்தால் பீடிக்கப்பட்ட ஸால்வன் மிக்க மனவருத்தமுற்று எழுந்து சேனைகளுடன் அங்கிருந்து வேகமாக விலகிச் சென்றான். ஓ! ராஜேந்திரரே! விருஷ்ணிகளாற் பீடிக்கப்பெற்ற அந்த ஸால்வன் த்வாரகையை விட்டு ஸௌபத்தை அடைந்து அப்பொழுது ஆகாயத்தை அடைந்தான்.

## இருபதாவது அத்யாயம்.

# அர்ஜுனாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

### (மாதவர் தாம் ஸால்வனுடன் போர்செய்ததை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

அரசரே! உம்முடைய ராஜஸூயமென்னும் பெரிய யாகமானது முடிந்தவுடன், அங்கிருந்து, அப்பொழுது (அவனால்) விடப்பெற்ற ஆனர்த்தநகரத்தை நான் அடைந்தேன். ஓ! மஹாராஜரே! நான், த்வாரகையைக் காந்தியிழந்ததும் வேதாத்தியயனமும் வஷட்காரங்களும் அற்றதும் அணியிழந்த சிறந்த ஸதிரீகளுள்ளதுமாகக் கண்டேன். அறியமுடியாத (= சிதைக்கப்பட்ட) உருவமுள்ள த்வாரகையின் தோட்டங்களைக் கண்டு சங்கை அடைந்த நான், கிருதவர்மாவை நோக்கி, 'ஓ! ஆண்மையிற் சிறந்தவனே! இந்த விருஷ்ணிகளுடைய மாளிகையானது மிகவும் அமைதியற்ற ஆண் பெண்களுள்ளதா யிருக்கின்றது. இஃதென்ன? உண்மையாகக் கேட்க விரும்புகின்றேன்' என்று கேட்டேன். ஓ! அரசரிற் சிறந்தவரே! இவ்விதம் என்னால் வினவப்பட்டவனும் ஹ்ருதிகன்புத்திரனுமான அவனும், ஸால்வன் தகைந்ததும் விடுத்ததுமான இதனை விரிவாகச் சொல்லினன். ஓ! பரதஸ்ரேஷ்டரே! யாவற்றையும் மிச்சமின்றிக் கேட்ட பிறகு, ஸால்வராஜனுடைய நாசத்தில் நான் அப்பொழுதே புத்தியைச் செலுத்தினேன். ஓ! பரதஸ்ரேஷ்டரே! பிறகு, நான், பட்டணத்திலுள்ள ஜனங்களையும் தேறுதல்செய்து உக்கிரஸேன மஹாராஜரையும் ஆகுகனையும் வஸுதேவரையும் எல்லா விருஷ்ணி வீரர்களையும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு அப்பொழுது பேசினேன்.

'ஓ! யாதவஸ்ரேஷ்டர்களே! எப்பொழுதும் பட்டணத்தில் ஜாக்ரதையாக இருக்கவேண்டும். நான் ஸால்வராஜனைக் கொல்லுவதற்காகச் சென்றேனென்று அறியுங்கள். அவனைக் கொல்லாமல் த்வாரகா பட்டணத்தைக் குறித்துத் திரும்பேன். அவனை உள்ளிட்ட ஸௌப நகரத்தை நாசஞ்செய்து, திரும்பவும் உங்களைப் பார்ப்பேன். பகைவரைப் பயமூட்டும் இந்தத் துந்துபியானது (கீழ் மேல் நடு வென்ற) மூன்றுஸ்வரமுள்ளதாக அடிக்கப்படட்டும்' என்றேன். ஓ! பரதஸ்ரேஷ்டரே! அந்த வீரர்கள் எல்லாரும் என்னால் உள்ள

செய்தோம். பிறகு, ஸால்வன்பினவந்த வீரர்கள், சண்டையில், வணஙகின கணுககளுளள பாணஙகளுடைய நூறுயிரஙகளை என்னிடததில எறிந்தாாகள். மர்மஙகளைப பிளக்கினற அந்தபபாணங களால அந்த அஸுராாகள் குதிரைகளையும தேரையும தவஜததையும தாருகனையும் மறைததார்கள். ஓ! வீரரே! என்னுடைய சேனையிலுளளவர்களும நானும குதிரைகளும பாணஙகளால மூடப்படடுக காணபபடவிலலை கௌநதேயரே! பிறகு, நானும தேவர்களின முறையுடன ஜபிககபபட்ட பல பதினுயிரம பாணஙகளை விலலினுல் பிரயோகம செயதேன் ஓ! பாரதரே! அவவிடததில் என்னுடைய சேனைககு (ஒனறும்) புலபபடவிலலை. ஆகாயததிலிருககும் அந்த ஸௌபமானது ஒரு குரோச தூரததிலிருபபதுபோலக காணபபடடது. பிறகு, ஆகாயததையடைநது பார்ததுககொணடிருக்கும் எல்லாத தேவாகளும உரதத சிஙகநாததததாலும கையொலியினுலும எனனைச சநதோஷபபடுததினுர்களை. 1 என கைந நுனியினுல் விடபபட்டவைகளும் பலவிதமான புஙகஙகளையுடையவைகளுமான அமபுகள அஸுராாகளின அஙகஙகளில விடடிற் பூசசிகளபோல நுழைநதன. பிறகு, கூரிய கணைகளால ஸௌபமததியில அடிககப்படுகின்றவர்களும பெரிய கடலில் விழுகின்றவர்களுமாகிய இவாகளுடைய ஹலஹலவென்ற சபதமானது அதிகரிததது. அநத அஸுரர்கள தோள்களும் கழுததுக்களும அறுக்கபபட்டுத தலையிலலாத முண்டங்களின் வடிவமாகக காணபபடுகினறவாகளாகிப பயங்கரமாகக கததிககொணடு விழுநதார்கள. விழுநத அவர்களும், சமுததிரஜலததில வஸிபபவைகளால தின்னபபடடார்கள். பிறகு, நான் பசுவின பாலுககும முலலைப்பூவுக்கும் சநதிரனுக்கும தாமரைத தண்டுககும் வெள்ளிககும ஒபபான காந்தியுள்ள பாஞ்சஜனயமென்னும சஙகததை உரகக ஊதினேன்.

ஸௌபபதியான ஸால்வன், போரில் அந்தக்கடலில் விழுந்த அவர்களைககணடு, பிறகு, பெரிய கபடயுததத்தால் என்னுடன் சண்டைசெய்தான. பிறகு, கதாயுதஙகளும, கலபபைகளும், ப்ராஸங்களும, சூலஙகளும, சக்திகளும, கோடாலிகளும், கததிகளும, (முறையே ஸுப்ரம்மணயர், இந்திரன, வருணன, யமன் இவர்களின் ஆயுதங்களான) சக்தி குலிசம் பாசம் தண்டம இவற்றை ஒதத அமபுகளும், பட்டஸங்களும், புசுண்டிகளும என்னிடததில் எப்பொழுதும விழுந்தன. அந்த மாயையை நான் எற்று மாயை

1 வேறு பாடம.

யினாலேயே சீக்கிரமாக நாசஞ் செய்தேன். அந்த மாயை நாசஞ் செய்யப்பட்டவுடன், அவன் மலையின் கொடுமுடிகளால் யுத்தஞ் செய்தான். ஓ! பாரதரே! பிறகு, இருட்டுபோலவும் வெளிச்சம் போலவும் மேகத்தால் மறைந்த தினம்போலவும் மேகமில்லாத தினம் போலவும் தோன்றின. பாரதரே! குளிர்ச்சியும் உஷ்ணமும் நெருப்புமாரியும் புழுதிமழையும் ஆயுதமழையும் உண்டாயின. இவ்விதம், சத்ருவானவன் மாயையைச் செய்துகொண்டு என்னுடன் யுத்தஞ் செய்தான். அவை அனைத்தையும் நான் அறிந்துகொண்டு மாயையாலேயே நாசஞ் செய்தேன். காலங்கடவாமல் பாணங்களைக் கொண்டு சண்டையால் எல்லாவற்றையும் ஊதிவிட்டேன். ஓ! மஹாராஜரே! பிறகு, மாயையானது என்னுடைய யுத்தத்தில் அழிக்கப்பட்டவுடன், அஸுரன், புத்தியை மோஹிக்கச்செய்யும் வேறு மாயையைச் செய்தான். ஓ! மஹாராஜரே! கௌந்தேயரே! பிறகு, ஆகாயமானது நாலு ஸூரியனை உடையது போலவும் நாலு சந்திரனை உடையதுபோலவும் ஆயிரம் பதினாயிரம் நக்ஷத்திரங்களையுடையது போலவும் ஆயிற்று. பிறகு, அப்பொழுது, பகலும் ராத்திரியும் திக்குகளும் அறியப்படவில்லை. நான் மோகத்தையடைந்தேன், பிறகு, ப்ரஜ்ஞாஸ்த்ரத்தைப் பிரயோகஞ் செய்தேன். அவனுடைய அஸ்திரமானது என் அஸ்திரத்தால் காற்றுப் பஞ்சுபோலச் சிதற அடிக்கப்பட்டு அழிந்தது. அப்படி அந்த நெருக்கமான சண்டையானது மயிர்க்கூச்சத்தை உண்டுபண்ணக் கூடியதாயிருந்தது. ஓ! ராஜேந்திரரே! மறுபடியும், வெளிச்சத்தை அடைந்து நின்றும் பகைவனுடன் யுத்தஞ் செய்தேன்.

---

## இருபத்தோராவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

---

(கோவிந்தருக்கும் ஸால்வனுக்கும் நடந்த யுத்தத்தில் ஸால்வன் மாயையால் வஸுதேவரை வெட்டிக் காட்டிக் கோவிந்தரை மயக்கியதும், அவர் அது மாயை என்றறிந்து மறுபடியும் சண்டை தொடங்கியதும்.)

இவ்விதம் ஆண்மையிற் சிறந்தவரே! அரசர்களுக்குப் பெரும் பகைவனான அந்த ஸால்வன், யுத்தத்தில் என்னுடன் சண்டை

செய்கிறதற்காகத திருமபவும ஆகாயததை அடைந்தான். ஓ! மஹாராஜரே! பிறகு, மநதபுததியுள்ள ஸாலவன், ஜயததை விரும பிககொணடு, பீரஙகிகளையும பிரகாசிககும் பெரிய கதைகளையும சூலஙகளையும் உலக்கைகளையும கததிகளையும கோபததால எனமேல எறிநதான. நான ஆகாயததிலிருநது வருகினற அவைகளை விரை வில விடபபடட பாணஙகளால ஆகாயததிலேயே சீககிரம தடுதது இரணடு மூனறாக வெட்டினேன. பிறகு, ஆகாயததில சப்தம உண் டாயிற்று. பினனர், அவன, வணங்கின கணுககளுளள நூறாயிரம பாணஙகளால தாருகனமீதும குதிரைகளமீதும் தேர்மீதும நனகு தூற்றினன.

ஓ! வீரரே! பிறகு, தாருகன், மயஙகினவன்போல என்னை நோககி, 'ஸாலவ பாணததால நன்கு பீடிககபபட்டேன. இருகக வேணடுமே எனறு இருககினறேன. என்னுடைய அஙகம மிகவும சோர்வை அடைகின்றது. இருப்பதறகுச் சக்தியற்றிருககினறேன்' எனறு சொனனன. இவ்விதம அநத ஸாரதியினுடைய தீனமான வார்ததையை நான கேடடு, அநத ஸாரதியை நன்கு பார்தது, அவன பாணஙகளால பீடிககபபட்டிருபபதாகக் கணடேன். பாணடவ ஶ்ரேஷடரே! அவனுடைய மார்பிலும தலையிலும சரீரததிலும் கை யிரணடிலும் அமபுகளாலநிரபபபபடாத இடததைக் காணவிலலை. மலையிலுண்டாகும் தாதுப்பொடியுள்ள மலையானது மேகஙகளால் பொழியப்பட்டு (ச் சிவநத ஜலததைப் பெருககுவது போல) அவன சிறநத பாணஙகளின் காயததிலிருந்து அதிகமான இரததத்தைப் பெருகவிடடான. நீணட கைகளை உடையவரே! கையில கடிவாள முளளவனும யுததததில ஸாலவ பாணததால் பீடிக்கபபடடவனும தளாசசி அடைநதவனுமான அந்த ஸாரதியைப் பார்ததுத தேறுதல் செயதேன. ஓ! பாரதரே! பிறகு, துவாரகையில் வஸிககின்றவ னும ஆஹுகனுடைய வேலைக்காரனுமான ஒரு மனிதன விரைபவ னுகி என தேரிலேறி நடபினலை சொல்வதுபோல வருததமுற்று என்னை நோககி அநத ஆஹுகனுடைய வார்ததையையே தழுதழுதத குரலுடன சொலலினன. வீரரே! யுதிஷ்டிரரே! அதனை அறிந்து கொளளும. (அவன,) 'துவாரகாதிபதியும் வீரருமான ஆஹுகர் உமககுச செய்தி சொனனர். ஓ! கேசவரே! வாரும. உமது பிதா வின தோழரான ஆஹுகர் உமககுச சொலலிய செய்தியை அறிந்து கொள்ளும. ஓ! வருஷ்ணி நந்தனரே! யாராலும் எதிர்க்க முடியாத வரே! நீர் (வேறு காரியததில) தலையிட்டிருக்கும்போது, துவார

கையை அடைந்து ஸால்வனால் வஸுதேவர் பலாத்காரமாய்க் கொல்லப்பட்டார். ஓ! ஜநார்த்தனரே! ஆகையால், சிறந்த யுத்தம் செய்தது போதும்; திரும்பிவிடும் துவாரகையையே காப்பாற்றும்; உமக்கு இது பெரிய காரியம்' என்றான்.

இவ்விதமான அவனுடைய வார்த்தையைக் கேட்டு, நான் மிக்க மனவருத்தமடைந்து செய்யத்தக்கதும் செய்யத்தகாததுமான காரியத்தின் நிச்சயத்தை அறியவில்லை. ஓ! வீரரே! அந்தப் பெரிய அப்பிரியத்தைக் கேட்டு, மனத்தினால் ஸாத்யகியையும் பலதேவரையும் மஹாரதனான ப்ரத்யும்னனையும் நிந்தித்தேன். ஓ! குருநந்தனரே! நானே துவாரகையின் பாதுகாவலையும், பிதாவின் ரக்ஷணத்தையும் அவர்களிடத்தில் வைத்து ஸௌபத்தைத் தள்ளும் விஷயத்தில் சென்றேன். பின்னை பெரிய புயமுள்ளவரும் பகைவரைக் கொல்லுபவருமான பலதேவரும், ஸாத்யகியும், ப்ரத்யும்னனும் வீரியமுள்ள சாருதேஷ்ணனும் ஸாம்பன் முதலானோரும் உயிருடனிருக்கின்றார்களா (இல்லையா) என்று நான் மிக்க மனவருத்தமுள்ளவனானேன். ஓ! மனிதரிற் சிறந்தவரே! இவர்கள் உயிருடனிருக்கும்போது, வஸுதேவரை, நேரில் வந்த இந்திரனும் எப்பாடுபட்டும் கொல்ல முடியாது. வஸுதேவர் நிச்சயமாகக் கொல்லப்பட்டால் பலதேவர் முதலிய இவர்கள் யாவரும் நிச்சயமாக உயிரை இழந்தார்கள் என்பது என்னுடைய உறுதியான எண்ணம். ஓ! மஹாராஜரே! அந்த எல்லோருடைய நாசத்தையும் அடிக்கடி எண்ணிக்கொண்டு கலங்காமல் திரும்பவும் ஸால்வனுடன் யுத்தம் செய்தேன். ஓ! வீரரே! மஹாராஜரே! அப்பொழுது, அந்த ஸௌபத்தினின்று விழுகின்ற வஸுதேவரை நான் பார்த்தேன். பிறகு, என்னை மோகம் அடைந்தது. ஓ! பார்த்திபரே! விழுகின்ற என்னுடைய அந்தப் பிதாவினது ரூபமானது, புண்ணியமற்றவனாக ஸ்வர்க்கத்தினின்று பூதலத்தைக் குறித்து விழுகின்ற யயாதியினுடைய ரூபம்போல (இருந்தது). அவிழ்ந்துபோனதும் அழுக்கடைந்ததுமான தலைப்பாகையும் அவிழ்ந்த உடையும் தலைமயிருமுடையவராக விழுகின்ற அவர் புண்ணியமற்ற கிரகம்போலக் காணப்பட்டார். ஓ! கௌந்தேயரே! பிறகு, வில்களில் சிறந்த சார்ங்கமானது என்னுடைய கையிலிருந்து நழுவிற்று. நானும் மோகத்தை அடைந்தவனாகித் தேரின் தட்டில் உட்கார்ந்தேன். ஓ! பாரதரே! நினைவுதவறித் தேரிலுள்ளவர்களும் என்னை உயிரிழந்தவனைப்போலப் பார்த்தது, பிறகு, என்னுடைய சேனை முழுதும் 'ஆ! ஆ!' என்று அலறியது. கைகளை நீட்டிக்கொண்டும் கால்களை

நீட்டிக்கொண்டும் விழுகின்ற என் பிதாவின் ரூபமானது, விழுகின்ற பக்ஷியினுடைய ரூபம்போல் விளங்கிற்று.

தோள்வலியமைந்தவரே! வீரரே! சூலத்தையும் பட்டஸத்தையும் கையில் ஏந்தியவர்கள், விழுகின்ற அவரை மிகவும் அடிக்கின்றவர்களாகி என்னுடையமனத்தையும் கலக்கினார்கள். பிறகு, நான், அப்பொழுது, ஒரு முஹூர்த்தநேரத்தில் நினைவையடைந்து, அந்தப் பெரிய சண்டையில் ஸௌபத்தையும் பார்க்கவில்லை; பகைவனை ஸால்வனையும் பார்க்கவில்லை. வயது முதிர்ந்த பிதாவையும் பார்க்கவில்லை. பிறகு, இது மாயையென்ற நிச்சயம் என் மனத்தில் உண்டாயிற்று. பிறகு, மிக்கமனத்தெளிவை அடைந்தேன்; திரும்பவும், நூற்றுக்கணக்கான பாணங்களை இறைத்தேன்.

---

## இருபத்திரண்டாவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

**(கோவிந்தர் ஸால்வவதத்தைக்கூறி ஸுபத்ரையையும் அபிமன்யுவையும், திருஷ்டத்யும்னன் திரௌபதி புத்திரர்களையும், திருஷ்டகேது தன் தங்கையான நகுலன் மனைவியையும் அழைத்துக்கொண்டு தம் தம் ஊருக்குச் சென்றது)**

ஓ! பரதஶ்ரேஷ்டரே! பிறகு, நான், அழகிய வில்லைத்தாங்கி, பாணங்களால் ஸௌபத்திலிருந்து அஸுரர்களுடைய தலைகளை வீழ்த்தினேன். பாம்புக்கொப்பான சரீரமுள்ளவையும் உயரப் போகக்கூடியவையும் மிக்க கூர்மையுள்ளவையும் நல்ல கணுக்களுள்ளவையும் வில்லிலிருந்து விடுபட்டவையுமான பாணங்களை ஸால்வராஜனைக் குறித்துப் பிரயோகம் செய்தேன். ஓ! குருகுலத்தை வகிப்பவரே! அப்பொழுது, பிறகு, ஸௌபம் காணப்படவில்லை. மாயையால் மறைந்ததாயிற்று. பிறகு, நான் ஆச்சரியமடைந்தவனானேன். ஓ! மஹாராஜரே! பாரதரே! நான் தைர்யத்துடன்

நிற்கும்போது, அந்த அஸுரக்கூட்டத்தினர் விகாரமான முகமும் கலைமயிருமுள்ளவர்களாகி உரக்கச் சப்தம் செய்தார்கள். பிறகு, பெரிய சண்டையில் சப்தத்தைக் குறிவைத்து அடிக்கும் அஸ்திரத்தை வேகமுள்ளவனாகி அவர்களைத் தொலைக்கவேண்டிப் பிரயோகம் செய்தேன். பிறகு, சப்தம் ஓய்ந்தது. அந்தச் சப்தத்தை உண்டுபண்ணின அந்த அஸுரர்கள் யாவரும், சப்தத்தையே குறியாகவுடையவையும் பிரகாசிக்கின்றவையும் ஸூரியனுக்கொப்பானவையுமான பாணங்களால் கொல்லப்பட்டார்கள். ஓ! மஹாராஜரே! அந்தச் சப்தம் ஓய்ந்தவுடன், மறுபடியும், மற்றோரிடத்தில் வேறு சப்தம் உண்டாயிற்று. அங்கும் பாணங்களால் அடித்தேன். ஓ! பாரதரே! இவ்விதம் பத்துத் திக்குகள் முழுமையும் குறுக்கிலும் மேலும் அஸுரர்கள் சப்தம் செய்தார்கள். அவர்களும் என்னால் கொல்லப்பட்டார்கள். ஓ! வீரரே! எனதுடைய கண்களை மயக்கிக்கொண்டு இஷ்டப்படி செல்லும் ஸௌபமென்னும் ஆகாசத்து ப்ராக்ஜ்யோதிஷம் என்னும் பட்டணத்தை அடைந்து மறுபடியும் காணப்பட்டது. பிறகு, லோகங்களுக்கு நாசத்தைச் செய்யும் பயங்கரமான சரீரமுள்ள அஸுரன் பெரிய கல்மாரியால் சீக்கிரமாக என்னை மூடினான். ஓ! ராஜேந்திரரே! அப்படிப்பட்ட நான் கல்மழையால் நான்கு பக்கத்திலும் பீடிக்கப்பட்டு மலைகளால் மறைக்கப்பட்ட கறையானபுற்றுப்போல இருந்தேன். பிறகு, [1]நான் குதிரைகளுடனும் தேர்ப்பாகனுடனும் கொடிமரத்துடனும் மலைகளால் மறைக்கப்பட்டுப் (பிறரால்) பார்க்க முடியாமையை அடைந்தேன். பிறகு, அப்பொழுது எனது சேனையை அடைந்தவர்களான விருஷ்ணிச்ரேஷ்டர்கள் யாவரும் பயத்தால் பீடிக்கப்பட்டுத் திக்குகளை நோக்கி விரைந்து ஓடினார்கள். ஓ! அரசரே! பிறகு, அவ்விதம் நான் காணப்படாதபொழுது ஸ்வர்க்கம் பூமி ஆகாயம் யாவும், 'ஆ! ஆ!' என்னும் ஒலியுள்ளதாயிற்று. ஓ! மன்னரே! பிறகு, என்னுடைய நேயர்களான ஜனங்கள் மனத்தளர்ச்சியுற்றுத் துக்கமும் சோகமும் அடைந்து அழுது கூக்குரலிட்டார்கள். பகைவர்களுக்குச் சந்தோஷமும் ஸ்நேகிதர்களுக்குத் துக்கமும் உண்டாயின. ஓ! தவறுதலில்லாதவரே! வீரரே! இவ்விதம் (சால்வன் என்னை) ஜயித்தானென்பதைப் பிறகு (ஸாரதியிடமிருந்து) கேட்டேன். பிறகு, நான் இந்திரனுக்குப் பிரியமானதும் எல்லாக் கற்களையும் தொலைக்கக் கூடியதுமான வஜ்ரா

---

1 ஒரு மொழி விடப்பட்டது.

யுத்தத்தை உயரத்தூக்கிக்கொண்டு அந்த எல்லாப் பர்வதங்களையும் நாசம் செய்தேன். ஓ! மஹாராஜரே! பிறகு, பர்வதங்களின் பாரத்தால் பீடிக்கப்பட்டு உயிரும் செயலும் ஒடுங்கினவைகளான என்னுடைய குதிரைகள் நடுங்குகின்றவைபோல ஆயின. ஆகாயத்தில் மேகக் கூட்டத்தை விலக்கி வெளிவந்த சூரியனைப்போல(க் கற்குவியலிலிருந்து) வெளிவந்த என்னைப் பந்துக்கள் யாவரும் பார்த்துத் திரும்பவும் சந்தோஷத்தை அடைந்தார்கள். பிறகு, பர்வதங்களின் பாரத்தால் பீடிக்கப்பட்டவையும் உயிரும் செயலும் ஒடுங்கினவையுமான குதிரைகளைக் கண்டு ஸூதன் என்னைக் குறித்து அக்காலத்திற்குரிய வார்த்தையைச் சொல்லலானான்.

'வ்ருஷ்ணி குலத்தில் பிறந்தவரே! நிற்கின்ற ஸௌபபதியான ஸால்வனை நன்கு பாரும். கோவிந்தரே! இவனை அலக்ஷியம் செய்தது போதும். நன்கு முயற்சியைச் செய்யும். ஓ! மிக்க புஜபல முள்ளவரே! கேசவரே! ஸால்வனிடம் மெதுவாயிருத்தலையும் [1] தாக்ஷிண்யத்தையும் இப்பொழுதே விலக்கிவிடும். இவனை நாசம் செய்யும். இவனை உயிருடன் விடாதீர். ஓ! பகைவரைக் கொல்லுகின்ற வீரரே! பகைவனை எல்லாவித பராக்கிரமத்தாலும் கொல்ல வேண்டும். பலசாலியானவன், பகைவன் பலமற்றவனா யிருந்தாலும் தனது காலடியி லிருந்தாலும் மதிக்கத் தகாதவனா யிருந்தாலும் அவனை அலக்ஷியம் செய்யலாகாது; சண்டையி லிருப்பானாயின் சொல்லவும் வேண்டுமா? ஓ! புருஷப் புலியே! வ்ருஷ்ணி குல ச்ரேஷ்டரே! பிரபுவே! அப்படிப்பட்ட நீர் இவனை எல்லா முயற்சிகளாலும் கொல்லும். நீர் திரும்பவும் காலதாமதம் செய்யவேண்டாம். கோடிக் கணக்கான மிகப் பல வருஷங்களில் [2] பரசுராமனை ஜயித்த இவன் மற்றவரால் கொல்லப்படத் தகாதவனன்றோ? உம்மைத் தவிர (வேறு) ஒருவரும் (இவனைக் கொல்லக் கூடியவர்) இல்லை. ஓ! வீரரே! உம்மை அடித்தவனும் த்வாரகையை அழித்தவனுமான இவன் மெதுவாக ஜயிக்கப்படத் தக்கவனென்று எண்ணப்படவில்லை; உமக்குச் சிநேகிதனுமல்லன்' என்றான்.

ஓ! கௌந்தேயரே! இது முதலிய ஸாரதியின் வார்த்தையைக் கேட்டு, நான் இது உண்மையென்று அறிந்து, சண்டையில் ஸால்வராஜனைக் கொல்லுவதற்கும் ஸௌபத்தைத் தள்ளுவதற்கும் புத்தியை உறுதிப்படுத்தினேன். வீரரே! தாருகனை, 'ஒரு முகூர்த்தம் பொறு' என்றும் சொன்னேன். பிறகு, தடுக்கப்படாததும் திவ்ய

1 'ஸகித்வம்' என்பது மூலம். 2 ஸபாபர்வம், 159-ம் பக்கத்தில் காண்க.

மானதும் பிளக்க முடியாததும் மிக்க வீர்யமுள்ளதும் அதிக காந்தியுள்ளதும் யாவரையும் கொல்லக்கூடியதும் விருப்பமானதும் யுத்தத்தில் அஸுர நாசம் செய்யக் கூடியதுமான ஆக்நேயாஸ்திரத்தை அப்பொழுது வில்லுடன் சேர்த்தேன். யுத்தத்தில், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், அஸுரர்கள், மிலேச்ச அரசர்கள் இவர்களைச் சாம்பலாக்கக் கூடியதும் பெரிதும் கூர்மையான முனையுள்ளதும் காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானதும் பளபளப்பானதும் குற்றமற்றதும் ஒப்பற்றதும் பகைவர்களை நாசமாக்கக் கூடியதுமான சக்ரத்தை, நான் ஜபம்செய்து, 'எவர்கள் இப்பொழுது எனது சத்ருக்களோ அவர்களையும், ஸௌபத்தையும் உன்னுடைய வீர்யத்தால் நாசம் செய்' என்று சொல்லித் தோள்வலிமையால் அவனைக் குறித்துக் கோபத்துடன் பிரயோகம் செய்தேன். அப்பொழுது, ஆகாயத்தில் போகின்ற ஸுதர்சனத்தினுடைய உருவமானது யுகமுடிவில் மிக்க எரிகின்ற இரண்டாவது ஸூரியனுக்கொப்பாக இருந்தது. அது காந்தியற்ற ஸௌபநகரத்தை அடைந்து, வாளானது உயரத்தில் வைக்கப்பட்ட கட்டையைப் பிளப்பதுபோல் நடுவாகப் பிளந்துவிட்டது. பிறகு, ஸுதர்சனத்தின் பலத்தால் அடிக்கப்பட்ட ஸௌபமானது, இரண்டாகச் செய்யப்பட்டு, மஹேச்வர பாணத்தால் அடிக்கப்பட்ட திரிபுரம்போல் விழுந்தது. அந்த ஸௌபமானது விழுந்தவுடன், சக்கரமானது எனது கையை அடைந்தது. திரும்பவும் வேகத்துடன் எடுத்து, 'ஸால்வனின் பொருட்டுச் செல்' என்று நான் சொன்னேன். அது பெரிய யுத்தத்தில் பெரிய கதையைச் சுற்றி அடிக்கின்ற ஸால்வனைச் சீக்கிரமாக இரண்டாகச் செய்து தேஜஸுடன் பிரகாசித்தது. அவ் வீரன் கொல்லப்பட்டவுடன், அஸுரர்கள், மனத்தில் பயமடைந்து, எனது பாணங்களால் பீடிக்கப்பட்டு, 'ஆ! ஆ!' என்று சொல்லிக்கொண்டு திக்குக்களை நோக்கிச் சென்றார்கள். பிறகு, நான் ஸௌபத்தின் அருகில் தேரை நிறுத்திச் சந்தோஷத்துடன் சங்கத்தை ஊதி ஸிநேகிதர்களைச் சந்தோஷப்படுத்தினேன். மேருவின் கொடுமுடிக்கு ஒப்பானதும் நாசம்பண்ணப்பெற்ற உப்பரிகைகளும் கோபுரங்களும் உள்ளதுமான அந்த ஸௌபம் எரிக்கப்படுவதைப் பார்த்து அந்த ஸ்திரீகள் நன்கு ஓட்டம் பிடித்தார்கள். இவ்விதம் யுத்தத்தில் ஸௌபத்தைக் கவிழ்த்து ஸால்வனைக் கொன்று [1] ஆநர்த்த தேசத்துக்குத் திரும்பிவந்து ஸிநே

1 'ஆநர்த்தம்' என்று பாடம் கொள்ளப்பட்டது.

கிதர்களுக்குச் சந்தோஷத்தை உண்டுபண்ணினேன். ஓ! அரசரே! ஆகையால், இந்தக் காரணம்பற்றி அஸ்தினபட்டணத்தை நான் அடையவில்லை. ஓ! பகைவர்களைக் கொல்பவரே! வந்திருப்பேனா கில, துரியோதனன் உயிருடனிருக்கமாட்டான். ஓ! வீரரே! அல்லது, யான் வந்திருந்தால் அவ்விதம் சூது நடந்திராது. இப்பொழுது நான் என்ன செய்வேன்? உடைந்த அணையானது ஜலத்தைத் தடுக்க முடியாதன்றோ?' என்றார்.

பெரிய கையுள்ளவரும் புருஷோத்தமரும் நித்திய ஸ்ரீயுடன் கூடியவருமான கேசவர் இவ்விதம் தர்மபுத்திரரை நோக்கிச் சொல்லிவிட்டு, பாண்டவர்களிடம் அனுமதிபெற்றுப் புறப்பட்டார். பெரிய கைகளுள்ள அந்தக் கோவிந்தர் தர்மராஜரான யுதிஷ்டிரரை நமஸ்கரித்து அரசரான அவராலும் பீமனாலும் உச்சியில் முகரப்பட்டும் அர்ஜுனனால் ஆலிங்கனம் செய்யப்பட்டும் இரட்டையரால் நமஸ்கரிக்கப்பட்டும் தௌம்யரால் நன்குமதிக்கப்பெற்றும் திரௌபதியினால் கண்ணீருடன் பூஜிக்கப்பெற்றும் பாண்டவர்களால் பூஜிக்கப்பட்டும் ஸுபத்திரையையும் அபிமன்யுவையும் பொன்மயமான தேரில் ஏற்றிக் கொண்டு தாமும் அதில் ஏறினார். அவர் தர்மபுத்திரரைச் சமாதானப் படுத்தி, ஸூரியனுக்கு ஒப்பான காந்தியுள்ளதும் சைப்யம் ஸுக்ரீவம் என்னும் குதிரைகள் பூட்டப்பெற்றதுமான தேருடன் த்வாரகையைக்குறித்துச் சென்றார். அவர் போனபிறகு, பார்ஷதனான த்ருஷ்டத்யும்னனும், திரௌபதியின் புத்திரர்களை அழைத்துக் கொண்டு, அப்பொழுது தன் பட்டணத்தைக்குறித்துச் சென்றான். பிறகு, சேதிராஜனான த்ருஷ்டகேதுவும் பாண்டவர்களைப்பார்த்து விட்டு, [1] ஸஹோதரியை அழைத்துக்கொண்டு அழகிய சுக்திமதி என்ற பட்டணத்தைக் குறித்துச் சென்றான். ஓ! பாரதரே! அந்தக் [2] கேகயர்களும், அளவற்ற காந்தியுள்ள தர்மபுத்திரரால் விடை அளிக்கப்பெற்று, எல்லாப் பாண்டவர்களிடமும் சொல்லிக்கொண்டு போனார்கள். பிராமணர்களும் வைசியர்களும் மற்றும் தம் தேசத்தில் வசிப்பவர்களும் நன்கு அனுப்பப்பட்டவர்களாயிருந்தாலும் பாண்டவர்களை விடவில்லை. ஓ! ராஜேந்திரரே! பரதரிற் சிறந்தவரே! காம்யக வனத்தில் அந்த மஹாத்மாக்களின் கூட்டமானது மிக்க ஆச்சரிய

---

1 'நகுலனின் மனைவி, கரேணுமதி என்று பெயருள்ளவள்' என்பது பழையவுரை. இப்பெயர் ரேணுமதி என்றும் வழங்கும்.

2 'இவர்கள் ஸஹதேவன் மைத்துனர்கள்' என்பது பழையவுரை.

மான காட்சியுள்ளதாக இருந்தது. பெரியமனமுள்ள தர்மபுத்ரரும், அந்தப் பிராம்மணர்களிடம் அனுமதிபெற்று, உரிய காலத்தில், 'ரதங்களைப் பூட்டுங்கள்' என்று ஆட்களை உத்தரவு செய்தார்.

---

## இருபத்துமூன்றாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(மாதவர் முதலியோர் திரும்பிச் சென்றபின் யுதிஷ்டிரர் நகர ஜனங்களைத் தேற்றி அனுப்பியது.)

அந்த யாதவபதியான மாதவர் போனவுடன், பரமசிவனுக்கு ஒப்பான காந்தியுள்ள வீரர்களான யுதிஷ்டிரரும் பீமஸேனனும் அர்ஜுனனும் இரட்டையரும் திரௌபதியும் புரோஹிதரும், நிஷ்க மென்னும் பொன்னாணயங்களையும் வஸ்திரங்களையும் கோக்களையும் சிறந்த [illegible] ஆகிய இவற்றை அர்த்திகளுக்குக் கொடுத்து, ஒன்றுசேர்ந்து, சிறந்த குதிரைகளுடன் கூடின மிக்க விலையுள்ள தேர்களிலேறிக் காட்டைநோக்கிப் புறப்பட்டார்கள். 1 இருபது வேலைக்காரர்களும் (மற்ற) யாவரும் முன்னாலே ஆயுதம் பிடித்தவர்களாகி (பாண்டவர்களுடைய) விற்களையும் அஸ்திரங்களையும் பிரகாசிக்கின்ற 2 சரங்களையும் நாண் கயிறுகளையும் யந்திரங்களையும் 3 ஸாயகங்களையும் எடுத்துக்கொண்டு தொடர்ந்து சென்றார்கள். பிறகு, வெளிவித்தாயர்களும் வேலைக்காரிகளும் ராஜபத்னியுடைய ஆடைகளையும் ஆபரணங்களையும் எடுத்துக்கொண்டு தொடர்ந்து சென்றார்கள். இந்திரஸேனன் வேகத்துடன் கூடியவனாகி ஸ்த்ரீகளை அழைத்துக்கொண்டு தேருடன் தொடர்ந்துபோனான். பிறகு, பெரிய மனமுள்ள பட்டணத்து ஜனங்கள் தர்மபுத்திரனை அடைந்து பிரதக்ஷிணம் செய்தார்கள்; தெளிவுள்ள பிராம்மணர்களும் குருஜாங்கல தேசத்தார்களுள் முக்யமான யாவரும் அந்த யுதிஷ்டிரரிடம் விடை கேட்டுக் கொண்டார்கள். அப்பொழுது, அரசரும் பெரியமனமுள்ளவருமான அந்த தர்மராஜர் தெளிவுள்ளவராகித் தம்பிகளுடன் சேர்ந்தே அவர்களுக்கு விடையளித்தார்; குருஜாங்கல தேசத்தின் ஜனக்கூட்டத்தைப் பார்த்துக்கொண்டு சிறிது நின்றார். கௌரவர்களில் சிறந்தவரும் மஹாத்மாவுமான அவர், பிதா

---

1 பலர் என்றும் பொருளுண்டு. 2, 3 - அம்பின் வகை.

புத்திரர்களிடத்தில் ஸ்நேகத்தைச் செய்வதுபோல, அவர்களிடத்தில ஸ்நேகத்தைச செய்தார். அவர்களும பரதஶ்ரேஷ்டரான அவரிடத்தில புத்திரர்கள பிதாவினிடத்திலிருப்பதுபோல இருந்தார்கள. பிறகு, மகாஜனக கூட்டத்தினர் குருக்களுள சிறந்த வீரரான அவரை நெருங்கிச சூழ்ந்துகொண்டு இருந்தார்கள். யாவரும், 'ஆ! நாத! ஆ! தர்ம!' என்று சொல்லுகிறவர்களும[1]வெட்கத்தை அடைந்தவர்களும கண்ணீருடனகூடிய முகமுள்ளவர்களுமானார்கள். 'குருக்களுள் சிறந்தவரும பரஜைகளுக்கு அரசருமான தர்மராஜர், பிதா புத்திரர்களை விடுவதுபோலப பட்டணத்திலுள்ளவர்களும தேசத்திலுள்ளவர்களுமான இந்த நம்மனைவரையும விட்டு எங்குச் செல்லுகிறார்? ஓ! நரேந்திரரே! கொடியவர்களும், பாவிகளும், தர்மமே என்றும இருப்பதென்று கருதும் உமக்குக் கெடுதலை விரும்புகின்றவர்களுமான சிறிதும இரக்கமற்றபுத்தியுள்ள துரியோதனனையும பாவத்தில புத்தியுள்ள சகுனியையும கர்ணனையும நிந்திக்க வேண்டும். மஹாத்மாவும வீண்போகாத செய்கையுள்ளவருமான தர்மராஜா தாம சிவனுடைய புரத்திற்கு ஒப்பானதும் ஒப்பற்றதுமான இந்திரப்ரஸ்தமென்ற பட்டணத்தை அமைத்து அதனை விட்டுவிட்டு எங்கேயோ செல்லுகிறாரே? தேவஸபைபோல விளங்குவதும ஒப்பற்றதும மஹாத்மாவான மயன செய்ததும் தேவர்களால காப்பாற்றப்பட்ட தேவமாயை போன்றதுமான ஸபையைவிட்டுத தர்மராஜா எங்குச செல்லுகிறார்?' என்றார்கள.

அறம பொருள இன்பங்களை அறிந்தவனும் சிறந்த பராக்ரமமுள்ளவனுமான அர்ஜுனன், கூடியிருக்கிற அவர்களை நோக்கி, உரக்கச சொல்லலானான 'அரசர் இந்த வாஸத்தைக் காடுகளில கழித்துப் பகைவர்களின கீர்த்திகளை (தத்தம) கவர்ந்துகொள்ளப்போகிறார். பிராமமணஶ்ரேஷ்டர்களே! நீங்கள், சேர்ந்தும் தனித்தும் இருக்கிறவர்களும அறம பொருளகளை அறிந்தவர்களுமான தவசிகளை அடைந்து அருளவரச் செய்து எங்களுடைய மேலான விருப்பம் நிறைவேறும்படி பரார்த்திக்கவேண்டும்' என்றான். ஓ! அரசனே! இவ்விதம், அர்ஜுனனால வார்த்தை சொல்லப்பட்டவுடன், அந்தப் பிராம்மணர்களும் மற்ற எல்லாஜாதியார்களும் சந்தோஷத்துடன் அங்கீகரித்தார்கள்; தர்மத்தைச செய்கிறவர்களுள் சிறந்த தர்மபுத்ரரை ஒன்று சேர்ந்து பிரதக்ஷிணம செய்தார்கள். தர்மபுத்ரரை

---

1 'கெட்ட அரசனது ஆளுகையிலிருக்க நேர்கிறதென்ற கவலையால வெட்கம' என்பது பழையவுரை.

யும் பீமனையும் அர்ஜுனனையும் திரௌபதியையும் இரட்டையர்களையும் கேட்டுக்கொண்டு ஸந்தோஷமுற்றவர்களாயும் தர்மபுத்திரரால் விடைகொடுக்கப்பட்டவர்களாயும் தம் தம் ராஜ்யத்தைக் குறித்துப் புறப்பட்டார்கள்.

---

## இருபத்து நான்காவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்கள் நெடுநாள் வஸிக்க நிச்சயித்துத் துவைதவனஞ் சென்றது.)

பிறகு, அவர்கள் போனவுடன், குந்தியின் புத்திரரும் ஸத்யபரான ப்ரதிஜ்ஞையுள்ளவரும் தர்மத்தில் மனமுள்ளவருமான யுதிஷ்டிரர், எல்லாச் சகோதரர்களையும் பார்த்துச் சொல்லலானார்: 'ஜனமில்லாத வனத்தில் இந்தப் பன்னிரண்டு வருஷம் நாம் வஸிக்கவேண்டும். பெரியகாட்டில் இந்தப் பன்னிரண்டு வருஷமும் நாம் ஸுகமாக வஸிக்கக்கூடியதும் அநேக மான்களும் பக்ஷிகளும் உள்ளதும் பல வகை மலர்களும் கனிகளும் உள்ளதும் அழகியதும் புண்ணியமானதும் புண்ணியசாலிகளுக்குத் தக்கதுமான இடத்தைப் பாருங்கள்' என்றார்.

இவ்விதம் சொல்லப்பட்டவுடன், அர்ஜுனன், நல்ல மனமுள்ளவரும் மனிதர்களுக்குட் சிறந்தவருமான தர்மபுத்திரரைக் குருவைப் போலப் பூஜித்து விடைகூறினான்; 'நீர் மஹரிஷிகளையும் பெரியோர்களையும் உபாஸித்தவர். மனிதலோகத்தில் உமக்கு அறியப்படாதது ஒன்றுமில்லை. உம்மாலே ஸர்வதா வேதத்தின் தன்மையை அறிந்தவர்களான வியாஸர் முதலிய அந்தணர்களும், மிக்க வல்லமையுள்ள புலன்களை அடக்கினவரும் தேவலோகத்திலிருந்து பிரம்மலோகம், கந்தர்வ அப்ஸரஸ்களுடைய லோகம் ஆகிய எல்லா லோகங்களிலும் எப்பொழுதும் ஸஞ்சரிக்கின்றவருமான நாரதரும் உபாஸிக்கப்படுகின்றீர்கள். ஓ! ராஜேந்த்ர! பிராம்மணர்களுடைய அபிப்ராயங்களையும் அறிவீர். ஸந்தேகமில்லை. எல்லாருடைய சக்திகளையும் நீர் அறிவீர். ஓ! ராஜேந்த்ர! நன்மைக்குக் காரணத்தையும் நீர் அறிவீர். ஓ! மஹாராஜனே! எந்த இடத்தில் வாஸஞ்செய்ய விரும்புகின்றீரோ அந்த

இடத்தில் (வாஸம்) செய்கின்றோம். இந்த த்வைதவனம் என்னும் தடாகமோ புண்ணிய ஜனங்களால் வஸிக்கப்பட்டதும் அதிக புஷ்பமும் பழமுமுள்ளதும் பலவிதமான பக்ஷிகளுள்ளதும் அழகியதுமாக இருக்கின்றது. அரசரே! உமக்கு இஷ்டமானால், இந்த இடத்தில் இந்தப் பன்னிரண்டு வருஷங்களையும் இனிதாகக் கழிப்போமென்று விரும்புகிறேன். நீர் வேறு எதை நினைக்கின்றீர்?' என்றான். யுதிஷ்டிரர், 'ஓ! பார்த்த! உன்னால் எது சொல்லப்பட்டதோ அது எனக்கும் இஷ்டமே. புண்ணியத்தால் பிரசித்திபெற்ற [1] த்வைதவனமென்னும் பெரிய தடாகத்தைக் குறித்துச் செல்வோம்' என்றார்.

பிறகு, தர்மானுஷ்டானம் செய்யும் அந்த எல்லாப் பாண்டவர்களும் அநேகம் பிராம்மணர்களுடன்கூட த்வைதவனமென்னும் புண்ணியமான தடாகத்தைக் குறித்துச் சென்றார்கள். அக்னிஹோத்திரத்துடன் கூடிய பிராம்மணர்களும் அப்படியே அக்னியில்லாதவர்களும் வேதாத்யயனம் செய்யும் பிரம்மசாரிகளும் ஸந்நியாஸிகளும் வானப்ரஸ்தர்களும் தபஸ்விகளும் மெய்பேசுவதையே இயற்கையாயுடையவர்களும் கடுமையான விரதமுள்ளவர்களுமான அநேகம் பிராம்மணர்களும் அங்கே யுதிஷ்டிரரை நூற்றுக்கணக்காக வளைந்துகொண்டார்கள். பரதஶ்ரேஷ்டர்களான அந்தப் பாண்டவர்கள் அநேகம் பிராம்மணர்களுடன் அவ்விடத்தில் போய்ப் புண்ணியமானதும் அழகியதுமான த்வைதவனத்தை அடைந்தார்கள். வர்ஷா காலத்தில் புஷ்பங்களைத் தரித்துக்கொண்டிருக்கும் ஸாலம், பனை, மா, இலுப்பை, அடம்பு, கடம்பு, ஸர்ஜம், மருது, கோங்கு என்னும் மரங்களோடு கூடிய அந்தப் பெரியவனத்தை அரசர் பார்த்தார். அந்தக் காட்டில் மயில், நீர்க்கோழி, சகோரம் ஆகிய இவைகளின் கூட்டங்களும் மயில்களும் குயில்களும் பெரிய மரங்களின் உச்சிகளில் மனத்தை மகிழ்விக்கும் குரலுடன் கூவிக்கொண்டிருந்தன. அதிக மதமுள்ளவைகளும், மலைபோன்றவைகளும், பெண்யானைகளின் கூட்டங்களுடன் கூடியவைகளும், கூட்டங்களுக்குத் தலைமையானவைகளுமான பெரிய யானைகளின் பெரிய கூட்டங்களை அவ்

---

1 'த்வைதவனம்' என்பது ஒரு தடாகம் என்றும், அதனை உடைய இடத்துக்கும் 'த்வைதவனம்' என்று பெயருண்டென்றும் தெரிகிறது. த்வி = சோகமோகங்களாகிய இரண்டு, இதா = போய்விட்டன; அது த்வீதம்; த்வீதம் என்பது த்வைதம் என்றாயிற்று. வனம் = ஜலம், த்வைதமான ஜலமிருப்பது; அதாவது, அந்தத் தடாகம்.

வனத்தில் அரசர் பார்த்தார்; அழகிய ஸரஸ்வதிநதியை அடைந்து, பரிசுத்த மனமுள்ளவர்களும் மரவுரியையும் ஜடையையும் தரிப்பவர்களுமான தர்மம் செய்பவர்களுக்கு இருப்பிடமான அவ்வனத்தில் விருத்திபெற்ற அனேகக் கூட்டங்களைப் பார்த்தார். பிறகு, தர்மத்தில் மனமுள்ளவர்களுள் சிறந்தவரான அந்த அரசர், தேரிலிருந்து இறங்கி, தம்பிமார்களோடும் ஜனங்களோடும், அளவற்ற சக்தியுள்ள இந்திரன் ஸ்வர்க்கத்தை அடைவதுபோல, அந்தக் காட்டை அடைந்தார். ஸத்தியஸந்தரான அவரை ஸித்தசாரணக் கூட்டத்தினரும் பார்க்க விருப்பமுள்ளவராக ஒன்று சேர்ந்து வந்தார்கள். நல்ல மனமுள்ளவரும் அரசருள் சிங்கம் போன்றவருமான அவரைக் காட்டில் வசிப்பவர்களும் சூழ்ந்து நின்றார்கள். தர்மம் செய்பவர்களுள் சிறந்தவரான அவர் எல்லாப் பெரியோர்களையும் வணங்கித் தேவர் போலவும் அரசர் போலவும் பிரதிமரியாதை செய்யப்பெற்று எல்லாப் பிராமணசிரேஷ்டர்களோடும் கூடக் கைகூப்பிக்கொண்டு அவ்விடத்தில் புகுந்தார். தம் பிதாவைப்போலப் புண்ணியசீலமுள்ளவரும் மஹாத்மாவுமான அந்த அரசர், தர்மத்தில் முயன்றவர்களான தவசிகளால் அருகில்வந்து பூஜிக்கப்பெற்றவராகப் புஷ்பமுள்ள பெரிய மரத்தின் அடியில் உட்கார்ந்தார். பரதச்ரேஷ்டர்களான பீமனும் அர்ஜுனனும் இரட்டையரும் திரௌபதியும் அந்த வேலைக்காரருமான யாவரும், வாகனங்களைவிட்டு (அரசருக்கு) அடங்கினவர்களாகி அவ்விடத்தில் நின்றார்கள். கொடிகள் படர்ந்திருத்தலால் வளைந்திருக்கிற அந்தப் பெரியமரமானது, வனத்தை அடைந்தவர்களும் மஹாத்மாக்களும் வில்லாளிகளுமான பாண்டவர்களால் யானைக்கூட்டத்தின் தலைமையானைகளால் பெரிய மலை விளங்குவதுபோல விளங்குகிறது.

---

## இருபத்தைந்தாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(மார்க்கண்டேயர் பாண்டவர்களிடம் வந்து தர்மோபதேசம் செய்து வடக்கே சென்றது.)

அந்தக் காட்டை அடைந்து, ஸுகமடையத் தகுந்தவர்களான ராஜபுத்திரர்கள், கஷ்டமான வாஸத்தை அடைந்து, மங்கள

கரமான அந்த ஸரஸ்வதீநதியின ஸாலமரக்காடுகளில் இந்திரனுக்கு ஒப்பானவர்களாக பரீதியுடன் வஸிததார்கள். குருஸ்ரேஷ்டரும் மஹாநுபாவருமான அந்த அரசர் அவ்வனததில் அதிகமான கனி கிழஙகுகளால் முனிவர்களும துறவிகளும பிராம்மண ஸ்ரேஷ்டர்களு மான யாவரையும திருப்திஅடைவித்தார். அநதப் பெரிய வனத திலவஸிககினற பாண்டவர்களான அரசர்களுக்கு நிரம்பின தவ மகிமையுள்ள புரோகிதரான தௌமயர் தநதைபோல இஷ்டிகளேயும் பிதிருக்களேக குறிதத கர்மங்களேயும செயதார். ராஜயததிலிருந்து விலகி (வனததில) வஸிக்கின்ற [1] ஸ்ரீமான்களான அந்தப பாணடவர் களுக்கு மிக நிறைந்த தேஜஸ்ஸுள்ளவரும புராதனருமான மார்க்கண் டேய ரிஷியானவா அதிதியாக அநத ஆஸ்ரமததைக குறிததது வந் தார். ஜ்வலிககினற நெருப்புக்கொபபான காந்தியுள்ளவரும தேவர் களாலும ரிஷிகளாலும் மனிதர்களாலும் பூஜிக்கப பெற்றவரும் (அங்கே) வந்தவருமான அந்த மஹா முனிவரை ஒபபற்ற பலமும வீர்யமுமுள்ளவரும் பெரியமனமுள்ளவரும குருகுல ஸ்ரேஷ்டரு மான யுதிஷ்டிரா பூஜை செய்தார். அளவற்ற தேஜஸ்ஸுள்ளவரும் யாவும அறிந்தவரும மஹாதமாவுமான அம்முனிவர், மனவருதத மடைந்த த்ரௌபதியையும தர்மபுததிரரையும பீமஸேனனேயும் அர்ஜுனனேயும் பாாததது மனததினுல ஸ்ரீராமரை நினேததுக்கொணடு தவஸிகளின நடுவில் சிரிததாா.

தர்மபுததிரர், மனந்தளர்ந்து, 'இந்த எல்லாத தவஸிகளும் ஸங் கோசததுடனிருக்கின்றார்கள். நீர், தவஸிகள பார்ததுககொண்டிருக் குமபொழுது, எனனேப்பார்தது மகிழ்ந்து சிரிககிறீா. இது என்ன?' எனறு அவரைக் கேட்டார். மார்க்கண்டேயர், 'ஐய! நான் ஸந்தோ ஷப்படவுமில்லை; சிரிக்கவுமிலலை; களிபபினுலுணடான கொழுபபும் என்னே அடையவில்லை. ஆனுல், இப்பொழுது உனனுடைய ஆபத தைப் பார்தது ஸதயமான வ்ரதமுள்ள தசரத புததிரரான ராமரை நினேக்கினறேன். பார்ததனே! அரசரான அவரும (உன்னேப்போ லவே) தநதையின் கட்டளேப்படி வில்லேந்தி (த தம்பியான) லக்ஷ் மணனுடன் காட்டில வாஸததைச் செய்பவராகி முன்பு ரிஸ்யமூக பர்வததின் தாழவரையில் என்னுலேயே பார்க்கப்பட்டார். இந் திரனுக்கொப்பானவரும் பெரிய மனமுள்ளவரும் யமனே அடக்குகிற வரும் நமுசியைக்கொன்றவரும குற்றமற்றவருமான (அந்த) ராமர்

[1] 'ஸ்ரீமானகள = சோபையுடையவாகள.' 'வனததில வஸிககையிலும சோபை குறையாதவாகள்' என்பது.

பிதாவின் கட்டளையினால் காட்டில் சஞ்சரித்துக்கொண்டு தமது தர்மத்தைச் செய்தார். இந்திரனுக்கு ஒப்பான வலிமையுள்ளவரும் மஹானுபாவரும் யுத்தங்களில் ஜயிக்க முடியாதவருமான அந்த (ராமரும்) ஸுகங்களை விட்டுக் காடுகளில் சஞ்சரித்தார். அதனால், 'நான் மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக் கூடாது. குருநந்தன! நாபாகன் பகீரதன் முதலிய அரசர்களும் கடலை முடிவாகவுடைய இந்தப் பூமியை ஜயித்துச் சத்தியத்தாலேயே நல்ல லோகங்களை ஜயித்தார்கள். 'மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக் கூடாது. ஓ! நரச்ரேஷ்டனே! காசி கருசங்களுக்கு அரசனும் பெரியோனுமான அலர்க்கனை, ராஜ்யங்களையும் பொருள்களையும் இழந்தபோதும், விரதம் தவறாமலிருந்தவனென்று சொல்லுகிறார்கள். 'மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக்கூடாது. ஓ! நரச்ரேஷ்டனே! பிரமாவினால் முந்தின வேதவாக்யங்களினால் விதிக்கப்பட்டதை ஸாதுக்களான ஸப்தரிஷிகள் கௌரவித்துக்கொண்டு ஆகாயத்தில் விளங்குகின்றார்கள். 'மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக்கூடாது. ஓ! நரச்ரேஷ்டனே! அரசனே! அதிக பலமுள்ளவையும் மலைகளின் கொடுமுடிகளுக்கு ஒப்பானவையும் தந்தங்களுள்ளவையுமான யானைகளும் ஈசனது கட்டளையிலிருப்பதைப் பார். 'மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக்கூடாது. ஓ! நரேந்திர! அப்படியே, எல்லாப் பிராணிகளையும் பார். ஈசனால் கட்டளையிடப்பட்டபடி தமது ஜாதிக்கேற்றவாறு எப்பொழுதும் செய்கையைச் செய்கின்றன. 'மிக்க வலிமையுள்ளவன்' என்று அதர்மத்தைச் செய்யக்கூடாது. ஓ! பார்த்த! சத்தியத்தாலும் தர்மத்தாலும் தகுந்த நடையினாலும் வெட்கத்தாலும் உனது புகழும் தேஜஸும், ஒளியையே பொருளாகவுடைய ஸூர்யனது காந்தி போல, எல்லாப் பிராணிகளையும் மிஞ்சினவையாக விளங்குகின்றன. ஓ! மஹானுபாவா! அரசனே! பிரதிஜ்ஞை செய்தபடி காட்டில் கஷ்டமான இந்த வாசத்தைச் செய்து, பிறகு, விளங்கும் (ராஜ்ய) லக்ஷ்மியைக் கௌரவர்களிடமிருந்து, அந்தத் தேஜஸால் அடையப்போகிறாய்' என்றார். அந்த மஹரிஷியானவர் தபஸிகளின் நடுவில் சிநேகிதர்களுடன் கூடிய அவரை (நோக்கி) இவ்விதம் வார்த்தை சொல்லிவிட்டுத் தௌம்யரையும் கூடினவர்களான பார்த்தர்களையும் கேட்டுக்கொண்டு அங்கிருந்து வடக்குத் திக்கை நோக்கிப் புறப்பட்டார்.

## இருபத்தாறுவது அத்யாயம்.

# அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(தால்பியர், க்ஷத்திரியரின் வளர்ச்சிக்குப் பிராம்மணர் காரண மென்பதை யுதிஷ்டிரருக்குச் சொல்லியதும், மஹரிஷிகள் யுதிஷ்டிரரிடம் வந்ததும்.)

த்வைதவனத்தில் மஹாத்மாக்களான பாண்டவர்கள் வஸிக்கும் போது, (அந்தப்) பெரிய காடானது பிராம்மணர்களால் நிரம்பப் பெற்றதாயிற்று. எப்பொழுதும் எங்கும் சொல்லப்படுகின்ற வேத கோஷத்தால் புண்ணியமான த்வைதவனமென்னும் தடாகமானது பிரம்மலோகத்திற்கு ஒப்பானதாயிற்று. நான்கு பக்கங்களிலும் சொல்லப்படுகின்ற யஜுஸ், ரிக்கு, ஸாமம், [1] ப்ராம்மணம் இவற்றினுடைய சப்தமானது மனத்திற்கினியதாக இருந்தது. பார்த்தர்களுடைய நாணொலியும் புத்திமான்களான பிராம்மணர்களின் வேத கோஷமும் மனத்துக்கு இனியவையாயிருந்தன. பிராம்மணருடன் சேர்ந்த க்ஷத்திரியஜாதியும் மிகவும் விளங்கிற்று. பிறகு, தால்ப்ய குடும்பத்தைச் சேர்ந்த [2] பகரென்பவர் (ஸந்தியையைப்) பூஜித்து உட்கார்ந்தவரும், ரிஷிகளால் சூழப்பட்டவரும், குந்தியின் புத்திரரும், தர்மராஜருமான யுதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லலானார்.

'ஓ! குருஸ்ரேஷ்டரே! ஓ! பார்த்தரே! த்வைதவனத்தில் தவசிகளான பிராம்மணர்களுடைய அக்னி நன்கு ஜ்வலிக்கின்ற ஹோம வேளையைப் பாரும். இந்தப் புண்யவனத்தில் ப்ருகுவம்சத்தினரும் அங்கிரஸ் வம்சத்தினரும் வஸிஷ்டவம்சத்தினரும் கச்யபவம்சத்தினரும் மிக்கபாக்யசாலிகளான அகஸ்தியவம்சத்தவரும் சிறந்த விரதமுள்ள அத்ரிவம்சத்தவர்களும், உலகமுழுமையிலும் சிறந்தவர்களுமான பிராம்மணர்கள் உம்முடன் சேர்ந்து உம்மால் காக்கப்பட்டுத் தர்மங்களைச் செய்கிறார்கள். ஓ! கௌரவரே! பார்த்தரே! கௌந்தேயரே! உம்மை நோக்கிச் சொல்லப்போகிற என்னுடைய இந்த வார்த்தையை ஒருவழிப்பட்ட மனத்தோடு தம்பிகளுடன் கேளும். க்ஷத்திரியஜாதியுடன் கூடிய பிராம்மணஜாதியும் பிராம்மணஜாதி

---

1 'கத்யா நாம' என்பது மூலம்; 'ப்ராம்மணம்' என்பது பழைய உரை. பாதம் அக்ஷரம் இவற்றின் வரையறையின்றி இருப்பது ப்ராம்மணம்.

2 இவர் தால்ப்யருடைய ப்ராதா என்று தெரிகிறது.

யுடன் கூடிய க்ஷத்திரிய ஜாதியும் கிளம்பி, வனங்களை நெருப்பும் காற்றும் எரிப்பதுபோலப் பகைவர்களை எரிக்கும். இவ்வுலகத்தையும் அவ்வுலகத்தையும் ஜயிக்க விரும்பினவன் நெடுங்காலம் பிராம்மணனோடு சேர்ந்திராதவனாக இருக்க விரும்பக்கூடாது. அரசன் அறம் பொருள்களையறிந்தவனும் கலக்கமற்றவனுமான பிராம்மணனை அடைந்து பகைவர்களைக் கொல்லுகின்றான். பிராம்மணர்களைக் காப்பதால் செய்யப்படும் மோக்ஷத்திற்கு ஹேதுவான நாமத்தைப் பெறுகின்ற பலியானவன், பிராம்மணனை விட வேறு சிறந்த உபாயத்தை உலகில் அறியவில்லை. பிராம்மணரின் சேர்க்கையால் பூமியை அடைந்து அஸுரனான பலிச்சக்கரவர்த்திக்குச் செல்வம் குறைவற்றதாயிருந்தது. வேண்டிய வஸ்துக்களால் குறைவில்லாமையும் இருந்தது. (அவன்) அந்தப் பிராம்மணர்களிடத்தில் கெடுதலைச் செய்து, பிறகு நாசத்தை அடைந்தான். ஸ்ரீயையுடன்கூடின இந்தப் பூமியானது, பிராம்மணரோடில்லாத இப்படிப்பட்டவனான (க்ஷத்திரியனை) நெடுங்காலம் அடைந்திராது. நீதிகளைக் கற்றவனும் பிராம்மணனால் கட்டளையிடப்படுகின்றவனுமான அரசனுக்கு உலகம் வசமாகுகின்றது. அணையில் கட்டப்பட்டதான யானையினுடைய பலம் குறைவதுபோலப் பிராம்மணனுடைய சேர்த்தியற்ற க்ஷத்திரியனுடைய பலமானது குறைவடைகின்றது. பிராம்மணனுடைய பார்வையானது ஒப்பற்றது; க்ஷத்திரியனுடைய பலம் ஒப்பற்றது. அவ்விரண்டும் சேர்ந்து ஒருசேர்க்கும்போது உலகம் செழிப்பையடைகிறது. நெருப்பானது காற்றுடன் கூடி மிகப் பெரிதாகிப் புதரை எரிப்பதுபோல, க்ஷத்திரியன் பிராம்மணனுடன்கூடிப் பகைவனை எரிக்கின்றான். அடையாததை அடைவதற்கும் அடைந்ததை விருத்திசெய்வதற்கும் ஆலோசனையைப் பிராம்மணர்களிடத்திலேயே செய்ய வேண்டும். அடையப்படாததை அடைவதற்கும், கிடைத்ததை விருத்திசெய்வதற்கும், தக்க பாத்திரத்தில் தானம் செய்வதற்கும் கீர்த்தியுள்ளவனும் வேதார்த்தங்களையும் பார்த்தவனும் பலநூல்களைக் கற்றவனுமான பிராம்மணனையே (தன்னிடத்தில்) வசிக்கச்செய்ய வேண்டும். ஓ! யுதிஷ்டிரரே! எப்பொழுதும் உமக்குப் பிராம்மணர்களிடத்தில் உத்தமமான பக்தியிருக்கின்றது. அதனால், உமது கீர்த்தியானது எல்லா உலகங்களிலும் பிரசித்தமாக விளங்குகின்றது’ என்றார். பிறகு, அந்தப் பிராம்மணர்கள் யாவரும் தால்ப்யனான பகனைப் பூஜித்தார்கள்; யுதிஷ்டிரர் ஸ்தோத்திரம் பண்ணப்படும்போது, மிக்க மகிழ்ச்சியுற்றவரானார்கள். த்வைபாயனர், நாரதர்,

ஜாமதக்கியர், ப்ருதுஸ்ரவஸ, இந்திரதயுமனர், பாலுகி, கிருதசேதஸ, ஸஹஸ்ரபாத, கர்ணஸ்ரவஸ, முஞ்சர், லவணாஸ்வா, காஸ்யபா, ஹாரீதா, ஸ்தூணகாணர், அகனிவேஸ்யா, சௌனகா, க்ருதவாக, ஸுவாக, பருஹதஸ்வர், விபாவஸு, ஊர்தவரேதஸ், வருஷாமிதரா, ஸுஹோதரா, ஹோதரவாஹனர் ஆகிய இவர்களும மற்றும கடுமையான விரதமுள்ள அனேக பிராமமணர்களும இந்திரனை ரிஷிகள பூஜிப்பதுபோலத் தாமபுத்திரரைப பூஜிததார்கள.

---

இருபத்தேழாவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(திரௌபதி பீமன்முதலியவருக்கு எதிரில் யுதிஷ்டிரரிடம் துயரத்தோடு முறையிட்டது.)

பிறகு, துககசோகஙகளுககு இருபபிடமானவர்களும் காட்டை அடைநதவர்களுமான பார்ததர்கள திரௌபதியுடன மாலைககாலத்தில உட்கார்ந்து கதைகளைச சொன்னார்கள. பிறகு, பிரியமானவளும் பார்ககததகுநதவளும கறறறிநதவளும பதிவிரதையுமான திரௌபதியானவள் தர்மபுததிரரை நோககிப பினவருமாறு வார்ததையைச் சொல்லினள.

'கெட்ட எணணமுள்ளவனும் குரூரனும் பாவியுமான அந்தத் துரியோதனனுககு நாம (கஷடப்படுமபோது) சிறிதளவேனும் துக்கமில்லை; நிச்சயம். ஓ! அரசரே! துஷ்டஸ்வபாவமுள்ளவனும் கெட்ட புததியுள்ளவனுமான அவன, தோலாடை உடுதத உம்மை என்னுடன் காட்டுக்கனுபபிய பினனும தாபததை அடையவில்லையே? தர்மபரரும் உயர்ந்தவருமான உம்மை அப்பொழுது ஸபையில் சொல்லக்கூடாத குரூரவார்ததைகளைக் கேட்கச் செய்தானே? பாவசசெய்கையுள்ள அவனுடைய மனமானது இருமபினாலானதே; நிச்சயம். கெட்ட மனமுள்ளவனும பாவியுமான அவன, நண்பர் கூட்டததுடன் கூடி, துக்கம் அடையத் தகாதவரும ஸுகமடையத் தக்கவருமான (உம்மை) இவ்வித துக்கததை அடையசசெய்து ஸந்தோஷிக்கின்றான். ஓ! பாரதரே! அரசரே! நீர் தோலை ஆடை

யாகக்கொண்டு காட்டிற்குக் கிளம்பினபோது பாவிஷ்டனான துரியோ
தனன், கர்ணன், கெட்ட எண்ணமுள்ள சகுனி, கெட்ட ஸ்நேகிதனும்
குரூரனுமான அந்தத் துச்சாஸனன் (ஆகிய இந்த) நாலுபேர்களுக்கு
மாத்திரமே அப்பொழுது கண்ணீர் விழவில்லை. ஓ! கௌரவரிற்
சிறந்தவரே! துக்கத்தால் முற்றும் சூழப்பட்ட மற்ற எல்லாக் கௌர
வர்களுடைய கண்களிலிருந்தும் ஜலம் விழுந்தது. ஓ! மகாராஜரே!
முன்னிருந்த உமது படுக்கையையும் இந்தப் படுக்கையையும் பார்த்
துத் துக்கத்திற்கு உசிதமில்லாதவரும் ஸுகத்திற்கு உரியவருமான
உம்மைக்குறித்துத் துக்கிக்கின்றேன். ஸபையின் நடுவிலிருந்தும்
தந்தத்தினால் செய்யப்பட்டதும் ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டது
மான ஆஸனத்தையும் இந்தக் குசாஸனத்தையும் பார்த்து இந்தச்
சோகம் என்னைப் பிளக்கின்றது. ஓ! அரசரே! ஸபையில் அரசர்
களால் சூழப்பட்ட உம்மைப்பார்த்தபடி, (இப்பொழுது) பார்த்தவளா
யிருக்கிற என்னுடைய மனத்திற்கு ஆறுதல் ஏது? ஓ! பாரதரே!
ஸூர்யனுக்கு ஒப்பான காந்தியுள்ளவரும் சந்தனத்தினால் பூசப்பெற்ற
வருமான உம்மைப்பார்த்த நான், சேற்றிலும் அழுக்கிலும் பூசப்
பட்ட உம்மைப்பார்த்து மயக்கத்தை அடைகின்றேன். ராஜேந்
திரரே! உம்மை முன்பு வெண்மையான பட்டாடைகளை அணிந்தவ
ராகப் பார்த்தவளான நான் இப்பொழுது மரவுரி தரித்தவராகப்
பார்க்கிறேன். அரசரே! பிரபுவே! முன்பு நல்ல பொருள்
களுள்ளதாகச் சமையல் செய்யப்பட்ட அன்னம் உம்முடைய
வீட்டிலிருந்து பொற்பாத்திரங்களால் அப்பொழுது ஆயிரக்கணக்
கான பிராம்மணர்களுக்குக் கொண்டுபோகப்பட்டதையும், ஸந்நி
யாஸிகளுக்கும் பிரம்மசாரிகளுக்கும் க்ருஹஸ்தர்களுக்கும் மிக்க
சுவையுள்ள ஆகாரம் உம்மால் கொடுக்கப்பட்டதையும், முந்தி, வீட்
டில் ஆயிரக்கணக்கானவர்கள் விரும்பிய எல்லாவற்றையும் கொடுத்த
வரை பூஜிக்கப்பட்டதையும், கௌரவம் மிக்கப் பெற்றதையும்
விரும்பப்படுகின்றவையான எல்லாப் பொருள்களாலும் திருப்தி
பண்ணப்பட்டதையும் (இப்பொழுது) பார்த்தவளாயிருக்கிற என்
னுடைய மனத்திற்கு ஆறுதல் ஏது? முந்தி மெய்யாகவே குண்ட
லங்களணிந்த யௌவனர்களான சமையற்காரர்கள், நன்று சமையல்
செய்யப்பட்ட உத்தமமான அன்னங்களால் உம்முடைய ஸேவகர்க
ளைப் போஷணம் செய்வித்தார்கள். அத்தகைய அன்னம் பெறத்தக்கவர்க
ளான அவர்கள் யாவரும் இப்பொழுது காட்டிலுள்ள (ஆகாரத்
தால்) காட்டில் ஜீவிக்கின்றதைப் பார்க்கின்றேன். என்மனம் ஆறு

தலை அடையவில்லை. வனத்தில் வஸிப்பவரும் துக்கத்தை அடைந்தவருமான இந்தப் பீமஸேனரை நினைக்கின்ற உமக்கு உசிதகாலத்தில் கோபமானது ஏன் விருத்தி அடையவில்லை? அரசரே! காரியங்களைத் தாமே செய்கிறவரும் தவறுதலில்லாதவரும் ஸுகமடையத் தக்கவருமான பீமஸேனரைத் துக்கத்தை அடைந்தவராகப் பார்த்தும் ஏன் உபேக்ஷை செய்கின்றீர்? அனேகவிதமான வாகனங்களாலும் பலவிதமான வஸ்திரங்களாலும் பூஜிக்கப்பட்ட அவர் காட்டை அடைந்திருப்பதைக் கண்டும் உமக்குக் கோபம் ஏன் விருத்தி அடையவில்லை. இந்தப் பிரபுவானவர் யுத்தத்தில் எல்லாக் குருக்களையும் கொல்லுவதற்கு ஊக்கமுள்ளவர். உமது பிரதிஜ்ஞைக்குக் கட்டுப்பட்டு இவர் பொறுத்திருக்கின்றார். இரண்டு கைகளுள்ளவராயிருந்தும், பாணங்களை வேகமாக விடுவதால் ஆயிரம் கைகளுள்ள கார்த்தவீர்யார்ஜுனனுக்கொப்பானவரும், காலனுக்கும் அந்தகனுக்கும் யமனுக்கும் ஒப்பானவரும், உமது யாகத்தில் தமது ஆயுத வல்லமையால் எல்லா அரசர்களும் வணங்கிப் பிராம்மணர்களைப் பூஜிக்கச் செய்தவரும், தேவர்களாலும் அஸுரர்களாலும் பூஜிக்கப்பட்டவரும், கவலைப்படுகின்றவரும், புருஷஶ்ரேஷ்டருமான இந்த அர்ஜுனரைப் பார்த்தும் நீர் ஏன் கோபமடையவில்லை? பாரதரே! ஸுகத்திற்கு உரியவரும் துக்கத்திற்குத் தகுதியில்லாதவருமான அர்ஜுனர் காட்டை அடைந்திருக்கக் கண்டும் உமக்குக் கோபம் விருத்தியடையவில்லையே? அதனால் மதிமயக்கத்தை அடைகின்றேன். எவர் ஒரே தேருடன் தேவர்களையும் மனிதர்களையும் நாகர்களையும் வென்றாரோ அவர் காட்டை அடைந்திருக்கக்கண்டும் உமக்குக் கோபம் ஏன் விருத்தி அடையவில்லை? பகைவர்களை வாட்டுபவரே! எவர் ஆச்சரியமான வடிவமுள்ள வாகனங்களாலும் குதிரைகளாலும் யானைகளாலும் சூழப்பட்டு அரசர்களிடமிருந்து பொருள்களை வலிந்து கவர்ந்தாரோ, எவர் ஒரே முறையில் ஐந்நூறு பாணங்களை விடுவாரோ அவர் காட்டை அடைந்திருக்கக் கண்டும் உமக்கு ஏன் கோபம் விருத்தி அடையவில்லை? யுத்தத்தில் கேடகங்களுள்ளவர்களுள் சிறந்தவரும் யௌவனமுள்ளவரும் பருத்தவரும் கரியநிறமுள்ளவருமான நகுலரைக் காட்டில் கண்டும் உமக்குக் கோபம் ஏன் விருத்தியடையவில்லை? ஓ! அரசரே! யுதிஷ்டிரரே! அழகிய தோற்றமுள்ளவரும் சூரரும் மாத்ரியின் புத்திரருமான ஸஹதேவரைக் காட்டில் கண்டும் ஏன் பொறுக்கின்றீர்? ஓ! வேந்தரே! துக்கத்தை அடையத்தகாதவர்களான நகுல ஸஹதேவர் இருவரையும்

துக்கத்தையடைந்தவர்களாகப் பார்த்தும் ஏன் உமக்குக் கோபம் விருத்தியடையவில்லை? த்ருபதனுடைய குலத்தில் பிறந்தவளும், மஹாத்மாவான பாண்டுவின் மருமகளும், த்ருஷ்டத்யும்னனுக்குத் தங்கையும், வீரர்களுடைய பத்னியும், அவர்களை அனுஸரித்தவளுமான நான் காட்டையடைந்ததைக் கண்டும் எங்ஙனம் பொறுத்திருக்கின்றீர்? ஓ! பாரதர்களுள் சிறந்தவரே! தம்பிமார்களையும் என்னையும் பார்த்தும் உம்முடைய மனம் கஷ்டப்படாத காரணத்தால், உமக்குக் கோபமென்பது சிறிதும் இல்லை, இது நிச்சயம். உலகத்தில் கோபமில்லாத க்ஷத்திரியனில்லை. க்ஷத்திரியனென்னும் சொல்லுக்கு ஹிம்ஸிப்பவனென்பது உட்பொருளென்று ப்ரஸித்தமாயிருக்கின்றது. க்ஷத்திரியரான உம்மிடத்தில் அதனை இப்பொழுது மாறுபாடுள்ளதாகக் காண்கின்றேன். ஓ! பார்த்தரே! எந்த க்ஷத்திரியன், காலம் வந்தபோது, கோபத்தைக் காண்பிக்கவில்லையோ, அவனை எல்லாப் பிராணிகளும் எப்பொழுதும் அவமதிக்கின்றன. ஆகையால், பகைவர்களைக் குறித்து எவ்விதத்திலும் நீர் பொறுக்கலாகாது. அவர்கள் சக்தியினாலேயே கொல்லப்படத்தக்கவர்கள். இவ்விஷயத்தில் ஸந்தேகமில்லை. அப்படியே, எந்த க்ஷத்திரியன் பொறுமைக்குரிய காலத்தில் பொறுக்கவில்லையோ (அவன்) எல்லாப் பிராணிகளுக்கும் வெறுக்கத்தக்கவனாகி இம்மையிலும் மறுமையிலும் கேட்டை அடைகின்றான்.

---

## இருபத்தெட்டாவது அத்யாயம்

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(காலத்துக்கு ஏற்றபடி கோபத்தையும் பொறுமையையும் அடையவேண்டுமென்பதற்குப் பலிப்ரஹ்லாதர்களுடைய ஸம்வாதத்தை உதாஹரணமாக எடுத்துக் காட்டி, அந்த ஸமயம் கோபத்தை அடையவேண்டுமென்று த்ரௌபதி யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.)

இந்த விஷயத்திலும், விரோசனனது புத்திரனான பலிக்கும் ப்ரஹ்லாதனுக்கும் நடந்த ஸம்வாதரூபமான இந்தப் பழைய இதிஹாஸத்தைச் சொல்லுகின்றார்கள். அஸுரச்ரேஷ்டனும் மஹா

புத்திமானும் தர்மங்களின் ரகஸ்யத்தை அறிந்தவனும் பிதாவின் பிதாவும் அஸுரர்களிலும் தைத்யர்களிலும் சிறந்தவனுமான ப்ரஹ்லாதனைப் பலியானவன் கேட்கலானான்.

'ஓ! ஐயா! பொறுமை மேலானதா? அல்லது [1] கோபம் மேலானதா? இந்தச் சந்தேகத்தைக் கேட்கின்ற எனக்கு உள்ளபடி சொல்லும். தர்மம் தெரிந்தவரே! இந்த விஷயத்தில் எது மேலானதோ அதை எனக்குச் சந்தேகமறச் சொல்லும். அந்த உபதேசத்தை முழுமையும் கேட்டு அதன்படி செய்வேன்' என்றான். எல்லா நிச்சயத்தையும் அறிந்தவனும் மிக்க அறிஞனுமான பாட்டன், இவ்விதம் கேட்கப்பட்டபொழுது, சந்தேகத்தை வினவுகின்ற அவனுக்கு அவையாவற்றையும் சொல்லலானான். 'ஓ! குழந்தாய்! 'கோபமானது எப்பொழுதும் மேலானதன்று; பொறுமையும் எப்பொழுதும் மேலானதன்று' என்று இந்த இரண்டையும் ஸந்தேஹமறத் தெரிந்துகொள். ஓ! குழந்தாய்! எவன் எப்பொழுதும் பொறுக்கின்றானோ அவன் அநேக தோஷங்களை அடைகின்றான். அவனை வேலைக்காரர்களும் பகையும் நட்புமில்லாதபொதுவானவர்களும் பகைவர்களும் அவமதிக்கின்றார்கள். எல்லா ஜனங்களும் ஒரு ஸமயத்திலும் அவனை வணங்கார். ஓ! குழந்தாய்! ஆனதுபற்றிக் கற்றோர்களாலும் எப்போதுமே பொறுமையானது விலக்கப்பட்டிருக்கின்றது. அற்பபுத்தியுள்ள வேலைக்காரர்கள் [2] (பொறுமையால்) ஹிதமாயிருப்பவனை அவமதித்து அதிக தோஷமுள்ள தன்மையை அடைகின்றார்கள். அவனுடைய பொருள்களைக் கவர்வதற்கும் விரும்புகின்றார்கள். புத்தியில்லாதவர்களான வேலைக்காரர்கள் எஜமானனுடைய வாகனத்தையும் ஆடைகளையும் அலங்காரங்களையும் படுக்கைகளையும் ஆஸனங்களையும் போஜனங்களையும் பானங்களையும் எல்லாப் பண்டங்களையும் இஷ்டப்படி எடுத்துக்கொள்வார்கள். யஜமானன் உத்தரவிற்கிணங்க, கட்டளையிடப்பட்டுக் கொடுக்கத்தக்க (வஸ்துக்களையும்) கொடார். யஜமானனை அவனுக்குரிய பூஜைகளினால் ஒரு பொழுதும் பூஜியார்கள். இவ்வுலகத்தில், அவமதிப்பானது மரணத்

1 'தேஜஸ்' என்பது மூலம்; அதற்கு, சக்தி, அதாவது, பகைவரை அடக்கும் வன்மை முதலிய பல பொருள்கள் உண்டு. இந்த அத்யாயத்தில் கோபம் என்று வருமிடமெல்லாம், மூலத்தில், 'தேஜஸ்' என்று இருக்கிறது. அதற்கு, 'க்ரோதம்' என்பது பழையவுரை,

2 'அவனை அவமதித்து அதிக தோஷமுள்ள தன்மையை அடைகின்றார்கள் என்றோ' என்றும் கொள்ளலாம்.

தைப்பார்க்கிலும் நிந்திக்கப்பட்டது. ஓ! குழந்தாய்! அப்படிப்பட்ட பொறுமையுள்ளவனை, வேலைக்காரர்களும் புத்திரர்களும் பரிசாரகர்களும் பொதுநிலையிலிருப்பவர்களும் கடுமையான வார்த்தைகளையும் சொல்லுகின்றார்கள். பொறுமையுள்ள அவனுடைய மனைவியையும் (அவனை) அவமதித்து விரும்புகின்றார்கள். அவனுடைய ஸ்திரீகளும் புத்தியில்லாமல் இஷ்டப்படி ப்ரவிருத்திக்கின்றார்கள். யஜமானனிடமிருந்து அற்பத்தண்டனையையும் அடையாமலிருந்தால், துஷ்டர்கள் எப்போதும் களிப்படைந்து தோஷத்தை அடைவார்கள்; அபகாரத்தையும் செய்வார்கள். ஒருமனிதன் பெரியவனாயினும் பிறருக்குத் தீங்குசெய்யாதவனாயின் அவன் பூஜிக்கப்படான். மனிதர்கள் ஸர்ப்பங்களைப் பூஜிக்கின்றார்கள்; நாகங்களைக் கொல்லுகின்ற கருடனைப் பூஜிப்பதில்லை. எப்பொழுதும் பொறுமையுள்ளவர்களுக்கு இவையும் மற்றும் பல தோஷங்களும் உண்டு. ஓ! விரோசன புத்திரனே! பிறகு, பொறுமையில்லாதவர்களுடைய இந்தத் தோஷங்களை அறிந்துகொள். கோபமுள்ளவன் எப்பொழுதும் ரஜோகுணத்தால் தூண்டப்பட்டு (க் கோபிக்கத்) தகாதவிடத்திலோ அல்லது (கோபிக்கத்) தக்கவிடத்திலோ தனது சக்தியால் அநேக விதமான சிக்ஷைகளைச் செய்கிறான். கோபத்திற்கு வசப்பட்டவன் சிநேகிதர்களுடன் விரோதத்தையும் அடைகிறான். உலகத்தாராலும் அப்படியே உறவினர்களாலும் பகையையும் அடைகிறான். அந்த மனிதன் அவமானத்தினால் பொருள் நாசத்தையும் நிந்தையையும் அநாதரவையும் மனக்கொதிப்பையும் பகையையும் மயக்கத்தையும் பகைவர்களையும் அடைகிறான். மனிதனானவன் கோபத்தால் மனிதர்களிடத்தில் அநியாயமாக அநேகம் சிக்ஷைகளை (ச் செய்கிறான்) ஐசுவர்யத்திலிருந்தும் பிராணன்களிலிருந்தும் பந்து ஜனங்களிலிருந்தும் சீக்கிரமாக நழுவிவிடுகிறான். எவன் தனசாலை முதலியவற்றைப் பெருக்குகிறவர்களையும் திருடர்களையும் கோபத்தாலேயே அணுகுகின்றானோ, வீட்டிலிருக்கும் பாம்பினிடம் நடுங்குவதுபோல அவனிடமிருந்து உலகம் நடுங்குகிறது. எவனிடமிருந்து உலகம் நடுங்குகிறதோ அவனுக்குச் செல்வம் எவ்விதம் உண்டாகும்? அவனுக்குச் சமயத்தைப்பார்த்துக்கொண்டு உலகமானது அபகாரத்தைச் செய்கின்றது; இது நிச்சயம். ஆகையால், கோபத்தை அதிகம் வெளியிடக்கூடாது; எப்பொழுதும் மென்மையுள்ளவனாகவும் இருக்கக்கூடாது. அந்த அந்தக் காலம்வந்தபோது மென்மையுள்ளவனாகவோ அல்லது கோபமுள்ளவனாகவோ இருக்கவேண்டும். எவன் (மென்மைக்குரிய) காலத்தில் மெதுவாகவும் (கோபத்துக்

குரிய) காலத்தில் கோபமுள்ளவனுகவும் ஆகிறுனே அவனே இம்மை யிலும மறுமையிலும ஸுகததை அடைகிறுன. எப்பொழுதும் விடததகாதவைகளும விதவான்கள் சொல்லுகினறவைகளுமான பொறுமைக்குததகக காலங்களே உனககு விரிவாகச சொல்லுகின றேன். என்னிடமிருநது கேள.

எவன உனககு முன உபகாரியாயிருந்தானே அவன் பெரிய குற்றம் செய்தவனுயினும, குற்றமசெயத அவனுடைய அந்தக்குற் றததை உபகாரததால்பொறுககவேணடும. அறியாமையை அடைந்த குற்றவாளிகளுடைய குற்றததையும பொறுக்கவேண்டும. எலலா விஷயததிலும மனிதனுல் பாணடிததியமானது எளிதில அடைய முடியாததன்றே? மேலும், புததிபூர்வமாகச் செய்து அதைதத தெரி யாமல் செய்ததாகச சொல்வாாகளானுல, குற்றம சிறிதானுலும, அவ் விதம கபடமாயுளள அந்தப்பாவிகளேக் கொல்லவேண்டும. நீ எலலாப பிராணிகளும் ஒரு பிழை பொறுககவேண்டும. இரண்டாவது குறறம சிறிதானுலும் (செயதவன்) கொல்லப்படததக்கவனே. அறியாதவனுல் ஒருகுற்றம செயயபபடடதாயிருககுமானுல பரிசீலனையினுல் நன்கு பரீக்ஷைசெய்து அவன விஷயததில பொறுக்கவேணடுமெனறே சொலலுகினறுர்கள். ஸாமோபாயததால குரூரனேக கொல்லுகிறுன். ஸாமோபாயததால் நலலவனேயும் கொலலுகினறுன். ஸாமோபா யததால் ஸாதிககக்கூடாதது ஒன்றுமில்லே. ஆகையால், ஸாமோ பாயமே மிகக கடுமையானது. காலஙகளேயும பிறகு தனனுடைய பலாபலததையும் நனகு தெரிந்துகொணடு காரணததையும் ஆலோ சிததுப்பார்ததுக் கோபமோ அல்லது பொறுமையோ செய் யததகுநதது. தேசகாலங்களே எதிர்பாாபபவாகளுக்குத தேசகால மிலலாதபோது ஒன்றும செய்யஇயலாது. அப்படியே, உலகபயத் தாலும் குற்றததைப பொறுககவேணடும். பொறுமைக்கு இவ்வாறுன இந்தக் காலஙகள் சொல்லபபட்டன. இதற்கு வேறுக வருமிடங்களில கோபததிற்குச சமயமென்று சொல்லபபடுகிறது' என்றுன.

ஓ! நராதிபரே! ஆகையால, பேராசைகொணடவர்களும எப் பொழுதும் அபகாரிகளுமான த்ருதராஷ்டிரபுததிரர்களிடததில் உம் முடைய கோபததிற்கு (இது) காலமென்று நான நினேக்கின்றேன். இபபொழுது கௌரவர்களேக் குறிததுப பொறுமைக்குரியகாலம் ஒன்றும் இல்லேயன்றே? கோபத்திற்குக் காலம் வநதபோது, நீர் கோபததைச் செலுத்தவேணடும். மெதுவாயிருப்பவன் அவமதிக்கப் பட்டவனுகிறுன். கடுமையாயிருப்பவனிடமிருநது உலகம் நடுக்க

மடைகிறது. காலம் வந்தபோது இரண்டையும் எவன் அறிகிறானோ அவனே பூமிக்கு அரசன்.

---

## இருபத்தொன்பதாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

---

(யுதிஷ்டிரர் திரௌபதியைப் பார்த்துக் கோபத்தில் பல குற்றங்களிருப்பதை எடுத்துக் காட்டிக் கோபத்தை நிந்தித்தது.)

இனிமையான அக்ஷரமும் பதமுமுள்ளதும் அரியதுமான திரௌபதியின் வார்த்தையைக் கேட்டு, அரசரான யுதிஷ்டிரர், புன்னகைசெய்து, அவளை நோக்கிச் சொல்லலானார்.—

'மிக்க அறிவுள்ளவளே! கெட்டபுத்தியுள்ள துரியோதனனை நிமித்தம் நீ கோபங்கொண்டாய். அதனால், கோபத்தைப் பலவிதமாகக் கொண்டாடுகிறாய். எல்லாவற்றையும் வேரோடு நாசஞ்செய்யும் கோபமென்கிற சத்துருவைக் காரணங்களுடன் என்னிடமிருந்து கேட்பாயாக. கோபம் மனிதர்களைக் கொல்லுகின்றது. அதுவே திரும்பவும் (அடக்கப்பட்டால்) மேன்மைப்படுத்துகின்றது. ஓ! பேரறிவுள்ளவளே! இவ்விரண்டு ஆக்கமும் கேடும் கோபத்தைக் காரணமாயுடையன என்று அறிந்துகொள். மிக்க மங்களமுள்ளவளே! எவன் கோபத்தை அடக்குகிறானோ அவனுக்கு ஐச்வர்யம் உண்டாகிறது; எவன் கோபத்தை அடக்கவில்லையோ அவனுக்குக் கேடு உண்டாகிறது; நிச்சயம். மங்களமுள்ளவளே! ஆகையால், கோபம் கேட்டிற்குக் காரணமாகிறது. ஓ! சுபமானவளே! எப்பொழுதும் கோபத்தை வெளியிடுகின்ற மனிதனுக்கு, மிக்க பயங்கரமான அந்தக் கோபமானது கேட்டிற்கு ஹேதுவாகின்றது. இவ்வுலகத்தில் கோபமூலமாகவே ப்ராணிகளுக்கு நாசம் காணப்படுகிறதன்றோ? ஆகையால், என்னைப்போன்றவன் உலகத்தை நாசம்செய்யும் கோபத்தை எவ்விதம் வெளிவிடுவன்? கோபங்கொண்ட மனிதன்

பாவத்தைச் செய்வான். கோபங்கொண்டவன் குருக்களையும் கொன்று விடுவான். கோபங்கொண்டவன் குரூரமான வார்த்தையால் பெரியோர்களையும் அவமதிக்கின்றான். கோபங்கொண்டவன் சொல்லத்தகுந்ததையும் சொல்லத்தகாததையும் ஒருபோதும் அறியான். கோபங்கொண்டவனுக்குச் செய்யத்தகாதது இல்லை; அதுபோல, சொல்லத்தகாததுமில்லை. கோபத்தால் கொல்லத்தகாதவர்களையும் கொல்லுவான். கொல்லத்தக்கவர்களை நன்கு பூஜையும் செய்வான். கோபங்கொண்டவன் தன்னையும் எமன் வீட்டை அடையச்செய்வான். இந்தத்தோஷங்களைப் பார்க்கின்றவர்களும் இம்மையிலும் மறுமையிலும் மிகச் சிறந்த ஶ்ரேயஸை விரும்புகின்றவர்களுமான கற்றறிந்த பெரியோர்களால் கோபம் ஜயிக்கப்பட்டிருக்கின்றது. பண்டிதர்களால் விலக்கப்பட்ட அந்தக் கோபத்தை எவ்விதம் என்போன்றவன் செய்வன்? திரௌபதி! இதை எண்ணியே எனக்குக் கோபம் விருத்தி அடையவில்லை. கோபிக்கிறவனுக்குப் பிரதி கோபியாதவன் தன்னையும் பிறர்களையும் பெரிய பயத்திலிருந்தும் காப்பாற்றுகிறான். இவன் இருவருக்கும் தோஷத்தைப் போக்குகிறவன். சக்தியற்றவனும் மூடனும் துன்பமடைந்தவனுமான மனிதன், தன்னிலும் வலியவர்களான மனிதர்களின்மேல் கோபிப்பானாகில், கடைசியில் தேகத்தை விடுகின்றான். மனத்தை அடக்காதவனுக்குச் சரீரத்தை விடும் அவனுக்கு உலகங்கள் நசிக்கின்றன. ஓ! திரௌபதி! ஆகையால், சக்தியற்றவனுக்குக் கோபத்தை அடக்குதல் (சிறந்ததென்று) எண்ணப்பட்டிருக்கிறது. அப்படியே, சக்தனான எந்த அறிஞன் துன்பம் செய்யப்பட்டவனாகிக் கோபிக்கின்றானோ அவன் சத்ருவை நாசம்செய்து பரலோகத்தில் சந்தோஷத்தை அடையான். ஆகையால், பலமுள்ளவனாலும் பலமற்றவனாலும், எப்பொழுதும், ஆபத்துக்களிலும் அறிவுள்ளவன் பொறுத்துக் கொள்ளவேண்டும். ஓ! திரௌபதி! இங்கே ஸாதுக்கள் கோபத்தை ஜயிப்பதைப் புகழுகின்றார்கள். பொறுமையுள்ள ஸாதுவானவன் கோபத்தை ஜயித்தல் எப்பொழுதும் இவ்வுலகத்தில் ஸாதுக்களுக்கு ஸம்மதமானது. ஸத்தியமானது பொய்யைக்காட்டிலும் மேலானது. குரூரத்தன்மையைக்காட்டிலும், குரூரமில்லாமை மேலானது. ஆகையால், இவ்விதம் அநேக தோஷமுள்ளதும் ஸாதுக்களால் விலக்கப்பட்டதும் எல்லா லோகத்தையும் நாசம் செய்யக்கூடியதுமான அந்தக் கோபத்தை என்னைப் போன்றவன் விடவேண்டும். தீர்க்கதரிசிகளான பண்டிதர்கள், எவனைப் பராக்கிரம முள்ளவனென்று சொல்லுகின்றார்களோ, அவனுக்குக்

கோபம் [1] விரும்பப்பட்டதாக ஆகாதென்பது நிச்சயம். எவன் உண்டான கோபத்தை அறிவால் தடுக்கின்றானோ அவனை உண்மையறிந்த கற்றோர்கள் பராக்ரமமுள்ளவனாக அறிகின்றார்கள். அழகிய இடையுள்ளவளே! கோபமுள்ளவன் காரியத்தை உள்ளபடியே பார்க்கிறதில்லை; கோபமுள்ள மனிதன் அகாரியத்தை ஆலோசித்துப் பார்ப்பதில்லை; மரியாதையையும் நினைக்கிறதில்லை. கோபங்கொண்டவன் கொல்லத் தகாதவர்களையும் கொல்லுகின்றான். கடுமையான (வார்த்தைகளால்) குருக்களையும் துன்பப்படுத்துகின்றான். ஆகையால், பராக்ரமத்தைக் காட்டவேண்டியபோது, கோபமானது நெடுந்தூரத்தில் விலக்கத்தக்கது. வினைமுடிக்கும் திறமை, பகைவருக்குத் துன்பம் விளைவிக்கும் உபாயத்தை ஆலோசித்தல், பகைவரை அடக்கும் திறமை, காரியத்தைச் சீக்கிரம் முடிக்கும் தன்மை ஆகிய நான்கும் தேஜஸின் குணங்கள். இவைகள் கோபமுடையவனால் உள்ளபடி அடையத்தக்கவை அல்ல. மனிதன் கோபத்தை விட்டாலன்றோ நன்கு பராக்ரமத்தை அடைவான்? மிக்க புத்தியுள்ளவர்களானாலும் கோபமடைந்தால் காலதேசத்திற்கேற்ற சக்தியானது தனக்கு அடையமுடியாது. அறியாதவர்களால் கோபமானது பராக்ரமமென்று அடிக்கடி நிச்சயிக்கப்பட்டது. லோகநாசத்திற்காக மனிதர்களைக் குறித்து ரஜோகுணத்தின் காரியமான கோபமானது உற்பத்திசெய்யப்பட்டது. ஆகையால், அடிக்கடி நற்காரியத்தைச் செய்யும் மனிதன் கோபத்தை விடவேண்டும். தன்னுடைய தர்மத்தினின்று விலகாதவன் சிறந்தவனென்பதும் (தன் கர்மங்களை விட்ட) கோபங்கொண்டவன் சிறந்தவனல்லனென்பதும் நிச்சயம். நிந்திக்கத்தகாதவளே! புத்தியில்லாத மூடர்களுக்கு எல்லாவற்றிலும் தவறுதல் ஏற்படுமானால் என்போன்றவர்களுக்கு எவ்விதம் தவறுதல் ஏற்படும்? மனிதர்களுள் பூமிபோலப் பொறுமையுள்ளவர்கள் இரார்களானால் மனிதர்களுக்குச் சமாதானம் உண்டாகாது. பகையானது கோபத்தை மூலமாக உடையதன்றோ? துன்பம் செய்யப்பட்டவன் திருப்பித் துன்பத்தை உண்டுபண்ணுவான். குருவினால் துன்புறுத்தப்பட்டவன் (குருவையும்) துன்புறுத்துவான். இவ்விதமானால் பிராணிகளுக்கு நாசத்தை உண்டுபண்ணும் அதர்மம் பரவினதாகும். வாயினால் வையப்பட்ட மனிதன், பிறகு, யாவரையும் திருப்பி வைவான்; அடிக்கப்பட்டால், திருப்பி அடிப்பான். துன்பம் செய்யப்பட்ட

---

1 '[illegible]' என்பது பாடம்.

டால் அப்படியே துன்பம் செய்வான். பிதாக்கள் புத்திரர்களை அடிக்கின்றார்களன்றோ? அதுபோலப் புத்திரர்கள பிதாக்களையும் அடிக்கின்றாகள. கணவர்கள் மனைவிகளையும், மனைவிகள கணவா களையும் அடிக்கின்றாகள. அழகிய முகமுள்ள திரௌபதி! லோகம இவ்விதம மிகக கோபததை அடைந்தபோது உதபததியுண்டா காது. பரஜைகளின பிறபபு (த தம்பதிகளின்) ப்ரீதியைக காரண மாக உடையதென்று அறிநதுகொள். ஓ! திரௌபதி! அபபடிப் பட்ட கோபங்கொண்ட எல்லா மனிதாகளும சீக்கிரம குறைவடை வாாகள். ஆகையால, கோபமானது பரஜைகளுககு நாசததிறகும செலவக்குறைவிறகும (காரணமானது). உலகததில பூமிக்கொபபான பொறுமையுளளவாகள காணபபடுகினற காரணததால பராணிகளுக குப பிறப்பும ஐஸ்வரியமும் உண்டாகின்றன. கல்யாண குணமுளள வளே! இங்கே பொறுமையுளளவனிடமிருநதே பராணிகளின் பிறபபும் சொல்லபபடுதலால, எல்லா ஆபததுக்களிலும மனிதன பொறுததுககொளளவேண்டும. பலமுளளவனால நிநதிக்கப்பட்டா லும, அடிககப்பட்டாலும, கோபிககபபட்டாலும அசகதன் பொறுபபதுபோலப பொறுததுககொளளுகிறவனும, எபபொழுதும கோபததை ஐயிததவனும சிறநத விதவானுமான பெருமைவாயநதவ னுககு அழிவறற உலகங்கள் கிடைககின்றன. கோபிபபவன் அறிவு குறைநதவனாகி இமமையிலும் மறுமையிலும நாசததை அடைகிறான. ஏ! கிருஷ்ணையே! இவ்விஷயததிலும பொறுமையுளளவாகளில் சிறந்தவரும மஹாதமாவுமான காஸ்யபரால சொலலப்பட்டவையும எப்பொழுதும பொறுமையுள்ளவர்களைப பறறியவையுமான ஸ்லோ கங்களைச் சொல்லுகின்றார்கள்.

'பொறுமையே தர்மம். பொறுமையே யாகம். பொறுமையே வேதஙகள. பொறுமையே சாஸ்திரம். எவன அதை இவ்விதம் அறிகிறானோ அவன யாவறறையும பொறுததுககொள்ளத தக்கவ னாகிறான். பொறுமையே [1] ப்ரமமம். பொறுமையே சததியம். பொறுமையே சென்றதும வருவதும். பொறுமையே தவம். பொறு மையே சௌசம. பொறுமையினாலேயே இந்த ஜகததானது தரிக கப்பட்டிருக்கின்றது. பொறுமையுள்ளவர்கள யஜ்ஞததையறிந்தவர் களின லோகஙகளைத தாண்டி அவைகளுககு மேலான ஸ்தானததை அடைகின்றார்கள். ப்ரமமததை அறிநதவர்களின் உலகததையும தபஸ்விகளின் உலகங்களையும தாணடி மேலான உலகமடைகின்றார்

1 'பரமம' என்பது மூலம, 'பராமமணஜாதி' எனபது பழையவுரை.

கள். யாகம் செய்கிறவர்களுடைய உலகங்கள் வேறு. (குளம் வெட்டுதல், தேவாலயம் கட்டுதல், தோட்டம் வைத்தல் முதலிய) காம்யங்களைச் செய்கிறவர்களுடைய உலகங்கள் வேறு. பொறுமையுள்ளவர்களுக்கு பிரம்மலோகத்தில் மிகப் பூஜிக்கப்பட்ட உலகங்கள் (உண்டு). பொறுமையே சத்தியமுள்ளவர்களுடைய சக்தி. பொறுமையே தவசிகளின் தவம். பொறுமையே சத்தியமுள்ளவர்களுடைய சத்தியம். பொறுமையே யாகம். பொறுமையே மன அடக்கம். ஓ! கிருஷ்ணையே! எந்தப் பொறுமையில் வேதமும் சத்தியமும் யாகங்களும் லோகங்களும் இருக்கின்றனவோ அப்படிப்பட்ட அந்தப் பொறுமையை என்போன்றவன் எவ்விதம் விடுவன்? யாகம் செய்கிறவர்களுக்கு (வேறு) உலகங்கள் சொல்லப்படுகின்றன. அதுபோலவே, பொறுமையுள்ளவர்களுக்கும் வேறு உலகங்கள் சொல்லப்பட்டன. அறிவுள்ளவனான மனிதன் எப்பொழுதும் பொறுத்துக்கொள்ள வேண்டும். எப்பொழுது யாவற்றையும் பொறுக்கிறானோ அப்பொழுது பிரம்மமாகிறான். பொறுமையுள்ளவர்களுக்கே இந்த உலகம் (உண்டு). பொறுமையுள்ளவர்களுக்கே பரலோகமும் உண்டு. பொறுமையுள்ளவர்கள் இவ்வுலகத்தில் நன்கு மதிப்பை அடைகின்றார்கள், பரலோகத்திலும் மேலான கதியை அடைகின்றார்கள். எந்த மனிதர்களுடைய கோபமானது எப்பொழுதும் பொறுமையால் தடைசெய்யப்பட்டதோ அவர்களுக்கு 1 மிகச்சிறந்த லோகங்களுண்டு. ஆகையால், பொறுமை சிறந்ததென்று கருதப்பட்டது. எப்பொழுதும் பொறுமையுள்ளவர்களின் பெருமைகள் இவ்விதம் காச்யபரால் சொல்லப்பட்டன. ஓ! திரௌபதி! நீ பொறுமையின் பெருமையைக் கேட்டுச் சந்தோஷம் அடைவாயாக; கோபியாதே. சந்தனுவின் குமாரரும் பிதாமஹருமான பீஷ்மர் நமது அடக்கத்தைப் புகழுவார். தேவகீ புத்திரரான கேசவரும் அடக்கத்தைப் புகழுவார். துரோணாசாரியரும் க்ஷத்தாவான விதுரரும் அடக்கத்தையே மேலாகச் சொல்லுவார்கள். கிருபரும் சஞ்சயனும் அடக்கத்தையே (மேலென்று) சொல்லுவார்கள். சோமதத்தனும் யுயுத்ஸுவும் அச்வத்தாமாவும் அப்படியே அடக்கத்தை மேலானதாகச் சொல்லுவார். எங்கள் பாட்டனாரான வியாஸரும் எப்பொழுதும் அடக்கத்தைப் (புகழ்ந்து) சொல்லுகின்றார். துரியோதனராஜன் இவர்களால்

---

1 ஸத்யலோகத்தில் அனுபவிக்கத்தக்க பொருள்கள் நிறைந்த என்பது.

ஸமாதானத்தைக் குறித்து ஏவப்பட்டு, ராஜ்யத்தை நிச்சயமாய்க் கொடுப்பானென்பது என்னுடைய எண்ணம். பேராசையால் கொடாவிடில், நாசத்தை அடைந்துவிடுவான். பரதர்களுடைய நாசத்திற்காகப் பயங்கரமான இந்தக் காலம் வந்திருக்கிறது என்னும் நிச்சயம் முந்தியே எனக்கு எப்பொழுதும் உண்டு. பொறுமையானது துரியோதனன் யோக்கியனல்லனென்று என்னையே அடைகின்றது. ஆகையால், அவ்விஷயத்தில் நானே தக்கவனென்று இவ்விதம் பொறுமை என்னை அடைகின்றது. இது விவேகிகளின் நடை. இது ஸநாதனமான தர்மம். ஆகையால், நான் பொறுமையையும் அஹிம்ஸையையும் உண்மையாக அனுஷ்டிக்கப்போகிறேன்' என்றார்.

---

முப்பதாவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(கணவர்களுடைய கஷ்டங்களைப் பார்த்துத் துன்பமடைந்த திரௌபதி தர்ம முதலியவற்றைக் காட்டிலும் தெய்வமே பெரிதென்று கூறியது.)

திரௌபதி, 'உமக்கு மோகத்தை உண்டுபண்ணினவர்களான ஈச்வரருக்கும் பூர்வகர்மாவுக்கும் வணங்குகின்றேன். நீர் ஆளத் தகுந்ததும் தகப்பன் பாட்டன் முறையாகக் கிடைத்ததுமான ராஜ்யத்தில் உமக்கு வேறுவிதமான புத்தி உண்டாயிருக்கின்றது. ஒவ்வொரு பிறவியிலும் வெவ்வேறுவிதமான போக்யவஸ்துவானது வினைக்குத் தக்கபடி ஏற்படுத்தப்பட்டது. ஆகையால், கர்மாக்கள் நிச்சயமான பயனுள்ளவைகள். மோகத்தால் கர்மபலன்களை விட விரும்புகிறான். இவ்வுலகத்தில் பொறுக்கமுடியாத இந்தத் துக்கமானது உமக்கு நேர்ந்திருந்தால், ஒருவன், தர்மத்தாலும் அஹிம்ஸையாலும் பொறுமையாலும் நேர்மையாலும் கருணையுள்ளவனாயிருப்பதாலும் ஒருபோதும் ஐச்வரியத்தை அடையான்; நீரும் இந்தத் துக்கத்துக்குத் தக்கவரல்லீர்; மிக்க பராக்கிரமமுள்ள உமது இந்தப் பிராதாக்களும் ஸஹிக்கத்தக்கவரல்லர். பாரதரே! அவர்கள் அக்காலத்திலும் இப்பொழுதும் ஒருகாலும் ஒன்றையும் தர்மத்தைவிட மிக்க பிரியமாகக் கருதவில்லை; (தர்மத்தை) உயிரையும்விட மேலானதாக நினைக்கின்றனர். 'தர்மத்திற்காகவே உம

முடைய ராஜ்யம். தர்மத்திற்காகவே உம்முடைய உயிர்வாழ்க்கை’ என்று ப்ராம்மணர்களும் குருக்களும் தேவதைகளும் அறிவார்கள். பீமார்ஜுனர்களையும் மாத்ரியின் புத்திரர்களான இருவர்களையும் என்னையும் நீர் விட்டுவிடுவீரென்பது என்னுடைய எண்ணம்; ஆனால், தர்மத்தையோ விடமாட்டீர். தர்மத்தைக் காப்பாற்றுகின்ற அரசனை அப்படிக் காக்கப்பட்ட தர்மம் காப்பாற்றுகின்றதென்று பெரியோர்களிடமிருந்து நான் கேட்டிருக்கிறேன். உம்மையோ அது காப்பாற்றவில்லையென்று நினைக்கின்றேன். ஓ! மனிதரிற் சிறந்தவரே! மற்றவர்களைவிட்டு நிச்சயமாக எப்பொழுதும் தர்மத்திலேயே உம்முடைய புத்தியானது மனிதனைத் தன்னுடைய நிழல்போல அநுஸரிக்கின்றது. ஸமமானவர்களையும் தாழ்ந்தவர்களையும் நீர் அவமதிக்கமாட்டீர். சிறந்தவர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? எல்லாப் பூமியையும் அடைந்தும், ப்ரபுவென்ற அபிமானம் உமக்கு விருத்தியடையவில்லை. ஓ! பார்த்தரே! ஸ்வாஹாகாரங்களால் தேவதைகளையும் ஸ்வதாகாரங்களால் பித்ருக்களையும் பூஜைகளால் ப்ராம்மணர்களையும் எப்பொழுதும் உபாஸிக்கின்றீர். ஓ! பார்த்தரே! பாரதரே! மோக்ஷத்தை அடைய விரும்புகின்ற ஸந்யாஸிகளும் க்ருஹஸ்தர்களான ப்ராம்மணர்கள் எப்பொழுதும் எல்லாப் பதார்த்தங்களைக் கொண்டும் உம்மால் த்ருப்தியடைவிக்கப்பட்டார்கள். தங்கப்பாத்திரங்களால் சாப்பிட்டார்கள். போஜனம் செய்விக்கும் விஷயத்தில் நான் வேலைக்காரியாக இருந்தேன். காட்டிலுள்ளவர்களுக்குக் காட்டிலுள்ள போஜனங்களைக் கொடுக்கின்றீர். ப்ராம்மணர்களுக்குக் கொடுக்கக்கூடாதது உம்முடைய வீட்டில் ஒன்றுமில்லை. வைச்வதேவத்தின் முடிவில் காலையிலும் மாலையிலும் அதிதிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் கொடுத்து மிஞ்சின அன்னத்தைக்கொண்டு ஜீவிக்கின்றீர். ஓ! குருநந்தனரே! காம்யங்களும் நைமித்திகங்களுமான இஷ்டிகளும் பசுபந்தங்களும் பாகயஜ்ஞங்களுமான யஜ்ஞங்கள் எப்பொழுதும் நடக்கின்றன. ராஜ்யத்தைவிட்டு ஜனமற்றதும் திருடர்களால் வஸிக்கப்பட்டதுமான இந்தப் பெரிய காட்டில் வஸிக்கையிலும், வஸிக்கின்ற உமக்குத் தர்மம் குறைவுபடவில்லை. அச்வமேதமும் ராஜஸூயமும் பௌண்டரீகமும் கோஸவமும் மற்றும் அநேக யஜ்ஞங்களும் தக்ஷிணையுடன் உம்மால் செய்யப்பட்டன. ஓ! பாரதரே! கிங் குள்ளதான சூதின் அபஜயத்தில் விபரீதமான புத்தியால் ஸிநேகிதர்களையும் ராஜ்யங்களையும் தனங்களையும் தோற்றீர். கோணலில்லாதவரும்

தையுள்ளவரும் மிகக்கொடுக்கிறவருமான புத்திமானும் உண்மைபேசு கிறவருமான உமக்குச் சூதென்னும் வ்யஸனத்தில் செல்லும் புத்தி எப்படி உண்டாயிற்று? ஓ! பார்த்தரே! மிகவும் பொறுக்கமுடியாத உம்முடைய இந்தத் துக்கத்தைப் பார்த்து மிகக் மயக்கம் வருகிறது. மனம் வருத்தத்தை அடைகிறது. உலகமானது ஈம்வரருடைய வசத்தில் கட்டுப்பட்டிருப்பதுபோலத் தன் வசத்தில் கட்டுப்பட்டிருக்கவில்லை என்பதைப்பற்றி இந்த இதிஹாஸத்தைச் சொல்லுகிறார்கள்.

முந்திய காமாவைப் பெரிதாக அனுஸரிக்கிறவரும் ஸருஷ்டிப் பவருமான ஈம்வரரே பிராணிகளுக்கு ஸுகதுக்கங்களும் பிரியாப் பிரியங்களுமான எல்லாவற்றையும் கொடுக்கிறார்; அரசரே! ஒரே இடத்தில் மனத்தை நிறுத்தினவனும் தீரனுமான மனிதன் கட்டையால் செய்யப்பட்ட பெண்பதுமையை எவ்விதம் சரீரத்தையும் ஒவ்வோர் அவயவங்களையும் ஆட்டிவைக்கிறானோ அவ்விதமே இந்த ப்ரஜைகளை ஆட்டிவைக்கிறார். பாரதரே! ஈம்வரர் ஆகாயம்போல இங்கு எல்லாபிராணிகளையும் வ்யாபித்துநின்று க்ஷேமத்தையும் கெடுதலையும் செய்விக்கிறார். கயிற்றால் கட்டப்பட்ட கிளிபோல இந்த ஜீவன் தன் வசமில்லாதவனாக நடத்தப்படுகிறான்; ஈம்வரருடைய வசத்திலிருந்துகொண்டிருக்கிறான், ஆதலால், மற்றவர்களுக்கும் தனக்கும் யஜமானனல்லன். நூலில் கோக்கப்பட்ட மணிபோலவும், மூக்குக்கயிற்றால் கோக்கப்பட்ட காளைபோலவும், தன்மயனும் அவருக்கு அடங்கினவனுமாயிருந்துகொண்டு ஈம்வரருடைய கட்டளையை அனுஸரிக்கிறான். நழுவி விழுந்து ப்ரவாகத்தினுடைய நடுவையடைந்த கரையிலுள்ள மரம்போல இந்த மனிதன் அஸ்வதந்திரனாகி [1] ஈம்வரரை அனுசரிக்கிறான். அறிவற்ற இந்த மனிதன் ஈம்வரரால் ஏவப்பட்டுத் தன்னுடைய ஸுகதுக்கங்களில் ஸ்வதந்திரமில்லாமல் ஸ்வர்க்கத்தையோ நரகத்தையோ அடைவான். ஓ! பாரத! புலதுணிகள் பலமுள்ள காற்றினுடைய வசத்தை எவ்விதம் அடைகின்றனவோ அவ்விதம் எல்லாப்ராணிகளும் ஈம்வரருடைய வசத்தை அடைகின்றன. ஈம்வரரோ ப்ராணிகளை நல்ல கர்மாவிலோ கெட்ட கர்மாவிலோ சேர்த்துக்கொண்டு பரவியிருக்கிறார். இவர் இப்படிப்பட்டவர் என்று காணப்படவில்லை. ஈம்வரர்

---

1 'காலம் பஜதி' என்பது மூலம், 'பரமாத்மாவை அடைகின்றான்' என்பது பழையவுரை.

சுபத்தையும் அசுபத்தையும் பயனாகவுடைய கர்மாக்களை எதனால் செய்விக்கிருரோ, க்ஷேத்திரமென்று பெயரையுடைய அப்படிப் பட்ட இந்தச் சரீரமானது ஈசருக்குக் காரணமாத்திரமே. எவர் தமமுடைய மாயையால் பிராணிகளை மோஹிக்கச்செய்து பிராணி களைக்கொண்டே கொல்லுகின்ருரோ, அப்படிப்பட்ட ஈசரால் செய்யப்பட்ட இந்த மாயையின் மகிமையானது எவ்விதமென்பதைப் பாரும். உண்மையைக் கண்டவர்களான முனிவர்களால் வேறுவித மாகப் பார்க்கப்பட்டவைகள் (மூடர்களுக்கு) [1] வாயுவின் வேகம் போல வேறுவிதமாகச் சுற்றுகின்றன. அந்த அந்த வஸ்துக்களைக் குறித்து மனிதர்கள் வேறு விதமாகவே கொள்ளுகிருர்கள். அவை களை ஈசுவரர் வேறு விதமாக ஆக்கவும் அழிக்கவும் செய்கிருர். அசைவற்றதும் அறிவற்றதுமான கட்டையைக் கட்டையாலும், கல்லைக் கல்லினலும், இரும்பை இரும்பினலும் எவ்விதம் வெட்டு வாரோ அவ்விதம் நாமரூபமுண்டானவரும் பரமாத்மாவின் பிதாவும் தேவருமான அந்தப் பகவான் மாயையைச்செய்து, பிராணிகளைக் கொண்டு பிராணிகளைக் கொல்லுகிருர். பாலன் விளையாட்டுப் பொருள்களினல் விளையாடுவதுபோலத் தாம விருமபியபடி செய்யும் பிரபுவான இந்தப் பகவான் சேதனமும் அசேதனமுமான பிராணிகளால் விளையாடுகின்ருர். அரசனே! ஈசுவரர் மாதாபிதாக்களைப்போலப் பிராணி களிடத்திலிருக்கவில்லை. இந்த மற்ற மனிதர்கள் போலக் கோபத் தோடு பிரவிர்த்திக்கிருர். நல்லொழுக்கமுள்ள மேலோர்கள் வெட்க முள்ளவர்களும் ஜீவனத்திற்காகக் கஷ்டப்படுகின்றவர்களுமாயிருக் கிறதலையும், துஷ்டர்கள் மெய்மறந்து ஸுகமுள்ளவர்களாயிருக்கிறதலையும் கண்டு ஆலோசனை செய்கின்றேன். ஹா! பார்த்தரே! உமக்கு நேர்ந்தி ருக்கிற இந்த ஆபத்தையும் துரியோதனனிடத்திலிருக்கிற செல்வத் தையும் பார்த்து இந்த மாறின நிலைமையைப் பார்க்கிற அந்த ஈசுவ ரரை நிந்திக்கின்றேன். மேலோர்களின் சாஸ்திரத்தைக் கடந்த வனும் குரூரனும் பேராசையுள்ளவனும் தர்மத்தை அழிப்பவனு மான துரியோதனனிடத்தில் செல்வத்தைக் கொடுத்து ஈசுவரர் என்ன பயனை அடைகிருர்? செய்யப்பட்ட வினையானது செய்தவனை யேயன்றி மற்றவனை அடையாதானல், அந்தத் தீவினையால் ஈசுவரர் நிச்சயம் பற்றப்படுகிருர். செய்யப்பட்ட பாபகர்மாவானது செய் தவனையே அடையாவிடில், இவ்விஷயத்தில் (மனித) வலிமையே

1 'வாதாஹதா இவ ...' என்பது மூலம். 'சூரியக்கிரணங்களைப் போல' என்பது பழைய பிரதி.

காரணமென்று எண்ணி இங்கே வலிமையற்ற ஜனங்களைக் குறித்துத் துக்கிக்கின்றேன்' என்றாள்.

---

## முப்பத்தோராவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

### (யுதிஷ்டிரர் தர்மத்துக்குப் பயனுண்டென்று திரௌபதிக்குக் கூறியது)

யுதிஷ்டிரர், 'ஓ! யஜ்ஞசேனன் குமாரியே! சுபமானதும் அழகிய சொல்லுள்ளதும் இனியதுமாக உன்னால் சொல்லப்பட்ட வார்த்தையானது என்னால் கேட்கப்பட்டது. ஆனால், நாஸ்திகத்தைப் பேசுகிறாய். ஓ! ராஜபுத்ரீ! நான் தர்மத்தில் பயனை விரும்பிக்கொண்டு செய்யவில்லை; கொடுக்க வேண்டுமென்றே கொடுக்கிறேன்; யாகம் செய்யவேண்டுமென்றே யாகம் செய்கிறேன். ஓ! கிருஷ்ணையே! இவ்விஷயத்தில் பயன் இருக்கட்டும்; அல்லது, இல்லாமல் போகட்டும். கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் மனிதன் எதைச் செய்யவேண்டுமோ அதைச் சக்திக்கேற்றவாறு செய்கின்றேன். ஓ! அழகிய இடையுள்ளவளே! சாஸ்திரங்களை மீறாமலும் ஸாதுக்களின் ஆசாரத்தைப் பார்த்தும் தர்மத்தைச் செய்கின்றேனேயல்லாது தர்மபலத்திற்குவேண்டிச் செய்யவில்லை. ஓ! கிருஷ்ணையே! இயற்கையிலேயே என்னுடைய மனம் தர்மத்திலேயே நாட்டப்பட்டிருக்கிறது. தர்ம வியாபாரஞ்செய்கிற அற்பன் தர்மவாதிகளுள் தாழ்ந்தவன். தர்மத்தின் பயனை அடைய விரும்புகிறவனும் நாஸ்திகத்தால் பாவத்தில் மனமுள்ளவனாய்த் தர்மத்தைச் செய்து ஸந்தேகப்படுகிறவனும் தர்மபலத்தை அடையமாட்டார். மார்க்கத்தை விட்டுப் பேசுவதாலும் மதத்தினாலும் தர்மத்தைக் குறித்துச் சங்கையடையாதே. தர்மத்தில் ஸந்தேகிக்கும் மனிதன் குறுக்கான கதியில் நோக்கமுள்ளவன். உறுதியற்ற மனமுள்ள எவனுக்குத் தர்மமும் வேதத்திற்சொல்லிய வாக்யமும் சங்கிக்கத்தக்கவையோ அவன், வேதத்திலிருந்து சூத்திரன் போல, ஜராமரணமில்லாத லோகத்திலிருந்து விலகிவிடுவன். நல்ல மனமுள்ளவளே! வேதாத்யயனம் செய்தவனும் தர்மத்தை முக்யமாகக்கொண்டவனும் நற்குலத்தில் பிறந்தவனுமான அவன் தர்மானுஷ்டானம் செய்கிற அரசர்களால் பெரியோர்களிடத்தில் சேர்க்கத்

தருக்கவன். சாஸ்திரத்தை மீறின அற்பபுத்தியுள்ள எவன் தர்மத்தைக் குறித்து அதிகமாகச் சங்கைப்படுகிறானோ அவன் ருத்திரர்களைக் காட்டிலும் திருடர்களைக் காட்டிலும் மிக்க பாவமுள்ளவன். அறியமுடியாத ஸ்வபாவமுள்ளவரும் தர்மத்தால் வெகுகாலம் ஜீவிப்பவரும் மிக்க தவமுடையவரும் (திரும்பிப்) போகிறவருமான மார்க்கண்டேய ரிஷியானவர் நேராகவே உன்னால் பார்க்கப்பட்டாரன்றோ? வியாஸர், வஸிஷ்டர், மைத்ரேயர், நாரதர், லோமசர், சுகர், மற்றுமுள்ள ரிஷிகள் ஆகிய எல்லாரும் தர்மத்தாலேயே நல்லமனமுள்ளவர்கள். திவ்ய யோகசக்தியுடன் கூடினவர்களும் சபிக்கவும் வாழ்விக்கவும் வல்லவர்களும் தேவர்களைக் காட்டிலும் மேலானவர்களுமான இவர்களை நேராகவே பார்க்கின்றாயன்றோ? குற்றமற்றவளே! சாஸ்திரத்தில் பிரத்யக்ஷமான அறிவுள்ளவர்களும் தேவர்களுக்கு ஒப்பானவர்களுமான இவர்கள் முதலில் தர்மத்தையே செய்ய வேண்டுமென்று எப்பொழுதும் சொல்லுகின்றார்களன்றோ? ஓ! கல்யாணி! ஆகையால், ஈசுவரனையும் தர்மத்தையும், பேஜாகுணத்தால் மோகமடைந்த மனத்தினால், நிந்திப்பதும் சங்கைப்படுவதும் தகாதவள்ளலே. விவேகமில்லாதவன் தத்வ நிச்சயத்தை அடைந்த யாவரையும் பித்தர்களாக எண்ணுகிறான். தர்மத்தில் அதிக சங்கைகொண்டவன் வேறிடத்தில் நம்பிக்கை வைக்க மாட்டான். (தன்) மனத்தையே பிரமாணமாயுடைய கர்விஷ்டன் பெரியோர்களை அவமதிக்கின்றான். அவிவேகியானவன் புலன்களுக்குப் பிரீதி செய்வதுடன் கூடியதும் லோகத்திற்குத் தெரிந்ததுமான (விஷய) ஸுகத்தையே (இவ்வளவுதான் என்று) நினைக்கிறான். வேறு விஷயத்தில் அறியாமையை அடைகிறான். எவன் தர்மத்தைக் குறித்து ஸந்தேகப்படுகின்றானோ அவனுக்குப் பிராயச்சித்தமில்லை. (விஷயங்களைச்) சிந்திப்பவனும் கிருபணனுமான அந்தப் பாவி நல்ல லோகங்களை அடையமாட்டான். வேத சாஸ்திரங்களின் அர்த்தத்தை நிந்திக்கிறவனும் ப்ரமாணத்தைவிட்டு விலகினவனுமான மூடன், காம லோபங்களுக்கு உடன்பட்டவனாகி நரகத்தையடைகிறான். ஏ! கல்யாணி! கற்றறிந்த எவன் சங்கைப்படாமல் எப்பொழுதும் தர்மத்தையே அடைகின்றானோ அவன் சுத்தமான மனமுள்ளவனாகி மறுமையில் மோக்ஷத்தை அடைகின்றான். வேதப்ரமாணத்தை மீறித் தர்மத்தைச் செய்யாதவனும் எல்லா சாஸ்திரங்களையும் விட்டவனுமான மூடன் பிறப்புக்களில் ஸுகத்தை அடையமாட்டான். ஓ! பெண்ணே! 'எவனுக்கு ரிஷிகளின் வாக்கிய

மும சிஷ்டாசாரமும ப்ரமாணமில்லையோ அவனுக்கு இந்தலோகமு மில்லை, பரலோகமுமில்லை' என்பது நிச்சயம. ஓ! கிருஷ்ணையே! எல்லாவற்றையும பார்ப்பவர்களும எல்லாவற்றையும அறிந்தவர் களுமான ரிஷிகளால சொல்லப்பட்டதும சிஷ்டர்களால அனுஷ் டிக்கப்பட்டதும வெகுகாலமாயுள்ளதுமான தாமத்தைக குறித்து ஸந்தேகப்படாதே. ஓ! திரௌபதி! சமுத்திரத்தின கரையை (அடைய) விரும்புகின்ற வியாபாரிக்கு அந்த ஓடம்போல ஸ்வர்க்க த்தையடைகிறவர்களுக்குத் தாமமே ஓடம்; வேறில்லை. ஓ! குற்றமற்றவளே! தாமானுஷ்டானம செய்கிறவர்களால செய்யப் பட்ட தர்மம பயனற்றதாயிருக்குமானால், இழிவான இருளில (அஜ்ஞானத்தில) இந்த உலகம முழுகிவிடும். ஒருவரும ஸுகத்தை அடையார், பசுவைப்போல ஜீவனம்செய்வார்கள்; கெடுதலுட னேயே சேர்வார்கள்; ஒரு பயனையும் அடையார்கள். தவமும ப்ரம்மசரியமும் யஜ்ஞமும வேதாத்யயனமும் தானமும நேர்மையு மான இவைகள பயனற்றவைகளாயிருக்குமானால், பின்னுள்ள வர்களும அவரினும பின்னுள்ளவர்களும் தாமத்தைச் செய்யார் கள கிரியைகள் பயனற்றவைகளானால, அது மிகவும வஞ்சனையா கும. ரிஷிகளும தேவர்களும் கந்தர்வர்களும அஸுரர்களும் ராக்ஷஸர்களும் பெரியோர்களும, எந்தக்காரணத்திற்காக ஆதர வுடன் தர்மத்தைச் செய்வார்கள்? ஓ! கிருஷ்ணையே! அவர்களோ கடவுளைப பயனை அளிக்கிறவராக அறிந்துகொண்டு நன்மைக் காகத் தர்மத்தைசசெய்தார்களென்பது நிச்சயம. அந்தத தாமம தான் வெகுகாலமாயுள்ளது. அந்தத தாமம் பயனுள்ளதே. தர்மம் பயனற்றதென்று சொல்லப்படவில்லை. வித்தைகளுக்கும தவங்க ளுக்கும் பலன்கள காணப்படுகின்றனவன்றே? ஓ! கிருஷ்ணையே! உன் விஷயத்தில் இந்தப் பிறவியைக் கேட்டபடி அறிந்துகொள். ப்ரதாபமுள்ள திருஷ்டத்யும்னன எவ்விதம் ஜனித்தானென்பதை உள்ளபடி அறிகிறாய். ஓ! அழகியசிரிப்புள்ளவளே! கர்மாக்களுக் குப் பயனுண்டென்பதற்கு உபமானம் இவ்வளவே போதுமானது. விதவான் அற்பத்தாலும் (அதாவது கிடைத்ததைக்கொண்டும) சந் தோஷிக்கிறான். கற்றறியாத புத்தியீனர்கள் அதிகத்தாலும் ஸந் தோஷத்தை அடையவேமாட்டார்கள். அவர்களுக்குத் தர்மத்தா லுண்டான கர்மாவோ ஸுகமோ மறுமையில் சிறிதும இல்லை. ஓ! பெண்ணே! நல்வினை தீவினைகளுடைய பயனையடைதலும், ஸ்ருஷ்டி

யுமப்ரளயமும், தேவரகஸ்யஙகள். 1 இவைகளை எவனுமறியான். இந்தபபிராணிகள இவவிஷயததில் மோகததை அடைகினறன. 2 இவைகள தேவாகளால் இரகசியமாக வைததுககொள்ளததககவைகள். ஏனெனில, தேவர்களோ மாயையை மறைததுவைப்பவர்கள. இளைதத அஙகமுளளவர்களும் நலல விரதமுள்ளவாகளும தவததிலுல பாவததை எரிததவர்களும தெளிவான மனமுளளவாகளுமான பராமமணாகள இவறறைப் பாாக்கின்றாகள். பயன் தெரியாததால, தாமம் ஸநதேகிக்கப்படததக்கதனறு. தேவர்களும ஸநதேகிககப்படததக்கவாகளல்லர். முயறசியுடன் யாகம செய்யவேண்டும. அஸூயையிலலாதவனுககு கொடுக்கவேணடும். இந்த விஷயததில, 'கர்மங்களுககுப பயனிருக்கின்றது' எனறு பரமமா புததிரர்களுககுச சொலலிய தாமோபதேசததைக் காஸ்யபரிஷியானவர் அறிவா. ஓ! கிருஷ்ணையே! ஆகையால், உன்னுடைய ஸநதேகமானது பனிபோல நசிக்கட்டும். எல்லாம இருக்கிறதெனறு ஆலோசனை செயது, நாஸ்திக்யமான எணணததை விடு. பராணிகளை உண்டுபணணுகிற ஈஸ்வரரையும் நிந்தியாதே. அவரை வேண்டிக்கொள. அவரை வணஙகு. இவ்விதமான புததி உனக்கு இனி உண்டாக வேண்டாம. ஓ! கிருஷ்ணையே! எவருடைய அனுககிரகததால், அவருடைய பக்தனான மனிதன், தேவததனமையை அடைகின்றானோ (அந்த) மேலான தேவதையை எவ்விதததிலும் நிந்தியாதே' என்றார்.

---

## முப்பத்திரண்டாவது அத்யாயம்.

## அர்ஜுனாபிகமனபர்வம். (தொடர்ச்சி.)

(ஒரு ப்ராம்மணனிடமிருந்து கேட்ட பிருஹஸ்பதி நீதியைத் திரௌபதி யுதிஷ்டிரருக்குச் சொல்லியது.).

திரௌபதி, 'ஓ! பார்ததரே! நான் தர்மத்தை எவ்விதத்திலும் அவமதிக்கவில்லை; நிந்திககவுமிலலை. ப்ரஜைகளுக்குப் பதியான கடவுளை நான் எங்கு அவமதிககப் போகிறேன்? ஓ! பாரதரே! நான் துக்கததை அடைந்தமையால் இவ்விதம பிதற்றுகின்றேனெனறு அறிந்துகொள்ளும். திரும்பவும் பிதற்றப்போகின்

---

1 வேறு பாடம. 2 அதிகபாடமான அரைஸ்லோகம் விடபபட்டது.

றேன். நீர் நல்ல மனததுடன் என்னிடமிருந்து கேளும். ஓ! பகைவர்களை வாட்டுபவரே! இவ்வுலகில் பிறநதவனுல் கர்மாவோ செய்து தீரவேண்டும. [1] ஸ்தாவரங்கள கர்மாவில்லாமல் ஜீவிக்கின்றனவேயன்றி மற்றவைகளும மனிதர்களும அப்படி ஜீவிக்கவில்லை. ஓ! யுதிஷ்டிரரே! மாதாவின முலைபபால குடிப்பது முதல் (தளர்நது) படுக்கையை அடையும வரையில் அசையும் பிராணிகள் கர்மாவால் பிழைபபை அடைகின்றன. ஓ! பரதரிற் சிறந்தவரே! அசையும பிராணிகளிலும விசேஷமாக மனிதர்கள கர்மாவினலேயே இம்மையிலும மறுமையிலும ஜீவனததையடைய விரும்புகின்றார்கள். ஓ! பாரதரே! எலலா மனிதர்களும தாம மேன்மையடையும உபாயததை அறிகின்றார்கள்; நேராகவே உலகததினர் பார்க்கும்படி கர்மங்களின பயனை அனுபவிக்கின்றார்கள்; ஜந்துககள் தமது மேன்மையடையும் உபாயததைப பார்த்துக்கொண்டே ஜீவிககின்றார்கள். கொக்கானது ஜலததில தன் வேலையைச செயவதுபோல ஈசரும் தாமும் தமமுடைய காமாவைச செயகிறார்கள். வேலையற்ற ப்ராணிகளுக்கு ஒருவிதப பிழைபபும உணடாகாதனறே! அநதக் காமாவையே அடுககவேணடும்; ஒருபோதும் விடககூடாது; கர்மாவைச செய்யும; விடாதீர்; கர்மாவினலை சூழபபட்டிரும. செய்யததக்கதை அறிபவன் ஆயிரததில ஒருவன இருபபானே இரானே? அவனுக்கும் செல்வததைப பெருககுவதிலும் ரக்ஷணததிலும செய்யததகுநத வேலையுணடு. புதுவருமபடியில்லாமல செலவு செய்யப்படுமானல இமயமலையானுலும குறைந்துவிடுமனறே? பிரஜைகள காமாவைச செயயாமலிருக்குமானல எல்லாம நாசததை அடைந்துவிடும். அதுபோலவே, கர்மாவானது பயனற்றதாயிருக்குமானல் அவைகள் விருததியடையா. பயனை எதிர்பாராமல கர்மாவைச் செய்பவர்களையும் பார்ககிறோம். பலனை எதிர்பார்ததுக கர்மாவைச செய்யும் ஜனங்களையும் பார்ககிறோம். அப்படியிலலாவிடில், ஜனங்கள ஜீவனததை எவ்விதததிலும அறியமாட்டார்கள். லோகததில் தெய்வததையே மேலானதென்று சொலபவனும, பிடிவாதமாகத் தெய்வமில்லையென்று பேசுகிறவனும் வஞ்சிப்பவர்கள். கர்மாவில் புததியுள்ளவன் புகழப்படுகிறான். எவன வேலையற்றவனாக ஸுகமாய்த்தூங்கிககொண்டு தெய்வமே மேலானதென்கிறானே அதிக கெட்டபுததியுள்ள அவன, பச்சைமணகுடம் ஜலததில் நாசமடை

[1] 'ஸதாவரஙகளும மறற ஜனஙகளும் காமமினறி ஜீவிககிறதிலலை' எனபது பழையவுரை.

வதுபோல நாசத்தையடைகிறான். அதுபோலவே, பிடிவாதபுத்தி
யுள்ள எவன் கர்மாவைச் செய்வதில் சக்தியுள்ளவனாயிருந்தும் கர்மா
வைச் செய்யாதவனாயிருக்கிறானோ அவன், காப்பவனில்லாத துர்ப்
பலன்போல நெடுங்காலம் ஜீவிக்கமாட்டான். ஒருகாரணமுமின்றி
இங்கு ஒருவன் பலனையடைந்தால் அதனைப் பிடிவாதத்தாலென்று
நினைக்கின்றார்கள் ஏனென்றால், அந்தப்பயன் ஒருவனுடைய முயற்சி
யினாலும் உண்டானதன்றன்றோ? ஓ! பார்த்தரே! தேவப்ரீதிகர
மானவிதியால் ஒருவன் அடையும்பயன் தெய்வச்செயலென்று நிச்ச
யிக்கப்பட்டிருக்கிறது. மனிதன் எந்தப்பயனைக் கர்மாவினால் அடை
கின்றானோ, பிரத்யக்ஷமாகக் கண்ணால் பார்க்கப்பட்ட அது மனித
முயற்சியால் அடையப்பட்டதென்று கேள்வி. ஓ! மனிதரிற்சிறந்த
வரே! ஒருவன் ஸ்வபாவமாக ப்ரவ்ருத்தித்து, காரணமின்றி அடை
கிற பலனை ஸ்வபாவத்தாலுண்டானதென்று அறியும். இவ்விதம்
பிடிவாதத்தாலும் தெய்வத்தாலும் ஸ்வபாவத்தாலும் கர்மாவினாலும்
ஒருவன் அடையும் பயன் பூர்வ கர்மங்களின் பயன். தாதாவான
ஈஸ்வரரும் அந்தஅந்தக் காரணங்களால் மனிதர்களுக்கு முன்
செய்யப்பட்ட கர்மாக்களைப் பிரித்து இம்மையில் பயனை அளிக்கிறார்.
ஒருவன் நல்ல காரியத்தைச் செய்வதும் கெட்ட காரியத்தைச் செய்வ
தும் ஈஸ்வரரால் ஏற்படுத்தப்பட்ட முன்வினைப் பயனென்று அறிவீ
ராக. அந்த ஈஸ்வரர் ஒவ்வொரு பயனையும் கொடுப்பதில் இந்த
தேகமானது காரணமாக இருக்கின்றது. அவர் எவ்விதம் இந்தச்
சரீரத்தைப் ப்ரேரணை செய்கின்றாரோ அதற்குத் தக்கபடி, இது தன்
வசமின்றிச் செய்கின்றது. ஓ! குந்தீபுத்திரரே! எல்லாப் பிராணிக
ளும் கார்யங்களைச் செய்யச் சக்தியற்றவைகளாயிருந்தாலும் பரமேஸ்
வரர் அந்த அந்தக் காரியங்களில் ஏவிச் செய்விக்கிறார். ஓ! வீரரே!
ஒருவன் தானே மனத்தினால் பலன்களை நிச்சயம் செய்துகொண்டு,
பிறகு, புத்திபூர்வமாகக் கர்மாவினால் பயனை அடைகிற அவ்விஷயத்
தில் மனிதன் காரணமாகிறான். ஓ! ஆண்மையிற் சிறந்தவரே!
கர்மாக்கள் கணக்கிட முடியாதவைகள். வீடு, பட்டணம் இவைகளின்
ஸித்தியானது மனிதனைக் காரணமாகவுடையது. எள்ளினுள்
எண்ணெயையும் மாட்டில் பாலையும் கட்டையினுள் நெருப்பையும்
இவற்றை அடைவதற்குத் தக்க உபாயத்தையும் தீரன் அறிய
வேண்டும். அதற்குப் பிறகு, இவற்றினுடைய ஸித்திக்குத்தக்க
காரணங்களில் பிரவிருத்திக்கின்றான். இங்கு ப்ராணிகள் கர்மாவி
னுடைய அந்த ஸித்தியை அடுத்து ஜீவிக்கின்றன. ‘ஸமர்த்தனை

கர்த்தாவினால் இந்தக் கர்மாவானது நன்கு செய்யப்பட்டது; மூடனால் இது செய்யப்பட்டது' என்பது வேறுபாட்டினால் அறியப்படுகிறது. கர்மாவினால் உண்டுபண்ணக் கூடிய பலன்களில் இந்த மனிதன் காரணமில்லாவிட்டால் [1] இஷ்டம் [2] பூர்த்தம் இவைகளின் பலன் உண்டாகாது. சிஷ்யன் இரான். குருவும் இருக்கமாட்டான். மனிதன் கர்த்தாவாக இருப்பதினாலேயே காமம் ஸித்தித்தால் புகழப்படுகிறான்; ஸித்திக்காவிடில் இங்கு நிந்திக்கப்படுகிறான். இந்த விஷயத்தில் காமநாசம் எப்படி ஏற்படும்? சிலர் யாவையும் பிடிவாதத்தாலென்றும், சிலர் தெய்வத்தாலென்றும் சொல்லுகிறார்கள். மனிதனுடைய முயற்சியால் உண்டாகிறதென்று சிலர் சொல்லுகிறார்கள். தெய்வத்தால் உண்டாவது என்பதே மேலானது. இவ்வளவினால் மாத்திரம் கார்யம் (சித்தியாதென்று) சிலர் நினைக்கின்றார்கள். தெய்வமும் தற்செயலுமான யாவும் பார்க்கமுடியாதனவாக இருக்கின்றன. பிடிவாதத்திலிருந்தும் தெய்வத்திலிருந்தும் பயனினுடைய தொடர்ச்சியானது காணப்படுகிறதன்றோ? மனிதன் சில பலனைத் தெய்வத்தாலும் சிலவற்றைப் பிடிவாதத்தாலும் சிலவற்றைத் தன் கர்மாவினாலும் அடைகின்றான். இதில் நான்காவது காரணம் இல்லையென்று ஸமர்த்தர்களும் உண்மையறிந்தவர்களுமான மனிதர்கள் உறுதி கூறுகிறார்கள். அதுபோலவே, ஜீவர்களுக்கு விருப்பு வெறுப்புக்களான பலன்களைக் கொடுக்கிற ஈச்வரர் இல்லாமற்போனால் அவர்களுள் ஒருவனும் எளியவனாக இருக்கமாட்டான்; முந்தின வினைப்பயன் இல்லாவிடில் மனிதன் எந்த எந்தப் பயனை அடையவேண்டுமென்ற விருப்பமுள்ளவனாகக் கர்மாவைச் செய்கிறானோ அது அது ஸபலமாகவே ஆகும். எந்த மனிதர்கள் கார்யஸித்திக்கும் அநர்த்தஸித்திக்கும் (கீழ்ச்சொன்ன) மூன்றும் பரம்பராகாரணமென்று அறியவில்லையோ அவர்கள் நாஸ்திகர்கள் போன்றவர்களே. கர்மாவானது செய்யப்படவே வேண்டுமென்ற இது மனுவினுடைய நிச்சயம். இப்பொழுது நம்மிடத்தில் இந்த முயற்சியில்லாமையானது நிச்சயமாயிருக்கின்றது. ஓ! யுதிஷ்டிரரே! (கர்மாவைச்) செய்கிறவனுக்கு அநேகமாக இங்கு (பலன்) அவசியமுண்டாகும். சோம்பலுள்ளவன் ஒருபோதும் நிச்சயமான பலஸித்தியை அடையமாட்டான். (கர்மம் செய்து) பயன் கிடைக்காவிடில், அதன் தோஷத்தை

---

1 யாகம் முதலியன. 2 குளம், கிணறு, தோட்டம், கோயில் முதலியவற்றை அமைத்தல்.

விலகரும உபாயம காணபபடுகிறது. ராஜஸ்ரேஷ்டரே! அவ்விதம் கர்மாவைச செயதால கடனினமையை அடைகிருன. சோமபலாகப படுததிருக்கும இநத மனிதனை அமஙகளமானது அடைகிறது. ஸமாததஞனவன ஸநதேகமினறிப பலனையடைந்து ஐஸ்வரி யததை அடைகிருன். ஸமசயமுள்ளவாகள எலலாவறறையும பய னறறவைகளாகவும ஸநதேகமுளளவைகளாகவும சொலலுகிருர் கள. தைரியமுளளவாகளும ஸநதேகமறறவாகளும கர்மாவில முயனறவாகளுமான மனிதர்கள ஒரு விஷயததிலும அப்ப டிச் சொலவதிலலை. இபபொழுது நமமிடததில இநதக கஷடமா னது நிசசயமாக இருககிறது. நீா காமாவைச செய்தால ஸமசய மினறி அநதக் கஷடம இராது. அலலது, (முயனறும்) காரியம் ஸிததிககாமலே இருநதால், அதுவே உமககும பீமஸேனருக்கும அர்ஜுனருக்கும இரடடையர்களான தமபிகளுககும மகிமையா கிறது. காமாவைச செயதவன முடிவில பயனை அறிவதுபோல நமககோ பிறருக்கோ காமம் பயனபடுமெனபது விளமபிதது அறியப்படும்.

இவவுலகததில பூமியைக கலபபையிஞல் உழுது விதையை விதைககிருன. பிறகு, உழுகிறவன் சுமமா இருககிருன. அவ விஷயததில மேகம காரணமாகிறது. மழை உதவிசெயயாவிடில, அவவிஷயததில உழுகிறவன் குறறமுளளவனல்லன. 'வேறு மனி தன் எதைச் செய்வானே அது என்ஞல முழுவதும் செயயப படடது. அது இந்தப்பயனை உடையதாயிருககிறது. ஹரிடத் திலும் என்னுடைய குற்றமிலலை' எனறு தைரியமுள்ளவன் ஆலோசனை செயதுகொணடு, அவ்விஷயததில தனனை நிந்திக்கக் கூடாது. ஓ! பாரதரே! செய்கின்ற எனக்கு அர்ததஸிததியானது உண்டாகிறதில்லை யென்று வெறுபபை அடையவுஙகூடாது. எந தக் கர்மாவுக்கும் இரணடுவித முடிவு உணடு. ஸிததியோ அஸித தியோ உணடாகட்டும. பிரவிருததியினமை கூடாது. அனேகம் பதாாததஙகளின சேர்க்கையி லிருக்கும்போதன்ருே கர்மமானது ஸிததிககின்றது. குணஸாதன மிலலாவிட்டால் பயன் குறை கிறது; அல்லது பயனிலலாமலும் போகிறது. செய்யாமல் போனல் ஒருவிஷயததிலும் பயனும் காணப்படுகிறதில்லை. குணமும் காணப் படுகிறதில்லை. தீரன் யுகதிக்கும பலததிற்கும் தக்கபடி நன்மை உண்டாகவேணடிப் புததியால் தேச காலங்களையும் உபாயங்களையும மங்களங்களையும் சேர்க்கிருன். பராக்கிரமமே அக்கார்யததை உபாயத

தால் உபதேசிக்கின்றது. அதனை உபாயததாலும செய்யலாம். (ஆனு லும) கார்யங்களில பராக்கிரமம மிக முககியமானது. எலலாமே பாராககிரமததால் ஆவன. ஏனெனருல, புததிமான அதில அனேக குணஙகளுடன க்ஷேமததைப் பார்ககிருன. ஆதலால, அதிலிருந்து ஸமாதானததாலேயே அர்த்ததைதையடைய விருமபவேணடும். அதற் குததகக வேலையையும செய்ய வேணடும. ஓ! யுதிஷடிரரே! பகை யானது கடலேயானுலும் மலேயேயானுலும அதற்கும தீஙகையும தேசததை விடுதலேயும [1] விருமபவேணடும. மனிதன விஷயததில் சொலலவும் வேணடுமா? பகைவாகளின இடைவெளியைத் தேடும் விஷயததில எபபொழுதும முயற்சியுளள மனிதன தன் விஷயத திலும பிறர் விஷயததிலும கடனறறிருககும் தனமையை அடை கிருன. மனிதன ஒருபோதும தனனை அவமதிக்ககூடாது; தனனை அவமதிததவனுககு நலல செலவம உணடாகாதனறே? ஓ! பார தரே! உலகததினுடைய இநதச சிததியானது இவவித நிலைமையுள ளது. காலம, நிலைமை இவைகளின பேதததால ஸிததியின் ஸவ ரூபமானது அனேகவிதமெனறு சொலலபபடடிருககினறது. ஓ! பரதரிற் சிறநதவரே! முன எனனுடைய பிதாவானவர் பணடிதரான ஒரு பராமமணரை (வீட்டில்) வஸிக்கச செய்தார். (அவர்) என பிதா வுக்கு இந்த எலலா அர்த்ததைதயும முன சொனனர். அவர் பிருஹஸ்பதியால சொல்லப்பட்ட நீதியை என் உடனபிறந்தோர் களைக குறிதது உபதேசிததார். நான் அபபொழுது வீட்டில் அவர் களின் பககததிலிருந்து இதனைக் கேட்டேன. ஓ! அரசரே! யுதிஷ் டிரரே! ஒரு காரியததைக குறிததுப் பிதாவினிடம் வநது கேட்க விருப்பததுடன் உட்கார்ந்திருக்கும் எனக்கு அவர் நன்மொழி கூறி (இதனைச) சொனனர்' எனருள.

---

## முப்பத்துமூன்ருவது அத்யாயம்.

## அர்ஜுனுபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

(பீமன் சண்டை செய்து ராஜ்யத்தைப் பெறவேண்டுமென்பதை நீதியுடன் தர்மபுத்திரநுக்குக் கூறியது)

திரௌபதியின வார்ததைதயைக கேட்டு, பீமஸேனன், பொரு தவனுகிக் கோபமுண்டு பெருமூசசுவிட்டுக்கொணடு ஸமீபததில

---

[1] வேறு பாடம.

வந்து அரசரை நோக்கிச் சொல்லலானான். 'அரசரே! ஸத்புருஷர்களுக்குத் தக்கதும் தர்மத்தைவிட்டுவிலகாததுமான நல்வழியை அடையும். தர்மார்த்த காமங்களையிழந்த நமக்குத் தபோவனத்தில் வஸிப்பதால் என்ன பயன்? துரியோதனனால் அந்த ராஜ்யமானது கபடமான சூதைக்கொண்டே கவரப்பட்டதேயன்றித் தர்மத்தாலன்று; ஒழுங்கினாலும் அன்று; பராக்கிரமத்தினாலும் அன்று; வலிமையற்றதும் இதரப்ராணிகள் சாப்பிட்டு மிகுந்ததைச் சாப்பிடுகிறதுமான நரியினால் வலிமையுள்ள சிங்கங்களினிடமிருந்து மாம்சம் கவரப்படுவதுபோல நமது ராஜ்யம் கவரப்பட்டது. ஓ! அரசரே! ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்றுவதென்னும் சிறு தர்மத்தால் மறைக்கப்பட்டதனால் தர்ம காமங்களுக்குக் காரணமான அரசாட்சியாகிய அர்த்தத்தைவிட்டு ஏன் துக்கத்தால் வாட்டப்படுகிறீர்? காண்டீவத்தை வில்லாகவுடைய அர்ஜுனனால் காப்பாற்றப்பட்டதும் இந்திரனாலும் கவரமுடியாததுமான ராஜ்யமானது, உம்முடைய அஜாக்கிரதையினாலே நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே எங்களை அலக்ஷியம் செய்து கவரப்பட்டது. கைநொண்டிகள் (பார்த்திருக்கும்போது) பில்வப்பழம் கவரப்படுவது போலவும், கால்நொண்டிகள் (பார்த்திருக்கும்போது) பசுக்கள் கவரப்படுவதுபோலவும், நாங்கள் உடனிருக்க ஜீவிக்கும்போது, ஐசுவரியம் கவரப்பட்டது. தாம் இரையில் நரிகளைப்போல அடைந்த உடைமைக்குப் பரியமென்று இப்படிப்பட்ட அதிக துக்கத்தை இனிமேல் ஏற்றுக்கொண்டோம். ஓ! பரதரிற் சிறந்தவரே! உம்முடைய கட்டளையால் எங்களை அடக்கிக்கொண்டு நம் மித்திரர்களைக் கைவிட்டுத் துக்கிக்கிறோம்; பகைவர்களையும் சந்தோஷப்படுத்துகிறோம். உமது கட்டளையை ஏற்றுக்கொண்ட நாங்கள் அப்பொழுதே இந்தத் திருதராஷ்டிரரின் புத்திரர்களைக் கொல்லாமலிருந்ததென்னும் பாவமானது எம்மை வாட்டுகின்றது. ஓ! அரசரே! கிருஷ்ணரும் அர்ஜுனனும் அபிமன்யுவும் ஸ்ருஞ்சயரும் நானும் நகுல ஸஹதேவர்களும் சந்தோஷிக்காததும் வீரர்களால் நடத்தப்படாததும் பலமற்றவர்களால் மேற்கொள்ளப்பட்டதுமான நம்முடைய இந்த நடையை ஒரு மிருகத்தின் நடையைப்போலப் பாரும். நீரெப்பொழுதும், 'தர்மம், தர்மம்' என்று விரதத்தால் இளைத்திருக்கின்றீர். ஓ! அரசரே! வெறுப்பினால், நபும்ஸகத்துவமுடைய ஜீவனத்தை நீர் அடையாமலிருக்கின்றீரா? தம்முடைய செல்வத்தைத் திரும்ப அடைவதற்குச் சக்தியற்ற அற்ப மனிதர்களன்றோ எல்லாவற்றை

யும் நாசம்செய்வதும் பிரயோஜனமற்றதுமான வைராக்யத்தைப் பிரியமாகக் கொள்கிறார்கள். ஓ! அரசரே! கண்ணுள்ளவரும் சக்தியுள்ளவருமான நீர், எங்களிடத்தில் பராக்கிரமத்தைப் பார்த்திருந்தும், குரூரமில்லாமலிருப்பதை மேற்கொண்டு, உமமுடைய பிரயோஜனத்தை அறியவில்லை. இந்தத் திருதராஷ்டிர புத்திரர்கள் முதலியோர் துன்பம் செய்யாதவர்களும் பொறுத்துக்கொள்ளுகிற வர்களுமான நம்மைச் சக்தியற்றவர்களாகவே எண்ணுகின்றார்கள். அதுதான் துக்கம். சண்டையில் மரிப்பது துக்கம் அன்று. அவ்விஷயத்தில் கபடமில்லாமல் சண்டை செய்கின்றவர்களும் திரும்பாதவர்களுமான (நமக்கு) எல்லாவிதத்தாலும் மரணம் மேலான தன்றோ? சரீரத்தைவிட்டு (நல்ல) உலகங்களை அடைவோமன்றோ? ஓ! பரதரிற் சிறந்தவரே! அல்லது, நாமே இவர்களைக் கொன்று எல்லாப் பூமியையும் கொள்வோம். அப்படி இருந்தாலும் நமக்கு க்ஷேமமே. வைரத்திற்குப் பிரதிக்ரியை விரும்புகிறவர்களும் அதிகமான கீர்த்தியை விரும்புகிறவர்களும் சொந்தத் தொழிலைச் செய்கிற வர்களுமான நமக்கு இது எவ்விதத்திலும் செய்யத்தகுந்ததே. செய்யத் தகுந்ததாகவே இருப்பதும் உயிர் வாழ்க்கைக்கு உரியதுமான (யுத்தத்தில்) தமக்காகச் சண்டை செய்கிறவர்களுடைய ராஜ்யம் பகைவரால் அபகரிக்கப்பட்டாலும் புகழேயன்றி இகழ்ச்சி யில்லை. அரசரே! எந்தத் தர்மமானது (=செய்கையானது) [1] மித்ரர்களுக்கும் தனக்கும் சிரமத்தையே பயனாகவுடையதோ அது துக்கமே. அது தர்மமன்று. அது கெட்டவழி. எவ்விதத்திலும் தர்மத்தை நித்யமாயுடையவனும் தர்மம் செய்து இளைத்தவனுமான மனிதனை, இறந்தவனைச் சுகதுக்கங்கள் விடுவதுபோலத் தர்மார்த்தங்கள் விட்டுவிடுகின்றன. எவன் தர்மத்தைத் தர்மத்திற்காகவே செய்கின்றானோ அவன் கஷ்டத்தை அடைகிறவனே. அவன் தேர்ந்த அறிவுள்ளவனல்லன். குருடன் சூரியனுடைய காந்தியை அறியாததுபோல அவன் தர்மத்தினுடைய பயனை அறியமாட்டான். அர்த்தமானது எவனுக்கு அர்த்தத்தையே பிரயோஜனமாயுடையதோ அவன் அர்த்தவிஷயத்தில் தெரிந்தவனல்லன். அவன் காட்டில் மாடுகளைக் காக்கும் வேலைக்காரன் போன்றவனே. எவன் அர்த்தத்தையே மிக விரும்பிக்கொண்டு மற்றவர்களை அனுஷ்டிக்கவில்லையோ நிந்திக்கப்பட்ட அவன், பிரமஹத்தி செய்தவன்போல எல்லாப் பிராணிகளாலும் கொல்லப்படத் தகுந்தவன். எவன் எப்பொழுதும

1 வேறு பாடம்.

காமத்தையே விரும்புகின்றவனுக்கு மற்றவைகளை அநுஷ்டிக்கவில்லையோ அவனுக்குச் சிநேகிதர்கள் அற்றுப்போகிறார்கள். அவன் தர்மத்தாலும் அர்த்தத்தாலும் விடப்படுகிறான். தாமார்த்தமில்லாத காமத்தினால் விளையாடுகிற அவனுக்குக் காமத்தின் முடிவில், ஜலம் வற்றும்போது மீனுக்கு மரணம் நிச்சயமாயிருப்பதுபோல, மரணம் நிச்சயம். ஆகையால், பண்டிதர்கள் எப்பொழுதும் தாமார்த்தங்களில் தவறுதலை அடையார். ஏனெனில், அக்னிக்கு அரணி காரணமாவது போலக் காமத்திற்கு அது காரணம். எவ்விதத்திலும் அர்த்தமானது தர்மத்தைக் காரணமாயுடையது. தர்மமும் அர்த்தத்தைப்பற்றியது. மேகமும் ஸமுத்திரமும்போல, ஒன்று மற்றொன்றினால் நடத்தப்படுபவைகளென்று அறியும். போகயவஸ்துக்களை அநுபவிப்பதாலும் தனத்தைப் பெறுவதாலும் உண்டாகும் ப்ரீதியே காமம். அது மனத்தின் ஸங்கல்பமே. அதற்குச் சரீரம் காணப்படவில்லை. ஓ! அரசரே! அர்த்தத்தை விரும்புகின்ற மனிதன் பெரிய தாமத்தைச் செய்ய விரும்புகிறான். காமத்தை விரும்புகிறவன் அர்த்தத்தை விரும்புகின்றான். காமத்திலிருந்து மற்றதை விரும்புவதில்லை; ஏனெனில், [1] புத்திமான்களால் அர்த்தத்தின் பயனாகக் காமம் அநுபவிக்கவே படுவதனால், கட்டையிலிருந்து உண்டான சாம்பலிலிருந்து வேறு பொருள் உண்டாகாததுபோல, ஒரு காமத்திலிருந்து வேறு காமம் ஸித்திக்கிறதில்லை. ஓ! வேந்தரே! வேடன் இந்தப் பக்ஷிகளைக் கொல்லுவதுபோலப் பிராணிகள் விஷயத்தில் கொல்வதென்னும் இதுவும் அதாமத்தின் ரூபம். எவன் காமத்தாலும் லோபத்தாலும் தர்மத்தின் வழியில் செல்லவில்லையோ அந்தக் கெட்ட புத்தியுள்ளவன் இம்மையிலும் மறுமையிலும் எல்லாப் பிராணிகளாலும் கொல்லப்படத் தகுந்தவன். ஓ! அரசரே! செல்வத்தால் ஸம்பாதிக்கப்படும் காமம் உமக்கு நன்கு தெரியும். அந்தச் செல்வத்தின் தன்மையையும் அதிகமான வேறுபாடுகளையும் அறிவீர். அந்தச் செல்வம் [2] கிடையாவிடினும், (கிடைத்து) ஜரையினாலோ மரணத்தினாலோ அழிந்தாலும், அநர்த்தமென்று கருதுகின்றனர். அந்த அநர்த்தம் நம்மிடத்தில் இருக்கிறது; விஷயத்தில் பற்றுகிற ஐந்து இந்திரியங்கள் மனம் ஹ்ருதயம் இவைகளுக்கு உண்டாகிற பிரீதியானது காமமென்பது என்னுடைய எண்ணம். அது கர்மங்களின் உத்தமமான பலன். இவ்விதமே தர்மார்த்தங்களையும் காமத்தையும் வெவ்வேறாகவே

1, 2 வேறு பாடம்.

பார்த்து மனிதன் தர்மத்திலேயே முயன்றவனாயிருக்கக்கூடாது; அர்த்தத்திலேயே முயன்றவனாகவும் இருக்கக்கூடாது; காமத்திலேயே முயன்றவனாகவும் இருக்கக்கூடாது; எல்லாவற்றையும் எப்பொழுதும் செய்யவேண்டும். நாளின் முற்பாகத்தில் தர்மத்தையும் நடுப்பாகத்தில் தனத்தையும் கடைசியில் காமத்தையும் செய்யவேண்டும். இவ்விதம் இந்தவிதியானது சாஸ்திரத்தால் செய்யப்பட்டது. முந்தியவயதில் காமத்தைச் செய்யவேண்டும். நடுவயதில் தனத்தைச்சம்பாதிக்கவேண்டும். கடைசியான வயதில் தர்மத்தைச் செய்யவேண்டும். இவ்விதம் இந்த விதியானது சாஸ்திரத்தினால் செய்யப்பட்டிருக்கின்றது. ஓ! பேசுகிறவர்களுள் சிறந்தவரே! காலமறிந்த பண்டிதன் தர்மம், அர்த்தம், காமம் இவைகளை உள்ளபடி பிரித்து, எல்லாவற்றையும் காலத்தில் அனுபவிக்கவேண்டும். ஓ! அரசரே! குருநந்தனரே! (இவைகளை விட்டுவிடுவதாகிய) மோக்ஷம் மிகமேலானது. ஸுகத்தை விரும்புகிறவர்களுக்கு (ஸாம தான பேத தண்ட மென்கிற) உபாயத்தோடுகூடிய புத்தியையடைந்து (அதனால்) அரசாட்சியையும் அடைவது மேலானது. ஓ! வேந்தரே! மோக்ஷமாவது சீக்கிரமாய்ச் செய்யப்படட்டும்; (ராஜ்ய) ப்ராப்தியாவது அடையப்படட்டும். (இரண்டுக்கும்) நடுவிலுள்ளவனுடைய உயிர்வாழ்க்கையானது, ரோகியினுடைய உயிர்வாழ்க்கைபோலத் துக்கத்தைக் கொடுக்கிறது. தர்மமானது என்னால் அறியப்பட்டுமிருக்கிறது; உம்மால் எப்பொழுதும் செய்யப்பட்டுமிருக்கிறது. அறிவுள்ளவர்களான அன்பர்கள் உம்மிடத்தில் கர்மானுஷ்டானத்தைச் சொல்லுகிறார்கள். ஓ! அரசரே! தானம், யாகங்கள், ஸாதுக்களின் பூஜை, வேதத்தைத் தரித்தல், கபடமற்றிருத்தல் ஆகிய இவை மேலான தர்மம்; இங்கும் இறந்த பிறகும் பயன் தருவன. ஓ! வேந்தரே! ஆண்மையிற் சிறந்தவரே! மற்ற எல்லாக் குணங்களுமிருந்தாலும், இந்தத் தர்மம் அர்த்தமில்லாதவனால் செய்யமுடியாது. ஓ! அரசரே! ஜகத்தானது தர்மத்தைக் காரணமாகவுடையது. தர்மத்தைக்காட்டிலும் மற்றது மேலாகாது. அரசரே! தர்மமும் அதிக அர்த்தத்தால் செய்யக்கூடியது. அர்த்தமானது பிக்ஷையெடுப்பதால் அடையமுடியாதது; எளிமையால் ஒருபோதும் அடையமுடியாதது; அதுபோலத் தர்மபுத்தியால்மாத்திரமும் அடையமுடியாதது. எதனால் த்விஜன் ஸித்தியை அடைவனோ (அந்த) யாசித்தலானது உமக்கு (ச் சாஸ்திரத்தால்) தடுக்கப்பட்டிருக்கிறது. ஆண்மையிற் சிறந்த

வரே! சக்தியினாலேயே அர்த்தத்தையடையும் விருப்பத்தில் முயற்சி செய்யும்; க்ஷத்ரியனுக்குப் பிக்ஷை எடுப்பது (சாஸ்திரத்தில்) விதிக்கப்படவில்லை. (க்ஷத்ரியனுக்கு) வைசிய சூத்திரர்களுடைய ஜீவனஹேதுவும் விதிக்கப்படவில்லை. சரீரபலமே விசேஷமான தர்மம். ஓ! பார்த்தரே! ஸ்வதர்மத்தை மேற்கொள்ளும். எதிர்த்து வருகிற பகைவர்களை நாசஞ்செய்யும். பார்த்தனாலும் என்னாலும் தார்த்தராஷ்டிரர்களாகிற வனத்தை அழியும். கற்றறிந்த புத்திமான்கள் தலைவனாயிருத்தலையே தர்மமென்கிறார்கள். தலைமையை அடையக்கடவீர். நீர் தாழ்ந்த தன்மையிலிருப்பதற்குத் தக்கவரல்லீர். ஓ! ராஜேந்திரரே! பிறகு, ஆலோசனை செய்யும். பழமையான தர்மங்களை அறிவீர். எதனிடமிருந்து பிராணியானது பயத்தை அடையுமோ அந்த ஹிம்ஸாரூபமான தொழிலுள்ளவராகப் பிறந்திருக்கிறீர். ஓ! அரசரே! பிரஜைகளைக் காப்பதாலுண்டான பயன் உமக்கு இழிவானதன்று. இது உமக்குப் பழமையான தர்மமாக ஈச்வரனால் விதிக்கப்பட்டது. ஓ! பார்த்தரே! அதிலிருந்து விலகினால், உலகத்தில் பரிஹாஸத்தை அடைவீர். மனிதர்களுக்குத் தம தர்மத்திலிருந்து சலிப்பது புகழப்படுவதன்றன்றோ? ஓ! கௌரவரே! அப்படிப்பட்ட (நீர்), மனத்தை க்ஷத்ரியத்தன்மையுள்ளதாகச் செய்துகொண்டு, இந்தத் தளர்ந்த மனத்தைவிட்டு, வீரியத்தையடைந்து காளைமாடுபோலப் பாரத்தைத் தாங்கும். ஓ! அரசரே! ஒரு வேந்தனும் தர்மம் ஒன்றிலேயே மனத்தைச் செலுத்தி ஒருபோதும் பூமியை ஜயித்ததில்லை; மேன்மையை அடைந்ததில்லை; அரசச்செல்வத்தையும் ஜயித்ததில்லை. வேடன் மிருகங்களுக்கு விருப்பமான நல்ல ஆகாரத்தைக்கொடுத்து (நம்பச்செய்து) பிறகு (அவைகளை) ஆகாரமாக அடைவதுபோல, (அரசன்) ஆசைகொண்ட மனமுள்ள அனேகம் பகைவரின் பக்ஷத்தினரை ஏமாற்றுதலால் அரசாட்சியை அடைகிறான்.

ஓ! பாண்டவரிற் சிறந்தவரே! முன்னுண்டானவர்களும் நன்கு ஐச்வரியத்தை அடைந்தவர்களும் ப்ராதாக்களுமான அஸுரர்கள் (தேவர்களால்) எல்லாவிதத்தாலும் கபடமாகவே ஜயிக்கப்பட்டார்கள். ஓ! பூமிக்கு அரசரே! புஜபலமமைந்தவரே! பலமுள்ளவனுக்கே யாவும் என்னும் இதனை அறிந்துகொண்டு, மிக்க கபடத்தையுடையவர்களான பகைவர்களை அழிப்பீராக. அர்ஜுனனுக்கொப்பாக யுத்தத்தில் வில்லெடுத்துச் சண்டைசெய்பவனும் எனக்குச் சமானமாகக் கதையெடுத்தவனும் உண்டானதுமில்லை; உண்டாகப்

போகிறதுமில்லை. ஓ! அரசரே! மிக்கபலமுள்ளவன் தன் வலிமையினாலே யுத்தம் செய்கிறானேயல்லாமல் கூட்டததுடனாவது சதருகக்ஷியில் சேர்ந்து பலாபலங்களைத தெரிந்துகொண்டாவது செய்கிறதில்லை. ஓ! பாண்டவரே! வலிமையுள்ளவராயிரும். வன்மையே அர்த்தத்திற்குக் காரணம்; மற்றது வீண். ஹேமந்தருதுவிலுள்ள மரததின் நிழல்போல அது பயனற்றதாகும். ஓ! கௌந்தேயரே! விதையை விரும்புமவன் முதலில விதையை விதைததுச் செலவு செய்வதுபோல அதிகமான பொருளை விரும்புகின்றவன் பொருளின் செலவும் செய்யவேண்டிவரும். உமக்கு இதில் சந்தேகம வேண்டாம். எங்கே பொருளின் செலவும வரவும் ஸமமாயிருப்பதன்றி லாபமில்லையோ அங்கே வியாபாரம் செய்யக்கூடாது. அது [1] கழுதைசகுச் சொறிந்துகொடுப்பதாகும். ஓ! அரசரே! இப படியே, [2] அற்பமான தர்மத்தைவிட்டுப் பெரிய தர்மத்தைச்செய்கிற மனிதன் புத்தியுள்ளவனென்பது நிசசயிக்கப்பட்டிருக்கிறது. பண்டிதர்கள தம்முடைய நண்பர்களைககொண்டு பகைவர்களுடைய நண்பர்களைப் பிரிககிறார்கள். வேறுபட்ட மிததிரர்களால விடப் பட்டுப் பலங்குறைந்தவனைத தன் வசப்படுததுகிறார்கள். ஓ! அரசரே! மிக்கபலமுள்ளவனும் பலததுடன் யுததம் செய்து எல்லா பிரஜைகளையும் தன்வசப்படுததுகிறானே அல்லாமல் முயற்சியினாலும் நன்மொழிகூறி அழைப்பதாலும் வசப்படுததுவ திலலை. பகைவன் மிக்க பலமுள்ளவனா யிருநதாலும் வண்டுகளால் தேன் எடுப்பவன் கொல்லப்படுவதுபோலத துர்பபலர்களால் ஒன்றுசேர்ந்தே கொல்லப்படக்கூடியவனாகிறான். ஓ! அரசரே! சூரியன் கிரணங்களால் எல்லாப்ரஜைகளையும் நீரைப் பெய்து காபபது போலவும் நீரை வறறசசெய்து அழிப்பது போலவும் நீரும் ஸூரியனுககு ஒப்பாகக் கடவீர். அரசரே! நமது முன்னோர்களால் விதிப்படி செய்யபபட்ட பூமியின் பாலனம் அனாதியான தவமெனறு எனக்குக் கேள்வி. அரசரே! க்ஷத்திரியன் தன் தர்மமான யுத்ததைச் செய்து வென்றோ, மரிததோ (நல்ல) உலகங்களை அடைவதுபோலத் தவத்தால் அடையான். இந்த உம்முடைய துக்கததைப் பார்தது, ஸூரியனிடமிருந்து

---

1 பயனின்மையோடு பாவமும் உணடாகுமென்பது.

2 'பிரதிஜ்ஞையைக காபபதாகிய அறபதர்மத்தைவிட்டு ராஜயலாபத்தால் செயயக்கூடிய தானம் யாகம் முதலிய பெரிய தாமங்களைச செய பவன்' என்பது பழயவுரை.

காந்தியும சந்திரனிடமிருந்து அழகும் விலகிவிடுமென்று உலகம் நிச்சயிததிருக்கிறது. அரசரே! தனிததனி கூடின கூட்டததினர்கள் உம்முடைய ஸ்தோததிரங்களோடும் பகைவனுடைய நிந்தைகளோடும் பேசிககொள்ளுகிறுர்கள். ஓ! அரசரே! ப்ராம்மணர்களும் குருக்களும ஒன்று சேர்ந்து ஸந்தோஷததுடன் உமமுடைய இந்தச சொல்தவறுமையை மேலானதாகச சொல்லுகிறுர்கள். உம்மால்!, அறியாமையாலும் எளிமையாலும பேராசையாலும் பயத்தாலும காமததாலும் பொருள் நிமிததத்தாலும் சிறிதும் பொய் சொல்லப்பட்டதில்லை. அரசன் பூமியை அடைவதற்காக எந்த அற்பமான பாவத்தைச் செய்கிறுனே அதையெல்லாம், பிறகு, அதிக தக்ஷிணையுள்ள யாகஙகளால் போக்குகிறுன். ஓ! அரசரே! வீரரே! ஆயிரக்கணக்கான கோக்களையும் கிராமங்களையும் ப்ராமமணாகளுககுக் கொடுதது [1] இருட்டிலிருந்து சந்திரன் விடப்படுவதுபோலப் பாவங்களிலிருந்து விடபபடுகிறுன். ஓ! குருநந்தனரே! யுதிஷ்டிரரே! பட்டணததிலும் தேசததிலுமுள்ள பிராயமுதிர்ந்தவரும் பாலரும உள்ளிட்ட யாவரும ஒன்றுசேர்ந்து பெரும்பான்மையாக உம்மைத துதிககிறுர்கள். பாரதரே! துரியோதனனிடத்தில் ராஜ்யமிருப்பது நாய்த்தோற்பையில் பாலும, சூத்திரனிடததில் வேதமும, திருடனிடததில் மெய்யும், ஸ்திரீயினிடத்தில் பலமும் இருப்பது போன்றது என்று உலகத்தில் நிச்சயவார்த்தை நடக்கிறது. மேலும், இந்த ஸ்திரீகளும பாலர்களும் (மேல் சொல்லிய நாய்தோலில் பாலென்கிற பொருளுள்ள சுலோகததை) வேதமாகப் படிக்கின்றுர்கள். ஓ! பகைவரை அடக்குபவரே! எஙகளுடன் நீரும் இந்த அவஸ்தையை அடைந்து!, உமககுக கஷ்டம் உண்டானபொழுது!, நாங்கள் யாவரும் நாசமடைநதவாகளாவோம. அபபடிப்பட்ட நீர் எல்லாவிதமான போர்ககருவிகளுடனுஙகூடின ரததததை அடைந்து ப்ராம்மணர்களுக்கு ஆததநதைக் கொடுப்பதற்கு விரைந்து (பகைவரை) எதிர்ததுச் செல்லக் கடவீர். ப்ராம்மணர்களை ஆசிர்வதிக்கச்செயது, அஸ்திரமறிந்தவர்களும் உறுதியான வில்லுள்ளவர்களும் ஸர்ப்பம்போன்றவர்களும் வீரர்களுமான ஸகோதரர்களால் இந்திரன் தேவர்களால் சூழப்படுவதுபோலச

[1] சநதிரனைககணட இருள விலகுவதுபோல இவனிடமிருநது பாவம் விலகுமெனபது, 'மேகஙகளிலிருந்து சந்திரன விடுபடுவதுபோல' என்பது ஆஙகில மொழிபெயாபபு.

சூழப்பட்டு அஸ்தினுபுரத்தையடைந்து, அஸுரர்களை இந்திரன் நொறுக்குவதுபோலப் பகைவர்களைப் பராக்கிரமத்தால் பொடி செய்துகொண்டு துரியோதனனிடமிருந்து ராஜ்யத்தை மீட்டுக் கொள்வீராக. காண்டீவத்திலிருந்து விடப்பட்டவைகளும் கழுகி றகு பூண்டவைகளும் ஸர்ப்பம்போல் விளங்குகின்றவைகளுமான பாணங்களுடைய ஸ்பரிசத்தை ஒருமனிதனும் தாங்கமாட்டா னன்றோ? பாரதரே! கோபங்கொண்ட என்னுடைய கதாயுத வேகத்தை யுத்தத்தில் பொறுக்கக்கூடிய வீரனுமில்லை; யானையு மில்லை; குதிரையுமில்லை. கௌந்தேயரே! ஸ்ருஞ்சயர்களுடனும் கைகேயர்களுடனும் வ்ருஷ்ணிகளுள் சிறந்த கோவிந்தருடனும் (இருத்தலால்), ராஜ்யத்தை யுத்தத்தில் ஏன் அடையமாட்டோம்? அரசரே! பெருஞ்சேனையுடன்கூடி இவ்விஷயத்தில் முயற்சியைச் செய்தால், சத்துருவின் கையையடைந்த பூமியை ஏன் அடைய மாட்டீர்?' என்றான்.

---

முப்பத்துநான்காவது அத்யாயம்.

## அர்ஜுனுபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

**(யுதிஷ்டிரர் தாம்செய்த பிரதிஜ்ஞையை விடமுடியாதென்பதையும் பிரதிஜ்ஞையின் முடிவுக்காலத்தை எதிர்பார்த்திருக்கவேண்டு மென்பதையும் பீமனுக்குச்சொல்லியது.)**

ஸத்தியத்தையே விரதமாகவுடையவரும் அதிக மஹிமை யுள்ளவருமான அந்த அஜாதசத்ருவான அரசர், பீமஸேனனால் இவ்விதம் சொல்லப்பட்டு, பிறகு, தைர்யத்துடன் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானார். 'ஓ! பாரத! இது உண்மை; ஸந்தேகமில்லை. வாக்கியமாகிற பாணங்களால் ஏன் என்னைப் பிடித்துத் துன்புறுத்துகிறாய்? உன்னை நான் நிந்திக்கவில்லை. தகாத இந்தத் துன்பமானது என்னுடைய அநியாயத்தினாலன்றோ உங்க ளுக்கு உண்டாயிற்று? நான் திருதராஷ்டிரபுத்திரனிடமிருந்து தேசத்துடன் அரசாட்சியை அபகரிக்கவிருப்பங்கொண்டு சூதை அனுஸரித்தேன். அதில், வஞ்சகனும் ஸுபலன் குமாரனுமான சகுனி துரியோதனனுக்காக எதிர் ஆட்டம் ஆடினான். மிக்க மாயையுள்ளவனும் மலைநாட்டரசன் புத்திரனுமான சகுனி ஸபை யின் நடுவில் கூட்டமான சூதுக்காய்களை உருட்டி, மாயையற்ற

என்னை மாயையால் வென்றுவிட்டான். ஓ! பீமஸேன! அதி
லிருந்து துன்பத்தைப் பார்த்தேன். சகுனியின் விருப்பத்துக்
கேற்றபடி சூதுக்காய்கள் இரட்டைப்பட்டையும் ஒற்றைப்பட்டையு
மாக விழுவதைப்பார்த்து என்னால் மனம் அடக்கத்தக்கதாயிற்று.
கோபம் மனிதனுடைய தைரியத்தைக் கெடுக்குமன்றோ? குழந்
தாய்! பீமஸேன! பௌருஷத்தாலும் அகங்காரத்தாலும் வீரியத்
தாலும் கட்டப்பட்ட மனமானது அடக்கமுடியாதது. (அதனால்)
உன்னுடைய வார்த்தைகளில் குற்றங்கூறவில்லை. அது அவ்விதம்
ஆகவேண்டியதாக இருந்ததென்று நினைக்கிறேன். திருதராஷ்டிர
ரின் புத்திரனை அந்த அரசன் ராஜ்யத்தைவிரும்பிக்கொண்டு நம்
மைத் துக்கத்தில் தள்ளினான்; நம்மை அடிமையுமாக்கினான்.
ஓ! பீமஸேன! அதில் திரௌபதி நம்மைக் காப்பவளானாள். திரும்
பவும் நாம் சூதாட்டத்திற்காக அந்த ஸபையைநோக்கி வந்த
போது, பாரதர்களுக்கெதிரில் என்னை நோக்கித் திருதராஷ்டிரபுத்
திரன் ஒரே பந்தயத்திற்காக, 'ஓ! ராஜபுத்திர! அஜாதசத்ருவே!
காட்டில் இஷ்டப்படி பன்னிரண்டு வருஷங்கள் பிறர் அறியும்படி
யும், பிறகு மற்ற ஒரு வருஷம் எல்லாத்தம்பிகளுடனும் உருவம்
மறைந்து ஒருவராலும் அறியப்படாதபடியும் ஸஞ்சரிக்கக்கடவாய்.
ஓ! ஐயா! நீ அவ்விதம் ஸஞ்சாரம் செய்வதைக்கேட்டுப் பாரதர்
களின் ஒற்றர்கள் அறிவார்களானால் மற்ற அவ்வளவு வருஷங்களும்
நீ அவ்விதமே ஸஞ்சரிக்கவேண்டும். ஓ! பார்த்த! அதை நிச்
சயித்துப் பிரதிஜ்ஞை செய். ஓ! அரசனே! என்னைச் சார்ந்தவர்
களை அறியமுடியாமற்செய்து ஸாவதானமுள்ளவனாக இக்காலம்
முழுவதும் ஒற்றர்களால் அறியப்படாவிட்டால், அந்த (விதஸைதை
முதலிய) ஐந்து நதிகள் பாயும் தேசம் உன்னுடையதே. இந்தக்
குருஸபையில் ஸத்யமாகச் சொல்லுகிறேன். பாரத! நீ எங்
களை ஜயித்துவிட்டால் நாங்களனைவரும் அவ்வளவுகாலம் போகங்
களைவிட்டு ஸஞ்சரிப்போம்' என்று முன்பு குருக்களுக்கு நடுவில்
அந்த அரசன் சொன்னான். 'அப்படியே ஆகட்டும்' என்று நான்
அவனுக்குச் சொன்னேன். இதையெல்லாம் நீயும் தனஞ்சய
னும் அறிவீர். அப்பொழுது கடைசியான சூதாட்டம் நடந்தது.
அதில் யாவரும் ஜயித்துத் துரத்தப்பட்டு, இவ்விதம் கஷ்ட
மடைந்த உருவமுள்ளவர்களாகித் தேசங்களிலும் கஷ்டமான காடு
களிலும் ஸஞ்சரிக்கிறோம். அந்தத் துரியோதனனும் ஸமாதானத்தை
விரும்பாதவனாகித் திரும்பவும் கோபத்தின் வசத்தை அடைந்

தான்; எந்தச் சிலகுருக்கள் அவனுடைய வசத்தை அடைந்திருக்கிறார்களோ அவர்கள் எல்லாரையும் ராஜ்ய கார்யங்களில இருக்கச செய்தான். ஸாதுக்களின் முன்னிலையில் அந்த நிச்சயத்தை அடைந்து இகலு ராஜ்யத்திற்காக எவன் தான் (அதை) விடுவன்? பெரியோருக்குத தர்மத்தைவிட்டுப பூமியை ஆளுகிறது மரணத்தைக்காட்டிலும் கொடிதென்று எண்ணுகிறேன். பீம! நீ சூதாட்டததில் பரிகமென்னும் ஆயுததததைததொட்டு என் கைகளை எரிக்கவும் கருதி அர்ஜுனனால தடுக்கபபட்டபொழுதே வீரசசெய்கையைச் (சண்டையைச) செயதிருந்தால் என்ன கெடுதி வந்திருக்கும்? இவ்விதம் உடன்பாட்டைச செய்வதற்கு முநதியே உனது ஆண்மையை அறிந்த நீ ஏன சொல்லவில்லை? வந்த மரணம்போன்ற துன்பத்தை ஏற்றுககொண்டு, பிறகு, என்னைக் குறிததது இப்பொழுது ஏன் வரைகடந்து பேசுகிறாய? ஓ! பீம! துன்புறுததப்படுகின்ற திரௌபதியைப் பார்ததும பொறுக்கப்பட்டதனால், அதிக துக்கம் எனக்கு உண்டாகிறது. ஓ! பீமஸேன! விஷததின ரஸததைக் குடித்துவிட்டுப பரிதாபத்தை அடைவதுபோல, மிக்க பரிதாபததை அடைகிறேன். ஓ! பாதருட்சிறந்த வீர! குருவீரர்களின் நடுவில் (ப்ரதிஜ்ஞை) செய்து சொல்லப்பட்டதை இபபொழுது (மாற்றுவது) முடியாது. விதை விதைப்பவன் விளைச்சலின் முதிர்ச்சியை எதிர் பார்ப்பதுபோல ஸுகம உண்டாவதற்குரிய காலத்தை எதிர்பார். 'முன் அவமதிக்கப்பட்டவன் பகைவர்கூட்டம் [1] மலர்களுடன் கூடியதாகவும் கனிகளுடன் கூடியதாகவும் இருப்பதை அறிந்து பராக்கிரமததினால் எப்பொழுது நாசம செய்வானோ அப்பொழுது!, பிராணிலோகத்தில் வீரனான அவன்!, பெரிய குணத்தையடைந்து உயிர்வாழ்பவனாகிறான்; லோகத்தில் பூர்ணமான செல்வத்தையும் அடைகிறான். இவனைப் பகைவர்கள் வணங்குகிறார்கள். சிநேகிதர்களும் இவனை மிக்க ப்ரியததுடன் அடைகிறார்கள். தேவர்கள் இந்திரனை அடுப்பதுபோல (யாவரும் இவனை) அடுத்துப் பிழைக்கிறார்கள்' என்று நினைக்கிறேன். என்னுடைய பிரதிஜ்ஞையை உண்மை என்றறி. தேவததன்மையையும் உயிரையுங்காட்டிலும் ஸத்தியத்தை விரும்புகிறேன். ராஜ்யம், புத்திரர்கள், கீர்த்தி, தனம் ஆகிய யாவும் ஸததியததின் பதினாறில் ஒன்றுக்கும் ஈடாகா' என்றார்.

---

1 புதியவரும் பழையவருமான துணையரசருடன் இருப்பதை.

முப்பத்தைந்தாவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(பீமன் வனவாசத்தை நிறைவேற்றாமலே துரியோதனனை வெல்ல வேண்டுமென்பதை யுக்தியுடன் யுதிஷ்டிரரிடம் கூறியது)

பீமஸேனன், 'காலத்துக்குக் கட்டுப்பட்டவரும் நுரைபோல ஸாரமற்றவரும் பழம்போல விழக்கூடியவரும் அப்படியே மரிக்குந்தன்மையுடையவருமான நீர் நாசமாக்குகிறதும் பாணம்போல் வேகமாகப் போகக்கூடியதும் முடிவற்றதும் அளவிட முடியாததும (எப்பொழுதும் போய்க்கொண்டிருக்கும்) வெள்ளம்போன்றதும யாவற்றையும் அடித்துக்கொண்டு போவதுமான காலத்தினால் உடன்பாடடைச் செய்துகொண்டு காலத்தைப் ப்ரத்யக்ஷமாக எண்ணுகிறீர். ஓ! கௌந்தேயரே! ஊசியால் குத்தி எடுக்கப்படும் மைப்பொடிபோல இமைகொட்டுதலாலும ஆயுள் குறைக்கப்படும் மனிதன் எப்படி காலத்தை எதிர்பார்க்கலாம? எவன் அளவிற்கடங்காத ஆயுளுள்ளவனோ!, அல்லது ஆயுளின் பரமாணத்தை அறிந்தவனோ, யாவற்றையும நேராகக்கண்ட அவனன்றோ (தொழிலைச்செய்தற்குக்) காலத்தை எதிர்பார்க்கலாம்? ஓ! அரசரே! நம்மால் எதிர்பார்க்கப்படும் காலமோ பதின்மூன்று வருஷமாகும். அது!, ஆயுளின் குறைவைச்செய்து மரணத்தைக்குறித்துக் கொண்டு போய் விடும். தேகமுள்ளவர்களுக்கு மரணமானது எப்போதும் தேகத்தில் பற்றியிருக்கிறது. ஆகையால், மரணத்திற்கு முந்தியே ராஜ்யத்தைக் குறித்து முயற்சிசெய்வோம். பெரியோர் வரிசையில் எண்ணப்படாத புகழற்றவன் பூமிக்குப் பாரமாகிறான். அவன் பகைவரைப் போக்கமாட்டாமல் எருதைப்போலக் கஷ்டத்தை அடைகிறான். அற்பமான பலமும் முயற்சியுமுள்ள எந்த மனிதன் பகைவரை வெல்லவில்லையோ, தீயபிறப்புள்ள அவனுடைய பிறப்பு பயனற்றதென்று நான் நினைக்கின்றேன். உமது கைகள் பொன்னை வழங்கியவை. உமது புகழ் [1] உலக முழுதும் பரவியது. யுத்தத்தில் சத்ருவைக் கொன்று புயவலிமையால் ஜயிக்கப்பட்ட செல்வத்தை அனுபவியும். ஓ! அரசரே! மனிதன் வஞ்சகனைக் கொன்று உடனே [2] நரகத்தை அடைந்தாலும் அவனுக்கு அந்த (நரகமானது) ஸவர்க்கத்திற்கொப்பானது.

---

1 'பிருது சகரவாததியினுடையதுபோன்றது' என்பது பழையவுரை.

2 'ஆபத்தை' என்பது பழையவுரை.

எந்தத தாபத்திஞல் வாட்டப்பட்ட நான் இரவும் பகலும் தூங்க வில்லையோ பொறுமையாலுண்டான அதுவோ நெருப்பைக்காட்டி லும் மிக வெப்பமானது. நாணையிழுப்பதில சிறநத பார்த்தனை இந்த அர்ஜுனனும், குகைபிலுள்ள சிங்கமபோல (அடங்கி) மிக்க தாபததை அடைந்தவனுபிருக்கிருன. ஓ! அரசரே! உலகத்தி லுள்ள எல்லா வில்லாளிகளேயும ஒருவனுகவே நாசம் செய்யக் கூடிய இவன் மனததிலுண்டான தாபத்தைப் பெரிய யானை அடக்குவதுபோல அடககுகிருன. நகுலனும ஸஹதேவனும் வீரமையினறவளும் வயதுமுதிர்ந்தவளுமான தாயும் உமமுடைய பிரியத்தையே விரும்பிககொணடு மூடாபோலவும் ஊமையர்போல வும் இருககின்முாகள். ஸருஞசயர்களுடன்கூடின எலலா உறவினா களும் உமக்குப் பிரியததையே விரும்புகிருர்கள். ப்ரதிவிந்தி யன்மாதாவான திரௌபதியும நான் ஒருவனுமே தாபததை அடைந்தோம். மேலும், எதைச் சொல்லுகிறேனே அது யாவ ருக்கும் இஷ்டமானதே. யாவரும் துன்பததை அடைந்திருக் கிருர்கள். யாவரும் சணடையைக் கொண்டாடுகிருர்கள். ஓ! அரசரே! அற்பபலமுள்ள நீசர்களால் நமது ராஜ்யமானது கவரப பட்டு அனுபவிக்கப்படுகிறதென்பதைக்காட்டிலும மிக்க கொடிய ஓர் ஆபத்தும் வரப்போகிறதிலலை. ஓ! பகைவரை வாட்டுப வரே! குரூரததன்மை இலலாமையாகிற ஸ்வபாவதோஷததால் தயையுடன்கூடிக் கஷ்டங்களைப் பொறுக்கிறீர். இதனை மற்ற எவ னும் புகழமாட்டான. அரசரே! மிக்க மநதனும அர்ததஜ்ஞான மில்லாதவனுமான வேதாக்ஷரத்தைக் கற்றவனுடைய குரு சொல் வதைத் திருப்பிச் சொல்வதால கெட்டுப்போன புததிபோல இந்த உம்முடைய புததியானது உணமையான அர்த்தத்தைக் கண்டதன்று. தயையுள்ள பிராமமணரூபியாயிருக்கிறீர்; க்ஷத் திரியர்களிடத்தில் எப்படி ஜனிததீர்? இந்த க்ஷததிரியப் பிறப்பில் அனேகமாகக் குரூரபுததியுளளவர்களன்றே ஜனிக்கின்முர்கள்? நீர், மனு எவ்விதம சொன்னுரோ அவ்விதம் குரூரமானவையும் கபடத்துடன்கூடியவையும் பொறுமையற்றவையும் விதிககப்பட்ட வையுமான ராஜதர்மங்களைக் கேட்டிருககின்றீரா? ஓ! மஹாராஜரே! கெட்ட எண்ணமுள்ள த்ருதராஷ்டிரபுததிரர்களை ஏன் பொறுக் கிறீர்? செய்யவேண்டியகாரியத்தில் (முயற்சியிலலாமல்) மலைப் பாம்புபோல ஏன் (சும்மா) இருக்கின்றீர்? புததி, வீர்யம், படிப்பு, நற்குலம் இவற்றுடன்கூடின நீர் எங்களை மறைக்கவிரும்புவது ஒரு

பிடி புலலினால் இமயமலையை மறைக்க விரும்புவதுபோலும். ஓ! பார்த்தரே! ஆகாயத்தில் சூரியனைப்போலப் பூமியில கீர்த்திபெற்ற உம்மால் மறைந்து அஜ்ஞாதவாஸமானது செய்யமுடியாது. அதிக ஜலமுள்ள இடத்தில கிளைகளும் மலர்களும இலைகளுமுள்ள பெரிய தேககமரமபோலவும வெண்மையான யானைபோலவும் அர்ஜு-னன் அறியபபடாதவனாக எவ்விதம் சஞ்சரிப்பான்? சிஙகத்திற்கு ஒப்பானவர்களும் ஸகோதரர்களும் ஒன்றுசேர்ந்தவர்களும் சிசுக்களுமான இந்த நகுலஸஹதேவர்களும (அறியப்படாமல்) எவ்விதம் ஸஞ்சரிப்பார்கள்? ஓ! பார்த்தரே! புண்ணிய கீர்த்தியுள்ளவளும் வீரரையீன்றவளும் பிரஸித்திபெற்றவளும் ராஜபுத்திரியும் துருபதபுத்திரியுமான இந்தக்கிருஷ்ணையானவள் அறியப்படாதவளாக எவவிதம் ஸஞ்சரிக்கப்போகிறாள்? ஓ! அரசரே! இந்த ஜனங்கள் என்னையும் குழந்தைமுதல நன்கு அறிவார்கள். (ஆகவே, நமது) அஜ்ஞாதவாஸத்தை மேருவினுடைய மறைவைபபோல எண்ணுவார்கள. அப்படியே, நம்மால் தேசத்திலிருந்து துரத்தப்பட்ட அனேகம் அரசர்களும் அரசகுமாரர்களும் த்ருதராஷ்டிர புத்ரனை அநுஸரித்திருக்கின்றார்கள். துரத்தப்பட்டவர்களும் வஞ்சிக்கப்பட்டவர்களுமான அவர்களும் சமனத்தையடையார்களன்றோ? அவனது பிரியத்தை விரும்பின அவர்களால நமக்கு அவசியம் அபகாரம செய்யத்தக்கதாகும். அவர்களும் நம்மிடத்தில் மறைந்த அனேகம் ஒற்றர்களை அனுப்புவார்கள்; நம்மையறிந்து சொல்லியும்விடுவார்கள். அதிலிருந்து நமக்கு அதிகபயமுண்டாகும். நாம் காட்டில் பதின்மூன்று மாஸங்கள் பூர்ணமாக வஸித்துவிட்டோம். அவற்றை ஓர் அளவினால் அவ்வளவு வருஷங்களாகப் பாரும். ஸோமலதைக்குப் பூதிகங்கள் (=சீந்திற்கொடி) பிரதிநிதியாயிருப்பதுபோல (வருஷத்திற்கு) மாஸம் பிரதிநிதியாக இருக்கிறதென்று வித்வான்கள் சொல்லுகின்றனர். அவ்விதம் இது செய்யப்படட்டும. அல்லது, நல்லதும் நன்கு பாரத்தைச் சுமக்கின்றதுமான காளைக்கு (ப் புல்லைக்கொடுத்து) தருப்தியடைவிப்பதால் இந்தப் பாவத்திலிருந்து விடப்படுகிறான். ஓ! அரசரே! ஆகையால், நீர் சத்ருவதத்தில் நிச்சயத்தைச் செய்வீராக. ஏனெனில், எல்லா க்ஷத்திரியருக்கும் சண்டையைவிட வேறான தர்மமில்லை' என்றான்.

முப்பத்தாறுவது அத்யாயம்.

## அர்ஜுநாபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரரும் பீமனும் பேசிக்கொண்டிருக்கையில் வியாஸர் வந்து யுதிஷ்டிரருக்குப் பிரதிஸ்ம்ருதிவித்தையை உபதேசித்ததும், யுதிஷ்டிரர் வியாஸர் கட்டளைப்படி பரிஜனங்களுடன் காம்யகவனம் சென்றதும்)

குந்தீபுத்திரரும் ஆண்மையிற்சிறந்தவரும் பகைவரை வாட்டுபவருமான யுதிஷ்டிரர் பீமனுடைய வார்த்தையைக் கேட்டுப் பெருமூச்சு விட்டுக்கொண்டு ஆலோசித்தார். 'என்னால் ராஜதர்மங்களும் வர்ணதர்மங்களும் தனித்தனியே கேட்கப்பட்டிருக்கின்றன. வருங்காலத்திலும் நிகழ்காலத்திலும் எவன் (அவைகளைப்) பார்த்து நடக்கிறானோ அவனே தெரிந்தவனாகிறான். அறிதற்கு மிக அருமையான தர்மத்தினுடைய மேலான வழியை அறிந்தவனான நான் மேருவைப் புரட்டுவதுபோலத் தர்மத்தைப் புரட்டுதலைப் பலாத்காரமாக எவ்விதம் செய்வேன்?' என்று அவர் ஒரு முகூர்த்தகாலம் ஆலோசித்து இவ்விதம் செய்யவேண்டியதென்பதை நன்கு நிச்சயித்துத் தாமதமின்றிப் பீமஸேனனை நோக்கி இந்த வாக்கியத்தைச் சொல்லலானார்: 'தோள்வலி அமைந்தவனே! பாரத! நீ சொல்லுகிறது உண்மையே. பேசுந்திறமையுள்ளவனே! இந்த என்னுடைய வேறு வாக்கியத்தை ஏற்றுக்கொள். ஓ! பாரத! பீமஸேன! கேவலம் பிடிவாதத்தால் தொடங்கப்படும் மிக்க தீயசெயல்கள் துன்பத்தைத் தருகின்றன. சிறந்த கைகளுள்ளவனே! காரியமானது நன்கு ஆலோசிக்கவும் நன்கு நிச்சயிக்கவும் நன்கு தொடங்கவும் நன்கு செய்யவும் பட்டபோது தெய்வமும் அனுகூலமாகி விருப்பங்கள் நிறைவேறுகின்றன. இந்தக் காரியத்தை மனவுறுதியில்லாமை ஒன்றினாலேயே பலத்தாலுண்டான கொழுப்புள்ளவனாகி ஸ்வயமே ஆரம்பிக்கத்தக்கதென்று எண்ணுகிறாய். அவ்விஷயத்தில் என்னிடமிருந்து கேளு.

பூரிச்ரவஸும் சலனும் வீர்யமுள்ள ஜலஸந்தனும் பீஷ்மரும் துரோணரும் கர்ணனும் வீர்யமுள்ள அச்வத்தாமாவும் அசைக்க முடியாத துரியோதனன் முதலிய திருதராஷ்டிர புத்திரர்களுமாகிய யாவரும் அஸ்திராப்யாஸம் செய்தவர்கள்; எப்பொழுதும் 1 ஆததாயிகள். நம்மால் கஷ்டப்படுத்தப்பட்ட சிற்றரசர்களும்

1 விராடபர்வம் 175-ம் பக்கம் குறிப்பில் காண்க.

பேரரசர்களும் கௌரவபக்ஷத்தை அடுத்து இப்பொழுது சினேகத்தை அடைந்திருக்கிறார்கள். ஓ! பாரத! துரியோதனனுடைய நன்மையில் விருப்பமுள்ளவர்களும் நமது நன்மையில் விருப்பமில்லாதவர்களும் நிரம்பின பொக்கசமுள்ளவர்களும் சைனியத்துடன் கூடினவர்களுமான அவர்கள் அவனைக் காப்பதில் முயற்சிசெய்வார்கள். புத்ரர்களோடும் மந்திரிகளோடும் சேனைவீரர்களோடும் கூடின அவர்களெல்லாரும் கௌரவ சேனையினுடைய சமபளத்தோடும் உணவு முதலியவற்றோடும் எல்லாவிதத்திலும் ஒப்பப் பகுத்துக் கொடுக்கப்பெற்றவர்களல்லரோ? துரியோதனனால் விசேஷமாக ஸம்மானம்செய்யப்பட்ட அந்த வீரர்கள் யுத்தத்தில (அவனுக்காக) பிராணனையும் விடுவார்களென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம். சிறந்த கைகளுள்ளவனே! பீஷ்மர் துரோணர் மஹாத்மாவான கிருபர் இவர்களுக்கு நிலைமை நம்மிடத்திலும் அவர்களிடத்திலும் ஸமமாக இருக்குமானாலும் அரசன அளித்த சோற்றுக்கடனைத் தீர்ப்பது அவஸ்யமாகும். ஆனது பற்றி, யுத்தத்தில், விடுவதற்கரிய உயிரையும் விடுவார்களென்பது என கருத்து. யாவரும் திவ்யாஸ்திரம அறிந்தவர்கள். யாவரும் தர்மத்தை முக்கியமாகக்கொண்டவர்கள்; இந்திரனுடன்கூடின தேவர்களாலும ஜயிக்கமுடியாதவர்களென்பதும் என்னுடைய எண்ணம். அவர்களுள்ளும், எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவனும அசைக்கமுடியாதவனும பிளக்கமுடியாத கவசத்தால் சூழப்பட்டவனும பொறுமையுள்ளவனும் மஹாரதனுமான கர்ணன் எப்பொழுதும் முயற்சியுள்ளவனாயிருக்கிறான். உதவியில்லாத உனனால் யுத்தத்தில் இந்த எல்லாப புருஷஸ்ரேஷ்டர்களையும் ஜயிக்காமல் துரியோதனன் கொல்லப்படக்கூடியவனல்லன். ஓ! வ்ருகோதர! வில்லாளிகள் யாவரையும அதிகரித்த கர்ணனுடைய லாகவத்தை ஆலோசனை செய்கிறதனால நான் தூக்கத்தை அடைவதில்லை' என்றார். அதிக கோபமுள்ள பீமஸேனன், இந்த வார்த்தையை அறிந்துகொண்டு, தமையனாருடைய வார்த்தையால் தடுக்கப்பட்டவனாகி அடக்கத்துடன் கூடியவனானான். அப்பொழுது, அந்த இரண்டு பாண்டவர்களும் இவ்விதம பேசிக்கொண்டிருக்கையில், ஸத்யவதீபுத்திரரும் மஹாயோகியுமான வ்யாஸர் வந்தார். பேசுகிறவர்களுள் சிறந்தவரான அவர், பாண்டவர்களால் எதிர்சென்று முறைப்படி பூஜிக்கப்பட்டு, யுதிஷ்டிரரை நோக்கி, இந்த வார்த்தையைச் சொல்லலானார்.

'ஓ! மனிதரிற்சிறந்தவனே! யுதிஷ்டிர! உன்னுடையமனத்தி லிருப்பதை புத்தியினால் அறிகிறேன். அதனால சீக்கிரம வந்தவனாகிறேன. ஓ! பாரத! பகைவரைக்கொல்பவனே! பீஷ்மரிடமிருந்தும் துரோணரிடமிருந்தும் கிருபரிடமிருந்தும் கர்ணனிடமிருந்தும அஶ்வத்தாமாவிடமிருந்தும ராஜபுத்திரனான துரியோதனனிடமிருந்தும் துசசாஸனனிடமிருந்தும் எந்தப பயம் உன்னுடைய மனத்தில் சுழலுகிறதோ உனனுடைய அந்தபபயத்தைச் சாஸ்திரத்தில்கணட காரணத்தால போக்குகிறேன. அதைக் கேட்டுத தைரியத்தையடைந்து செய்கையால நிறைவேற்று. ராஜேந்திர! நிறைவேற்றி, பிறகு, சீக்கிரம தாபத்தை விலக்கிக கொள' என்றார்.

பிறகு, வாரத்தையில ஸமர்த்தரான வ்யாஸர், யுதிஷ்டிரரை ரகஸ்யத்தில் அழைத்துப்போய், யுக்தியுக்தமான அர்த்தத்தையுடைய இந்தவார்த்தையைச் சொலலினர். 'ஓ! பரதருட்சிறநதவனே! உனக்கு, அர்ஜுனன விலலைததரித்து யுத்தத்தில பகைவாகளை ஜயிப்பதற்குரியதும் க்ஷேமத்திற்குரியதுமான வேறு காலமானது வந்திருக்கின்றது. சரீரமெடுத்துவந்த ஸித்தியைபபோன்றதும் ப்ரதிஸ்மிருதியென்று பெயர்பெற்றதுமான வித்தையைச் சரணமடைந்த உனக்குச சொல்லுகினறேன எதை அடைந்து மஹாபாகுவான அர்ஜுனன (காரியத்தைச) சாதிப்பானோ எனனால் உபதேசிக்கப்பட்ட அதனைப் பெற்றுக்கொள. தவத்தினாலும் பராக்கிரமத்தினாலும தேவர்களைப்பார்ப்பதற்குச் சக்தியுள்ள இவன் அஸ்திரத்திற்காக மஹேந்திரனையும் ருத்ரரையும் வருணனையும் குபேரனையும தர்மராஜனையும் அடையக்கடவன. அதிகதேஜஸுள்ளவனும நாராயணரிஷியை ஸஹாயமாயுடையவனும் வெகுகாலமாயுள்ளவனும் அழிவற்றவனும் அச்சுதனும் ஜயிகக முடியாதவனும தேவரிஷியும் பெரியகையுள்ளவனுமான இந்த அர்ஜுனன, இந்திரனிடமிருந்தும் ருத்திரரிடமிருந்தும லோகபாலர்களிடமிருந்தும் அஸ்திரங்களையடைந்து பெரியகாரியத்தைச செய்வான். ஓ! பருதிவீபதியே! கௌந்தேய! உங்களுடைய வாஸத்திற்கு இந்த வனத்தைவிடச் சிறந்ததான வேறுவனத்தை ஆலோசிக்ககடவாய். ஓர் இடத்தில் நெடுங்கால வாஸமானது பரீதியை உண்டுபண்ணுகிறதாகாது. வேதவேதாங்கங்களின் கரைகண்ட அனேகம பராமமணர்களையும் காப்பாற்றுகினறாய. ஆதலால், சாந்தர்களான தவசிகளுக்கு வெறுப்பை உணடுபண்ணுகிறதாகும். மான்கள் (கிடைப்பதில்)

தடையும், கொடிக்கும் பசிஇலைக்கும் நாசமும் உண்டாகும்' என்றார். யோகத்தின் உண்மையை அறிந்தவரும் ப்ரபுவும் பூஜ்யருமான (வ்யாஸர்) இவ்விதம்சொல்லிச் சரணமடைந்தவரும் சுத்தருமான தர்மபுத்திரருக்கு ஒப்புயர்வற்ற யோகவித்தையை உபதேசித்தார். புத்திமானும் ஸத்தியவதியின்புத்திரருமான அந்த வ்யாஸர் தர்ம புத்திரரிடம் அனுமதிபெற்று அவ்விடத்திலேயே மறைந்துவிட்டார். தர்மத்தில்மனமுள்ளவரும் அடங்கினவரும் மேதாவியுமான தர்ம புத்திரர் அந்தமந்திரத்தைக் காலந்தோறும் ஆவிர்த்திசெய்துகொண்டு எப்பொழுதும் மனத்தினால் தரித்தார். அவர் வ்யாஸர் வாக்யத்தால் ஸந்தோஷமடைந்து அந்தத்தவைதவனத்திலிருந்து ஸரஸ்வதிநதியின் கரையிலுள்ள காம்யகமெனப்பெயர்பெற்ற காட்டை அடைந்தார். ஓ! மஹாராஜரே! வேதாங்கமான சிக்ஷையிலும் வேதத்திலும் வல்லவர்களும் தவத்துடன் கூடினவர்களுமான பிராம்மணர்கள், தேவேந்திரனை ரிஷிகள் தொடர்வதுபோல அவரைப் பின்தொடர்ந் தார்கள். பரதரில் சிறந்தவரே! மஹாத்மாவான அவர்களும் மந்திரிகளுடனும் காலாள்களுடனும் அங்கிருந்து திரும்பவும் காம்யகத்தையடைந்து இடம் அமைத்துக்கொண்டார்கள். அரசரே! வில்வித்தையில் தேர்ந்தவர்களும் நல்லமனமுள்ளவர்களுமான அந்த வீரர்கள், மேலான வேதத்தைச்சொல்லுகிறவர்களும் எப்பொழுதும் மானைவிரும்புகிறவர்களுமாகிச் சுத்தமான பாணங்களால் வேட்டை யாடிக்கொண்டும் பிதருக்களையும் தேவர்களையும் ப்ராம்மணர்களையும் விதிப்படி திருப்திசெய்துகொண்டும் அவ்விடத்தில் சிலகாலம் வாஸம் செய்தார்கள்.

---

## முப்பத்தேழாவது அத்யாயம்.
## அர்ஜுனாபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் ப்ரதிஸ்ம்ருதிவித்தையை அர்ஜுனனுக்கு உபதேசித்து அஸ் திரம் பெறுதற்காக அவனை ஸ்வர்க்கத்துக்கனுப்பியதும், அவன் இந்திரகீலமலையில் தவஞ்செய்கையில் இந்திரனைக் கண்டதும், இந்திரன் அஸ்திரம்பெறுதற்காகத் தவத்தால் ஈச்வரனை மகிழ்வித்தற்கு அர்ஜுனனை ஸ்வர்க்கம் வரக் கட்டளையிட்டதும்.)

ஆடவருட் சிறந்தவரே! சிலகாலத்திற்குப் பிறகு, தர்மராஜ ரான யுதிஷ்டிரர், முனிவரின் உத்தரவை நினைத்துக்கொண்டு, அறி

வாளியென்று பிரஸித்திபெற்ற அர்ஜுனனை இன்சொல்லை முன்னிட்டுப் புன்னகைசெய்து கையினால் தடவிக்கொண்டு தனிமையான இடத்தில் பின்வரும் சொல்லைச் சொல்லலானார். பகைவரை அடக்குகிறவரான அந்தத் தர்மராஜர், ஒரு முகூர்த்தகாலம் வனவாஸத்தைப்பற்றிச் சிந்தித்து, அர்ஜுனனை நோக்கி ரகஸ்யத்தில் இதைச் சொல்லலுற்றார்: 'பாரத! பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன், அச்வத்தாமா ஆகிய இவர்களிடத்தில் [1] நான்கு பாதங்களுள்ள தனுர்வேதமானது இப்பொழுது நிலைத்திருக்கிறது. அம்பு தொடுப்பதுடனும் பிறர் அம்புகளைத் தடுப்பதுடனுங் கூடின இந்திரன் முதலிய தேவர்களின் அஸ்திரத்தையும் ப்ரம்மாஸ்திரத்தையும் ஆஸுராஸ்திரத்தையும் (மற்ற) எல்லா அஸ்திரங்களின் பிரயோகத்தையும் முழுவதும் அறிகிறார்கள். அவர்கள் யாவரும் திருதராஷ்டிரனுடைய புத்திரனால் இன்மொழி கூறப்பட்டவர்களும் நன்கு உபகரிக்கப்பட்டவர்களும் மகிழ்ச்சியுள்ளவர்களுமாயிருக்கிறார்கள். அவனும் அவர்களிடத்தில் குருக்களிடத்திலிருப்பதுபோலிருக்கிறான். எல்லா யுத்தவீரர்களிடத்திலும் இந்தத் துரியோதனனுக்கு எப்பொழுதும் பரீக்ஷை அதிகம். பூஜிக்கப்பட்ட ஆசார்யர்கள் மகிழ்ச்சியுள்ளவர்களாகித் தோஷபரிகாரத்தை (ச் செய்வதற்கு) முயற்சிசெய்கின்றார்கள். காலத்தில் பூஜிக்கப்பட்ட அவர்கள் சக்தியைக் குறையச் செய்யமாட்டார்கள். ஓ! பார்த்த! கிராமங்களுடனும் நகரங்களுடனும் சேர்ந்ததும் கடலுடனும் வனத்துடனும் ரத்னம்விளையுமிடத்துடனும் கூடினதுமான இந்தப் பூமி முழுவதும் இப்பொழுது துரியோதனனது வசத்தை அடைந்திருக்கின்றது. பகைவரையடக்குபவனே! எங்களுக்கு நீயே ப்ரியமானவன். உன்னிடத்தில் பாரம் வைக்கப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தில் காலத்திற்கேற்ற ஒரு காரியத்தைப்பார்க்கிறேன். ஐயா! வ்யாஸரிடமிருந்து என்னால் ஒரு ரஹஸ்யவித்தையானது கிரகிக்கப்பட்டிருக்கிறது. கிரகிக்கப்பட்ட அதனால் எல்லா உலகமும் நன்குபிரகாசிக்கின்றது. ஓ! ஐயா! நீ அந்த மந்திரத்துடன் கூடினவனாகி மனத்தை நன்குஅடக்கித் தகுந்தகாலத்தில் தேவதைகளின் அனுக்கிரகத்தை அடைவாயாக. ஓ! பரதரிற் சிறந்தவனே! உக்கிரமான தவத்துடன் உன்னைச் சேர்ப்பாயாக. குழந்தாய்! வில்லுள்ளவனும் கவசமுள்ளவனும் கத்தியுள்ளவனும் பெரி

[1] 'அம்புகளை எடுத்தல், தொடுத்தல், விடுத்தல், திருப்பியழைத்தல்' என்பது பழையவுரை.

யோர்களின் விரதத்திலிருப்பவனும் வேறெந்த விஷயத்துக்கும் இடங்கொடாமல் (இதனையே) தியானிப்பவனுமாகி வடக்குத்திக்கை நோக்கிச் செல்லு. ஓ! தனஞ்சய! இந்திரனிடத்தில் திவ்யமான எல்லா அஸ்திரங்களுடும் இருக்கின்றனவன்றோ? விருத்திரனிடமிருந்து பயந்த தேவர்களால் (எல்லா அஸ்திரங்களுமான) பலமானது அப்பொழுது இந்திரனிடத்தில் கொடுக்கப்பட்டிருக்கின்றது. அந்த இந்திரனிடமிருந்து ஒரேயிடத்திலிருக்கின்ற அவை யாவற்றையும் நீ அடைவாய். அப்பா! அந்த மந்திரத்தினலேயே யாவற்றையும் அடையப்போகிறாய். இந்திரனையே சரணம் அடைவாய். அவன் உனக்கு அஸ்திரங்களைக் கொடுப்பான். இப்பொழுதே தீக்ஷையடைந்து நீ தேவேந்திரனைப் பார்ப்பதற்குப் போவாயாக' என்றார்.

அம்முறைப்படி தீக்ஷையடைந்தவனும் மனமொழி மெய்களை அடக்கியவனுமான அந்த அர்ஜுனனை நோக்கி இவ்விதம் சொல்லிப் பிரபுவான தர்மராஜர் உபதேசம் செய்தார். அப்பொழுது, முன் பிறந்த ஸஹோதரர், வீரனான ஸஹோதரனுக்கு(ச் செல்ல) அனுமதி அளித்தார். தர்மராஜருடைய உத்திரவினால் இந்திரனைப் பார்க்க விருப்பமுள்ளவனாகிக் காண்டீவமென்னும் வில்லையும் அப்படியே இரண்டு பெரிய அம்பறாத்தூணிகளையும் எடுத்துக்கொண்டும் கவசம் தரித்தும் உள்ளங்கை உறைபூண்டும் உடும்புத்தோலால் செய்யப்பட்ட விரலுறை கட்டிக்கொண்டும், அக்னியில் ஹோமஞ்செய்தும் ப்ராம்மணர்களை த் தனங்களைக்கொடுத்து ஆசீர்வதிக்கச் செய்தும், தோள்வலிமையுள்ளவனும் பெரிய கையுள்ளவனும் விற்பிடித்தவனுமாகிக் கிளம்பினன், திருதராஷ்டிர புத்திரர்களின் வதத்திற்காகப் பெருமூச்செறிந்து உயரப் பார்த்தான். ப்ராம்மணர்களும் ஸித்தர்களும் மறைந்திருக்கும் பூதங்களும், விற்பிடித்த அந்த அர்ஜுனனை அப்பொழுது பார்த்து, 'ஓ! கௌந்தேய! மனத்தினல் எதை எதை விரும்புகிறாயோ அதை அதை விரைவில் அடையக் கடவாய். ஓ! கௌந்தேய! நன்கு போய்வா. உனக்கு ஜயமானது உறுதியாக உண்டாகட்டும்' என்று சொல்லினர். ப்ராம்மணர்கள் ஜயாசீர்வசனத்தைச் செய்து அர்ஜுனனை இவ்விதம் சொன்னார்கள். ஸித்தசாரணர்களின் கூட்டங்களும் கந்தர்வர்களும், 'மஹாரதனே! க்ஷேமம் உண்டாகுக. விரதத்தை மேற்கொள். உன்னுடைய எண்ணம் கைகூடுவதாக. உன்னுடைய எல்லாவிருப்பங்களும் நன்கு நிறைவேறுவனவாக' என்றனர். இவ்விதம் சொல்லப்பட்ட

அர்ஜுனன், இவர்களை வணங்கி, இருகைகளையும் கூப்பிக்கொண்டு தபோயோகத்தில் மனமுள்ளவனுகிப் புரோகிதரையும் வணங்கினுன். பிறகு, அவன், பரீதியடைந்த மனமுள்ளவனுகி, அதிரதர்களும ஸஹோதரர்களுமான அந்த யுதிஷ்டிரா பீமன் இருவரையும வணங்கினுன். மிகவாடின மனமுள்ளவர்களும் மஹாரதர்களுமான நகுலஸஹதேவர்களிருவரும அநத அர்ஜுனனை அடைந்து வணங்கினுர்கள். அந்த வீரர்கள், அர்ஜுனனை வணங்கி, 'ஓ! கௌநதேய! இந்திரனிடமிருநது அடையததக்க எல்லாத் திவ்யாஸதிரங்களையும் மற்றும மனததினுல எதை எதை விருமபுகிருயோ அநத அந்த அஸ்திரஙகளையும அடையக்கடவாய். ஓ! தனஞசய! தவருதவைகளும குற்றமற்றவைகளும பெரியோர்களுக்கு ஸமமதமுமான எலலாச சொற்களையும், இபபொழுது, பாணடவர்களுள நீ ஒருவனே அடைந்திருககிருய. ஓ! கௌந்தேய! தேவர்கள அதாமததை அடைநதவனையும ஸிததியற்றவனையும் தவமற்றவனையும் சலிததமனமுளளவனையும வஞசகனையும் பார்கக விருமபுகிறதிலலை. கடுமையாக இரைகிறவனும அஸூயைபபடுகிறவனும கொடுஞசொற்சொலலுகிறவனும வஞசகனும தற்புகழசசிசெய்கிறவனும எறிந்து பேசுகிறவனும் கொலலுகிறவனும ஸங்தேகபபடுகிறவனும நடபச்செய்து கொல்பவனும் மாயையுளளவனும் கோபமுளளவனும் பொய்பேசுகிறவனும் அதிகபோஜனம் செய்கிறவனும் நாஸதிகனும் ஈயாதவனும மிதரதுரோகம் செயகிறவனும எலலாவற்றிலும் பயமுள்ளவனும் பரநிந்தை செய்கிறவனும அதிக அகஙகாரமுளளவனும் பயங்கரமானவனும லோபியும் சஞசலமான மனமுளளவனும் திருடுகிறவனும் கட்குடிக்கிறவனும [1] கர்ப்பததை அழிப்பவனும் குருவின சயனததை அடைநதவனும் தனனைத தானே மிகபபுகழநதுகொள்ளுகிறவனும் பரஹிமஸை செய்கிறவனுமாகிய இநத மனிதாகள நலல உலகங்களையடையாா. தனஞ்சய! அவர்கள லோகமற்றவர்கள. ஓ! பலகுன! குரூரமிலலாமை, பச்சாத்தாபம், ஸததியம், துக்கததை அறியுமதனமை, வெளியிலுள்ளபுலன்களையடக்குதல், மரியாதை, தைரியம, [2] தர்மம, பொறுமை, சிறந்த நற்கார்யம், தயை, மன அடக்கம், குருபூஜை, நனறியறிதல், நட்பு, ப்ராம்மணபக்தி,

1 'பரூணஹா' என்பது மூலம; 'ஸாஙக வேதஙகறறவன பரூணன; அவனைக கொன்றவன்' எனினுமாம.

2 இரட்டித்தலால் ஒருசொல விடபபட்டது.

நம்பிக்கை, எல்லாப் பிராணிகளிடத்திலும் தயை, ஈதல், புத்தி, ஞாபகம் ஆகிய இவை உன்னிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. கௌரவ்ய! தனஞ்சய! ஆனதுபற்றி, இந்திரனுடன் சேருவாய். தேவர்களுக்கு உன்போன்றவனுடன் சேர்க்கையன்றோ புகழத்தக்கது! ஐயா! பரதஸ்ரேஷ்ட! சினேகிதர்களும் சகோதரர்களுமாகிய யாவர்க்கும், தேவர்களுக்கு இந்திரன்போல, நீயே சிறந்த கதி. மிக்க பலவானே! அந்தப்பதின்மூன்றாவது வருஷத்தில் சகோதரர்களும் எல்லாச்சிநேகிதர்களும் உன்னுடைய கைவன்மையை அடுத்துப் போகின்றார்கள். ஓ! பார்த்த! பகைவரை அடக்குபவனே! அப்படிப்பட்ட நீயே பிதாவான இந்திரனைக் குறித்துச் செல்வாய். எல்லா அஸ்திரங்களையும் இந்திரனிடமிருந்து கைவசப்படுத்திக் கொள்வாயாக. ஓ! மஹாபாகுவே! எல்லாப்பிராணிகளும் கேட்கும் போது, சதஸ்ருங்கமென்றுமிடத்தில் இந்திரன் உன்னை உச்சிமுகர்ந்து, 'ஓ! ஜய! ஜயமுள்ளவர்களுள் சிறந்தவனே! எல்லாப் பிராணிகளாலும் அறியப்பட்டவனாகித் தேவலோகத்தை அடையப் போகின்றாய்; புண்ணியஞ்செய்தவர்களுடைய உலகங்களை அடைந்து விளையாடுவாய். பார்த்த! தேவர்களால் மரியாதைசெய்யப்பட்டு மிகவும் ஸுகமாக ஸ்வர்க்கத்தில் விளையாடி உயர்ந்த அஸ்திரங்களை அடைந்து திரும்பவும் பூமியை அடைவாய்' என்று சொல்லினன். அப்பா! காண்டவவனத்தை எரித்தபோது, இந்திரன் உன் குணங்களை எல்லாப் பிராணிகளும் கேட்கும்படி திரும்பத் திரும்பச் சொன்னான். நரஸ்ரேஷ்ட! இந்திரனுடையதான அந்தச்சொல்லை நீ நிறைவேற்றக்கடவாய். இங்கிருந்து ஏதாவது ஓர் இடத்தை அடைந்து தவத்தில் பற்றின மனமுள்ளவனாகக்கடவாய். கௌரவனே! நன்மையைத் தருந்தான இந்திரன்சொல்லைச் செய்யக் கடவாய். நீ இப்பொழுதே தீக்ஷையை அடைந்து போவாய். இந்திரனை நீ பார்ப்பாய்' என்றார்கள்.

புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனன், அவ்விருவர்களையும் தழுவித் திரௌபதியிடமும் சொல்லிக்கொண்டு எல்லாருடைய மனங்களையும் கவர்ந்துகொண்டு கிளம்பினான். அப்பொழுது, திரௌபதியானவள், சிங்கம்போன்றதோள் வலிமையுள்ளவனும் அவ்விதம் புறப்பட்டவனும் வீரனுமான அந்தப் பாண்டவனை நோக்கி, இரு கைகளையும் கூப்பித் தேவர்களுக்கு நமஸ்காரத்தைச் செய்து மிகச் சுத்தமானவையும் மங்களமானவையுமான வார்த்தைகளுடன் சொல்லினள். 'ஈஸ்வரனுக்கும் ப்ரமாவுக்கும் நமஸ்காரம்.

க்ஷேமமாக ஒருகாட்டிலிருந்து மறுகாட்டை அடைவீர். ஓ! பார்த்தரே! தனஞ்சயரே! தர்மம் உம்மை அடையட்டும். சூரியனும் அக்னியும் ப்ரம்மாவும் பிராம்மணர்களும் உம்மைக் காக்கக்கடவர். பரதஸ்ரேஷ்டரே! தமையனுடைய சொல்லில் நிற்பவரும் தமையனைப் பூஜிப்பவருமான நீர் வஸுக்களையும் ருத்திரர்களையும் தேவக்கூட்டங்களுடன் கூடின ஆதித்யர்களையும் விஸ்வேதேவர்களையும் ஸாத்யர்களையும் துன்பங்கள் நீங்குவதற்காகச் சரணமடைவீராக. பரதர்களுட் சிறந்தவரே! ஆகாயத்திலுள்ள வைகளும் ஸ்வர்க்கத்திலுள்ளவைகளும் பூமியிலுள்ளவைகளும் மற்ற இடங்களிலுள்ளவைகளுமாகிய எல்லா இடையூறுகளிலிருந்தும் உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும். பிறருக்குக் கட்டுப்பட்டிருப்பதைக் காட்டிலும் காட்டில் வஸிப்பதைக்காட்டிலும் எல்லாப் பொருளும் கவரப்பட்டதைக்காட்டிலும் புத்திரர்களைவிட்டுப் பிரிந்ததைக்காட்டிலும் இதனை மிக்க துக்கமாக நினைக்கிறேன். நமக்குத் திருமபவும் க்ஷத்திரியகுலத்தில் ஒருபோதும் பிறப்பு வேண்டாம். எவர்களுக்கு ஆயுதத்தால் பிழைப்பில்லையோ (அந்தப்) பிராம்மணர்களுக்கு வணங்குகிறேன். அந்தப் பாவியான துரியோதனன் சிரித்துக் கொண்டு ராஜஸபையில் என்னைப்பார்த்து, 'பசு' என்று சொல்லியது மேலான துக்கம். அந்தச் சபையின் நடுவில் தகாத சொற்கள் பலவற்றைப் பேசினது அந்தத் துக்கத்தைவிட மேலான துக்கமென்பது என்னுடைய எண்ணம். ஓ! பரதஸ்ரேஷ்டரே! உம்முடைய வீட்டிலிருந்தும் ராஜ்யத்திலிருந்தும் துரத்தப்பட்டு வனத்தில் வஸிப்பவராகியும் ஸ்நேகத்தால் நிற்கிறீர். ஓ! பரதரில் சிறந்தவரே! எல்லாப் பகைவர்களையும் ஜயித்தவரும் அக்னியைத் திருப்திசெய்தவருமான நீர் இப்பொழுது நடந்து செல்வதை ஜனங்கள் பார்க்கின்றனர். இந்தப் பெரிய காட்டில் உம்முடைய ஸகோதரர்களும் ஸ்நேகிதர்களும் சாரணர்களும் அப்படியே ரிஷிகளும் உம்முடைய கதைகளைச் சொல்லப்போகிறார்கள். நிச்சயம். ஓ! புஜபலம் அமைந்தவரே! தனஞ்சயரே! கௌந்தேயரே! நீர் பிறந்தபோது உமக்காகக் குந்திதேவியார் விரும்பினதும் நீர் ஸ்வயமே விரும்புகிறதும் முழுவதும் உமக்கு உண்டாகுக. ஓ! பார்த்தரே! வஸுதேவரின் தங்கையாரும் எனது மாமியாருமான குந்திதேவியார் திரும்பி வந்த உம்மை, அதிதிதேவி இந்திரனைப் பார்ப்பதுபோலப் பார்க்கக் கடவர். உம்முடைய ஸகோதரரெல்லாரும் விழித்திருக்கும்பொழுதெல்லாம் உம்முடைய கதைகளினால் அடிக்கடி உம்முடைய செய

கைகளையே சொல்லிக்கொண்டு மகிழுவார்கள். நிச்சயம். ஓ! பார்த்தரே! நீர் நீண்டகாலம் வெளியில் போயிருக்கும்போது, எங்களுக்குப் போகங்களில் மகிழ்ச்சியும் தனத்தில் விருப்பமும் உண்டாகா. உயிரிலும் எங்களுக்கு விருப்பம் இராது. ஓ! பாரதரே! எங்கள் எல்லாருடைய ஸுகதுக்கங்களும் வாழ்வும் மரணமும் ராஜ்யமும் ஐச்வர்யமும் உம்மிடத்தில் நிலைநிற்கின்றன. ஓ! கௌந்தேயரே! பாண்டவரே! எங்களைக் கேட்டுக்கொண்டீர். க்ஷேமத்தை அடையக்கடவீர். அஸ்திரங்களை அடைந்து, க்ஷேமத்துடன் திரும்பிவந்த உம்மைப் பார்ப்பேன். ஓ! குற்றமற்றவரே! மிக்க வலிமையுள்ளவரே! உம்மால் செய்யப்படவேண்டிய இந்தக் காரியம், பலவான்களுடன் எதிர்த்தும் செய்யத்தக்கது. சீக்கிரம் ஜயத்திற்காக இடையூறில்லாமல் போம். தனஞ்சயரே! ஹ்ரீ, ஸ்ரீ, கீர்த்தி, த்ருதி, புஷ்டி, உமை, லக்ஷ்மி, ஸரஸ்வதி ஆகிய இவர்கள், வழியிற்போகின்ற உம்மைக் காக்கக்கடவர்' என்றாள்.

திரௌபதியானவள், [1] ஆசீர்வாதங்களை இவ்விதம் சொல்லி, ஓய்வடைந்தாள். பிறகு, தோள்வலி மிக்க அர்ஜுனன், ஸஹோதரர்களையும் தௌம்யரையும் வலம்வந்து அழகிய வில்லையெடுத்துக்கொண்டு கிளம்பினான். பரதஸ்ரேஷ்டரே! பாரதரே! அதிக பலமுள்ளவீரன் பலத்தால் மரங்களையும் கொடிகளையும் செடிகளையும் நாசஞ்செய்துகொண்டு மரங்களில் தடைபடாதவனாக வடக்குத் திசைநோக்கி மெதுவாகப் போனான். இந்திரனுடையதான த்யானத்துடன் கூடியவனும் பராக்கிரமமுள்ளவனும் பலமுள்ளவனும் போகிறவனுமான அவனுடைய வழியிலிருந்து எல்லாப்பிராணிகளும் விலகின. ஓ! ஐயா! பகைவரை வாட்டுபவனான அவன் தபோதனர்களால் வஸிக்கப்பட்ட மலைகளைத் (தாண்டித்) தேவர்களால் அடையப்பட்டதும் புண்ணியமானதும் அழகுபொருந்தியதுமான இமயமலையை அடைந்தான். பெரிய மனமுள்ளவனும் (இந்திரத்) தியானத்தோடு கூடியவனுமான அர்ஜுனன் காற்றுப்போலவும் மனம்போலவும் விரைந்துசெல்பவனாகி ஒரேநாளில் புண்ணியமான அந்தமலையை அடைந்தான். அவன் இமயமலையையும் கந்தமாதனத்தையும் தாண்டி இரவும் பகலும் சோர்பவின்றி அடர்ந்த காடுகளைத் தாண்டினான். பிறகு, அர்ஜுனன்

---

1 'க்ஷேமமுண்டாகும்படி கடவுளரை வேண்டி' என்பது.

அங்கிருந்து இந்திரகீலமலையையடைந்து தங்கினான். அந்தப் பாண்டவன் ஆறுபகலும் இரவும் (நடந்து)போய ஏழாவதுநாளில் அழகிய இந்திரகீலத்தின் தாழ்வரையில் தவயோகத்தில் பற்றுள்ளவனாக இருந்தான். கைகளை உயரத்தூக்கினவனாகி அங்கங்களைச் சிறிதும் அசைக்கவேயில்லை. இந்திரபுத்திரனும் தவமுதவனும் அடங்கினவனும் அடக்கப்பட்ட மனமுள்ளவனுமான அர்ஜுனன், அப்பொழுது, 'நில்' என்ற வார்த்தையை ஆகாயத்தில் கேட்டான். அவன் அதைக் கேட்டு நான்குபக்கத்திலும் பார்வையைச் செலுத்தினன். பிறகு, அவன் மரத்தடியில் பிரமதேஜஸால் ப்ரகாசிக்கின்றவரும் பொன்னிறமுள்ளவரும் ஜடையுள்ளவரும் இளைத்தவருமான ஒருதவசியைப் பார்த்தான். மிக்க தவமுள்ள அவர், அவ்விடத்திலிருக்கும் அர்ஜுனனைப் பார்த்துச் சொல்லலானார் :

'குழந்தாய்! வில்லுள்ளவனும் கவசமுள்ளவனும் பாணமுள்ளவனும் கத்தியையும் உள்ளங்கையுறையையும் கட்டிக்கொண்டவனும் க்ஷத்திரியதர்மத்தை அனுசரித்தவனும் இங்குவந்தவனுமான நீ யார்? ஐய! இங்கு, சஸ்திரத்தால் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. கோபமும் ஸந்தோஷமும் அற்றவர்களும் தவசிகளும் அடங்கினவர்களுமான பிராம்மணர்களின் ஆலயம் இது. இங்கு வில்லினால் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. இவ்விடத்தில் ஒருபோதும் சண்டையில்லை. அப்பா! இந்தவில்லை வைத்துவிடு; மேலானகதியை அடைந்தவனாக இருக்கிறாய்' என்று இவ்விதம் அதிக சக்தியுள்ள வீரனான அர்ஜுனனை வேறு ஸாமான்யனைச் சொல்வதுபோலவே பிராம்மணர் அடிக்கடி சிரித்துக்கொண்டு சொல்லினர். நன்கு நிச்சயங்கொண்ட இவனைத் தைரியத்திலிருந்தும் அசைக்கமுடியவில்லை. பிறகு, அந்தப்பிராம்மணர், ஸந்தோஷமுள்ளவராகிச் சிரிப்பவர்போல அந்த அர்ஜுனனை நோக்கி, 'ஓ! பகைவரைப்பிளப்பவனே! நான் இந்திரன். உனக்கு க்ஷேமம் உண்டாகுக. வரத்தைக் கேட்டுக்கொள்' என்றார். குருகுலச்ரேஷ்டனும் சூரனுமான தனஞ்சயன், இவ்விதம் சொல்லப்பட்டவனாகி இருகைகளையும் கூப்பி வணங்கி, இந்திரனை நோக்கி, 'ஓ! பகவானே! இப்பொழுது உம்மிடமிருந்து எல்லா அஸ்திரத்தையும் அறிய விரும்புகிறேன். இதுவே என்னால் விரும்பப்பட்ட விருப்பம். இந்த வரனை எனக்குக் கொடுப்பீராக' என்று சொன்னான்.

மஹேந்திரன், ப்ரீதிஅடைந்த மனமுள்ளவனாகிச் சிரித்துக்கொண்டு அவனை நோக்கி, 'ஓ! தனஞ்சய! இங்குவந்த உனக்கு

அஸ்திரங்களால் என்ன பிரயோஜனம்? இஷ்டமான 1 லோகங்களைக் கேட்டுக்கொள். நீ மேலான கதியை அடைந்திருக்கின்றாய்' என்று மறுமொழி சொன்னான். இவ்விதம் சொல்லைக்கேட்ட அர்ஜுனன், இந்திரனைப்பார்த்து, 'ஓ! தேவராஜரே! லோபத்தாலும் காமத்தாலும் தேவத்தன்மையையும் ஸுகத்தையும் எல்லாத் தேவர்களின் ஐசுவரியத்தையும் விரும்பவில்லை; (விரும்பினால்) அந்த ஸஹோதரர்களைக் காட்டில் விட்டுப் பகையையும் போக்காமல் எல்லாலோகங்களிலும் பல வருஷங்கள் அபகீர்த்தியை அடைவேன்' என்றான். எல்லாலோகங்களாலும் வணங்கப்பட்ட இந்திரன், அர்ஜுனன் இவ்விதம் சொல்லைக்கேட்டு, இனியமொழியால் அர்ஜுனனைத் தேற்றிக்கொண்டு, 'ஓ! ஐயா! எப்பொழுது மூன்று கண்ணுள்ளவரும் சூலதாரியும் பூதேசருமான சிவபெருமானைப் பார்ப்பாயோ அப்பொழுது திவ்யாஸ்திரங்கள் எல்லாவற்றையும் உனக்குக் கொடுப்பேன். மேலான ஸ்தானத்திலிருக்கிற மகாதேவருடைய தரிசனத்தில் முயற்சியைச்செய். ஓ! கௌந்தேய! அந்தத் தேவருடைய தரிசனத்தினால் ஸித்தியை அடைந்தவனாகி ஸ்வர்க்கத்துக்கு வருவாய்' என்றான். இந்திரன் இவ்விதம் பல்குனனைப்பார்த்துச் சொல்லித் திருப்பவும் மறைவை அடைந்தான். பிறகு, அர்ஜுனனும் யோகத்துடன் கூடினவனாகி அங்கேயே இருந்தான்'' என்றார்.

அர்ஜுனாபிகமன பர்வம் முற்றிற்று.

---

## முப்பத்தெட்டாவது அத்யாயம்.

## கைராத பர்வம்.

(அர்ஜுனன் தவம்செய்ததும், முனிவர்கள் அஞ்சிப் பரமசிவனிடம் முறையிட்டதும், அவர் அவர்களைத் தேற்றியனுப்பியதும்.)

ஜனமேஜயர் சொல்லலானார். "ஓ! பகவானே! அஸ்திரங்களையடைந்ததான பெருந்தன்மையுள்ள அர்ஜுனனுடைய இந்தக்கதையை விரிவாகக் கேட்கவிரும்புகிறேன். நீண்டகையுள்ளவனும் புருஷஸ்ரேஷ்டனும் தேஜஸ்வியுமான அர்ஜுனன் மனிதஸஞ்சாரமில்லாத வனத்தில் பயமற்றவனாகி எவ்விதம்

---

1 'போகங்களை' என்பது பழையவுரை.

பிரவேசித்தான்? ஓ! ப்ரமமத்தை அறிந்தவர்களுட்சிறந்தவரே! அவ்விடத்தில் வஸிக்கிற இவன் என்னசெய்தனன்? பகவானாகிய சிவனும் தேவராஜனும் எவ்விதம ஸந்தோஷப்படுத்தப்பட்டனர்? ஓ! த்விஜோத்தமரே! உம்முடைய அனுக்கிரகத்தால நான இதனைக் கேட்கவிரும்புகின்றேன். ஓ! ஸர்வஜ்ஞரே! நீரோ தேவலோகத்தி லுள்ளதையும் மனுஷ்யலோகத்திலுள்ளதையும அறிவீர். ஓ! பேரறிவாளரே! அடிக்கிறவர்களுள் சிறந்தவனும் சண்டைகளில் திருமபாதவனுமான அர்ஜுனன ஒப்பற்றதும் அதிக ஆச்சர்யகர மானதும மயிர்க்கூச்சமுண்டாக்கக்கூடியதுமான சண்டையைச் சிவனுடன்கூட முன் செய்தானன்றோ? எதைக்கேட்டு நரச்ரேஷ்டர் களும் சூரர்களுமான பார்த்தர்களுடைய மனங்கள்கூட எளிமை யாலும் மகிழ்ச்சியாலும ம்க்கவியப்பாலும நடுங்கினவோ, அர்ஜுனன் மற்றும் எதைச்செய்தானோ, அவையாவற்றையும் சொல்லும். சூர னான இந்த அர்ஜுனனுடைய சரித்திரத்தை மிகச்சிறிய அளவுங்கூட நிந்திக்கப்பட்டதாகக் காணவில்லை. இவனுடைய அவையெல்லா வற்றையும் எனக்குச் சொல்லுவீராக" என்றார்.

வைசம்பாயனர் சொல்லத்தொடங்கினார். "ஓ! ஐயா! கௌரவ ருள்புலிபோன்றவரே! ஆச்சரியம்போன்றதும பெரிதும திவ்ய மானதும் பெரியசண்டையில தேவதேவரான பரமேச்வரருடன் உடலகட்டிப்புரண்டதைப்பற்றியதுமான மஹாத்மாவான அர்ஜுன னுடைய கதையையும், பிறகு, ஈச்வரர் என்றறிந்தவுடன் நன்கு (வணங்கி அவரை அவன்) அடைந்ததையும் சொல்லுவேன்; கேட்பீ ராக. அளவிற்கடங்காதபலமுள்ள அந்த அர்ஜுனன் யுதிஷ்டிரரின் கட்டளையினால் ஸுரேச்வரனான இந்திரனையும் தேவதேவரானசங்கர ரையும் பார்க்கிறதற்காகப் போனான். அரசரே! புருஷச்ரேஷ்டனும் அதிகபலமுள்ளவனும நீண்டகையுள்ளவனும் கௌரவ்யனும் எல்லா லோகங்களிலும் மகாரதனும இந்திரபுத்திரனுமான அர்ஜுனன் கார்யஸித்திக்காகத் திவ்யமான அந்த வில்லையும் கத்தியையும எடுத் துக்கொண்டு வடக்குத்திக்கைநோக்கி இமயமலையின்கொடுமுடியைக் குறித்து அசையாதமனமுள்ளவனாகியும மேலான வேகத்துடன் கூடினவனாகியும் தவஞ்செய்வதில் நிச்சயமுள்ளவனாகியும் ஒருவ னாகவே முள்நிரம்பினதும பயங்கரமானதும பலவிதமான மலர்களுட னும் கனிகளுடனுங்கூடியதும பலவிதபக்ஷிகளின சப்தமுள்ளதும் அநேக மான்கூட்டங்களால் நிரம்பியதும ஸித்தர்களாலும் சாரணர் களாலும் அடையப்பட்டதுமான காட்டை அடைந்தான். பிறகு,

மனிதரில்லாத வனத்தை அர்ஜுனன் அடைந்தபோது ஆகாசத்தில் சங்கத்தினொலியும் படகத்தினொலியும் உண்டாயின. பூதலத்தில் அதிகமான மலர்மாரியும் விழுந்தது. மேகக்கூட்டமானது எப்பொழுதும் எங்கும் மறைத்தது. அப்பொழுது அந்த அர்ஜுனன் பெரிய மலையினருகிலுள்ள அடர்ந்த காடுகளைத் தாண்டி இமயமலையின் சாரலில் வஸிக்கின்றவனாகி விளங்கினான். அதிரதனான அர்ஜுனன் அந்த அந்த இடத்தில் மலர்ந்தவைகளும் பக்ஷிகளால் இனிமையாகக் கூவப்பட்டவைகளுமான மரங்களையும், பெரிய சுழல்களுள்ளவைகளும் வைடூரியத்துக்கும் நீலத்துக்கும் ஒப்பானவைகளும் அன்னங்களாலும் நீர்க்காக்கைகளாலும் ஒலிக்கப்பட்டவைகளும் அப்படியே ஸாரஸங்களால் சப்திக்கப்பட்டவைகளும் ஆண் குயில்களால் கூவப்பட்டவைகளும் க்ரௌஞ்சங்களாலும் மயில்களாலும் சப்திக்கப்பட்டவைகளும் அழகிய வனத்துடன் கூடியவைகளும் புண்ணியமான குளிர்ந்த அழுக்கற்ற ஜலமுள்ளவைகளுமான நதிகளையும் அந்த இடத்தில் பார்த்துக்கொண்டு மனத்தில் பிரீதி அடைந்தவனாயினான். பிறகு, அப்பொழுது அழகிய காட்டுப்பிரதேசத்தில் மகிழ்கின்ற அர்ஜுனன், உக்கிரமான தவத்திலிருந்துகொண்டு கடுமையான தேஜஸுள்ளவனும் நல்ல மனமுள்ளவனும் புல்லாலாகிய ஆடையைத் தரித்தவனும் தண்டத்தாலும் மான்தோலாலும் அலங்கரிக்கப்பட்டவனுமாகி முதல் மாதத்தில் பழுத்துப் பூமியில் உதிர்ந்த இலையை மூன்று நாளுக்கொருதரம் ஆகாரமாகக்கொண்டான்; இரண்டு மடங்கான காலத்திலே (= ஆறு தினங்களுக்கொருதரம்) கனியைப் புசித்து இரண்டாவது மாஸத்தைப் போக்கினான். அவன் * பதினைந்து நாளுக்கொருதரம் ஆகாரம்செய்துகொண்டு மூன்றாவது மாதத்தைக் கழித்தான். பிறகு,

---

* 'பக்ஷேண' என்ற பாடம் கொள்ளப்பட்டது. 'துருவன் தவத்தில் மும்மூன்று நாளுக்கொருமுறை பழங்களையுண்டு முதல் மாதத்தையும், ஆறு ஆறு நாளுக்கொருமுறை உதிர்ந்த புல் இலை முதலியவற்றையுண்டு இரண்டாவது மாதத்தையும், ஒன்பது ஒன்பது நாளுக்கொருமுறை நீரைப் பருகி மூன்றாவது மாதத்தையும், பன்னிரண்டு பன்னிரண்டு நாளுக்கொருமுறை காற்றையுட்கொண்டு நான்காவது மாதத்தையும், உணவில்லாமலே ஐந்தாவது மாதத்தையும் ஹரியைப் பூஜித்துக்கொண்டு கழித்தான்' என்பது. ஸ்ரீபாகவதம், 4-வது ஸ்கந்தம், 8-வது அத்யாயம், 72 முதலிய ச்லோகங்கள்.

நாலாவது மாதம் வந்தவுடன், பரதஸ்ரேஷ்டனும் தோள்வலியமைந்தவனுமான பாண்டுபுத்திரன் காற்றைப் புசித்துக்கொண்டும் கைகளை உயர்த்திக்கொண்டும் பிடிப்பற்றவனாகிக் காற்கட்டைவிரலின் முனையால் நின்றுகொண்டும் இருந்தான். அளவற்ற வல்லமையுள்ளவனும் மஹாத்மாவும் இப்படியிருப்பவனுமான அவனுக்கு, எப்பொழுதும் ஸ்நானம் செய்வதால், மின்னலுக்கும் தாமரைக்கும் ஒப்பான சடைகளுண்டாயின. பிறகு, எல்லா மஹரிஷிகளும், அர்ஜுனன் உக்கிரமான தவத்திலிருப்பதைத் தெரிவிக்கவேண்டுமென்ற எண்ணமுள்ளவர்களாகித் தேவரான பரமசிவனை நோக்கிச் சென்றார்கள். யாவரும், நீலகண்டரான மஹாதேவரை வணங்கி ஆசீர்வாதம்பெற்று அர்ஜுனனுடைய அந்தச் செய்கையைத் தெரிவித்தார்கள்.

'அதிக தேஜஸுள்ள அர்ஜுனன் ஒருவனாக இமயமலையின் சாரலையடைந்து திக்குக்களைப் புகையடையச்செய்துகொண்டு கரை கடந்த உக்கிரமான தவத்திலிருக்கிறான். ஓ! தேவேசரே! நாங்கள் யாவரும் அவனது எண்ணத்தை அறியவில்லை. (அவன்) எங்கள் யாவரையும் தாபத்தையடையச் செய்கிறான். அவனைத் (தவத்திலிருந்து) நன்கு திரும்பச்செய்வீராக' என்றார்கள். பூதங்களுக்கு ஈசுவரரான பார்வதீபதியானவர், பரமாத்மத்யானம் செய்யும் அந்த முனிவர்களின் அந்த வார்த்தையைக் கேட்டு, இந்த வார்த்தையைச் சொல்லத் தொடங்கினார். 'அர்ஜுனனைக்குறித்து நீங்கள் யாவரும் வருந்தவேண்டாம். மனம் மயங்காமல், வந்ததுபோலச் சந்தோஷம் அடைந்து சீக்கிரம் போங்கள். நான் இவனுடைய மனத்திலிருக்கும் எண்ணத்தை அறிவேன். இவனுக்கு விருப்பம், சிறிதும் ஸ்வர்க்கத்திலுமில்லை; ஐசுவர்யத்திலுமில்லை; ஆயுளிலுமில்லை. இவன் அடைய விரும்பியதை நான் இப்பொழுதே செய்வேன்' என்றார். சத்தியவாதிகளான ரிஷிகள் அந்தப் பரமசிவன் வார்த்தையைக் கேட்டு மனமகிழ்ந்து திரும்பவும் தம் தமக்குரிய ஆசிரமத்தை அடைந்தார்கள்.

---

## முப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## கைராதபர்வம். (தொடர்ச்சி)

(ஈச்வரவேடனால் அர்ஜுனன் தோற்றதும், அர்ஜுனனுடைய பூஜையாலும் துதியாலும் மகிழ்ந்த ஈச்வரர் அந்த அவனைத் தேற்றியதும்.)

மஹாத்மாக்களான அந்த தவசிகளெல்லாரும் போனவுடன், எல்லாப் பாவங்களையும் நாசம் செய்கிறவரும் பிநாகத்தைக் கையிலுடையவரும் பகவானுமான பரமசிவனார், தங்கமரத்திற் கொப்பான வேடன்வேஷத்தைத் தரித்துக்கொண்டும் வேறு மேருமலைபோலச் சரீரத்தால் விளங்கிக்கொண்டும் காந்தியுள்ள வில்லையும் ஸர்ப்பம்போன்ற அம்புகளையும் எடுத்துக்கொண்டும், புதரை எரிக்கின்ற மிக்க ஜ்வாலையுள்ள நெருப்புப்போன்றவராகிப் புறப்பட்டார். அவர், ஸ்ரீமானும், (தம்மோடு) ஒத்த விரதத்தையும் வேஷத்தையுமுடையவளான உமாதேவியுடன் இருப்பவரும், பலவித வேஷம்பூண்டவர்களாயும் மகிழ்ச்சியுள்ளவர்களாயுமிருக்கிற பூதங்களாலும் ஆயிரக்கணக்கான ஸ்திரீகளாலும் பின்தொடரப்பட்டவரும், வேடவேஷத்தால் மறைக்கப்பட்டவருமாகி அப்பொழுது வெளிக்கிளம்பினார். ஓ! அரசரே! பாரதரே! அப்பொழுது அந்த இடம் மிகவும் விளங்கிற்று. அப்பொழுது அவ்வனம் முழுதும் நொடிப்பொழுதில் சத்தமற்றதாயிற்று. அருவியொலியும் பறவையொலியும் ஓய்ந்தன. அவர், காரியங்களை எளிதில் செய்கின்ற அர்ஜுனனுடைய ஸமீபத்தில் வந்து, ஆச்சரியமான காட்சியுள்ளவனும் பன்றியின் உருவத்தை அடைந்து அர்ஜுனனை அதட்டுகிறவன் போன்றவனும் திதியின் புத்திரனுமான மூகனென்பவனைப் பார்த்தார். பிறகு, கலக்கமற்ற மனமுள்ள அர்ஜுனன் அவனைக் கொல்லுவதற்கு ஸர்ப்பம்போன்ற பாணங்களையும் காண்டீவமென்னும் வில்லையும் எடுத்து அந்தச் சிறந்தவில்லை நாணேற்றி நாணொலியால் (காட்டை) ஒலிக்கச்செய்து (அவ்வஸுரனைப்பார்த்து), 'இங்கு வந்த குற்றமற்ற என்னைக் கொல்ல விரும்புகிறாயாதலால், உன்னை முந்தியே நான் யமன்வீட்டை அடையச்செய்வேன்' என்றான். வேடனுருவங்கொண்ட சங்கரர் உறுதியான வில்லுள்ளவனும் அடிக்கப்போகின்றவனுமான அந்த அர்ஜுனனை, 'கரியமேகத்துக் கொப்பான இந்தப் பன்றியானது என்னால் முந்தியே எதிர்க்கப்

பட்டது' என்றுசொல்லி, வேகமாய்த் தடுத்தார். பிறகு, அர்ஜுனன் அந்தவார்த்தையை அலக்ஷியம் செய்து அடிக்கவே; அதிக காந்தியுள்ள வேடனும் அக்னிஜ்வாலை போன்றதும் இடிக்கொப்பானதுமான பாணத்தை ஒரேகுறியான அந்தப்பன்றியில ஒரேகாலத்தில் விட்டான். அப்பொழுது, அவ்விருவர்களாலும் விடப்பட்ட அந்த இரண்டு பாணங்களும் மலையின் முதுகுக்கொப்பானதும் விஸ்தீர்ணமாயுள்ளதுமான அந்த மூகனுடைய சரீரத்தில் ஒரேகாலத்தில் விழுந்தன. அப்பொழுது மலையில் வஜ்ராயுதத்தின் வீழ்ச்சிபோலவும் இடியின் வீழ்ச்சிபோலவும் அந்தப் பன்றியில் அந்தப் பாணங்களின் வீழ்ச்சி உண்டாயிற்று. அந்த ராக்ஷஸன பாம்புகள் போன்றவைகளும பிறகாசிக்கின்ற முனையுள்ளவைகளுமான அனேகம் பாணங்களால் அடிக்கப்பட்டவனாகித் திரும்பவும் பயங்கரமான ராக்ஷஸ ரூபத்தை எடுத்துக்கொண்டு இறந்தான். பிறகு, பகைவனைக் கொல்லும் அந்த அர்ஜுனன், ஸ்திரீயுடனிருப்பவரும வேடனவேஷத்தால் மறைக்கப்பட்டவரும் பொனபோன்ற ஒளியுள்ளவருமான ஒரு மனிதரைக் கண்டான.

அர்ஜுனன், பிரியமான மனமுள்ளவனாகிச் சிரிக்கிறவன்போல அவரைநோக்கிச சொல்லலானான: 'நீ யார்? ஸதிரீக்கூட்டத்தால் சூழப்பட்டவனாகி ஜனமற்ற காட்டில் சஞ்சரிக்கின்றாய். ஓ! பொன் போன்ற மேனியுள்ளவனே! நீ இந்தப் பயங்கரமானகாட்டில் பயப்படவில்லை. என்னால் குறிவைக்கபபட்ட இந்தப் பன்றியை நீ எதறகாக அடித்தாய்? இங்குவந்த இந்த ராக்ஷஸன் முந்தியே என்னால் குறி வைக்கப்பட்டானன்றோ? தற்செயலாகவோ (என்னை) அவமதித்தோ (இங்ஙனம் அடித்த) நீ பிழைத்து என்னிடமிருந்து விடுபடமாட்டாய். இப்பொழுது என்னிடத்தில் உன்னால் செய்யப்பட்ட இது வேட்டைக்குரிய முறையன்று. அதனால், மலையை இருப்பிடமாயுடைய உன்னை உயிரிலிருந்து நழுவச் செயவேன்' என்றான். இவ்விதம் அர்ஜுனனால சொல்லப்பட்ட வேடன், சிரித்துக்கொண்டு, ஸவ்யஸாசியான அர்ஜுனனை நோக்கி மெதுவான வார்த்தையால், 'ஓ! வீர! காட்டினருகில் என்னைப்பற்றி நீ கவலைப்படவேண்டாம். இந்தப் பூமியானது காட்டில் வசிக்கின்ற எங்களுக்கு எப்பொழுதும் உரியது. என்ன காரணத்தால் இங்குச் செய்தற்கரிய வாஸமானது உன்னால் விரும்பப்பட்டது? ஓ! தபோதன! நாங்களோ அனேகம் பிராணிகளுள்ள இவ்வனத்தில் வசிக்கின்றோம். நீயோ அக்கினிக்கு ஒப்பான காந்தியுள்ளவன்; மென்மையானவன்; ஸுகத்திற்

குரியவன். ஜனமற்ற இந்த இடத்தில் தனிமையாக ஏன் சஞ்சரிக்கின்றாய?' என்று கேட்டான். அர்ஜுனன், 'அக்கினிக்கொப்பான நாராச பாணங்களையும் காண்டீவத்தையும் ஆதாரமாகக் கொண்டு இரண்டாவது [1] அக்னிபோலப் பெரிய காட்டில வஸிக்கின்றேன். என்னைக் கொல்லுவதற்கு இங்கு வந்ததும, பன்றியுருவத்தை அடைந்ததுமான இந்தப் பயங்கரமான ராக்ஷஸ ஜந்துவும் என்னால கொல்லப்பட்டது' என்று சொன்னன. வேடன சொல்லலானன: 'என்னால் இது முந்தியே வில்லினின்று விடப்பட்ட பாணங்களால் அடிக்கப்பட்டதும் அடிக்கப்பட்டு எமன் வீட்டை அடைவிக்கப்பட்டதுமாகப் படுத்திருக்கின்றதன்றோ? இது முந்தி எனக்கே குறியாயிற்று; (ஆதலால) என்னுடையதே; என்னுடைய அடியினாலேயே உயிரினின்றும விடுவிக்கப்பட்டது. நீ உன்பலத்தால் காவங்கொண்டு உன்குற்றங்களைப பிறர்மீது ஏற்றிச சொல்லலாகாது. ஓ! மந்தபுத்தியுள்ளவனே! எதிர்த்தவனாயிருக்கிறேன். என்னால் உயிருடன விடப்படமாட்டாய. நிலையுள்ளவனாக இரு. இடிகள்போன்ற பாணங்களை விடப்போகின்றேன. நீயும் மேலான சக்தியுடன் (சண்டைக்கு) முயற்சி செய. நீயும் பாணங்களை விடு' என்றான. அப்பொழுது, அர்ஜுனன அந்த வேடனுடைய அந்த வார்த்தையைக் கேட்டுக் கோபத்தை வருவித்துக்கொண்டான; பாணங்களாலும அடித்தான். பிறகு, பரமசிவன் மனமகிழ்ச்சியுடன் பாணங்களை ஏற்றுக்கொண்டார். 'ஓ! மந்த! ஓ! மந்த!' என்று மறுபடியும் மறுபடியும் சொன்னர். 'மர்மத்தைப் பிளக்கக்கூடிய இந்த நாராச பாணங்களைப் பிரயோகம் செய்' என்றும் சொன்னர்.

இவவிதம சொல்லப்பட்ட அந்த அர்ஜுனன் விரைவில் பாணமழைபெய்தான். பிறகு, அங்கு அவர்கள் பரபரப்புள்ளவர்களாகி அடிக்கடி கர்ஜித்துப் பாம்புபோன்ற வடிவமுள்ள பாணங்களால் ஒருவரையொருவர் சீவினர்கள். பிறகு, அர்ஜுனன் வேடனிடத்தில் சரமாரியை நன்குபெய்தான. அதனைச் சிவன் சந்தோஷமுள்ள மனத்துடன் ஏற்றுக்கொண்டார். பினாகியானவர் ஒரு முகூர்த்தகாலம அம்புமழையைத் தாங்கிக்கொண்டு மலைபோல அசைவற்றவராகிக் காயப்படுத்தப்படாத சரீரத்துடன் நின்றார். அந்தத் தனஞ்சயன், சரமாரி வீண்போனதைக் கண்டு, மேலான

---

1 'பாவகி:' என்பது வேறு பாடம. 'ஸுப்ரம்மண்யர்' என்பது அதன் பொருள்.

ஆச்சரியம் அடைந்தான்; 'நல்லது! நல்லது!' என்றும் சொன்னான். 'மெல்லிய அங்கமுள்ள இவன் இமயமலையின் சிகரத்தை அடைந்து காண்டீவத்திலிருந்து விடப்பட்ட நாராசங்களைக் கலக்கமற்றவனாகவே ஏற்றுக்கொள்ளுகிறான்; ஆச்சரியம். இவன் யார்? தேவரான ஸாக்ஷாத் ருத்திரரோ? யக்ஷனோ? தேவனோ? அஸுரனோ? இந்தச் சிறந்த இமயமலையில் தேவர்களின் கூட்டமிருப்பது பிரசித்தம். ஆயிரக்கணக்காக விடப்பட்ட என் பாணக்கூட்டங்களுடைய வேகத்தைப் பொறுப்பதற்குப் பினாகத்தையுடைய தேவரைத் தவிர, மற்றவன் சக்தனல்லனன்றோ? (யுத்த) முயற்சியடைந்த இவன் ருத்திரரைத் தவிர வேறான தேவனோ? அல்லது யக்ஷனோ? நான் இவனைக் கூர்மையான பாணங்களால் யமன் வீட்டை அடையச் செய்கிறேன்' என்றான்.

ஓ! அரசரே! பிறகு, அர்ஜுனன் மனமகிழ்ச்சியுள்ளவனாகி மர்மத்தைப் பிளக்கும் நாராசங்களைச் சூரியன் கிரணங்களைச் செலுத்துவதுபோல நூற்றுக்கணக்காக விட்டான். லோகத்தை விருத்திசெய்யும் சூலபாணியான பகவான் பிரஸன்னமான மனத்துடன் கலமழையை மலையானது ஏற்றுக்கொள்வதுபோல அவைகளை ஏற்றுக்கொண்டார். அப்பொழுது, அர்ஜுனன் நொடிப்பொழுதில் பாணம் குறைந்தவனானான்; பிறகு, அந்தப் பாணத்தின் குறைவைக் கண்டு பயத்தையும் அடைந்தான். அர்ஜுனனே காண்டவவனத்தில் குறைவை அடையாத அம்புத்தூணிகளைத் தனக்கு முன்பு கொடுத்த அக்னி பகவானை நினைத்தான். அதிக காந்தியுள்ள (அர்ஜுனன்), 'என்னுடைய பாணங்கள் செலவாகிவிட்டமையால் (இனி) எதை வில்லினால் விடுவேன்? இந்த யாரோ ஒரு மனிதன் எல்லாப்பாணங்களையும் விழுங்கிவிடுகிறான். சூலத்தின் முனையால் யானையைக்கொல்வதுபோல நான் இவனை வில்முனையால் தண்டதாரியான யமனுடைய வீட்டை அடையச்செய்கிறேன்' என்றெண்ணி, பிறகு, (அவரை) வில்நுனியாலும் நாண்கயிற்றாலும் பிடித்திழுத்து வஜ்ராயுதம் போன்ற முஷ்டிகளாலும் குத்தினான். பகைவீரர்களைக் கொல்லுகின்ற அர்ஜுனன் வில்நுனியால் சண்டை செய்தான். மலையில் வஸிப்பவர் இவனுடைய திவ்யமான வில்லையும் பறித்துக்கொண்டார். வில் பறிக்கப்பட்ட அர்ஜுனன், பிறகு, கத்தியைக் கையில் தாங்கி நின்றான்; யுத்தத்தின் முடிவை விரும்பி வேகமாக அவரை எதிர்த்துச்சென்றான். அர்ஜுனன் மலைகளிலும் மழுக்கமடையாத கூர்மையான கத்தியைத் தோள்வலிமையால் ஓங்கி அவருடைய தலையில்

எறிந்தான். அந்தச் சிறந்தகத்தியும் அவருடைய தலையையடைந்து சிதறிற்று. பிறகு, அர்ஜுனன் மரங்களாலும் கற்களாலும் சண்டை செய்தான். அப்பொழுது, பெரிய சரீரமுள்ளவரான வேடனுருவங் கொண்ட பகவான், மரங்களையும் கற்களையும் ஏற்றுக்கொண்டார். பிறகு, மிக்க பலமுள்ள அர்ஜுனன், வஜ்ராயுதம்போலத் தாக்கும் முஷ்டியால், முகத்தில் புகையையுண்டுபண்ணிக்கொண்டு, அசைக்க முடியாதவரும் வேடன்போன்ற உருவமுள்ளவருமான (சிவன்மீது) அடித்தான். பிறகு, வேடனுருவங்கொண்ட பகவான் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்கு ஒப்பானதும் மிக்க பயங்கரமுமான கைக்குத்துக்களால் அர்ஜுனனைத் துன்புறுத்தினார். பிறகு, யுத்தம் செய்கிற வேடன் அர்ஜுனன் இவர்களின் கைக்குத்துக்களுடைய மிக்க பயங்கரமான சடசடவென்ற ஒலி உண்டாயிற்று. அவ்விருவருக்கும் ஒரு முகூர்த்தகாலம் மயிர்க்கூச்சத்தை உண்டு பண்ணக்கூடியதும் கைகளால் அடித்துக்கொள்வதுமான யுத்தமானது, இந்திரனுக்கும் விருத்திரனுக்கும் நடந்ததுபோல நடந்தது. ஓ! மஹாராஜரே! பிறகு, பலவானான அர்ஜுனன் வேடனையும், வேடன் சண்டைசெய்யும் அர்ஜுனனையும் மார்போடு மார்பு பலமாகத் தாக்கினார்கள். அவ்விருவர்களுடைய கைகளின் இறுகிய கட்டுக்களாலும் மார்புகளின் உரைதலாலும் அங்கங்களில் பொறியும் புகையுமுள்ள நெருப்பானது உண்டாயிற்று. பிறகு, மஹாதேவர் முன்னரே துன்புறுத்தப்பட்ட அவனைத் தமது அங்கங்களால் இறுகக்கட்டி அவனுடைய மனத்தைக் கோபத்தால் மோகமடையச் செய்துகொண்டு பலத்தால் மிஞ்சினார். ஓ! பாரதரே! பிறகு, தேவதேவரால் சரீரத்தால் கட்டப்பட்ட அர்ஜுனன் இறுக்கப்பட்ட அவயவங்களால் உருண்டையாகச் செய்யப்பட்டவன் போல விளங்கினான். பெரியமனமுள்ள அர்ஜுனன், மூச்சற்றவனும் அசைவற்றவனும் ஆனான்; பிறகு, ஒன்றுந்தெரியாமல் (மயங்கி)விழுந்தான். அதனால், சங்கரர் சந்தோஷமுள்ளவராயினார். அந்தப் பாண்டவன், இரண்டுநாழிகை அவ்விதமாக இருந்து திரும்பவும் அறிவுவந்தவனாகி எழுந்து, இரத்தத்தால் நனைக்கப்பட்ட அங்கமுள்ளவனும் மிக்க துயரமுள்ளவனுமாகி, ரக்ஷகரும் பகவானுமான பினாகியைச் சரணமடைந்து மண்ணாலான மேடையைச் செய்துகொண்டு அந்தச் சிவபிரானை மலர்மாலையால் பூஜித்தான். அப்பொழுது, பாண்டவஸ்ரேஷ்டனான அர்ஜுனன், அந்தமாலையை வேடனுடைய தலையில் இருக்கக் கண்டான்; ஸந்தோஷத்தால் மனந்தெளிவை

அடைந்து அவருடைய கால்களில் விழுந்தான. பிறகு, சங்கரர், அவன்விஷயததில் பரீதியுள்ளவராயினா. பின்பு, அவர், மேகம் போலக் கமபீரமான குரலுள்ளவராகி, ஆசசரியததை அடைந்தவ னும் சோர்வடைந்த எல்லா அவயவஙகளுமுள்ளவனுமான இவனை நோக்கிச் சொலலததொடஙகினா் :

'ஓ! ஓ! அா்ஜுன! உனது ஒபபற்றசெய்கையினால மகிழ்ச்சி அடைந்தேன். தைரியததாலும் இந்தப்பராக்ரமததாலும உனக்கு ஒப்பான க்ஷத்திரியன் இல்லை. ஓ! குற்றமற்றவனே! இபபொழுது எனககும உனக்கும சக்தியும வீர்யமும ஒபபானவையே. ஓ! நீண்டகைகளுள்ளவனே! பாரதரேறே! உனவிஷயததில பிரீதி அடைந்தேன். என்னைப் பார். ஓ! விசாலமான கணகளையுடையவனே! உனக்கு [1] ஞானக்கண்ணைக் கொடுக்கிறேன். நீ முநதி முனியாக இருந்தாய். யுததததில் பகைவர்கள் தேவர்களாயிருந்தாலும் யாவரையும் வெல்லுவாய். (பகைவரால்) தடுககமுடியாத அஸதிரததைப் பிரியததால் உனக்குக் கொடுப்பேன். நீயன்றோ விரைவில் என்னுடைய அந்த அஸதிரததை ஏறறுக்கொளவதற்குச் சக்தியுள்ளவன்?' என்றார். பிறகு, அவ்விடததில் அர்ஜுனன் பிரகாசிப்பவருமு கிரிசரும் சூலத்தைக் கையில தாங்கியவரும மிக்க காந்தியுள்ளவருமான மஹாதேவரைப் பார்வதியுடன் பார்ததான். பகைவர்பட்டணததை ஜயிக்கும் அந்த அர்ஜுனன [2] முழங்கால்களால் பூமியை அடைந்தும் தலையினால் வணஙகியும சிவபெருமானை அருள்வரும்படி செய்தான்.

அர்ஜுனன், 'ஓ! சடைமுடியுள்ளவரே! எல்லாப்பிராணிகளுக்கும் ஈஸ்வரரே! பகனுடைய கண்களைக்கெடுததவரே! ஓ! தேவதேவரே! மஹாதேவரே! நீலகண்டரே! ஜடாதரரே! முக்கண்ணரான உம்மை எங்குமுள்ளவராகவும் காரணங்களுக்கும மேலானவராகவும் தேவர்களுக்கும் அடையவேண்டிய தேவராகவும அறிகிறேன். இந்த ஜகததானது உம்மால் உண்டுபண்ணப்பட்டது. தேவர் அஸுரா மனிதர் இவர்களுடன்கூடிய மூன்று உலகங்களாலும் நீர் ஜயிக்கமுடியாதவர். விஷ்ணுரூபியானசிவனும் சிவரூபியானவிஷ்ணுவும் தக்ஷன்யஜ்ஞத்தை நாசமாக்கினவரும் ஹரிரூபி

---

1 'எனது தேஜஸைப பாாககககூடிய சகதியைக் கணணுககுக் கொடுககிறேன்' எனினுமாம்.

2 முழந்தாளை மண்டியிட்டு வணங்குதல் வடதேசத்தில் இக்காலத்தும் வழங்குகிறது.

யும் நெற்றிக்கண்ணுள்ளவரும் சர்வரும் வர்ஷிக்கின்றவரும் சூல பாணியும் பிநாகமென்னும்விலலால் (உலகத்தைக்) காப்பவரும் சூரியரும் மங்களத்தைக்கொடுப்பவரும் உண்டுபண்ணுகிறவருமான உமக்கு நமஸ்காரம். ஓ! ஸர்வபூதமஹேஸ்வரரே! பகவானே! லோககாரணத்திற்கும் காரணமானவரும் ஜகத்திற்கு க்ஷேமத்தைச் செய்கிறவரும் பூதகணங்களுக்கு நாயகரும் ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் மேற்பட்டவரும் மிக நுட்பமானவரும் சிவனுமான உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். ஓ! பகவானே! சங்கரரே! என்னுடைய குற்றத்தைப் பொறுக்கக்கடவீர். தேவேசரே! 1 பகவானை (உம்மைப்) பார்க்க விருப்பங்கொண்டவனாகி, ரிஷிகளுக்கு இருப்பிடமானதும் சிறந்ததும் உமக்குப் பிரியமுள்ளதுமான இந்தப் பெரியமலையை அடைந்தவனாகிறேன். ஓ! பகவானே! எல்லா உலகத்தாலும் வணங்கப்பட்ட உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன். மஹாதேவரே! அறிவின்மையாலும் ஆலோசியாமையாலும் உம்முடன் என்னால் செய்யப்பட்ட சண்டையான இதனை என்னுடைய குற்றமாகக் (கொள்ளக்)கூடாது. சங்கரரே! இப்பொழுது சரணமடைந்த என்னைக்குறித்து அதனைப் பொறுத்துக்கொள்வீராக' என்று பிரார்த்தித்தான். மஹாதேஜஸ்வியான விருஷபத்வஜர், சிரித்துக்கொண்டும் அர்ஜுனனுடைய அழகிய கையைப் பிடித்துக் கொண்டும், 'பொறுத்துக்கொள்ளப்பட்டது' என்றே அவனைக் குறித்துச் சொன்னார். விருஷபக்கொடியுள்ளவரும் பகவானும் ப்ரீதியடைந்த மனமுள்ளவரும் கங்கையால் அடையாளம் செய்யப்பட்ட ஜடையுள்ளவரும் சர்வருமான ஹரர் அதிககாந்தியுள்ள அர்ஜுனனுடைய அழகியதும் சிவந்த உள்ளங்கையும் விரலுமுள்ளதும் உருண்டிருப்பதுமான கையைப்பிடித்துத் தமது இருகைகளாலும் அவனைத் தழுவிக்கொண்டு இன்சொல்லை முன்னிட்டுத் திரும்பவும் சொல்லலானார்.

---

1 'பகவத' என மாற்றப்பட்டது.

நாறபதாவது அத்யாயம்.

## கைராதபர்வம், (தொடர்ச்சி)

(மஹாதேவர் அர்ஜுனனுக்குத் தாம் பறித்துக்கொண்ட காண்டீவ முதலியவற்றைக் கொடுத்துப் பாசுபதாஸ்திரத்தையும் கொடுத்தது.)

'நீ முந்தியசரீரத்தில் நாராயணரைச் சகாயமாகவுடைய நரனாகிப் பதரிகாச்ரமத்தில் பல பதினாயிரம் வருஷங்கள் உக்கிரமான தவஞ்செய்தாய். புருஷோத்தமரான விஷ்ணுவினிடத்திலும் உன்னிடத்திலும் மேலான சக்தியிருக்கின்றது. புருஷச்ரேஷ்டர்களான உங்களாலேயே சக்தியினால் ஜகத்தானது தரிக்கப்படுகின்றது. ஓ! பிரபுவே! இந்திரனுக்கு அபிஷேகஞ்செய்யுங்காலத்தில் மேகசப்தமுள்ள மிகப்பெரிய வில்லையெடுத்து உன்னாலும் கிருஷ்ணனாலும் அஸுரர்கள் கொல்லப்பட்டார்கள். ஓ! ஆடவருட்சிறந்தவனே! பார்த்த! அந்த வில், என்னால் மாயையை அடைந்து கவரப்பட்டதும் உன்னுடைய கைகளுக்கே தகுந்ததுமான இந்தக் காண்டீவமே. ஓ! பார்த்த! உன்கைகளுக்கேற்ற (இந்தத்) தூணிகளும் திரும்பவும் குறைவற்றவையாகும். ஓ! குருநந்தன! சரீரமும் நோயற்றதாகும். ஓ! பார்த்த! ப்ரீதியுள்ளவனாயிருக்கின்றேன். நீ உண்மையான பராக்ரமமுள்ளவன். ஓ! மனிதருட்சிறந்தவனே! விரும்பப்பட்ட வரனை நம்மிடமிருந்து பெற்றுக்கொள்ளுக. ஓ! பகைவரையடக்கும் பாரத! மனிதர்களுள்ளோ தேவலோகத்திலோ உனக்கு நிகரான ஆண்பிள்ளை ஒருவனுமில்லை. க்ஷத்ரியஜாதியானது உன்னைத் தலைவனாகவுடையது' என்றார்.

அர்ஜுனன் சொல்லத்தொடங்கினன். 'ஓ! வ்ருஷபத்வஜரே! ப்ரபுவே! மஹாதேவரே! எனக்குப் ப்ரியத்துடன் இஷ்டமான வரனைக் கொடுப்பீரானால் திவ்யமானதும், கோரமானதும், பயங்கரமான பராக்கிரமமுள்ளதும், பிரம்ம சிரஸென்று பெயருள்ளதும் பயங்கரமான யுகத்தின் முடிவு வந்தவுடன் எல்லா ஜகத்தையும் நாசமாக்குகின்றதும், [1] சண்டையில் தானவர்களையும் ராக்ஷஸர்களையும் அஸுரர்களையும் பிசாசர்களையும் கந்தர்வர்களையும் பன்னகர்களையும் ஜயிக்கக்கூடியதும், மந்திரிக்கப்பட்டால் ஆயிரஞ்சூலங்களும் பயங்கரமான தோற்றமுள்ள கதைகளும் பாம்புபோன்ற வடிவமுள்ள பாணங்க

1 அதிக பாடமான ஒரு ச்லோகம் இரட்டித்ததால் விடப்பட்டது.

ளும் உண்டாகக்கூடியதும், பீஷ்மருடனும் த்ரோணருடனும் க்ருபருடனும் எப்பொழுதும் கடுமையாய்ப் பேசுகின்ற கர்ணனுடனும் சண்டைக்களத்தில் சண்டைசெய்யக் கூடியதுமான பாசுபதாஸ்திரத்தை விரும்புகிறேன். ஓ! பகனது நேத்திரத்தை அழித்தவரே! பகவானே! உமது அனுக்கிரகத்தால், நான் செய்யவேண்டியதை நன்கு செய்தவனும் ஸமர்த்தனுமாயிருக்க வேண்டுமென்பதே என்னுடைய முதன்மையான விருப்பம்' என்றான்.

சங்கரர் சொல்லத்தொடங்கினார்: 'ஓ! வீரனே! பாண்டவ! நான் பிரியமான பாசுபதமென்கிற அஸ்திரத்தை உனக்குக் கொடுக்கின்றேன். தரிப்பதிலும் விடுவதிலும் மீட்பதிலும் நீ சக்தியுள்ளவன். அதனை மஹேந்திரனும் அறியான்; யமனும் அறியான்; குபேரனும் அறியான்; வருணனோ அல்லது வாயுவோ அறியார்; மனிதர்கள் எவ்விதம் அறிவார்? ஓ! பார்த்த! ஒரு மனிதனிடத்திலும் அவசரப்பட்டு இதனை நீ விடலாகாது. அற்ப வலிமையுள்ளவனிடத்தில் விடப்பட்டதானால் எல்லா உலகத்தையும் சாம்பலாக்கும். சராசரங்களுடன் கூடின மூன்று உலகங்களிலும் இதனால் கொல்லக் கூடாதவன் ஒருவனுமில்லை. மனத்தினாலும் கண்ணினாலும் வாக்கினாலும் வில்லினாலும் (இந்த அஸ்திரத்தால்) பகைவன் கொல்லப்படுகிறான்' என்றார்.

பிறகு, அந்த அர்ஜுனன், அதனைக் கேட்டு, வேகத்துடன் சுத்தனாகியும் மனத்தை ஒரேயிடத்தில் நிறுத்தினவனாகியும், உலகங்களுக்கு ஈச்வரரான பரமசிவனைப் பாதங்களைப் பிடித்து வணங்கி, 'உபதேசம் செய்வீராக' என்று வேண்டினான். பிறகு, பரமர், பிரயோகிக்கும் முறை திருப்பியழைக்கும் முறை இவற்றின் ரகஸ்யங்களுடன் கூடியதும் சரீரமுள்ள யமனைப்போன்றதுமான அந்த அஸ்திரத்தை அர்ஜுனனைக் கற்கச் செய்தார். (அந்த அஸ்திரமானது) மூன்று கண்ணுள்ள உமாபதியை அடைந்ததுபோலவே மஹாத்மாவான அர்ஜுனனை வந்தடைந்தது. அப்பொழுது, அர்ஜுனனும் பரிசுத்தியுள்ளவனாக அதனைப் பெற்றுக்கொண்டான். பிறகு, மலைகளும் காடுகளும் மரங்களுமுள்ளதும் கடலையும் கானகத்தையுமுடையதும் கிராமம், பட்டணம், ரத்னம் விளையுமிடம் இவைகளுடன் கூடியதுமான பூமியானது அசைந்தது. அந்த அஸ்திரம் அடையப்பட்ட முகூர்த்தத்தில், ஆயிரக்கணக்கான பேரிகளின் முழக்கங்களும் சங்கதுந்துபிகளின் ஒலிகளும் பெரிய உத்பாதமும் உண்டாயின. பிறகு, அளவற்ற தேஜஸ்ஸுள்ள பாண்டவனுடைய பக்கத்

தில் நிற்கின்றதும் சரீரமுள்ளதும் பிரகாசிக்கின்றதும் பயங்கரமானதுமான அஸ்திரத்தைத் தேவர்களும் அஸுரர்களும் பார்த்தார்கள். பிறகு, முக்கண்ணனால் தொடப்பட்டவனும் அளவற்ற வல்லமையுள்ளவனுமான அர்ஜுனனுடைய சரீரத்திலிருந்த தோஷங்கள் யாவும் நீங்கின. ஓ! அரசரே! அப்பொழுது, அர்ஜுனன், முக்கண்ணனால், 'ஸ்வர்க்கத்தையடை' என்று அனுமதிகொடுக்கப்பட்டு, அவரைத் தலையால் வணங்கிக் கைகூப்பிக்கொண்டு பார்த்தான். பிறகு, ஸ்வர்க்கத்தில் வசிப்பவர்களுக்குப் பதியும் ஜிதேந்திரியரும் ஸர்வஜ்ஞரும் உமாபதியும் பவரும் கிரீசருமான சிவபிரான் அஸுரர்களையும் பிசாசர்களையும் நாசம்பண்ணக்கூடியதும் பெரிதுமான காண்டீவமென்ற வில்லைப் புருஷஸ்ரேஷ்டனான அவனுக்குக் கொடுத்தார். பிறகு, அப்பொழுது ஈச்வரர் பார்வதியுடன் 1 வெண்மையான மலைத்தடங்களையும் தாழ்வரைகளையும் குகைகளையுமுடையதும் சுபமானதும் பக்ஷிகளாலும் மஹரிஷிகளாலும் அடையப்பட்டதுமான அந்தச் சிறந்த மலையைவிட்டுப் புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஆகாசத்தை அடைந்தார்.

---

## நாற்பத்தோராவது அத்யாயம்.

## கைராதபர்வம். (தொடர்ச்சி.)

(யமனும் வருணனும் குபேரனும் அர்ஜுனனுக்கு அஸ்திரங்களைக் கொடுத்ததும், இந்திரன் அர்ஜுனனை ஸ்வர்க்கத்துக்கு வரச் சொல்லியதும்.)

அர்ஜுனன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே, பிநாகமென்ற வில்லுள்ளவரும் விருஷபக்கொடியுள்ளவருமான சிவபெருமான் அஸ்தமயமடைந்த சூரியன் உலகத்திற்கு மறைவதுபோல மறைவையடைந்தார். ஓ! பாரதரே! பிறகு, பகைவீரர்களை அழிப்பவனான அர்ஜுனன், 'என்னால் மஹாதேவர் நேராகவே பார்க்கப்பட்டார்' என்று மேலான ஆச்சரியமடைந்தான். 'முக்கண்ணரும் பிநாகியும் வரங்கொடுப்பவருமான ஹரர் என்னால் ரூபமுள்ளவராகப் பார்க்கவும் கையினால் தொடவும்பட்டமையால் பாக்யவானும் அருள் செய்யப்பட்டவனுமாகிறேன். செய்யவேண்

---

1 'ஸித' என்று பாடம் கொள்ளப்பட்டது

டியதைச் செய்தவனாயினேன். என்னை மிகவும் கிருதார்த்தனாக நானே மனத்தினால் எண்ணுகிறேன். பகைவர்கள் யாவரையும் வெல்லப்பட்டவர்களாகவும் விரும்பியபயனைக் கைகூடினதாகவும் எண்ணுகிறேன்' என்றெண்ணினன்.

பிறகு, அதிக காந்தியுள்ள பார்த்தன் இவ்விதம் ஆலோசனை செய்யும்போது, வைடூரியமணி நிறமுள்ளவனும் எல்லாத் திக்குகளையும் விளங்கச்செய்பவனும் ஜலஜந்துக்களின் கூட்டத்தால் சூழப்பெற்றவனும் சோபையுள்ளவனுமான வருணன் வந்து சேர்ந்தான். நாகங்களோடும் [1] நதங்களோடும் [2] நதிகளோடும் அஸுரர்களோடும் ஸாத்தியர்களோடும் தேவகூட்டங்களோடும் ஜலஜந்துக்களுக்குத் தலைவனும் ஜிதேந்திரியனுமான வருணன் அந்த இடத்தை அடைந்தான். பிறகு, பொன் போன்ற மேனியுள்ளவனும் யக்ஷர்களால் பின் தொடரப்பட்டவனும் பிரபுவுமான குபேரன் மிக்க காந்தியுள்ள விமானத்துடன் வந்து சேர்ந்தான். ஆகாயத்தை விளக்குபவனும் [3] ஆச்சரியமான தோற்றமுள்ளவனும் தனங்களுக்கு அதிபதியுமான குபேரன் அர்ஜுனனைப் பார்க்கவந்தான். அப்படியே, லோகத்திற்கு நாசத்தை உண்டுபண்ணுகிறவனும், பராக்ரமமுள்ளவனும், மனித சரீரங்கொண்டவர்களும் லோகத்தை நிலைக்கச் செய்கிறவர்களுமான பிதுருக்களுடன் கூடியவனும், தண்டத்தைக் கையிற்கொண்டவனும், எல்லாப் பிராணிகளையும் நாசமாக்குகிறவனும், யோசிக்க முடியாத ஸ்வரூபமுடையவனும், சூரியபுத்திரனும், தர்மங்களுக்கு ராஜனும், காந்தியுள்ளவனுமான யமன் குஹ்யகர்களுடனும் கந்தர்வர்களுடனும் பன்னகர்களுடனும் கூடின மூவுலகங்களையும், தன் விமானத்தினால், யுகத்தின் முடிவு வந்தபோது உண்டாகும் இரண்டாவது சூரியன்போல விளக்கிக்கொண்டு நேரில் வந்தான். இமயமலையின் பிரகாசமுள்ள விசித்திரமான கொடுமுடிகளை அடைந்து அவ்விடத்தில் தவத்துடன் கூடிய அர்ஜுனனைக் கண்டார்கள். பிறகு, ஒரு முகூர்த்தத்தினுள் பூஜ்யனான இந்திரன் தேவகணங்களால் சூழப்பட்டு இந்திராணியுடன் ஐராவதத்தின்மீது ஏறிக்கொண்டு வந்துசேர்ந்தான். [4] யானைகளுள் ஸ்ரேஷ்டமான ஐராவ

1 நதம் = மேற்கே செல்லும் ஆறு. 2 நதி = கிழக்கே செல்லும் ஆறு.

3 'அத்புதோபமதர்சந:' என்பது மூலம்.

4 வேறு பாடங்கொண்டு, 'வெண்மேகத்தை அடைந்த சந்திரன்போல' என்பது பழையவுரை.

த்தின் மேலிருப்பவனால் தலையில் பிடிக்கப்படும் வெண்மையான குடையினால் வெண்மேகத்தை அடைந்தவன்போல விளங்கினான்; தபோதனர்களான ரிஷிகளாலும் கந்தர்வர்களாலும் நன்கு துதிக்கப்படுகிறவனாகி உதித்த சூரியன்போல மலையின் கொடுமுடியை அடைந்து நின்றான். பிறகு, தெற்குத்திக்கையடைந்தவனும் மேலான தர்மமறிந்தவனும் நல்ல புத்தியுள்ளவனுமான யமன், மேகம்போன்ற குரலுள்ளவனாகி அழகிய வார்த்தையைச் சொல்லலானான்: 'ஓ! அர்ஜுன! ஓ! அர்ஜுன! வந்திருக்கும் லோகபாலர்களான எங்களைப் பார். உனக்கு இப்பொழுது பார்க்கும் திறமையைக் கொடுக்கின்றோம். நீ (எங்களைத்) தரிசிப்பதற்குரியவன். ஓ! ஐயா! அளவிடப்படாத புத்தியுள்ளவனும் அதிக பலமுள்ளவனும் நரனென்னும் பெயர்பெற்ற பழைய ரிஷியுமான நீ பிரமமாவின் உத்தரவினால் மனிதனாயிருத்தலை அடைந்தாய். ஓ! குற்றமற்றவனே! மிகவும் தர்மத்தில் மனமுள்ளவரும் அதிக வீர்யமுள்ளவரும் வஸுவினிடமிருந்து உண்டானவரும், (உனது) பாட்டனாருமான பீஷ்மரும் உன்னால் போரில் வெல்லப்படத் தகுந்தவர். குருநந்தன! துரோணாசாரியரால் ரக்ஷிக்கப்பெற்றதும் அக்னிகோபமான பரிசமுள்ளதுமான க்ஷத்திரிய ஜாதியும் மனிதப்பிறப்பையடைந்தவர்களும் அதிக வீர்யமுள்ளவர்களுமான அஸுரர்களும் நிவாத கவசர்களும் ஜயிக்கப்படத்தகுந்தவர்கள். ஓ! தனஞ்சய! எல்லா உலகத்தையும் காய்கிறவனும் தேவனுமான என் பிதாவான (சூரியனுடைய) அம்சமான மிகப் பெரிய வீர்யமுள்ள கர்ணனும் உன்னால் கொல்லப்படத் தகுந்தவன். ஓ! கௌந்தேய! பகைவரை அழிப்பவனே! பூமியை அடைந்த தேவர், கந்தர்வர், ராக்ஷஸர் இவர்களுடைய அம்சமானவர்களும், யுத்தத்தில் உன்னால் கொல்லப்பட்டவர்களாகித் தம் தம் செய்கையின் பயனாகச் சம்பாதிக்கப்பட்ட கதியை அவரவர்களுக்குத் தக்கபடி அடையப்போகிறார்கள். ஓ! பல்குன! உலகத்தில் உன் கீர்த்தியானது அழிவற்றதாயிருக்கும். பெரிய சண்டையில் உன்னால் மஹாதேவர் நேரிலேயே மகிழ்விக்கப்பட்டாரன்றோ? விஷ்ணுவுடன் கூடிய (உன்னால்) பூமியும் பாரமற்றதாகச் செய்யப்படவேண்டியதாயிருக்கிறது. புஜபலம் மிக்கவனே! தடுக்கமுடியாத தண்டமென்ற அஸ்திரத்தைப் பெற்றுக்கொள்ளு. இந்த அஸ்திரத்தால் நீ பெரிய செய்கையைச் செய்வாய் அன்றோ?' என்றான். குருநந்தனனான பார்த்தனும் மந்திரத்துடனும் (விடுதற்கும் அழைத்தற்கும் முன்னும் பின்னும் செய்

யம்) 1 உபசாரத்துடனும் விதத்துடனும் திருப்புதலுடனும் (அந்த அஸ்திரத்தை) விதிப்படி பெற்றுக்கொண்டான். பிறகு, மேகம்போலக் கரியவனும் ஜலஜந்துக்களுக்குப் பதியும் பிரபுவுமான வருணன் மேற்குத் திக்கையடைந்து வார்த்தையைச் சொல்லுகிறவனாகி, 'ஓ! பார்த்த! நீண்டு சிவந்த கண்ணுள்ளவனே! நீ க்ஷத்திரியர்களுள் முக்கியமானவன்; க்ஷத்திரிய தர்மத்தினிலிருப்பவன். என்னைப் பார். ஜலத்துக்கு ராஜனான வருணனாக இருக்கிறேன். ஓ! கௌந்தேய! என்னால் பிரயோகிக்கப்பட்டு (எவராலும்) தடுக்கப்படாதவைகளான வருண பாசங்களை (விடுத்தல்) அடக்குதல் இவற்றின் ரகஸ்யங்களுடன் பெற்றுக்கொள். ஓ! வீர! அப்பொழுது தாரகாமயமென்னும் யுத்தத்தில் என்னால் மஹா தைரியமுள்ள ஆயிரக்கணக்கான அஸுரர்கள் இவைகளால் கட்டப்பட்டனர். ஓ! மிக்க பலமுள்ளவனே! ஆகையால், என்னருளால் வெளிவந்த இவைகளைப் பெற்றுக்கொள். இவற்றைக் கையிற்கொண்டு சண்டைசெய்யும் உன்னிடமிருந்து யமனும் விடுபடானன்றோ? நீ இந்த அஸ்திரத்துடன் யுத்தத்தில் சஞ்சரிக்குங் காலத்தில் பூமியானது க்ஷத்திரியர்களற்றதாகும்; ஸந்தேகமில்லை' என்றான். பிறகு, அஸ்திரங்களையறிந்தவர்களுள் சிறந்தவனும் இந்திரகுமாரனுமான அர்ஜுனன் திவ்யமான அந்த வாருணாஸ்திரங்களை வருணனிடமிருந்து முறைப்படி பெற்றுக்கொண்டான். பிறகு, வருணனாலும் யமனாலும் திவ்யாஸ்திரங்கள் கொடுக்கப்பட்டவுடன், கைலாஸத்தில் வசிக்கும் குபேரன் சொல்லலானான்: 'ஓ! புத்திமானே! பாண்டவ! மிக்க பலசாலியே! நான் கிருஷ்ணனுடன் சேர்ந்து மகிழ்வதுபோல உன்னுடன் சேர்ந்தும் உன் விஷயத்தில் மகிழ்ந்திருக்கின்றேன். ஓ! ஸவ்யஸாசியே! மிக்க கைவன்மையுள்ளவனே! நரனே! ஸநாதந! முன்பு தேவனாயிருந்தவனே! நீ முந்திய கல்பங்களில் எப்பொழுதும் எங்களுடன் கூடத் தவஞ்செய்பவனாக (இருந்தாய்.) ஓ! மனிதருட் சிறந்தவனே! இந்தத் திவ்யமான ஞானத்தை உனக்குத் தருகிறேன். தோள்வலியமைந்தவனே! மனிதர்களலாத ஜயிக்கமுடியாதவர்களையும் ஜயிப்பாய். நீ சீக்கிரமாக என்னிடமிருந்தும் மேலான அஸ்திரத்தைப் பெற்றுக்கொள்வாயாக. இதனால் நீ துர்யோதனனுடைய ஸைனியங்களை எரித்துவிடுவாய். இந்திரியபலம் மனோபலம் சரீரகாந்தி இவைகளைக் கொடுக்கக்கூடியதும் பகைவருக்குத் துக்கத்தை

1 வேறு பாடம்

உண்டுபண்ணக்கூடியதும் சத்ருக்களைக் கொல்லக்கூடியதும் எனக்குப் பிரியமுள்ளதுமான அந்தர்த்தானாஸ்திரத்தையும் என்னிடமிருந்து நீ பெற்றுக்கொள்வாயாக. மஹாத்மாவான சங்கரரால் திரிபுரம் அழிக்கப்படுங்கால் இந்த அஸ்திரம் விடப்பட்டது. இதனால் பெரிய அஸுரர்கள் எரிக்கப்பட்டனர். உண்மையான பராக்ரமமுள்ளவனே! மேருவுக்கு ஒப்பான கௌரவமுள்ளவனே! உனக்கென்று இது என்னால் கொடுக்கப்பட்டது. இதனைத் தரிப்பதற்கு நீ தக்கவனாகிறாய்' என்றான். பிறகு, மிக்க பலமுள்ளவனும் பெரிய கையுள்ளவனும் குருநந்தனுமான அர்ஜுனன், குபேரனுடையதான திவ்யாஸ்திரத்தை விதிப்படி பெற்றுக்கொண்டான். பிறகு, திவ்யதுந்துபிக்கு ஒப்பான குரலுள்ள இந்திரன், ச்ரமமின்றி வேலைசெய்யும் அர்ஜுனனை அழகியவாக்கினால் இனமொழி கூறிக்கொண்டு, 'ஓ! குந்தியைத் தாயாகவுடைய மஹாபாகுவே! புராதனனும் ப்ரபுவுமான நீ மேலான ஸித்தியையடைந்து தேவர்களுக்கு முக்கியமாயிருத்தலை நேரில் அடைந்திருக்கின்றாய். பகைவரை அடக்குபவனே! மிக்க காந்தியுள்ளவனே! மிகப் பெரிதான தேவகார்யம் உன்னால் செய்யப்படவேண்டும். ஸ்வர்க்கமானது உன்னால் அடையப்படவேண்டும். ஸித்தம் செய்துகொள்ளக்கடவாய். உனக்காக மாதலியுடன் கூடின என்னுடைய ரதமானது [1] பூமிக்கு வரப்போகிறது. ஓ! கௌரவ! உனக்கு எல்லா அஸ்திரங்களையும் நான் அந்த ஸ்வர்க்கத்தில் தருகிறேன்' என்று சொன்னான். குந்திபுத்திரனும் புத்திமானுமான அர்ஜுனன், மலையின் கொடுமுடியில் கூடியிருக்கும் அந்த லோகபாலர்களைப் பார்த்து ஆச்சரியத்தை அடைந்தான். பிறகு, ஒளிமிக்க அர்ஜுனன், வந்தவர்களான லோகபாலர்களைச் சொற்களாலும் ஜலங்களாலும் பழங்களாலும் முறைப்படி பூஜைசெய்தான். பிறகு, பேரறிவுள்ளவர்களான தேவர்களெல்லாரும் அர்ஜுனனுக்குப் பிரதிமரியாதை செய்து வந்ததுபோல இஷ்டப்படி மனோவேகமாகப் போயினர். பிறகு, புருஷச்ரேஷ்டனான அர்ஜுனன் அஸ்திரங்களைப் பெற்றுச் சந்தோஷமடைந்தான். பிறகு, அவன் தன்னைப் பூர்ணமான மனமுள்ளவனாகவும் க்ருதார்த்தனாகவும் எண்ணினான்.

---

கைராதபர்வம் முற்றிற்று.

---

1 வேறு பாடம்.

நாற்பத்திரண்டாவது அத்யாயம்.

# இந்திரலோகாபிகமன பர்வம்.

(அர்ஜுனன் மாதலிகொணர்ந்த தேரேறி ஸ்வர்க்கத்துக்குப் போனது)

ஓ! ராஜேந்திரரே! லோகபாலர்கள் போனவுடன், பகைவரைக் கொல்லும் அர்ஜுனன் தேவராஜனது ரதத்தின் வரவைப்பற்றி ஆலோசித்தான். புத்திமானான அந்தக் [1] குடாகேசன் ஆலோசனை செய்யும்போது, அதிக காந்தியுள்ள ரதமானது மாதலியுடன் கூடினதாகி ஆகாயத்தை இருளற்றதாய்ச் செய்துகொண்டும் பெரிய மேக ஓசைக்கொப்பான ஒலிகளால் திக்குகளை நிரப்பிக்கொண்டும் மேகங்களைப் பிளப்பதுபோல வந்து சேர்ந்தது. வாயுவேகமுள்ளவையும் பொன்னிறமுள்ளவையுமான பதினாயிரம் குதிரைகளால் இழுக்கப்பட்டதும் கண்ணைக்கவர்வதும் தேவலோகத்ததும் வியக்கத்தக்கதுமான அந்த ரதத்தில் கத்திகளும், பயங்கரமான சக்திகளும், கொடிய தோற்றமுள்ள கதைகளும், திவ்யமான வல்லமையுள்ள பிராஸங்களும், மிக்க காந்தியுள்ள மின்னல்களும், அப்படியே அசனிகளும், சக்கரம் போடப்பட்டவையும் காற்றினால் வெடிப்பவையும் பெரிய மேகங்களின் முழக்கம் போன்ற முழக்கமுள்ளவையுமான [2] துலாகுடங்களும், பருத்த சரீரமுள்ளவைகளும் ஜ்வலிக்கின்ற வாயுள்ளவைகளும் மிக்க அச்சந்தருபவைகளும் வெண்மையான மேகக்கூட்டத்தை ஒத்தவைகளும் கற்கள் போலச் சேர்ந்திருப்பவைகளுமான நாகங்களும் இருந்தன. அந்த ரதத்தில் நீலமணிமயமானதும் அதிக காந்தியுள்ளதும் நீலோத்பலம்போலக் கருமையானதும் பொன்னலங்காரமுள்ளதுமான வைஜயந்தமென்னும் மூங்கிற்கொடிமரத்தைப் பார்த்தான். அந்த ரதத்திலிருக்கிற புடமிட்ட பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேரப்பாகனை, புஜபல மிக்கவனான அர்ஜுனன் பார்த்து, இந்திரனென்று எண்ணினான். பிறகு, அந்த அர்ஜுனன் அவ்விதம் எண்ணும்போது, மாதலி (இறங்கி) வந்து வணங்கி, அர்ஜுனனைநோக்கி வார்த்தை சொல்லத்தொடங்கினான்: 'ஓ! ஓ! ஸ்ரீமானே! இந்திரபுத்திர! இந்திரன் உன்னைப் பார்க்கவிரும்புகின்றான். நீ இந்திரனுக்குப் பிரியமான தேரில் சீக்கிரம் ஏறு. 'இங்கு

---

[1] பீஷ்மபர்வம் 76-ம் பக்கம் குறிப்பிற் காண்க. [2] பீரங்கி வகை.

வந்த குந்திபுத்திரனை அர்ஜுனனைத் தேவலோகத்தில் வஸிப்பவர்கள் பார்க்கட்டும்' என்று தேவஸ்ரேஷ்டனும் உன்பிதாவுமான இந்திரன் என்னை நோக்கிச் சொல்லினன். இந்த இந்திரன் உன்னைக்காண விரும்பித் தேவர்களாலும் ரிஷிக்கூட்டங்களாலும் அவ்வாறே கந்தர்வர்களாலும் அப்ஸரஸ்திரீகளாலும் சூழப்பெற்றவனாகி எதிர்பார்க்கிறான். இந்திரனுடைய கட்டளையின்படி இவ்வுலகத்திலிருந்து என்னுடன்கூடித் தேவலோகத்தில் நீ ஏறு. அஸ்திரங்களை அடைந்து திரும்பிவருவாய்' என்றான்.

அர்ஜுனன் சொல்லலானான்: 'ஓ! மாதலியே! நீ சீக்கிரம் போ; சிறந்ததேரில் ஏறு; மிகப்பெரும்பாக்யமுள்ளவர்களும் மிக்க தக்ஷிணைகொடுப்பவர்களும் யாகஞ்செய்தவர்களுமான அரசர்களாலும் நூற்றுக்கணக்கான ராஜஸூயங்களையும் அசுவமேதங்களையும் செய்வதனாலும் அடையமுடியாததும் தேவர்களாலும் அஸுரர்களாலும் ஏறமுடியாததுமான சிறந்தரதத்தில் (ஏறுவாயாக.) இந்தத் திவ்யமான சிறந்தரதமானது தவஞ்செய்யாதவனால் பார்ப்பதற்கோ, அல்லது, தொடுவதற்கோ முடியாதது; ஏறுவதற்கு எப்படி முடியும்? ஓ! ஸாதுவே! நீ ரதத்திலேறிக் குதிரைகளும் அசைவற்றிருந்த பின்பு, நானும், புண்ணியஞ்செய்தவன் நல்லகதியில் ஏறுவது போலப் பின்னால் ஏறுகின்றேன்' என்றான். இந்திரஸாரதியான மாதலி அவனுடைய அந்தவார்த்தையைக்கேட்டு விரைவாக ரதத்தில் ஏறினான்; கடிவாளங்களால் குதிரைகளைப் பிடித்தான். பிறகு, குருநந்தனனும் குந்திபுத்திரனுமான அர்ஜுனன் மனமகிழ்ந்து கங்கையில் ஸ்நானஞ்செய்து சுத்தனாகி, ஜபிக்கவேண்டியதை முறைப்படி ஜபித்தான். பிறகு, பிதருக்களை நியாயந்தவறாமல் முறைப்படி திருப்தி அடைவித்து மந்தரமென்னும் அந்தப்பர்வதராஜனிடம் விடைபெற்றுக்கொள்ளத் தொடங்கினான்.

'ஓ! சைலமே! ஸாதுக்களும் புண்யமானஸ்வபாவமுள்ளவர்களும் புண்ணியகார்யஞ்செய்கிறவர்களும் ஸ்வர்க்கத்தின் வழியை விரும்புகின்றவர்களுமான முனிவர்களுக்கு எப்பொழுதும் நீ இருப்பிடம். ஓ! மலையே! உனது அனுக்ரகத்தால் பிராம்மணரும் க்ஷத்ரியரும் வைஸ்யரும் ஸ்வர்க்கத்தை அடைந்து தேவதைகளுடன்கூடி எப்பொழுதும் துக்கமற்றவர்களாகிச் சஞ்சரிக்கின்றார்கள். ஓ! மலையரசே! பெருமலையே! முனிவர்க்கிடமே! தீர்த்துறையுடையாய்! உன்னிடத்தில் ஸுகமாக வஸித்தவனாயிருக்கிறேன். உன்னிடம் சொல்லிக்கொண்டு போகிறேன். உன்னுடைய தாழ்வரைகளும்

கொடிப்பந்தல்களும் ஆறுகளும் அருவிகளும் நல்லபுண்யமான தீர்த்தங்களும் பெரும்பாலும் என்னால் பார்க்கப்பட்டன. ஆங்காங்கிருந்து நல்லவாசனையுள்ள பழங்களும் புஜிக்கப்பட்டன. நல்ல உயர்ந்த வாசனையுள்ளதும் உன்சரீரத்திலிருந்து வெளிவந்ததும் அமிருதம் போன்ற சுவையுள்ளதும் பெருகுவதுமான அருவியின் ஜலமும் குடிக்கப்பட்டது. ஓ! மஹாப்ரபுவே! மலையரசே! குழந்தையானது தந்தையின்மடியில் ஸுகமாக உறங்குவதுபோல அப்ஸரஸ்திரீகளின் கூட்டங்களால் நிறையப்பெற்றதும் வேதகோஷத்தால் ஒலியுள்ளதுமான உன்னுடைய தாழ்வரையாகிறமடியில் நான் விளையாடினேன். மலையே! உன்னுடைய தாழ்வரைகளில் எப்பொழுதும் ஸுகமே வசித்தவனாயிருக்கிறேன்' என்றான். பகைவீரர்களைக் கொல்லுகின்ற அர்ஜுனன், இவ்விதம்சொல்லி மலையினிடம் விடைபெற்றுக் கொண்டு, பிரகாசப்படுத்தும் சூரியன்போலத் திவ்யரதத்தில் ஏறினான். அந்தப் புத்திமானான அர்ஜுனன் ஸந்தோஷமுள்ளவனாகிச் சூரியனுடைய ரூபமுள்ளதும் தேவலோகத்திலிருப்பதும் ஆச்சரியமான செயலுள்ளதுமான அந்த ரதத்தால் உயரக்கிளம்பினான். அவன் (அங்கு) தர்மானுஷ்டானம் செய்யும் மனிதர்களுக்கும் பார்க்கமுடியாத மார்க்கத்தை அடைந்து ஆச்சரியமானரூபமுள்ள ஆயிரக்கணக்கான விமானங்களைப் பார்த்தான். அவ்விடத்தில் ஸூரியனாவது சந்திரனாவது அக்கினியாவது பிரகாசிக்கிறதில்லை. புண்ணியத்தால் அடையப்பட்ட தமது காந்தியாலேயே அவ்விடத்தில் யாவும் பிரகாசிக்கின்றன. காந்தியுள்ள எவைகள் மிகப்பெரியவைகளாக இருந்தாலும், ஆகாயத்தில் வெகு தூரத்திலிருப்பதால், சிறிய நக்ஷத்திரரூபங்களாகக் காணப்படுகின்றனவோ அவைகளை அர்ஜுனன் அவ்விடத்தில் மிக்ககாந்தியும் தம்வடிவமும் உள்ளவைகளும் தமமிடங்களில் தமகாந்தியால் பிரகாசிக்கின்றவைகளுமாக இருக்கக் கண்டான். அங்கே ராஜரிஷிகளும் ஸித்தர்களும் யுத்தத்தில் கொல்லப்பட்ட வீரர்களும் தவத்தால் ஜயிக்கப்பட்ட ஸ்வர்க்கத்துக்குப் போய்க்கொண்டிருந்தனர். ஸூர்யன்போல ஜ்வலிக்கும் தேஜஸுள்ள ஆயிரக்கணக்கான கந்தர்வர்களையும் குஹ்யகர்களையும் ரிஷிகளும் அப்ஸரஸுகளுமாகியவர்களின் கூட்டங்களையும் தாமாகவே பிரகாசிக்கின்ற லோகங்களையும் அர்ஜுனன் பார்த்து ஆச்சரியமுள்ளவனாகி மாதலியைநோக்கி ப்ரீதியுடன் வினவினன். அவனும், இவனைநோக்கி, 'ஓ! பார்த்த! தமது ஸ்தானங்களிலிருக்கின்ற இவர்கள் புண்யம் செய்தவர்கள். ஓ! விபுவே! இவைகளை(த்தான்) பூமியிலிருந்து

நக்ஷத்திரரூபங்களாகப் பார்த்தாய்' என்றான். பிறகு, (ஸ்வர்க்க) வாயிலில் நிற்பதும், மதங்கொண்டதும், ஜயமுள்ளதும், கொடுமுடிக ளுடன் கூடின கைலாயம் போன்றதும், நான்கு தந்தமுள்ளதுமான ஐராவதமென்ற யானையைக் கண்டான். குருபாண்டவர்களுள் சிறந் தவனான அவன், முற்காலத்தில் அரசர்களுள் மேலான மாந்தாதா விளங்கியது போல ஸித்தமார்க்கத்தை அடைந்து விளங்கினான். தாமரைமலர் போன்ற கண்ணுள்ள அந்த அர்ஜுனன் அரசர்களின் லோகங்களைத் தாண்டினான். மிக்ககீர்த்தியுள்ள அவன் இவ்விதம் அந்த ஸ்வர்க்கலோகத்தில் போய்க்கொண்டு, பிறகு, இந்திரனுடைய பட்டணமான அந்த அமராவதியைப் பார்த்தான்.

---

நாற்பத்துமூன்றுவது அத்யாயம்.

## இந்திரலோகாபிகமன பர்வம். (தொடர்ச்சி)

(இந்திரன் அர்ஜுனனுக்கு மரியாதை செய்து அவனைத் தன் அர்த்தாஸனத்தில் வீற்றிருக்கச் செய்தது.)

அந்த அர்ஜுனன் எல்லாருதுக்களின் புஷ்பங்களையும் உடைய புண்ணியமான மரங்களால் ஸமீபத்தில் விளங்கச்செய்யப் பெற்றதும், ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பெற்றது மான அழகிய பட்டணத்தைப் பார்த்தான். அவ்விடத்தில் பரி சுத்தமான வாஸனையுள்ள ஸௌகந்திக(=செங்கழுநீர்) மலர்களுடன் சேர்ந்த பரிசுத்தமான வாஸனையுள்ள காற்றினால் வீசப்படுகின்ற வனுகி அப்ஸரஸுகளின் கூட்டத்தினால் அடையப்பெற்றதும் திவ்யமான புஷ்பங்களால் அழைப்பனபோலிருக்கிற மரங்களுடன் கூடியதுமான திவ்யமான நந்தனவனத்தைப் பார்த்தான். புண் ணியம் செய்தவர்களுடைய அந்த உலகமானது தவம்செய்யாதவ னாலும் அக்னியாதானம் செய்யாதவனாலும் பார்க்கவும் முடியா தது. யுத்தத்தில் புறங்காட்டினவர்களாலும் விதிப்படி யாகம் செய்யாதவர்களாலும் விரதமற்றவர்களாலும் வேதாத்யயன மில்லாதவர்களாலும் (புண்ணிய) தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யாத அங்கமுள்ளவர்களாலும் யஜ்ஞத்திலும் தானத்திலும் விலக்கப் பட்டவர்களாலும் யாகத்தைக்கெடுத்த அற்பர்களாலும் கட்குடிப் பவர்களாலும் குருவின்சயனத்தை அடைகின்றவர்களாலும் மாமி

சதத்தைத் தின்னும் கெட்ட எண்ணமுள்ளவர்களாலும் எவ்விதமும் பார்க்கமுடியாதது. திவ்யமான கானத்தால் ஒலியுள்ளதாகச் செய்யப்பெற்ற அந்தத் திவ்யவனத்தைக் கைவன்மையுள்ள அவன் பார்த்துக்கொண்டு இந்திரனுக்குப் பிரியமான பட்டணத்தில் நுழைந்தான். அவ்விடத்தில் இஷ்டப்படி செல்லக்கூடிய தேவவிமானங்களை ஆயிரக்கணக்காக நிற்கின்றவைகளாகவும் பதினாயிரக்கணக்காக நாற்புறமும் செல்லுகின்றவைகளாகவும் அப்பொழுது பார்த்தான். அர்ஜுனன் கந்தர்வர்களாலும் அப்ஸரஸுகளாலும் நன்கு துதிக்கப்பெற்றுப் புஷ்பவாசனையுள்ள புண்ணியமான காற்றுகளால் வீசப்பெற்றான். பிறகு, கந்தர்வர்களுடன் கூடின தேவர்களும் ஸித்தர்களும் சிறந்த ரிஷிகளும் சந்தோஷமுள்ளவர்களாகி பராக்ரமம் மற்று வேலைசெய்யும் அர்ஜுனனை நன்கு பூஜித்தனர். கைவன்மையுள்ள (அர்ஜுனன்), தேவலோகத்திலுள்ள வாத்ய சப்தங்களுடன் கூடின ஆசீர்வாதங்களால் துதிக்கப்பெற்று, சங்கதுந்துபிகளின் முழக்கமுள்ளதும் ஸுரவீதி என்று பெயர்பெற்றதுமான விரிவான நக்ஷத்திரமார்க்கத்தை அடைந்தான். அவன் இந்திரனுடைய கட்டளையால் நான்கு பக்கங்களிலும் துதிக்கப்பெற்றவனாகிச் சென்றான். பிறகு, பகைவரையடக்குபவனும் குருநந்தனனுமான அந்த அர்ஜுனன், அவ்விடத்தில் ஸாத்தியர்கள், விச்வேதேவர்கள், மருத்துக்கள், அச்வினீதேவர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், ருத்திரர்கள், குற்றமற்ற ப்ரம்மரிஷிகள், அனேகம் ராஜரிஷிகள், திலீபன் முதலிய அரசர்கள், தும்புரு, நாரதர், ஹாஹா ஹூஹூவென்ற இரண்டு கந்தர்வர்கள் ஆகிய அவர்கள் யாவரையும் முறைப்படி அடைந்து, பிறகு, தேவராஜனான இந்திரனைக் கண்டான். பிறகு, வலியதோளுள்ள அர்ஜுனன், உயர்ந்த ரதத்திலிருந்து இறங்கி, பொற்காம்புள்ளதும் அழகியதும் வெண்மையானதுமான குடையுடனும் தேவலோகத்திலுள்ள வாஸனையுடன்கூடிய அசைகிற விசிறியுடனும் (கூடினவனும்), விச்வாவஸு முதலிய துதித்துவணங்குகிறவர்களான கந்தர்வர்களாலும் ருக்கு, யஜுஸ், ஸாமம் இவைகளின் துதிகளால் சிறந்த பிராம்மணர்களாலும் துதிக்கப்படுகிறவனுமாகித் தேவராஜனும் தந்தையுமான இந்திரனை நேரில் பார்த்தான். பிறகு, பலமுள்ள அர்ஜுனன் அருகில் சென்று தலையால் வணங்கினான். தேவராஜனும், உருண்டு பருத்திருக்கின்றகைகளால் இவனைத் தழுவிக்கொண்டான். பிறகு, இந்திரன் தேவரிஷிக் கூட்டங்களால் அடையப்பட்ட புண்ணியமான இந்திரா

சனத்தில் கைகளைப்பிடித்து இவனை உட்காரச்செய்தான். பகைவீரர்களைக்கொல்லுகின்ற இந்திரன் வணக்கத்தால் தலைகுனிந்த இவனை உச்சிமோந்து அப்பொழுது மடியில் ஏற்றிவைத்துக்கொண்டான். அப்பொழுது இந்திரனுடைய உத்தரவினால் இந்திராசனத்தை [1] அடைந்தவனும் அறியமுடியாத மகிமையுள்ளவனுமான அந்த அர்ஜுனன் இரண்டாவது இந்திரனைபோல வீற்றிருந்தான். பிறகு, இந்திரன் இன்சொற்கூறி அழகிய அர்ஜுனனமுகத்தைப் பிரியத்துடன் நறுமணமுள்ள கையால் தடவிக்கொடுத்தான். வஜ்ராயுதம்பிடித்தவனும் ஆயிரம்கண்களையுடையவனும் விருத்திரனைக்கொன்றவனுமான இந்திரன் வஜ்ராயுதத்தைப்பிடித்து வடுப்பட்டகையினால் நாணகயிற்றையிழுப்பதால் கடினமானவையும் பொற்றூண்போன்றவையும் நீண்டவையுமான இந்த அர்ஜுனனுடைய அழகியகைகளை மெதுவாகத் தடவிக்கொடுத்துக்கொண்டும் அடிக்கடி இன்சொற்கூறிக்கொண்டும் அர்ஜுனன்கைகளை மெதுவாகத்தட்டிக்கொண்டும் புன்சிரிப்புள்ளவனும் ஸந்தோஷத்தாலமலர்ந்த கண்ணுள்ளவனுமாகிக் குடாகேசனை அவனைப்பார்த்து (பபோதுமென்கிற) திருப்தியை அடையவில்லை. ஒரே ஆஸனத்திலுட்கார்ந்த அவ்விருவரும் சதுர்த்தசியிலுதித்த சூரியசந்திரர்கள் ஆகாயத்தை விளக்குவதுபோலச் சபையை விளங்கச்செய்தார்கள். அவ்விடத்தில் கீதங்களிலும் ஸாமங்களிலும் தேர்ந்தவர்களும் தும்புருவைத்தலைவனாகவுடையவர்களுமான கந்தர்வர்கள் மிகக அழகான ஸாமவேதத்தால் காதைகளைப் பாடினார்கள். க்ருதாசி, மேனகை, ரம்பை, பூர்வசித்தி, ஸ்வயம்ப்ரபை, ஊர்வசி, மிச்ரகேசி, தண்டகௌரி, வரூதினி, கோபாலி, ஸஹஜன்யை, கும்பயோநி, ப்ரஜாகரை, சித்ரஸேனை, சித்ரலேகை, இனியகுரலுள்ள ஸஹை ஆகிய அழகிய புன்சிரிப்புள்ள இவர்களும் மற்றவர்களும், அசைகின்றகொங்கைகளால் ஸித்தர்களின மனத்தையும் கலக்கவல்லவர்களும், தாமரையிதழ் போன்ற கணகளையுடையவர்களும், சிறந்த இடையும் பின்தட்டுமுள்ளவர்களும், அழகிய புன்னகையுள்ளவர்களுமாகி (ப் பார்ப்பவர்களின்) எண்ணத்தைக்கவரும் கடைக்கண்பார்வையுடனும் உறுதியைக்கவரும் சிருங்காரச்செயலுடனும் மனத்தைக்கவரும இனிமையுடனும் ஆங்காங்கு நர்த்தனம் செய்தார்கள். பிறகு, கந்தர்வர்களுடன்கூடின தேவர்கள் இந்திரனுடைய அபிப்பிராயத்தை அறிந்து விரைவில் சிறந்த பூஜாத்திரவ்யங்களைக் கொண்டுவந்து அர்ஜுனனைப்

1 வேறுபாடம்.

பூஜிததார்கள். [1] பாதயத்தையும் ஆசமனம் செய்யக்கூடிய ஜலத்தையும் ராஜகுமாரனை அர்ஜுனனைப் பெற்றுக்கொள்ளச்செய்து, பிறகு, இந்திரனது அரண்மனையில பிரவேசிக்கச்செய்தார்கள. பாண்டவனை அர்ஜுனன் பிதாவான இநதிரனுடைய அரணமனையில இவ்விதம் நனகு பூஜிக்கப்பட்டவனுகி அவனுடையகையிலிருந்து திருப்புமுறையுடன்கூடின பெரிய அஸதரஙகளையும அவனுககுப்பிரியமானதும பகைவரால தாஙகமுடியாததுமான வஜராஸதிரததையும், அதிகநாதமுள்ளவையும் [2] மேகங்களையும மயிலகளையுமகொணடு அறியக்கூடியவையுமான அசனிகளையும் கற்றுககொண்டு வஸிந்தான். பாணடவனை அர்ஜுனன அஸ்திரஙகளைப் பெற்றுககொண்டு ஸகோதரர்களை நினைததான். இந்திரனுடைய உததரவின்படி ஸுகியாக (அங்கே) ஐநதுவருஷஙகள வஸிததான். பிறகு, இந்திரன், காலம்வந்தபோது, அஸ்திரஙகளைக கற்றுககொணட அர்ஜுனனை நோக்கி, ‘ ஓ! கௌந்தேய! நர்ததனததையும பாட்டையும சித்திரஸேனனிடமிருந்து அடைவாயாக. ஓ! கௌந்தேய! மனிதலோகததிலில்லாததும் தேவர்களால் செய்யப்படடதுமான வாதயததையும அவனிடமிருந்தே கற்றுக்கொள். உனக்கு நனமையுண்டாகும ’ என்று சொனனுன். இநதிரன் இவனுக்கு நணபனுகச் சிததிரஸேனனையும கொடுததான். அநத அர்ஜுனன அவனுடன் சேர்ந்து கவலையறறவனுகி மகிழநதிருந்தான.

(சித்ரஸேனன), கீததததையும் வாதயததையும நர்ததனததையும் அடிக்கடி உபதேசம்செய்தான. அவ்விதமிருந்தாலும, பலமுள்ள (அர்ஜுனன்), சூதாட்டததில் செய்யப்பட்டதை (நினைததுககொண்டு) ஸுபலபுதரனை சகுனியையும துச்சாஸனனையும நாசம செய்யவேண்டிக் கோபங்கொணடு (மனத்தில்) ஸுகத்தையடையவில்லை. பிறகு, அவனுடன் சிற்சிலசமயததில் ஒப்பற்றபிரீதியையடைந்து கானத்தையும ஒப்பற்ற நர்த்தனத்தையும வாத்தியத்தையும் கற்றுக்கொண்டான். பகைவீரர்களைக் கொல்லுகின்ற அவன், அநேகம் நர்ததனகுணங்களையும் வாததியம் கீதம் இவைகளின் அர்ததகுணங்கள் யாவற்றையும் கற்பிக்கப்

---

1 கால் அலம்பும ஜலம.

2 ‘ அகாலததில கிளம்பும் மேகங்களையும் கூத்தாடும் மயில்களையுங் கானுமபோா வேறிடததில அசனியஸ்திரம பிரயோகிக்கபபட்டிருக்கலாமென்று அவறறைககொணடு ஊகிக்குமபடியிருபபவை ’ எனபது.

பெற்றுச் சகோதரர்களையும் மாதாவான குந்தியையும் நினைத்துக் கொண்டு (மனத்தில்) ஸுகத்தையடையவில்லை.

நாற்பத்துநான்காவது அத்யாயம்.

# இந்திரலோகாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(அர்ஜுனனுக்கு விருப்பமிருப்பதாகக்கருதிய இந்திரன் சித்திரஸேனனைக்கொண்டு ஊர்வசியை அர்ஜுனனிடம் அனுப்பியதும், அவள் அர்ஜுனன் இணங்காமையால் அவனைச் சபித்ததும், இந்திரன் அந்தச் சாபத்தை அஜ்ஞாதவாஸத்தில் உபயோகப்படும்படி மாற்றியதும்.)

ஒரு சமயம் தேவஸ்ரேஷ்டனான அந்த இந்திரன், அர்ஜுனனுடைய பார்வை ஊர்வசியினிடம் பற்றினதை அறிந்து, சித்திரஸேனனை நோக்கி, ரகஸ்யத்தில், 'ஓ! கந்தர்வராஜனே! இப்பொழுது என்னால் அனுப்பப்பட்டு அப்ஸரஸுகளுள் சிறந்தவளான ஊர்வசியினிடம் போ. அவள் புருஷஸ்ரேஷ்டனான அர்ஜுனனை அடையவேண்டும். [1] அஸ்த்ரவித்தையைப் பெற்றவனும் எனது கட்டளையால் எல்லாராலும் பூஜிக்கப்பட்டவனுமான அர்ஜுனன் உன்னால் (காந்தர்வ) வித்தையில் ஸமர்த்தனாக்கப்பட்டது போலவே, ஸ்திரீகளை அடைவதிலும் ஸமர்த்தனாகச் செய்யப்படவேண்டும்' என்று கூறினான்.

இவ்விதம் சொல்லப்பட்ட அந்தக் கந்தர்வராஜன், 'அப்படியே' என்று சொல்லி, இந்திரனிடமிருந்து விடைபெற்றுச் சிறந்த அப்ஸரஸான ஊர்வசியிடம் சென்றான். அவன் அவளால் அறிந்து வரவேற்று மரியாதை செய்யப்பெற்று ஸந்தோஷமடைந்து ஸுகமாக உட்கார்ந்து, ஸுகமாக வீற்றிருக்கும் அவளை நோக்கி, புன்சிரிப்பை முன்னிட்டுக்கொண்டு, 'சிறந்த இடையுள்ளவளே! உனக்கு மகிழ்ச்சியுண்டாக்குவதில் நாட்டமுள்ளவனும் தேவலோகத்துக்கு முக்கிய அரசனுமான இந்திரனால் நான் அனுப்பப்பட்டு இங்கு வந்தேனென்பதை நீ அறியக்கடவாய். உடன்பிறந்த குணங்களால் தேவர்களுள்ளும் மனிதர்களுள்ளும் கீர்த்திபெற்றவனும், செல்வத்தாலும் ஒழுக்கத்தாலும் அழகினாலும் கல்வியினாலும் பலத்தாலும் பிரஸித்திபெற்றவனும், தேகவலிமையும் மனவலிமையும் அமைந்தவனும், [2] பிரதிபை

1 வேறு பாடம். 2 ஸமயத்தில் தோன்றும் அறிவு.

புள்ளவனும், தேஜஸுள்ளவனும, நல்லொழுக்கமுள்ளவனும், பொறுமையுள்ளவனும், பொருமையைவென்றவனும, அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனுங்கூடியவையும இதிஹாஸத்தை ஐந்தாவதாகவுடையவையுமான நான்குவேதங்களையும் [1] எட்டுக்குணங்களை உண்டுபண்ணுபவையான குருசுச்ரூஷையையும [2] மேதையையும கற்றிருப்பவனும, பரம்மசரியத்தாலும ஸாமர்த்யத்தாலும குலத்தாலும் பிராயத்தினுலும ஒருவனுகவே இந்திரன்போலத் தேவலோகத்தைக் காக்கத்தக்கவனும, தன்னைப் புகழாதவனும், (பிறரை) மரியாதை செய்பவனும், ஸூக்ஷ்மமான விஷயங்களையும ஸ்தூலமான விஷயங்களைப்போல எளிதில அறிபவனும, பிரியமாகப் பேசுகிறவனும், சிநேகிதர்களுக்குப் பலவிதமான அன்னபானங்களைப் பொழிகின்றவனும, மெய் பேசுகின்றவனும், [3] உறுதியுள்ளவனும், நன்கு பேசக்கூடியவனும், நல்ல ரூபமுள்ளவனும, அகங்காரமற்றவனும, அடுத்தவர்களிடத்தில் இரக்கமுடையவனும, ஸுகத்தைத்தருபவனும், பிரியமானவனும், சொல் தவருதவனும, விரும்பத்தகுந்த குணக்கூட்டங்களால இந்திரனுக்கும வருணனுக்கும் ஒப்பானவனும், ஸ்வர்க்கமாகிற பலனையடைந்தவனும, வீரனுமான அந்த அர்ஜுனன் உன்னால அறியப்பட்டவனே; இந்திரனால உத்தரவுகொடுக்கப பெற்று இப்பொழுது உன்னுடைய பாதங்களை அடையக்கடவன. ஓ! கல்யாணி! ஆகையால, அவ்விதம் செய்வாயாக. அர்ஜுனன உன்னைச சரணமடைந்திருக்கிருன்' என்ற வார்த்தையைச சொன்னான்.

இவ்விதம் சொல்லக்கேட்ட குற்றமற்ற ஊர்வசியானவள், புன்னகை செய்து தன்னையும் புகழ்ந்து பிரீதியுள்ளவளாகிச் சித்திரஸேனனை நோக்கி மறுமொழி சொலலலானுள்: 'ஓ! குற்றமற்றவனே! நீ சொல்லிய இது உண்மையாக அவனுடைய குணத்

---

1 'பிரமமசாயம், ஸாமர்த்தியம, காத்தல், தன்னைப் புகழாமை, (பிறரை) மரியாதை செய்தல், ஸூக்ஷ்மமான விஷயங்களையும ஸ்தூலமான விஷயங்களைப்போல எளிதில அறிதல, பிரியமாகப பேசுதல, நண்பர்களுக்கு உணவு முதலானவற்றை மிகுதியாக அளித்தல் ஆகிய எட்டும சுச்ரூஷையின குணம. மெய்பேசுதல, நன்குபேசுதல, நல்லருபமுடைமை, அகங்காரமின்மை, அடுத்தவர்களிடம் தயையுடைமை, ஸுகத்தைத் தருதல், பிரியமுடைமை, சொல்தவருமை ஆகிய எட்டும் மேதையின் குணம்' என்பது பழயவுரை. 2 கற்றது மறவாமை.

3 'பூஜித:' எனபது வேறு பாடம.

தில் ஒருபாகமே. ஸதிரீயானவள் அப்படிப்பட்ட அர்ஜுனனைப பற்றிக்கேட்டு அவனைவிட வேறொருவனைப் பிரியனாகவிரும்புவளா? உனவழியாக வநத இநதிரனுடைய கட்டளையாலும மிகக காதலா லும அர்ஜுனனுடைய குணக்கூட்டததாலும நான் அவனிடததில காமமுளளவளாக இருககிறேன. நீ போ. ஏனெனில, நான் இஷ டபபடி ஸுகமாகவருவேன்' என்றாள. பிறகு, கந்தர்வனை அனுபபி விட்டு, விருபபம கைகூடினவளும அழகிய சிரிபபுளளவளுமாயிருக் கிற ஊர்வசியானவள, அர்ஜுனனை வேண்டுவதில ஆசைகொண்டவ ளாகி ஸநானம செயதனள. அர்ஜுனனுருபமகாரணமாக மனமதனால் மெய்யப்பட்ட பாணஙகளினால மிக அடிக்கபபட்ட மனததையுடைய வளும மனமதனால எரிககபபட்டவளும திவ்யமான மேலவிரிபபி னால மூடபபட்டதும விரிவானதுமான உயாந்த படுக்கையில மனத தின நினைவினால அடையபபட்ட அர்ஜுனனைத தனது மனம் எண ணியபடி, நலலமனமுடையவளும வேறிடததில மனததைச் செலுத தாதவளுமாகித தனது ஸநானததாலும அலஙகாரததாலும் வேஷத தாலும சிறநத வாஸனையுளள மாலைகளாலும சந்தோஷிககச செய் பவள போனறவளும அழகிய இடையையுடையவளுமான அநத ஊர்வசியானவள பிரதோஷகாலங கடநது சநதிரன் உதயமாவ தைக்கணடு அர்ஜுனனுடைய பெரிய வீட்டைக குறிததுப புறப் பட்டாள.

போகினறவளும மகிழ்விககும் தன்மையுடையவளுமான அவள், மெலலியதும் சுருண்டதும நீணடதும சிறநத மலர்களை அணிந்தது மான கூந்தலுடன புருவததை அசைததலாலும் பேசசினாலும ஶ்ருஙகாரசேஷ்டைகளாலும காநதியாலும் அழகினாலும முகசந்திர னால் சந்திரனைச (சண்டைக்கு) அழைப்பவள்போல விளஙகினாள். திவ்யமான பூசசு உடையவையும் அழகியநுனியுள்ளவையும் திவய சந்தனததால பூசபபெற்றவையும ஹாரததால அழகியவையுமான போகின்ற அவளுடைய ஸ்தனஙகள அசைநதன. அவள ஸதனங களைச சுமக்கும கஷ்டததால அடிதோறும அடிதோறும [1] துவளு கிறவளாகி மூன்றுமடிப்புக்களாகிற அணிகளால் மிக அழகாக விளஙகுகினற இடையுள்ளவளாக இருந்தனள். [2] மலையின் தாழ்வரை போல அகன்றதும், உயர்ந்தும் பருததுமுள்ள நிதம்பததையுடை யதும், சுத்தமானதும், மேகலையால் அலங்கரிககப்பட்டதும், தேவ லோகததிலுள்ள ரிஷிகளின் மனததையும கெடுப்பதற்குக் காரண

---

1 வேறுபாடம். 2 வேறுபாடம்.

மாவதும், மெல்லிய உடைதரித்ததும், குற்றமற்றதும், மன்மத னுடைய வீடுமான ஜகனமும் பிரகாசித்தது. இவளுடைய பாதங் கள், மறைந்த பரடுகளுள்ளவையும் சிவந்த உள்ளங்கால்களும் நீண்ட விரல்களுமுள்ளவையும் ஆமை முதுகுபோலுயர்ந்தவையும் சலங்கைகளின் வடுக்களுள்ளவையுமாக விளங்கின. அவள் சிறி தான மதுபானத்தாலும் மன்மதனாலும் சந்தோஷத்தையடைந்தவ ளும் பலவகையான விளையாட்டுக்களாலும் மிகப் பார்க்கத்தக்க வளுமாயினள். ஊர்வசியானவள் மிகுந்த ஆச்சரியமுள்ள ஸ்வர்க் கத்திலும் ஸித்தர்களாலும் சாரணர்களாலும் கந்தர்வர்களாலும் ஸாத்தியர்களாலும் பார்க்கத்தக்க வடிவமுள்ளவளாகச் சென்றாள். மிக மெல்லியதும் மேகம்போன்ற நிறமுள்ளதும் விளங்குகின்றது மான மேலாடையால் ஆகாயத்தில் சிறிய மேகத்தால் மறைக்கப் பட்ட சந்திரகலைபோலப் போனாள். பிறகு, தீவினைசெய்தவர்க ளால் மனத்தாலும் அடைய முடியாதவளும் அழகிய புன்னகை யுள்ளவளுமான (அவள்) பாண்டு புத்திரனான அர்ஜுனனுடைய வீட்டை அடைந்தாள். ஓ! நரபுங்கவரே! அழகிய கண் ணுள்ள ஊர்வசியானவள், அவ்விடத்தே வாயிலை அடைந்து வாயில் காப்போரால் அர்ஜுனனுக்குத் தெரிவிக்கப்பட்டு, நன்கு மனத்தைக் கவரக்கூடியதும் அழகுகற்றதுமான அந்த வீட்டி னுள் சென்றாள். அரசரே! அந்த அர்ஜுனன் ராத்திரியில் அந்த ஊர்வசியைப் பார்த்து மனத்தில் ஐயத்துடன் வெட்கத்தினால் கண் களை மூடிக்கொண்டு அவளை எதிர்கொண்டு சென்றான்; (அவளுக்கு) நமஸ்காரத்தைச்செய்து குருவினிடத்திற்போல மரியாதை செய் தான்.

அர்ஜுனன், 'உத்தமமான அப்ஸரஸுகளுள் சிறந்தவளே! உன்னைத் தலையால் வணங்குகிறேன். நீ வந்த காரியம் என்ன? யாவற்றையும் உள்ளபடி சொல்லுவாய். ஓ! தேவி! என்ன கட்டளை யிடுகிறாய்? நான் உனக்கு வேலைக்காரனாகி வந்திருக்கிறேன்' என்று சொன்னான். அப்பொழுது, குறிப்பறிந்த ஊர்வசியானவள், அர்ஜு னனை ஆசையற்றவனாக அறிந்து, கந்தர்வன் சொன்னதை யெல்லாம் அவனிடத்தில் சொல்லலானாள்.

ஊர்வசி, 'ஓ! மனிதருட்சிறந்தவனே! சித்திரஸேனன் எனக்கு என்னகாரணத்துடன் சொன்னான் என்பதையும் நான் இங்கு என்ன காரணத்துடன் வந்தேனென்பதையும் உனக்கு நான் சொல்லுகிறேன். மனிதருட் சிறந்தவனே! இந்திர குமாரனே!

விசாலமான கணகளையுடையவனே! குருகுலததைத தாங்குபவனே! பார்தத! உனனுடைய வரவின் ஸந்தோஷததால ஸவர்க்கததில பெரிய உதஸவமானது நடக்கையில, அழகான இநதிரஸேவையில, ருதாரும ஆதிதயருமாகிய யாவரும வநதும, அஶ்வினீ தேவதைக ளும் வஸுககளும வந்துசோநதும, மஹரிஷிக்கூட்டஙகள சிறந்த ராஜரிஷிகள ஸிததா சாரணர் யக்ஷா பெரிய நாகர்களின கூட்டஙகள் ஆகிய யாவரும ஸதானததுககும கௌரவததிறகும மஹிமைக்கும் தககபடி உடகார்நது அககினியும் சநதிரனும சூரியனுமபோன்ற சரீரஙகளுடன ஐஶ்வரியததால் பிரகாசிததும, கநதர்வர்களால வீணை கள வாசிககப்பட்டும, தேவலோகததிலுள்ள மனததிறகுபபிடித்த கானம்தொடஙகியும, முக்கியமான எலலா அபஸரஸுகளும நர்தத னம செய்யுமபோது, நீ அங்கே இமைககொட்டில்லாதவனுகி எனனை ஒருததியையே பார்ததாயனறோ? தேவலோகததிலுளளவர்களின அநத ஸேவை முடிவடைந்தபோது, தேவாகள உன பிதாவினுல விடையளிககபபடடுத தமது இருப்பிடஙகளை அடைநதாாகள. அப் படியே, சிறந்த அப்ஸரஸுகளெலலாரும தம்தம வீட்டை அடைந் தார்கள. ஓ! பகைவரைக் கொலபவனே! பின்னும் மறற அப் ஸரஸுகளும உன பிதாவினுல அனுப்பப்பட்டார்கள. தாமரையிதழ் போனற கணணுள்ளவனே! பிறகு, சிதரஸேனன இநதிரனுல் அனுபபபபடடு என் அருகில்வநது தானுகவே என்னைநோககிக கூற லானுன: 'ஓ! ஸதிரீகளுள் சிறநதவளே! நான உனககாக இந்திர னுல அனுப்பப்பட்டேன். இந்திரனுககும எனக்கும உனக்குமே பரியததைச செயவாயாக. அழகிய பினதட்டுளளவளே! இநதிர னுக்கொப்பானவனும், யுததததில் சூரனும், ரூபம் உதாரததனமை (முதலிய) குணஙகளுடன கூடினவனுமான அர்ஜுனனை நீ ப்ரா ர்ததிப்பாயாக' எனறு இவ்விதம அபபொழுது சொன்னுன. ஓ! குற்றமற்றவனே! பகைவரை அடக்குபவனே! பிறகு, நான் அந்த உன பிதாவினுல் கட்டளையிடபபட்டவளாகி உன்னிஷடப்படி நடப்ப தறகாக உன சமீபம வந்தேன. ஓ! வீர! இந்திரனுல் அனுப்பப் பட்டுமட்டும் நான் இஙகு வந்தவளலலேன். இந்த விருப்பமானது என்னுளும வெகுகாலமாக விரும்பப்பட்டதே' என்றுள்.

தேவனுககு ஒப்பான அர்ஜுனன், அவள் அவ்விதம் சொல்லிய தைக் கேட்டு, மிக்க லஜ்ஜையுளளவனுகிக் கைகளால் காதுகளைப் பொததிககொண்டு சொலலலானுன்: 'அழகிய அங்கமுள்ளவளே! காந்தியுள்ளவளே! சிறந்த முகமுளளவளே! நீ என்னை நோககிச

சொல்லுகிற இது என்கருக் கேட்கத்தகாததாகும். எனக்கு நீ குரு பத்னிக்கு ஒப்பானவள்; நிச்சயம். அழகிய நீ எனக்கு அதிக பாக்யமுள்ள குந்தியையும் சுதையான இந்திராணியையும் போன்றவளே இவ்விஷயத்தில் ஆலோசனை செய்யத்தக்கதில்லை. ஓ! நல்லவளே! நல்ல சிரிப்புள்ளவளே! நீ என்னால் விசேஷமாகவும் வெளிப்படையாகவும் பார்க்கப்பட்டதற்குரிய காரணங்களையெல்லாம் உண்மையாக என்னிடமிருந்து கேள். 'நல்ல தந்தங்களுள்ள இவள் பௌரவ வம்சத்திற்கே தாய்' என்று அப்பொழுது நான் ஆச்சரியத்தால் மலர்ந்த கண்ணுள்ளவனாகி உன்னைப் பார்த்தேன். ஓ! அப்ஸரஸே! கல்யாணி! என்னை வேறுவிதமாக எண்ணத்தக்கவளல்லை. நீ எனக்குக் குருவுக்கும் மேலான குருவாயிருப்பவள். நீ என்னுடைய வம்சத்தை விருத்திசெய்தவள்' என்றான்.

ஊர்வசி, 'ஓ! தேவராஜன் புத்திரனே! நாங்களெல்லாரும் கட்டுப்பாடில்லாதவர்களாயிருக்கிறோம். ஓ! வீர! நீ இப்பொழுது என்னைக் குருஸ்தானத்தில் வைப்பது தகாது. தந்தைகளோ ஸ்திரீகளோ புத்திரர்களோ பேரன்மாரோ, தவத்தால் இங்கு வந்தவர்கள் எங்களைச் சேருகின்றார்கள். அவர்களுக்கு (அது) குற்றமன்று. மானத்தைக் கொடுப்பவனே! ஆகையால், தயைசெய். பீடிக்கப்பட்ட என்னை விடுவது தக்கதன்று. மன்மதனால் மிக வாட்டப்பட்டவளும் அடுத்தவளுமான (என்னை) அடை' என்று சொன்னாள்.

அர்ஜுனன், 'ஓ! குற்றமற்றவளே! அழகிய தொடைகளையுடையவளே! உன்னை நோக்கி உண்மையாகச் சொல்வதைக் கேள். தேவதையுடன் கூடின திக்குகளும் மூலைத்திசைகளும் என்னிடமிருந்து கேட்கக்கடவன. எவ்விதம் எனக்குக் குந்தியும் மாத்ரியும் இங்கு (உள்ள) சசியும் (தாய்முறையில்) ஸமமோ அவ்விதமே நீயும். மேலும், வம்சத்திற்கே தாயான நீ இப்பொழுது எனக்கு மிகப் பெரியவளுமாகிறாய். ஓ! உத்தமமானவளே! உன்னுடைய பாதங்களைத் தலையால் வணங்கினவனாயிருக்கின்றேன். போவாயாக. நீயோ என்னால் தாயைப்போல பூஜிக்கப்படத்தகுந்தவள். நான் உன்னால் பிள்ளைபோல ரக்ஷிக்கப்படத்தகுந்தவன்' என்றான்.

பிறகு, அர்ஜுனனால் அவமதிக்கப்பெற்ற ஊர்வசியானவள், கோபத்தால் கலங்கினவளும் துடிக்கிறவளுமாகிப் புருவத்தைக் கோணலாக்கிக்கொண்டு, அர்ஜுனனைச் சபித்தாள். அவள், 'உன் பிதாவினால் கட்டளையிடப்பட்டவளும், உன்வீட்டை நோக்கி வலியவந்தவளும், காமபாணத்திற்கு வசமானவளுமான என்னை

மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளாமையால், நீ மாதர்களின் நடுவில் கௌரவ மில்லாதவனும் நர்த்தகனும் ஆண்தன்மையில்லாதவனென்று பிர ஸித்தி பெற்றவனுமாகிய பேடிபோலத் திரிவாய்' என்றாள்.

இவ்விதம் அர்ஜுனன்விஷயத்தில் சாபத்தைக் கொடுத்த பிறகு, உதடுகள் துடிப்பவளாகிப்பெருமூச் செறிந்துகொண்டு, ஊர்வசி, திரும்பவும் தன்வீட்டை நோக்கி விரைவாக வந்தனள். அர்ஜுன னும், அந்தச் சாபத்தையடைந்து சந்தோஷமில்லாதவனாகக் காலை யில் எல்லாவற்றையும் சித்ரஸேனனுக்குச் சொல்ல விருப்பமுள்ளவ னாகி, அந்த இரவு முழுவதும் துயரத்துடன் வஸித்தான். பிறகு, அர்ஜுனன், காலையில் வெளிச்சமானவுடன், கந்தர்வனான சித்திர ஸேனனுக்கு (அவற்றை) உள்ளபடி அப்பொழுது தெரிவித்தான். சித்திரஸேனனும் நடந்தபடி அவையாவற்றையும் சாபத்தையும் முழுமையும் உண்மையாக இந்திரனுக்குத் தெரிவித்தான். அப் பொழுது, இந்திரனும், புத்திரனை ஏகாந்தத்தில் வருவித்து அழகிய வார்த்தைகளால் தேறுதல்செய்து புன்சிரிப்புள்ளவனாகி, 'ஐயனே! மிகமேலானவனே! புத்திரனை உன்னால் இப்போது குந்தி நல்ல புத்திரனை உடையவளானாள். ஓ! பெரியகையுள்ளவனே! உனது தைரியத்தால் ரிஷிகளும் ஜயிக்கப்பட்டார்களல்லரோ? கௌரவத் தைக் கொடுப்பவனே! ஐயா! ஊர்வசி உனக்குக்கொடுத்த சாபமும் உனக்குப் பிரயோஜனத்தைச் செய்வதும் ஸாதகமுமாகும். குற்ற மற்றவனே! வீர! பூதலத்தில், நீங்கள் (வனத்துக்குவந்த) பதின் மூன்றாவது வருஷத்தில் அஞ்ஞாதவாஸம் செய்யவேண்டும். அப் பொழுது, இந்தச் சாபத்தை நீ போக்குவாய். அந்த நட்டுவ வேஷத்துடனும் அப்படியே அலித்தன்மையுடனும் ஒருவருஷம் முழுவதும் திரிந்து, பிறகு, ஆண்தன்மையை அடைவாய்' என்று கூறினன்.

இவ்விதம் இந்திரனால் சொல்லப்பட்டவனும் பகைவீரர்களைக் கொல்லுகிறவனுமான அர்ஜுனன் மேலானசந்தோஷத்தை அடைந் தான். சாபத்தைப்பற்றியும் மிகக் கவலைப்படவில்லை. அந்தப் பாண்டு புத்திரனான அர்ஜுனன் கீர்த்தியுள்ள சித்திரஸேனகந்தர்வனுடன் கூடி ஸ்வர்க்கமாளிகையில் மகிழ்ந்திருந்தான். இந்த அர்ஜுன னுடைய உறுதியை எப்பொழுதும் கேட்பவனுக்குப் பாவத்தைத் தரக்கூடிய (தகாதவிடத்துக) காமங்களில் ஆசை உண்டாகாது. இந்திரபுத்திரனான அர்ஜுனனுடைய இந்தக் கடுமையானதும் சுத்த முமான சரித்திரத்தைக் கேட்டு, அரசர்கள், மதம் காவம் ஆசை

பெரிய சந்தேகம் உண்டாகும். (ஆயினும்) நமக்கு ஜயத்தை நான் பார்க்கவேயில்லை. கர்ணன் அஜாக்ரதையுடன் தயையுமுள்ளவன். குருவான துரோணரும் முதியவர். அர்ஜுனன் கோபமுள்ளவன்; பலவான்; சுறுசுறுப்புள்ளவன்; உறுதியான பராக்கிரமமுள்ளவன். [1] எல்லாவிதத்திலும் அபஜயமற்ற மிக்க நெருக்கமான சண்டை உண்டாகும். ஏனெனில், யாவரும் அஸ்திரமறிந்தவர்; சூரர்; யாவரும் மிக்க கீர்த்தியையடைந்தவர்கள்; [2] தோற்று எல்லாவற்றுக்கும் தலைவனாயிருக்கும் தன்மையையும் விரும்பாதவர்களன்றோ? இவர்களுக்காவது அர்ஜுனனுக்காவது வதம் நேருங்காலத்தில்தான் ஓய்வு உண்டாகும்; இது நிச்சயம். ஆனால், அர்ஜுனனைக் கொல்லுகிறவன் இல்லை. அவனை ஜயிக்கிறவனுமில்லை. மந்தர்களைக் குறித்து உண்டான அந்த அர்ஜுனனுடைய கோபம் எவ்விதம் தணியும்? தேவேந்திரனுக்கொப்பான அந்த வீரன் காண்டவ வனத்தில் அக்னியைத் திருப்தி அடைவித்தான். ராஜஸூயமென்ற பெரிய யாகவிஷயத்தில் எல்லா அரசர்களையும் ஜயித்தான். ஓ! ஸஞ்சய! ஐயனே! மலையின் தலையில் விழுந்த வஜ்ராயுதம் மிச்சம் வைக்கும்; அர்ஜுனனால் போடப்பட்ட பாணங்கள் மிச்சம் வையா. சூரியனுடைய கிரணங்கள் இங்கு ஸ்தாவர ஜங்கமங்களான பொருள்களை எரிப்பதுபோல அர்ஜுனனது கையால் விடப்பட்ட பாணங்கள் என் புத்திரர்களை எரிக்கும். ஸவ்யஸாசியான அர்ஜுனனுடைய அந்தத் தேரின் சப்தத்தினாலுண்டான பயத்தால் பீடிக்கப்பட்ட பாரத சைனியமானது நான்குபக்கத்திலும் பிளக்கப்பட்டதுபோலத் தோன்றுகின்றது. யுத்தத்தில் பாணங்களை எடுத்து இறைப்பவனும் கொல்லுதற்கு முயன்றவனுமான அர்ஜுனன், பிரமனாலே யாவற்றையும் நாசஞ்செய்கிறவனாகப் படைக்கப்பட்ட யமன்போலத் தடுக்கமுடியாதவனாக நிற்பவனே ஆவன்' என்றான்.

ஸஞ்சயன் சொல்லலானான். 'ஓ! அரசரே! பூமிக்குப் பதியே! நீர் துர்யோதனனைக் குறித்து இவ்விதம் சொல்லியவை யாவும் உண்மையே; பொய்யல்ல. அரசரே! மஹாராஜரே! கீர்த்தி பெற்ற தர்மபத்னியான திரௌபதி ஸபையில் இழுக்கப்பட்டதைப் பார்த்தும், கடுமையாகக் கிளம்பும் துச்சாஸனன் கர்ணன் இவர்களுடைய அந்தச் சொற்களைக் கேட்டும், கோபத்துடன்

---

1 வேறு பாடம். 2 'எல்லாவற்றுக்கும் தலைவனாயிருக்கும் தன்மை கிடைத்தாலும், தோல்வியை விரும்பார்கள்' என்பது.

கூடினவர்களும் அதிக சக்தியுள்ளவர்களுமான பாண்டவர்கள் தூங்காரென்பது என்னுடைய எண்ணம். ஓ! மகாராஜரே! பதினொரு சரீரமுள்ளவரும் எல்லாத தேவர்களுக்கும் ஈசரும் பக வானும் சடைமுடியுள்ளவருமான பரமசிவன் அர்ஜுனனை அறிந்து கொள்ளவேண்டி வேடன்வேஷத்தையடைந்து தாமே சண்டை செய்ததையும் சண்டையில் அர்ஜுனன் ஈஸ்வரரை வில்லால் மகிழ்வித்ததையும் அதிக காந்தியுள்ள அவன் பாசுபதமென்னும் சிறந்த அஸ்திரத்தை அடைந்ததையும் அப்பொழுது அஸ்திரத் திற்கு வேண்டித் தவத்தினால் முயன்ற கௌரவஸ்ரேஷ்டனை இந்த அர்ஜுனனுக்கு அந்த லோகபாலர்கள் காட்சியளித்ததை யும் நீர் கேட்டிருக்கிறீர். உலகில் அர்ஜுனனைத் தவிர மற்ற மனி தன் இந்த ஈஸ்வரர்களுடைய பிரத்யக்ஷ தரிசனத்தை அடைவ தற்கு நினைக்கவுமாட்டான். ஓ! அரசரே! எந்த அர்ஜுனன் மஹேஸ்வரரால் விழுங்க (=கட்டப்)ப் பெற்ற சரீரமுள்ளவனாகியும் ஜீர்ணத்தை (=முடிவை) அடையவில்லையோ அவனை யுத்தத்தில் வெல்வதற்கு வீரனான எந்த ஆண்பிள்ளை உத்ஸாஹமுள்ளவனுவன்? திரௌபதியை நான்குபக்கத்திலும் இழுக்கிறவர்களும் பாண்டவர் களைக் கோபிக்கச் செய்கிறவர்களுமான (உமது புத்திரர்களால்) மயிர்பொடித்தலை உண்டுபண்ணக்கூடியதும், நெருக்கமானதும், துரியோதனனால் திரௌபதிக்கு (த் தட்டி-)க் காட்டப்பட்ட இரண்டு தொடைகளையும் கண்டு பீமன் துடிக்கும் உதடுள்ளவனாகி, 'பாபி! கபடமாகச் சூதாடுகின்ற உன்னுடைய தொடைகளை வஜ்ரத்திற்கொப்பான கதையென்னும் ஆயுதத்தால் பதின்மூன்று வருஷங்களுடைய முடிவில் பிளக்கப்போகின்றேன்' என்று அர்த்த முள்ள வார்த்தையைச் சொல்லியதுமான இந்தக் கோரமானது அடையப்பட்டது. யாவரும் அடிப்பவர்களுள் சிறந்தவர்கள்; யாவ ரும் அளவற்ற பராக்கிரமமுள்ளவர்கள்; யாவரும் எல்லா அஸ் திரங்களையும் அறிந்தவர்கள்; தேவர்களாலும் ஜயிக்கமுடியாதவர் கள். வீர்யத்துடனும் பகைவரைப் பொறுமையுடனுங் கூடின பார்த்தர்கள் கோபம்மூண்டவர்களாகி யுத்தத்தில் உமது புத்திரர் களுடைய நாசத்தைச் செய்வார்களென்று எண்ணுகிறேன் என்றான்.

திருதராஷ்டிரன் சொல்லலானான். 'ஓ! ஸஞ்சய! கடுமை யான வார்த்தையைச் சொல்லுகின்ற கர்ணனால் என்ன செய்யப் பட்டது? அந்தத் திரௌபதி ஸபையை அடைந்ததும் இவ்வளவு

பகையுமாகவே முடிந்தது. எவர்களுக்குக் குருவான மூத்ததமையன் நியாயத்திலிருக்கவில்லையோ அந்த மந்தபுத்தியுள்ள என்னுடைய புத்திரர்கள் இப்பொழுதாவது இருப்பார்களா? ஓ! ஸூத! என்னைக் கண்ணில்லாதவனும் செயலற்றவனும் அறிவற்றவனுமாகக் கருதி மூடர்களையடைந்த அவன் என்னுடைய வார்த்தையைக் கேட்கவும் விரும்பவில்லை. மூடர்களான கர்ணன் சகுனி முதலிய மந்திரிகள் விபரீத புத்தியுள்ளவர்களாகி அவனுடைய தோஷங்களை மிக வளர்க்கிறார்கள். அளவற்ற சக்தியுள்ள அர்ஜுனனால் தற்செயலாக விடப்பட்ட பாணங்களும் என் புத்திரர்களை எரிக்கும். கோபத்தினால் விடப்பட்டால் கேட்கவும் வேண்டுமா? அர்ஜுனனுடைய கைவன்மையால் விடப்பட்டவைகளும் பெரிய வில்லிலிருந்து வெளிவந்தவைகளும் திவ்யாஸ்திரமந்திரத்தால் மகிழ்விக்கப்பட்டவைகளுமான (அஸ்திரங்கள்) தேவர்களையும் நாசம் செய்யுமல்லவா? மூவுலகத்திற்கும் நாதரும் ஜனார்த்தனருமான அந்த ஹரியை நண்பரும் காப்பவரும் மந்திரியுமாகவுடையவனுக்கு ஜயிக்கப்படாதது எது? ஓ! ஸஞ்சய! 'மஹாதேவருடன் கைகளால் கலந்தான்' என்று கேட்ட அர்ஜுனனுடைய இந்தச் செய்கை இவ்வுலகில் மிகப் பெரிய ஆச்சரியமானது. அக்னிக்கு உதவி செய்யவேண்டிக் கிருஷ்ணனாலும் அர்ஜுனனாலும் காண்டவ வனத்தில் முன்னர்ச் செய்யப்பட்டது எல்லா உலகத்துக்கும் ப்ரத்யக்ஷமானதே. அர்ஜுனன், பீமன், ஸாத்வதனான கிருஷ்ணன் ஆகிய இவர்கள் கோபங்கொண்டபோது, என்னுடைய புத்திரர்கள் மந்திரிகளுடனும் பந்துக்களுடனும் எவ்விதத்திலும் இரார்' என்றான்" என்று சொன்னார்.

---

நாற்பத்தேழாவது அத்யாயம்.

## இந்திரலோகாபிகமன பர்வம். (தொடர்ச்சி.)

(வைசம்பாயனர், பாண்டவர்களுக்குக் காட்டில் உணவுப்பொருள் இன்னதென்பதை ஜனமேஜயருக்குச் சொல்லியது.)

ஜனமேஜயர், வைசம்பாயனரைப் பார்த்து, "ஓ! முனிவரே! வீரர்களான பாண்டவர்களைக் காட்டுக்கு அனுப்பிவிட்டுத் திருதராஷ்டிரராஜா இவ்விதம் துக்கித்ததெல்லாம் பயனற்றது. மஹாரதர்களான பாண்டு புத்திரர்களைக் கோபமூட்டுகின்றவனும் அற்பபுத்தியுள்ளவனும் ராஜபுத்திரனுமான அந்தத் துரியோதனனை

எவ்விதம் உபேக்ஷிக்கலாம்? காட்டில் பாண்டுபுத்திரர்களுக்கு என்ன ஆகாரமிருந்தது? சொல்லவேண்டும். காட்டிலுள்ளதா? அல்லது, உழுது விளைந்த தான்யமா? இதனை நீர் எனக்குச் சொல்லும்" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மஹாரதர்கள் காட்டிலுள்ள காய் கனி முதலியவற்றையும் சுத்தமான பாணங்களால் கொல்லப்பட்ட மான்களையும் பிராம்மணர்களுக்கு முதலில் [1] தெரிவித்துவிட்டுப் புஜித்தார்கள். ஓ! அரசரே! அப்பொழுது, வனத்தில் வஸிக்கின்றவர்களும் பெரிய வில்லுள்ளவர்களும் சூரர்களுமான அவர்களை அக்னியுடன் கூடினவர்களும் (கிருகஸ்தர்களும், வானப்ரஸ்தர்களும்) அவ்வாறே அக்னியற்றவர்களும் (பிரம்மசாரிகளும் ஸந்யாஸிகளும்) ஆன பிராம்மணர்கள் பின்தொடர்ந்தார்கள். அவ்வாறு பின்தொடர்ந்த மஹாத்மாக்களும் ஸ்நாதகர்களும் மோக்ஷமறிந்தவர்களுமான பிராம்மணர்களுள் பதினாயிரவரை யுதிஷ்டிரர் போஷிக்கிறார். ருருவென்னும் மான்களையும் கருமையான மான்களையும் மனத்திற்குப்பிடித்த சுத்தமான மற்றவைகளையும் பலவித பாணங்களால் பிளந்து பிராம்மணர்களுக்குத் [2] தெரிவித்தார். அவ்விடத்தில் ஒருவனும் நிறங்கெட்டவனாவது நோயுள்ளவனாவது இளைத்தவனாவது பலங்குறைந்தவனாவது தீனனாவது பயந்தவனாவது காணப்படவில்லை. கௌரவஸ்ரேஷ்டரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர், அன்புடையவர்களான தம்பிமார்களைப் புத்திரர்களைப்போலவும் ஞாதிகளை ஸகோதரர்களைப்போலவும் போஷித்தார். அப்பொழுது, கீர்த்தியுள்ள திரௌபதி எல்லாப் பிராம்மணர்களையும் பதிகளையும் தாய்போல முதலில் உண்பித்து மிகுதியானதை(த் தான்) உண்டாள். ஒவ்வொருநாளும், மாமிசத்துக்காகத் தர்மபுத்திரர் கிழக்குத்திக்கையும், பீமன் தெற்குத்திக்கையும் நகுலஸகதேவர்கள் மேற்குத்திக்கையும் வடக்குத்திக்கையும் வில்லேந்தரித்தவர்களாகி அடைந்து மான்களை அடித்தலைச் செய்தனர். அவ்விதம் காம்யகவனத்தில் வஸிக்கின்றவர்களும் அர்ஜுனன் இல்லாதவர்களும் (அவனைப்பார்க்க) ஆசையுள்ளவர்களும் அத்தியயனம் செய்கின்றவர்களும் ஜபிக்கின்றவர்களும் ஹோமம் செய்கின்றவர்களுமான அவர்களுக்கு ஐந்து ஆண்டுகள் கழிந்தன.

---

1 'நிவேத்ய' என்பது மூலம். 2 'ந்யவேதயத்' என்பது மூலம்.

நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## இந்திரலோகாபிகமனபர்வம். (தொடர்ச்சி)

(திருதராஷ்டிரன், பாண்டவர்களின் பராக்ரமத்தை எண்ணி, தன் பிள்ளைகளைப்பற்றி ஸஞ்சயனிடம் வருந்தியதும், வனத்தில் கிருஷ்ணன் முதலியோர் துரியோதனாதியரைக் கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்ததை ஸஞ்சயன் சாரராலறிந்து திருதராஷ்டிரனுக்குச் சொல்லியதும்.)

ஓ! பரதஶ்ரேஷ்டரே! மனுஷ்யர்களை அதிக்கிரமித்ததும் ஆச்சரியமானதுமான அவர்களுடைய அந்தச் சரித்திரத்தைக் கேட்டு அம்பிகாபுத்திரனான திருதராஷ்டிரன் கவலையாலும் சோகத்தாலும் மூடப்பெற்ற மனமுள்ளவனாகியும் கோபத்தால் மிக நிறைந்தவனாகியும் நீளமாயும் உஷ்ணமாயும் பெருமூச்செறிந்து ஸூதனான ஸஞ்சயனைக் கூப்பிட்டு வார்த்தை சொல்லலானான்: 'ஓ' ஸூத! சூதாட்டத்தாலுண்டானதும் கோரமானதும் முன்நடந்ததுமான அந்த அநியாயத்தையும் பொறுக்க முடியாத வீர்யமுள்ள அந்த பார்த்தர்களுடைய சௌரியத்தையும் மேலான உறுதியையும் தைரியத்தையும் ஒருவர் மேல் ஒருவராகவுள்ள மனித இயற்கைக்கு மேற்பட்ட அன்பையும் நான் ஆலோசித்து, இரவிலோ அல்லது பகலிலோ க்ஷணமாவது நான் ஆறுதலையடையவில்லை. ஸஞ்சய! தேவபுத்திரர்களும் மஹாபாக்யவான்களும் தேவராஜனுக்கொப்பான காந்தியுள்ளவர்களும் பாண்டுபுத்திரர்களும் யுத்தத்தில் அடங்காத மதமுள்ளவர்களும் உறுதியான ஆயுதமுள்ளவர்களும் தூரத்தில் விழும்படி அம்பெய்கிறவர்களும் யுத்தத்தில் செய்யப்பட்ட நிச்சயமுள்ளவர்களும் சீக்கிரமாக (அஸ்திரங்களைப் பிரயோகிக்கும்) கையுள்ளவர்களும் நிலைத்த கோபமுள்ளவர்களும் எப்பொழுதும் முயற்சியுள்ளவர்களும் தேரிலிருப்பவர்களும் சிங்கம்போன்ற நடையுள்ளவர்களும் (பிறரால்) பொறுக்கமுடியாதவர்களும் அஶ்வினிதேவதைகள் போன்றவர்களுமான அந்த நகுலஸகதேவர்கள் எப்பொழுது போர்க்களத்தில் பீமனையும் அர்ஜுனனையும் முன்னிட்டுக்கொண்டு நிற்பார்களோ அப்பொழுது என்னுடைய சேனை மிச்சமிராதென்பதை இப்பொழுது பார்க்கிறேன். மிக்ககோபமுள்ளவர்களும் போரில் எதிரியற்றவர்களும் மகாரதர்களுமான அந்தத் தேவபுத்திரர்கள், திரௌப

திக்கு உண்டாக்கின அந்தக் கஷ்டத்தைப் பொறுக்கமாட்டார்கள். மேலும், பெரிய விலலுள்ள விருஷ்ணிகளும், மிக்க பராக்ரமமுள்ள பாஞ்சாலர்களும், கருதியதைத் தவறாமல் முடிப்பவனான கிருஷ்ணனால் காப்பாற்றப்பட்டவர்களுமான பார்த்தர்களும் போரில் என் புத்திரர்களின் சேனையைச் சாம்பலாகச் செய்வார்கள். ஓ! ஸூதநந்தன! பலராமனாலும் கிருஷ்ணனாலும் நடத்தப்பட்ட விருஷ்ணிகளுடைய மல்லர்களாலும் தாங்கமுடியாத வேகமானது பொறுக்க முடியாதது. அவர்களுள் பயங்கரமான பராக்ரமமுள்ளவனும் பெரிய விலலுள்ளவனுமான பீமன், [1] உறிபிலிருப்பதும் பகைவீரர்களைக் கொல்லுகின்றதுமான கதையுடன் ஸஞ்சரிக்கப்போகிறான். அப்படியே, இடியின் முழக்கம்போன்ற காண்டீவத்தின் சப்தத்தையும் பீமனது கதையின் வேகத்தையும் அரசர்கள் தாங்குவதற்குச் சக்தரல்லர். ஆகையால், துரியோதனனை வசத்தையடைந்த நான், முந்தி என்னால் செய்யப்படாதவையும் நினைக்கத்தக்கவையுமான சிநேகிதர்களின் சொற்களை நினைக்கப்போகிறேன்' என்றான்.

ஸஞ்சயன் சொல்லலானான். 'ஓ! அரசனே! அறியாமையால் புத்திரன் உம்மால் தடுக்கப்படாமையால், ஸமர்த்தராயிருந்தும், பெரிய இந்தத் தவறுதலானது உம்மால் உபேக்ஷிக்கப்பட்டது. மதுஸூதனரான இந்த அச்சுதர் சூதாட்டத்தில் பாண்டவர்கள் ஜயிக்கப்பட்டதைக் கேட்டு வேகமாக வந்து, காம்யகவனத்திலிருக்கும் பாண்டவர்களைத் தேற்றினார். அவ்விதமே, திருஷ்டத்யும்னனை முதல்வனாயுடைய த்ருபத புத்திரர்களும் விராடனும் திருஷ்டகேதுவும் மஹாரதர்களான கேகயர்களும் தேற்றினார்கள். ஓ! அரசனே! தோல்வியடைவிக்கப்பட்ட பாண்டவர்களைப் பார்த்து அவர்கள் சொல்லியவற்றையெல்லாம் ஒற்றர்கள் அறிந்துவந்தனர். நானும் உமக்குத் தெரிவித்திருக்கிறேன். அவ்விடத்தில் மதுஸூதனர் பாண்டவர்களோடு சேர்ந்து போர்க்களத்தில் அர்ஜுனனுக்குத் தேரோட்டும் விஷயத்தில் வரம் கேட்கப்பட்டார். ஹரியும், 'அப்படியே' என்று அவர்களை நோக்கிச் சொன்னார். அப்பொழுது, மான்தோலை மேலாடையாயுடையவர்களாகி வந்த பாண்டவர்களைப் பார்த்துக் கிருஷ்ணரும் கோபங்கொண்டு தாமபுத்திரரை நோக்கிச் சொல்லலானார்: 'வேறு அரசர்களால் அடையமுடியாததான பாண்டவர்களுடைய அந்த ஐஶ்வர்யத்தை இந்திரப்ரஸ்தத்தில் ராஜஸூய

[1] 'பூமியைப் பிளந்துகொண்டு போகுமோ என்ற பயத்தால் உயரவைக்கப்பட்டதென்பது பொருள்' என்பது பழையவுரை.

யாகம் நடக்கும்போது நான் பார்த்தேன். இந்திரப்ரஸ்தத்தில், வங்கர், அங்கர், பௌண்ட்ரர், ஓட்ரர், சோளர், த்ராவிடர், ஆந்த்ரர், 1 ஸாகராநூபகர், பட்டணத்தில் வஸிக்கின்றவர்கள், ஸிம்ஹளர், பர்பரர், மிலேச்சர், மற்றும் லங்காவாஸிகள், மேற்கிலுள்ள நூற்றுக்கணக்கான ராஜ்யங்களிலும் கடலோரங்களிலும் இருப்பவர்கள், பல்லவர், தரதர், கிராதர், யவனர், சகர், ஹாரஹூணர், சீனர், துஷாரர், ஸைந்தவர், ஜாகுடர், ராமடர், முண்டர், ஸ்திரீராஜ்யத்தில் வஸிப்பவர், தங்கணர், கேகயர், மாளவர், காஸ்மீரகர் முதலிய எல்லா அரசர்களும், சஸ்திர சக்தியால் பிடிக்கப்பட்டவர்களும் அழைக்கப்பட்டவர்களுமாகி, உமது யாகத்தில் எல்லாரும் பரிமாறுகின்றவர்களாயிருந்ததை நான் கண்டேன். இழிவானவர்களை அடையும் தன்மையுள்ளதும் நிலைத்திராததுமான அந்த உமதுடைய ஐஸ்வரியமானது எவர்களால் கவரப்பட்டதோ அவர்களுடைய உயிரைக் கவர்ந்து அந்த ஐஸ்வரியத்தை நான் அபகரிப்பேன். ஓ! கௌரவ்யரே! பாரதரே! பலராமர், பீமன், அர்ஜுனன், இரட்டையரான நகுலஸஹதேவர், அக்ரூரர், கதன், ஸாம்பன், ப்ரத்யும்னன், ஆஹுகன், வீரனான த்ருஷ்டத்யும்னன், சிசுபாலபுத்ரன் ஆகிய இவர்களுடன் கூடி யுத்தத்தில் துர்யோதனன், கர்ணன், துச்சாஸனன், சகுனி ஆகிய இவர்களையும் மற்றும் எதிர்க்கிறவனையும் உடனே கொன்று, பிறகு, நீர் தம்பிகளுடன் அஸ்தினபட்டணத்தில் வஸிப்பவராகித் திருதராஷ்டிரனுடையதான ஐஸ்வரியத்தையடைந்து இந்தப் பூமியை ஆளுவீராக' என்றார்.

பிறகு, தர்மபுத்திரர், அந்த வீரர்கூட்டத்தில் த்ருஷ்டத்யும்னன் முதலிய இந்த வீரர்கள் கேட்டுக்கொண்டிருக்கும்போது, கிருஷ்ணரை நோக்கி, 'ஓ! தோள்வலி அமைந்தவரே! ஜனார்த்தனரே! இந்த உண்மையான உமதுடைய வார்த்தையைப் பெற்றுக்கொள்ளுகிறேன். பதின்மூன்றாவது வருஷத்திற்குமேல் என்னுடைய பகைவர்களை, தொடர்ந்து வந்தவர்களுடன், நாசஞ்செய்வீர். ஓ! கேசவரே! என்னை மெய்யனாகச் செய்யக்கடவீர். அரசர்களின் நடுவில் என்னால் இந்த வனவாஸமானது பிரதிஜ்ஞை செய்யப்பட்டதன்றோ?' என்றார். அந்தத் திருஷ்டத்யும்னன் முதலிய ஸபையிலுள்ளோர், தர்மபுத்திரரின் வார்த்தையைக் கேட்டுக் கோபங்கொண்ட மாதவரை நோக்கிக் காலத்திற்கேற்ற இனிய

1 கடற்கரையை ஒட்டியிருப்பவர்.

வார்த்தைகளால், 'தகுதியானது' என்றார்கள். (அவர்கள்) வாஸுதேவர் கேட்டுக்கொண்டிருக்கும்போது, குற்றமற்ற திரௌபதியை நோக்கிச் சொல்லலாயினர். 'ஓ! மேலானவளே! தேவி! உனது கோபத்தால் துரியோதனன் உயிரை விடப்போகிறான். ஸத்தியமாக உனக்குப் பிரதிஜ்ஞை செய்கிறோம். நீ துக்கப்படாதே. ஓ! கிருஷ்ணையே! அப்பொழுது உன்னைப்பார்த்துச் சிரித்த அந்தக் கௌரவர்களின் மாமஸங்களைச் செந்நாய்களும் பக்ஷிகளும் தின்று கொண்டு இழுக்கப்போகின்றன. ஸபையில் உன்னை இழுத்தவர்களின் தலைகளைக் கழுகுகளும் அவ்வாறே நரிகளும் இழுத்துக்கொண்டு இரத்தத்தைக் குடிக்கப்போகின்றன. ஓ! பாஞ்சாலி! பூதலத்தில் மாம்ஸத்தைத்தின்னும் ஜந்துக்களால் இழுக்கப்படுகின்றவையும் அடிக்கடி தின்னப்படுகின்றவையுமான அவர்களின் சரீரங்களையும் பார்ப்பாய். அவ்விடத்தில் உன்னை இழுத்தவர்களும் அநாதரணை செய்தவர்களுமான அவர்களுடைய தலை அறுக்கப்பட்டு ரக்தத்தைப் பூமி குடிக்கப் போகிறது' என்றார். எல்லாரும் புருஷஶ்ரேஷ்டர்களும் சக்தியுள்ளவர்களும் எல்லாரும் சூரர்களும் லக்ஷணத்துடன் கூடினவர்களுமான அவர்கள் இவ்விதம் பலவிதவார்த்தைகளைச் சொன்னார்கள். தர்மராஜரால் வேண்டப்பட்டவர்களும், பலராமர், கிருஷ்ணர், அர்ஜுனன், ப்ரத்யும்னன், ஸாம்பன், ஸாத்யகி, பீமன், மாத்ரிபுத்திரர்களான நகுலஸஹதேவர்கள், கேகய ராஜபுத்திரர், விராடராஜனுடன் கூடிய பாஞ்சாலபுத்திரர் ஆகிய மஹாரதர்களுமான அவர்கள் பதின்மூன்றாவது வருஷத்திற்குமேல் வாஸுதேவரை முன்னிட்டுக்கொண்டு வரப்போகிறார்கள். லோகவீரர்களும் ஜயிக்க முடியாதவர்களும் மஹாரதமாகர்களும் பரிவாரங்களுடன் கூடினவர்களும் சேனையுடன் கூடினவர்களுமான இவர்கள் யாவரையும், உயிரில் ஆசையுள்ள எவன், கோபங்கொண்டவையும் நேரே நிற்கும் பிடரிமயிருள்ளவையுமான சிங்கங்களை எதிர்ப்பது போல யுத்தத்தில் எதிர்ப்பான்?' என்றான். திருதராஷ்டிரன் சொல்லத் தொடங்கினான்: 'சூது நடக்கும்போது, விதுரன், 'ஓ! நரேந்திரரே! நீர் பாண்டவர்களை ஜயிப்பீரேயாகில் இந்த ஜயமானது குருக்களுக்கு அதிக பயத்தையுடையதும் உதிரப்பெருக்கையுடையதுமான முடிவுக்காலமாகும். இது திண்ணம்' என்று என்னை நோக்கிச் சொல்லினன். ஸூத! முன்பு விதுரன், 'வரப்போகிறது' என்று என்னை நோக்கிச் சொல்லிய இந்த யுத்தமானது, பாண்டவர்களுக்குப் பிரதிஜ்ஞாகாலம் கழிந்தவுடன், அவன் சொன்னபடி வரப்

போகிறது. ஸந்தேஹமில்லையென்று எண்ணுகிறேன்' என்றான்'' என்று கூறினர்.

இந்திரலோகாபிகமனபர்வம் முற்றிற்று.

---

நாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம்.

(யுதிஷ்டிரனும் பீமனும் பேசிக்கொண்டிருக்கையில் பிருகதச்வர் வந்து யுதிஷ்டிரருக்கு நளோபாக்யானத்தைச் சொல்லத் தொடங்கியது.)

ஜனமேஜயர், "மஹாத்மாவான அர்ஜுனன் அஸ்திரத்துக்காக இந்திரலோகம் சென்றவுடன், யுதிஷ்டிரா முதலிய பாண்டவர்கள் என்ன செய்தார்கள்?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார்.

"மஹாத்மாவான அர்ஜுனன் அஸ்திரம் பெறுதற்காக இந்திரலோகத்துக்குப் போனவுடன், பரதஸ்ரேஷ்டர்கள் திரௌபதியுடன் காம்யகவனத்தில் வஸித்தார்கள். பிறகு, ஒரு சமயம் பரதஸ்ரேஷ்டர்கள், துக்கத்தால் பீடிக்கப்பட்டவர்களாகவும் அர்ஜுனனைக்குறித்துச் சோகப்படுகிறவர்களாகவும் கண்ணீரால் தடைப்பட்ட குரலுள்ளவர்களாகவும் மிக்க துக்கத்தை அடைந்தவர்களாகவும், திரௌபதியுடன், சுத்தமாயும் ஏகாந்தமாயுமிருக்கிற மெதுவான புல்லுள்ள இடத்தில் உட்கார்ந்தார்கள். அர்ஜுனனுடைய பிரிவால் பீடிக்கப்பட்ட அவர்களைச் சோகம் சூழ்ந்துகொண்டது. பிறகு, அவனைப் பிரிந்ததாலும் ராஜ்யம் நழுவிவிட்டதாலும் [1] துக்கித்த புஜபலமுள்ள பீமன் யுதிஷ்டிரரைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான்: 'ஓ! மஹாராஜரே! எவனிடத்தில் பாண்டுபுத்திரர்களின் பிராணன்கள் நிலைபெற்றிருக்கின்றனவோ, எவன் நாசமடைந்தால் புத்திரர்களுடன் பாஞ்சாலனும் அப்படியே நாமும் ஸாத்யகியும் கிருஷ்ணரும் நாசமடைந்துவிடுவோமென்பதில் சந்தேகமில்லையோ இந்தப் பரதஸ்ரேஷ்டனான அர்ஜுனன் உம்முடைய உத்தரவினால் போனான். நாமெல்லாரும் எந்த மஹாத்மாவின் கைகளை அடுத்து யுத்தத்தில் பகைவர்களை ஜயிக்கப்பட்டவர்களாகவும் பூமியை

---

1 'துக்கித:' என்ற பாடம் கொள்ளப்பட்டது.

அடையப்பட்டதாகவும எண்ணுகிறோமோ, நாம் சபையின் நடுவில் வில்லாளியான எவனுடைய மகிமையால் சகுனியுடன் திருதராஷ்டிரபுத்திரர்கள் யாவரையும ஜயிக்கபபட்டவர்களாக எண்ணுகிறோமோ, எவனுடைய மகிமையின நிமித்தம் சபையின் நடுவில் அதிக பலமுள்ள தார்த்தராஷ்டிரர்கள சகுனியுடன் என்றால் அநத உலகத்தை அடைவிக்கப்படவில்லையோ இநதத தர்மாதமா வான அர்ஜுனன் அதிக கிலேசஙகளை எணணிககொணடு உம்முடைய உததரவினால போனான். அதைநககாட்டிலும் மேலான துக்கம் என்ன இருககிறது? தோள்வன்மையுள்ள அப்படிபபட்ட நாஙகள் கோவிநதரால காக்கபபட்டவர்களாகி உம்மைக் காரணமாகவுடையதும உண்டானதுமான எஙகள் கோபத்தைப் பொறுக்கினோம. கிருஷ்ணருடன்கூடின என்றால கர்ணன் முதலிய பகைவர்களைக் கொனறு என்கையால் ஜயிககப்பட்ட இநதப பூமி முழுமையையும் ஆளும். ஓ! மன்னரே! குறைவற்ற பௌருஷமுள்ள நாம் யாவரும் (உமமுடைய சூதாட்ட தோஷததால்) துன்பமடைந்தோம். கப்பஙகளை வாங்குதலால, 1 சிறுவர்களான பகைவர்கள் மிக்க பலமுள்ளவர்களாயினர். ஓ! மஹாராஜரே! க்ஷத்திரியதர்மததை நீர் பார்க்கக்கடவீர். மஹாராஜரே! காட்டை அடைவது க்ஷததிரியனுடைய தர்மமில்லையன்றோ? அரசாட்சியே க்ஷததிரியனுக்கு மேலான தர்மமென்று விதவான்கள் எண்ணுகிறார்கள். அரசரே! க்ஷத்ரிய தர்மமறிந்த அப்படிப் பட்ட நீர் தர்மவழியிலிருந்து (விலகி) நாசமடைய வேண்டாம். ஓ! அரசரே! அர்ஜுனனை வனததிலிருந்து திருப்பியழைத்தும் கோவிந்தரை வரவழைத்தும் பன்னிரண்டுவருஷங்கள் முடியுமுன்னரே தாரததராஷ்டிரர்களைக் கொல்லுவோம். மனிதர்களுக்குத் தலைவரே! மஹாராஜரே! அணிவகுக்கப்பட்டசேனையுள்ள திருதராஷ்டிரபுதரர்களைப் பெரிய யுத்ததநில் வேகமாகவே பரலோகததை அடையச் செய்வோம். சகுனியுடன் கூடின தார்ததராஷ்டிரர்களையும் துரியோதனனையும் கர்ணனையும் மற்றும் எதிர்ப்பவர் யாவரையும் நான் கொல்லுவேன. ஓ! அரசரே! இவ்விதம் என்றால் அடக்கப்பட்டபின் நீர் திரும்பவும் காட்டையடையலாம். இவ்விதம் செய்யப்பட்டபோது உமக்குத தோஷம் வாராது. பகைவரையடக்குபவரே! மஹாராஜரே! ஐயா! செய்யப்பட்டபாவததைப் பலவித யாகஙகளால் போக்கிவிட்டு மேலான ஸ்வர்க்கததை

1 வேறு பாடம்.

அடைவோம். அரசரே! அரசன் சிறுவன்போல வீண் பிடிவாத மில்லாதவனுயிருந்தால் இது இவ்விதமே நடக்கும். நீர் தர்மத் தையே முக்கியமாகக் கொண்டீரானால், (விரைந்து செய்யவேண்டி யதைத் தாமதித்துச் செய்வதாகிய) தீர்க்கஸூத்ரமென்னும் குற் றம் நமக்கு நேரும். கபட எண்ணமுள்ளவர்கள் கபடத்தால்கொல் லப்படத்தக்கவர்கள் என்பது நிச்சயம். கபடம் செய்பவனைக் கப டத்தால் கொல்லுவது பாவமென்று சொல்லப்படவில்லையன்றோ? ஓ! பாரதரே! மஹாராஜரே! அப்படியே இவ்வுலகத்தில் தர்மம் அறிந்தவர்களால் தர்மானுஷ்டானங்களில் ஒரு பகலும் இரவும் சேர்ந்து ஒருவருஷத்துக்கொப்பாகுமென்பது காணப்படுகிறது. ஓ! விபுவே! அப்படியே, எப்பொழுதும் வேதவசனமும் கேட்கப் படுகிறது. மஹாராஜரே! வருஷமானது [1] க்ருச்ரத்தினாலும் பூர்ணமாகிறது. ஓ! தாமதத்தினின்றுமவழுவாதவரே! வேதங்கள் உமக்குப் பிரமாணமானால் இன்றையிலிருந்து பதின்மூன்று நாட்கள் சென்றால் பிரதிஜ்ஞாகாலமானது முடிவுபெற்றதாக அறியக்கடவீர். பகைவரை அடக்குபவரே! பரிவாரங்களுடன் கூடின துரியோதனனைக் கொல்ல (இதுவே) காலம். ஓ! அரசரே! (கொல்லாவிடின்) அவன் பூமி முழுமையையும் தன் ஒருவனுக்கே உரியதாகச் செய்துவிடுவான். ராஜேந்திரரே! சூதிலபிரியமுள்ள உம்மால் அது அவ்விதம் செய்யப்பட்டது. அஜ்ஞாதவாஸத்தில் நாம் யாவரும் அனேகமாக நாசமடைவிக்கப்பட்டவராவோம். மிகக் கொடியவனும் கெட்ட எண்ணமுள்ளவனுமான அந்தத் துரியோதனன் நம்மைச் சாரர்களால் அறியமுடியாததும் நாம் வஸிக்கக்கூடியதுமான இடத்தை நான் பார்க்கவில்லை. அற

---

1 க்ருச்ரம் = பாவத்துக்குப் பிராயச்சித்தமாகச் செய்யப்படும் விர தம். அது, பிராஜாபத்ய க்ருச்ரம், ஸாந்தபன க்ருச்ரம், தப்த க்ருச்ரம் முதலாகப் பலவாம். அவற்றுள், முதல் மூன்றுநாள் இரவில் ஒருவேளை மட்டும் இருபத்திரண்டு கவளமும், மறுமூன்றுநாள் பகலில் ஒருவேளைமட் டும் இருபத்தாறு கவளமும் பின் மூன்றுநாள் தானுகக்கிடைத்ததில் இரு பத்துநான்கு கவளமும் புசித்துக் கடைசி மூன்றுநாள் பட்டினியிருப்பது பிராஜாபத்ய க்ருச்ரமென்னப்படும். பிறர் பிறவாறுங் கூறுவர். விஸ்தாரத்தை ஸ்மிருதி முக்தாபலம் முதலிய நூல்களில் கண்டுகொள்க. 'முப்பது பிராஜாபத்யக்ருச்ரங்களால் ஒருவருஷம் ஆகிறது. இப்படி பத்து பிராஜா பத்ய க்ருச்ரத்துக்கொப்பான மித்ரவிந்தேஷ்டி, பவித்ரேஷ்டி, மருத்வா ரேஷ்டி முதலியவற்றால் பன்னிரண்டு வருஷத்தையும் இப்பொழுதே போக்கிவிடலாம் என்பது கருத்து' என்பது பழைய உரை.

பனும் பாவியுமான அவன் எவ்விதமேனும் நம்மை அறிவானுனல் நம் யாவரையும் அறிந்து அங்கிருந்து பிறகும் இந்த வனவாஸத் தைக் குறித்துக் கபடமாகத் துரத்துவான். ஓ! மஹாராஜரே! அஜ்ஞாதவாசத்தையும் தாண்டின (நம்மைக்) கண்டு திருப்பவும் சூதாட்டத்திற்குக் கூப்பிடுவான். உமக்குத் திரும்பவும் சூதுச் சண்டை உண்டாகும் திரும்பவும் கூப்பிடப்பட்ட நீர் சூதிலே யே (செல்வத்தைப்) போக்கிவிடுவீர். மதிகெட்ட அவன் சூதுக் காய் விஷயத்தில் அவ்வளவு சமர்த்தன் என்று நிச்சயிக்கப் பட்டிருக் கிறன். ஓ! மஹாராஜரே! எங்களை உயிருள்ளவரையிலும் செய லற்றவராகச் செய்யவிரும்புவீராலுல் திரும்பவும் காடுகளில் வாஸங் களைச் செய்வீர். வேததர்மங்களை முழுமையையும் பாரும். கபடத் தில் புத்தியுள்ளவன் கபடத்தால் கொல்லப்படத்தக்கவன் என்பது நிச்சயமானது. உம்மால் விடை அளிக்கப்பெற்றுப் போய், எறியப்பட்டதும் காற்றை உதவியாக உடையதுமான தீயானது புதரை எரிப்பதுபோலச் சக்திக்குத்தக்கவாறு மந்தனை துரியோ தனனைக் கொல்லுவேன். எனக்கு நீர் விடைதருவீர்' என்றுன்.

இவ்விதம் சொல்லுகின்ற பாண்டவனை பீமனைத் தர்மராஜ ரான யுதிஷ்டிரராஜா இனசொற்கூறி உச்சியிலமோந்து சொல்லத் தொடங்கினர்: 'ஓ! மிக்க தோள்வலிமையுள்ளவனே! பதின் மூன்று வருஷத்திற்குமேல் காண்டீவவில்லையுடைய அர்ஜுனனுடன் கூடித் துரியோதனனைக் கொல்லுவாய். ஸந்தேகமில்லை. ஓ! பார்த்த! வல்லவனே! காலம்வந்துவிட்டதென்று நீ சொல்லுகிறய். நான் பொய்யைச் சொல்லுவதற்குத் துணிவற்றவனுயிருக்கின்றேன். இப் படிப் பொய் சொல்வது என்னிடத்தில் இல்லையன்றே? ஓ! கௌந் தேய! (பகைவரால்) மீறமுடியாதவனே! பாவத்தில் உறுதியுள்ள துரியோதனனைத் தொடர்ந்துவந்தவர்களுடன் நீ கபடமில்லாமலே கொல்பவனுக இருக்கின்றய்' என்றர்.

தர்மராஜரான யுதிஷ்டிரர் இவ்விதம் பீமனுக்குச் சொல்லும் போது மகா மகிமையுள்ள ப்ருஹதச்வரென்ற மகரிஷியானவர் வந் தார். தர்மபுத்தியுள்ள தர்மராஜர் தர்மானுஷ்டானமை செய்கின்ற அவர் வந்ததைக்கண்டு சாஸ்திரப்படி [1] மதுபர்க்கத்தால் பூஜை செய்

---

1 பெரியோர்கள் வரும்பொழுது மரியாதையாகக் கொடுக்கப்படுவது, மணமகனுக்கு மணமகளின் தந்தையினுல் விவாககாலத்தில் முதலில் கொடுக்கப்படுவது இக்காலத்தும் வழங்குகிறது. ஆதிபர்வம் 146-ம் பக்கத் திலும் ஸபாபர்வம் 76-ம் பக்கத்திலும் குறிப்புக்களில் காண்க.

தார். புஜபலம் மிக்க யுதிஷ்டிரர், அவர் உட்கார்ந்து களை தீர்த்துக் கொண்டதை அறிந்து அருகில் உட்கார்ந்து எளிமையுடன் பல வற்றைச் சொல்லலானார்.

'ஓ! பகவானே! சூதாட்டந் தெரியாதவனான என்னுடைய தனமும் ராஜ்யமும் சூதாடுவதில் தேர்ந்தவர்களும் மோசத்தில் எண்ணமுள்ளவர்களும் பாவத்தில் நிச்சயமுள்ளவர்களுமான வஞ்சகர்களால் சூதாட்டத்தில் வலிய அழைத்துக் கபடமாகப் பறிக்கப்பட்டன. எனது உயிருக்கும் மேலான மனையாளும் சபைக்கு இழுக்கப்பட்டாள். திரும்பவும், சூதாட்டத்தால் என்னை ஜயித்து மிக்க பயங்கரமான வனவாசத்தைக் குறித்துத் தோல்களை உடுக்கச் செய்து பெரிய காட்டை நோக்கித் துரத்திவிட்டார்கள். [1] நான் வனத்தில் கஷ்டமான வாஸங்களைச் செய்து கொண்டும், மிக்க துக்கமடைந்து சூதாட்டத்தின் சம்பந்தத்தால் மிக்க கொடிய சொற்களைக் கேட்டுக்கொண்டும், துக்கமடைந்தவர்களும் சூதாட்டம் தொடங்கியது முதல் சொல்லுகிறவர்களுமான சிநேகிதர்களுடைய சொற்கள் என்மனத்தில் பதிந்திருப்பவற்றை ராத்திரிமுழுவதும் நினைத்துக்கொண்டும் (இருக்கிறேன்.) எந்த அர்ஜுனனிடத்தில் நாங்கள் எப்பொழுதும் அடங்கினவர்களோ மிக்க பலசாலியான அவன் அஸ்திரங்களைப் பெறுவதற்காக இந்திரலோகம் போனான். மஹாத்மாவான அவன் இல்லாமல் உயிர்போனவர்கள்போல இருக்கின்றோம். 'அஸ்திரங்களைக் கற்றுக்கொண்டவனும் திரும்பிவந்தவனுமான அர்ஜுனனை எப்பொழுது பார்ப்பேன்?' என்று பெரிய வில்லுள்ள அர்ஜுனனை யாவரும் நினைக்கிறோம். பாவபுத்தியுள்ளவர்களும் சூதாட்டத்தில் பிரியமுள்ளவர்களும் அதனை அறிந்தவர்களுமான அவர்கள் நான் தம்பிமார்களுடன் வனவாஸத்திலிருந்து திரும்பிவந்ததை அறிந்து திரும்பவும் சூதுக்காய் கொண்டு ஆடும் சூதாட்டத்துக்கு வலிய அழைப்பார்கள். திரும்பவும் சூதாட்டத்தில் கூப்பிடப்பட்டாலும் மறுக்க முடியாதவனாக இருக்கிறேன். பந்தய விஷயத்தில் எனக்குப் பொருள் ஒரு சிறிதுமில்லை. இந்தக் காரணத்தாலும் தம்பிகளுடன் நான் துக்கத்தை அடைந்தேன். இது முழுமையையும் பகலும் இரவும் எண்ணுகிறவனாகிக் கவலைகொண்டேன். என்னைக்காட்டிலும் மிக்க துக்கமுள்ள மனிதன் இவ்வுலகில் ஒருவனுமில்லை; மிக அற்பமான பாக்கியமுள்ள அரசன் ஒருவனும் பூமியில் எவ்விடத்திலும்

[1] இரட்டித்ததலால் ஒரு சொல் விடப்பட்டது.

என்னுல் முன் பார்க்கப்படவும் முன் கேட்கப்படவும் இல்லை. உம்மால் எவ்விடத்திலாயினும் முன் பார்க்கப்பட்டவனாவது முன் கேட்கப்பட்டவனுவது உண்டா? என்னைவிட மிக்க துக்கமடைந்த மனிதன் இல்லையென்பது என்னுடைய எண்ணம்' என்முர்.

பகவானுன ரிஷியானவர், புத்திமானும் தர்மராஜருமான அரசருடைய கோபத்தைப் போக்குகிறவராகி, துக்கத்தால் பீடிக்கப்பட்டு இவ்விதம்சொல்லுகிற (அவரைநோக்கிச) சொல்லலானுர்: 'ஓ! புத்திமான்களுள் சிறந்தவனே! நீ துக்கத்தில் மனத்தைச் செலுத்தாதே. அர்ஜுனன் வந்துவிடுவான்; பகைவர்களையும் ஜயிப்பான். ஓ! மகாராஜ! பாண்டவ! 'ஓரிடத்திலும் என்னைக்காட்டிலும் மிக்க அற்பபாக்கியமுள்ள ஆண்பிள்ளை ஒருவனுமில்லை' என்று சொல்லுகிருய். குற்றமற்றவனே! பூபதியே! ஒருவன் இருக்கிருனென்னும் இவ்விஷயத்தில் நீ கேட்க விரும்புவாயானுல் உன்னிலும் மிக்க துயரப்பட்டவனுயிருந்த ஓர் அரசனை உனக்குச் சொல்லுகிறேன்' என்முர். பிறகு, அரசா, 'இந்த அவஸ்தையையடைந்த ராஜனைப்பற்றிக் கேட்கவிரும்புகிறேன். பகவானுன நீர் சொல்ல வேண்டும்' என்று அவரைக் கேட்டனர். ப்ருஹதஸ்வர், 'ஓ! அரசனே! சொலதவருதவனே! பருதிவீபதியே! உன்னைவிட மிக்க துயரமடைந்திருந்த அரசனைபபற்றி ஸகோதரர்களுடன் ஸாவதானமாகக் கேட்பாயாக. நிஷததேசத்தில் வீரஸேனன் என்ற பெயர்பெற்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்குத் தர்மம் அர்த்தம் இவைகளில் ஸமர்த்தனுன நளனென்ற பெயருள்ளபுத்திரன் ஒருவன் இருந்தான். அந்த அரசன் புஷ்கரனென்ற அரசனுல் கபடமாக ஜயிக்கப்பட்டானென்று நமக்குக் கேள்வி. அவன் மிக்க துக்கத்தால் பீடிக்கப்பட்டவனுகி மனைவியுடன் வனவாஸத்தைச் செய்தான். ஓ! வேந்தனே! காட்டில் வஸிக்கின்ற அவனுக்கு ஒருபொழுதும் வேலைக்காரர்களும் ரதமும ஸஹோதரனும பந்துக்களும் இருந்தார்களென்று கேட்கப்படவில்லை. நீயோ வீரர்களும் தேவர்களுக்கொப்பானவர்களுமான ஸகோதரர்களாலும் பிரமமாவுக்கொப்பான சிறந்த பிராம்மணர்களாலும் சூழப்பட்டிருக்கிருய். ஆதலால், நீ துயரப்படலாகாது' என்முர். யுதிஷ்டிரர், 'ஓ! பேசுகிறவர்களுள் சிறந்தவரே! சிறந்த மஹாத்மாவான நளனது சரித்திரத்தை விரிவாக யான (கேட்க) விரும்புகிறேன். அதனை எனக்குச் சொல்லக்கடவீர்' என்முர்.

---

## ஐம்பதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

(தமயந்தியிடம் காதல்கொண்ட நளன் சோலையில் அன்னமொன்றைப் பிடித்ததும், அது பிரதியுபகாரம்செய்வதாகச்சொல்லித் தன்னைவிடுவித்துக்கொண்டு தமயந்தியிடம் போய் நளனுடைய சிறப்பைச் சொல்லி அவனிடம் அவளுக்கு விருப்பத்தை உண்டாக்கியதும்.)

பிருஹதச்வர் சொல்லலானார். 'வீரஸேனன்புத்திரனும் பலமுள்ளவனும் விரும்பப்பட்ட குணங்களமைந்தவனும் ரூபமுள்ளவனும் அச்வவித்தையையறிந்தவனும் யாகம் செய்கிறவனும் தானம் செய்கிறவனும் திறமைவாய்ந்தவனும் எப்பொழுதும் நல்லொழுக்கத்தை முதன்மையாகக் கொண்டவனுமான நளனென்னும் ஓர் அரசன் இருந்தான். நிஷததேசத்தில் பிராம்மணர்களுக்கு அனுகூலமானவனும் வேதமறிந்தவனும் சூரனும் சூதாட்டத்தில் பிரியமுள்ளவனும் உண்மைபேசுகிறவனும் பூஜிக்கத்தக்கவனும் [1] பெருஞ்சேனைக்குத் தலைவனும் உத்தம ஸ்திரீகளால் விரும்பப்பட்டவனும் உதாரகுணமுள்ளவனும் புலன்களை அடக்கினவனும் பிரஜைகளைக் காப்பாற்றுகிறவனும் வில்லாளிகளுள் சிறந்தவனுமான (அந்த) அரசன் தேவராஜன்போலவும் ஒளியால் எல்லாவற்றுக்கும் மிகமேலேயிருக்கிற சூரியன்போலவும் தானே நேரில் வந்த மனுப்போலவும் எல்லா அரசர்களுக்கும் மேலானவனாக இருந்தான். அப்படியே, விதர்ப்பதேசத்தில் பயங்கரமான பராக்ரமமுள்ளவனும் சூரனும் எல்லாக் குணங்களுமமைந்தவனும் பிள்ளையில்லாதவனும் பிள்ளையில்விருப்பமுள்ளவனுமான அந்தபீமன் (என்னும் ஓர் அரசன்) இருந்தான். அவன் புத்திரனை அடையும்விஷயத்தில் சித்தத்தை அடக்கி மேலான முயற்சியைச்செய்தான். பாரத! தமனரென்னும் ப்ரம்மரிஷி அவனை அடைந்தார். ஓ! ராஜேந்திர! தர்மமறிந்த அந்தப்பீமன் மனைவியுடன், பிள்ளையைவிரும்பிக்கொண்டு, நல்ல காந்தியுள்ள அவரை உபசரணையால் சந்தோஷப்படுத்தினான். மிக்க கீர்த்தியுள்ள தமனர் பிரீதியடைந்தவராகி மனைவியுடனிருக்கும் அவனுக்குக் கன்யாரத்னமான தமயந்தியையும், எல்லாக் குணங்களுடனுங்கூடினவர்களும்

---

1 'அக்ஷௌஹிணீபதி:' என்பது மூலம். அக்ஷௌஹிணியின் விவரணத்தை ஆதிபர்வ 31-ம் பக்கத்தில் காண்க.

பயங்கரமான பராக்கிரமமுள்ளவர்களும் பயங்கரமானவர்களும் உதாரர்களுமான தமன், தாந்தன், நல்லகாந்தியுள்ள தமனன் என்னும் மூன்று குமாரர்களையும் வரமாகக் கொடுத்தார். அழகிய இடையுள்ள தமயந்தியோ ரூபத்தாலும், ஒளியாலும், சரீரத்தாலும், அழகினாலும், ஸௌபாக்கியத்தாலும் உலகங்களில் புகழை அடைந்தாள். பிறகு, பருவம் வந்தவுடன், அலங்கரிக்கப்பட்ட நூற்றுக்கணக்கான வேலைக்காரிகளும் தோழிகளும் இந்திராணியைச் சூழ்வதுபோல அவளை அப்பொழுது நாற்புறத்திலும் சூழ்ந்து கொண்டிருந்தனர். எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்ட பீமன்புத்திரியானவள் அங்கே தோழிகளின் நடுவில் குற்றமற்ற அங்கமுள்ளவளாகி மாரிகாலமேகத்தின் மேலிருக்கும் மின்னற்கொடிபோலவும் மிக்க அழகுவாய்ந்தவளும் நீண்டகண்களுள்ளவளுமான லக்ஷ்மிபோலவும் விளங்கினாள். அழகுள்ளவளும் சிறுமியும் தேவர்களுடைய மனத்தையும் கலக்கக்கூடியவளுமான அவ்வித ரூபமுள்ளவள் தேவர்களுள்ளும் யக்ஷர்களுள்ளும் மற்ற மனிதர்களுள்ளும் ஓரிடத்திலும் முன்பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. நரஶ்ரேஷ்டனான நளன் தானும் ரூபத்தால் சரீரமுள்ள மன்மதன் போன்றவனும் பூமியில் ரூபத்தால் ஒப்பற்றவனுமாக இருந்தான்.

(உலக விருத்தாந்தந் தெரிவிப்பவர்) அந்தத் தமயந்தியினிடம் குதூஹலத்துடன் நளனைப் புகழ்ந்தார்கள்; நளனிடமும் தமயந்தியை அடிக்கடி புகழ்ந்தார்கள். ஓ! கௌந்தேய! ஒருவர் மற்றொருவருடைய குணங்களை எப்பொழுதும் கேட்கின்ற அவ்விருவருக்கும் (ஒருவரை ஒருவர்) பாராமலே இச்சையானது உண்டாயிற்று. மனத்திலுள்ள அந்தக் காமம் மிக வளர்ந்தது. அப்பொழுது, நளன் மனத்தால் காமத்தை அடக்க இயலாதவனாகி அந்தப்புரத்தினருகிலுள்ள சோலையில் ஏகாந்தமான இடத்தை அடைந்திருந்தான். பிறகு, அவன் பொன்மயமான சிறகுள்ள அன்னங்களைப் பார்த்தான்; சோலையில் விளையாடுகின்ற அவைகளுள் ஒரு பக்ஷியைப் பிடித்தான். பிறகு, (அந்தப்) பறவை, அப்பொழுது நளனை நோக்கி, 'ஓ! அரசனே! உன்னால் கொல்லப்படத் தக்கவனல்லேன். உனக்குப் பிரியத்தைச் செய்வேன். ஓ! நைஷத! குற்றமற்றவனே! மனிதர்களுள் புலிபோன்றவனே! தமயந்தியினிடம், அவள் உன்னைத்தவிர வேறொரு புருஷனை ஒருபொழுதும் எண்ணாதபடி உன்னைப்பற்றிச் சொல்லுவேன்; (அவளை) உனக்கே

மனைவியாகும்படியும் செய்வேன்; அப்படிப்பட்ட நீ எனக்கு விடை கொடு' என்ற சொல்லைச் சொல்லிற்று. இவ்விதம் சொல்லைக் கேட்ட அரசன், பிறகு, அன்னத்தை விட்டுவிட்டான். பிறகு, அந்த அன்னங்கள் உயரக்கிளம்பி விதர்ப்பதேசத்தை அடைந்தன. அப்போது, விதர்ப்ப நகரியையடைந்து அந்தப் பக்ஷிகள் தமயந்தியின் அருகில் இறங்கின. பிறகு, அந்தப்பக்ஷிகளை அவள் பார்த்தாள். அவள் ஆச்சரியமான ரூபமுள்ள அன்னப்பறவைகளைக் கண்டு சந்தோஷமுள்ளவளாயும் தோழியர் கூட்டங்களால் சூழப்பட்டவளாயும் விரைபவளாயும் அவைகளைப் பிடிப்பதற்குத் தொடங்கினாள். பிறகு, அன்னங்கள் ஸ்திரீகளுக்குரிய உத்யானவனத்தில் நான்கு பக்கத்திலும் ஓடின. அப்பொழுது கன்னிகைகள் தனித்தனி அந்த அன்னங்களைப் பின்தொடர்ந்தார்கள். தமயந்தி பின்தொடர்ந்த அன்னமானது, மனிதவாக்கை அடைந்துகொண்டு, பிறகு, அவளைப் பார்த்து, 'ஓ! தமயந்தி! நிஷததேசத்தில் நளனென்னும் அரசன் ரூபத்தில் அச்வினிதேவர்களுக்கொப்பானவன். அவனுக்கொப்பான மனிதர்களில்லை. தாமே ரூபத்தால் உருவங்கொண்ட மன்மதன்போலிருக்கிறான். மிகச்சிறந்தவளே! அழகிய இடையுள்ளவளே! நீ அவனுக்கு மனைவியானால் உன் பிறப்பும் இந்த அழகும் பயனுள்ளனவாகும். தேவர்களையும் கந்தர்வர்களையும் மனிதர்களையும் உரகர்களையும் ராக்ஷஸர்களையும் நாங்கள் பார்த்திருக்கிறோம். எங்களால் அந்த நளன் போன்றவன் முன் பார்க்கப்பட்டதில்லை. நீயும் பெண்களுள் சிறந்தவள். நளனும் மனிதர்களுள் சிறந்தவன். சிறந்தவளுக்குச் சிறந்தவனுடன் சேர்க்கையானது குணமுள்ளதாகும்' என்று சொல்லிற்று. ஓ! மன்னவரே! அவ்விடத்தில் அன்னத்தால் இவ்விதம் சொல்லப்பட்ட தமயந்தியானவள், 'நீ இவ்விதம் நளனிடமும் சொல்வாயாக' என்று அன்னத்தை நோக்கிச் சொன்னாள். ஓ! நராதிபனே! பக்ஷியானது, 'அப்படியே' என்று விதர்ப்பன் புத்திரியிடம் சொல்லி நிடதநாட்டைத் திரும்பவும் அடைந்து நளனிடத்தில் எல்லாவற்றையும் தெரிவித்தது.

---

## ஐம்பத்தோராவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர் இந்திரன் முதலியோரிடம் தமயந்தியின் சிறப்பையும் அவள் ஸ்வயம்வரத்திலிருப்பதையும் சொல்லியதும், ஸ்வயம்வரத்துக்குவரும் இந்திரன் முதலியோர் வழியில் நளனைக்கண்டு தமயந்தியினிடம் தங்களுக்காகத் தூது செல்ல வேண்டினதும்.)

ஓ! பாரத! அந்தத் தமயந்தியோ, அன்னத்தின் அந்தச் சொல்லைக்கேட்டு அதுமுதல் நளனையே எண்ணிக்கொண்டு தன் நிலையற்றவளாயினள். அப்பொழுது, தமயந்தியானவள் அதுமுதல் கவலைகொண்டவளும் எளிமையுற்றவளும் நிறங்குன்றிய முகமுள்ளவளும் இளைத்தவளும் மிக்க பெருமூச்செறிகின்றவளுமாயினள். பிறகு, மன்மதனால் ஆக்ரமிக்கப்பெற்ற அறிவுள்ளவளும் நொடிப்பொழுதில் வெளுத்த நிறமுள்ளவளும் கவலைப்படுகிறவளும் உயரப் பார்வையுள்ளவளும் பித்துபோன்ற தோற்றமுள்ளவளும் ஆயினள்; படுக்கை, ஆஸனம், ஸுகானுபவம் இவைகளில் ஒருபோதும் ஆசையை அடையவில்லை; அடிக்கடி, 'ஆ! ஆ!' என்று அழுகின்றவளாகி இரவிலும் பகலிலும் உறங்கவில்லை. அந்தத் தோழிமார்கள் அவ்வித ரூபமுள்ள அவளைக் குறிப்புக்களால் தன் நிலையில்லாதவளாக அறிந்தார்கள். ஓ! நரேசுவர! பிறகு, தமயந்தியின் தோழிகள் அந்தத் தமயந்தி தன்னிலையிலில்லாமலிருப்பதை விதர்ப்ப ராஜனுக்குத் தெரிவித்தார்கள். அரசனான பீமன், தமயந்தியின் தோழிக்கூட்டத்தினிடமிருந்து அதனைக் கேட்டுத் தன் பெண்ணைப் பற்றிய மிக்க பெரிதான அந்தக் காரியத்தைப்பற்றி, 'எதற்காக என் பெண் இப்பொழுது நல்ல நிலைமையிலில்லாதவள்போலக் காணப்படுகிறாள்?' என்று ஆலோசித்தான். அந்த அரசன் தன் பெண் யௌவனம் அடைந்ததைக் கண்டு அவளது விஷயத்தில் ஸ்வயம்வரம் செய்யவேண்டுமென்று தானாக எண்ணினான். ஓ! பிரபுவே! அந்த அரசன், 'ஓ! வீரர்களே! இந்த ஸ்வயம்வரம் (உங்களால்) பார்க்கப்படட்டும்' என்று (எல்லா) அரசர்களையும் வரவழைத்தான். பூமியை ஆளுகின்ற வீரர்களான அரசர்கள் யாவரும் தமயந்தியின் ஸ்வயம்வரத்தைக் கேட்டு, பிறகு, பீமன் கட்டளையினால், யானை, குதிரை, தேர் இவைகளின் நாதத்தால் பூமியைப்

ஒலிக்கச் செய்துகொண்டு, விசித்திரமான மாலைகளாலும் ஆபரணங்களாலும் நன்கு அலங்கரிக்கப்பெற்றவையும் பார்க்கத்தக்கவையுமான சேனைகளுடன் வந்தார்கள். மிக்க தோள்வலியமைந்த பீமன் மஹாத்மாக்களான அந்த அரசர்களுக்குத் தகுதிப்படி பூஜை செய்தான். அவர்கள் உபசரிக்கப்பட்டவர்களாகி அவ்விடத்தில் வஸித்தார்கள்.

இதே காலத்தில், (எப்போதும் உலகங்களில்) ஸஞ்சரிக்கின்றவர்களும் பேரறிவாளர்களும் பெரிய விரதமுள்ளவர்களும் மஹாத்மாக்களுமான நாரதர் பர்வதரென்கிற சிறந்த இரண்டு தேவரிஷிகள் இவ்வுலகத்திலிருந்து தேவலோகத்தை அடைந்து நன்கு பூஜிக்கப்பெற்றவர்களாகித் தேவராஜனுடைய மாளிகையில் பிரவேசித்தார்கள். பிறகு, பெருமைவாய்ந்த இந்திரன் அவர்களைப் பூஜித்து எல்லாவற்றிலும் குறைவற்ற க்ஷேமத்தையும் நோயின்மையையும் அவர்களிடம் கேட்டான். நாரதர் சொல்லலானார்: 'ஓ! தேவ! ஈச்வர! விபுவே! எங்களுக்கு எல்லாவற்றிலும் க்ஷேமமானது அடையப்பட்டிருக்கிறது. ஓ! மகவானே! எல்லா உலகங்களிலும் அரசர்கள் க்ஷேமமாயிருக்கிறார்கள்' என்றனர். பலாஸுரனையும் வ்ருத்திரனையுங் கொன்ற இந்திரன், நாரதர் சொல்லியதைக் கேட்டு, 'தர்மந் தெரிந்தவர்களும் உயிரைவிட்டும் சண்டை செய்கின்றவர்களும் (சண்டைக்) காலத்தில் புறங்காட்டாதவர்களும் சஸ்திரத்தால் மரணத்தையடைகிறவர்களுமான அரசர்களுக்கு அக்ஷயமான இந்த லோகமானது, எனக்குக் கொடுப்பது போலவே, இஷ்டத்தைக் கொடுக்கின்றது. அந்தச் சூரர்களான க்ஷத்திரியர்கள் எங்கே? எனக்கு விருப்பமுள்ளவர்களான அதிதிகளாக வருகின்ற அந்த அரசர்களை நான் பார்க்கவில்லையே?' என்று கேட்டான். இவ்விதம் இந்திரனால் வினவப்பட்ட நாரதர், 'ஓ! மகவானே! அரசர்கள் காணப்படாமைக்குக் காரணத்தை என்னிடமிருந்து கேள். தமயந்தியென்று பெயர்பெற்ற விதர்ப்பராஜன்மகள் ரூபத்தால் பூமியிலுள்ள எல்லா ஸ்திரீகளையும் அதிக்கிரமித்தவளாயிருக்கிறாள். ஓ! சக்ர! அவளுடைய ஸ்வயம்வரம் சமீபத்தில் வரப்போகிறது. அவ்விடத்தில் அரசர்களும் ராஜபுத்திரர்களுமாகிய எல்லாரும் போகிறார்கள். ஓ! பலனையும் வ்ருத்திரனையும் கொன்றவனே! உலகத்துக்குச் சிறந்த ரத்னமான அவளை வேந்தர்கள் மிக்க விருப்பத்துடன் எதிர்பார்க்கிறார்கள்' என்றார். இது சொல்லப்படும்போது, அக்னியுடன் கூடின அமரச்ரேஷ்டர்

களான லோகபாலர்கள் தேவராஜனின் சமீபத்தில் வந்தார்கள். பிறகு, அவர்கள் யாவரும் நாரதருடைய சிறந்த வார்த்தைகளைக் கேட்டார்கள். கேட்டதுமே, மகிழ்ச்சியுற்றவர்களாகி, 'ஆனால், நாமும் போவோம' என்று சொன்னார்கள. ஓ! மஹாராஜனே! பிறகு, யாவரும் பரிவாரங்களுடனும் வாகனஙகளுடனும் அநத எலலா அரசர்களும் கூடியிருக்கும் விதர்ப்பதேசததை அடைந்தாரகள. ஓ! கௌந்தேய! அரசனான நளனும், அரசர்கள் கூடுவதைக் கேட்டு, தமயந்தியினிடம ஆசையுள்ளவனாகி, மனததில ஊககததுடன் வந்தனன். பிறகு, தேவர்கள் பூதலததிலிருக்கின்றவனும அழகு நிரம்பியிருததலால் சரீரததுடன நேரில் நிற்கும் மனமதன் போன்ற வனுமான நளனை வழியில பார்ததார்கள். அந்த லோகபாலர்கள, விளங்கும சூரியன்போனற அவனைக்கண்டு, ரூபததின ஸம்பததால் ஆச்சரியமகொணடவர்களும் தமயந்தியை அடையும் எணணமறற வர்களுமாகி நின்றார்கள். மன்னவ! பிறகு, தேவர்கள் விமானங்களை ஆகாயத்தில் நிறுததி ஆகாயததிலிருநது இறஙகி, நளனை நோககி, 'ஓ! ஓ! நிஷதராஜேந்திர! நளனே! மெய பேசும விரதமுள்ள நீ எஙகளுக்கு உதவி செய்யக்கடவாய். நரோததம! தூதனாகக் கடவாய்' எனறு சொன்னாரகள்.

---

## ஐம்பத்திரண்டாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(நளன் இந்திரன் முதலியவருடைய கட்டளையைத் தமயந்தியிடம் தெரிவித்தது.)

ஓ! பாரத! நளன், 'செய்கின்றேன்' என்று அவர்களுக்கு உறுதிகூறி, பிறகு கைகூப்பி வணங்கி, 'நீங்கள் யாவர்? நான் யாருக்குத தூதுசெல்ல விரும்பப்பட்டேன்? அங்கு நான் என்னசெய்ய வேண்டும்? உண்மையாகச் சொல்லுங்கள்' என்று அவர்களை வினவினன். நளன் இவ்விதம் சொல்லியபோது, இந்திரன், 'எங்களைத் தமயந்தியை உத்தேசித்து வந்த தேவர்களாக அறிந்துகொள். ஓ! அரசனே! நான் இந்திரன்; இவன் அக்கினி; அப்படியே இவன் வருணன்; இவனும் மனிதர்களின் சரீரத்தை நாசம் செய்கின்ற யமன். நீ, நாங்கள் வந்திருப்பதை, 'இந்திரன் முதலிய லோகபாலர்கள் பார்க்க விருப்பமுள்ளவர்களாகி வருகிறார்கள். தேவர்க

யான இந்திரனும அக்னியும் வருணனும யமனும் உன்னை அடைய விரும்புகின்றார்கள். அவர்களுள் ஒருவனைக் கணவனாக வரிப்பாயாக' என்று தமயந்திக்குத் தெரிவிக்கக்கடவாய்' என்று சொன்னான்.

இந்திரனால இவ்விதம சொல்லப்பட்ட அந்த நளன் கைகூப்பிக் கொண்டு, 'ஒரே பிரயோஜனத்தைக் குறித்து வந்த என்னை நீங்கள் அனுப்புவது தகாது ஓ! அமரேசுவர! ஒரு ஸ்திரீயினிடம் ஆசையுள்ள மனிதன (அவளைப்பார்த்துப) பிறனுக்காக இவ்விதம் சொல்ல எப்படி [1] உடன்படுவான்? அதனை ஆலோசனைசெய்' என்று சொன்னான். நளனால இவ்விதம் சொல்லப்பட்ட இந்திரன், திரும பவும், 'ஓ! நளனே! 'செய்வேன' என்று முந்தி எங்களிடத்தில் உறுதிகூறி, எதனால் நீ செய்யாமல் போவாய்? ஓ! நைஷத! போ. தாமதம வேண்டாம. அப்படிப்பட்ட நீ நாங்கள வந்திருப்பதைத் தமயந்திக்குத் தெரிவிப்பாய். நீ தேவர்களின் உத்தரவைச் செய்வா யானால் மேன்மையை அடைவாய' என்றான. அந்தத் தேவர்களால் இவ்விதம சொல்லப்பட்ட அந்த நைஷதன, திரும்பவும், நன்கு காவல செய்யப்பட்ட மாளிகைகளுள் நுழைய எப்படித் துணிவேன?' என்றான. இந்திரன 'நுழைவாய்' என்று அவனுக்கு மறுபடியும் சொல்லினன. அவன, 'அப்படியே ஆகுக' என்று சொல்லித் தமயந்தியின் வீட்டை அடைந்தான். அவ்விடத்தில் தோழியரின் கூட்டங்களால் சூழப்பெற்றவளும் சரீரத்தாலும சோபையாலும் மிகப் பிரகாசிக்கின்றவளும் சிறந்த நிறமுள்ளவளும் மிக்க ஸுகுமார மான அங்கமுள்ளவளும சிறுத்த இடையுள்ளவளும் அழகிய கண் ணுள்ளவளும தனகாந்தியால் சந்திரனையும் பழிக்கிறவள்போன்ற வளுமான அந்தத் தமயந்தியைப் பார்த்தான். அழகிய சிரிப்புள்ள வளான அவளைப் பார்த்தவுடனே, அவனுக்குக் காமம வளர்ந்தது. (தேவர்களின கட்டளையை) உண்மையாக நிறைவேற்ற எண்ணித் தன் விருப்பத்தை அடக்கிக்கொண்டான. பிறகு, அந்தச் சிறந்த மங்கையர்கள் நளனைப்பார்த்துப் பரபரப்புள்ளவர்களும் அவனது காந்தியால் மேற்கொள்ளப்பட்டவர்களுமாகி ஆஸனங்களிலிருந்து எழுந்திருந்தார்கள். ஆச்சரியத்துடன் கூடியவர்களான அவர்கள், நன்கு பிரீதியுள்ளவர்களாகி, நளனைப் புகழ்ந்தார்கள். இவனை நோக்கிப் பேசவுமில்லை. 'இந்த மஹாத்மாவின்ரூபம் ஆச்சரியமாயிருக்கிறது. காந்தி ஆச்சரியமா யிருக்கிறது. தைரியமும் ஆச்சரியமா யிருக்கிறது. இவன் யார்? தேவனுகவோ யக்ஷனுகவோ அல்லது கந்தர்வனுகவோ

[1] 'உத்ஸஹதே' என்று பாடம் கொள்ளப்பட்டது.

இருக்கவேண்டும்' என்று மனத்தாலேயே பூஜித்தார்கள். அவனுடைய தேஜஸினால் மேற்கொள்ளப்பட்ட அந்தச் சிறந்த ஸ்திரீகள் லஜ்ஜையுள்ளவர்களாகி அவனை எதுவும் சொல்லுதற்குச் சக்தியற்றிருந்தார்கள். பிறகு, சிரிப்பவளைப்போலிருப்பவளும் புன்னகையுடன் முந்திப்பேசுகிறவளும் ஆச்சர்யமடைந்தவளுமான தமயந்தி, வீரனான நளனைப்பார்த்துச் சொல்லலானாள்: 'ஓ! குற்றமற்ற எல்லா அங்கங்களுமுள்ளவனே! எனக்கு விருப்பத்தை விருத்தி செய்பவனே! வீர! குற்றமற்றவனே! நீ யார்? தேவனைப்போல வந்திருக்கின்றாய். (உன்னை) அறிந்துகொள்ள விரும்புகிறேன். இங்கு எப்படி வந்தாய்? (காவலர்களால்) எவ்விதம் காணப்படாதவனாயிருக்கிறாய்? என் வீடு நன்கு காப்பாற்றப்பட்டிருக்கின்றதன்றோ? அரசரும் கடுமையான ஆஜ்ஞையுள்ளவர்' என்றாள். தமயந்தியால் இவ்விதம் சொல்லப்பட்ட நளன் அவளைப் பார்த்து, 'ஓ! கல்யாணி! என்னை நளனென்றும், தேவதூதனாக இங்கு வந்தவனென்றும் அறிந்துகொள். தேவர்களான இந்திரனும் அக்னியும் வருணனும் யமனும் உன்னை அடையவிரும்புகிறார்கள். ஓ! அழகியே! அவர்களுள் ஒரு தேவனைப் பதியாக வரிப்பாயாக. நான் அவர்களின் மஹிமையாலேயே பார்க்கப்படாதவனாகிப் பிரவேசித்தேன். பிரவேசிக்கின்ற என்னை ஒருவனும் பார்க்கவும் இல்லை; தடுக்கவும் இல்லை. ஓ! சுபமானவளே! நான் இதற்காகத் தேவஶ்ரேஷ்டர்களால் அனுப்பப்பட்டேன். ஓ! நல்ல காந்தியுள்ளவளே! இதைக் கேட்டு விருப்பப்படி புத்தியைச் செலுத்துவாயாக' என்று மறுமொழி சொன்னான்.

---

## ஐம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(நளனும் தமயந்தியும் பேசியதும், நளன் தமயந்தியின் சொல்லை இந்திராதியர்க்குத் தெரிவித்ததும்.)

அவள், தேவர்களுக்கு நமஸ்கரித்து (ச் சிரித்துக்கொண்டு,) நளனை நோக்கி, 'அரசனே! (என்னை) உள்ளபடி நம்பு. உனக்கு நான் என்னசெய்யவேண்டும்? நானும் மற்றும் என்னுடைய பொருள் முழுமையும் உன்னுடையவையே. ஓ! ஈச்வர! உறுதியாக நம்பு.

ஓ! அரசனே! ஹம்ஸங்களின்சொல் என்னை எரிக்கிறது. ஓ! வீர! உன்னை வருவித்ததற்காகவன்றோ அரசர்கள் என்னால் கூட்டப்பட்டார்கள்? ஓ! பெருமையையளிப்பவனே! நீ (உன்னிடம்) அன்புவைத்த என்னை மறுப்பாயானால், உன்னிமித்தம் விஷத்தையோ அக்கினியையோ ஜலத்தையோ கயிற்றையோ அடைவேன்' என்றாள்.

தமயந்தியால் இவ்விதம் சொல்லப்பட்ட நளன், அவளை நோக்கி, 'லோகபாலர்கள் இருக்கும்போது மனிதனை ஏன் விரும்புகிறாய்? நான், மஹாத்மாக்களும் உலகத்தைப் படைக்கின்றவர்களும் ஈச்வரர்களுமான அவர்களுடைய பாத தூளிக்கும் ஒப்பாக மாட்டேன். அவர்களிடத்தில் உன்னுடைய மனம் செல்வதாகுக. தேவர்களுக்கு அப்ரியத்தைச் செய்கின்ற மனிதன் மரணத்தை அடைகின்றானன்றோ? குற்றமற்ற அங்கமுள்ளவளே! என்னைக் காப்பாற்று. தேவச்ரேஷ்டர்களை வரிப்பாயாக. அழுக்கற்ற ஆடைகளையும் தேவலோகத்திலுள்ள சித்திரமான மாலைகளையும் திவ்யமான பூஷணங்களையும் தேவர்களை அடைந்து அனுபவிப்பாயாக. எவன் இந்தப் பூமி முழுமையையும் சுருக்கித் திரும்பவும் விழுங்குகின்றானோ தேவர்களுக்கு ஈசனான அந்த அக்னியை எவள் கணவனாக வரிக்கமாட்டாள்? எவனுடைய தண்டபயத்தால் எல்லாப் பிராணிக்கூட்டங்களும் ஒன்றுசேர்ந்து தர்மத்தையே அனுஸரிக்கின்றனவோ அந்த யமனை எவள் பதியாக வரிக்கமாட்டாள்? தர்மத்தில் மனமுள்ளவனும் மஹாத்மாவும் தைத்யரையும் தானவர்களையும் கொல்லுகின்றவனும் எல்லாத் தேவர்களுக்கும் மேலானவனுமான அந்த இந்திரனை எவள் பதியாக வரிக்கமாட்டாள்? எண்ணுவாயானால், லோகபாலர்களுள் வருணனைச் சங்கையற்ற மனத்தினால் (பர்த்தாவாகச்) செய்துகொள். இந்த நண்பன் வார்த்தையைக் கேள்' என்று மறுமொழி சொன்னான்.

நைஷதனால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தத் தமயந்தியானவள், பிறகு சோகத்தாலுண்டான ஜலத்தால் நன்கு நனைக்கப்பட்ட கண்களுடன், 'ஓ! ப்ருதிவீபதியே! நான் எல்லாத் தேவர்களுக்கும் நமஸ்கரித்து உன்னையே பர்த்தாவாக வரிக்கிறேன். இதனை ஸத்யமாக உனக்குச் சொல்லுகிறேன்' என்றசொல்லைச் சொன்னாள். பிறகு, நடுங்குகின்றவளும் கைகூப்பினவளுமான அவளை, நளன், 'ஓ! கல்யாணி! நான் தூதனாக வந்து என் பிரயோஜனத்தை

[1] விரும்புவதற்குத் துணியவில்லை. நான் விசேஷமாகத தேவர்களுக்கு உறுதி கூறி (அந்தப்) பிறர்விஷயததில முயற்சிசெய்த பின்னர் [2] எவ்விதம் என் பிரயோஜனத்தை இங்கு விரும்புவேன்? (நான் சொல்லும்) இது தர்மமானால் எனக்கு அதிலிருந்து என் பிரயோஜனமும் கைகூடும். இவ்விதம் என் பிரயோஜனததைச் செய்வேன். சுபமானவளே! நீயும் அவ்விதம செய்' என்றான். பிறகு, சுத்தமான சிரிப்புள்ள தமயந்தி, மறுமொழி சொல்லுபவளாகி, கண்ணீரால் தடைப்பட்ட சொலலை மெதுவாக நளராஜனை நோக்கிச் சொல்லலானாள்: 'ஓ! நரேஸ்வர! அரசனே! எவ்விதத்திலும் உனக்குத் தோஷம்வரக்கூடாததும் அபாயமற்றதுமான உபாயமானது என்னால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஓ! நரஸ்ரேஷ்ட! என்னுடைய ஸவயம்வரம் நடக்குமிடததுக்கு நீயும் இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும சேர்ந்து வாருங்கள். மனிதப் புலியே! மனிதர்க்கதிபனே! பிறகு, நான் லோகபாலர்களின் முன்னிலையில் உன்னை வரிப்பேன். இவவிதம (செய்தால்) தோஷம் வராது' என்றாள். ஓ! வேந்தனே! தமயந்தி இவ்விதம் சொல்லக் கேட்ட அரசனான நளன தேவர்கள் கூடியிருக்குமிடத்துக்குத திரும்பவும வந்தனன். மஹேஸ்வரர்களான லோகபாலர்கள், அவ்விதம் வருகின்ற அவனைப் பார்த்தார்கள். பிறகு, அவனைப் பார்த்து, 'ஓ! அரசனே! சுத்தமான சிரிப்புள்ள தமயந்தி உன்னால் பார்க்கப்பட்டாளா? பூமிபதியே! குற்றமற்றவனே! எங்களெல்லாரையும்பற்றி என்ன சொன்னாள்? எஙகளுக்குச் சொல்' என்று அந்த எல்லாவிருத்தாந்தத்தையும் அவனைககேட்டார்கள்.

நளன் சொல்லலானான். 'நான் உங்களால் கட்டளையிடப்பட்டு, மிக விசாலமான கட்டுக்களுள்ளதும் கோல்பிடித்த கிழவர்களால் சூழப்பட்டதுமான தமயந்தியின் மாளிகையில் நுழைந்தேன். அவ்விடத்தில் பிரவேசிக்கின்ற என்னை அநத ராஜகுமாரியைத் தவிர ஒரு மனிதனும் உங்களுடைய சக்தியினாலேயே பார்க்கவில்லை. அவளுடைய தோழிகளும் என்னால் பார்க்கப்பட்டார்கள். அவர்களாலும் நான் பார்க்கப்பட்டேன். ஓ! தேவர்களுக்குத் தலைவர்களே! யாவரும் என்னைப்பார்த்து ஆச்சரியமுள்ளவர்களுமானார்கள். ஓ! ஸுரோத்தமர்களே! நீங்கள் என்னால் புகழப்படும்போதும், அழகிய முகமுள்ள அவள் வேறு எண்ணமற்

1 'ரப்ஸிதும்' என்னும் பாடம கொள்ளப்பட்டது.

2 இரட்டிததலால், 'கதமஹி' என்பது விடப்பட்டது.

றவளாகி என்னையே வரிக்கிறாள். சிறுமியான அவள், 'ஓ! மனிதரிற் சிறந்தவனே! என் ஸ்வயம்வரம் நடக்குமிடத்துக்கு உன்னுடன் கூடத் தேவர்கள் வரக்கடவர். ஓ! நிடதநாடனே! மிக்க தோள்வன்மையுள்ளவனே! அவர்களுடைய முன்னிலையில் நான் உன்னை வரிப்பேன். இவ்விதமானால் உனக்குக் குற்றம் வராது' என்றும் என்னிடம் சொன்னாள். ஓ! தேவர்களே! என்னால் இவ்வளவு (செய்தி) தான் நடந்தபடி கொண்டுவரப்பட்டது. [1] மிச்ச விஷயத்தில் தேவஸ்ரேஷ்டர்களான நீங்களே பிரமாணம்' என்றான்.

---

## ஐம்பத்துநான்காவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ஸ்வயம்வர மண்டபத்தில் இந்திரன் முதலியோர் நளனுருக்கொண்டு அவன் பக்கத்திலேயே இருந்ததும், தமயந்தியின் துணைத் துக்கு மகிழ்ந்த இந்திராதியர் அருளால் அவள் நளனுக்கே மாலை சூட்டியதும்)

பிறகு, சுபமானகாலமும் புண்ணியமான திதியும் அப்படியே க்ஷணமும் வந்தபோது, பீமராஜன் ஸ்வயம்வரத்தில் அரசர்களை அழைத்தான். எல்லா அரசர்களும் அதனைக்கேட்டுக் காமத்தால் பீடிக்கப்பட்டவர்களாகித் தமயந்தியை அடையவிருப்பங்கொண்டு விரைவாக வந்தார்கள். அந்த அரசர்கள் பொன்னாலாகிய தூண்களால் அழகியதும் தலைவாயிலால் விளங்கப்பெற்றதுமான மண்டபத்தில் பெரிய சிங்கங்கள் மலையில் பிரவேசிப்பதுபோலப் பிரவேசித்தார்கள். நன்கு சுத்தம்பண்ணப்பட்ட ரத்னமயமான குண்டலங்கள் அணிந்தவர்களும் வாசனையுள்ள மாலைதரித்தவர்களுமான எல்லா அரசர்களும் அங்குப் பலவித ஆஸனங்களில் உட்கார்ந்தார்கள். நராதிப! நாகர்களால் நிறைந்த போகவதி என்னும் பட்டணம்போலவும் புலிகளால் நிறைந்த மலையின் குகைபோலவும் புருஷஸ்ரேஷ்டர்களால் நன்குநிறைந்த அந்தராஜசபையில் [2] புண்ணியஸ்லோகனான நளன் தேவர்களுடன் பிரவேசித்தான். அங்குப் பரிகாயுதம்போன்ற பருத்த கைகள், வடிவத்திலும் நிறத்திலும்

---

1 மிச்ச விஷயங்கள் உங்களைப் பொறுத்திருக்கின்றன என்பது.

2 புண்யத்தைத் தரும் சரித்திரத்தை அல்லது புகழை உடையவன். நளனும் யுதிஷ்டிரரும் கிருஷ்ணரும் ஸீதையும் திரௌபதியும் புண்ய ஸ்லோகா எனப்படுவர். சப்தகல்பதருமம் பார்க்க.

மிக அழகிய ஐந்துதலையுள்ள நாகங்கள்போலக் காணப்பட்டன. அழகிய கேசத்தின முனைகளையுடையவையும் அழகியவையும் நல்ல மூக்குள்ளவையும் சுபமானவையுமான அரசர்களின் முகங்கள் ஆகாயத்தில நக்ஷத்திரங்கள் போல விளங்கின. பிறகு, அழகிய முகமுள்ள தமயந்தி, காந்தியால் அரசர்களின் கண்களையும் மனங்களையும கவருகிறவளாகி ஸபாமண்டபத்தில் பிரவேசித்தாள். பார்க்கின்ற அந்த மஹாத்மாக்களுடைய பார்வையானது அவளுடைய அங்கங்களில எங்கெங்கேவிழுந்ததோ அங்கங்கே பதிந்து விட்டது; அசையவே இல்லை. ஓ! பாரத! பிறகு, அங்கே மன்னர்களின் பேர்கள் சொல்லப்படும போது, ஒத்தவடிவமுள்ள ஐந்து ஆடவர்களைத் தமயந்தி பார்த்தாள். பிறகு, அவள வேற்றுமையில்லாத வடிவத்துடனிருக்கிற அவர்கள் யாவரையும பார்த்துச் சந்தேகத்தால் அரசனான நளனை அறியவில்லை. அழகிய அவள் அங்கு வேற்றுமையிலலாத பிராயமும் வேஷமும ரூபமும் உள்ள அவர்களுள் எவனெவனைப் பார்த்தாளோ அவனவனை நளராஜனாக எண்ணினாள். பிறகு, அந்தப்பெண் ஆலோசிக்கின்றவளாகி, 'எவவிதம தேவர்களை அறிவேன? எவ்விதம் நளராஜனை அறிவேன்?' என்று புத்தியால் ஆராய்ந்தாள. பாரத! இங்ஙனம் ஆலோசிப்பவளும் மிக்க துயரடைந்தவளுமான அந்தத் தமயந்தி முன் கேட்டிருந்த தேவர்களின் அடையாளங்களை நினைத்தாள. 'பெரியோர்களிடமிருந்து என்னால கேட்கப்பட்ட தேவர்களுடைய அடையாளங்களைப் பூமியில நிற்கின்றவர்களுள் ஒருவருக்காவது நான் காணவில்லை' என்று இப்படிப பலவாறாக எண்ணியும், அடிக்கடி ஆராய்ந்தும், தேவர்களைச் சரணமடைவதைத் தக்கதென்றெண்ணினாள். அவள் வாக்கினாலும் மனத்தாலும் தேவர்களுக்கு நமஸ்காரம செய்து கை கூப்பிக்கொண்டு நடுங்குகிறவளாகிப் பின் வருமாறு சொல்லலானாள்:

'அன்னங்களின் சொல்லைக்கேட்டு எனக்குப் பதியாயிருக்கும் விஷயத்தில் நளன வரிக்கப்பட்டானென்னும் ஸத்யத்தினால் தேவர்கள் எனக்கு அந்த நளனைக் காட்டக்கடவர். நான் மனத்தாலும் வாக்கினாலும் தவறாமலிருக்கிறேனென்னும் ஸத்யத்தினால தேவர்கள் அவனையே எனக்குக் காட்டக்கடவர். தேவர்களால் அந்த நிஷதராஜன் எனக்குப் பர்த்தாவாகச் செய்யப்பட்டானென்னும் ஸத்யத்தால் 1 தேவர்கள் அவனையே எனக்குக் காட்டக்கடவர்.

1 'மே' என்னும ஒரு சொல விடபபட்டது.

என்ருல் நளனுடைய ஆராதன விஷயததில் இந்த விரதமானது தொடங்கபபட்டதென்னும என்னுடைய ஸதயததால் தேவர்கள் அவனையே எனககுக் காட்டக்கடவர். நான் புண்யஸ்லோகனை நராதிபனை அறியும்படி மகேஸ்வரர்களான லோகபாலர்கள தம் உருவததையே விளக்கக்கடவர்' எனருள். தேவர்கள் தமயந்தியின் அந்த மனததைபுருக்கும் புலம்பலையும நளனிடததில் மேலான நிச்சயத்தையும உண்மையான அன்பையும் மனச்சுததியையும் புததியையும் பக்தியையும் நளனிடததில் ஆசையையும் கண்டு, (அவள்) சொன்னபடி அடையாளததைத தரிப்பதில் (இருந்த ரூபத்திலேயே தேவர்க ளென்பதைக் காட்டுவதாகிய) திறமையைச செய்தார்கள். அவள, எல்லாத தேவர்களையும் வேர்வையற்றவர் களும் கண்ணிமையாதவர்களும் வாடாமாலையுள்ளவர்களும் புழுதி யில்லாதவர்களும பூமியைத தொடாமல் நிற்கின்றவர்களுமாகப் பார்த்தாள். நிழலை இரண்டாவதாயுடையவனும் வாடின மாலையும் புழுதியும் வெயர்வையு முள்ளவனும் பூமியிலிருப்பவனுமான நளன் இமைக்கொட்டாலும் அறிவிககப்பட்டான். ஓ! பாரத! பாண்டவா! அந்தத தமயந்தியோ அந்தத தேவர்களையும் புண்யஸ்லோகனை நளனையும் நன்கு பார்த்து நளனைத தர்மமாக வரிததாள். நீண்ட கணனுளள அவள் மிக்க லஜ்ஜையுள்ளவளாகி அவனது முன்தானை யைப் பிடிததாள்; மிக்க அழகான மாலையை அவன் கழுததில் போட்டாள. உத்தமஸ்திரீயான அவள் அவனையே பதியாக வரித தாள். பிறகு, அரசர்களால் விரைவாக, 'ஆ! ஆ!' என்ற சப்தம் செய்யப்பட்டது. ஓ! பாரத! அங்கே அரசனை நளனைப் புகழ் கினறவர்களும ஆச்சரியமடைந்தவர்களுமான தேவர்களும் மஹ ரிஷிகளும், 'நன்று, நன்று' என்ற சொல்லைச் சொல்லினர்.

ஓ! கௌரவ்ய! வீரஸேனன் மைந்தனை அரசன், மனமகிழ்ச் சியுடன், சிறந்த இடையையுடைய தமயந்தியை நோக்கி, 'ஓ! கல்யாணி! அழகிய சிரிபபுள்ளவளே! நீ தேவர் முன்னிலையில் என்னைக் கணவனுக அடைகின்ருயாதலால், என்னை உன் வார்த்தை யில் கட்டுப்பட்டவனென்றும் பர்த்தா (=போஷிப்பவன்) என் றும் அறிந்துகொள்' என்னும் இதனையும், 'என் தேகத்தில் உயி ருள்ளவரையிலும் உன்னிடததிலேயே இருப்பேன்' என்னும் இத னையும் ஸத்தியமாக உனக்குச் சொல்லுகிறேன்' என்று இன்சொல் கூறினன். அதுபோலத் தமயந்தியும், 'அப்படியே' என்று இன சொற்களால் ஒப்புக்கொணடு கைக்கூப்பினுள். அவ்விருவர்களும்

ஒருவரிடத்து ஒருவர் பிரியமுள்ளவர்களாகி, அக்னி முதலிய தேவர்களைப்பார்த்து, அப்பொழுது அவர்களையே மனத்தால் சரணமடைந்தார்கள். தமயந்தியால் நளன் வரிக்கப்பட்டவுடன், அதிககாந்தியுள்ள எல்லாலோகபாலர்களும் மனமகிழ்ந்து நளனுக்கு எட்டுவரன்களைக் கொடுத்தார்கள். சசீபதியான இந்திரன், ப்ரீதியுள்ளவனாகி, யாகத்தில் (தன்னை) நேரில் காணபதையும மேலான நல்ல கதியையும் நளனுக்குக் கொடுததான். ஹவ்யதாசனனான அக்னி, நளன் விரும்புமிடத்தில் தனது உற்பத்தியையும தனபோன்ற ஒளியுள்ள லோகங்களையும் அவனுக்குக் கொடுததான. யமனே அன்ன [1] ரஸத்தையும் தர்மத்தில மேலான நிலைமையையும கொடுததான். வருணன், நளன் விரும்புகிறவிடத்தில ஜலங்களின் உற்பத்தியையும் சிறந்த மணம் மிகுந்த மாலைகளையும் கொடுததான். யாவரும் (தனித்தனி) இரணடு இரணடு வரன்களைக் கொடுததார்கள். அந்தத் தேவர்கள் இவ்விதம் வரன்களை இவனுக்குக் கொடுதது ஸ்வர்க்கத்தை அடைந்தார்கள். பாரத! மஹாராஜனே! இவை யாவற்றையும் நளனும் தமயந்தியும் மறற ஜனங்களும் ஸ்வப்னமபோலப் பாரத்தார்கள்.

ஓ! அரசனே! பிறகு, பீமராஜன் எல்லாப் பூபாலர்களும் சேர்ந்திருக்குமபோது மனிதர்களால செய்ய முடியாத ஸ்வயம்வரத்தைச செய்தான். ஓ! பாரத! பீமபுத்ரியான தமயந்தியும் ஐஶ்வரியமுள்ள அந்த ராஜமணடலததைப் பார்தது ஆலோசனை செய்து தர்மமாக நளனை வரிததாள. தமயநதியால நளன் வரிக்கப்பட்டு ஸ்வயம்வரம முடிந்தவுடன், எலலா அரசர்களும் வநதது போலவே போயினர். அரசர்கள் இவனுக்கும் தமயந்திக்கும் (நடந்த) விவாக (நிச்சய)ததைப பார்தது ஆச்சரியமுள்ளவர்களாகிச் சந்தோஷமடைந்து வந்ததுபோலப்போயினர். ராஜஶ்ரேஷ்டர்கள் போனவுடன், பெரிய மனமுளள பீமராஜன் மனமகிழ்ந்து தமயந்திக்கும் நளனுக்கும் விவாகததை நடததினன். மனிதஶ்ரேஷ்டனான நைஷதன் அஙகு இஷ்டப்படி வஸிததுப் பீமனால் விடையளிக்கப்பட்டவனாகித தன நகரத்தை அடைந்தான. ஓ! அரசனே! புண்ணியஶ்லோகனான நளனும ஸ்திரீ ரத்னததை அடைந்து பலாஸுரனையும் விருதரனையும கொனற இந்திரன இந்திராணியுடன் மகிழ்ந்ததுபோல அவளுடன் மகிழ்ந்திருந்தான்.

---

[1] அவன் சமைதததை என்ன அன்னமானாலும் அது சுவையுள்ளதாயிருததலை எனபது.

மிக்க சந்தோஷமடைந்த வீரனான ராஜன் சூரியன்போல விளங்குகின்றவனாகிப் பிரஜைகளைத் தர்மத்துடன் காப்பாற்றிக்கொண்டு மகிழ்வித்தான். புத்தியுள்ள அவன், நஹுஷபுத்திரனான யயாதிபோல அச்வமேதத்தாலும் பூர்ணதக்ஷிணையுள்ள மற்றும் அனேகயாகங்களாலும் தேவர்களைத் திருப்திசெய்தான். திரும்பவும் தேவனுக்கு ஒப்பான நளன் தமயந்தியுடன் அழகியவனங்களிலும் தோட்டங்களிலும் விளையாடினான். பிறகு, பெரியமனமுள்ள (அவன்) தமயந்தியினிடம் இந்திரசேனனென்னும் புத்திரனையும் இந்திரசேனை என்னும் கன்னிகையையும் உண்டுபண்ணினான். இவ்விதம் அந்தநராதிபனான அரசன் யாகம் செய்பவனாகவும் விளையாடுபவனாகவும் தனத்தால் நிரம்பின பூமியைக் காத்துவந்தான்.

---

## ஐம்பத்தைந்தாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

(இந்திரன் முதலியோர் கலியையும் துவாபரனையும் வழியிற்கண்டதும், தமயந்தி நளனை வரித்ததை அறிந்து கலி துவாபரனைத் துணைகொண்டு நளனை அவமானப்படுத்துவதாக உறுதிகூறியதும்)

தமயந்தியால் நளன் வரிக்கப்பட்டவுடன், மிக்க ஒளியுள்ள லோகபாலர்கள், போம்பொழுது, கலியுடன் வருகின்ற துவாபரனைப் பார்த்தார்கள். பிறகு, பலனையும் விருத்ரனையும் கொன்ற இந்திரன், கலியைப்பார்த்து, 'ஓ! கலியே! நண்பனான துவாபரனுடன் எங்கே போகின்றாய்? சொல்' என்று வினவினான். பிறகு, கலி, (இந்திரனை நோக்கி), 'தமயந்தியின் ஸ்வயம்வரத்தை அடைந்து அவளை வரிக்கப்போகிறேன். என்னுடையமனம் அவளை அடைந்திருக்கிறது' என்று சொன்னான். இந்திரன், அவனை நோக்கிச் சிரித்துக்கொண்டு, '(அந்த) ஸ்வயம்வரம் முடிந்துவிட்டது. அவளால் எங்கள் சமீபத்தில் நளராஜன் பதியாகவரிக்கப்பட்டான்' என்று சொன்னான். இவ்விதம் இந்திரனால்சொல்லப்பட்ட கலி, கோபங்கொண்டு, அந்தத் தேவர்களெல்லாவரையும் அழைத்து, அப்பொழுது, 'அவள் தேவர்களுக்குநடுவில் மனிதனைப் பதியாக அடைந்தமையால், அவளுக்குப் பெரியதண்டனைசெய்வது நியாயமாகுமன்றோ?' என்ற இந்தச்சொல்லைச் சொன்னான். இவ்விதம் கலியால் சொல்லப்பட்டவுடன், அந்தத்தேவர்கள், 'எங்களால் அனுமதியளிக்கப்பட்ட

பிறகே தமயந்தியால் நளன வரிக்கப்பட்டான். கலியே! விதிப்படி வ்ரதானுஷ்டானம் செய்து எல்லாத தாமங்களையும் அறிந்தவனும் எல்லாக்குணங்களுடனுங்கூடினவனுமான நளராஜனை எவளதான வரிக்கமாட்டாள ? இதிஹாஸததை ஐந்தாவதாகவுடைய நானகு வேதஙகளையும் முழுமையும அதயயனம்செயதவனும, தன வீட்டில தாமமாக யாகஙகளில எப்பொழுதும தேவாகளைத திருப்திசெயய வனும, கொல்லாமையில மிகுகபற்றுளளவனும, மெய்பேசுகினறவ னும், உறுதியான விரதமுள்ளவனும, லோகபாலாகளுக்கு ஒப்பான வனும், புருஷஶ்ரேஷ்டனும, தன்னிடம் ஸாமாததியமும தைரிய மும் ஞானமும் தவமும சௌசமும தமமும சமமும் நிலைததிருபப வனும, இவவிதரூபமுளளவனுமான நளராஜனை எவன் சபிக்க விரும்புகிறானோ அந்தமூடன தனனையே சபிததுக் கொணடவனா வான் ; தானாகவே தனனைக்கொலபவனுமாவான். கலியே! எவன் இபபடிப்பட்டகுணமுளள நளனைச சபிககவிரும்புகின்றானோ அவன கஷ்டமானதும் ஆழமுள்ளதும் விரிநததுமான நரகமாகிறமடுவில முழுகுபவன்' என்று மறுமொழிசொல்லினர். தேவர்கள், கலியை யும் துவாபரனையும் இவவிதம் சொல்லிவிட்டு ஸவர்க்கததைை அடைந் தனர்.

பிறகு, தேவர்கள போனவுடன், கலி, துவாபரனைநோக்கி, 'ஓ துவாபர ! கோபததை அடககச சக்தியற்றவனாயிருககிறேன் ; நள னிடததில் வஸிபபேன ; அவனை ராஜ்யததினினறும் நழுவசசெய வேன். (அவன்) தமயந்தியுடன் ரமிக்கப்போகிறதில்லை. நீயும் சூதுக்காய்களில நுழைநது உதவிசெய்யவேணடும். எனனுடைய பரியததிறகாக இதில் நீயும வேலைசெய்பவனாவாய்' என்று சொன னான்.

---

ஐம்பத்தாறுவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(கலியின் தூண்டுதலால் புஷ்கரன் நளனைச் சூதுக்கழைத்ததும், இருவரும் சூதாடியதும்.)

இவ்விதம அந்தக கலி துவாபரனுடன் உடன்பாடுசெய்து கொணடு, பிறகு, அந்த நிடதராஜனிருக்கும் இடததிற்கு வந்துசேர்ந் தான். அவன் தினநதோறும் (நளனை அடைதற்கு அவன் தவறு செய்வதான) அவகாசததை எதிர்பார்ததுக்கொண்டு நிஷத

தேசத்தில் நெடுங்காலம் வஸித்தான். பிறகு, கலியானவன் பன்னிரண்டாவது வருஷத்தில இவனுடைய அவகாசத்தைக் கண்டான். நைஷதன, ஜலமோசனம செய்து, கால்களைச் சுத்தம் செய்யாமல் ஆசமனஞ்செய்து, ஸந்தியை உபாஸித்தான்; அப்பொழுது அவனிடம் கலி பிரவேசித்தான. அவன் நளனிடம் பிரவேசித்தது (மற்றொரு வடிவத்துடன்) புஷ்கர ராஜனது சமீபத்தை அடைந்து, 'வா; நளனுடன் சூதாடு. நீ என்னுடன் சேர்ந்து காய்களைக்கொண்டு ஆடும் சூதில நளனை வெல்வாய்; நளராஜனையும் ராஜ்யத்தையும் ஜயித்து நிஷத தேசத்தை அடைவாய்' என்று புஷ்கரனை நோக்கிச் சொன்னான். இவ்விதம் கலியினால் சொல்லப்பட்ட புஷ்கரன் நளனை அடைந்தான். கலியும [1] பாச்சிகை உருவங்கொண்டு அந்தப் புஷ்கரனைப் பின் தொடர்ந்தான். பகைவீரரைக் கொல்லும் பிராதாவான புஷ்கரன் வீரனான நளனை அடைந்து, நாம் [2] பாச்சிகைகளைக் கொண்டு சூதாடுவோம' என்று அடிக்கடி சொன்னான். பிறகு, பெரியமனமுள்ள அரசன் (அதனைப்) பொறுக்கவில்லை. தமயந்தி பார்த்துக்கொண்டிருக்கையில், (தானும் அவனைச் சூதுக்கு) அழைப்பதே தக்கதென்று எண்ணினான். தெய்வத்தினால் ஆவேசிக்கப்பெற்ற அந்தப் புஷ்கரராஜன தெய்வத்தினால் அவமதிக்கப்பெற்ற பிராதாவான நளராஜனுடன விரைந்து சூதாட நன்கு தொடங்கினான். அப்பொழுது, கலியினால் ஆவேசிக்கப்பெற்ற நளன் சூதில் வெள்ளி, பொன், வாகனங்கள், ஆடைகள் இவைகளை இழந்தான். பகைவரை அடக்குபவனான அவன் சூதாடும் மதத்தால் மிக மயங்கிச் சூதாடுகின்றதை நண்பருள் ஒருவரும் தடுப்பதில் சக்தியுள்ளவராகவில்லை. ஓ! பாரத! பட்டணத்து ஜனங்கள் யாவரும், கஷ்டதசையிலிருக்கிற அரசனைப் பார்ப்பதற்கும் தடுப்பதற்கும், மந்திரிகளுடன் வந்தார்கள். பிறகு, ஸூதன், தமயந்தியின் ஸமீபம் வந்து, 'ஓ! தேவி! இந்தப் பட்டணத்து ஜனங்கள் காரியமுள்ளவர்களாக வாசலில் நிற்கின்றனர். 'எல்லா ஜனங்களும் அறம்பொருள்களை அறிந்த அரசருடைய [3] விசனத்தைப் பொறாதவர்களாக நிற்

---

1 'வருஷ:' என்பது மூலம்: அதற்கு, காளை முதலிய பல பொருளகளுண்டு. நீலகண்ட வியாக்யானத்திலும், இங்கிலீஷ் மொழிபெயர்ப்புகளிலும பாச்சிகை யென்று பொருள் செய்திருக்கிறது. நளவெண்பாவிலும் நைடதத்திலும் காளை எனறே சொல்லபபட்டிருக்கிறது.

2 'வருஷேண' எனபது மூலம; 'காளையைப பந்தயமாக வைத்து' என்பது வேறு பொருள். 3 சாந்திபர்வம் 181-ம் பக்கம் குறிப்பில காணக.

கின்ருர்கள்' என அரசநுக்குத தெரிவிக்ககடவாய்' என்று தெரிவிததான். பிறகு, அந்தத் தமயந்தி சோகததால் அறிவு கலங்கியவளாகவும் துக்கததால பீடிக்கப்பட்டவளாகவும கண்ணீரால் தழுதழுத்த குரலுடன் நைஷதனை நோக்கிச சொல்லலானுள்:

'ஓ! அரசரே! பட்டணததுஜனங்கள் ராஜபக்தியை முன்னிட்டுக்கொண்டு எல்லா மந்திரிகளுடனும பிராயமுதிாநத சிறநத பிராம்மணர்களுடனும் வணிகர்களுடனும் கூடி உமமைப் பார்க்க விருப்பத்துடன் வாயிலில் நிற்கினறனர். ஓ! வேந்தரே! உமது அருளை அடுததவர்களும் சோந்து வந்தவர்களுமான அந்த ஜனங்களைப் பார்க்கக்கடவீர்' என்று இவ்விதம் அடிக்கடி சொல்லினள். கலியினுல் ஆவேசிக்கப்பெற்ற மன்னன் அழகிய கடைக்கண்ணுள்ளவளும் அவ்விதம் புலம்புகிறவளுமான அவளைப் பார்த்து ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, அந்த எல்லாமந்திரிகளும் அநதப் பட்டண வாஸிகளும துக்கததால பீடிக்கப்படடவர்களாயும் வெட்கமடைந்தவர்களாயும், 'இல்லை; இவன இருக்கமாட்டான்' என்று சொல்லிக்கொண்டு வீடுகளை அடைநதார்கள். ஓ! யுதிஷ்டிர! நளனுக்கும் புஷ்கரனுக்கும் பல மாதங்கள் அந்தச் சூதாட்டமானது அவ்விதம நடந்தது. புண்யஶ்லோகனுன நளன் ஜயிக்கப்படடான்.

---

## ஐம்பத்தேழாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தமயந்தி, சூதில் நளன் தோற்றுவிடுவனென்றறிந்து மக்களைப் பாகனுடன் பீமன் நகருக்கு அனுப்பியது.)

ஓ! அரசனே! பிறகு, கலக்கமற்றவளும் பீமன்மகளுமான தமயநதி, புணயஶ்லோகனுன அரசன் பித்துக்கொண்டவன் போலச் சூதில் புத்தி செலுத்தினதைக்கண்டு அதிலிருந்து அச்சமும துயரமும் மேறகொண்டவளாகி அரசனைக்குறித்து அந்தப் பெரிய காரியத்தைச் சிந்திக்கலானுள். அவள், அவனுக்குக் கெடுதியைச் சந்தேகித்து, அவனுக்குப் பிரியத்தைச் செய்ய எண்ணங்கொண்டு, அவனைப் பொருளனைததும் கவரப்பட்டவனுக அறிந்து, மிக்க புகழுள்ளவளும் செவிலித்தாயும் வேலைக்காரியும் அனுகூல

மானவளும் எல்லாம் செய்ய வல்லவளும் அன்புள்ளவளும் அழகாகப பேசுகின்றவளுமான அந்த ப்ருஹதஸேனை என்பவளை நோக்கி, 'ஓ! பிருஹதஸேனையே! போ; நளராஜரின் உததரவினால் மந்திரிகளை வரவழைதது, பொருள்களில் எவ்வளவு கவரபபட்ட தெனபதையும, எவ்வளவு மிசசமிருககிறதெனபதையும சொல்வாயாக' என்று சொன்னாள். நரேஸ்வரனே! அநதப் பிருஹதஸேனை இவ்விதம் கட்டளையிடப்பெறறாள். அவள் மந்திரிகளிடம் தேவியின் வார்ததையைச் சொனனாள். பிறகு, அந்த மந்திரிகள் யாவரும், நளன் உததரவை அறிந்து, 'நமக்கு க்ஷேமம உண்டாகுமா?' என்று சொல்லிக்கொணடு திரும்பவும் வந்தார்கள். அந்த எல்லா ஜனஙகளும் இரணடாவது முறையும் வந்துசேர்ந்தார்கள். (வந்தவர்களைத) தமயந்தி தெரிவிததாள். (நளன) அதையும் ஏறறுக் கொள்ளவில்லை. அந்தத தமயநதி தனதுகணவன் தனசொலலை ஏற்றுக்கொள்ளாததைப் பார்தது வெட்கஙகொணடவளாகித திரும்பவும வீட்டை அடைந்தாள. எபபொழுதும் காயசள நளனுக்கு விரோதமாக இருபபதையும் நளன் எல்லாப பொருளுங்கவரப்பட்டவனானதையும்கண்டு, திரும்பவும் செவிலிததாயை நோககி, 'ஓ! பிருஹத்ஸேனையே! கல்யாணி! திரும்பவும் போ; நளராஜர் உததரவினால வாரஷ்ணேயனை ஸூதனை அழைததுவா. பெரிய காரியம் வநதிருக்கின்றது' என்றாள்.

அந்தப்பிருஹதஸேனையும், தமயந்தியின் சொல்லைக கேட்டு, அந்தரஙகமான வேலைக்காரர்களைக்கொணடு வார்ஷ்ணேயனை வரவழைததாள். பிறகு, தேசகாலமறிந்தவளும் குற்றமற்றவளுமான தமயந்தி வார்ஷ்ணேயனை மெதுவான வாக்கினால் இன்சொற்கூறிக் கொணடு காலததிற்கேற்றதைச் சொல்லலானாள்: 'அரசர் எப்பொழுதும் உன்விஷயததில் நன்கு நடந்துகொள்ளுகிறார் என்பதை நீ அறிவாய். கஷ்டத்திலிருககும் அவருக்கு நீ உதவியைச் செய்யக கடவாய். அரசர் புஷ்கரனால் ஜயிககப்படப்பட அவருக்குச் சூதில ஆசையானது மிகவளர்கிறது. புஷ்கரனுக்குக் காய்கள ஸ்வாதீனமாக இருந்துகொணடு (அனுகூலமாக) விழுவதுபோல அரசருககுக் காய்களில் விபரீதமாக விழுவதும காணப்படுகின்றது. இந்த நளராஜர் நண்பர்களின் சொற்களையும் உறவினர்களின் சொற்களையும் கேளாததுபோலவே என்சொல்லையும் ஏற்றுககொள்ளவில்லை. ஓ! ஸாரதியே! இப்பொழுது மகாதமாவான நைஷதராஜருக்கு விளஙகுகினற செல்வங்களில் மிச்சமில்லையெனறு உறுதியாக

நினைக்கின்றேன். ஓ! ஸாரதியே! மயக்கமடைந்த மன்னர் என் சொல்லை ஏற்றுக்கொள்ளாமையால் உன்னைச் சரணமடைகிறேன். நான் சொல்வதைச்செய். பாகனே! (பொருள்களின்) அழிவைக் குறித்து எனது எண்ணம் தெளிவாயில்லையன்றோ? ஆகையால், அரசருக்குப் பிரியமானவையும் மனோவேகமுள்ளவையுமான குதிரைகளைத் தேரிலபூட்டி இரண்டு குழந்தைகளையும் ஏற்றிக்கொண்டு குண்டினபுரத்தை அடையக்கடவாய். என் உறவினர்களிடத்தில குழந்தைகளையும் அப்படியே தேரையும் இந்தக் குதிரைகளையும் அடைக்கலமாக வைத்துவிட்டு இஷ்டப்படி வஸிப்பாய்; அல்லது, வேறிடத்திலாவது செல்வாய' என்றாள்.

வார்ஷ்ணேயனென்ற நளஸாரதி தமயந்தியின் அந்தச்சொல்லை முக்கியமாக நளனுடைய மந்திரிகளிடம் முழுதும் தெரிவித்தான். ஓ! மஹீபதியே! அவன் அவர்களால் ஒன்றுசேர்ந்து நிச்சயித்து விடையளிக்கப்பட்டவனாகி, குழந்தைகளைத் (தேரில) ஏற்றிவைத்துக்கொண்டு, அந்த வாகனத்துடன் விதர்ப்பதேசத்தை அடைந்தான். ஸூதன், அவ்விடத்தில குதிரைகளையும் அந்தச்சிறந்த தேரையும் இந்திரசேனையென்னும் அந்தக் கன்னிகையையும் இந்திரசேனனென்னும சிறுவனையும் வைத்துவிட்டு, பீமராஜனிடம் விடைபெற்றுக்கொண்டு, நளராஜனைக் குறித்துத் துக்கித்துக் கஷ்டமடைந்தவனாகி, 'எங்குப் போவேன்?' என்று அடிக்கடி மனத்தால சிந்தித்துக்கொண்டே அப்பொழுது அங்கிருந்து நடந்து அயோத்தி நகரத்தை அடைந்தான். அவன் மிக்க துயரமுள்ளவனாகி ருதுபர்ணராஜனை அடைந்தான்; ஸாரதியத்தில நியமிக்கப்பட்டான். அவனும இவனுக்குச் சம்பளத்தைக் கொடுத்தான்.

---

## ஐம்பத்தெட்டாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(நளன் சூதில் புஷ்கரனால் ஜயிக்கப்பட்டுத் தமயந்தியுடன் காட்டுக்குப்போனதும், பறவைகள் நளனது ஆடையுடன் ஆகாயத்தில் சென்றதும்.)**

வார்ஷ்ணேயன் போனபிறகும், சூதாடுகிற நளனுடைய மிச்சமிருந்த சிறிது தனமும் ராஜ்யமும புஷ்கரனால் அபகரிக்கப்பட்டன. ஓ! அரசனே! புஷ்கரன் நாட்டைப பறிகொடுத்த நளனைநோக

கிச் சிரித்துக்கொண்டு, 'திரும்பவும் சூது நடக்கட்டும். உனக்கு எதிர்ப்பந்தயம் என்ன இருக்கின்றது? உனக்குத் தமயந்தி ஒருத்தி மிச்சமாயிருக்கிறாள். மற்ற எல்லாம் என்னால் பறிக்கப்பட்டன. நல்லதென்று எண்ணுவாயானால் தமயந்தி பந்தயமாக இருக்கட்டும்' என்றான். புஷ்கரன் இவ்விதம் சொல்லியதைக் கேட்ட நளனுடைய நெஞ்சம் கோபத்தால் பிளக்கப்பட்டதுபோலாயிற்று. (ஆயினும்,) அவனை ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, நளன் புஷ்கரனைப்பார்த்து மிக்க கோபமுள்ளவனாகி, 'ஓ! நராதம! வேறு தனமும் எனக்கு இருக்கின்றது' என்று சொன்னான். புண்யச்லோகனான அரசன், மிக்க துயருற்ற மனமுள்ளவனாகி, (தனது) மேலாடையையும் அப்படியே அவளுடைய ஆபரணங்களையும் (தனது) ஆபரணங்களையும் எல்லா அங்கங்களிலுமிருந்து கழற்றிப் பந்தயமாக வைத்துத் தோற்றுவிட்டு, பிறகு, ஒரே ஆடையுள்ளவனும் போர்த்துக்கொள்ளாதவனும் சிநேகிதர்களுக்குத் துயரத்தை மிக வளர்ப்பவனுமாகி மிகப் பெரிதான செல்வத்தையிழந்து வெளிக் கிளம்பினான். பிறகு, தமயந்தி, ஒரே வஸ்திரமுள்ளவளாகி, போகிற அவனைப் பின் தொடர்ந்து சென்றாள். அந்த நளன் அவளுடன் நகரத்திற்கருகில் மூன்று ராத்ரி வஸித்தான். ஓ! மஹாராஜனே! புஷ்கரனே, 'நளனிடத்தில் எவன் நன்கு நடப்பனோ அவன் என்னால் கொல்லத்தக்க நிலைமையே அடைவன்' என்று பட்டணத்தில் முரசறைவித்தான். ஓ! யுதிஷ்டிர! பட்டணத்து ஜனங்கள் அந்தப் புஷ்கரனுடைய சொல்லாலும் அவனுடைய விரோதம் வருமென்ற எண்ணத்தாலும் அந்த நளனுக்கு உபசாரணையைச் செய்யவில்லை. பூஜைக்குத்தக்கவனான அந்த அரசன் அப்படிப் பூஜிக்கப்படாதவனாகப் பட்டணத்துக்கு ஸமீபத்தில் ஜலத்தைமட்டும் குடித்துக் கொண்டு மூன்றுராத்திரி வஸித்தான்.

அரசன் அங்கே பசியால் வருத்தமுற்றுப் பழங்களையும் கிழங்குகளையும் [1] தேடுதற்கு அங்கிருந்து கிளம்பினான். தமயந்தியும் அவனைப் பின்தொடர்ந்தாள். பசியால் பீடிக்கப்படுகின்றவனான நளன், பலநாள் சென்றபின், பொன் போன்ற சிறகுள்ள சில பக்ஷிகளைக் கண்டான். அப்பொழுது, பலசாலியான அந்த நிஷதாதிபதி, 'இப்பொழுது எனக்கு ஆகாரமுமிருக்கின்றது. இது தனமுமாகும்' என்று ஆலோசனை செய்தான். பிறகு, அவன் அவைகளை அரையிலிருந்த வஸ்திரத்தால் நன்கு மூடினான். (அவை

1 'காஷ்யந' என்பது மூலம்.

யாவும அவனுடைய அந்த ஆடையை எடுத்துககொண்டு ஆகாய மார்க்கமாகச சென்றன. பிறகு, உயரககிளமபின பக்ஷிகள, நளன் திக்கை வஸதிரமாயுடையவனும தலைகுனிந்து தீனனுமாகிப் பூமியில் நிற்கக்கண்டு, 'ஓ! மிகக கெட்டபுததியுள்ளவனே! நாஙகள சூதுக்காய்கள. உன் ஆடையைககவர விருபபஙகொணடு வந்தோம். நீ வஸ்திரததுடன் போவதில எஙகளுககு விருப்பமிலலையன்றோ?' என்று இந்தச சொலலைச சொல்லின. அபபொழுது, புணயஶ்லோக னை அரசன, அந்தக் காய்கள போவதையும தான வஸதிரமற்றி ருப்பதையும பார்தது, பிறகு, தமயநதியை நோககி, 'ஓ! குறறமறற வளே! நான் எவைகளுடைய கோபததால் ஐஶ்வரியததினின்றும நழுவினவனும பசியுடனகூடித துககததை அடைநதவனுமாகி ஆகாரததை அடையவில்லையோ, எவைகளுககாக நிஷததேசத திலுள்ளவர்கள் என்விஷயததில் உபசரணைசெய்யவிலலையோ அப படிப்பட்ட இந்தக்காய்கள் பறவைகளாகி என ஆடையையும கவர்நதன. மிகக விபரீதநிலைமையை அடைநதவனும அறிவறறவ னும் துக்கத்தை அடைந்தவனுமான நான் உனபாததா (=போஷ கன்). இந்த வார்ததையை உனக்கு நல்லதெனறு அறிந்துகொள். இந்தப் பலவழிகள தக்ஷிணாபததததைககுறிதது அவநதீநாரததை யும் ரிக்ஷவான் என்ற மலையையும தாணடிப் போகின்றன. இது விந்தியமென்னும் பெரியமலை. (இந்தப) பயோஷ்ணிநதியும் ஸமுத திரததை அடைகின்றது. மஹரிஷிகளுடைய ஆஶ்ரமங்களும் பல கிழங்குகளுடனும கனிகளுடனும கூடினவையாக இருககினறன. இது விதர்ப்பதேசத்தினவழி. இந்தவழி கோசலதேசததிறகுச செல்லுகினறது. இதற்குமேல் தெறகிலுள்ள இநதத்தேசம் தக்ஷி ணாபதமென்பது' என்றுசொன்னான்.

ஓ! பாரத! நளராஜன் மனததை அடக்கிப பீமபுததிரியான தமயந்தியை நோக்கித துக்கத்தை அடைந்தவனாகி அடிக்கடி இந்தவாக்கியத்தைச் சொன்னான். பிறகு, துககத்தால் வாட்ட மடைந்த அந்தத தமயந்தியானவள், கணணீரால் தழுதழுதத சொல்லால் அந்த நைஷதனை நோககி மனத்தை உருக்கும் வார்த தையைச் சொல்லினள்: 'ஓ! பாரததிவரே! உமது எண்ணததை அடிக்கடி ஆலோசிக்கின்ற என மனம் மிக நடுஙகுகிறது. எல்லா அங்கங்களும தளர்ச்சியடைகின்றன. நாடிழநதவரும் பொருளைப பறிகொடுததவரும் வஸ்திரமற்றவரும் பசியுடனும சிரமத்துடனும் கூடியவருமான உமமை ஜனமிலலாத காட்டில் விட்டு, நான் எவ்

விதம் போவேன்? ஓ! மஹாராஜரே! ச்ரமத்தை அடைந்தவரும் பசியால் பீடிக்கப்பட்டவரும் அந்தஸுகத்தை எண்ணுகின்றவரு மான உம்முடைய சிரமத்தைப் பயங்கரமான காட்டில் நான் போக்குவேன். எப்போதும் கஷ்டத்தை அடைந்த மனிதனுக்கு எல்லாத் துக்கங்களிலும் மனைவிக்கு ஒப்பான மருந்து ஒன்று மில்லை. இதனை உமக்கு ஸத்யமாகச் சொல்லுகின்றேன்' என்றாள். நளன், 'ஓ! அழகிய இடையுள்ள தமயந்தி! நீ சொல்லுகின்ற இது இவ்விதமே. கஷ்டமடைந்த மனிதனுக்கு மனைவிக்கொப்பான நண்பனும் மருந்தும் இல்லை. நானும் உன்னை விட்டுவிட விருப்ப முள்ளவனல்லேன். பயந்தவளே! ஏன் மிக்க ஸந்தேகத்தையடை கிறாய்? நான் தேசத்தை விடுவேன்; குற்றமற்றவளே! உன்னை விட வே மாட்டேன்' என்றான்.

தமயந்தி சொல்லலானாள்: 'ஓ! மஹாராஜரே! இங்கு நீர் என்னை விட்டுவிட விரும்பவில்லையானால், அப்படியிருக்கையில், விதர்ப்பதேசத்தின் வழியை எதற்காக எனக்கு உபதேசிக்கிறீர்? அரசரே! என்னையோ விடத்தக்கவரல்லீர்; நானும் அறிவேன். ஓ! மஹீபதியே! மனம்கலங்கியிருத்தலால் ஒருகால் என்னை விடு வீரோவென்று நானும் (சந்தேகிக்கிறேன்). ஓ! தேவருக்கு ஒப் பான நரோத்தமரே! எனக்கு அடிக்கடி வழியையும் சொல்லு கின்றீர். இதுகாரணமாக எனக்குத் துயரத்தை வளர்க்கின்றீர். அரசரே! உமக்கு இந்த எண்ணமிருக்குமானால், (நீருமவர்) எண்ணினால், சேர்ந்தே விதர்ப்பதேசத்தை அடைவோம். கௌர வத்தைக் கொடுப்பவரே! அங்கு விதர்ப்பராஜர் உம்மைப் பூஜிப் பார். அரசரே! அவரால் நீர் பூஜிக்கப்பெற்றுச் சுகமாக எங்கள் வீட்டில் வசிப்பீர்' என்றாள்.

---

## ஐம்பத்தொன்பதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(நளன் தமயந்தியினது ஆடையின் ஒருபாதியைக் கிழித்துக்கொண்டு அவளைத் தனியேவிட்டுச் சென்றது.)**

அப்பொழுது, தேவியினால் இவ்விதம் சொல்லப்பட்ட நளன், 'பிதாவின் ராஜ்யம் உனக்கு எவ்விதமோ அவ்விதமே எனக்குமென்பதில் ஸந்தேகமில்லை. ஆனால், கஷ்டத்திலிருப்பவனாகி எவ்

விதத்திலும் அங்குப் போகமாட்டேன். (ஐச்வரியம்) நிறைந்த நான் (முன்) உனக்கு மகிழ்ச்சியை வளர்ப்பவனாகச் சென்று (இப்பொழுது) கஷ்டத்தை அடைந்து உனக்குத் துயரத்தை வளர்ப்பவனாக எவ்விதம் போவேன்?' என்ற சொல்லைச் சொன்னான்.

நளராஜன், இவ்விதம் சொல்லிக்கொண்டு, வஸ்திரத்தின் பாதியைச் சுற்றிக்கொண்டிருக்கிற கல்யாணியான தமயந்திக்கு அடிக்கடி இன்சொல் கூறினான். அவ்விருவரும் ஒரே வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும் இங்கும் அங்கும் அலைந்துகொண்டும் பசிதாகங்களால் களைத்தவர்களாகி ஒரு மண்டபத்தை அடைந்தார்கள். அப்பொழுது, அந்த நிஷதாதிபதியான அரசன் அந்த மண்டபத்தை அடைந்து தமயந்தியுடன் பூதலத்தில் உட்கார்ந்தான். ஆடையற்றவனும் அழுக்கடைந்தவனும் நிறம்மாறினவனும் புழுதியால் பூசப்பட்டவனுமான அவன் களைத்துத் தமயந்தியுடன் பூதலத்தில் உறங்கினான். அரசனே! பிறகு, அழகியவளான தமயந்தி தன் ஆடையின் தலைப்பைப் பூமியில் விரித்துப் பதியைத் தழுவிக்கொண்டு உறங்கினாள். பிறகு, சோகிக்கப்படத்தக்கவளும் அழகியும் கல்யாணியுமான தமயந்தியும் துக்கத்தை அடைந்து விரைவாக நித்திரையால் இழுக்கப்பட்டாள். ஓ! அரசனே! தமயந்தி உறங்கினவுடன், அரசனான நளனோ துயரத்தால் கலக்கப்பட்ட மனமுள்ளவனாகி முன்போலப் படுக்கவில்லை. அவன் அந்த ராஜ்யம் கவரப்பட்டதையும் நண்பர்களை முழுமையும் பிரிந்ததையும் வனத்தில் (ஆடைகவரப்பட்டது முதலிய) அந்தக் கஷ்டத்தையும் கண்டு, 'இதனைச் செய்தால் எனக்கு என்னவரும்? செய்யாவிடில் எனக்கு என்னவரும்? எனக்கு மரணம் மேலானதா? மனைவியை விடுதல் மேலானதா? என்னைக் குறித்து ஆசைகொண்ட இவள் எனக்காக இவ்விதம் துயரத்தை அடைகிறாள். இவள் என்னால் விடப்பட்டாலோ ஒருகால் தன் உறவினரைக் குறித்துச் செல்லுவாள். இவள் என்னுடன் தொடர்ந்தால் துயரத்தை அடைவாளென்பதில் ஸந்தேகமில்லை. விட்டுவிடுவதில் ஒருகால் ஸுகத்தை அடைவாளோ என்ற ஸந்தேகமுண்டு' என்ற ஆலோசனையை அடைந்தான்.

நராதிபனே! அவன் அடிக்கடி பலவாறு ஆலோசித்து உறுதி செய்து தமயந்தியை விடுவது நல்லதென்று கருதினான். 'இவள் புகழுள்ளவளும் மிக்க பாக்யவதியும் என்னிடத்தில் பக்தியுள்ளவளும் பதிவ்ரதையுமாயிருக்கிறாள். இவள் வழியில் ஒருவராலும்

பலத்தால் அவமதிக்கத்தகாதவள்' என்று அவனுடைய எண்ணமானது கெட்ட எண்ணமுள்ள கலியினால் தமயந்திவிஷயத்தில் அப்பொழுது இவ்விதம் அவளை விடுவதில் திரும்பிற்று. அந்த அரசன் தனக்கு ஆடையில்லாமலிருப்பதையும் அவளுக்கும் ஓர் ஆடையே இருப்பதையும் ஆலோசித்து வஸ்திரத்தின் பாதியைக் கிழிக்க எண்ணங்கொண்டான். 'எவ்விதம் வஸ்திரத்தை அறுப்பேன்? எவ்விதம் என் காதலியும் விழித்துக்கொள்ளாமலிருப்பள்?' என்று இவ்விதம் அரசனான நளன் ஆலோசித்து அப்பொழுது மண்டபத்தில் நான்கு பக்கத்திலும் திரிந்தான். ஓ! பாரத! நளன் இங்குமங்கும் ஓடுகிறவனாகி மண்டபத்தின் ஓரிடத்தில் உறையற்ற சிறந்த கத்தி ஒன்றை அடைந்தான். பகைவரை வாட்டுபவனான நளன் அதனால் ஆடையின் ஒரு பாதியைக் கிழித்துக் கட்டிக்கொண்டு, பிரஜ்ஞையற்றவளாகித் தூங்கும் விதர்ப்பநாட்டின்மகளான தமயந்தியைவிட்டு ஓடினான்.

பிறகு, நிடதத்தார்கோமான், தமயந்தியினிடத்தில் மனம் பற்றினவனாகித் திரும்பவும் அந்த மண்டபத்தை அடைந்து அவளைக்கண்டு அப்பொழுது, 'எனது காதலியும் முன்னே வாயுவினாலும் சூரியனாலுங்கூடப் பார்க்கப்பட்டிராதவளுமான இவள் இப்பொழுது நாதனற்றவளைப்போல மண்டபத்தின் நடுவில் பூமியில் உறங்குகின்றாள். அழகிய சிரிப்புள்ள இவள் விழித்துக்கொண்டு கிழிக்கப்பட்ட (பாதி) ஆடையைச் சுற்றிக் கொண்டவளாகி என்னைப் பிரிந்து, பித்துக்கொண்டவள்போல எவ்விதம் இருப்பள்? அழகிய பதிவ்ரதையான தமயந்தி, என்னைப் பிரிந்து மிருகங்களாலும் பாம்புகளாலும் அடையப்பெற்ற பயங்கரமான காட்டில் ஒருத்தியாக எவ்விதம் ஸஞ்சரிப்பாள்?' என்று அழுதான். நளன், 'மிக்க பாக்கியமுள்ளவளே! ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்ரர்களும் மருத்கணங்களுடன்கூடின அச்வினீதேவர்களும் உன்னைக் காக்கக் கடவர். தர்மத்தால் சூழப்பட்டவளாயிருக்கின்றாய்' என்று ரூபத்தால் பூமியில் ஒப்பற்ற ப்ரியமான மனைவியைக் குறித்து இவ்விதம் சொல்லிவிட்டுக் கலியினால் அறிவு கவரப்பட்டவனாகி முயற்சியுடன் கிளம்பினான். அரசனான நளன் அடிக்கடி போய்ப் போய் மண்டபத்துக்குத் திரும்பி வருகிறான்; கலியினால் இழுக்கப்படுகிறான்; அன்பினால் திரும்பியிழுக்கப்படுகிறான். துயரமடைந்த அவனுடைய மனமானது அப்பொழுது இரண்டு போலாயிற்று. ஊஞ்சல்போல, அடிக்கடி வருகின்றான்; அடிக்கடி

போகின்றான். ஆயினும், கலியினால் இழுக்கப்பட்ட நளன், மயக்கங் கொண்டு இரக்கத்துடன் மிகப் புலம்பி, தூங்குகின்ற அந்த மனைவியை விட்டுவிட்டு ஓடினான். கலியால் ஆவேசிக்கப்பட்டு மனம் அழிந்து அடிக்கடி அதை அதை எண்ணிக்கொண்டு மயங்கினவனாகி நிர்ஜனமான காட்டில் (காப்பாற்றற்குரிய) மனைவியைத் தனிமையாய் விட்டுப் போயினன்.

---

அறுபதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

(காட்டில் அலையும் தமயந்தியை மலைப்பாம்பு பிடித்துக்கொண்டதும், ஒரு வேடன் அதனைக் கொன்று அவளை விரும்பினதும், அவள் தனது கற்பினால் அவனைச்கொன்றதும்)

ஓ! வேந்தே! நளன் விட்டுப் போனவுடன், சிறந்த இடையுள்ளவளும் பயந்தவளுமான தமயந்தி மனிதரில்லாத காட்டில் சிரமம் நீங்கினவளாகி விழித்துக்கொண்டாள். கணவனைக் காணமல் சோகத்துடனும் துக்கத்துடனும் கூடினவளாகிப் பயந்து நளனைக் குறித்து, 'ஓ! மஹாராஜரே! ஆ! நாதரே! ஆ! மஹாராஜரே! ஆ! ஸ்வாமி! ஏன் என்னை விடுகின்றீர்? ஆ! கெட்டுவிட்டேன்; நாசமடைந்தவளாகிறேன். ஓ! மஹாராஜரே! தாமம்தெரிந்தவரும் சொல்தவறாதவருமாக இருக்கின்றீரல்லவா? அப்படிப்பட்ட நீர் தூங்கும் என்னை எவ்விதம் விட்டுப்போனீர்? மேலும், (என்னால்) தீங்கிழைக்கப்படாத நீர், அடங்கினவளும் பின்தொடர்ந்து வந்தவளும் பாரியையுமான (என்னை) விட்டு எவ்விதம் போகிறீர்? பிறனாலன்றோ தீங்கிழைக்கப்பட்டீர்? ஓ! அரசரே! என் விஷயத்தில் லோகபாலர்களுக்கு எதிரில் முந்தி உம்மால் சொல்லப்பட்ட சொற்களை ஸத்யமாகச் செய்யச் சக்தியற்றவராகிவிட்டீரா? புருஷஷ்ரேஷ்டரே! மனைவியானவள் உம்மால் விடப்பட்டும் முகூர்த்தமாவது உயிருடனிருக்கின்றாளாதலால், மனிதர்களுக்கு அகாலத்தில் மரணம் விதிக்கப்படவில்லை. ஓ! புருஷஷ்ரேஷ்டரே! இந்தப் பரிஹாஸம் இவ்வளவு போதுமானது. பகைவரால் மீற முடியாதவரே! மிகவும் பயந்திருக்கிறேன். தலைவரே! உம்மைக் காட்டக்கடவீர். அரசரே! பார்க்கப்படுகின்றீர்; பார்க்கப்படுகின்றீர். நிடதநாடரே! நீர் இதோ நிற்கின்றீர். புதர்களால் உம்மை மறைத்துக்கொண்டு

ஏன் எனக்கு மறுமொழி கூறாமலிருக்கிறீர்? ராஜேந்திரரே! அரசரே! க்ரூரமானவளும் இங்கே இந்நிலையை அடைந்தவளும் புலம்புகிறவளுமான என்னைத் தழுவித் தேற்றவில்லையே? கஷ்டம்! நான் என்னைக் குறித்தும் மற்ற எதைக் குறித்தும் துயரப்படவில்லை. அரசரே! ஒன்றியாக எவ்விதம் இருப்பீரென்று உம்மைப்பற்றி வருந்துகிறேன். மன்னரே! தாகமுள்ளவரும் பசியுள்ளவரும் சிரமத்தால் இளைத்தவருமாகி மாலைக்காலத்தில் என்னைப் பாராமல் மரத்தடிகளில் எவ்விதம் இருப்பீர்?' என்று உரக்கக் கதறினாள். பிறகு, அவள் கடுமையான துக்கத்தினால் பீடிக்கப்பட்டவளும் கோபத்தினால் எரிகிறவள் போன்றவளுமாகித் துயரமுற்று அழுது கொண்டு இங்கும் அங்கும் ஓடினாள். சிறுமியான அவள் அடிக்கடி எழுந்திருந்தாள். அடிக்கடி தளர்ந்து விழுந்தாள்; அடிக்கடி பயந்து ஒளிந்துகொண்டாள்; அடிக்கடி அலறினாள்; அழுதாள். துயரத்தால் மிக வாட்டப்பட்டவளும் தளர்ச்சியுற்றவளும் பதிவிரதையுமான பீமன்மகள், அடிக்கடி [1] பெருமூச்செறிந்து அழுதுகொண்டு, 'நிஷதாதிபரான இவர் எந்தப் பூதத்தின் சாபத்தால் துக்கத்தால் பீடிக்கப்பட்டவராகி மகிழ்விலரோ அந்தப் பூதத்திற்கு அவருடைய துக்கத்தைப் பார்க்கிலும் அதிகத் துக்கம் உண்டாகவேண்டும். எந்தப் பாவி பாவமெண்ணமில்லாத நளராஜரை இவ்விதம் செய்தானோ அவன் அவரைக்காட்டிலும் அதிக துக்கத்தை அடைந்து ஸுகமற்ற ஜீவனத்தைச் செய்யக்கடவன்?' என்று சொன்னாள்.

மஹாத்மாவான அரசனுடைய மனைவியான அவளோ, இவ்விதம் புலம்பிக்கொண்டு, துஷ்டமிருகங்களால் அடையப்பட்ட வனத்தில் நாயகனைத் தேடினாள். பீமபுத்திரியானவள், பித்துக்கொண்டவள்போல, 'ஆ! ஆ! அரசரே!' என்று இடந்தோறும் அடிக்கடி புலம்பிக்கொண்டு இங்கும் அங்கும் ஓடினாள். மிகவாடினவளும் குரரீ என்னும் பக்ஷிபோல இரக்கத்துடன் மிகக் கதறுகிறவளும் துயரப்படுகிறவளும் புலம்புகிறவளும் அழகிய இடையுள்ளவளும் ஸமீபத்தில் ஸஞ்சரிக்கிறவளும் எதிரில் வந்தவளுமான அந்தத் தமயந்தியை, ஆடுகளை விழுங்கும் பெரிய சரீரமுள்ள ஒரு பாம்பு பசியுடன் கூடியதாகி விரைந்து பிடித்தது. பாம்பினால் விழுங்கப்படுகின்ற அவள் சோகத்தால் பீடிக்கப்பட்டவளாகி, எவ்விதம் நளனைக்குறித்துத் துக்கித்தாளோ அவ்விதம் தன்னைக் குறித்துத் துக்கிக்கவில்லை. 'ஆ! நாதரே! ஜனமற்ற இந்தவனத்தில் இந்தப்பாம்பினால்

[1] இரட்டித்ததனால் ஒரு சொல் விடப்பட்டது.

விழுங்கப்படும் குற்றமற்ற என்னை இப்பொழுது ஏன் நீர் தொடர்ந்து ஓடிவரவில்லை? பிரபுவே! காட்டில் என்னை விட்டுவிட்டு நீர் இப்பொழுது எவ்விதம் போனீர்? நிஷதராஜரே! பாவத்திலிருந்து விடப்பட்டுத் திரும்பவும் அறிவையும் மனத்தையும் தனங்களையும் அடைந்தபின் என்னைத் திரும்பவும் நினைத்து எவ்விதம் ஜீவித்திருப்பீர்? ஓ! நிஷத மன்னரே! அரசப்புலியே! குற்றமற்றவரே! ஸ்ரமமடைந்தவரும் பசியால் பீடிக்கப்பட்டவரும் வாடினவருமான [1] உம்முடைய ஸ்ரமத்தை எவன் போக்குவான்?' என்றாள்.

அடர்ந்த காட்டில் திரிகிற ஓர் மிருக வேடன், அவள் அழுவதைக் கேட்டு, வேகமாக ஓடிவந்தான். அவ்விதம் பாம்பினால் விழுங்கப்படும் நீண்ட கண்ணுள்ள அவளைக் கண்டு, அடர்ந்த காட்டில் திரிகின்றவனும் மிருக வேட்டையாடுகிறவனுமான வேடன் விரைப வனுகி வந்து கூர்மையான கத்தியினால் அதனை வாயில் விரைந்து பிளந்தான். ஓ! பாரத! மிருகத்தால் ஜீவிக்கும் அந்த வேடன் அசைவற்றிருக்கும் அந்தப் பாம்பைப் பிளந்து அவளை விடுவித்து ஜலத்தாலும் அலம்பித் தேற்றி, (அவள்) ஆகாரம் செய்த பிறகு, 'ஓ! மான்குட்டியினுடைய கண்போன்ற கண்ணுள்ளவளே! நீ யாரைச்சார்ந்தவள்? எப்படி இந்த வனத்தை அடைந்தாய்? ஓ! காந்தியுள்ளவளே! எப்படி இந்தப் பெரிய கஷ்டத்தையும் அடைந்தவளாகிறாய்?' என்று வினவினான். ஓ! பாரத! அரசனே! அவனால் அவ்விதம் கேட்கப்பட்ட தமயந்தி இவையாவற்றையும் நடந்தபடி அவனுக்குச் சொல்லினள். பாதிவஸ்திரம் தரித்தவளும் பருத்த பின்தட்டும் கொங்கையுமுள்ளவளும் அழகிய குற்றமற்ற அங்கங்களுள்ளவளும் பூர்ணசந்திரன் போன்ற முகமுள்ளவளும் வளைந்த இமைமயிருடன்கூடின கண்ணுள்ளவளும் இனிமையாகப் பேசுகின்றவளுமான அவளைப் பார்த்து மிருகவேடன் காமத்திற்கு வசமாயினன். பிறகு, காமத்தால் பீடிக்கப்பட்ட அவன் மெல்லிய அழகிய சொல்லால் அவளுக்கு இன்மொழி கூறினான். தமயந்தி அதனை அறிந்து கொண்டாள். பதிவ்ரதையான தமயந்தியும் அவனைக் கெட்டஎண்ணமுள்ளவனாக அறிந்து தீவிரமான கோபாவேசங்கொண்டவளாகிக் கோபத்தால் ஜ்வலிக்கின்றவள் போலானாள். கெட்ட எண்ணமுள்ளவனும் அற்பனும் (காம) ஆதுரனுமான அவனே, அக்னிஜ்வாலைபோல ப்ரகாசிக்கின்ற அவளைப் பலாத்கரிக்க ஆலோசித்தான். பர்த்தாவை

[1] இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

யும ராஜ்யத்தையும் பிரிந்த தமயந்தியோ, துக்கத்தால் பீடிக்கப்பட்டவளாகிப் பேசமுறை தவறிப்போன போது, 'நான் நளராஜரைத் தவிர வேறொருவனை மனத்தாலும் சிந்திக்கவில்லை யென்னும் இதனால் இந்த அற்பனை வேடன் உயிரை இழந்தவனாகி விழக்கடவன்' என்று அவனைக் கோபத்தால் சபித்தாள். அவளால் அந்தச் சொல் சொல்லப்பட்டவுடன், அந்த மிருகவேடன் உயிரற்றவனாகித் தீயால் எரிக்கப்பட்ட மரம்போலப் பூமியில் விழுந்தான்.

---

அறுபத்தோராவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தமயந்தி நளனைத்தேடும்போது ஆச்ரமமண்டலத்தில் முனிவர்களுடன் பேசியதும், அவர்கள் அம்மண்டலத்துடன் மறைந்தபின் அவள் தேர் யானை குதிரைகளுடன் ஜனக்கூட்டத்தைக்கண்டு அதன் தலைவனுடன் பேசினதும்)

தாமரை மலர்போன்ற கண்ணுள்ள அவள், மிருகவேடனைக் கொன்று, பயங்கரமானதும் ஜனமற்றதும் சிள்வண்டுக் கூட்டங்களால் ஒலிக்கப்பட்டதும் சிங்கம், சிறுத்தை, மான், புலி, பன்றி, கரடி இவைகளின் கூட்டங்களுள்ளதும் பலவகைப் பறவைக்கூட்டங்களால் சூழப்பட்டதும் மிலேச்சர்களாலும் திருடர்களாலும் அடையப்பெற்றதும் ஸாலம், மூங்கில், [1] தவம், அரசு, திந்துகம், இங்குதி, பலாசு, மருது, அரிஷ்டம், ஸ்யந்தனம், முள்ளிலவு இவைகளால் மறைக்கப்பட்டதும் நாவல், மா, லோத்ரம், கருங்காலி, தேக்கு, பிரம்பு இவைகளாலடர்ந்ததும் பத்மகம், நெல்லி, பலக்ஷம், கடம்பு, அத்தி இவைகளால் சூழப்பட்டதும் இலந்தைகளாலும் பிலவங்களாலும் மறைக்கப்பட்டதும் ஆலமரங்களால் அடர்ந்ததும் பரியாளம், பனை, பேரீந்து, கடுக்காய், தானறி இவைகளுள்ளதுமான காட்டை நோக்கிப் புறப்பட்டாள். அவள் அங்குப் பலவித தாதுக்களுள்ள பலவித மலைகளையும் பறவைகளால் ஒலிக்கப்பட்ட கொடிப்பந்தல்களையும் ஆச்சரியமான தோற்றமுள்ள குகைகளையும் நதிகளையும் ஸரஸ்ஸுகளையும் வாவிகளையும் ஸஞ்சரிக்கும் நானாவிதமான பறவைகளையும் பயங்கரமான ரூபமுள்ள பிசாசர் உரகர் அரக்கர் ஆகிய பலரையும் குட்டைகளை

---

1 ஒருவகை மரம்.

யும் தடாகங்களையும் மலையின் கொடுமுடிகளையும் ஆச்சரியமான தோற்றமுள்ள நதிகளையும [1] அருவிகளையும் அப்பொழுது பார்த்தாள். விதர்ப்பராஜன்மகள் அநேக எருமைகளையும் பனறிகளையும் நரிகளையும கரடிகளையும் குரங்குகளையும் பாம்புகளையும் கூட்டங கூட்டமாகப் பாாததாள். வலலமையுடனும் புகழுடனும் ஒளியுடனும் மேலான தைரியததுடனும கூடின தமயநதி அபபொழுது நளனைத்தேடிக்கொண்டு ஒருததியாக அலைந்தாள். ராஜபுததிரியும் கணவனைப பிரிநத துயரததால் இளைததவளுமான அநதத் தமயந்தி அப்பொழுது பயஙகரமான காட்டை அடைநது அங்கு ஒன்றுக்கும் பயப்படவிலலை. பிறகு, விதர்ப்பன்பெண்ணானவள் மிக்க துயரமுற்றுக் கணவனைப பிரிநத துயரால் சூழப்பட்ட அங்கஙகளுள்ளவளாகி ஒரு கறபாறையை அடைந்து புலம்பலானாள்.

தமயந்தி, 'சிஙகததினுடைய மாரபுககு ஒபபான மார்புள்ளவரே! மிகக தோள்வலிமை யுள்ளவரே! நிஷததேசத்து ஜனஙகளுக்கு அதிபரே! அரசரே! நீர் நிர்ஜனமான காட்டில் என்னை விட்டு எங்குப் போயினீர? வீரரே! மனிதப்புலியே! பூர்ணமான தக்ஷிணையுளள அஸ்வமேதமுதலிய யாகஙகள் செய்து ஏன் என்னிடததில் பொய்யாக நடக்கின்றீர்? நரஸ்ரேஷ்டரே! மிக்க காந்தியுளளவரே! சுபமானவரே! அரசருட் சிறநதவரே! எனக்கு எதிரில உமமால் சொல்லப்பட்டதை மெய்யாக்கக்கடவீர். ஓ! பூபதியே! அன்னபபறவைகளால உம்மிடததில் சொல்லப்பட்டதையும் என்னிடததில சொலலப்பட்டதையும் ஆலோசிக்கக்கடவீர். ஓ! மனிதருட் புலிபோன்றவரே! நன்கு ஓதப்பட்டவையும் அங்க உபாங்கங்களுடன் கூடினவையும் விஸதாரத்துடன் கூடியவையுமான நான்கு வேதங்களும் ஒரு பக்கமும ஸத்தியம ஒன்று ஒரு பக்கமுமன்றோ? பகைவரைக் கொல்பவரே! அரசரே! வீரரே! ஆகையால், முற்காலத்தில் என்னிடமசொல்லிய சொலலை உண்மையாகககக்கடவீர. அந்தோ! வீரரே! குற்றமற்றவரே! நான் உமக்குப் பிரியமானவளனறோ? பயங்கரமான இந்தக் காட்டில் ஏன் எனக்கு மறுமொழி சொலலவில்லை? பயங்கரமானதும் வாயைத திறந்துகொண்டிருப்பதும் பயங்கரமான சரீரமுள்ளதும் பசிகொண்டதுமான காட்டுக்கு அரசனான இந்தச சிங்கமானது என்னைப் பயமுறுத்துகின்றது; ஏன் என்னைக் காபபாற்ற வேண்டியவராக வில்லை? கல்யாணரே! அரசரே! 'எனககு உன்னைவிடப் பிரிய

[1] வேறு பாடம்.

மானவள் வேறு ஒருத்தியுமில்லை' என்று அப்பொழுது சொன்னீரே? முன் சொல்லப்பட்ட அந்தச் சொல்லை உண்மையாகச் செய்யக் கடவீர். ஓ! நராதிபரே! என்னால் நீர் விரும்பப்பட்டவராயிருக்கிறீர். பித்துக்கொண்டவளும் புலம்புகிறவளும் பிரியமானவளும் உம்மால் விரும்பப்பட்டவளும் மனைவியுமான எனக்கு ஏன் மறுமொழி கூறவில்லை. பூபதியே! பெரியகண்ணுள்ளவரே! பூஜ்யரே! பகைவரை வாட்டுபவரே! இளைத்தவளும் தீனையும் நிறமாறியவளும் அழுக்கடைந்தவளும் பாதி ஆடையைச் சுற்றிக்கொண்டவளும் நாதனில்லாதவள்போலப் புலம்புகின்றவளும் கூட்டத்தைப் பிரிந்த ஒற்றை மான்போலத் தனியாயிருப்பவளும் அழுகின்றவளுமான [1] என்னை ஏன் தேற்றவில்லை? ஓ! மஹாராஜரே! இந்தப் பெரிய காட்டில் தனியே இருப்பவளும் பதிவ்ரதையும் பேசுகின்றவளும் சொந்த மனைவியுமான [2] எனக்கு ஏன் மறுமொழி சொல்லவில்லை? மஹாராஜரே! நற்குலத்துடனும் நல்லொழுக்கத்துடனும் கூடியவளும் அழகிய எல்லா அங்கங்களாலும் விளங்குகின்றவளும் அனுஸரித்தவளுமான எனக்கு ஏன் உத்தரம் சொல்லவில்லை? ஓ! நரோத்தமரே! நிஷதாதிபரே! மனிதரிற் சிறந்தவரே! என் சோகத்தைப் போக்குகின்றவரே! இப்பொழுது இந்த மலையிலும், மிகப் பயங்கரமானதும் சிங்கங்களாலும் புலிகளாலும் அடையப்பட்டதுமான இந்தக்காட்டிலும், உம்மைப் படுத்திருப்பவராகவோ உட்கார்ந்திருப்பவராகவோ நிற்பவராகவோ நடப்பவராகவோ நான் காணவில்லை. துக்கத்தால் பீடிக்கப்பட்டவளும் உமது விஷயமான சோகத்தால் இளைத்தவளுமான (நான்) யாரிடம் சென்று, 'காட்டில் அரசா உன்னால் பார்க்கப்பட்டாரா?' என்று கேட்பேன்? அழகியவரும் மஹாத்மாவும் பகைவர் படையை அழிப்பவருமான அரசரை, 'இந்தக் காட்டில் இருக்கிறார்' என்று எவன் எனக்கு இப்பொழுது சொல்லுவன்? 'தாமரை மலர்போன்ற கண்ணுள்ளவரும் நீ தேடுகின்றவருமான நளராஜர் இவர்தாம்' என்னும் எவனுடைய மதுரமானசொல்லை இப்பொழுது கேட்கப்போகிறேன்? காந்தியுள்ளதும் நான்கு வளைந்த பற்களுள்ளதும் பெரிய மோவாயுள்ளதும் அரண்யராஜனுமான இந்தப் புலியானது எதிர்முகமாக வருகின்றது. அச்சமற்றவளாகி இதனைக் கேட்கிறேன். 'நீ மிருகங்களுக்கு அரசன். நீ இந்தக் காட்டில் (ஸஞ்சரிப்பதில்) வல்லவன். என்னை விதர்ப்பராஜன புத்ரியும்,

[1], [2] இரட்டித்ததலால் இரண்டு சொற்கள் விடப்பட்டன.

பகைவரைக் கொல்லுகின்றவரும் நிஷததேசாதிபதியுமான நள ராஜருடைய பாரியையும், பதியைத்தேடுகிறவளும், ஒன்றியாயிருப்பவளும், துன்பப்படுகிறவளும், சோகத்தால் இளைத்தவளுமான தமயந்தி என்றறி. மிருகேந்திர! சிங்கத்திற்கு ஒப்பான தோளுள்ளவரும் பெரிய கையுள்ளவரும் தாமரை இதழ்போன்ற கண்ணுள்ளவருமான அரசர் இங்கு உன்னால் பார்க்கப்பட்டாராகில் (எனக்குச்சொல்லித்) தேற்றுவாயாக. ஓ! அரண்யராஜனே! மிருக ஶ்ரேஷ்ட! அல்லது, அவரை நீ சொல்லாவிட்டால் என்னைத் தின்றுவிடு. இந்த அயரத்தினின்றும் விடுவி' (என்றுசொல்லியும்,) இந்த மிருகராஜன் காட்டில் என்னுடைய புலம்பலைத் தான் கேட்டும் சுத்தமான ஜலமுள்ளதும் கடலுக்கு ஒப்பானதுமான நதியைநோக்கிச் செல்லுகின்றது. உயர்ந்தவையும் ஆகாயத்தை அளாவியவையும் பலநிறமுள்ளவையும் மனத்தை மகிழ்விப்பவையுமான பல கொடுமுடிகளால் விளங்குகின்ற இந்த மலையைக் கேட்கிறேன். பல வித தாதுக்கள் நிறைந்திருப்பதும் பலவிதக்கற்களால் அலங்கரிக்கப் பெற்றதும் இந்தப்பெரிய காட்டிற்கு உயர்ந்தகொடிமரம் போன்றதும் சிங்கம், வேங்கை, யானை, பன்றி, கரடி, மான் இவைகளுடன் கூடியதும் பலவிதமான பறவைகளால் நான்கு பக்கங்களிலும் ஒலிக்கப்பெற்றதும் பலாசு, அசோகு, மகிழ, புன்னை இவைகளால் விளங்குவதும் நன்கு புஷ்பித்த கோங்குகளாலும் தவங்களாலும் பல வ்ருக்ஷங்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் பக்ஷிகளுடன்கூடின நதிகளாலும் கொடுமுடிகளாலும் அடர்ந்ததும் பூமிக்கு அழகியவடிவமுள்ள சூடாமணிபோலிருக்கின்றதுமான இந்தச் சிறந்தமலையை நளராஜரைக் குறித்துக் கேட்கிறேன்.

'ஓ! பகவானே! மலைகளுட் சிறந்தமலையே! அழகிய தோற்றமுள்ளவனே! புகழ்பெற்றவனே! புகலிடமானவனே! மிகவும் சுபமானவனே! மலையே! உனக்கு நமஸ்காரம். நான் உன்னை அடைந்து தலையால் வணங்குகிறேன்; என்னை அரசன்மகளும் அரசன்மருமகளும் அரசன்மனைவியும் புகழ்பெற்றவளுமான தமயந்தியென்று அறி. விதர்ப்பதேசாதிபதியும் மஹாரதனும் பூமிக்குப்பதியும் நான்கு ஜாதிகளையும் ரக்ஷிக்கின்றவனும் மிக்கதக்ஷிணையுள்ள ராஜஸூயம் அஶ்வமேதம் என்னும் யாகங்களைச் செய்தவனும் அரசர்களுள் சிறந்தவனும் மிக அழகிய பெரிய கண்களுள்ளவனும் [1] பிராம

[1] வேதங்களில் எனினும், வைதிக காமங்களில் எனினும், கடவுளிடத்தெனினும் ஆம்.

மணரிடம் பிரியமுள்ளவனும நல்ல நடையுள்ளவனும் சொல்தவருதவனும பொருமையற்றவனும் நல்லியற்கையுள்ளவனும் வீர்யமுள்ளவனும் மிக்கசெல்வமுள்ளவனும் தர்மந்தெரிந்தவனும் சுத்தமானவனும் விதர்ப்பதேசத்தை நன்கு காப்பாற்றுகிறவனும் பகைவர்கூட்டங்களை வென்றவனும் பிரபுவுமான பீமன் என்னும் பெயர்பெற்ற அரசன் என் தந்தை. பகவானே! உன் அருகில்வந்த என்னை அவனுடைய மகளென்று அறி. நிஷததேசத்தில் நரஸ்ரேஷ்டரும் வீரஸேனரென்ற பெயர்கொண்டவரும் மிக்க புகழ்பெற்றவருமான மஹாராஜர் எனது மாமனார். ஓ! மலைகளுட் சிறந்த மலையே! ஐசுவரியத்தையிழந்தவளும, பர்த்தாவைப் பிரிந்தவளும், நாதனற்றவளும், விசனத்துடன் கூடியவளும், நரஸ்ரேஷ்டருள மேலானவரும பாத்தாவுமான நளராஜரைத் தேடுகின்றவளும, இங்கு வந்தவளுமான என்னை அந்த வீரஸேனராஜரின புதல்வரும் வீரரும் செல்வமுளளவரும் உண்மையான பராகரமமுள்ளவரும் பகைவரைக் கொல்லுகின்றவரும் பொன்னிறமுள்ளவரும் புண்ய ஸ்லோகரென்று புகழ்பெற்றவரும ப்ராமமணப்ரியரும் வேதத்தை அறிந்தவரும பேசத்தெரிந்தவரும் புண்ணியம் செய்கின்றவரும் ஸோமபானஞ் செய்தவரும் அகனிசயனம செய்தவரும் (மற்ற) யாகங்களைச்செய்தவரும கொடையாளியும் சண்டை செய்கிறவரும நன்கு ஆள்பவருமான எந்த நளராஜர் பிதாவினிடமிருந்து கிரமமாகக் கிடைத்த தமது ராஜ்யத்தை நன்கு ஆளுகின்றாரோ அவருடைய பாரியையாக அறியக்கடவாய். ஓ! மலையரசே! உன்னால் ஆகாயத்தைப் பிளக்கின்ற இந்த நூறு கொடுமுடிகளால் இந்தப்பயங்கரமான காட்டில் நளராஜர் பார்க்கப்பட்டது உண்டா? சிறந்த யானை போன்ற நடையுள்ளவரும் புத்தியுள்ளவரும் நீண்டகையுள்ளவரும (பகைவரைப) பொருதவரும் பராக்ரமமுள்ளவரும் பலமுள்ளவரும் வீரரும் அதிககீர்த்தியுள்ளவரும் நிஷததேசத்திற்கு அதிபதியுமான எனது பர்த்தாவான நளராஜர் உன்னால் பார்க்கப்பட்டது உண்டா? சிறந்தமலையே! புலம்புகிறவளும் தனியாயிருப்பவளும் கலங்கினவளுமான என்னை, துக்கத்தை அடைந்த உனது மகளைத் தேற்றுவதுபோல ஏன் இப்பொழுது சொல்லால் தேற்றவில்லை? வீரரே! பகைவரை மிஞ்சியவரே! தர்மத்தை அறிந்தவரே! சொல்தவருதவரே! மஹீபதியே! அரசரே! இந்த வனத்தில் இருப்பீரானல் உம்மை நீரே காட்டக்கடவீர். மிக இனிமையானதும் கம்பீரமானதும் மேகமுழக்கம்போன்றதும் அமிர்தத்திற்கு ஒப்பானதும்

தெளிவானதும் அழகியதும், 'விதர்ப்பகுமாரீ! வா' என்று என்னை அழைப்பதும் அர்த்தம் நிரம்பினதும் என்சோகத்தை நாசம் செய்யக் கூடியதுமான மஹாதமாவும் நிஷதாதிபருமான அரசருடைய அந்தச் சொல்லை நான் எப்பொழுது கேட்பேன்?' என்று அந்த ராஜபுத்ரியான தமயந்தி அந்தச் சிறந்தமலையைப்பார்த்துச் சொல்லி அங்கிருந்து மறுபடியும் வடக்குத்திக்கை நோக்கிச் சென்றாள்.

சிறந்த ஸ்திரீயான அவள், மூன்று பகலிரவுகள்சென்று, ஒப்பற்றதும் திவ்யமான சோலைகளால் விளங்குவதுமான தவசிகளின் வனத்தைக் கண்டாள். வஸிஷ்டருக்கும் பிருகுவுக்கும் அத்ரிக்கும் ஒப்பானவர்களும் நியமமுள்ளவர்களும் ஆகாரவரையறையுள்ளவர்களும் அடக்கத்தையும் தூய்மையையும் உடையவர்களும் நீரைமட்டும் பருகுகின்றவர்களும் காற்றைமட்டும் புசிப்பவர்களும் அப்படியே இலைகளைமட்டும் உட்கொள்ளுகிறவர்களும் புலன்களை வென்றவர்களும் மிக்க பாக்யசாலிகளும் ஸ்வர்க்கத்தின் வழியைக் காண விருப்பமுள்ளவர்களும் மரவுரிகளையும் தோல்களையும் தரித்தவர்களும் தியானம்செய்கின்றவர்களும் இந்திரியங்களை நன்கு அடக்கினவர்களுமான தவசிகளால் விளங்குவதும், தவசிகளால் வஸிக்கப்பெற்றதுமான அழகிய ஆஸ்ரம மண்டலத்தைக் கண்டாள். பலவித மான்கூட்டங்களால் நிரம்பினதும் குரங்குக் கூட்டத்துடன் கூடியதும் தவசிகளுடன் கூடியதுமான (அந்த ஆஸ்ரம மண்டலத்தைப்) பார்த்தவுடனே அவள் தேறுதலை அடைந்தாள். அழகிய புருவமுள்ளவளும் அழகிய கூந்தலுள்ளவளும் அழகிய பின்தட்டுள்ளவளும் அழகிய கொங்கையுள்ளவளும் அழகிய பற்களமைந்த வாயுள்ளவளும் காந்தியுள்ளவளும் அழகியஜகனமுள்ளவளும் நன்கு கறுத்தும் நீண்டுமிருக்கின்ற கண்களுள்ளவளுமான அந்த வீரசேன புத்திரன் பாரியையானவள், ஆஸ்ரமங்களுள்ளவிடத்தில் நுழைந்தாள். ஸ்திரீரத்னமும் மிக்க பாக்யவதியும் இரக்கப்படத்தக்கவளுமான அந்தத் தமயந்தி தவமுநியோர்களை நமஸ்கரித்து விநயத்தால் தலைகுனிந்து நின்றாள். சிறந்த தவசிகளான அவர்களனைவராலும், 'உன் (வரவு) நல்வரவாகுக' என்று சொல்லப்பட்டாள்.

அந்தத் தபோதனர்கள், அங்கு இவளுக்கு முறைப்படி உபசாரம்செய்து, பிறகு, 'உட்காரக்கடவாய். நாங்கள் என்ன செய்ய வேண்டும்? சொல்' என்று சொன்னார்கள். அழகிய இடையுள்ள (அவள்), 'ஓ! குற்றமற்றவர்களே! மிக்கபாக்யவான்களே! இங்கே பூஜ்யர்களான உங்களுக்குத் தவங்களிலும் அக்னிகளிலும் தர்மங்களி

லும் மிருகங்களிலும பறவைகளிலும ஸ்வதர்மானுஷ்டானங்களி லும் க்ஷேமமிருக்கின்றதா?' என்று அவர்களைக் கேட்டனள். அவர் கள, புகழுள்ள அவளைப் பார்த்து, 'சுபமானவளே! எல்லாவற்றிலும் குசலமே. எல்லா அங்கங்களிலும குற்றமற்றவளே! நீ யார்? எதைச் செய்யவிரும்புகின்றாய்? சொலவாயாக. இங்கே உனது சிறந்த உருவத்தையும மேலான காந்தியையும் கண்ட எங்களுக்கு ஆச் சரியம் உண்டாயிற்று. தேறுதலடை; துயரப்படாதே. கல்யாணி! நீ இந்த வனத்தின் தேவதையா? இந்த மலையின் தேவதையா? அல்லது, இந்த நதியினுடைய தேவதையா? இகழப்படாதவளே! உண்மையைச் சொல' என்று கேட்டனர்.

அவள், அந்த ரிஷிகளை நோக்கி, 'ஓ! அந்தணர்களே! யான் இந்த வனத்தின தேவதை அலலேன்; இந்த மலையின தேவதையு மல்லேன்; நதியின்தேவதையுமே அல்லேன். ஓ! தபோதனர் களே! நீங்கள்யாவரும என்னை மானிட மங்கையாக அறியக்கடவீர். விவரமாகச சொல்லுகிறேன். அதனை முழுமையும் என்னிட மிருந்து கேளுங்கள். விதர்ப்ப தேசத்தில் பீமன்என்னும அரசன் ஆண்டுகொண்டிருக்கிறான். பிராமமணஸ்ரேஷ்டர்களே! என்னை அவனுடையபெண்ணாக யாவரும அறியக்கடவீர். நிஷததேசாதி பதியும புத்திமானும புகழ்மிக்கவரும வீரரும் யுத்தத்தில் ஜயிக் கின்றவரும் கற்றறிந்தவருமான நளராஜரென்னும் அரசர் எனது நாயகர். தேவதைகளைப் பூஜிப்பதை முக்கியமாகக்கொண்டவரும் பிராம்மண ஜனங்களிடத்தில் அன்புள்ளவரும் நிஷத வம்சத்தைக் காப்பாற்றுகிறவரும் மிக்க தேஜஸுள்ளவரும் மிக்க பலமுள்ளவ ரும் மெய்மமையுடையவரும் தர்மத்தை அறிந்தவரும அறிவாள ரும் சொல்தவறாதவரும் பகைவரை நொறுக்குகின்றவரும் பிராம் மணப்ரியரும் தெய்வத்தை முக்கியமாகக் கொண்டவரும் காந்தி யுள்ளவரும் பகைவர்பட்டணங்களை ஜயிப்பவரும் இந்திரனுக்கு ஒப்பான காந்தியுள்ளவரும் நீண்ட கண்ணுள்ளவரும் பூர்ணசந் திரன் போன்ற முகமுள்ளவரும் பகைவர்களைக் கொல்லுகிறவரும் சிறந்த யாகங்களைச் செய்தவரும் வேதவேதாங்கங்களின் கரையை அடைந்தவரும் பகைவரைப் போரில் கொல்லுகின்றவரும் ஸூரி யனையும் சந்திரனையும போன்ற காந்தியுள்ளவரும் பூமிபாலரும் ஸத்தி யத்தையும் தர்மத்தையும் முக்கியமாயுடையவரும் ராஜஸ்ரேஷ்ட ருமான நளராஜரென்னும் அந்த எனது பார்த்தா, ரகஸ்யமாகக் கெடுப்பதில் எண்ணமுள்ளவர்களும் கல்வியறிவில்லாதவர்களும்

சூதில் தேர்ந்தவர்களும கபடமுள்ளவர்களுமான இழிவானவர் சிலரால் (சூதில) அழைக்கபபட்டு ராஜயததையும் தனததையும் தோற்றூர். தமயந்தியென்று பெயர்பெற்றவளும நாடகரைக் காண்பதில் ஆசை கொண்டவளுமான என்னை அநத ராஜஶ்ரேஷ்ட ருடைய பாரியையாக அறியுஙகள். அப்படிபபட்ட நான் துயர மடைநதவளாகிப போரில் வலலவரும மகாதமாவும அஸ்தரமறிந்த வரும் பர்ததாவுமான நளராஜரைச சோலைகளிலும மலைகளிலும் தடாகங்களிலும் ஆறுகளிலும அப்படியே எலலாக்குடைகளி லும் அபபடியே காடுகளிலும எஙகும் தேடிககொணடு இஙகு ஸஞசரிககிறேன. நான எவாநிமிததம மிககொடியதும் பயத தையுணடுபணணககூடியதும கோரமானதும புலிகளாலும மான களாலும அடையப்பட்டதுமான இநதத துககமான வனததை அடைந்தேனே நிஷததேசதது ஜனஙகளுககுப் பதியான நளராஜ ரென்னும் அந்த அரசா பகவான்களான உங்களுடைய இந்த அழ கிய தபோவனததை அடைந்ததுணடா? சில பகலிரவுகளில் நள ராஜரைப் பாரேனுகில இந்தத தேகததைவிட்டு ஜீவனை மோக்ஷத துடன் சேர்ப்பேன. அந்தப் புருஷஶ்ரேஷ்டரில்லாமல் இநத உயிர் வாழ்க்கையினுல எனககு என்ன பயன்? கணவரைப் பிரிந்த துய ரால் வருத்தப்பட்ட நான் எவ்விதம் இருபபேன்?' என்று சொன் ஞள். பிறகு, வனத்தில் அவ்விதம் புலமபுகின்றவளும் தனியாயிருப் பவளும் பீமபுதரியுமான தமயந்தியை ஸதயவாதிகளான அந்தத் தவசிகள், 'ஓ! கலயாணி! சுபமானவளே! வருங்காலம் உனக்கு க்ஷேமத்தைதத தருவதாகுமென்பதை நாங்கள தவததால் காண்கி ரும். நளனை விரைவில பார்ப்பாய். ஓ! பீமன்மகளே! நிஷத தேசததிறகு அதிபதியும் பகைவர்களைககொல்லுகின்றவனும் தர்மா னுஷ்டானஞ்செய்பவருள் சிறந்தவனுமான நளனைத துன்பமற்றவ னைப் பார்ப்பாய். ஓ! கல்யாணி! எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டவனும் எலலா ரதனங்களுடனுஙகூடினவனும் அதே சிறந்த நகரததை ஆளுகின்றவனும பகைவரை அடக்குகின்றவனும் பகைவர்களுக்குப் பயத்தைச செய்பவனும நண்பர்களுக்குத் துயரைப் போக்குகிறவனும் க்ஷேமங்களுக்கிருப்பிடமானவனும் அரசனுமான பதியை அடைவாய்' எனறு சொல்லினர். அந்தத தவசிகள் ராஜபுததிரியான நளனுடைய பிரியமான மனைவியைப் பார்தது இவ்விதம் சொல்லி, அக்னிஹோதரங்களுடனும் ஆஶ்ர மங்களுடனும் மறைந்தனர். அபபொழுது, குற்றமற்ற அங்க

முள்ளவளும் வீரசேனராஜன் மருமகளுமான அந்தத் தமயந்தி பெரிய ஆச்சரியத்தைக் கண்டு வியப்படைந்தனள். தமயந்தி, 'நான் பார்த்தேனே இது என்ன? என்றால் கனவு காணப்பட்டதோ? இங்கு என்ன ஸம்பவம் நேர்ந்தது? அந்தத் தவசிகள் யாவரும் எங்கே? அந்த ஆஸ்ரமமண்டலம் எங்கே? புண்யமான ஜலமுள்ளதும் பக்ஷிகளால் அடையப்பெற்றதும் அழகியதுமான அந்த நதி எங்கே? கனிகளாலும் மலர்களாலும் விளங்கும் அழகிய அந்த மரங்கள் எங்கே?' என்று ஆலோசித்தாள்.

மனிதப்புலியே! இவ்விதம் ஆச்சரியமடைந்தவளும் தாமரை மலர்போன்ற கண்ணுள்ளவளும் பீமனமகளும் அழகிய சிரிப்புள்ளவளுமான தமயந்தி, நெடுநேரம் ஆலோசித்து, கணவனைப்பிரிந்த துயரமிக்கவளும் எளிமையுற்றவளும் நிறம்மாறின முகமுள்ளவளும் ஆயினள். பிறகு, அவள், அங்கிருந்து வேறிடத்தை அடைந்து, கண்ணீரால் (தடைப்பட்டு) விளங்காத சொல்லுடன் ஓர் அசோக மரத்தைக் கண்டு கண்ணீரால் நிறைந்த கண்களுள்ளவளாகி, வனத்தில் மலர்ந்ததும் தளிர்களால் அலங்கரிக்கப்பெற்றதும் மனத்திற்குப்பிடித்ததும் பக்ஷிகளால் சப்திக்கப்பெற்றதும் மரங்களுட்சிறந்த மரமுமான அந்த அசோகமரத்தை அடைந்து, 'அந்தோ! கஷ்டம்! இந்தக்காட்டின் நடுவில் அழகிய இந்த மரமானது பலவான (மலர் கனி முதலிய) அலங்காரங்களுடன் அழகிய சிறந்த மலைபோல் விளங்குகின்றது. ஓ! இனிய தோற்றமுள்ளவனே! அசோக! சீக்கிரம் என்னைச் சோகமற்றவளாகச் செய். அரசர் துயரமும் அச்சமும் துன்பமுமற்றவராயிருப்பதை நீ பார்த்ததுண்டா? பகைவரை அடக்குகின்றவரும் தமயந்தி யென்ற எனக்குப் பிரிய பதியும் நிஷததேசத்தின் அதிபதியும் ஒற்றைவஸ்திரத்தின் பாதியால் சுற்றப்பட்டவரும் அழகிய உடம்பின் தோலுள்ளவரும் துக்கத்தால் பீடிக்கப்பட்டவரும் வீரரும் இந்தக் காட்டை அடைந்தவருமான நளராஜரெனனும் எனது நாயகரைப் பார்த்திருக்கின்றாயா? ஓ! அசோக மரமே! நான் துயரமற்றவளாகச் செல்லும்படிசெய். அசோகமே! என்னுடைய சோகத்தைப் போக்குவதால் (அசோகன = சோகத்தைப் போக்குகிறவன் என்னும்) உண்மையான பெயருள்ளவனாகக் கடவாய்' என்று புலம்பினாள்.

இவ்விதம், பீமபுத்ரியான அந்தச் சிறந்த ஸ்திரீ துன்பமுற்றவளாகி அந்த அசோக மரத்தைச் சுற்றிக்கொண்டு மிக்க பயங்கர

மான (வேறு) ஓர் இடததை அடைந்தாள. அவள் அனேக மரங் களையும் பல ஆறுகளையும அப்படியே அழகிய பல மலைகளையும் பல மிருகங்களையும் பறவைகளையும கண்டாள். அப்பொழுது, பீமன் மகள் கணவனைத தேடிக்கொண்டு அங்குள்ள குகைகளையும் தாழ்வரைகளையும் ஆச்சரியமான தோற்றமுள்ள நதிகளையும பார்ததாள். பிறகு, அழகிய சிரிபபுள்ள தமயநதி அதிக வழி யைக கடந்து, தெளிவான ஜலமுளளதும் அழகியதும் மிகக் குளிர்ந்த ஜலமுள்ளதும் அகனறதும் மடுக்களுளளதும் நீர்நொச்சி களால சூழப்பட்டதும் கிரௌஞ்சஙகளாலும குராங்களாலும மிக ஒலிககபபெற்றதும் சகரவாகஙகளால சபதிககப்பெற்றதும் ஆமைகளும் முதலைகளும் மீன்களும அடர்நததும் விஸதாரமான திட்டுககளால் விளஙகுவதும் ரமயமாயுள்ளதுமான ஒரு நதியைத தாணடுகினறதும யானைகளாலும குதிரைகளாலும தேர்களாலும் நெருஙகினதுமான பெரிய ஜனககூட்டததைக கணடாள். புக ழுள்ளவளும சிறந்த இடையுள்ளவளும் பிததுக்கொண்டவள் போனறு உருவமுளளவளும துயரததால பீடிககப்பட்டவளும அப்படியே பாதி ஆடையுடுததவளும இளைததவளும் நிறமமாறின வளும் அழுக்கடைநதவளும புழுதியுடன கூடிய அவிழ்நத கூந்தலுள்ளவளும நளனது மனைவியுமான அவள, பெரிய ஜனக் கூட்டததைக் கண்டவுடனே, அருகிற்போய், ஜனங்களின் நடுவில நுழைநதாள். மனிதர்கள், அஙகு அவளைககணடு, சிலர் பயந்து ஓடினர்; சிலர் கவலைமிககவராயினர்; அஙகே சிலர் கூககுர லிட்டனர்; சிலர் அவளைப் பரிகசித்தனர்; சிலர் பொறுமைப பட்டனர். ஓ! பாரத! சிலர் அவளிடததில் தயையைச் செய்த னர். 'ஓ! கலயாணி! நீ யார்? யாரைச சார்ந்தவள்? காட்டில் எதைத் தேடுகின்றாய்? நாங்கள் இங்கே உன்னைக்கண்டு அஞ்சு கிறோம. நீ மானிடப்பெண்ணோ? கலயாணி! நீ இந்த வனததிற்கா வது மலைக்காவது அல்லது திக்குக்காவது தேவதையா? நீ இயக் கியா? ராக்ஷஸியா? அல்லது தேவ ஸ்திரீயா? உண்மையைச் சொல். உன்னை நாஙகள் சரணமடைந்தோம. எலலா விததததிலும் எங்க ளுக்கு க்ஷேமத்தைச் செய்வாயாக. குற்றமற்றவளே! எங்களை ரக்ஷிப்பாயாக. ஓ! கல்யாணி! இந்தக் கூட்டமானது, எல்லாவிதத தாலும் க்ஷேமமுள்ளதாகி, இங்கிருந்து விரைவாகச் செல்லும்படி யும் எங்களுக்கு க்ஷேமமுண்டாகும்படியும் செய்வாயாக' என்றும் வேண்டலும் செய்தனர்.

ராஜபுத்ரியும கற்புள்ளவளும் கணவனைப் பிரிந்த துயரால் வருத்தப்பட்டவளுமான தமயந்தி, அந்தக கூட்டத்தால் அவவி தம் சொல்லப்பட்டவளாகி, பிறகு, கூட்டத்தலைவனையும் கூட்டத தையும் நோக்கி, 'யௌவனமுள்ளவர்களும் முதியவர்களும சிறுவர்களும் கூட்டத்தின முனபோகின்றவர்களுமான இஙகுள்ள அனைவரும, என்னை, அரசன மகளும அரசனமருமகளும் அரசன மனைவியும் கணவரைக காணபதில ஆசையுள்ளவளுமான மனிதப் பெண்ணாக அறியக் கடவீர். விதர்பபதேசததரசன் எனது தந்தை. நளராஜரென்று பெயா பெற்றவரும மிக்க பாகயசாலியுமான நிஷததேசததரசர் எனது நாயகர். பகைவரால் வெல்லப்படாத அவரைத் தேடுகின்றேன். புருஷஶ்ரேஷ்டரும் பகைவர் கூட்டததைக்கொல்லுகினறவரும் எனது நாயகருமான நளராஜரை அறிநதிருப்பீராகளானால் சீககிரம சொல்லுஙகள' எனறு மறுமொழி சொனனாள். பெரியகூட்டததிறகுத தலைவனும சுசியெனறு பெயருளளவனுமான கூட்டத்தை நடததுபவன, குற்றமற்ற அஙகமுள்ள அவளை நோககி, 'ஓ! கலயாணி! என் வாாததையைக கேள. அழகிய சிரிப்புள்ளவளே! நான் கூட்டததை நடததும் கூட்டததலைவன். புகழுள்ளவளே! நளனென்று பெயருள்ள மனிதனை நான பாாககவிலலை. மனிதாலலாத மற்றப் பிராணிகளால அடையப்பட்ட இந்தக் காடு முழுவதிலும யானைகளையும வேஙகைகளையும் காட்டெருமைகளையும சிறுததைகளையும் கரடிகளையும் மான்களையும் பார்க்கிறேன். பெரியகாட்டில உன்னைததவிர வேறு மானிடபபெணணையாவது மானிடனையாவது நான பாாக்கவிலலை. ஆதலால், யக்ஷராஜனான [1] மணிபததிரன எஙகளுககு அருள்புரிவானாக' எனறான். பிறகு, அவள், எலலா வியாபாரிகளையும அந்தக் கூட்டததலைவனையும் நோக்கி, 'இநதக் கூட்டம எஙகே போகின்றது? இதனைச் சொலலுஙகள' என்று வினவினள. கூட்டததலைவன், 'ஓ! அரசன் மகளே! இந்தக் கூட்டமானது உணமையைக் காணபவனான ஸுபாஹுவென்னும சேதிராஜனுடைய தேசததைக்குறிதது லாபத்திற்காக விரைந்து போகின்றது' என்றான்.

---

1 'மணிபத்ரன குபேரனுககடுததபடியான யக்ஷர் தலைவன். காடுகளையும் மலைகளையும கடநது செல்லும பிரயாணிகளையும் வாத்தகக்கூட்டங்களையும் காககும்தெய்வம்' எனபது இஙகிலீஷ் மொழி பெயர்ப்பு.

அறுபத்திரண்டாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தமயந்தி வர்த்தகர் கூட்டத்துடன் சென்று இரவு ஒரு குளக்கரையில் தங்கியதும், நீர்குடிக்கவந்த யானைகள் தமயந்தியைத்தவிரப் பெரும்பாலாரைக் கொன்றதும், மிஞ்சினவர்களுடன் தமயந்தி சேதிநகர் அடைந்ததும், அந்நாட்டரசன் தாய் அவளைத் தன் அந்தப்புரத்தில் வஸிக்கச் செய்ததும்.)

குற்றமற்ற அங்கமுள்ள அவள், அப்பொழுது கூட்டத்தலைவனுடைய அந்தச் சொல்லைக்கேட்டுக் கணவனைக் காண்பதில் ஆசைகொண்டவளாகி, அந்தக் கூட்டத்துடன்கூடவே போயினள். பிறகு, வியாபாரிகள், பலநாட்களை சென்றபின், பயங்கரமான பெரிய காட்டில் நான்கு பக்கத்திலும் அழகியதும் தாமரை மலர்களுடனும் ஸௌகந்திக மலர்களுடனுங் கூடியதும் ரம்யமானதும் மிக்க புற்களும் விறகுகளுமுள்ளதும் அனேகம் கிழங்குகளுடனும் கனிகளுடனும் கூடினதும் பலவித பக்ஷிகளால் அடையப்பெற்றதுமான தடாகத்தைக் கண்டார்கள். மிகக்களைத்த வாகனங்களுள்ள அவர்கள், சுத்தமான ஜலமுள்ளதும் மனத்தைக் கவரக்கூடியதும் நன்கு குளிர்ந்ததுமான அந்தத் தடாகத்தைக் கண்டு, தங்குவதற்கு எண்ணங் கொண்டார்கள்; கூட்டத்தலைவனுடைய ஸம்மதத்தின்மேல் சிறந்த வனத்திலும் நுழைந்தார்கள். பெரியகூட்டமானது ராத்ரி முழுதும் தாமரைத் தடாகத்தை அடைந்து வஸித்தது. பிறகு, ஒலிஅடங்கிய பாதி ராத்திரிவேளையில் இருட்டில வர்த்தகக் கூட்டம அப்பொழுது களைத்துத் தூங்கும்போது, மதப்பெருக்கால் கலங்கின ஒரு யானைக்கூட்டமானது மலையின் தாழ்வரையினின்றும் நீர் குடிப்பதற்காக வந்தது; பிறகு, அந்த வர்த்தகக்கூட்டத்தையும் கூட்டத்திலுள்ள அனேகம் யானைகளையும் பார்த்தது. அப்பொழுது, அதிக மதமுள்ள அந்தக் காட்டுயானைகளெல்லாம் அந்தக் கிராமத்து யானைகளைக் கண்டு கொல்ல எண்ணங்கொண்டு வேகமாக எதிர்த்தோடிவந்தன. எதிர்த்துவரும் அந்த யானைகளின் வேகமானது மலையின் உச்சியினின்றும் சிதறிப் பூமியிலவிழும் கொடுமுடிகளுடைய வேகம்போலத் தாங்கமுடியாததாயிருந்தது. யானைகள் வேகமாக ஓடும்போது, காட்டிலுள்ள வழிகள் மறைந்துபோயின.

தாமரைக்குளத்தின்வழியை மறைத்துக்கொண்டு நன்கு தூங்குகிறதும் பூமியில் புரளுகின்றதுமான அந்தப் பெரிய கூட்டத்தை அந்தக் காட்டுயானைகள் விரைந்து துகைத்தன. தூக்கத்துடன் பேரிரைச்சலிடுகின்றவர்களும் புகலிடத்தை விரும்புகிறவர்களும் பெரிய பயங்காரணமாகக் காட்டிலுள்ள புதர்களைக்குறித்து ஓடுகிறவர்களுமான அவர்கள் கொல்லப்பட்டார்கள். யானைகளால் சிலர் தந்தங்களாலும் சிலர் துதிக்கைகளாலும் சிலர் கால்களாலும் அடிக்கப்பட்டவர்களாகவும் கொல்லப்பட்ட ஒட்டகங்களாலும் குதிரைகளாலும் நிறைந்தவர்களாகவும் கலங்கின காலாள் ஜனங்களுள்ளவர்களாகவும் பயத்தால் ஓடுகின்றவர்களாகவும் அப்பொழுது ஒருவராலொருவர் அடிக்கப்பட்டவர்களாகவும் பயங்கரமான சப்தங்களை வெளியிட்டுக்கொண்டு பூதலத்தில் விழுந்தார்கள்; மரங்களில் தாக்கி நொறுங்கினவர்களாகி மேடுபள்ளமான இடங்களிலும் விழுந்தார்கள். அரசனே! மிக்க செல்வத்துடனிருந்த வியாபாரிக் கூட்டம் இப்படிப் பலவாற்றாலும் பலயானைகளால் தெய்வவசத்தால் ஆக்ரமித்துக் கொல்லப்பட்டது.

'கஷ்டமான இந்த அக்னி உண்டாயிற்று; காப்பாற்றுங்கள்; இப்பொழுது ஓடுங்கள்; இந்த ரத்னக்குவியல் சிதறிவிட்டது; எடுத்துக்கொள்ளுங்கள்; ஏன் ஓடுகின்றீர்கள்? இந்தப்பணம் பொதுவானதே. என்வார்த்தை பொய்யன்று. மிகப்பயந்தவர்களே! திரும்பவுமே சொல்லுகிறேன். ஆலோசனை செய்யுங்கள்' என்று மூவுலகத்திற்கும் பயத்தை உண்டுபண்ணும் பெரியசப்தம் உண்டாயிற்று. இவ்விதம் சொல்லிக்கொண்டு, (அவர்கள்) அப்பொழுது பயத்தால் ஓடினார்கள். பயங்கரமான அந்த ஜனங்களின் நாசமானது அவ்விதம் நடக்கும்போது தமயந்தி பயத்தால் கலங்கினமனமுள்ளவளாகி விழித்துக்கொண்டாள். அவ்விடத்தில் எல்லா உலகத்திற்கும் பயத்தை உண்டுபண்ணும் நாசத்தைப் பார்த்தாள். தாமரைமலருக்கு ஒப்பான கண்ணுள்ள சிறுமியானவள் முன் பார்த்திராத அதனைக் கண்டு, (அந்தத் துயரத்தில்) ஸம்பந்தமுள்ளவள் போலத் தேறுதலற்றவளாயும் பயத்தால் கலங்கினவளாயும் எழுந்தாள். அங்கு, கூட்டத்தினின்றும் அதிக காயப்படாதவர்களாக விடப்பட்டவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து, 'இது எந்தக் கர்மத்தின் பயன்? நம்மால் மிக்க கீர்த்தியுள்ள மணிபத்திரனும் பூஜிக்கப்படவில்லை. அப்படியே, யக்ஷர்களுக்கு அதிபதியும் செல்வமுள்ளவனும் பிரபுவுமான குபேரனும் பூஜிக்கப்படவில்லை; நிச்சயம். அல்

லது, இடைபூறுசெய்யும் தேவதைகளுக்கு முதலில் பூஜைசெய்யப் படவில்லை. அல்லது, இது சகுனங்களுடைய விபரீதமான பயனென் பது நிச்சயம். கிரஹங்களோ விபரீதமில்லை. வேறு எது இவ்விதம் வந்தது?' என்றனர். மற்றும் சிலர், இரக்கப்படத்தக்கவளும் சுற்ற மும் பொருளுமற்றவளும் பித்துக்கொண்டவள் போன்ற தோற்ற முள்ளவளும் விகாரமான உருவமுள்ளவளும் மனிதரல்லாத உரு வத்தைச் செய்துகொண்டு இப்பொழுது பெரிய கூட்டத்தினுள் நுழைந்தவளுமான இந்தப்பெண்ணால் மிக்க பயங்கரமான மாயை முன்னமே இவ்விதம் செய்யப்பட்டது. (இவள்) அரக்கியோ? அல் லது இயக்கியோ? அல்லது பயத்தை உண்டுபண்ணும் பேய்ச்சியோ? இந்தத் தீமைமுழுதும் இவளுடையதே; இது நிச்சயம். இவ்விஷயத் தில் ஆலோசனைசெய்ய வேண்டாம். கூட்டத்தைக் கொன்றவளும் பலருக்குத் துக்கத்தை உண்டுபண்ணுகின்றவளும் கூட்டத்திற்கே பிசாசு போன்றவளுமான அந்தப் பாவியைப் பாபபோமானால் கற் களாலும் புழுதிகளாலும் புற்களாலும் கட்டைகளாலும் முஷ்டிக ளாலும் அவசியமாகவே கொல்ல வேண்டும்' என்று சொன்னார் கள். தமயந்தியோ, மிக்க பயங்கரமான அவர்களின் அந்த வார்த் தையைக்கேட்டு வெட்கமுற்றுப் பயந்தவளாகி நடுங்கிக்கொண்டு அந்தத் தீமை வருமோ என்று சந்தேகித்துக் காடுள்ள இடத்துக்கு ஓடினாள். அவள், 'அந்தோ! என்மேல் தெய்வத்திற்குப் பயங்கர மான பெரிய கோபமிருக்கின்றதே? க்ஷேமத்தைத் தொடர்வதாயு மில்லையே? இது எந்தக் கர்மத்தின் பயன்? செய்கையாலோ மனத் தாலோ வாக்கினாலோ ஒருவருக்கும் ஒரு தீங்கும் அணுவளவே னும் செய்யப்பட்டதாக நான் நினைக்கவில்லையே. இது எந்தச்செய் கையின் பயன்? வேறு ஜன்மத்தில் செய்யப்பட்ட மஹத்தானபாவம் என்னை அடைந்திருக்கிறதென்பது திண்ணம். நான், பர்த்தாவின் ராஜ்யம் கவரப்பட்டதும் தன்னுடைய ஜனத்திலிருந்தும் தோல்வி யும் கணவனைப் பிரிதலும் மக்களைப் பிரிதலும் நாதனில்லாமையும் பல துஷ்ட ஜந்துக்களடர்ந்த வனத்தில் வாஸமும் ஆகிய மீள முடியாததும் கஷ்டமாயுள்ளதுமான இந்த ஆபத்தை அடைந்து விட்டேனே' என்று தன்னைப்பற்றி அழுதாள்.

ஓ! நராதிப! பிறகு, மறுநாள் வந்தவுடன், கொல்லப்பட்டவர் கள் போக மிஞ்சின ஜனங்கள், காட்டுப் புதரிலிருந்து வெளிவந்து, அப்பொழுது கொலைசெய்யப்பட்ட உடன்பிறந்தானையும் தந்தை யையும் மகனையும் நண்பனையும் குறித்துத் துக்கித்தார்கள். அழ

கிய சிரிபபுள்ள தமயநதி, அபபொழுது, கூட்டம கொலலபபடுகை யில, பிராமமணாகளுடனிருநதமையால் அநத வனததில அழிககப படவிலலை. அஙகே, தமயநதி, 'எனனுல எனன பாவம செயயப பட்டதோ? ஜனமற்ற காட்டில எனனுல அடையபபட்ட இநத ஜனககட்டும் எனனுடைய துரதிருஷடததாலேயே யானைககூட்டத தால கொல்லபபட்டது. எனனுல இபபொழுதும அநதத துயரம நெடுங்காலம அடைய வேண்டியிருக்கிறதெனபது நிசசயம. காலம்வராமல (மனிதன்) மரிககமாட்டான் எனனும் பெரியோரின உபதேசததைக் கேட்டிருககிறேன். (அதனுல்தான்,) துககததை அடைந்த நான் இபபொழுது யானைக் கூட்டததால் துனைக்கப படவிலலை. இவ்வுலகில மனிதாகளுக்குத் தெயவததால் செயயப படாதது ஒனறும் இல்லை. என்னுல, குழந்தைப்பருவததிலும், இந தத துககம் வருவதற்குக காரணமான பாவசசெயல செயகையா லும் மனததாலும சொல்லாலும சிறிதும் செய்யபபட்டதிலலை. ஸவயம்வரததிறகாக வநத லோகபாலாகளான தேவாகள அந்த ஸவயம்வரததில நளராஜருக்காக எனனுல் மறுககபபட்டாாகள். அவர்களுடைய பிரபாவததாலேயே நான பிரிவை அடைந்தேன் எனறு நிச்சயமாக நினைககிறேன' எனறு வருநதினுள். அரசப புலியே! துக்கததால பீடிககபபட்டவளும் சிறநத ஸதிரீயும கற்புள்ளவளுமான அந்தத தமயந்தி இவை முதலிய அந்தப் புலமபல்களைப புலம்பித துக்கமும் சோகமும் மேலிட்டவளாகி, அப்பொழுது கொலலப்பட்டவர்கள் போக மிஞ்சினவர்களும வேதததின கரைகணடவர்களுமான பிராம்மணர்களுடன் சென்ற னள். போகின்ற அநதச் சிறுமியானவள், நெடுநேரம் சென்றபின, மெயபேசுகிறவனும சேதிராஜனுமான ஸுபாஹுவினுடைய பெரிய பட்டணததை மாலைககாலததில் அடைநதாள.

அழகான எலலா அஙகஙகளுமுள்ளவளும் பாதி ஆடையுடுத் தவளுமான அவளோ, உயர்நத கோபுரத்தையுடைய ஸுபாஹுவின் அந்தச் சிறந்த பட்டணததில நுழைந்தாள். தளர்ச்சியுற்றவளும் இளைததவளும் எளிமையுற்றவளும் அவிழ்ந்த கூந்தலுள்ளவளும அழுககடைந்தவளும பித்துக்கொண்டவள்போலப் போகினறவளு மான அவளை நகரவாசிகள் பார்த்தார்கள். அப்பொழுது, சேதி ராஜனது பட்டணததில் நுழைகின்ற அவளை அஙகே கணடு கிராம வாஸிகளின் புத்திரர்களான சிறுவர்கள் குதூஹலத்தினுல் பின் தொடர்ந்தார்கள். அவள் அவர்களால் சூழப்பட்டவளாகி ராஜ

மாளிகையின் ஸமீபத்தை அடைந்தாள். உப்பரிகையிலிருக்கும் அரசன் தாய், ஜனங்களால் சூழப்பட்ட அவளைக் கண்டு செவிலியை நோக்கி, 'போ; அவளை இங்கே என்னிடம் அழைத்துவா. துயர முற்றவளும் பாதுகாவலை விரும்புகிறவளுமான சிறுமியானவள் ஜனங்களால் துன்புறுத்தப்படுகிறாள். பித்துக்கொண்டவள் போல வேஷமுள்ளவளும் லக்ஷ்மியைப்போன்றவளும் நீண்ட கண்ணுள்ளவளு மான கல்யாணியானவள் எனது வீட்டை விளங்கச் செய்கிறாள். (அவளுடைய) அவ்வித ரூபத்தையும் பார்க்கிறேன்' என்று சொல் லினாள். அரசனே! அந்தச் செவிலியானவள், அந்த ஜனங்களைத் தடுத்துத் தமயந்தியைச் சிறந்த உப்பரிகையில் ஏறிவரச்செய்து, ஆச்சரியமடைந்து, 'இவ்விதம் அஸௌக்யத்தை அடைந்தவளா யிருந்தும் சிறந்த சரீரத்தைத் தரிக்கிறாய். மேகங்களில் மின்னல் விளங்குவதுபோல விளங்குகிறாய். நீ யார்? எவனைச் சார்ந்தவள்? சொல்லுவாயாக. ஓ! தேவதையைப்போன்ற காந்தியுள்ளவளே! ஸகாய மற்றவளாயிருந்தும் ஆடவர்களிடமிருந்து பயப்படாமலிருக்கின் றாய். ஆபரணங்களில்லாமலிருந்தாலும் உன்னுடைய ரூபம் மனி தர்களுடையதாயில்லை' என்று கேட்டனள். தமயந்தி, அவளுடைய அந்தச் சொல்லைக் கேட்டு, ராஜமாதாவையும் பார்த்து, மறுமொழி சொல்லலானாள்.

'என்னைக் கணவரைப் பின்பற்றியவளும் நல்ல குலத்தில் பிறந்த ஸைரந்திரியும் வேலைக்காரியும் இஷ்டப்படி வஸிக்கின்றவளும் கனிகளையும் கிழங்குகளையும் ஆகாரமாயுடையவளும் தனியாயிருப் பவளும் பொழுதுபோனவிடத்தில் தங்குபவளுமான மானிடப் பெண்ணாக அறியக்கடவீர். என் கணவர் எண்ணமுடியாத குண முள்ளவர்; என்னையும் எப்பொழுதும் அனுசரித்தவர். வழி யில் நிழல் தொடர்வதுபோல நானும் அந்த வீரரைப் பக்தி யுடன் அனுசரித்தவள். அவருக்குத் தெய்வச்செயலாக நன்கு சூதாடுவதில் மறுக்கமுடியாத பற்று வரைகடந்து உண்டாயிற்று. அவர் சூதில் ஜயிக்கப்பட்டவராகித் தனியே காட்டை அடைந்தார். ஒற்றை ஆடையுடுத்தவரும் பித்துக்கொண்டவர்போலக் கலங்கின வருமான அந்தப் பர்த்தாவைத் தேறுதல்செய்துகொண்டு நானும் காட்டை அடைந்தேன். அந்த வீரர், காட்டில் வேறு ஒரு கார ணத்தில் ஒரு சமயம் பசியுடன்கூடினவராகி, (போய்விடுமென்று) எண்ணாமல் ஒருவஸ்திரத்தையும் விட்டுவிட்டார். ஆடையற்ற வரும் பித்துக்கொண்டவரைப்போல நினைவற்றவருமான அவரை

ஒற்றை ஆடையுடனிருந்த நான் எப்பொழுதும் பின்தொடர்ந்தவளாகிப் பல இரவுகள் தூங்கவில்லை. பிறகு, பலநாள் சென்றபின், ஓர் இடத்தில் தூங்குகின்ற என்னைவிட்டு, வஸ்திரத்தின் பாதியைக் கிழித்துக்கொண்டு குற்றமற்ற என்னைப் பிரிந்துபோயினார். அப்படிப்பட்ட நான் தாமரையின் உட்காய்போன்ற காந்தியுள்ளவரும் மனத்திற்குப் பிடித்தவருமான அந்தப் பார்த்தாவைத் தேடுகிறவளும் காணாதவளும் பகலும் இரவும் எரிக்கப்படுகின்றவளுமாகி, தேவனுக்கு ஒப்பானவரும் பிரியமானவரும் பிரபுவுமான பிராணேசுவரரை அடையவில்லை' என்று சொல்லிக் குற்றமற்ற அங்கமுள்ள அவள் நீர்நிரம்பின கண்ணுள்ளவளாயும் நடுங்குகின்றவளாயும் மிக்க துக்கத்தை அடைந்தவளாயும் நின்றனள்.

அரசன் தாய், கண்ணீர் நிரம்பின கண்ணுள்ளவளும் தீனமானஸ்வரத்துடன் அவ்விதம் மிகப் புலம்புகின்றவளுமான அந்தத் தமயந்தியைப் பார்த்துத் துயரமுற்றவளாகித் தானே சொல்லலானாள். 'கல்யாணி! நீ இங்கு வாஸம் செய். எனக்கு உன்னிடத்தில் சிறந்த ப்ரீதியிருக்கின்றது. சுபமானவளே! உனது பர்த்தாவை எனது வேலைக்காரர்கள் தேடுவார்கள். அல்லது, இங்கும் அங்கும் திரிந்துகொண்டு (அவர்) தாமாகவேயும் வருவார். சுபமானவளே! இங்கேயே வஸிக்கில், பர்த்தாவை அடைவாய்' என்றாள். ராஜமாதாவின் சொல்லைக்கேட்டு, தமயந்தி, 'ஓ! வீரரைப் பெற்றவளே! உடன்பாட்டுடன் உன்னிடம் வஸிக்க விரும்புகிறேன். 'எச்சிலை உண்ணவே மாட்டேன். பிறர்காலை அலம்பமாட்டேன். வேறு ஆண்பிள்ளைகளுடன் எக்காரணம்பற்றியும் பேசேன்' என்று என்னால் விரதம் கைக்கொள்ளப்பட்டிருக்கிறது. என்னை ஓர் ஆண்பிள்ளை விரும்புவனானால் அவன் உன்னால் தண்டிக்கப்படவேண்டும். அடிக்கடி (விரும்புவனானால்) மூடனான அவன் கொல்லப்படவும் வேண்டும். பர்த்தாவைத் தேடும்பொருட்டு மட்டும் பிராம்மணர்களைப் பார்ப்பேன். இப்படியானால், உன்னிடம் இங்கு வஸிப்பேன்; சந்தேகமில்லை. இப்படியில்லையானால், ஓர் இடத்திலும் வஸிப்பதில்லை யென்பது என் மனத்திலிருக்கின்றது' என்ற சொல்லைச் சொன்னாள். தமயந்தியால் இவ்விதம் சொல்லப்பட்ட ராஜமாதாவோ, 'இதை முழுமையும் செய்வேன். தெய்விகமாக உன் விரதமும் இவ்விதமிருக்கின்றது' என்னும் இதைச் சொல்லினள். ஜநாதிப! பாரத! ராஜமாதா, தமயந்தியை, நோக்கி, இவ்விதம் சொல்லி, பிறகு, ஸுநந்தை என்னும் பெயருள்ள தன்

மகளைப் பார்த்து, 'ஓ! ஸுநந்தையே! தேவரூபமுள்ள (இவளை) ஸைரந்திரி என்று அறிந்துகொள். பிராயத்தால் ஒப்புமையை அடைந்த இவள் உனக்குத் தோழியாக இருக்கட்டும். இவளுடன் கூடிக் கவலையற்று மனமுள்ளவளாகி எப்பொழுதும் மகிழ்வாயாக' என்னும் இதனைச் சொன்னாள். பிறகு, ஸுநந்தை மிக்க மகிழ்ச்சி அடைந்து தமயந்தியை அழைத்துக்கொண்டு (மற்றத்) தோழிகளால் சூழப்பட்டவளாகி வீட்டை அடைந்தாள். ஓ! அரசனே! அழகிய சணைகளையுடைய அந்தத் தமயந்தி வீரனான நளனை எப்பொழுதும் சிந்தித்துக்கொண்டு ஸுநந்தை என்ற ராஜபுத்திரியுடன் வாஸம் செய்தாள்.

---

## அறுபத்துமூன்றாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தமயந்தியைப் பிரிந்து காட்டில் திரியும் நளனைக் காட்டுத் தீயில் அகப்பட்ட கர்க்கோடகன் தன்னைக் காக்கவேண்டினதும், நளன் விடுவித்தவுடன், கர்க்கோடகன், அவனைக் கடித்து உருவை விகாரப்படுத்தி, முன்னுருவை அடைய விரும்பும்போது தன்னை நினைந்து உடுக்கும்படி சொல்லி ஆடை அளித்ததும்.)

ஓ! வேந்தனே! நளராஜனோ, தமயந்தியைவிட்டு(ப் பிரிந்து போய்ச்) செல்லமுடியாத காட்டில் எரிகின்ற பெரிய காட்டுத்தீயைப் பார்த்தான். அங்கு நடுவில், 'ஓ! நள! வா' என்றும், 'புண்யச்லோக!' என்றும் உரக்க அழைத்த ஒரு பிராணியின் சப்தத்தைப் பலமுறை கேட்டான். நளனும், 'அஞ்சாதே' என்று சொல்லிக்கொண்டு அக்னியின் நடுவிற்சென்று, சுருட்டிக்கொண்டு படுத்திருக்கின்ற அந்த நாகராஜனைப் பார்த்தான். அந்த நாகமும் அப்பொழுது நடுங்கிக்கொண்டு கைகூப்பி, 'அரசனே! மனிதரைக் காப்பவனே! என்னைக் கர்க்கோடகனென்ற நாகனாக அறி. ஓ! மனிதர்க்கதிபனே! [1] குற்றமற்றவரும் மிக்க பெருந்தவமுள்ளவருமான ஒரு பிரம்மரிஷி என்னால் வஞ்சிக்கப்பட்டார். கோபத்தால் சூழப்பட்ட அவரால், 'நீ ஸ்தாவரம்போல நளன் வருமளவும் இருக்கக்கடவாய்.

---

1 'அநாகா:' என்பது மூலம்; அநாகஸர் என்னும் முனிவர் என்றும் கொள்ளலாம். 'நாரதா' என்பது நீலகண்டவியாக்யான பாடம்.

அவன் இங்கிருந்து உன்னை (வேறு) ஓர் இடத்துக்குக் கொண்டு போவான். [1] அங்கே என்னால் செய்யப்பட்ட சாபத்தினின்றும் விடுபடுவாய்' என்று சபிக்கப்பட்டேன். அவரது சாபத்தால் ஓர் அடியிலிருந்து மற்றோர் அடி அசைவதற்கும் சக்தியற்றிருக்கிறேன். உனக்கு க்ஷேமத்தை உபதேசிப்பேன். நீ என்னைக் காப்பாற்றக் கடவாய். உனக்குத் தோழனும் ஆவேன். எனக்கு ஒப்பான பன்னகன் இல்லை. உனக்குக் கனக்காதவனும் ஆவேன். சீக்கிரம் என்னை எடுத்துச் செல்' என்று நளனை நோக்கிச் சொல்லிற்று. இவ்விதம் சொல்லி அந்த நாகஸ்ரேஷ்டன் கட்டைவிரல் அள வுள்ளதாயிற்று. நளன் அதனை எடுத்துக்கொண்டு காட்டுத் தீயில்லாத இடத்தை அடைந்தான் அக்கினியற்ற இடைவெளியுள்ள இடத்தை அடைந்து விடஎண்ணங்கொண்ட அவனைக் கர்க்கோ டகனென்னும் நாகம் திரும்பவும் சொல்லிற்று. நைஷத! நீ உன் னுடைய சில அடிகளை எண்ணிக்கொண்டுபோ. நீண்ட கைகளையு டையவனே! அங்கு நான் உனக்குச் சிறந்த க்ஷேமத்தைச் செய் வேன்' என்றது பிறகு, எண்ணத் தொடங்கின அவனைப் [2] பத்தா வது அடியில் சடித்தது. கடிக்கப்பட்ட அந்த நளனுடைய அந்த உருவம் விரைவில் மறைந்து (மாறி) விட்டது. அந்த நளன் தான் விகாரப்படுத்தப்பட்டதைக் கண்டு ஆச்சரியமுற்றவனாகி நின்றான். அந்த அரசன், தன் சொந்த ரூபத்தைத் தரித்த நாகத் தைப் பார்த்தான்.

பிறகு, கர்க்கோடக நாகம், நளனைத் தேற்றிக்கொண்டு, 'ஓ! நள! உன்னை ஜனங்கள் தெரிந்துகொள்ளாதபடி உன்னுடைய ரூபம் என்னால் மறைக்கப்பட்டது. எந்தக் கலிநிமித்தம் அதிக துக் கத்தால் வஞ்சிக்கப்பட்டாயோ அந்தக் கலி என்னுடைய விஷத்தி னால் துக்கப்பட்டுக்கொண்டு உன்னிடத்தில் வஸிப்பான். மஹாராஜ! அவன் உன்னை விடும்வரையில் விஷத்தால் நன்கு மறைக்கப்பட்ட அங்கங்களுடனும் துயரத்துடனும் [3] உன்னிடம் வஸிப்பான். ஓ! அரசனே! குற்றமற்றவனும (வஞ்சிக்கத்) தகாதவனுமான நீ எவனால் வஞ்சிக்கப்பட்டாயோ அவனைக் கோபத்தால் வெறுத்து உனக்கு என்னால் ரக்ஷை செய்யப்பட்டது. ஓ! மனிதப்புலியே! தெற்றுப்பல் லுள்ள ப்ராணிகளிடமிருந்தும் பகைவர்களிடமிருந்தும் உனக்குப்

---

1 வேறு பாடம்.

2 'தச' என்ற வடசொல்லுக்கு, 'பத்து' என்றும், 'கடி' என்றும் பொரு ளுண்டாதலால் கடிக்கச்சொன்னதாகக்கொண்டது. 3 வேறு பாடம்.

பயமில்லை. நராதிப! எனது அனுக்கிரகத்தால் நீ 1 பிரம்மவித்தும் ஆவாய். அரசனே! விஷ நிமித்தமான பீடையும் உனக்கு உண்டாகாது. ஓ! ராஜேந்திர! யுத்தங்களில் அடிக்கடி வெற்றியையும் அடைவாய். அரசனே! நிஷதத்தார் தலைவனே! 'நான் பாகுகன் என்ற தேர்ப்பாகன்' என்று சொல்லிக்கொண்டு இங்கிருந்து அழகிய அயோத்தி நகரத்தில் ருதுபர்ணராஜனிடம் இப்பொழுதே செல். அவனே சூதாடும் திறத்தை அறிந்தவன். இக்ஷ்வாகு குலத்திலுண்டான ஸ்ரீமானான அந்த ராஜன் அச்வஹ்ருதயமென்ற வித்தையைப் பெற்றுக்கொண்டு அக்ஷஹ்ருதயமென்ற வித்தையை உனக்குத் தருவான்; நண்பனுமாவான். அக்ஷவித்தையை அறிந்தபின் க்ஷேமத்துடன் சேருவாய். அப்பொழுது நீ உன் மனைவியுடனும் ராஜ்யத்துடனும் மக்களுடனும் சேர்வாய். சோகத்தில் மனத்தைச் செலுத்தாதே. இதனை உண்மையாக உனக்குச் சொல்லுகிறேன். ஓ! நராதிப! சொந்த ரூபத்தை எப்பொழுது பார்க்க விரும்புவாயோ அப்பொழுது நீ என்னை நினைக்கக் கடவாய்; இந்த ஆடையையும் உடுத்துக் கொள்வாய். இந்த வஸ்திரத்தால் மறைக்கப்பட்டவனானால் சொந்த ரூபத்தை அடைவாய்' என்று சொல்லி அவனுக்குத் தெய்வத் தன்மைபொருந்திய இரண்டு ஆடைகளை அப்பொழுது கொடுத்தான். ஓ! கௌரவ! வேந்தனே! நாகராஜன் இவ்விதம் நளனுக்குச் செய்திசொல்லி வஸ்திரத்தையும் கொடுத்து விட்டு பிறகு அங்கேயே மறைந்தான்.

---

அறுபத்துநான்காவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(நளன் தன் பெயர் பாகுகன் என்று சொல்லிக்கொண்டு அயோத்தியில் ருதுபர்ணராஜனிடம் சென்றதும், ருதுபர்ணன் நளனைத் தேர்ப்பாகனாக நியமித்ததும்.)

அந்த நாகம் மறைந்தவுடன், நைஷதனான நளன் புறப்பட்டுச்சென்று பத்தாவது நாளில் ருதுபர்ணனுடைய நகரத்தில் நுழைந்தான். அவன், 'நான் பாஹுகனென்னும் பெயரையுடையவன். குதிரைகளை நடத்துவதில் எனக்கு ஒப்பான ஸமர்த்

---

1 'பிராம்மணர்களிடமிருந்தும் பயமில்லை' என்பது வேறுபாடத்தின் பொருள்.

தன் பூமியில் இல்லை. சிரமமான காரியங்களிலும் உபாயங்களிலும் என்னுடன் நீங்கள் ஆலோசிக்கலாம். உணவுப் பொருள்களைச் சமைப்பதையும் பிறரைவிட விசேஷமாக அறிவேன். இந்த உலகத்திலுள்ள சிற்பங்களையும் மற்றும் செய்ய மிக அரிய யாவற்றையும் செய்ய முயலுவேன். ஓ! ருதுபர்ண! என்னைப் போஷிக்கக் கடவாய்' என்று சொல்லிக்கொண்டு (ருதுபர்ண) ராஜனை அடைந்தான். பூமிக்குப்பதியே! பிறகு, நளனால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்த ருதுபர்ணராஜன், அவனைப் பார்த்து மனத்தில் மிக்க ப்ரீதியை அடைந்து, 'ஓ! பாஹுக! (இங்கே) வஸிப்பாயாக. உனக்கு க்ஷேமமுண்டாகுக. இவற்றையெல்லாம் செய்வாய். எனக்கு எப்பொழுதும் விரைவாகச் (சவாரி) செல்வதில் எண்ணம் முக்கியமாக இருக்கிறது. அப்படிப்பட்ட என்னுடைய குதிரைகள் விரைவாகச் செல்லக்கூடிய உபாயத்தைச் செய். குதிரைகளுக்குத் தலைவனாயிரு. உனக்குப் பதினாயிரம் (பொன்) சம்பளம். ஓ! பாஹுக! உனக்கு எப்பொழுதும் வார்ஷ்ணேயனும் ஜீவலனும் அருகிலிருந்து ஏவினவைகளைச் செய்வார். இவர்களுடன் கூடி மகிழ்வாய். என்னிடத்தில் வஸிக்கக் கடவாய்' என்றான். இவ்விதம் அவனால் சொல்லப்பட்ட நளன் வார்ஷ்ணேயனுடனும் ஜீவலனுடனும் ருதுபர்ணனுடைய அந்த நகரத்தில் கௌரவிக்கப்பட்டவனாகி வஸித்தான்.

அந்த அரசன், அங்கே தமயந்தியைச் சிந்தித்துக்கொண்டு மாலைதோறும், 'இரங்கப்படத்தக்க அவள் பசிதாகங்களால் பீடிக்கப்பட்டவளும் களைத்தவளுமாகி அந்த மந்தனுடைய செயலை நினைத்துக்கொண்டு எங்குப் படுத்திருக்கிறாளோ? எவனை அடைந்து சேவிக்கிறாளோ?' (என்ற பொருளுள்ள) இந்த ஒரு சுலோகத்தைச் சொல்லிக்கொண்டு வசித்தான். இவ்விதம் சொல்லுகின்ற அரசனை ராத்திரியில் ஜீவலன், 'ஓ! பாகுக! எப்பொழுதும் எவளைக்குறித்து [1] இவ்விதம் சோகிக்கின்றாய்? எவளைக்குறித்து இவ்விதம் துக்கிக்கின்றாயோ அவள் யாருடைய ஸ்திரீ என்பதைக் கேட்கவிரும்புகிறேன்' என்று சொன்னான். நளராஜன் அவனை நோக்கிச் சொல்லலுற்றான் :—'குறைந்த அறிவுள்ள ஒருவனுக்கு மிக்க பிரியமான ஒரு ஸ்திரீ இருந்தாள். அவனும் அவளுக்கு மிக்க ப்ரியமானவன். அந்த மந்தன், ஒரு காரணத்தினால் அவளைவிட்டுப் பிரிந்தான். பிரிந்த மதிகெட்ட

1 'ஏவம்' என்று பாடம் கொள்ளப்பட்டது.

அவன் துக்கத்தால் பீடிக்கப்பட்டவனாகி அலைந்து திரிகிறான். அவன் சோகத்தால் வாட்டப்படுகின்றவனும் ஓய்வற்றவனுமாகி இரவும் பகலும அவளை நினைத்துக்கொண்டு இராக்காலத்தில ஒரு ஸ்லோகத்தைக் கானம செய்கிறான. அவன பூமிமுழுதும் சுற்றிக கொண்டு ஓர இடத்தில் ஒன்றை அடைந்து, (துக்கத்திற்குத்) தகாதவனாயினும அந்தத்துக்கத்தைத திருபபவுமே நினைத்துக்கொண்டு வஸிக்கிறான். கஷ்டத்திலும் காட்டில அந்தப புருஷனைப் பின் தொடர்ந்தவளும அற்பபாக்யமுள்ள அவனால விடபபட்டவளுமான அந்த ஸதிரீயோ உயிருடனிருபபது அரிது தனிமையானவளும் சிறமியும அறியாதவளும் தேடுகின்றவளும அவ்விதம் தேடுவதற்குத தகாதவளும் பசிதாகம் மேலிட்ட அஙகமுள்ளவளுமான (அவள்) ஜீவிபபது அரிது. ஐயா! எப்பொழுதும துஷ்ட மிருகஙகளால் ஸஞ்சரிககப்பெற்றதும பயங்கரமாயுள்ளதுமான பெரிய காட்டில, (அவள), அற்ப புத்தியுள்ளவனும அற்பபாக்யமுள்ளவனுமான அவனால விடப்பட்டாள்' என்றான். இவவிதம நைஷத ராஜன் தமயந்தியை நினைத்துக்கொண்டு அவவரசனது வீட்டில் அஜ்ஞாத வாஸத்தைச் செய்தான்.

---

## அறுபத்தைந்தாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(பீமராஜன் நளதமயந்தியரைத் தேடும்பொருட்டுப் பிராம்மணர்களைப் பல தேசங்களுக்கும் அனுப்பியதும், ஸுதேவனென்னும் அந்தணன் சேதிராஜன் அரண்மனையில் தமயந்தியைக் கண்டதும், தமயந்தி அந்தணனிடம் கண்ணீர் விட்டுக்கொண்டு பேசுவதைக் கண்ட அரசன்தாய் தமயந்தியின் குலமுதலியவற்றை அவனிடம் கேட்டதும்)**

நாடு கவரப்பட்ட நளன் பார்யையுடன் காணாமற்போனபோது, பீமராஜன் மந்திரிகளுடன் கூடிப் பலமுறை ஆலோசனை செய்தான். எல்லாப் பிராமணர்களையும் வரவழைத்துப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானான்: 'எந்தப பிராமணன் தமயந்தியையும் நளனையும் எல்லாப் பக்கத்திலும் தேடிக் காண்கிறானோ அந்த

அந்தணனுக்கு [1] அக்ரகாரத்தையும் பட்டணத்திற்கு ஒப்பான கிராமத்தையும் கொடுப்பேன்; நூறாயிரம் பசுக்களையும் கொடுப்பேன்' என்று த்விஜோத்தமர்களான எல்லாப் பிராமணர்களையும் அழைத்துச் சொல்லி, அவ்விருவரையும் பார்க்கும் விருப்பத்தால் அப்பொழுது பயணப்படுத்தினான். பீமன், நிரம்பின தனத்தைக் கொடுத்து, 'நளனையும் என் பெண்ணான தமயந்தியையும் தேடுங்கள். நளன் அறியப்பட்டு இந்தக் காரியம் நிறைவேறினவுடன், உங்களுள் அவ்விருவரையும் அழைத்துவருபவனுக்கு ஆயிரம்பசுக்களைக் கொடுப்பேன். அக்ரகாரங்களையும் பட்டணத்திற்கு ஒப்பான கிராமத்தையும் தங்கத்தையும் அப்படியே வேலைக்காரர்களையும் வேலைக்காரிகளையும் கொடுப்பேன். தமயந்தியையாவது நளனையாவது இங்கு அழைத்துவர முடியாமற்போனாலும் அறியப்பட்ட மாத்திரத்திலும் ஆயிரம்பசுக்களாகிய தனத்தைக் கொடுப்பேன்' என்று அவர்களுக்குக் கட்டளையிட்டான். இவ்விதம் சொல்லப்பட்ட அந்த அந்தணர்கள் சந்தோஷமடைந்தவர்களாகிப் பட்டணங்களிலும் தேசங்களிலும் மனைவியுடன் கூடின நளனைத் தேடிக்கொண்டு எல்லாத்திக்குக்களிலும் சென்றனர்; நளனையாவது பீமபுத்திரியையாவது ஓர் இடத்திலும் பார்க்கவில்லை. பிறகு, தேடுபவனான ஸுதேவனென்று பெயருள்ள அந்தணன், சேதிபுரியில் அரசன் மாளிகையில் தமயந்தியைக் கண்டனன். ராஜமாதாவும் அந்தத் தமயந்தியைக் கொண்டே பிராம்மணர்களுக்குப் பரிமாறுவித்தாள். ஸுதேவனும் போஜனத்திற்காக அங்கேயே பிரவேசித்தான். இளைத்தவளும் நிறம்மாறினவளும் அழுக்கடைந்தவளும் கணவனைப் பிரிந்த துயரை முக்கியமாக உடையவளும் புகைக்கூட்டத்தால் சூழப்பட்ட அக்னியின் காந்தியைப் போலச் சிறிது பிரகாசித்தும் ஒப்பற்றதான ரூபத்துடன்கூடியவளும் நீண்டகண்ணுள்ளவளும் மிக்க அழுக்கடைந்து இளைத்திருப்பவளுமான அவள் [2]அரசனுடைய வாழ்த்துக்காலத்தில் ஸுநந்தையுடனிருப்பதைக் கண்டு அடையாளங்களால் ஆராய்ந்து தமயந்தியென்று ஊகித்தான்.

ஸுதேவன், 'இந்தஸ்திரீ முன் என்னால் காணப்பட்ட உருவமுள்ளவளாக இருக்கிறாள். லோகத்திற்கு அழகான லக்ஷ்மி

---

1 'அகரம் = பிராம்மண போஜனம்; அதற்காக அரசன் சொத்தி விருந்து ஒதுக்கிவைக்கப்படும் நில முதலியவை அக்ரகாரம்' என்பது பழைய வுரை. 2 'புண்யாஹவாசநே ராஜ்ஞ:' என்பது மூலம்.

போன்றவளும், பூர்ண சந்திரன்போன்ற முகமுள்ளவளும் [1] ஸ்யாமையும், அழகிய வட்டமான கொங்கையுடையவளும், ஒளியால் எல்லாத்திக்குக்களையும் இருளற்றவையாகச் செய்கின்றவளும, தேவியும், அழகிய பத்மம்போன்ற நீண்டகண்ணுள்ளவளும், மன்மதனுடைய ரதிதேவியைப்போன்றவளும், எல்லா உலகததிற்கும் பூர்ணசந்திரனின் காநதியைப்போல விருப்பமானவளும், அநத விதர்ப்பதேசமாகிற குளததினின்றும் தெய்வக்குற்றததால் வெளியில் எடுக்கப்பட்டதும அழுககினாலும் சேற்றினாலும் பூசப்பட்ட அங்கமுள்ளதும் மிக வாடினதுமான தாமரைக் கொடியைப் போன்றவளும, ராகுவால விழுஙகப்பட்ட சந்திரனையுடைய பூர்ணிமை ராததிரியைப் போன்றவளும், பதியைப் பிரிந்த சோகத்தால் கலங்கினவளும், நீர்பபெருககுக் குறைந்த நதியைப் போல எளிமையுற்றவளும், தாமரையிலைகளும மலர்களுமழிந்ததும் பயமுறுத்தப்பட்ட பக்ஷிகளையுடையதும யானையின் துதிக்கையால் பிடிக்கப்பட்டுக் கலஙகினதுமான தாமரைததடாகததைப் போன்றவளும், ஸுகுமாரியும், நன்கு அமைந்த அஙகமுள்ளவளும், ரதனங்களாலிழைக்கப்பட்ட மாளிகையில் வசிக்கததககவளும், களைந்தெறியப்பட்டுச சூரியனால் காய்கின்ற தாமரைக் கொடிபோன்றவளும், ரூபத்துடனும் பெருந்தன்மையுடனும் நற்குணததுடனும் கூடியவளும், அலஙகாரததிற்குத் தக்கவளாயினும் அலங்கரிக்கப்படாதவளும், ஆகாயததில் கறுததமேகத்தால் மறைக்கப்பட்ட புதிதான சந்திரகலையைப்போன்றவளும், ஸுகங்களும் இஷ்டானுபவங்களுமிலலாதவளும், பந்து ஜனததைப் பிரிநதவளும், சரீரம் இளைததும பர்த்தாவைப் பார்க்க விருப்பததால் (அதனைத) தரிக்கின்றவளுமான இந்தத தமயந்தியைக் கணடு, இப்பொழுது கிருதார்த்தனாயினேன். ஸ்திரீக்குப் பூஷணமில்லாவிடினும் பார்த்தாவே மேலான பூஷணமன்றோ? பிரகாசிக்கின்ற இவளோ அழகுள்ளவளாயிருந்தும் கணவனைப்பிரிந்

[1] இதறகு, கருமைநிறமுளளவள், நடு யௌவனததிலிருப்பவள, மககளைப பெறாதவள, காளி, அறுகு, மஞசள, அவுரி முதலிய பல பொருள களுணடு. 'குளிர்காலததில இனிய சூடுளளவையும கோடைககாலததில இனிய குளிர்ச்சியுளளவையுமான அஙகஙகளும் புடமிட்ட பொன்போன்ற நிறமுமுளள ஸ்திரீ' எனறு கூறி இதனை விளக்க ஒரு சுலோகமும காட்டுவர் பட்டி காவிய உரைகாரருள் ஒருவரான பரதமலலிகா. விரிவை இவா அநநூலுககுச செயதுள்ள முக்தபோதவுரையில காண்க.

திருததலால் பிரகாசிக்கவில்லை. நளன் இவளைப்பிரிந்தும் சோகத்தால் வாடாமல் தன் சரீரததை வைததிருக்கிறுனுதலால் மிகவும் செயற்கரியசெயலைச் செய்கிருன. கருமையான கூந்தலின் நுனியுள்ளவளும் தாமரைமலர்போல நீண்டகண்ணுள்ளவளும் ஸுகததிறகுததககவளுமான இவளைத துயரமடைந்தவளாகக்கணடு எனது மனமும் கலங்குகின்றது. அழகுள்ள இந்தப் பதிவ்ரதையானவள் ரோகிணி சந்திரனை அடைவதுபோலக் கணவனை அடைந்து துககத்தின்கரையை எப்பொழுதுதான் கடப்பாளோ? நாட்டை இழந்த ஓர் அரசன் திரும்பவும் நாட்டை அடைநது மகிழ்வதுபோல நளன இவளை மறுபடியும் அடைவதால் மகிழ்ச்சியை அடைவான். இது நிசசயம். ஒத்த ஒழுககமும பிராயமும் உள்ளவளும் ஒத்தநற்குலததுடன் கூடினவளுமான தமயநதிக்கு நளன் தகுதியானவன. கருமையான கண்ணுள்ள இவளும் அந்த நளனுக்குத் தகுதியானவள. அளவிடமுடியாதவனும் வீர்யமும் பலமுமுளளவனுமான அநத நளனுடைய மனைவியும பதியைப்பார்க்க விருபபமுளளவளுமான இவளைத தேற்றுவது எனது கடமை. பூர்ணசநதிரனபோன்ற முகமுள்ளவளும துககததைப பார்ததே இராதவளும் துக்கததால பீடிக்கப்பட்டவளும் கவலையும அழுகையும் மேலிட்டவளுமான இவளை யான் தேறுதல் செய்கிறேன்' என்று ஆலோசிததான்.

இவ்விதம ஸுதேவன் என்ற பிராம்மணன், பற்பலகாரணங்களாலும அடையாளங்களாலும் அவளைத தமயநதி என்று நிச்சயிததுப் பிறகு அருகில் போய், 'ஓ! தமயந்தி! நான் உன்பிராதாவுக்கு இனிய நணபனுன ஸுதேவன் ; பீமராஜனுடைய சொலலால உனனைததேடுவதற்கு இங்கு வநதேன். ஓ! அரசியே! உன்பிதாவும் மாதாவும் உன்ஸகோதரர்களும் க்ஷேமமாயிருககின்றனர். அங்கிருப்பவர்களும் நீணடஆயுளுள்ளவர்களுமான உன்மக்களும சௌகயமே. பந்துககூட்டங்களும் உன் நிமிததம் உயிரை இழந்தவர்கள் போல இருக்கின்றுர்கள். நூற்றுக்கணககான பிராமமணர்களும் (உன்னைத) தேடிக்கொண்டு பூமியைச சுற்றுகின்றனர்' என்றுன். ஓ! யுதிஷ்டிர! தமயந்தி, அந்த ஸுதேவனை அறிந்துகொண்டு, தன்னுடைய அநத எலலா நணபர்களையும்பற்றிக் கிரமமாகக் கேட்டாள. ஓ! அரசனே! தமயந்தி பிராதாவுக்கு இஷ்டனும் பிராம்மணச்ரேஷ்டனுமான ஸுதேவனைபபார்த்துச் சோகததால் விரைநது பீடிககபபட்டவளாகி மிகவும அழுதாள். ஓ! பாரத! தனிமையில்

ஸுதேவனுடன் பேசுகிறவளும் அழுகிறவளுமான அவளை ஸுநந்தையானவள் கண்டு, பிறகு, துன்பமுற்று வருந்தி, 'ஸைரந்திரியானவள் பிராம்மணனுடன் மிக அழுகிறாள். வேண்டுமானால், வந்து அவளை அறிவாயாக' என்று தன் தாயாருக்குச் சொல்லியனுப்பினாள். பிறகு, அப்பொழுது சேதிபதியான அரசனின் தாயானவள் அந்தப்புரத்தினின்றும் அந்தச்சிறுமி பிராம்மணனுடனிருந்த இடத்திற்குப் போனாள். வேந்தனே! பிறகு, ராஜமாதா, ஸுதேவனை அழைத்து, (இந்த) ஸ்திரீ எவனுடைய மனைவி? எவனுடைய மகள்? அழகியகண்ணுள்ள இவள் உறவினரிடமிருந்தும் கணவனிடமிருந்தும் எவ்விதம் காணமற்போனாள்? அந்தணனே! இவ்விதம் இருக்கின்ற பதிவிரதையானவள் உன்னால் எவ்விதம் அறியப்பட்டாள்? இவற்றையெல்லாம் மிச்சமின்றி உன்னிடமிருந்து கேட்க விரும்புகின்றேன். தேவரூபமுள்ள (இவளைக்) கேட்கின்ற எனக்கு உண்மையாகச் சொல்' என்று வினவினள். ஓ! அரசனே! இவ்விதம் அவளால் வினவப்பட்ட பிராம்மணச்ரேஷ்டனான ஸுதேவன், ஸுகமாக உட்கார்ந்து, தமயந்தியின் உண்மையைச் சொல்லலானான்.

---

## அறுபத்தாறாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(அரசன்தாய் ஸுதேவனால் தமயந்தியின் உண்மையை அறிந்து அவளுக்கிருந்த மச்சத்தாலும் தமயந்தியென்று நிச்சயித்து அவளைத் தகப்பனிடம் அனுப்பியது.)

ஸுதேவன், 'தர்மாத்மாவும் பயங்கரமான பராக்ரமமுள்ளவனுமான பீமனென்பவன் விதர்ப்பதேசத்தரசன். கல்யாணியான இவள் தமயந்தியென்று பெயர்பெற்ற அவனுடைய மகள். வீரஸேனபுத்திரனாகிய நளனென்பவன் நிஷததேசத்தரசன். இந்தக் கல்யாணி புத்திமானும் புண்யச்லோகனுமான அவனுடைய மனைவி. பெரியமனமுள்ளவனும் பிராதாவினால் சூதாட்டத்தால் ஜயிக்கப்பட்டவனும் நாட்டைப் பறிகொடுத்தவனும் தமயந்தியுடன் சேர்ந்து போனவனுமான அவன் ஒருவராலும் அறியப்படவில்லை. அப்படி (தேடிவந்த) நாங்கள் தமயந்தியினிமித்தம் இந்தப் பூமிமுழுவதும் ஸஞ்சரிக்கின்றோம். ஓ! தேவி! அப்படிப்பட்ட இந்தச் சிறுமி உன்னுடைய வீட்டில் அடையப்பட்டாள்.

ரூபத்தால் இவளுக்கொப்பான மானிடப்பெண் இல்லையன்றோ? ஶ்யாமையான இவளது புருவங்களின் நடுவில் உடன் பிறந்ததும் மேலானதும் தாமரைமலர் போன்றதும் மறைந்ததுமான இந்த மறுவானது, இவளது அழுக்கால் மறைக்கப்பட்டு மேகத்தால் மறைக்கப்பட்ட சந்திரன்போல என்னால் பார்க்கப்பட்டது. இவள் எல்லாரிலும் சிறந்து விளங்குவளென்பதற்கு அடையாளமாகப் பிரம்மாவால் அமைக்கப்பட்ட இது (வளர்பிறை) பிரதமையால் தெளிவாகத் தெரியாத சந்திரகலைபோல நன்கு விளங்கவில்லை. இவளுடைய சரீரமானது அழுக்கால் மிகப் பூசப்பட்டிருந்தும் ரூபம் மறைந்துபோகவில்லை; (நீராட்டமுதலிய) சுத்திகள் செய்யப்படாமலிருந்தும் பொன்போல விளங்குகின்றது. சிறுமியான இந்த தேவி, மறைக்கப்பட்ட அக்கினியானது சூட்டினால் அறியப்படுவதுபோல இந்தச் சரீரத்தாலும் இந்த மச்சத்தாலும் குறிப்பிக்கப்பட்டு என்னால் அறியப்பட்டாள்' என்றான்.

ஓ! அரசனே! அந்த ஸுதேவனுடைய அந்த வார்த்தையைக் கேட்டு, ஸுநந்தை மச்சத்தை மறைத்துக்கொண்டிருந்த அழுக்கைத் துடைத்தாள். அந்தத் தமயந்தியினுடைய அந்த மறுவானது, அழுக்குப் போக்கப்பட்டவுடன், மேகமற்ற ஆகாயத்தில் சந்திரன் விளங்குவதுபோல மிக விளங்கிற்று. ஓ! பாரத! மச்சத்தைக் கண்டவுடன், ஸுநந்தையும் ராஜமாதாவும் அவளைக் கட்டிக்கொண்டு ஒரு முகூர்த்த காலம் அழுதுகொண்டு நின்றனர். ராஜமாதா கண்ணீரைவிட்டுக்கொண்டு, மெள்ள, 'இந்த மறுவினால் என் உடன்பிறந்தாளின் பெண்ணென்று குறிப்பிக்கப்பட்டவளாகிறாய். ஓ! அழகிய தோற்றமுள்ளவளே! நானும் உன் தாயும், தசார்ணதேசாதிபதியும் மகாத்மாவுமான ஸுதர்மாவென்ற அரசனுடைய பெண்கள். அவள் பீமராஜனுக்குக் கொடுக்கப்பட்டாள். நானோ வீரபாகுவேந்தருக்குக் கொடுக்கப்பட்டேன். தசார்ணதேசத்தில் என் பிதாவின் வீட்டில் நீ பிறந்ததை நான் பார்த்தேன். ஓ! அழகியவளே! உனக்கு இதுவும் பிதாவின் வீடுபோன்றதே. தமயந்தி! இந்தச் செல்வம் எனக்கு எவ்விதமோ அவ்விதமே உனக்கும்' என்னும் இதனைச் சொன்னாள். மன்னவ! தமயந்தி, சந்தோஷமுள்ள மனத்துடன் அந்த மாதாவின் ஸஹோதரியை வணங்கி, 'அறியப்படாதவளாயிருந்தும் வேண்டிய எல்லா வஸ்துக்களாலும் திருப்தி செய்யப்பட்டவளும் எப்பொழுதும் உன்னால் காப்பாற்றப்பட்டவளுமாகி உன்னிடத்தில் ஸுகமாக வாஸஞ்

செய்தேன். ஸுகவாஸததிலிருந்து மிக்க ஸுகமானவாசம் உண்டாகப்போகின்றது. இதில் ஸந்தேகமில்லை. தாயே! நெடுங்காலம் பிரிந்திருந்த எனக்கு அனுமதி கொடுக்கக்கடவாய். குழந்தைகளான எனனுடைய பிள்ளையும் பெண்ணும் அழைததுப் போகப் பட்டு அங்கு வஸிக்கின்றார்கள். பிதாவையும் என்னையும் பிரிந்தவர்களும் துயரததால் பீடிக்கப்படுகினறவர்களுமான அவர்கள் எவ்விதம் இருக்கின்றார்களோ? விதர்பபதேசததிற்கு விரைந்து செல்ல விரும்புகிறேன். என்னிடததில் சிறிதும் ப்ரியததைச்செய்ய விருமபுவாயானல இநத விஷயத்தில் எனககு வாகனத்தைக் கட்டளையிடுவாயாக' என்னும் இந்த வசனததைச சொன்னாள்.

ஓ! அரசனே! பரதஸ்ரேஷ்ட! பிறகு, தாயின் ஸஹோதரியான ராஜமாதா களிப்புற்று, 'சரி' எனறே அவளுக்குச் சொல்லிப் புததிரனுடைய அனுமதிப்படி, பெரிய சேனையால் காக்கப்பட்டவளும், சோபையுள்ளவளுமான (அவளை) நல்ல அன்னத்துடனும் பானததுடனும் வஸதிரஙகளுடனும் கூடியவளாக மனிதரால் சுமக்கப்படும் வாகனததுடன் அனுப்பினாள். பிறகு, அழகிய அவள் விரைவாகவே விதர்ப்பதேசத்தை அடைந்தாள். பந்துஜனங்களனைவரும் மிக்க களிப்புற்று அவளைப் பூஜை செய்தனர். ஜனாதிப! புகழ்பெற்ற தமயந்திதேவி, உறவினர்களும் அந்தக் குழந்தைகளும் மாதாபிதாக்கள் இருவரும் தோழியரனைவரும் மற்ற யாவரும் க்ஷேமமாயிருப்பதைக் கண்டு, தேவதைகளையும் பிராமணர்களையும் சிறந்த முறையுடன் பூஜைசெய்தனள். அரசனும் பெண்ணைக் கண்டு ப்ரீதியுள்ளவனாகி உடனே ஸுதேவனை ஆயிரம் பசுக்களாலும் கிராமத்தாலும் தனததாலும் திருப்தி செய்தனன். ஓ! அரசனே! அந்த ஸ்திரீ பிதாவின் அந்த வீட்டில் இரவு வாஸம் செய்து ஸ்ரமத்தைப் போக்கிககொண்டவளாகி மாதாவை நோக்கிப் பின்வரும் வார்த்தையைச் சொல்லலானாள்.

---

அறுபத்தேழாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(தமயந்தியால் அனுப்பப்பட்ட அந்தணர்கள் நளனைப் பலவிடங்களிலும் தேடியது.)

தமயந்தி, 'தாயே! உனக்கு உண்மையைச் சொல்லுகின்றேன். என்னை உயிருடனிருக்க விரும்புவையாயின், நரவீரரான நளராஜ

ரை வரவழைப்பதில் திரும்பவும் முயற்சி செய்வாயாக' என்றாள். தமயந்தியால அவ்விதம் சொல்லப்பட்ட அரசியான அந்தத தேவி யும, மிக்க துக்கததை அடைந்தவளும கண்ணீரால் மறைககப்பட்ட வளுமாகி, உததரம ஒன்றும சொல்லவில்லை. அப்பொழுது, அந்த அவஸதையையுடைய அவளைக் கணடு அந்தப்புரம முழுதும், 'ஆ! ஆ!' எனனும ஒலிமிககதாகி மிகவும் அழுதது. பிறகு, பீமமஹாராஜனை நோககி (அவனுடைய) மனைவி, 'ஓ! மனித ரைக் காபபவரே! தமயந்தி பாததாவைக்குறிதது மிகத்துயரப் படுகிறாள. விபுவே! அவள் வெட்கததை விலககித தானே சொல் லினள். உமது வேலைக்காரர்கள புணயஸலோகனை நாளைக் காண முயலக்கடவர்' என்றாள். அவளால் தூண்டப்பெற்ற அர சன் தன்வசததிலிருக்கின்ற பிராம்மணாகளை, 'நளனைப்பார்க்கும் விஷயததில முயற்சிசெய்யுஙகள்' என்று சொல்லி எல்லாத திசை களிலும் அனுபபினான். பிறகு, அந்த ப்ராம்மணர்கள, அப் பொழுது விதர்ப்பாதிபதியின் உததரவினால் புறப்பட்டுத தமயநதி யிடம [1] வந்து, 'நாங்கள் நளனைத தேடப் புறப்பட்டோம' என்று சொல்லினர். பிறகு, தமயநதி, அவர்களைப்பார்தது, 'எல்லாராஜ் யங்களிலும ஜனக்கூட்டஙகளிலும் ஆஙகாஙகு, 'சூதாடியே! காதல! தூங்குகினறவளும் காதலியுமான நாயகியான என்னைக் காட்டில் விட்டு என பாதிஆடையைக் கிழிததுக்கொணடு நீ எங்கே போ யினை? அந்தச சிறுமி உன்னால காணப்பட்டது போலவே பாதி ஆடையால் சுற்றப்பட்டவளும மிக எரிக்கப்படுகிறவளுமாகி உன்னை எதிர்பார்ததுக்கொண்டிருககிறாள். ஓ! அரசனே! தேவ! அந்தச் சோகததினால் எப்பொழுதும அழுகினற அவள் விஷயததில் தயை செய். மறுமொழியையும சொல்' என்ற இந்த வார்ததையை அடிக்கடி சொலலுஙகள்' எனறு சொலலி, 'காற்றால் அசைக்கப் படுகின்ற நெருப்பானது காட்டை எரிக்குமனறோ? மனைவியான வள் கணவனால் எப்பொழுதும போஷிக்கப்படத தகுந்தவளும் காக்கப்படத தகுந்தவளுமன்றோ? தர்மததை அறிந்திருக்கின்ற உத்தமனான உனக்கு யாது காரணததால் அவ்விரண்டும் இல்லா மற்போயின? புகழ்பெறறவனும் புததிமானும நற்குலத்தில் உதித் தவனும் எப்பொழுதும் தயையுடன் கூடியவனுமான நீ என் பாக் கியக்குறைவினால் தயையற்றவனாயினையென்று ஸந்தேகிக்கிறேன். புருஷப்புலியே! ஆனதுபற்றி, என்விஷயததில தயை செய்வா

1 வேறு பாடம்.

யாக. மனிதரிற் சிறந்தவனே! குரூரமில்லாமையானது மேலான தர்மமென்று உன்னிடமிருந்தனறோ என்னால் கேட்கப்பட்டது’ என்பதையும், இப்படி என்னிடத்தில் தயை செய்யக்கூடியவாறு மற்றதையும் சொல்லக்கடவீர். இவ்விதம் சொல்லுகின்ற உங்களுக்கு ஒருவன் மறுமொழி சொல்வானானால், ‘அவன் யார்? எங்கு இருக்கிறான்?’ என்று அம்மனிதனை எவ்விதத்தாலும் நீங்கள் அறிய வேண்டும். ஓ! பிராம்மணஶ்ரேஷ்டர்களே! எந்த மனிதன் இவ்வித வார்த்தையைக் கேட்டு மறுமொழியைச் சொல்லுவனோ அவனது அந்த வார்த்தையைக் கிரகித்து வந்து எனக்குத் தெரிவிக்க வேண்டும். நீங்கள், அஜாக்ரதையில்லாதவர்களாகி, பீமராஜர் உத்தரவால் ஸஞ்சரிப்பதையும் திரும்பி இங்கு வருவதையும் எவரும் அறியாதபடி செய்யவேண்டும். அவன் தனமுள்ளவனாயிருந்தாலும், அல்லது தனமற்றவனாயிருந்தாலும், அல்லது சக்தியற்றவனாயிருந்தாலும் அவனது தொழிலை அறிந்துவரக்கடவீர்’ என்றாள்.

ஓ! அரசனே! இவ்விதம் சொல்லக்கேட்ட அந்தப்பிராம்மணர்கள், அவ்விதம் துக்கமடைந்த நளனைத் தேடுவதற்கு அப்பொழுது எல்லாத் திக்குக்களிலும் சென்றார்கள். ஓ! வேந்தனே! அந்தப் பிராமணர்கள் ராஜ்யங்களுடன் கூடின பட்டணங்களிலும் கிராமங்களிலும் இடைச்சேரிகளிலும் அவ்விதமே ஆஶ்ரமங்களிலும் தேடியும் நளனைக் காணவில்லை. ஜனாதிப! பிராமணர்யாவரும் தமயந்தியால் சொல்லப்பட்ட அந்த வாக்கியத்தையும் ஆங்காங்கு (உள்ளவர்கள்) கேட்கச் சொல்லினர்.

---

அறுபத்தேட்டாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பர்ணாதனென்னும் பிராம்மணன் ருதுபர்ணனது அரண்மனையில் பாஹுகன் கேட்கத் தமயந்தியின் சொல்லைச் சொல்லியதும், அவன் தனிமையில் பர்ணாதனுக்கு மறுமொழி சொல்லியதும், பர்ணாதன் திரும்பி வந்து தமயந்திக்கு அதனைத் தெரிவித்ததும், அவளால் ஸந்தேகித்து அனுப்பப்பட்ட ஸுதேவன் அயோத்தி சென்று, மறுநாள் தமயந்தியின் ஸ்வயம்வரமென்பதை ருதுபர்ணனுக்குத் தெரிவித்ததும்.)

பிறகு, நீண்டகாலஞ் சென்று, பர்ணாதனென்னும் பிராம்மணன், (விதர்ப்ப) நகரத்தைத் திரும்பவும் அடைந்து தமயந்தியை

நோக்கி இவ்வார்த்தையைச் சொல்லினன் : 'ஓ ! தமயந்தி ! இரவும் பகலும் நளனைத்தேடுகின்ற நான் அயோத்தி நகரத்தை அடைந்து [1] பாகஸ்வரி என்னும் ருதுபர்ணனை அடைந்தேன். சிறந்த நிற முள்ளவளே ! மிக்க பாக்யசாலியான ருதுபர்ணன் ஜனக்கூட்டத்தில் உனது வாக்யத்தை நீ சொல்லியபடி கேட்கச் செய்யப்பட்டான். என்னால் அடிக்கடி சொல்லப்பட்டும் அதைக்கேட்டு ருதுபர்ணராஜனும் ஒன்றும் சொல்லவில்லை ; ஸபையிலுள்ள ஒருவனும் சொல்லவில்லை. அரசனால் விடையளிக்கப்பட்ட என்னிடம் ஏகாந்தத்தில் ருதுபர்ணனுடைய வேலைக்காரனும் பாஹுகனென்னும் பெயரினால் பிரஸித்திபெற்றவனும் அந்த நரேந்திரனுக்குத் தேர்ப்பாகனும் விகார வடிவமுள்ளவனும் குறுகிய கையுள்ளவனும் வாகனங்களை விரைந்து செலுத்துவதில் வல்லவனும் உணவுப் பொருள்களை நன்கு சமைப்பவனுமான ஒருவன் பேசினன். அவன் மிக்க பெருமூச்செறிந்தும் அடிக்கடி அழுதும் என்னைக் குசலத்தைக்கேட்டுமே, பிறகு, 'குலஸ்திரீகளான பதிவ்ரதைகள் கஷ்டத்தையடைந்தார்களாயினும் தம்மைத் தாமாகவே காக்கின்றனர். (அவர்களால்) ஸ்வர்க்கம் ஜயிக்கப்பட்டதென்பதில் ஸம்சயமில்லை. மேலான ஸ்திரீகள் பர்த்தாக்களால் விடப்பட்டார்களாயினும் ஒருபொழுதும் கோபியார் ; ஒழுக்கத்தைக் கவசமாகவுடைய பிராணன்களைத் தரிக்கின்றார்கள். கஷ்டத்திலிருப்பவனும் மூடனும் ஸுகத்திலிருந்து நழுவினவனுமான அவனால் விடப்பட்ட விஷயத்தில் அவள் கோபிப்பது தகாது. உணவை விரும்பினவனும் பறவைகளால் ஆடை கவரப்பட்டவனும் மனோவியாதிகளால் எரிக்கப்படுகின்றவனுமான (அவன்) விஷயத்தில் ச்யாமையானவள் கோபிப்பது தகாது. மரியாதை செய்யப்பட்டவளாயிருந்தாலும், மரியாதை செய்யப்படாதவளாயிருந்தாலும் ச்யாமையானவள், அவ்விதம் போனவனும் ராஜ்யத்தை இழந்தவனும் செல்வமற்றவனுமான பர்த்தாவைக் கண்டு கோபிப்பது தகாது' என்று இதைச்சொன்னான். அவனது அந்த வார்த்தையைக் கேட்டு நான் விரைவாக இங்கே வந்தேன். கேட்டு, நீ உன் விருப்பப்படி செய் ; அரசனுக்குமே தெரிவிப்பாயாக' என்றான்.

ஓ ! மனிதர்க்கதிபதியே ! தமயந்தி, பர்ணாதனுடைய இந்தச் சொல்லைக் கேட்டு, நீர்நிரம்பின கண்ணுள்ளவளாகி ரஹஸ்யமாக

[1] 'பாங்காஸுரி' என்பது வேறு பாடம். 'பங்காஸுரன குமாரன்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

மாதாவையடைந்து, 'தாயே! பீமராஜரிடத்தில் இந்த விஷயத்தை ஒருபொழுதும் தெரியப்படுத்தக் கூடாது. நான் உன் முன்னிலையில் ஸுதேவனென்கிற பிராம்மண ஶ்ரேஷ்டனை ஏவுவேன். எனக்குப் பிரியத்தை விரும்புவாயானால் பீமராஜர் எனது அபிப்ராயத்தை அறியாதபடி நீ செய்யவேண்டும். தாயே! ஸுதேவனால் (கடவுள் வணக்க முதலிய) எவ்வித மங்களத்தைச் செய்து சீக்கிரம் பந்துக்களைக் குறித்து நான் அழைத்துவரப்பெற்றேனோ அவ்விதமங்களத்துடனே இப்பொழுது ஸுதேவன் ருதுபர்ணனுடைய பட்டணத்தில் வஸிக்கின்றவரும் பகைவரை அடக்குகின்றவருமான நளராஜரை அழைத்துவர இங்கிருந்து அயோத்யாபுரிக்குச் செல்லக்கடவன்; தாமதம் வேண்டாம்' என்று சொன்னாள்.

பிறகு, விதர்ப்பன்குமாரியான தமயந்தி ஸம்பரிகாரம் செய்துகொண்ட த்விஜ ஶ்ரேஷ்டனான பர்ணாதனை மிக்க தனத்தால ஸம்மானம்செய்தாள். மிக்க தனத்தால பூஜைசெய்து அவனை நோக்கி, 'ஓ! அந்தணரே! நளராஜர் இங்கு வந்ததும் திரும்பவும் உமக்குப் பொருளைத் தருவேன். ஓ! த்விஜோத்தமரே! மற்றவன் செய்யமுடியாததும் நான் பர்த்தாவுடன் விரைவில் சேர்த்தக்கதுமான (மிக்க) உபகாரம் எனக்கு உம்மாலன்றோ செய்யப்பட்டது?' என்றும் கூறினள். பிறகு, இவ்விதம் சொல்லக் கேட்டவனும் விருப்பம் நிறைவேறியவனும் நல்ல பெரிய மனமுள்ளவனுமான அவன் மிக்க மங்களமான ஆசீர்வாதங்களால் தமயந்தியைத் தேற்றி வீட்டை அடைந்தான்.

ஓ! யுதிஷ்டிர! பிறகு, தமயந்தி, ஸுதேவனை வரவழைத்து, துக்க சோகங்களுடன் கூடியவளாகி, மாதாவின் எதிரில், 'ஓ! ஸுதேவரே! (அயோத்யா) நகரியை அடைந்து, அயோத்யா வாஸியான ருதுபர்ணராஜனிடம், 'பீமபுத்திரியான தமயந்தி வேறு பர்த்தாவை அடையவிருப்பமுள்ளவளாகி மறுபடியும் ஸ்வயம்வரத்தில் இருக்கப்போகிறாள். அங்கு எல்லா அரசர்களும் அரசகுமாரர்களும் செல்லுகிறார்கள். அப்படியே குறிப்பிடப்பட்ட அந்தக்காலமும் நாளைத் தினமேயாகும். பகைவரை அடக்குபவனே! இப்படிச் செல்வது உனக்கு முடியுமானால், விரைவாகச் செல்லு. அவள் ஸூரியோதயத்தில் இரண்டாவது பர்த்தாவை வரிக்கப்போகின்றாள். வீரனான அந்த நளன் உயிருடன் இருப்பதாகவோ மரித்ததாகவோ அறியப்படவில்லை' என்றசொல்லைச் சொல்லும்' என்றாள். மஹாராஜனே!

பிராம்மணனை ஸுதேவன், அவளால் சொல்லப்பட்டபடி, அப்பொழுது ருதுபர்ணராஜனை அடைந்து சொல்லினன்.

---

அறுபத்தோன்பதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(ருதுபர்ணன் பாதுகனைத் தேரோட்டச்செய்து வார்ஷ்ணேயனுடன் தமயந்தி ஸ்வயம்வரத்திற்காகப் புறப்பட்டுச் சென்றதும், வார்ஷ்ணேயன் பாதுகனது தேரோட்டும் திறமையைப் பார்த்து அவனை நளனென்று சந்தேகித்ததும்.)

நராதிபதியான அந்த ருதுபர்ணராஜன், ஸுதேவன் வார்த்தையைக்கேட்டு, வார்ஷ்ணேயன் முதலிய ஸாரதிகளை வரவழைத்தும் பாகுகனையும் அழைத்துப் பிராம்மணனிடமிருந்து கேட்ட தமயந்தியின் ஸ்வயம்வரச் செய்தியைச் சொன்னான். மெல்லிய வார்த்தையால் இன்மொழி கூறிக்கொண்டு, பாகுகனை நோக்கி, 'குதிரையின் தத்வமறிந்தவனே! ஓ! பாகுக! (முடியுமென்று) எண்ணுவையாயின், தமயந்தியின் ஸ்வயம்வரத்தைக் குறித்து விதர்ப்பதேசத்துக்கு ஒரே நாளில் செல்லவிரும்புகிறேன்' என்று சொன்னான். ஓ! கௌந்தேய! அந்த அரசன் இவ்விதம் சொல்லக்கேட்ட நளனுடைய மனமானது துக்கத்தால் வெடித்தது. பெரிய மனமுள்ள அவன், 'துக்கத்தால் மயக்கப்பட்ட தமயந்தி இவ்விதம் ஆகிவிடுவாளா? என்ன? அல்லது, என் விஷயத்தில் இந்தப் பெரிய உபாயம் சிந்திக்கப்பட்டிருக்குமா? கெட்ட எண்ணமுள்ள அற்பனான என்னால் வஞ்சிக்கப்பட்டவளும் எளியவளும் இரங்கப்படத்தக்கவளுமான தமயந்தி கொடுமையைச் செய்ய எண்ணங்கொண்டாள்; ஆ! கஷ்டம்! உலகில் ஸ்திரீகளின் இயற்கை சஞ்சலமானது; எனது குற்றமும் பயங்கரமானது. சிறிய இடையுடைய அவள் விட்டுப் பிரிந்ததால் அன்பு நீங்கினவளும் எனது சோகத்தால் கலங்கினவளுமாகி (நான் வருவேனென்னும்) ஆசையற்றமையால் இவ்விதம் செய்துமிருக்கலாம். அவள் முக்யமாகக் குழந்தைகளையுடையவளாயிருத்தலால், ஒருகால் இவ்விதம் செய்யாமலும் இருக்கலாம். இவ்விஷயத்தில் உண்மையா, பொய்யா என்னும் நிச்சயத்தைப் போய் அறிவேன். ருதுபர்ணனது விருப்பத்தை எனக்காகவும் யான் செய்கிறேன்' என்று ஆலோசனையும் செய்தான். வாடின மனமுள்ள பாகுகன், இவ்வாறு மனத்தால்

நிச்சயித்துக் கைகூப்பிக்கொண்டு, ருதுபர்ணராஜனை நோக்கி, 'உனது கட்டளையைச் செய்வதாக உறுதிகூறுகிறேன். மனிதப் புலியே! நராதிப! அரசனே! ஒரேநாளில் விதர்ப்பநகரியை அடைவேன். நாளைத்தினம் ஸூரியோதய காலத்தில் அங்கே விதர்ப்ப தேசத்தை அடைவாய்' என்னும் இதனைச் சொன்னான்.

இவ்விதம் சொல்லப்பட்ட அரசன், சிரித்துக்கொண்டு, பாஹுகனைப் பார்த்து, 'ஓ! பாஹுக! உன் விஷயத்தில் ஸந்தோஷமுடையவனாயிருக்கிறேன். இப்பொழுது உனக்கு எந்தவிருப்பத்தைச் செய்யக்கடவேன்.' என்று வினவினன். பாஹுகன், 'ஓ! ருதுபர்ண! யான் இந்த வாகனத்தை விதத்தம் செய்வேன்' என்றான். ஓ! அரசனே! பிறகு, அந்தப் பாஹுகன், பாகஸவரிராஜனது கட்டளையால் குதிரைச்சாலையை அடைந்து குதிரைகளைப் பரீக்ஷைசெய்தான். அந்தப்பாஹுகன் ருதுபர்ணனால் பலமுறை விரைவுபடுத்தப்பட்டுக் குதிரைகளை அறியவிரும்பி அடிக்கடி ஆலோசனை செய்து மெல்லியவைகளும் வல்லமையுள்ளவைகளும் நெடுவழி செல்வதில் திறமையுள்ளவைகளும் காந்தியுடனும் பலத்துடனும் கூடியவைகளும் நல்ல ஜாதியும் நல்ல தன்மையுமுள்ளவைகளும் கெட்ட லக்ஷணங்களில்லாதவைகளும் பருத்தமூக்குள்ளவைகளும் பெரிய மோவாயுள்ளவைகளும் பத்துச் சுழிகளால் சுத்தமானவைகளும் ஸிந்துதேசத்திற்பிறந்தவைகளும் காற்றுவேகமுள்ளவைகளும் அங்கங்களால் மெல்லியவையாகக் காணப்படுகின்றவைகளும் வழிச்செல்வதில் வேகத்தினால் ஒப்பில்லாதவைகளுமான குதிரைகளைத் தேர்ந்தெடுத்தான். அரசன், பலமற்ற அவைகளைக்கண்டு கோபத்துடன்கூடியவனாகி, 'நீ செய்ய விரும்பியது இது என்ன? உன்னால் நாம் வஞ்சிக்கத்தக்கவர்களல்லோம். அற்பமான [1] பலமும் [2] பிராணனுமுள்ள இந்தக் குதிரைகள் தேரை எவ்விதம் இழுக்கும்? மார்க்கமோ பெரிது. அதுவும் ஒரேநாளில் இவ்விதமான குதிரைகளால் எப்படி செல்லத்தக்கதாகும்?' என்றான். பாஹுகன், '[3] நெற்றியில் ஒன்றும் தலையில் இரண்டும் விலாவிலும் அவற்றின் பக்கத்திலும் இரண்டிரண்டும் மார்பில் இரண்டிரண்டும் பின்புறத்தில் ஒன்றுமே என அறியத்தக்க (சுழிகளுள்ள) இந்தக்

1 பாரத்தைப் பொறுக்கும் தன்மை. 2 வேகம்.

3 முன்னே பத்துச்சுழிகளென்று கூறப்பட்டுள்ளது. இங்கே பன்னிரண்டு சொல்லப்படுகின்றன. இதற்குப் பொருள் விளக்கிவிட்டு இந்த ஸ்லோகம் சில பிரதிகளில் இல்லையென்று பழையவுரை கூறுகிறது.

குதிரைகள் விதர்ப்பதேசத்தை (நாளையே) அடையும். இந்த விஷயத்தில் சந்தேகமில்லை. ஓ! அரசனே! நீ எண்ணுகிற மற்றக் குதிரைகளைச் சொல். அவைகளை உனக்காகப் பூட்டுகிறேன்' என்றான். ருதுபர்ணன், 'ஓ! பாஹுக! நீயே குதிரையின் தன்மையை அறிந்தவனும் ஸமர்த்தனுமாயிருக்கிறாய். நீ எவைகளைத் திறமையுள்ளவைகளென்று எண்ணுகிறாயோ அவைகளையே விரைவில் பூட்டுவாயாக' என்றான்.

பிறகு, ஸமர்த்தனான நளன், நற்குலத்துடனும் நன்னடையுடனும் கூடியவைகளும் வேகமுள்ளவைகளுமான நான்கு நல்லகுதிரைகளைத் தேரில் பூட்டினான். பிறகு, அரசன் விரைவுடன்கூடியவனாகி (க்குதிரைகள்) பூட்டப்பட்ட ரதத்தில் ஏறினான். பிறகு, அந்தச் சிறந்த குதிரைகள் முழங்கால்களால் பூமியில் விழுந்தன. வேந்தே! பிறகு, சோபையுள்ளவனும் மனிதரிற் சிறந்தவனுமான நளராஜன் தேஜஸ்ஸுடனும் பலத்துடனுங்கூடிய அந்தக் குதிரைகளைத் தேறினான். அந்த நளன் கடிவாளங்களால் நன்கு தூக்கிப்பிடித்து வார்ஷ்ணேயனென்கிற தேர்ப்பாகனை ஏற்றி வைத்துக்கொண்டு மிக்கவேகத்துடன் போகவிரும்பினான். அந்தச் சிறந்த குதிரைகள் முறைப்படி பாஹுகனால் ஓட்டப்பட்டுத் தேரிலிருக்கும் அரசனை மயங்கச்செய்வது [1] போல ஆகாயத்தில் கிளம்பின. ஸ்ரீமானான அயோத்யாதிபதியோ காற்று வேகமுள்ளவையும் அவ்விதம் சுமக்கின்றவையுமான அந்தக் குதிரைகளைக்கண்டு மிக்கவியப்பை அடைந்தான். வார்ஷ்ணேயனோ, அந்தத் தேரொலியைக்கேட்டும் அந்தக் குதிரைகளைப் பிடிப்பதைப் (பார்த்தும்) பாஹுகனின் குதிரைகளின் உண்மை அறியும் தன்மையைப்பற்றி, 'இவன் தேவராஜனுடைய ஸாரதியான மாதலியாயிருப்பனோ? அவ்விதம் வீரனான பாஹுகனிடம் பெரிதான அந்த (மாதலியின் ஸாரத்ய) லக்ஷணம் காணப்படுகின்றது; அல்லது, மிக்கஅழகான மனிதசரீரத்தை அடைந்தவரும் அச்வங்களின்குலத்தின் உண்மையை அறிந்தவருமான [2] சாலிஹோத்ரமுனியோ? அல்லது (இங்கு) வந்த இவன் பகைவர் பட்டணத்தை ஜயிக்கின்றவனும் ஜனங்களுக்குப்பதியுமான அந்த நளராஜனாக இருப்பனோ? அல்லது, இந்தப் பாஹுகன் அதேவித்தையை நளனிடமிருந்து அடைந்திருப்பனோ? ஏனெனில், பாஹுகனுக்கும் நளனுக்குமுள்ள

1 வேறு பாடம்.

2 'அச்வசாஸ்திரம் இயற்றிய ஆசார்யர்' என்பது பழைய உரை.

ஞானத்தை ஒத்ததாகவே காண்கிறேன். மேலும், பாஹுகனுக்கும் நளனுக்கும் இந்தவயதும ஸமமாயிருக்கின்றது. இவன் மிக்கவீர்ய முள்ள நளனல்லன். அவனுடைய வித்தையையுடையவனாக இருக்க லாம். மஹாத்மாக்களோ, விதிவசத்தாலாவது சாஸ்திரத்திற் சொல் லிய முறையை அனுஷ்டித்தலாலாவது மறைந்து இந்தப் பூமியில் சஞ்சரிக்கிறார்கள். வடிவத்தோற்றத்தின் மாறுபாட்டைக் குறித்து எனது எண்ணம் மாறவேண்டாம். அளவினால் குறைந்தவனாகவே இருத்தலால் மாறலாமென்பது எனது கருத்து பிராயத்தின் அள வானது அவனுக்கு ஒப்பாயிருக்கின்றது; ரூபத்தாலோ மாறுபாடி ருக்கின்றது. பாஹுகனை நிச்சயமாக எல்லாக குணங்களுடனும் கூடிய நளனென்றே எண்ணுகிறேன' என்று ஆலோசித்தான். ஓ! மஹாராஜனே! புண்யஶ்லோகனுடைய ஸாரதியான வார்ஷ்ணே யன இப்படி மனத்தால் பலவாறு தர்க்கித்து நன்கு ஆலோசித்தனன். ராஜஶ்ரேஷ்டனான ருதுபர்ணராஜனும், பாஹுகனது குதிரை அறி யும தன்மையை ஆலோசிக்கின்றவனாகி வார்ஷ்ணேயனென்னும் ஸாரதியுடன் ஸந்தோஷித்தான; (புத்தியின) ஒருவழிச் செலலும தன்மையையும், அப்படியே உத்ஸாகத்தையும, அந்தக் குதிரைகளைப் பிடிப்பதையும், திறமையையும் நன்கு நோக்கி மிக்க ஸந்தோஷத்தை அடைந்தான்.

---

## எழுபதாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

---

(ருதுபர்ணன் பாஹுகனுடைய குதிரை நடத்தும் திறமையைக் கண்டு கொத்துக் கொத்தாயுள்ள பொருள்களைக் கணக்கிடுவதில் தனக் குத் திறமையிருப்பதை அவனுக்குச் சொல்லியதும், ருதுபர்ணன் ஒரு மரத்தின் இலைகளை எண்ணிக்காட்ட வியந்த நளன் அஶ்வஹ்ருதயமென்னும் வித்தையைக் கொடுப்பதாகச் சொல்லி ருதுபர்ணனிடமிருந்து அக்ஷஹ்ருதய முதலிய வித்தைகளைப் பெற்றதும், பின்பு, நளன் தேகத்திலிருந்து வெளி வந்த கலி நளன் சபிப்பனோ என்று பயந்து அவனுக்கு வரங்கொடுத்துத் தான்றி மரத்தை அடைந் ததும்)

அவன் நதிகளையும் மலைகளையும் வனங்களையும் குளங்களை யும் பறவை ஆகாயத்தில் ஸஞ்சரித்துத் தாண்டுவதுபோல விரை

வாகத் தாண்டினன. அப்பொழுது, தேரானது அவ்விதம் செல்லுகையில, பகைவர் பட்டணங்களை வெல்லுபவனான பாகஸ வரிராஜன் மேலாடை கீழேவிழுந்ததைக் கணடான். அப்பொழுது, வஸ்திரம விழுந்தவுடன், நல்ல மனமுளள அந்த அரசன், அதனை எடுக்கக கருதி விரைவாக நளனை நோக்கி, 'மிக்க புத்திமானே! வார்ஷ்ணேயன எனது இந்த வஸ்திரததை இங்கே எடுத்து வரும வரையில மிகக வேகமுள்ள இந்தக்குதிரைகளை இழுததுப் பிடி' என்றான். நளன, 'உனது ஆடை தூரததில் விழுந்துவிட்டது. ஒரு யோஜனை தூரம தாண்டி விட்டாய். திரும்பவும் எடுதது வர முடியாது' எனறு அவனுக்கு விடை கூறினன்.

அரசனே! பிறகு, நளன் இவ்விதம் சொல்லக்கேட்ட அரசன், மனததில் சிறிது அதிருப்தியுள்ளவனாகிக காட்டில் பழமுள்ள ஒரு தான்றிமரததை அணுகினன். அரசன, அதனைக்கணடு விரைபவனாகி, பாஹுகனை நோககி, 'ஓ! ஸூத! எண்ணுவதில எனனுடைய சிறந்த வன்மையை நீ பார். எலலாரும் எல்லாவற்றையும அறியார். எல்லாம்அறிநதவன ஒருவனுமில்லை. ஒருபொழுதும் ஒரேமனிதனிடததில ஞானம முழுமையும சேர்ந்திருப்பது ஓரிடததிலும் இல்லை. ஓ! பாஹுக! [1] இந்த மரததில இருக்கிற இலைகளையும் பழஙகளையுமகாட்டிலும கீழே உதிரநதுகிடக்கிற இலைகள் நூறு அதிகமும் பழங்கள் ஒனறு அதிகமுமாகும. பாஹுக! இந்த இரண்டுகிளைகளிலும் (ஒன்றில) ஓரிலை அதிகமும் (மறறொன்றில) ஒருபழம அதிகமுமாக ஐந்துகோடி இலைகள இருக்கின்றன. நீ எண்ணப்போகிற இநதககிளைகளிலுள்ள பழங்களைச் சொல்லுவேன். இந்த மரததின இரண்டுகிளைகளையும் (அவற்றிலுள்ள) மற்றச்சிறு கிளைகளையும கூட்டிப்பார். இவைகளில் இரணடாயிரததுத்தொண்ணூற்றைநது பழஙகளிருக்கின்றன' எனறான். பிறகு, பாஹுகன், தேரினினறும இறங்கி அரசனை நோககி, 'ஓ! பகைவரை மெலிவிப்பவனே! அரசனே! எனக்குத தெரியாததுபோலத் தற்புகழ்ச்சி செய்துகொளளுகிறாய். தானறி(க்கிளை)யை ஒடித்து இதனை நேரில் கணக்கிடுவேன். வேந்தே! பிறகு, எணணப்பட்டவுடன், உனது (கணக்குத) திறமையை அறிவேன். ஓ! மஹாராஜ! உனக்கெதிரிலேயே தான்றியை [2] ஒடிப்பேன். இது இவ்விதம் இருக்குமோ இராதோ யான் அறியேன். ஓ! ஜனதிப! நீ பார்க்குமபொழுதே இதன் பழங்களை எண்ணுவேன். வார்ஷ்ணேயன் குதிரைகளின் கடி

1 வேறு பாடம்.  2 வேறு பாடம.

வாளத்தை ஒரு முகூர்த்தம் பிடிக்கக்கடவன்' என்று சொல்லினன். அரசன், 'நீ மதிக்க இது காலமன்று' என்று பாகனுக்கு அவனுக்குச் சொல்லினன. பாஹுகனோ, மிக்க முயற்சியை அடைந்தவனாகி, அவனை நோக்கி, 'நீ ஒரு முகூர்த்தகாலம் பொறுத்திரு. அல்லது, நீ விரைவுபட்டால், மங்களமான இந்தவழி போகின்றது; வார்ஷ்ணேயனைத் தேர்ப்பாகனாக்கிக்கொண்டு போ' என்றான். ஓ! குருநந்தன! ருதுபர்ணன் அவனுக்கு இன்மொழி கூறிக்கொண்டு, 'ஓ! பாஹுக! உலகத்தில் தேர் ஓட்டுகிறவன் நீ ஒருவனே; மற்றவனில்லை. ஓ! குதிரைகளை அறிந்தவனே! உன்னைக்கொண்டே விதர்ப்பதேசத்தை அடையவிரும்புகிறேன். உன்னைச் சரணமடைந்தவனாக இருக்கின்றேன். தடைசெய்யாதே. ஓ! பாஹுக! இன்று விதர்ப்பதேசத்திற்குச் சென்று சூரியனை எனக்குக் காண்பிப்பாயானால் என்னிடம் நீ சொல்லும் உனது இஷ்டத்தையும் செய்வேன்' என்று சொன்னான்.

பிறகு, பாஹுகன், 'தானறிவை எண்ணினபின்பு விதர்ப்பதேசத்திற்குச் செல்லுவேன். இவ்விதம் எனது வார்த்தையைச் செய்' என்று அவனுக்குச் சொல்லினன. அரசன், விருப்பமில்லாதவனாக, 'எண்ணுவாய்; குற்றமற்றவனே! குதிரைகளின் தன்மை அறிந்தவனே! என்னால் உத்தரவு செய்யப்பட்ட கிளையின் ஒரு பாகத்தை எண்ணு. அதிலிருந்து நீ திருப்தியடை' என்று அவனுக்குச் சொல்லினன். அவன் விரைவாகத் தேரினின்றும் இறங்கி அந்த மரக்கிளையை ஒடித்தனன. பிறகு, சொல்லப்பட்டபடி அவ்வளவு பழங்களையே அவன் எண்ணி வியப்படைந்து அரசனை நோக்கி, 'அரசனே! இந்த மிக்க ஆச்சரியமான உனது திறமையைக் கண்டேன். ஓ! மன்னவ! இதனை அறியக்கூடிய அந்த வித்தையைக் கேட்க விரும்புகிறேன்' என்னும் இதைச் சொல்லினன. வேந்தே! பிறகு, போவதில் விரைவுள்ளவனான அரசன், 'என்னை
1 அக்ஷஹ்ருதயத்தை அறிந்தவனென்றும் கணக்கிடுவதிலும் வல்லவனென்றும் அறிவாயாக' என்று அவனுக்குச் சொல்லினன். பிறகு, பாஹுகன், அவனை நோக்கி, 'மனிதரிற்சிறந்தவனே! இரண்டு வித்தையையும் கொடு. என்னிடமிருந்தும் அஸ்வஹ்ருதயத்தைப் பெற்றுக் கொள்' என்று சொன்னான்.

பிறகு, ருதுபர்ணராஜன், காரியகௌரவத்தாலும் குதிரை வித்தையில் ஆசையாலும் அந்தப் பாஹுகனை நோக்கி, 'அப்

1 சூதாட்டத்திற்குரிய தேவதையை வசப்படுத்தும் மந்திரம்.

படியே. ஓ! பாஹுக! நீ இந்தச் சிறந்த அக்ஷஹ்ருதயத்தைச் சாஸ்திரத்திற் சொல்லப்பட்டபடி பெற்றுக்கொள். எனது அச்வஹ்ருதயமானது உன்னிடத்தில் அடைக்கலமாக இருக்கட்டும்' என்னும் சொல்லைச் சொன்னான். இவ்விதம் சொல்லி ருதுபர்ணன் நளனுக்கு வித்தையைக் கொடுத்தான். அக்ஷஹ்ருதயத்தை அறிந்த அவனது சரீரத்தினின்றும் கொடிதான கார்க்கோடக விஷத்தை வாயினால் எப்பொழுதும் கக்கிக்கொண்டு கலியானவன் வெளிவந்தான்.

அப்பொழுது, (தமயந்தியின் சாபத்தினால்) பீடிக்கப்பட்ட அந்தக் கலியினுடைய அந்தச் சாபாக்னியானது (அவனை விட்டு) வெளிப்பட்டது. கலியானவன் முன்பு நளனைப் பித்தனைப் போன்ற உருவமுள்ளவனாகவும் காந்தியற்றவனாகவும் மிகத் துன்புறுத்தப்பட்டவனாகவும் செய்தான். அந்த அரசன் அந்தக் கலியினால் நீண்டகாலம் மெலிவிக்கப்பட்டு உருமாறியிருந்தான். பிறகு, கலி விஷத்தால் விடுபட்ட சரீரமுள்ளவனாகித் தனது (முன்) உருவத்தை அடைந்தான். நிஷதாதிபதியான நளன் கோபங்கொண்டு அவனைச் சபிக்கவிரும்பினான். கலியானவன் பயந்து நடுங்கிக் கரங்குவித்துக்கொண்டு அவனை நோக்கி, 'அரசனே! கோபத்தை அடக்கு. உனக்குச் சிறந்த புகழைத் தருவேன். இந்திரஸேனனின் தாய் முன்பு உன்னால் விடப்பட்டபொழுது கோபங்கொண்டு என்னைச் சபித்தாள். ஓ! ராஜேந்திர! ஜயிக்கப்படாதவனே! அதனால், நான் மிகப் பீடிக்கப்படுகிறவனும் நாகராஜனின் விஷத்தால் இரவும் பகலும் எரிக்கப்படுகிறவனுமாகி உன்னிடத்தில் மிக்க துயருடன் வஸித்தேன். உன்னைச் சரணமடைந்தவனாக இருக்கிறேன். எனது இந்தச் சொல்லையும் கேள். உலகத்தில் எந்த மனிதர்கள் ச்ரத்தையுடன் உன்னைச் சொல்லுவார்களோ அவர்களுக்கு என்னிடமிருந்து உண்டாகும் பயம் ஒருபொழுதும் ஏற்படாது. மஹாராஜனே! பயத்தால் பீடிக்கப்பட்டுச் சரணமடைந்த என்னை நீ சபிக்காமலிருந்தால், எவர்கள் நள(னை உன்)னைச் சொல்லுவார்களோ அவர்களுக்கு மனத்தைப்பற்றியதும் மெய்யைப்பற்றியதும் சொல்லைப் பற்றியதுமான (பயம்) உண்டாகாது' என்றான். இவ்விதம் சொல்லக் கேட்ட நளராஜன் தனது கோபத்தை அடக்கினான். பிறகு, கலி பயத்துடன் விரைவாகத் தான்றிமரத்தில் நுழைந்தான். கலி நளனுடன் பேசினபொழுது பிறனால் பார்க்கப்படவில்லை.

கலி நன்கு மறைந்தவுடன், பகைவீரர்களைக் கொல்லும் நிஷதராஜன் தாபம் நீங்கினவனாகி அதன் பழங்களையும் எண்ணி, பிறகு,

மிக்க களிப்புடனும் மிக்க காந்தியுடனும் கூடித தேரிலேறி விராகு குபவனுகி வேகமான குதிரைகளுடன் சென்ருன். ஓ! பாண்டு நந்தன! ராஜேந்திர! அதுமுதல, இவவுலகில் தானறிமரமானது கலி அடைந்திருததலால், விலக்கப்படடதாயிற்று. அடிக்கடி பக்ஷிகளைப்போல உயரக்கிளம்புகின்ற சிறந்த குதிரைகளை நளன் மிக்க ஸந்தோஷமுளள மனததுடன் நடததினுன். மிகக புகழ்பெற்ற அந்த அரசன விதர்ப்ப தேசததை நோக்கிச் சென்ருன். நளன் நெடுந்தூரம் சென்றவுடன், கலியும தன் வீட்டை அடைந்தான். அரசனே! பிறகு, கலியால் விடபபட்டவனும் உருவம்மட்டும் மாறின படியிருப்பவனும பூமிக்குப் பதியுமான நளராஜன கவலையற்றவனுயினன.

---

## எழுபத்தோராவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

---

(ருதுபர்ணன் குண்டினபுரத்தில் நுழைந்ததும், அவனது தேரொலியைக் கேட்ட தமயந்தி அதனை ஓட்டுபவனை நளனென்றெண்ணி அதனை அறிதற்காகத் தூதியை அனுப்பியதும்.)

பிறகு, உண்மையான பராக்ரமமுள்ள ருதுபர்ணன் ஸாயங் காலததில விதர்ப்பதேசததை அடைந்திருப்பதை ஜனங்கள் பீமராஜனுக்குத தெரிவிததார்கள். அநத அரசன், பீமனிடம் அனுமதி பெற்றுத தேரொலியினுல் மூலைததிசைகளுடன் கூடின எல்லாத திக்குக்களையும் முழக்கச செய்துகொண்டு குண்டினபுரததில் நுழைந்தான். பிறகு, அங்குள்ள நளனுடைய குதிரைகள் அந்தத தேரொலியைக் கேட்டன; கேட்டவுடன், முன் நளனெதிரில் மகிழ்வதுபோல மிகமகிழ்ந்தன. மழைககாலததில் முழங்குகின்ற மேகத்தின் ஒலியைபபோன்ற நளனுடைய கம்பீரமான அந்தத் தேரொலியைத தமயநதியும் கேட்டாள். மிக உரத்த சபதத்தைக் கேட்டு மிக்க வியபபடைந்த தமயந்தியும், அப்படியே நளனது குதிரைகளும், அந்தத தேரொலியை, முன்பு நளனுல் அவனுடைய குதிரைகள் ஓட்டப்படுமபோது உண்டான ஒலிக்கொப்பாக எண்ணினுர்கள். உப்பரிகையிலிருககும மயில்களும், யானைச்சாலையிலும குதிரைச்சாலை

யிலுமுள்ள யானைகளும் குதிரைகளும் அந்த அரசனுடைய தேரொலி யைக் கேட்டன. ஓ! அரசனே! யானைகளும் அப்படியே மயில் களும் அந்தத் தேரொலியைக் கேட்டு மேகத்தின் வரவைப் பார்த்து ஒலிப்பதுபோல எதிர்முகமாக ஒலித்தன.

தமயந்தி, 'பூமியை நிரப்புவதுபோன்ற இந்தத் தேரொலி யானது எனது மனத்தை மகிழ்விக்கின்றதாதலால் இதனை ஓட்டுப வர் நளராஜரே. இப்பொழுது சந்திரன்போலப் பிரகாசிக்கும் முக முள்ளவரும் எண்ணுதற்கரிய குணமுள்ளவரும் வீரருமான அந்த நளராஜரைப் பாரேனாகில் கெடுவேன்; சந்தேகமில்லை. யான் இப் பொழுது அந்த வீரருடைய இனிய தொடுகையுள்ள கைகளின் நடுவை அடையேனாகில் இருக்கமாட்டேன்; ஸந்தேகமில்லை. மேக முழக்கம்போன்ற குரலுள்ள நளராஜர் என்னை அடையாவிடில் இப் பொழுது பொன்போன்ற நிறமுள்ள தீயில் பாய்வேன். சிங்கம் போன்ற பராக்ரமமுள்ளவரும் மதம்கொண்ட யானைபோல நடப்ப வருமான ராஜஶ்ரேஷ்டர் என்னை அடையாவிடில் நாசத்தை அடை வேன்; ஸந்தேகமில்லை. (அவரிடத்தில்) சிறிதும் பொய் இருப்பதாக நான் எண்ணவில்லை; அபகாரம் செய்யும் தன்மையுமிருப்பதாக எண்ணவில்லை. தற்செயலான பேச்சுக்களிலும் (அந்த) மஹாத்மாவி னுடைய சொல் பழுதுபோனதில்லை. பிரபுவும் பொறுமையுள்ள வரும் வீரரும் ஈகையுள்ளவரும் மற்ற அரசர்களைக்காட்டிலும் மேலானவருமான என்னுடைய நிஷதராஜர் பேடிபோல அறப்பர்களை அடுத்திருக்கிறார். கஷ்டம்! அவருடைய குணங்களை நினைக்கிற வளும் பகலும் இரவும் அவரையே பற்றியுள்ளவளுமான எனது இந்த மனமானது காதலரைப் பிரிந்ததாகிச் சோகத்தால் பிளக்கப் படுகின்றது' என்றாள்.

இவ்விதம் அவள் அறிவற்றவளபோலப் புலம்பிக்கொண்டு, புண்யஶ்லோகனைப் பார்க்கவேண்டுமென்ற விருப்பத்தால் உயர்ந்த உப்பரிகையில் ஏறினாள். ஓ! அரசனே! நல்ல மனமுள்ள தமயந்தி நாற்புறமும் பார்த்துப் பிறகு நடுக்கட்டில் தோ இருப்பதையும் ருதுபர்ணராஜன் வார்ஷ்ணேயனுடனும் பாஹுகனுடனுமிருப் பதையும் கண்டாள். பிறகு, வார்ஷ்ணேயனும் பாகுகனும் அந்தச் சிறந்த தேரினின்றும் இறங்கி அந்தக் குதிரைகளைக் (கடிவாளத் தைத்) தளர்த்திவிட்டுத் தேரை நிறுத்தினார்கள். அந்த நராதிபனான ருதுபர்ணன் தேர் நடுவிலிருந்து இறங்கிப் பயங்கரமான பராக்ரம முடைய பீமமஹாராஜனை அடைந்தான். பீமன், அவனை மிக்க

ஸந்தோஷத்துடனும் மரியாதையுடனும் வரவேற்றான். நராதிப னான அந்த ருதுபர்ணன் அந்த அரசனால் பூஜிக்கப்பெற்றான். அழ கிய அந்தக் குண்டினபுரத்தில் வந்திருக்கிற [1] அந்த அரசன் [2] அப் பொழுது அடிக்கடி பார்த்தும் விதர்ப்பாதிபதியான அரசனுடன் சேர்ந்திருந்தும் (விசேஷம்) ஒன்றையும் காணவில்லை. சடிதியில் அடையப்பட்ட ஸ்திரீகளின் ரகஸ்ய ஆலோசனையை, காரணமில் லாமையால், பீமன் அறியவில்லை. பாரத! பீமராஜன், ருதுபர் ணனை, 'உன் வரவு நல்வரவாகுக; என்ன செய்யவேண்டும்?' என்று கேட்டான். அந்தப் பீமராஜன், (ருதுபர்ணன்) தன் மகள் விஷய மாக வந்ததை அறியவில்லை. புத்தியுள்ளவனும் உண்மையான பராக்ரமமுள்ளவனுமான அந்த ருதுபர்ண ராஜன் ஓர் அரசனை யாவது ஒரு ராஜகுமாரனையாவது காணவில்லை. ஸ்வயம்வரப் பேச்சையும் பிராம்மணர்களின் வரவையும் ஸ்வயம்வர காரியத் தைக் குறித்து மற்றும் ஒரு யத்தனத்தையும் காணவில்லை. பிறகு, கோஸலாதிபனாகிய அரசன் மனத்தில் ஒன்றும் தோன்றாதவனாகி, 'உங்களை நமஸ்கரிப்பதற்காக வந்திருக்கிறேன்' என்று அந்தப் பீமனுக்குச் சொல்லினான். பீமராஜனும், சிரித்துக்கொண்டு, பல கிராமங்களைத் தாண்டி நூறு யோஜனைக்கு அதிகதூரம் வந்த அவனது வரவின் காரணத்தை மனத்தால் நன்கு ஆலோசித்தனன்; உண் மையை அறியவில்லை. அந்த அரசன், 'வரவின் காரணமானது சிறிய காரியமுடையதாக அவனால் குறிப்பிடப்பட்டது. (ஆனால்,) இது இவ்விதமன்று. காரணம் எதுவாகுமென்பதைப் பின்பு முடிவில் தெரிந்துகொள்வேன்' என்றெண்ணி, அவனை மரியாதை செய்து, 'வாட்டமடைந்திருக்கிறாய்; இளைப்பாறக்கடவாய்' என்று அடிக்கடி சொல்லி அனுப்பினான்.

அன்புள்ள பீமராஜனால் மரியாதை செய்யப்பட்டவனும் மனம் மிக மகிழ்ந்தவனும் அன்புள்ளவனுமான அந்த ருதுபர்ணராஜன், பீமராஜனுடைய வேலைக்காரர்களால் பின்தொடரப்பட்டவனாகிக் குறிப்பிடப்பட்ட விடுதியை அடைந்தான். வேந்தே! ருதுபர்ண ராஜன் வார்ஷ்ணேயனுடன் சென்று போனபிறகு, பாகுகன் ரதத்தை ஓட்டிக்கொண்டு ரதசாலையை அடைந்தான். அவன் அந்தக் குதிரைகளை அவிழ்த்துவிட்டு, அவைகளை முறைப்படி உபசரித் துக் களைப்பாற்றித் தானும் தேர் நடுவில் உட்கார்ந்தான். விதர்ப்ப ராஜகுமாரியான தமயந்தியும் சோகத்தால் துன்பமடைந்து

1, 2 இரட்டித்தலால் இரண்டு சொற்கள் விடப்பட்டன.

பாகஸவரி ராஜனையும் ஸூதபுத்ரனான வார்ஷ்ணேயனையும அப்படியிருக்கும பாஹுகனையும கண்டு, ' இது யாருடைய தேரின் ஒலி? நளராஜனுடைய தேரொலிபோலப பெரிதாக இருநதது. நிஷதராஜரையோ காணவில்லை. அதே வித்தையானது வார்ஷ்ணேயனால கற்கப்பட்டிருக்கவேண்டுமென்பது நிச்சயம. அதனால், இந்தத தேரொலியானது இபபொழுது நளராஜருடைய தேரொலிபோலப் பெரிதாக இருநதிருக்கவேண்டும் அல்லது, ருதுபர்ணனும நளராஜர் போலவே (அஶ்வஹ்ருதயம தெரிந்தவனா யிருக்கவேணடும்.) நிஷதராஜருடைய தேரொலிபோலவே இநதத தேரொலியும் காணபபடுகிறது' என்று ஆலோசித்தாள். அரசனே! அழகிய அந்தத தமயந்தியோ இவவிதம் ஆலோசித்து நிஷதராஜனைத தேடும விஷயததில் வேலைக்காரியை அனுப்பினாள்.

---

எழுபத்திரண்டாவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

(தமயந்தியால் அனுப்பப்பட்ட கேசினி நளனிடம் பேசித் திரும்பிவந்து, பேசும்பொழுது உண்டான குறிப்புக்களைத் தமயந்தியிடம் தெரிவித்தது.)

தமயந்தி, ' ஓ! கேசினி! ரததகின் நடுவில உட்கார்ந்தவனும விகாரததை அடைந்தவனும குறுகிய கையுள்ளவனுமான இந்தத தேரபபாகன யார்? போ; தெரிந்துவா. சுபமானவளே! குற்றமற்றவளே! இநத மனிதனிடம சென்று சாவதானமுள்ளவளாகி நயததுடன க்ஷேமததை உள்ளபடி வினவுவாயாக. என மனததிற்குச் சந்தோஷமும ஹ்ருதயததிற்கு ஸுகமும் உண்டாதலால் இவர் நளராஜராக இருக்கவேணடுமென்ற பெரிய சஙகையானது இவர் விஷயததில் எனககு இருக்கின்றது. குற்றமற்றவளே! நீ பேசசின் முடிவில, பாணனுதன் சொலலிய சொல்லையும் இவரை நோக்கிச் சொல்லக்கடவாய். நீ மறுமொழியையும் அறிந்து வருவாயாக' என்றாள். தூதியானவள் ஸாவதானமாகச் சென்று பாகுகனை நோக்கிப் பினவருமாறு சொன்னாள். கல்யாணியான தமயந்தியும் உப்பரிகையில் நின்று பார்ததுக்கொண்டிருந்தாள்.

கேசினி, ' ஓ! மனுஷ்யேந்திரரே! உமது வரவு நலவரவாகுக. யான் உமக்கு க்ஷேமததைச் சொலலுகின்றேன். மனிதரேறே!

தமயந்தியின சொல்லை நனகு அறியக்கடவீர். நீஙகள எப்பொழுது புறபபட்டீாகள்? எதறகாக இஙகுவந்தீாகள? நியாயப்படி, உண்மையை உரைப்பீராக. தமயநதி கேட்க விருமபுகிருள' எனருள. பாஹுகன், 'மகாதமாவான கோஸலராஜன நாளைத தினம தமயந்திக்கு இரணடாவது ஸவயம்வரம் நடக்கபபோகிற தென்று பிராமமணனிடமிருந்து கேட்டான. இதைக்கேட்டு, அரசன நூறுயோஜனம செலலக் கூடியவைபும காறறுவேகமுள ளவையுமான முககியமான குதிரைகளுடன் புறபபட்டான. நான இவனுடைய தேர்ப்பாகன' எனருன. கேசினி, 'உஙகளுள மூன்ருமவனுன இவன எஙகிருநதவன்? எவனுடையவன? நீர் யாரைச சேர்நதவா? எவ்விதம இநதககாரியம உமமிடததில அமைந்தது?' எனறு கேட்டாள. பாஹுகன், '(இவன) புணயஸலோகனுடைய ஸூதன்; வார்ஷ்ணேயனென்று பெயாபெற்றவன். சுபமானவளே! இவன, நளன் ஓடிப்போனதும பாகஸவரியை அடைந்தான். குதிரைதொழிலில வலலவனும தேரோட்டுவதில புகழ்பெறறவனுமான யானும ருதுபர்ணனுல தேரோட்டுவதிலும் சமையல செயவதிலும வலிய வேணடப்பட்டேன்' என்று விடையளிததான. கேசினி, 'ஓ! பாஹுகரே! நளராஜர் எஙகுபபோனுரெனறு வார்ஷ்ணேயன் அறிவானு? அவனுல் உம்மிடததில ஏதாவது சொலலபபட்டது உண்டா?' என்ருள. பாஹுகன, 'இவன நளனுடைய அழகிய தோற்றமுள்ள மககளை இஙகேயேவிட்டுப பிறகு இஷ்டப்படி போயினன். நளனை அறியான. புகழுளளவளே! மற்றும எந்தமனிதனும நளனை அறியான். பூமிக்கு அரசனுன அவன் உருவம மாறினவனுகி இவ்வுலகில மறைந்து ஸஞ்சரிக்கிருன. நளனை அவனது [1] ஆதமாவே அறியும, அந்த ஆதமாவுக்கு அடுததபடியானவளும (அறிவாள.) நளனுக்கு உரிய அடையாளஙகள் ஒருபொழுதும் அவனைககாட்டா' எனருன். கேசினி, அப்பொழுது, 'சூதாடியே! காதலனே! எனனுடைய பாதி வஸதிரததைக் கிழிததுக்கொண்டு, பிரியமுள்ளவளும் தூங்குகினறவளுமான சாதலியுமான எனனைக் காட்டில்விட்டு எஙகே சென்றனை? பகலும இரவும் எரிக்கபபடுகின்றவளும் பாதி ஆடையைச சுற்றிககொண்டவளுமான அவள் [2] உன்னுல் காணபபட்ட

---

1 அவனே அறிவானெனபது.

2 'ஸமாதிஷடா' எனபது மூலம, முன 67-வது அதயாயததில் 'தவயா தருஷடா' என்றிருககிறது. இஙகும அந்தபபாடமே கொள்ளப்பட்டது. உசஅ-ம பக்கம உக-வது வரி பாாகக.

படி உன்னை எதிர்பார்த்த வண்ணமாயிருக்கிறாள். அரசனே! அந்தத் துக்கத்தால் எப்பொழுதும் அழுகின்ற அப்படிப்பட்ட எனக்குத் தயைசெய். வீர! மறுமொழியும் சொல். ஓ! அறிவிற்சிறந்தவனே! அவள் விரும்பும் அந்த வரலாற்றைச் சொல். குற்றமற்ற தமயந்தியானவள் அதே வார்த்தையைக் கேட்க விரும்புகின்றாள்' (என்ற) இந்த ஸதிரீவார்த்தைகளை அடிக்கடி சொல்லிக்கொண்டு முதலில் அயோத்தியை அடைந்த அந்தணனுக்கு இவற்றைக் கேட்டு, நீர் முன்பு மறுமொழி சொன்னீரல்லவா? அதனைத் திரும்பவும் தமயந்தி கேட்க விரும்புகிறாள்' என்றாள்.

ஓ! குருநந்தன! இவ்விதம் கேசினியால் சொல்லப்பெற்ற நளனது மனமானது துக்கமடைந்ததாயிற்று. கண்களும் நீர் நிரம்பினவை ஆயின. பாரத! எரிக்கப்படுகின்ற அந்த அரசன், தனது துக்கத்தை அடக்கிக்கொண்டு, கண்ணீரால் விளங்காத சொல்லுடனே திரும்பவும் பின்வருமாறு சொல்லலானான். 'குலஸ்திரீகளான கற்புள்ளபெண்கள், கஷ்டத்தை அடைந்தவர்களாயினும், தாமே தம்மைக் காத்துக்கொள்ளுகின்றார்கள். (அவர்களால்) ஸ்வர்க்கமானது ஜயிக்கப்பட்டது. ஸம்சயமில்லை. பர்த்தாக்களால் விடப்பட்டவர்களாயினும், ஒருபொழுதும், கோபியார். உத்தமஸ்திரீகள் ஒழுக்கத்தைக் கவசமாயுடைய உயிர்களைத் தரிக்கின்றார்கள். கஷ்டத்திலிருப்பவனும் மூடனும் ஸுகத்திலிருந்து நழுவினவனுமான அவனால் விடப்பட்ட விஷயத்தில், அவள் கோபிப்பது தகாது. உணவை விரும்பினவனும் பறவைகளால் ஆடை கவரப்பட்டவனும் மனோவியாதிகளால் எரிக்கப்படுகின்றவனுமான (அவன்) விஷயத்தில் ச்யாமையானவள் கோபிப்பது தகாது. மரியாதை செய்யப்பட்டவளாயினும் அல்லது செய்யப்படாதவளாயினும், ராஜ்யத்தை இழந்தவனும் செல்வமற்றவனும் பசியுள்ளவனும் துக்கத்தில் முழுகியவனுமான அவ்விதமான பர்த்தாவைக்கண்டு' என்று இவ்விதம் அவ்வார்த்தையைச் சொல்லுகின்ற நளன் மிக்க மனவருத்தங்கொண்டு கண்ணீரை அடக்கச் சக்தியற்றவனாகி மிக அழுதான். பிறகு, அந்தக் கேசினி திரும்பிப்போய் அவனது அந்தச் சொல் அனைத்தையும் அந்தச் சரீரத்திலுண்டான வேறுபாடுகளையும் தமயந்திக்குத் தெரிவித்தாள்.

## எழுபத்துமூன்றுவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(பாஹுகன் நீரும் நெருப்பும் உண்டுபண்ணிக்கொண்டதைக் கேசினி தமயந்திக்குத் தெரிவித்ததும், தமயந்தி பரிசோதிப்பதற்காக பக்ஷ்யங்களை அனுப்பியதும், பாகுகன் கண்ணீருடன் மக்களைத் தழுவியதும், கேசினியிடம் அவர்களைத் தான் தழுவினதற்கு வேறு காரணம் சொல்லியதும்.)

*அரசனே! தமயந்தி, கேசினியின் அந்தச் சொல்லைக் கேட்டு, அவனை நளனென்று ஸந்தேகித்துக் கேசினியை நோக்கி, 'ஓ! கேசினி! நீ திரும்பவும் போ. பாகுகனிடம் சோதனையைச்செய். ஒன்றும் சொல்லாமல் ஸமீபத்திலிருந்து கொண்டு அவனுடைய செயல்களைப் பார். ஓ! விளக்கமுள்ளவளே! அவன் ஒரு காரியத்தைச் செய்யும்பொழுது அதன் காரணத்தையும் அதில் வேலை செய்கின்ற (அவனுடைய) செய்கையையும் உற்றுநோக்கக்கடவாய். ஓ! கேசினி! நிர்ப்பந்தித்தாலும், அவனுக்கு நெருப்புக் கொடாதே. யாசித்தாலும், தாமதித்தாயினும் ஒரு முறையும் நீரும் கொடாதே. நீ இந்தச் செயலனைத்தையும் நன்கு பார்த்து எனக்குத் தெரிவிப்பாயாக. நீ பாஹுகனிடத்தில் காணும் தேவர்க்குரியவையும் மனிதர்க்குரியவையுமான குறிப்புகளையும் மற்றும் பார்ப்பதையும் நீ எனக்குச் சொல்ல வேண்டும்' என்னும் இதனைச் சொல்லினள். தமயந்தியால் இவ்விதம் சொல்லப்பட்ட அந்தக் கேசினி பின்னும் போயினள்; பிறகு, குதிரைகளை அறிந்தவனுடைய குறிப்புக்களைக் கண்டு திரும்பவும் வந்தனள். அவள் பாஹுகனிடத்தில தேவர்க்குரியவையும் மனிதற்குரியவையுமான தான் கண்ட குறிப்புக்கள் முழுமையையும் நடந்தபடியே தமயந்திக்குத் தெரிவித்தாள்.*

*கேசினி, 'ஓ! தமயந்தி! இவன் உறுதியாகச் சுத்தமான செய்கையுள்ளவன். இப்படிப்பட்ட மனிதன் ஓரிடத்திலும் முன்பு என்னால் பார்க்கப்பட்டதுமில்லை; கேட்கப்பட்டதுமில்லை. இது நிச்சயம். தாழ்வான வாயிலை அடைந்தும் இவன் ஓரிடத்திலும் குனியவில்லை. ஆனால், அவனைக் கண்டு மேலே படாதபடியும் ஸுகமாகச் செல்லும்படியும் (வாயில்) உயர்ந்துவிடுகின்*

றது. நெருக்கமான இடத்திலும், இவனுக்கு மிகப்பெரிதும் அதிகமுமான இடம் உண்டாகின்றது. மேலும், பீமராஜனால் ருதுபாணனுக்காகப் பலவகை உணவுப்பொருள்களும் ஆடு முதலியவற்றினுடையவையான பலவகை மாமிசங்களும் அவ்விடத்தில் அனுப்பப்பட்டன. அவற்றை அலம்புவதற்காக அங்குக் குடங்கள் வைக்கப்பட்டன. பிறகு, அவனால் பார்க்கப்பட்ட அந்தக் குடங்கள் (நீர்) நிரம்பினவையாகவே ஆயின. பிறகு, பாஹுகன், அலம்புதலைச்செய்து (அடுப்பில்) வைத்து ஒருபிடி துரும்பை எடுத்து அதனைச் சூரியனுக்கெதிரில் பிடித்தான். பிறகு, அங்கு நெருப்பு விரைவாக மூண்டது. அந்த மிக்க ஆச்சரியத்தைக் கண்டு நான் வியப்படைந்து இங்கு வந்தேன். சுபமானவளே! மிகப்பெரிய வேறு ஆச்சரியமும் அவனிடத்தில் என்னால் பார்க்கப்பட்டது. அவன் நெருப்பைத்தொட்டும் அது அவனைச் சுடவேயில்லை. குடம் சாய்க்கப்பட்டால் ஜலமும் அவனுடைய இஷ்டப்படி வேகமாகப் பெருகுகின்றது. வேறு மிகப்பெரிய ஆச்சரியத்தையும் நான் மிகுதியாகக் கண்டேன். அவன் புஷ்பங்களைக் கைகளால் எடுத்து மெல்லக் கசக்கினான். அவனால் கைகளினால் கசக்கப்பட்ட புஷ்பங்கள் மாறுபடவில்லை. அதிகமாக மலர்ந்தவையும் நல்ல மணமுள்ளவையுமே ஆயின. ஓ! விசாலாக்ஷி! பாகுகனிடம் ஆச்சரியமான இந்தச் செய்கைகளைக் கண்டு நான் மிக்க ஆச்சரியத்தை அடைந்தேன்' என்றாள்.

தமயந்தியோ, புண்யச்லோகனுடைய அந்தச் செய்கையைக் கேட்டு, வந்திருப்பவனை (ச் சமையல் முதலிய) காரியங்களாலும் (பூத ஜயம் முதலிய) செய்கைகளாலும் குறிப்பிடப்பட்ட நளனென்று எண்ணினாள். அவள் பாகுகரூபமுள்ளவனைப் பர்த்தாவான நளனென்ன ஐயமுற்று அழுதுகொண்டு கேசினியைநோக்கி மெதுவான சொல்லால், 'விளங்குபவளே! திரும்பவும் செல்வாய்; பாகுகன் பாராக்காயிருக்கும்பொழுது சமையல் அறையிலிருந்து சமையல் செய்யப்பட்டதும் சம்பாரம் சேர்க்கப்பட்டதுமான மாம்ஸத்தை இங்குக் கொண்டுவா' என்று, திரும்பவும் சொன்னாள். ஓ! குருநந்தன! அந்தக் கேசினியானவள், பாகுகன் வேறு காரியத்தில் மனஞ் செலுத்திக்கொண்டிருக்கும் ஸமயம்பார்த்து, மிக்க உஷ்ணமாகவே அந்த மாமிசத்தை அவனுக்குத் தெரியாமல் எடுத்துக் கொண்டு அங்கிருந்து வேகமுள்ளவளும் பிரியத்தைச்செய்பவளுமாகிவந்து அதேக்ஷணத்தில் தமயந்திக்குக் கொடுத்தாள். முன்பு

பலமுறை நளனால் பாகம் செய்யப்பட்ட மாமிசத்தைப் புசித்தவளான அவள், (அதனைப்) புஜித்து, ஸூதனை நளனாக எண்ணி மிக்க துக்கத்துடன் அழுதாள். ஓ! பாரத! மிக்க தளர்ச்சியை அடைந்து, பிறகு முகத்தை அலம்பிக்கொண்டு, கேசினியுடன் ஆணும் பெண்ணுமான இருகுழந்தைகளையும் அனுப்பினாள். அரசனான பாகுகன் இந்திரசேனையையும் அவள் தமயனையும் நன்கு அறிந்துகொண்டு அப்பொழுது எதிரில் ஓடிவந்து (அவர்களைத்) தழுவி மடியில் வைத்துக்கொண்டான். பாகுகனோ தேவர்களின் குழந்தைகள் போன்ற குழந்தைகளை அடைந்து மிக்க துக்கத்தால் நிரம்பிய மனமுள்ளவனாகி உரத்த குரலுடன் அழுதான். அப்பொழுது, நைஷதன், (துயரச்) செயல்களை அடிக்கடி காண்பித்து விரைவாகக் குழந்தைகளைவிட்டுக் கேசினியை நோக்கி, 'ஓ! சுபமானவளே! இந்த இரண்டு குழந்தைகளும் என் குழந்தைகளை ஒத்திருக்கிறார்கள். ஆகையால், பார்த்தவுடனே, நான் விரைவாகக் கண்ணீரை விட்டேன். அடிக்கடி வருகின்ற உன்னை ஜனங்கள் தோஷமுள்ளவளாக ஸந்தேகிப்பார்கள். நாங்களும் தேசத்திற்குப் புதியவர்கள். சுபமானவளே! ஸுகமாகச் செல்லக்கடவாய்' என்றான்.

---

## எழுபத்துநான்காவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

**(தமயந்தி பெற்றோரிடம் அனுமதிபெற்றுக் கேசினியை அனுப்பிப் பாதுகனைத் தன் மாளிகைக்கு வரவழைத்து அவனுடன் பேசியதும், அவன் தான் நளனென்பதைச் சொல்லிக் கர்க்கோடகனை நினைத்து அவன் கொடுத்த ஆடையை அணிந்து நளரூபத்தை அடைந்ததும், தமயந்தி அவனைத் தழுவியதும்)**

கேசினி, புத்திமானான புண்யச்லோகனின் செயலனைத்தையும்கண்டு விரைவாகவந்து தமயந்திக்குத் தெரிவித்தாள். பிறகு தமயந்தி, நளனைக் [1] காணும் ஆசையால் துக்கத்தால் பீடிக்கப்பட்டு, மறுபடியும் தன் தாயினிடம், 'நளனென்னும் ஐயத்தால் பாகுகன் பலமுறை என்னால் பரீக்ஷிக்கப்பட்டான். ரூபத்தில் மட்டும் ஒரு சமசயம் எனக்கு இருக்கிறது. (அதனை) நான் நேரில்

---

1 வேறு பாடம்.

அறியவிரும்புகிறேன். தாயே! அவனையாவது வரச்செய். எனக்காவது போக அனுமதி கொடு. என பிதாவுக்குத தெரிவித்தோ தெரிவியாமலோ (இதனை) ஏற்பாடு செய்' என்று சொல்லும்படி கேசினியை அனுபபினாள். இவ்விதம் தமயந்தியால் சொல்லப் பட்ட தேவியானவள குமாரியின விருப்பததைப பீமனிடம சொன்னாள். அநத அரசன் அனுமதி கொடுததான. ஓ! பரதருட்சிறநதவனே! கௌரவய! அவளோ தநதையினாலும தாயினாலும அனுமதியளிக்கபபெற்று, அவர்களின உததரவுப்படி, கேசினியிடம, 'ஓ! கேசினி! நீ விரைவாகசசெல. பிதாவின உததரவினால பாகுகனை அழைததுவா. நீ என தாயபோல எனககுப் பிரியததைச செய் வாயாக' எனறும இதனைக் கூறினள். கேசினியோ, விரைவாகச் சென்று பாகுகனைப பார்தது, 'ஸூதரே! பாகுகரே! நான் பீமராஜரின் உத்தரவினால் வந்தேனென அறிவீர். அரண்மனைக்கு நீர வரககடவீர' எனற சொல்லைச் சொல்லினள. ஓ! பரதரிற்சிறந்தவனே! பாரத! இவ்விதம் சொல்லக்கேட்ட புஜபலமுளள பாகுகனே, நெடுநேரம் ஆலோசனைசெய்து, கேசினியுடன் தமயந்தியின மாளிகையில் நுழைந்தான். (கேசினி) நளனைத் தமயந்தியிருககுமிடததுககு அழைததுப்போனாள். நளராஜன், அந்தத தமயநதியைப பாரததவுடனே, சோகதுககஙகளால சூழப்பட்டவனும் கண்ணீரால நனைக்கப்பட்டவனுமாயினன. அப்பொழுது, சிறந்த நிறமுள்ள தமயந்தி, அந்த நளன் அப்படியிருப்பதைக் கணடு கடுந துயரததை அடைந்தவளாயினள்.

ஓ! மஹாராஜ! பிறகு, அழுக்கடைந்த ஆடை அணிந்தவளும ஜடையுள்ளவளும அழுக்கும சேறுமுள்ளவளுமான தமயந்தி, பாகுகனைநோக்கி, 'ஓ! பாகுக! காட்டில உறங்குகின்ற மனைவியை விட்டுபபோனவரும் (தமது) கடமையை அறிந்தவரென்னப்படுபவருமான ஒரு மனிதரை நீ பார்ததிருக்கவேண்டும். குற்றமற்றவளும பிரியமானவளும சிரமததால மயக்கததை அடைந்தவளுமான மனைவியைப புண்யஶ்லோகராகிய நளராஜரைததவிர எவன்தான் ஜனமற்ற இடததில் விட்டுச்செல்லுவன்? காட்டில் தூக்கத்தால் பீடிககப்பட்ட என்னை விட்டுபபோன அரசருக்கு என்னால் சிறுபிராயமுதல் என்ன தீங்குசெய்யப்பட்டது? நேரில் வந்த தேவர்களைவிட்டு முந்தி என்னால் வரிக்கப்பட்ட அவர், பின்பற்றியவளும் அவரால் விரும்பப்பட்டவளும் குழந்தைகளுள்ளவளுமான (என்னை) எவ்விதம் விட்டார்? அக்கினியின் முன்னிலையில் பாணிக்ர

கணம் செய்யப்பட்டவளும ஹம்ஸங்களின் வார்த்தைகளில் இருப பவளுமான (என்னை) 'காப்பாற்றுவேன்' என்று ஸத்யமாக உறுதி கூறியது எங்கே போயிற்று?' என்று வினவினள்.

பகைவரை அடக்குபவரே! இவை யாவற்றையும தமயந்தி சொல்லும்பொழுது, (அவளுடைய) கண்களினின்றும சோகத்தால் உண்டானதும சூடானதுமான கண்ணீர் மிகப் பெருகிற்று. நளன், கடை சிவந்த கருவிழிகளினின்றும் மிகப்பெருகும அந்த ஜலத்தைப் [1] பார்த்துச சோகத்தால் பீடிக்கப்பட்டவனுகி, 'ஓ! விசாலமான பின்தட்டுள்ளவளே! நளன் நானே. சுபமானவளே! அந்தக் கலியால் ஆவேசிக்கப்பட்டு மயக்கத்தின் வசத்தையடைந்து உன்னைவிட்டுப் போனேன. பயந்தவளே! எனது நாட்டையிழந்ததையும உன்னை விட்டதையும நான் ஸவதந்திரனுகச செய்யவில்லை. கலியே அவற்றைச செய்வித்தான. தர்மஸங்கடத்தில, காட்டில் விருப்பவளும் துயரத்தை அடைந்தவளும் பகலும் இரவும என்னைக் குறித்துச சோகிக்கின்றவளுமான உன்னுல் முன் சாபத்தால அடிக்கப்பட்ட அந்தக கலியானவன், உனது சாபத்தால எரிக்கப் படுகின்றவனுகி, எனது சரீரத்தில வஸித்தனன். எப்பொழுதும் உனது சாபத்தால எரிக்கப்படுகின்றவனும் அக்கினியில் அக்னி வைக்கப்பட்டது போல (க்கார்க்கோடகனது விஷாக்கினியுள்ள எனது சரீரத்தில வஸித்தவனுமான) அவன எனது முயற்சியாலும் தவத்தினுலும் ஜயிக்கப்பட்டான். சுபமானவளே! நமமிருவருக்கும் இது துக்கத்தின் முடிவாக இருக்கவேண்டும. விசாலமான பினதட்டுள்ளவளே! பாவியான அவன என்னை விட்டுப் போயினன். அதனுல், நான இங்கு உனக்காக வந்தேன். எனக்கு வேறு காரியம் இல்லை. ஓ! பயந்தவளே! (வேறு) ஒரு ஸ்திரீயானவள், ஆசைகொண்டவனும் அனுஸரித்தவனுமான பர்த்தாவை விட்டு, உன்னைப் போல, வேறொருவனை எப்பொழுதாயினும் வரிபபளா? அரசனுடைய கட்டளையால் தூதர்கள், 'தமயந்தி, ஸ்வதந்திரமான நடையுள்ளவள்போலத தன் இஷ்டப்படி தனக்கு ஒதத இரண்டாவது கணவனை வரிக்கப்போகிருள்' என்று சொல்லிக்கொண்டு பூமிமுழுமையும திரிகிருர்களல்லவோ? பாகஸ்வரியானவன் இவ்விதம் கேட்டுத்தான் விரைபவனுகி வந்திருக்கின்ருன்' என்ற இதனைச் சொன்னுன்.

---

1 வேறு பாடம

அறியவிரும்புகிறேன். தாயே! அவனையாவது வரச்செய். எனக்காவது போக அனுமதி கொடு. என் பிதாவுக்குத் தெரிவித்தோ தெரிவியாமலோ (இதனை) ஏற்பாடு செய்' என்று சொல்லும்படி கேசினியை அனுப்பினாள். இவ்விதம் தமயந்தியால் சொல்லப்பட்ட தேவியானவள் குமாரியின் விருப்பத்தைப் பீமனிடம் சொன்னாள். அந்த அரசன் அனுமதி கொடுத்தான். ஓ! பரதருட்சிறந்தவனே! கௌரவ! அவளோ தந்தையினாலும் தாயினாலும் அனுமதியளிக்கப்பெற்று, அவர்களின் உத்தரவுப்படி, கேசினியிடம், 'ஓ! கேசினி! நீ விரைவாகச்செல். பிதாவின் உத்தரவினால் பாகுகனை அழைத்துவா. நீ என் தாயபோல எனக்குப் பிரியத்தைச் செய்வாயாக' என்னும் இதனைக் கூறினள். கேசினியோ, விரைவாகச் சென்று பாகுகனைப் பார்த்து, 'ஸூதரே! பாகுகரே! நான் பீமராஜரின் உத்தரவினால் வந்தேனென்ன அறிவீர். அரண்மனைக்கு நீர் வரக்கடவீர்' என்ற சொல்லைச் சொல்லினள். ஓ! பரதரிற்சிறந்தவனே! பாரத! இவ்விதம் சொல்லக்கேட்ட புஜபலமுள்ள பாகுகனே, நெடுநேரம் ஆலோசனைசெய்து, கேசினியுடன் தமயந்தியின் மாளிகையில் நுழைந்தான். (கேசினி) நளனைத் தமயந்தியிருக்குமிடத்துக்கு அழைத்துப்போனாள். நளராஜன், அந்தத் தமயந்தியைப் பார்த்தவுடனே, சோகதுக்கங்களால் சூழப்பட்டவனும் கண்ணீரால் நனைக்கப்பட்டவனுமாயினன். அப்பொழுது, சிறந்த நிறமுள்ள தமயந்தி, அந்த நளன் அப்படியிருப்பதைக் கண்டு கடுந்துயரத்தை அடைந்தவளாயினள்.

ஓ! மஹாராஜ! பிறகு, அழுக்கடைந்த ஆடை அணிந்தவளும ஜடையுள்ளவளும அழுக்கும சேறுமுள்ளவளுமான தமயந்தி, பாகுகனைநோக்கி, 'ஓ! பாகுக! காட்டில உறங்குகின்ற மனைவியை விட்டுப்போனவரும் (தமது) கடமையை அறிந்தவரென்னப்படுபவருமான ஒரு மனிதரை நீ பார்த்திருக்கவேண்டும். குற்றமற்றவளும் பிரியமானவளும் சிரமத்தால மயக்கத்தை அடைந்தவளுமான மனைவியைப் புண்யச்லோகராகிய நளராஜரைத்தவிர எவன்தான் ஜனமற்ற இடத்தில் விட்டுச்செல்லுவன்? காட்டில் தூக்கத்தால் பீடிக்கப்பட்ட என்னை விட்டுப்போன அரசருக்கு என்னால் சிறுபிராயமுதல் என்ன தீங்குசெய்யப்பட்டது? நேரில் வந்த தேவர்களைவிட்டு முந்தி என்னால வரிக்கப்பட்ட அவர், பின்பற்றியவளும் அவரால் விரும்பப்பட்டவளும் குழந்தைகளுள்ளவளுமான (என்னை) எவ்விதம் விட்டார்? அக்கினியின் முன்னிலையில் பாணிக்ர

கணம் செய்யப்பட்டவளும ஹம்ஸங்களின் வார்த்தைகளில் இருப பவளுமான (என்னை) 'காப்பாற்றுவேன்' என்று ஸத்யமாக உறுதி கூறியது எங்கே போயிற்று?' என்று வினவினள்.

பகைவரை அடக்குபவரே! இவை யாவற்றையும தமயந்தி சொல்லும்பொழுது, (அவளுடைய) கண்களினின்றும சோகத்தால் உண்டானதும சூடானதுமான கண்ணீர் மிகப் பெருகிற்று. நளன், கடை சிவந்த கருவிழிகளினின்றும் மிகப்பெருகும் அந்த ஜலத்தைப் [1] பார்த்துச சோகத்தால் பீடிக்கப்பட்டவனாகி, 'ஓ! விசாலமான பின்தட்டுள்ளவளே! நளன நானே. சுபமானவளே! அந்தக் கலியால் ஆவேசிக்கப்பட்டு மயக்கத்தின வசத்தையடைந்து உன்னைவிட்டுப் போனேன. பயந்தவளே! எனது நாட்டையிழந்ததையும உன்னை விட்டதையும நான ஸ்வதந்திரனாகச செய்ய வில்லை. கலியே அவற்றைச செய்வித்தான். தர்மஸங்கடத்தில், காட்டி லிருப்பவளும் துயரத்தை அடைந்தவளும பகலும் இரவும் என்னைக் குறித்துச சோகிக்கின்றவளுமான உன்னால் முன சாபத்தால அடிக்கப்பட்ட அந்தக் கலியானவன, உனது சாபத்தால் எரிக்கப் படுகின்றவனாகி, எனது சரீரத்தில வஸித்தனன். எபபொழுதும் உனது சாபத்தால எரிக்கப்படுகின்றவனும அக்கினியில் அக்னி வைக்கப்பட்டது போல (க் கார்க்கோடகனது விஷாக்கினியுள்ள எனது சரீரத்தில வஸித்தவனுமான) அவன எனது முயற்சியாலும் தவத்தினாலும் ஜயிக்கப்பட்டான். சுபமானவளே! நம்மிருவருக்கும் இது துக்கத்தின் முடிவாக இருக்கவேண்டும. விசாலமான பினதட்டுள்ளவளே! பாவியான அவன் என்னை விட்டுப் போயினன். அதனால், நான இங்கு உனக்காக வந்தேன். எனக்கு வேறு காரியம இல்லை. ஓ! பயந்தவளே! (வேறு) ஒரு ஸ்திரீயானவள், ஆசைகொண்டவனும அனுஸரித்தவனுமான பர்த்தாவை விட்டு, உன்னைப் போல, வேறொருவனை எப்பொழுதாயினும் வரிப்பளா? அரசனுடைய கட்டளையால் தூதர்கள், 'தமயந்தி, ஸ்வதந்திரமான நடையுள்ளவள்போலத் தன் இஷ்டப்படி தனக்கு ஒத்த இரண்டாவது கணவனை வரிக்கப்போகிறாள்' என்று சொல்லிக் கொண்டு பூமிமுழுமையும் திரிகிறார்களல்லவோ? பாகஸ்வரியானவன் இவ்விதம் கேட்டுத்தான் விரைபவனாகி வந்திருக்கின்றான்' என்று இதனைச் சொன்னான்.

---

1 வேறு பாடம்.

தமயந்தியோ, நளனது அந்தப் புலம்பலைக்கேட்டுப் பயந்து நடுங்கிக் கைகூப்பிக்கொண்டு, 'கல்யாணரே! குற்றத்தினால் என்னைச் சந்தேகிப்பது தகாது. நிஷதாதிபரே! நான் தேவர்களை விட்டு உம்மையே வரித்தேனல்லவா? உம்மை அடையும் பொருட்டே, பிராமணர்கள் எனது வாக்யங்களைப் பாட்டுக்களாகப் பாடிக்கொண்டு பத்துத் திக்குகளிலும் எங்கும் போயினர். ஓ! அரசரே! பிறகு, கற்றறிந்தவனும் பர்ணாதனென்னும் பெயருள்ளவனுமான பிராம்மணன் கோஸலதேசத்தில் ருதுபர்ணன் அரண்மனையில் உம்மை அடைந்தான். ஓ! நைஷதரே! அவன் (நான்) சொல்லியதைச் சொல்லி அப்படியே நன்கு மறுமொழியையும் கொண்டுவந்தவுடன், உம்மை வருவிப்பதற்காக, இந்த உபாயம் என்னால் காணப்பட்டது. ஓ! பிருதிவீபதியே! நராதிபரே! உலகில் உம்மைத் தவிர மற்றவன் ஒரே நாளில் குதிரைகளால் நூறு யோஜனைதூரம் செல்லுதற்குவல்லவனல்லனன்றோ? [1] ஓ! பூமிக்கு அரசரே! நான் மனத்தாலும் சிறிதும் தீங்கு செய்யாதவளாக இருக்கிறேனென்று ஸத்தியத்துடன் இந்த உம்முடைய கால்களைத் தொடுகிறேன். இந்த உலகில் இந்த வாயுவானவன் பிராணிகளுக்குச் சாக்ஷியாக ஸஞ்சரிக்கிறான். நான் தீமையைச் செய்கிறேனாகில் இவன் எனது பிராணன்களை விடச்செய்யக்கடவன். ஸூரியன் எப்பொழுதும் உலகமெங்கும் ஸஞ்சரிக்கிறான். நான் தீமையைச் செய்கிறேனாகில் அவன் என்னுடைய பிராணன்களை விடச் செய்யக்கடவன். சந்திரன் எல்லாப்பிராணிகளுள்ளும் ஸாக்ஷிபோல ஸஞ்சரிக்கிறான். நான் தீமையைச் செய்கிறேனாகில் அவன் எனது பிராணன்களை விடச்செய்யக்கடவன். இம் மூன்று தேவர்களும் மூவுலகங்களையும் முழுமையும் நிலைத்திருக்கச் செய்கிறார்கள். தேவர்கள் இது மெய்தானா என்பதைச் சொல்லக்கடவர். (உண்மையல்லாவிடில்) என்னை விட்டுவிடக்கடவர்' என்றாள்.

இவ்விதம் சொல்லப்பட்டவுடன், வாயு ஆகாயத்தினின்று, 'ஓ! நளா! இவள் தீமையைச் செய்தவளல்லள். உனக்கு உண்மையாகச் சொல்லுகின்றேன். அரசனே! பெருகிய நல்லொழுக்கமாகிற நிதியானது, தமயந்தியால் நன்கு ரக்ஷிக்கப்பட்டது. நாங்கள் (இந்த) மூன்று வர்ஷங்களும் இவளுக்கு ஸாக்ஷியும் பாதுகாவலுமாக (இருந்தோம்) உனக்காக இவளால் ஒப்பற்ற இந்த உபாயம்

---

1 பொருந்தாமையால் அதிக பாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது

செய்யப்பட்டது. இவ்வுலகில் உன்னைத்தவிர வேறு ஆண்பிள்ளை ஒரே பகலில் நூறு யோஜனை செல்லக்கூடியவன் இல்லையன்றோ? ஓ! அரசனே! தமயந்தி உனக்கும் நீ தமயந்திக்கும் ஏற்றவர். இவ் விஷயத்தில் நீ ஸந்தேகப்படலாகாது. மனைவியுடன் சேர்ந்திருக்கக்கடவாய்' என்று சொன்னான். வாயு அவ்விதம் சொல்லும் பொழுதே மலர்மாரி பெய்தது; தேவதுந்துபிகள் முழங்கின; மங்களகரமான காற்றும் வீசிற்று.

ஓ! பாரத! பிறகு, பகைவரை அடக்குகின்ற இந்த நள ராஜன், அந்த அற்புதத்தைக் கண்டு, தமயந்தியிடம் (கொண்ட) அந்த ஸந்தேகத்தை விட்டனன். பிறகு, பூபதியான நளன், அழுக்கற்றவையான அந்த (கார்க்கோடகன்) கொடுத்த ஆடைகளை, அந்த நாகராஜனை நினைத்து, உடுத்துக்கொண்டான்; உடனே, தனது (பழைய) வடிவத்தை அடைந்தான். ஸ்வரூபத்தை அடைந்த பர்த்தாவைக்கண்டு, குற்றமற்ற தமயந்தி, அப்பொழுது புண்யச்லோகனான அந்த நளனைத்தழுவிக்கொண்டு, உரக்க அழுதாள். நளராஜனும், முன்போல விளங்குகின்றவனாகித் தமயந்தியையும் தன் மக்களையும் தழுவிக்கொண்டு, உள்ளபடி மகிழ்ந்தான். பிறகு, அழகிய முகமுள்ளவளும் நீண்ட கண்ணுள்ளவளுமான (அவள்) அந்தத் துக்கத்தால் சூழப்பெற்றவளாகித் [1] தனது மார்பில் அவனது முகத்தை வைத்துக்கொண்டு பெருமூச்செறிந்தாள். அப்படியே புருஷச்ரேஷ்டனான அவனும், சோகத்தால் சூழப்பட்டவனாகி, அழுக்கால் பூசப்பட்ட அங்கமுள்ளவளும் அழகிய சிரிப்புள்ளவளுமான அவளைத் தழுவிக்கொண்டு நெடுநேரம் துயரில் மூழ்கி நின்றான்.

அரசனே! பிறகு, தமயந்திக்கும் நளனுக்கும் (நடந்த) அனைத்தையும், தமயந்தியின் தாய், நடந்தபடி, பிரீதியுடன் பீமனுக்குச் சொன்னாள். பிறகு, மஹாராஜன், 'நான், சுத்திசெய்துகொண்டவனும் தமயந்தியுடன் சேர்ந்திருப்பவனும் (இரவு) ஸுகமாக வஸித்தவனுமான நளனைக் காலையில் பார்ப்பேன்' என்று சொன்னான். அரசனே! பிறகு, அவ்விருவரும் சேர்ந்து, காட்டில் நடந்த பழையசரித்திரம் யாவற்றையும் சொல்லிக்கொண்டு, இரவு மகிழ்ந்து வஸித்தார்கள். தமயந்தியும் நளனும் ஒருவருக்கொருவர் ஸுகத்தை விரும்பினவர்களாயும் மனம் மிகமகிழ்ந்தவர்களாயும் பீமராஜ

[1] 'தனது முகத்தை அவனது மார்பில் வைத்துக்கொண்டு' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

னுடைய அரண்மனையில் வஸித்தார்கள். பிறகு, அவன் நான்காவது வருஷத்தில் பாரியையுடன் சேர்ந்து எல்லா விருப்பங்களும் நன்கு நிறைவேறினவனாகி மிக்க மகிழ்ச்சியை அடைந்தான். தமயந்தியும் பர்த்தாவை அடைந்து, பாதிவளர்ந்த பயிரையுடைய பூமியானது ஜலத்தை அடைந்து திருப்தி அடைவதுபோல, மிக்கதிருப்தியை அடைந்தாள். அந்தத் தமயந்தியானவள் இவ்விதம் நளனுடன் சேர்ந்து தனது ஆயாஸத்தைப் போக்கித் தாபம் தணிந்தவளாகவும் மகிழ்ச்சிபெருகிய மனமுள்ளவளாகவும் விருப்பினவற்றை அடைந்தவளாகவும், உதயமான சந்திரனால் ராத்ரி விளங்குவது போல விளங்கினாள்.

---

## எழுபத்தைந்தாவது அத்யாயம்.

## நளோபாக்யான பர்வம். (தொடர்ச்சி)

(பீமன் காலையில் நளதமயந்தியரைப் பார்த்ததும், ருதுபர்ணன் நளனை க்ஷமிக்கும்படி வேண்டி அவனிடமிருந்து அஶ்வஹ்ருதயத்தைப் பெற்று அயோத்தி சென்றதும்)

பின்பு, நளராஜன், அந்த ராத்ரியைப் போக்கி, (காலையில்) நன்கு அலங்கரித்துக்கொண்டு தமயந்தியுடன் சேர்ந்து பீமராஜனைப் பார்த்தான். பிறகு, பரிசுத்தனான நளன் மாமனை வணங்கினான். பிறகு, அழகிய தமயந்தியும் பிதாவை வணங்கினாள். பீமன், மிக்க ஸந்தோஷத்துடன் புத்திரனைப்போல நளனைத் தழுவிக்கொண்டான். பிரபுவான பீமன், (நளனைத்) தக்கபடி பூஜித்துத் தேற்றினான். பீமராஜன், அங்கு நளனுடனிருப்பவளும் பதிவ்ரதையுமான தமயந்தியை மேலான மரியாதையுடன் அனுக்ரகித்தான். நளராஜன் அந்தப் பூஜையை முறைப்படி பெற்று அவனுக்குத் 1 தனது மரியாதையை உள்ளபடி தெரிவித்தான். பிறகு, பட்டணத்தில் அவ்விதம் வந்த நளனைக்கண்டு நன்கு சந்தோஷத்தை அடைந்த ஜனங்களின் ஸந்தோஷத்தால் உண்டாகிற பெரிய ஒலி உண்டாயிற்று. (பீமன்) நகரத்தைப் பதாகைகளுடனும் த்வஜங்களுடனும் மாலைகளுடனும் கூடினதாக அலங்கரிக்கச் செய்தான். ராஜவீதிகள், நீர் தெளித்து நன்குபெருக்கிப் புஷ்பங்களை நிரப்பி

---

1 'தான் செய்துவந்த தொழிலை' என்றும் கொள்ளலாம்.

நன்கு அலங்கரிக்கப்பெற்றன. பட்டணத்து ஜனங்களின் வீட்டு வாயில்தோறும் புஷ்பபலியானது செய்யப்பட்டது. தேவாலயங்களெல்லாம் பூஜிக்கப்பெற்றன.

ருதுபர்ணராஜனும், நளன் பாஹுகவேஷத்தில் மறைந்திருந்ததையும் தமயந்தியுடன் சேர்ந்துவிட்டதையும் கேட்டுச் சந்தோஷித்தான். ருதுபர்ணராஜன் அந்த நளராஜனை அழைத்து க்ஷமிக்கவேண்டினன். புத்திமானான அந்த நளனும் காரணங்களுடன் அவனைப் பொறுக்கச்செய்தான். மரியாதை செய்யப்பெற்ற அந்த ருதுபர்ணராஜன், சிரித்த முகமுள்ளவனாய், 'நீ தெய்விகமாக உனது பத்னியுடன் கூடினாய்' என்று நளனைப் புகழ்ந்தான். அவன், 'பூபதியே! நைஷத! எனது வீட்டில் மறைந்து வஸித்த உனக்குத் தீமைசெய்யாமலிருந்தேனா? தெரிந்தோ தெரியாமலோ, என்னால் சில அகாரியங்கள் செய்யப்பட்டிருந்தாலும் அவைகளை நீ பொறுக்கக்கடவாய்' என்றான். நளன், 'ஓ! பார்த்திவ! நீ எனக்குச் சிறிதும் தீங்கு செய்யவில்லை. செய்திருந்தாலும் எனக்குக் கோபமில்லை. உன் விஷயத்தில் நான் பொறுக்கவேண்டுமன்றோ? ஓ! ஜநாதிப! நீ முந்தியும் எனக்குத் தோழனும் ஸம்பந்தியுமாயிருக்கிறாய். இதற்கு மேலும், மிக்கப்ரீதியை உண்டுபண்ணக்கடவாய். விரும்பினவையெல்லாம் நனகு செய்யப்பட்டமையால், உன்னிடத்தில் ஸுகமாக வாஸஞ்செய்தேன். ஓ! அரசனே! உனது வீட்டில் எப்பொழுதும் ஸுகமாக இருந்தது போல எனது வீட்டில் இல்லை. ஓ! பார்த்திவ! உன்னுடைய இந்த அச்வஹ்ருதயமும் என்னிடத்தில் இருக்கின்றது. நீ விரும்பினால் அதனைக் கொடுக்க விரும்புகிறேன்' என்றான். நளன் இவ்விதம் சொல்லி ருதுபர்ணனுக்கு வித்தையைக் கொடுத்தான். அவனும் சாஸ்திரத்திற்சொல்லிய செய்கையால் அதனைப் பெற்றுக்கொண்டான். அரசனே! பாங்கஸ்வரிராஜனும் அச்வஹ்ருதயத்தைப் பெற்றும், பிரீதியடைந்து நைஷதனுக்கு அக்ஷஹ்ருதயத்தைக் கொடுத்தும், வேறு ஸாரதியை அழைத்துக்கொண்டு தன் பட்டணத்தையே அடைந்தான். அரசனே! ருதுபர்ணன் போனபின், நளராஜன் குண்டினநகரத்தில் நீண்டகாலம் வஸிக்கவில்லை.

---

## எழுபத்தாறுவது அத்யாயம்.

## நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி.)

(நளன் தன்னகர்சென்று புஷ்கரனை மறுசூதில் வென்று அவனை அவனூருக்கு அனுப்பியது.)

ஓ! கௌந்தேய! அந்த நைஷதன் ஒருமாதம் வசித்துப் பீமனிடம் விடைபெற்றுச் சிறிது சேனையுடன் (குண்டின) புரத்தி லிருந்து நிஷத தேசத்தைக்குறித்துப் போயினன். வெண்மை யான ஒரு தேருடனும் பதினாறு யானைகளுடனும் ஐம்பது குதிரை களுடனும் அறுநூறு காலாட்களுடனும் பெரிய மனமுள்ள அவன் பூமியை நடுங்கச்செய்கிறவன்போலக் கோபங்கொண்டு விரைந்து பெரிய பட்டணத்தைத் திடீரென்று அடைந்தான். பிறகு, வீரஸேன புத்திரனான நளன், புஷ்கரனை அடைந்து, 'மிக்க பொருள் என்னால் சம்பாதிக்கப் பெற்றிருக்கிறது. திரும்பவும் சூதாடுவோம். ஓ! புஷ்கர! தமயந்தியும் மற்றும் என்னிடமுள்ள பொருள் முழுமையும் எனது பந்தயமாவர். உனக்கோ ராஜ்யம் பந்தயமாகட்டும். திரும்பவும் சூது தொடங்கப்பட வேண்டும்; உனக்கு க்ஷேமம் உண்டாகுக. ஒரே பந்தயத்தில் (நமது) உயிர் களையும் பந்தயம் வைத்து ஆடுவோம். பிறன் உடைமை, நாடே யாயினும் செல்வப்பொருளேயாயினும், (அதனை) ஜயித்து (அவ னிடமிருந்து) கவர்ந்தும் எதிர்ப்பந்தயம் கொடுக்கவேண்டுமென் பது [1] சிறந்த முறையென்று சொல்லப்படுகிறது. நீ அந்தச் சூதை விரும்பாமற்போனால் யுத்தமாகிற சூது தொடங்கப்படவேண்டும். அரசனே! இரண்டு தேர் ஒன்றை ஒன்று எதிர்த்துச் செய்யும் சண்டையினால் உனக்காவது எனக்காவது ஒழிவு உண்டாகட்டும். இந்த ராஜ்யமானது வம்சபரம்பரையாக அனுபவிக்கப்படுவதாத லால் எந்த உபாயத்தினாலும் விரும்பத்தக்கதென்பது பெரியோர் களின் கட்டளை. ஓ! புஷ்கர! இப்பொழுது கபடத்தினால் சூதாடு வது அல்லது வில்லை வளைத்துச் சண்டைசெய்வது (என்ற இந்த) இரண்டினுள் ஒன்றில் புத்தியைச் செலுத்து' என்றான்.

நைஷதனால் இவ்விதம் சொல்லப்பட்ட புஷ்கரனோ, உரக்கச் சிரித்து, தனக்கு ஜயத்தையே உறுதியாக எண்ணி, நளனை

---

1 வேறு பாடம்.

நோக்கி, 'ஓ! நைஷத! எதிர்ப்பந்தயம் வைப்பதற்காக உன்னால் தெய்வாதீனமாகப் பொருள் சம்பாதிக்கப்பட்டது. தெய்வாதீனமாகத் தமயந்தியின் தீவினையும் நாசத்தை அடைந்தது. ஓ! நைஷத! அரசனே! எனது லாபத்தைக்குறித்துத் தெய்வாதீனமாகப் பிரியப்படுகின்றாய். ஆண்பிள்ளைகளுள் மிகச் சிறந்தவனே! தெய்விகமாகத் திரும்பவும் சூதாடுவதில் உனக்கு எண்ணம் உண்டாயிருக்கிறது. ஜயிக்கப்பட்ட இந்தத் தனத்துடன், அலங்கரிக்கப்பட்ட தமயந்தியும், தேவலோகத்தில் அப்ஸரஸானவள் இந்திரனை அடைவதுபோல என்னை அடைவாளென்பது திண்ணம். ஓ! நைஷத! உன்னைத் தினந்தோறும் நினைத்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். [1] பகைவர் கூட்டங்களுடன் சூதாடுவதனால் எனக்கு ஸந்தோஷம் உண்டாகிறதில்லை. இப்பொழுதே, சிறந்த இடையுள்ளவளும் குற்றமற்றவளுமான தமயந்தியை ஜயித்துக் [2] கிருதக்ருத்யன் ஆவேன். அவளோ எப்பொழுதும் எனது மனத்தில் இருக்கிறாள்' என்று கூறினன்.

அந்த நளனோ, அந்தச் சொற்களைக்கேட்டுக் கோபங்கொண்டு, தப்பாகப்பேசுகிற அவனுடைய தலையைக் கத்தியால் வெட்ட விரும்பினான். கோபத்தால் சிவந்த கண்ணுள்ள நளராஜனோ, சிரித்துக்கொண்டு, அவனைப்பார்த்து, 'பந்தயம் வைத்து ஆடுவோம். ஏன் பேசுகின்றாய்? ஜயிக்கப்பட்டால் பேசாய்' என்றான். பிறகு, நளனுக்கும் புஷ்கரனுக்கும் சூதாட்டம் தொடங்கிறது. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. அந்தப் புஷ்கரன், (தானும்) பந்தயம் வைத்தானாயினும், ரத்னங்கள் பொக்கசங்கள் இவற்றின் குவியல்களுடனும் உயிருடனும் அவன் ஒரே பந்தயத்தால் நளனால் தோல்வி அடைவிக்கப்பெற்றான். நளராஜன், புஷ்கரனை ஜயித்துச் சிரித்துக்கொண்டு, 'அரசர்களுள் இழிவானவனே! பகை ஒழிந்ததும் கலக்கமற்றதுமான இந்த ராஜ்யமுழுதும் என்னுடையது. தமயந்தி உன்னால் பார்ப்பதற்கும் முடியாதவள். மூட! நீ பரிவாரங்களுடன் அவளுக்கு அடிமையாயிருத்தலை அடைந்தாய். நான் முன்பு ஜயிக்கப்பட்டதும் உன்னால் செய்யப்பட்ட காரியமன்று. அந்தக்காரியம் கலியால் செய்யப்பட்டது. ஓ! மூட! நீ அறியவில்லை. நான் பிறரால் செய்யப்பட்ட குற்றத்தை உன்னிடத்தில் எவ்விதமும் சுமத்தமாட்டேன். நீ ஸுகமாகப் பிழைத்திருக்கக்கடவாய். உனது உயிரை உனக்குக் கொடுக்கிறேன். அப்படியே, எல்லாப் பொருள்களுமுள்ள

[1] வேறு பாடம். [2] மேற்கொண்ட காரியத்தைச் செய்து முடித்தவன்.

(உனக்குச) சொந்தமான பாகத்தை உனக்குத் தருகிறேன். ஓ! வீர! எனக்கு உன்னிடத்தில் அன்பும் முன்போலவே இருக்கிறதென்பதில் ஸந்தேகமில்லை. எனக்கு உன்னிடமுள்ள நட்பும் ஒருபொழுதும் குறையாது. ஓ! புஷ்கர! நீயோ எனது ஸஹோதரன். நூறு வருஷம் நன்கு உயிர்வாழக்கடவாய்' என்னும் இதனைச் சொன்னான்.

ஸத்யமான பராக்ரமமுள்ள நளன் ஸஹோதரனை இவ்வித வார்த்தைகளால் தேற்றித் திரும்பத் திரும்பத் தழுவி மகிழ்வித்தான். அரசனே! இவ்விதம் நளனால் தேறப்பட்ட புஷ்கரன், புண்யச்லோகனான நளனை அப்பொழுது வணங்கிக் கைகூப்பிக்கொண்டு, 'ஓ! பார்த்திவ! நீ எனக்கு உயிரையும் இருப்பிடத்தையும் கொடுக்கின்றாயாதலால், உனது புகழ் அழிவற்றதாகுக. பதினாயிரம் வருஷம் ஸுகியாக உயிர்வாழக் கடவாய்' என்று மறுமொழி கூறினான். புருஷச்ரேஷ்ட! அப்பொழுது அந்தப் புஷ்கரராஜன், நளனால் அவ்விதம் மரியாதைசெய்யப்பெற்று ஒருமாதம் அங்கே மகிழ்ந்து வஸித்துத் தனது ஜனங்களால் சூழப்பெற்று, பெரியசேனையுடனும் வணங்கின வேலைக்காரர்களுடனும், சரீரத்தால் சூரியன்போல விளங்கிக்கொண்டு, தனதுபட்டணத்தை அடைந்தான். ஸ்ரீமானான நளராஜன் புஷ்கரனைத் தனமுள்ளவனாகவும் துன்பமற்றவனாகவும் அனுப்பி மிக்க அலங்காரமுள்ள தனது நகரத்தில் பிரவேசித்தான். நிஷதராஜன் பிரவேசித்து நகரவாஸிகளைத் தேற்றலும் செய்தான். எப்பொழுதும் அவர்களுடைய நன்மைகளிலே தந்தைபோல மனம் பற்றினவனாக இருந்தான். பட்டணத்திலும் தேசத்திலுமுள்ள ஜனங்கள் யாவரும் புளகமெய்தி மந்திரி முதலியோருடன்கூடிக் கைகளைக் கூப்பிக்கொண்டு, 'ஓ! அரசனே! பட்டணத்திலும் தேசத்திலும் (உள்ள நாங்கள்) இப்பொழுதுதான் ஸௌக்யமாயிருக்கிறோம். தேவர்கள் மறுபடியும் இந்திரனை ஸேவிக்கவந்ததுபோல, நாங்கள் உன்னை மறுபடியும் ஸேவிக்க வந்திருக்கிறோம்' என்று சொன்னார்கள்.

## எழுபத்தேழாவது அத்யாயம்.

# நளோபாக்யானபர்வம். (தொடர்ச்சி)

(நளன் புஷ்கரனைத் துரத்தியபின் குண்டினபுரத்திலிருந்து தமயந்தியையும் குழந்தைகளையும் தருவித்துக்கொண்டு ஸுகமாக அரசு செலுத்தியதும், பிருஹதச்வர் நளன் கதையை முடித்து யுதிஷ்டிரருக்கு அக்ஷஹ்ருதயத்தை உபதேசித்து ஹரிச்சந்திரன் கதையைச் சுருக்கமாகச் சொல்லிச் சென்றதும், யுதிஷ்டிரர் அர்ஜுனனைப்பற்றிக் கவலைப் பட்டதும்)

பட்டணமானது [1] சோகமற்று ஸந்தோஷமடைந்து மஹோத்ஸவமும் தொடங்கியவுடன், நளராஜன், (குண்டினபுரத்திலிருந்து) தமயந்தியைப் [2] பெரிய சேனையுடன் வரவழைத்தான். பரதரில் சிறந்தவனே! அரசனான பீமன் புண்யச்லோகன் ராஜ்யத்தில் நிலை பெற்றதாகக் கேட்டு மேலான ஸந்தோஷத்துடன் கூடியவனாயினன். பிறகு, பீமராஜன் மனமகிழ்ந்து தன் மகளான தமயந்தியைப் புத்திமானான புண்யச்லோகனிடம் செல்லும்பொருட்டுப் பெரிய சேனையுடன் புறப்படச் செய்தான். பகைவீரர்களைக் கொல்லுகின்றவனும் அளவிடமுடியாத சக்தி பொருந்தியவனும் பயங்கரமான பராக்கிரமமுடையவனும் பிதாவுமான பீமனும் தமயந்தியை மரியாதைசெய்து அனுப்பினான். நளராஜனோ, குழந்தைகளுடன் தமயந்தி வந்தபின், தேவராஜன் நந்தனவனத்தில் மகிழ்ந்திருப்பதுபோல மகிழ்ந்திருந்தான். ஜம்பூத்வீபத்தில் அரசர்களுள் அப்படி விளக்கத்தை அடைந்தவனும் மிக்க புகழ்பெற்றவனுமான அந்த நளன் மறுபடியும் தனது நாட்டைத் திரும்பி அடைந்து அதில் வஸித்தான்; நிரம்பின தக்ஷிணையுள்ள பலவித யாகங்களையும் விதிப்படி செய்தான். அரசருக்கு அரசனே! அப்படியே, நீயும் விரைவில் ஸ்நேகிதர்களுடன் கூடி விளங்குவாய். மனிதருட் சிறந்தவனே! பரதரேறே! பகைவர் பட்டணங்களை ஜயிக

---

1 'அமைதியடைந்து' எனினுமாம.

2 'பெரிய சேனையை அனுப்பி' எனினுமாம்.

கின்ற நளன் சூதாட்டத்தால் மனைவியுடன் இமடாதிரியான துக்கத்தை அடைந்தான். பூமியை ஆள்பவனே! நளன் ஒருவனாக வேயிருந்து மிகப்பெரிய பயங்கரமான துக்கத்தை அடைந்து திரும்ப வும் க்ஷேமத்தை அடைந்தான். ஓ! பாண்டவ! அரசனே! நீயோ பிராதாக்களுடனும் திரௌபதியுடனும் சேர்ந்து கதைகளைக் கேட்டுக்கொண்டும் தர்மத்தையே சிந்தித்துக்கொண்டுமிருப்பதுடன், வேத வேதாங்கங்களின் கரைகடந்தவர்களும் மிக்க புகழ்பெற்றவர்களு மான பிராம்மணர்களால் எப்பொழுதும் சூழப்பட்டுமிருக்கிறாய். அப்படியிருக்கையில், துக்கம் ஏன்? கார்க்கோடக நாகன், தமயந்தி, நளன், ராஜரிஷியான ருதுபர்ணன் இவர்களின் கீர்த்தியைச் சொல் லுவது கலியைப் போக்குவதாகும். தவறுதவனே! அரசனே! உன் னைப் போன்றவன், கலியைப் போக்குவதான இந்த இதிஹாஸத் தைக்கேட்டுத் தேறுதலடையவேண்டும். புருஷார்த்தம் எப் பொழுதும் நிலையற்றிருத்தலை ஆலோசித்தும், அதன் தோற்றத்தி லும் அழிவிலும் நீ கவலைப்படலாகாது. அரசனே! இதிஹாஸத் தைக் கேட்டுத் தேறுதலடை; துயரப்படாதே. ஓ! மஹாராஜ! வியஸனத்தில் நீ துயரப்படத்தக்கவனல்லை. தெய்வம் விபரீதமாகி முயற்சியும் பயனற்றுப்போனபொழுது, தைர்யசாலிகளான மனி தர்கள் தம்மைத் துயரத்துக்குள்ளாக்கிக்கொள்ளார். எவர்கள் நள னது இந்தச் சிறந்த சரித்திரத்தை அடிக்கடி சொல்லுகின்றார் களோ கேட்கின்றார்களோ அவர்களை அமங்களமானது அடையாது. அங்ஙனம் செய்பவனுடைய விருப்பங்கள் கைகூடும். (அவன்) செல்வவானாயிருத்தலையும் அடைவான். சிறந்ததும் புராதனமு மான இந்த இதிஹாஸத்தைக் கேட்பவன் புத்திரர்களையும் பௌத்ரர் களையும் பசுக்களையும் மனிதர்களுள் தலைமையையும் அடைவான்; நோயின்மையும் அன்புமுள்ளவனுவான்.

ஓ! பார்த்திவ! 'சூதாட்டத்தெரிந்த (துரியோதனன்) என்னைத் திரும்பவும் ஆட அழைப்பான்' என்று நீ பயத்தால் நடுங்கு கிறாய். அந்த உனது பயத்தை நான் போக்குவேன். ஸத்யமான பராக்கிரமமுள்ளவனே! நான் அக்ஷஹ்ருதயத்தை முழுதும் அறிவேன். ஓ! கௌந்தேய! மகிழ்ச்சியடைந்தேன்; உனக்கு உபதேசிக்கிறேன்; பெற்றுக்கொள்' என்று சொன்னார். பிறகு, அரசர், மனமகிழ்ந்து பிருஹதச்வரை நோக்கி, 'ஓ! பகவானே! அக்ஷஹ்ருதயத்தை உண்மையாக அறியவிரும்புகிறேன்' என்று சொன்னார். குந்திபுத்ரரால் இவ்விதம் சொல்லப்பட்ட பிருஹ

தபஸ்வியாமுனிவர், பிறகு, மஹாத்மாவான பாண்டவருக்கு அக்ஷஹ்ருதயத்தை உபதேசித்தார். பாண்டவராஜரும் (அதனை) அடைந்து சோகமற்றவராயினர்.

1 பிருஹதச்வர் சொல்லலானார்: 'மஹாராஜனே! உனது துயரமனைத்தையும் போக்கும்பொருட்டே உன்னைவிடத் துயரத்தையடைந்த (வேறோர்) அரசனை மறுபடியும் சொல்லுகிறேன். கேள். இக்ஷ்வாகு குலத்தில் மஹாத்மாவும் ராஜராஜனும் மிக்ககாந்தியுள்ளவனுமான திரிசங்குவென்னும் புகழ்பெற்ற ஓர் அரசன் உண்டானான். முக்யமானவையும் பலவிதமானவையும் மிக்கதக்ஷிணையுள்ளவையுமான யாகங்களைச் செய்ததமையால் அந்த அரசனிடமிருந்து குணக்கடலாகிற ஹரிச்சந்திரன் உண்டானான். புண்யச்லோகனும் மிக்க புகழுள்ளவனும் மெய்பேசுகிறவனும் இனியசொல்லுள்ளவனும் ஸத்யத்துடன் மிகப்பேசுகிறவனுமான அவன், உலகில் ஆண்பிள்ளைகளுள் சிறந்தவனாயிருந்தான். அவனுக்குப் பூமியில் நல்லொழுக்கத்தால் அலங்கரிக்கப்பட்டவளும் நல்ல லக்ஷணங்களுள்ளவளுமான உசீனரராஜரிஷியின் மகள் மனைவியானாள். அழகிய அவள், ஸ்வயம்வரத்தில் கூடியிருக்கின்ற அரசர்களின் நடுவில், மிக்க பாக்யசாலியும் மேன்மைபெற்றவனுமான ஹரிச்சந்திரனைப் பர்த்தாவாக வரித்தாள். பூபாலனான அந்த அரசன் மனத்துக்கினியவளும் ஸத்யவதியுமான அவளுடன் தன் நாட்டை அடைந்து நெடுங்காலம் மகிழ்ந்திருந்தான். அந்தத் தேவியினிடம் ஹரிச்சந்திரனுக்குத் தாமரைமலர்போன்ற கண்ணுள்ளவனும் புண்யவான்களுள் சிறந்தவனும் லோஹிதாச்வனென்னும் பெயர்பெற்றவனுமான புத்ரன் உண்டானான். புண்யச்லோகனும் மிக்க புகழுள்ளவனும் வஸிஷ்டருடைய சிஷ்யனுமான அரசன் தேவியுடனும் புத்ரனுடனும் சேர்ந்து புண்யமான பெரிய யாகங்களைச் செய்தான். இதேகாலத்தில் ஸ்வர்க்கத்தையடைந்த விச்வாமித்ரரோ, இந்திரனைக் காண்பதற்காக அழகிய இந்திரபட்டணத்தை அடைந்தார். மஹாத்மாவான தேவேந்திரனது பூஜை நடக்கும் பொழுது, வாமதேவரைத் துணையாகக்கொண்ட வஸிஷ்டரும் வந்தார். அப்பொழுது, பூஜை நடந்து இந்திரன் ஸுகமாக வீற்றிருந்து ஸத்ய

---

1 இந்த ஹரிச்சந்திரன் சரித்திரம் நீலகண்டவியாக்யான பாடத்திலும் இங்கிலிஷ் மொழிபெயர்ப்புகளிலும் இல்லை ஸபாபர்வத்தில் வந்துள்ளது; 43 - 45-ம் பக்கம் பார்க்க.

வாதிகளான அரசர்களும் சொல்லப்படுகையில், அந்த ஸபையில், ஹரிசசந்திரன், வேள்வி கொடை தவம ஒழுககம மெயபேசுதல உறுதியானவிரதம ஆகிய இவைகளால எலலாரையுங்காட்டிலும் புகழ்ப்பெற்ருன. வஸிஷ்டர், தம சிஷ்யனைப் புகழுநததனுல, மிகக மகிழ்சசியடைநதார். அப்படியாயினும், அவன ஸதயததால் அலஙகரிககபபெறறதை விஶ்வாமித்ரர் பொறுக்கவில்லை. அப்பொழுது, விஶ்வாமிதாருககும வஸிஷடருக்கும ஹரிச்சநதிரனைக் குறிததுப் பந்தயம ஏற்பட்டது. அதனபிறகு, விஶ்வாமிதாரால் அரசன ராஜயததினினறும ஸ்வகததினினறும விரைவில் நீககப பெற்று மரணததைவிடக் கெடுதலான மிகக துககததை அடைந தான' என்ருா.

பிறகு, தர்மராஜரான யுதிஷ்டிரா, தமபிமாருடனும திரௌபதியுடனும் பிராமமணாகளுடனும அதனைககேட்டு (த தம்நிலையில்) மிக்க திருப்தியுடன் மேலான ஆசசரியததை அடைநது, 'நலலது! நல்லது' என்று சொன்ஞர். பிறகு, ராஜஶ்ரேஷ்டரான தர்மபுதரர், ஹரிச்சந்திரன கதையை [1] முழுமையுங கேட்டுச சோகததை விட்டுத திருமபவும் மிக்க கீர்த்தியுள்ள ஹரிசசந்திரனை நினைததுக கொணடு ஸந்தோஷிததாா. அபபடியே, பிருஹதஶ்வர், ஹரிச்சநதிரனையும் நளனையும பற்றிய கதைகளை இவ்விதம சொல்லிமுடிதது, எல்லாப பாண்டவர்களிடமும் விடைபெறறுக்கொணடு போயினர். பெருந்தவமுளள அவர், [2] சொல்லிவிட்டு, நீராட்டமுதலியன செய்வதறகு விரைவாகத தடாகததை அடைந்தார். உறுதியான விரதமுள்ள யுதிஷ்டிரர், பிருஹதஶ்வா சென்றவுடன, ஸவ்யஸாசியும புததிமானுமான அர்ஜுனன காற்றை உணவாகக் கொணடு உகரமான தவததிலிருப்பதை, தவசிகளும ஆங்காஙகுத தீாததஙகளிலும மலைகளிலும வனஙகளிலுமிருநது வருகினறவாகளும ஒருஙகுசேர்ந்தவர்களுமான அநதணாகளிடமிருந்து, 'மிகக புஜபலமுள்ள பார்ததன பிறரால் அடையமுடியாத தவததை அடைநதிருக்கிருன்' எனறும, 'பிருதாபுத்ரனுன அர்ஜுனன்

---

1 'ஸாவாம்' என்று பாடம கொளளபபட்டது.

2 'தததவாச அஶ்வசிரஃ' எனறு பாடம ஓதி, 'அஶ்வஹ்ருதயததையும் கொடுதது' எனறு பொருள கூறி, 'முனிவருககு இந்த விததையாலேயே பிருஹதஶ்வா எனறு பெயா வந்தது' எனபது பழையவுரை 'அஶ்வசிரஸ் எனனும தீாதததை அடைந்தாா' எனபது இஙகிலிஷ்மொழிபெயாபபு.

நியமமான விரதமுள்ளவனும் தியானஞ்செய்பவனும் ஒருவனாக ஸஞ்சரிப்பவனும் காந்தியுள்ளவனும் தர்மமே வடிவெடுத்து வந்தது போன்றவனுமாகத் தவஞ்செய்வதுபோல வேறெவனும் கடுந்தவஞ் செய்ததாக முன்பு காணப்பட்டதில்லை' என்றும் சொல்லக் கேட்டார். அரசரே! குந்திபுத்ரராகிய பாண்டவர், [1] ஜயத்தை உடையவனும் பிரியமானவனும் ஸஹோதரனுமான அந்த அர்ஜுனன் பெரிய காட்டில் தவஞ்செய்வதைக் கேட்டுத் துயரத்தை அடைந்தார். ரக்ஷகனை விரும்புகின்ற யுதிஷ்டிரர், எரிக்கப்படுகின்ற மனத்துடன், பெரிய காட்டில் பல கலைகளையும் அறிந்த அந்தணர்களை வினவினர். மன்னரே! குந்திபுத்ரராகிய யுதிஷ்டிரர் அக்ஷஹ்ருதயத்தைப் பெற்று, பீமஸேனன் முதலியோருடன் சேர்ந்து, மனம் மகிழ்ந்திருந்தார். குந்திபுத்ரராகிய அவர், ஸஹோதரர்கள் கூடியிருப்பதைப் பார்த்து, அங்கே அர்ஜுனனைக் காணாமல் கண்ணீரால் நனைக்கப்பட்டவராயினர். குந்திபுத்ரர், மிகவாட்டப்படுகின்றவராகிய பீமஸேனனை நோக்கி, 'ஓ! பீம! இங்கு உனக்குப் பின் பிறந்தவனான பார்த்தனை எப்பொழுது பார்ப்பேன்? குருஶ்ரேஷ்ட! (அவன்) எனக்காகவன்றோ மேலான தவத்தைச் செய்கிறான்? அவனுக்கு நான் அக்ஷஹ்ருதய ஞானத்தை எப்பொழுது உபதேசிப்பேனோ? விபுவே! புருஷஶ்ரேஷ்டனான அவன் என்னால் நன்கு கற்கப்பட்ட அக்ஷஹ்ருதயத்தைக் கேட்டு மிக்க மகிழ்ச்சியுள்ளவனாவானென்பதில் ஸந்தேகமில்லை' என்று சொன்னார்" என்றார்.

நளோபாக்யானபர்வம் முற்றிற்று.

---

1 'ஜயம்' என்பது மூலம்; 'ஜயனென்னும் ஸஹோதரனை' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

## எழுபத்தெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம்.

(அர்ஜுனனுடைய பிரிவினால் காம்யகவனத்தில் வஸிக்க விருப்பமற்ற பாண்டவர்கள் அந்த வனத்தை விட்டு வேறிடம் செல்ல நிச்சயித்தது)

ஜனமேஜயர் வினவலானார். "பகவானே! என்னுடைய பிரபிதாமஹரான அர்ஜுனர் (திவ்யாஸ்திரங்களைப் பெறுவதற்காகக்) காம்யக வனத்தை விட்டுச் சென்றவுடன், அந்த ஸவ்யஸாசியை விட்டுப் பிரிந்த அந்தப் பாண்டவர்கள் யாது செய்தனர்? (பகைவர்களுடைய) படையை ஜயிப்பவரும் பெரிய வில்லாளிவருமான அந்த அர்ஜுனர் தேவர்களுக்கு விஷ்ணு கதியாயிருப்பது போலப் பாண்டவர்களுக்குக் கதியாக இருந்தாரென்றே எனக்குத் தோன்றுகிறது: இந்திரனுக்குச் சமமான வல்லமையுள்ளவரும் யுத்தங்களில் திரும்பாதவருமான அந்த அர்ஜுனரைப் பிரிந்திருக்கிற வீரர்களான (என்னுடைய) பாட்டனார்கள் வனத்தில் எவ்வண்ணமிருந்தார்கள்?" என்று வினவ, வைசம்பாயனர் கூறலானார்.

"ஐயா! பாண்டுகுமாரனான அர்ஜுனன் காம்யகவனத்தை விட்டுச் சென்றவுடன், அந்தப் பாண்டவர்கள் மனவருத்தமும் க்லேசமும் மேலிட்டவர்களானார்கள். பிறகு, அவர்கள் அனைவரும், (கோர்க்கப்பட்ட) நூல் அறுந்த ரத்னங்கள் போலவும் சிறகுகள் வெட்டப்பட்ட பக்ஷிகள் போலவும் மகிழ்ச்சியற்ற மனமுள்ளவரானார்கள். புகழத்தக்க செய்கைகளை உடைய அந்த அர்ஜுனனால் விடப்பட்ட அந்த வனமானது, குபேரனால் விடப்பட்ட சைத்ரரதமென்னும் உத்யானவனம் போலாயிற்று. ஜனமேஜயரே! ஆண்மையிற் சிறந்தவர்களான அந்தப் பாண்டவர்கள் அந்த அர்ஜுனனை விட்டுப் பிரிந்ததனால் ஸந்தோஷத்தை அடையாதவர்களாகவே காம்யகவனத்தில் அப்பொழுது வஸித்துவந்தனர். பரதர்களுள் சிறந்தவரே! பிராம்மணர்களுக்காகப் பராக்கிரமம் செலுத்துபவர்களும் மஹாரதர்களும் புருஷச்ரேஷ்டர்களும் பகைவரை அடக்குகிறவர்களுமான (பாண்டவர்கள் கானகத்தில்) மிக அலைந்து சுத்தமான பாணங்களால் யாகத்துக்குத் தக்கவையான பலவித மிருகங்களைக் கொன்று வனத்தில் கிடைப்பதான (அந்த) ஆகாரத்தைக் கொண்டுவந்து நாள்தோறும் பிராம்மணர்களுக்குக் கொடுத்தார்

கள். அரசரே! தனஞ்சயன் சென்றபிறகு, புருஷஶ்ரேஷ்டர்களான அவர்களனைவரும், மனமகிழ்ச்சியில்லாதவர்களாகவும் (அர்ஜுனனை அடைவதில்) மிக்க ஆவலுள்ளவர்களாகவும், அந்த வனத்தில் இவ்வண்ணம் வாஸம் செய்தார்கள். வேந்தரே! பிறகு, பாஞ்சாலியானவள், வேறிடம் போயிருக்கிற நடுவாமவனான நாயகனை நினைத்துப் பாண்டவர்களுள் சிறந்தவராகிய யுதிஷ்டிரரைப்பார்த்து இந்த வசனத்தை உரைக்கலானாள்:

'இரண்டு கைகளுள்ள எந்த அர்ஜுனர் அநேகம் கைகளுள்ள (கார்த்த வீர்ய) அர்ஜுனனோடு ஒப்பானவரோ அந்தப் பாண்டவஶ்ரேஷ்டரில்லாமல் இந்தவனமானது எனக்கு அழகாகத் தோற்றவில்லை. இந்தப் பூமியை ஆகாசத்தை ஒன்றுமில்லாததைப் போலக் காண்கிறேன். பூத்திருக்கிற மரங்களுடன் கூடியதும் பல ஆச்சர்யப் பொருள்களுள்ளதுமாயிருந்தாலும், இந்த வனமானது அந்த ஸவ்யஸாசியைப் பிரிந்தபின் முன்போல ரமணீயமாக இல்லை. கரிய மேகத்திற்கு ஒப்பான ஒளி பொருந்தியவரும் மதயானை போல நடப்பவரும் செந்தாமரை மலர்போன்ற கண்களுள்ளவருமான அர்ஜுனரில்லாமல் காம்யக வனமானது எனக்கு அதிக விளக்கமாக இல்லை. அரசரே! எவருடைய வில்லின் நாணொலியானது இடிமுழக்கம் போலக் கேட்கப்படுகிறதோ அந்த ஸவ்யஸாசியை நான் நினைத்துக்கொண்டே ஸுகத்தை அடையாமலிருக்கிறேன்' என்றாள்.

மகாராஜரே! பகை வீரர்களைக் கொல்லுபவனான பீமஸேனன், அவ்வாறு அடிக்கடி புலம்புகிற அந்தத்ரௌபதியைப் பார்த்து, 'கல்யாணி! அழகிய இடையுள்ளவளே! மனத்துக்கு மகிழ்ச்சியைச் செய்வதும் நீ சொல்லுகிறதும் அம்ருதபானம் போன்றதுமான அந்த (இன் சொல்லானது) என் உள்ளத்தை மகிழ்ச்செய்கிறது. எவனுடைய இரு கரங்களும் நீண்டவையும் பருத்தவையும் ஸம அளவுள்ளவையும் பரிகாயுதத்திற்கு ஒப்பானவையும் நாண்கயிறு உரைவதனால் தழும்பு உண்டுபண்ணப்பட்டவையும் உருண்ட வடிவமுள்ளவையும் கத்தியையும் மற்ற ஆயுதங்களையும் வில்லையும் தரித்தவையும் பதக்கங்களாலும் தோள்வளைகளாலும் அலங்கரிக்கப்பட்டவையுமாக இரண்டு ஐந்துதலை நாகங்கள்போல விளங்குகின்றனவோ ஆண்மையில் சிறந்தவனான அந்த அர்ஜுனனில்லாமல் (இந்தக் காம்யக வனமானது) ஸூர்யனை இழந்த வானம்போல (ஒளியை இழந்ததாக ஆயிற்று.) மிக்க புஜபலமுள்ள

எவனை ஆதாரமாகக்கொண்டு பாஞ்சாலர்களும் அவ்வாறே கௌரவர்களும் (போருக்கு) முயன்ற தேவர்களுடைய சேனைகளினும் அஞ்சுவதில்லையோ, மகாத்மாவான எவனுடைய இருகரங்களையும் அடுத்து நாமெல்லோரும் பகைவர்களை யுத்தத்தில் ஜயிக்கப்பட்டவர்களாகவும் பூமியை அடையப்பட்டதாகவும் எண்ணுகிறோமோ அப்படிப்பட்ட வீரனை பல்குனனைப்பிரிந்து காம்யகவனத்தில் நான் அமைதியை அடையவில்லை. எல்லாத் திசைகளையும் இருளால் மூடப்பட்டவைகளைப் போலக் காண்கிறேன்' என்னும் இதனைக் கூறினான். பிறகு, பாண்டுநந்தனனான நகுலன், கண்ணீரால் தடைப்பட்ட குரலுள்ளவனாக, 'யுத்தரங்கத்தில் எவனிடத்திலுள்ள மனித இயற்கைக்கு மேற்பட்ட செய்கைகளைத் தேவர்களும் புகழ்ந்து பேசுகிறார்களோ போர்புரிபவர்களுள் சிறந்த அந்த அர்ஜுனனைப் பிரிந்து காம்யகவனத்தில் என்ன ஸந்தோஷமிருக்கிறது? அதிக காந்தியுள்ளவனும் பிரியமானவனுமான எந்த அர்ஜுனன் வடதிசையில் சென்று மஹா பலசாலிகளான சிறந்த கந்தர்வர் தலைவர்களைப் போரில் நூற்றுக்கணக்காக வென்று தித்திரிப் பக்ஷிநிறமுள்ளவையும் சித்ரவர்ணமுள்ளவையும் ஒளியுள்ளவையும் காற்றுப்போல வேகமுள்ளவையுமான குதிரைகளைக் கைப்பற்றி ராஜஸூயமென்கிற மகாயாகத்தில் ப்ராதாவான தர்மராஜருக்கு அன்பினால் கொடுத்தானோ பயங்கரமான வில்லை உடையவனும் பீமனுக்குப் பின் பிறந்தவனும் தெய்வம் போன்றவனுமான அந்த அர்ஜுனனில்லாமல் காம்யகவனத்தில் இப்பொழுது நான் வாஸத்தை விரும்பவில்லை' என்று சொன்னான். ஸஹதேவன், 'பரதகுலத்திலுதித்தவரே! எவன் யுத்தத்தில் படைநடுவை அடைந்து மிக்க பலசாலிகளான பகைவர்களை நூறு நூறாகக் கொன்று தனங்களையும் கன்னியர்களையும்[1] ஜயித்து ராஜஸூயமென்கிற மகாயாகத்தில் யுதிஷ்டிர மகாராஜருக்கு முற்காலத்தில் கொண்டு வந்து கொடுத்தானோ, அளவிறந்த காந்தியுள்ள எந்த அர்ஜுனன், ஒருவனாகவே, கூடியிருக்கிற யாதவர்களைப் போரில்வென்று வாஸுதேவருடைய ஸம்மதத்தினால் ஸுபத்ரையைக் கொண்டுவந்தானோ, எந்த அர்ஜுனன் யுத்தத்தில் மஹாத்மாவான த்ருபதராஜனுடைய பாதிராஜ்யத்தைக் கவர்ந்து த்ரோணருக்குக் குருதக்ஷிணை கொடுத்தானோ அந்த அர்ஜுனனுடைய ஆஸனம் வீட்டில் சூன்யமாயிருப்பதைக் கண்டு என்னுள்ளமானது அமைதிபெறவில்லை. பகைவரை அடக்

1 வேறு பாடம்.

குபவரே! இந்த வனத்திலிருந்து வெளிச்செல்வதை நான் விரும்பு கிறேன். அந்த வீரனை அர்ஜுனனில்லாமல் இந்தக் காடானது நமக்கு மகிழ்ச்சிக்குரியதாக இல்லையன்றோ?' என்று கூறினான்.

---

## எழுபத்தோன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் காம்யகவனத்திற்கு வந்த நாரதரை வணங்கி, பூமியை வலம் வந்து தீர்த்தயாத்திரை செய்வதன் பயனைவினவ, நாரதர் அந்த விஷயமாகப் புலஸ்தியருக்கும் பீஷ்மருக்கும் நடந்த ஸம்வாதத்தைக் கூறத்தொடங்கியது)

மஹாரதர்களும் மஹாபாக்யசாலிகளுமான அந்தப்பாண்டவர்களோ அந்தக் காட்டில் தனஞ்சயனிடத்தில் மிக்க ஆவலுள்ளவர்களாக த்ருபதராஜகுமாரியான க்ருஷ்ணையுடன் வாஸம் செய்தனர். தனஞ்சயனிடத்தில் ஆவலுள்ளவர்களான ஸஹோதரர்களும் க்ருஷ்ணையும் ஆகிய இவர்களுடைய வாக்கியங்களைக் கேட்டுத் தர்மராஜரும் மனவருத்தமுற்றவரானார்; பிறகு, மஹாத்மாவும் தேவரிஷியும் பிரம்மதேஜஸினால் விளங்குபவரும் ஜ்வலிக்கின்ற நெருப்புக்கு ஸமமான தேஜஸுள்ளவருமான நாரதரை அந்த வனத்தில் கண்டார். தர்மராஜர் அந்த நாரதர் வந்ததைக் கண்டு, ஸஹோதரர்களுடன் எழுந்திருந்து, மஹாத்மாவான அந்த நாரதருக்கு விதிப்படி பூஜைசெய்தார். கௌரவர்களுள் சிறந்தவரும் ஸ்ரீமானுமான அந்தத் தம்பிமார்களால் சூழப்பட்டு மிகப் பிரகாசிக்கின்ற ஒளியுள்ள இந்திரன் தேவர்களால் சூழப்பட்டுவிளங்குவதுபோல் அதிகமாக விளங்கினார். ஸாவித்ரி வேதங்களை விட்டு விலகாததுபோலவும் சூரியனுடைய ஒளி மேருமலையை விட்டு விலகாததுபோலவும் திரௌபதியானவள் குந்தீபுத்திரர்களான தன் கணவர்களை (தான் நடந்துகொள்ளவேண்டிய)முறையில் விட்டு விலகாமலிருந்தாள். பிறகு, தவமுதவரான யுதிஷ்டிரர் அர்க்யத்தையும் பாத்யத்தையும் கொண்டுவந்து அபிவாதனம்செய்தார். மிக்க தேஜஸுள்ள நாரதரோ, 'க்ஷேமம் உண்டாகுக' என்று சொன்னார். பிறகு, குருநந்தனரான யுதிஷ்டிரராஜர், தேவரிஷிகளுள் மிக்க மேன்மைபெற்ற நாரதரைக் கண்டு முறைப்படியும் தகுதிப்படியும் பூஜித்தார். குற்றமற்றவரே! பகவானான நாரத

ரிஷியானவர் அந்தப் பூஜையைப் பெற்றுக்கொண்டு தர்மநந்தனனுக்குத் தகுதிப்படி தேறுதல் கூறினர்.

அவர், மஹாத்மாவும் தர்மராஜருமான யுதிஷ்டிரரைப் பார்த்து, 'தார்மிகர்களுள் சிறந்தவனே! எதில் உனக்கு விருப்பம்? உனக்கு எதைக் கொடுக்கக்கடவேன்? சொல்' என்று கேட்டார். பிறகு, தர்மபுத்திரரான அரசர், ஸஹோதரர்களுடன் தெய்வம்போன்ற நாரதரை நமஸ்காரஞ்செய்து இருகரங்களையும் குவித்துக்கொண்டு, 'மஹாபாக்யமுள்ளவரே! நல்ல விரதத்துடன் கூடியவரே! எல்லா உலகங்களாலும் பூஜிக்கப்படுகிற தேவரீர் ஸந்தோஷமடைந்துவிட்டால், தேவரீருடைய அருளால், (எல்லாம்) செய்யப்பட்டதென்றே நான் நினைக்கிறேன். தோஷமற்றவரே! ரிஷிகளுள் மேன்மை வாய்ந்தவரே! ஸஹோதரர்களுடன் சேர்ந்திருக்கிற நான் அனுக்கிரகிக்கப்படத்தகுந்தவனாகில் தேவரீர் உண்மையை உபதேசித்து என் ஸந்தேஹத்தைப் போக்கக்கடவீர். எவன் தீர்த்தயாத்திரையில் பற்றுதலுடன் பூமியைப் பிரதக்ஷிணஞ்செய்கிறானோ அவனுக்கு உண்டாகும் பயன் யாது? அதனைத் தேவரீர் மிச்சமின்றிச் சொல்லக்கடவீர்' என்று வினவ, நாரதர் சொல்லலானார்.

'அரசனே! சிறந்த புத்தியுள்ள பீஷ்மராலே புலஸ்தியரிடமிருந்து கேட்கப்பட்ட இவை அனைத்தையும் நீ கருத்துடன் கேள். தர்மத்தைத் தரிப்பவர்களுள் சிறந்தவரான பீஷ்மர் முற்காலத்தில் கங்கைக்கரையில் பித்ருதேவதைகளைத் திருப்தியடையச் செய்கிற விரதத்தை மேற்கொண்டு ரிஷிகளுடன் வஸித்து வந்தார். அரசனே! மஹாபாக்யமுள்ளவனே! நிகரில்லாத ஒளி பொருந்தின அந்தப் பீஷ்மர், மங்களகரமானதும் புண்யமானதும் தேவரிஷிகளால் அடையப்பட்டதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதுமான அப்படிப்பட்ட கங்காத்வாரமென்னும் இடத்தில் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் சாஸ்திரத்தில் சொல்லிய கர்மாக்களைச் செய்து திருப்தியடையும்படி செய்தார். பிறகு சிறிதுகாலம் சென்றபின், மிக்க புகழுள்ள பீஷ்மர் மந்திரங்களை ஜபித்துக்கொண்டே இருக்கும்பொழுது அத்புதமான தோற்றமுள்ளவரும் ரிஷிகளுள் மிக்க மேன்மைபெற்றவருமான புலஸ்தியரைக் கண்டார். அந்தப் பீஷ்மர், கடுந்தவமுள்ளவரும் தேஜஸினால் ஜ்வலிப்பவர் போலிருப்பவருமான அந்தப் புலஸ்தியரைக் கண்டு நிகரில்லாத மகிழ்ச்சியை அடைந்ததுடன் மிக்க ஆச்சர்யத்தையும் அடைந்தார். பரத குலத்தில் உதித்தவனே! தார்மிகர்களுள் சிறந்தவரான பீஷ்மர், வந்தி

ருக்கின்ற மஹா பாக்யசாலியான புலஸ்தியரைச் சாஸ்திரத்தில் கண்ட செய்கையினால் பூஜித்தார். சுத்தரும் மனத்தை அடக்கினவருமான பீஷ்மர் தலையினால் பூஜாதரவ்யத்தை எடுத்துக்கொண்டு ப்ரமமரிஷிகளுள் மிகச்சிறந்த அந்தப்புலஸ்தியரிடத்தில், 'நல்ல விரதமுள்ளவரே! நான் பீஷ்மன். தேவரீருக்கு மங்களம். நான் தேவரீருக்கு அடிமை. தேவரீருடைய தர்சனத்தினாலேயே நான் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டேன்' என்று தம் பெயரைச் சொன்னார். மஹாராஜனே! யுதிஷ்டிர! தார்மிகர்களுள் சிறந்தவரான பீஷ்மர் இவ்விதம் சொல்லிவிட்டுப் பேச்சை நிறுத்திக் கைகூப்பிக்கொண்டு மௌனமாக இருந்தார். பிறகு, முனிவர், விரதத்தாலும் வேதாத்தியயனத்தினாலும் குருகுலஸ்ரேஷ்டரான அந்தப் பீஷ்மர் மெலிந்திருப்பதைக் கண்டு மனமகிழ்ந்தவராயினர். பெருந்தவமுள்ளவரும் தர்மத்தை அறிந்தவருமான அந்தப் புலஸ்தியர், மனமகிழ்ந்து இனிய குரலுடன் (பின்வரும்) வாக்யங்களை உரைக்கலானார்.

---

## எண்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(புலஸ்தியர் பீஷ்மருக்குப் புஷ்கர முதலிய தீர்த்தங்களின் மஹிமையைச் சொல்லியது)

புலஸ்தியர், 'தர்மத்தை அறிந்தவனே! மிக்க பாக்கியமுள்ளவனே! நல்ல விரதத்துடன் கூடியவனே! உன்னுடைய இந்த வணக்கத்தாலும் (இந்திரியங்களுடைய) அடக்கத்தாலும் உன்னுடைய ஸத்யத்தாலும் மகிழ்ச்சியடைந்தவனாக இருக்கிறேன். தோஷமற்றவனே! புத்ரனே! பித்ருவாக்யத்தினால் அடையப்பட்ட உன்னுடைய இப்படிப்பட்ட இந்தத் தர்மத்தினால் நீ என்னைக் காணுகிறாய். உன்னிடத்தில் எனக்கு, இணையில்லாத அன்பும் இருக்கிறது. பீஷ்ம! நான் [1] வீணபோகாத காட்சியுள்ளவன். உனக்கு என்ன செய்யக்கடவேன்? சொல். கௌரவர்களுள் சிறந்த

---

1 தம்மைக் காண்பது பயனுள்ளதாகவே இருக்குமென்பது

வனே! குற்றமற்றவனே! நீ எதைச் சொல்லுவாயோ அதைக் கொடுப்பேன்' என்றார்.

பீஷ்மர், 'மஹாபாக்யமுள்ளவரே! நான் பரபுவான உம்மைத் தரிசித்ததனாலும் எல்லா உலகங்களாலும் பூஜிக்கப்பட்ட தேவரீர் மகிழ்ச்சியடைந்ததனாலும், (எல்லாம்) செய்யப்பட்டன வென்றே நான் எண்ணுகிறேன். தார்மிகர்களுள் சிறந்தவரே! நான் உம்மால் அனுக்ரஹிக்கப்படத்தக்கவனாகில் ஒரு ஸந்தேகத்தை உம்மிடம் சொல்லுவேன். என்னுடைய அந்த ஸந்தேஹத்தைத் தேவரீர் போக்கக்கடவீர். பகவானே! எனக்குத் தீர்த்தங்களைப் பற்றி ஒரு ஸம்சயமிருக்கிறது. நான் அதனைக் கேட்க விரும்புகிறேன். அதைத் தேவரீர் சொல்லக்கடவீர். தெய்வம்போன்றவரே! பிரமரிஷியே! எவன் பூமியைப் பிரதக்ஷிணம் செய்கிறானோ அவனுக்கு என்ன பயன் உண்டாகிறது? தபோதனரே! அதனை எனக்குச் சொல்வீராக' என்று வினவ, புலஸ்தியர் சொல்லலானார்.

'ஸந்தோஷம். ரிஷிகளுக்கு எது முக்கியகதியாக இருக்கிறதோ அதனை உனக்கு நன்கு எடுத்துரைப்பேன். ஐயா! தீர்த்தங்களில் கிடைக்கும் பயனைக் கருத்துடன் கேள். எவனுடைய * கைகளும் கால்களும் மனமும் கல்வியும் தவமும் கீர்த்தியும் நன்கு அடக்கப்பட்டிருக்கின்றனவோ அவன் தீர்த்தபலனை அடைகிறான். தானம் வாங்காதவனும் கிடைத்ததைக் கொண்டு மகிழ்பவனும் நான் என்கிற அஹம்பாவத்தினின்று விடுபட்டவனுமான மனிதன் தீர்த்த பலனை அடைகிறான். டம்பம் முதலியவை இல்லாதவனும் (பயனை எதிர்பார்த்துக் கார்யங்களைத்) தொடங்காதவனும் லகுவான ஆகாரமுள்ளவனும் புலன்களை வென்றவனுமாயிருப்பவன், எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுத் தீர்த்தபலனை அடைகிறான். ராஜஶ்ரேஷ்டனே! கோபமில்லாதவனும் இயற்கையாகவே உண்மை பேசுகிறவனும் உறுதியானவிரதமுள்ளவனும் எல்லாப் பிராணிகளையும் தனக்கொப்பாக நினைப்பவனுமாயிருப்பவன் தீர்த்தபலனை அடைகிறான். இவ்வுலகில் ரிஷிகளால்

---

*1 கைகளை அடக்குதலாவது—தகாத தானங்களை வாங்காமை, பிறரைத் துன்புறுத்தாமை முதலியன. 2 கால்களை அடக்குதலாவது—கண்ணாலை பார்த்துச் சுத்தமான இடத்தில் அடிவைத்தல். 3 மனத்தை அடக்குதலாவது—பிறனுக்குத் தீங்கு நினையாமை. 4 கல்வியை அடக்குதலாவது—அபிசாரம் செய்யாமை, அதாவது, மந்திர முதலியவற்றால் பிறருக்குத் தீங்கு செய்யாமை. 5 தவத்தை அடக்குதலாவது—காவ மில்லாமை. 6 கீர்த்தியை அடக்குதலாவது—அபகீர்த்தியில்லாமை' என்பது பழையவுரை.

தேவர்கள் விஷயமாக(ச் செய்ய வேண்டிய) யாகங்களும் அந்த யாகங்களுக்கு முறைப்படி இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கும் பயனும் முழுமையும் உள்ளபடி கூறப்பட்டிருக்கின்றன. அரசனே! அந்த யஜ்ஞங்கள் பொருளில்லாதவனால் செய்து முடிக்கக்கூடியவையல்ல. பல ஸாதனங்களுள்ளவையும் பலவகைப்பட்ட விரிவான பொருளுள்ளவையுமான யஜ்ஞங்கள் இந்த அரசர்களாலாவது செல்வத்தால் நிறைந்த மனிதர்களாலாவது ஒரு ஸமயத்தில் செய்யப்படுகின்றன. பொருளும் மற்ற ஸாதனங்களும் குறைந்தவர்களாலும் ஸஹாயமற்றவர்களாலும் மனைவிமக்களில்லாதவர்களாலும் செய்யப்படமுடியா. மஹாராஜனே! யுத்தம் செய்பவர்களுள் சிறந்தவனே! எளியவர்களும் செய்யக்கூடியதும் புண்ணியமான யாக பலன்களை ஒத்த பலன் தருவதுமான செய்கையை நீ தெரிந்துகொள். பரதர்களுள் மிகச் சிறந்தவனே! ரிஷிகளுடைய பரமரஹஸ்யமாயுள்ள இந்தப் புண்ணியமான தீர்த்தயாத்திரையானது, யாகங்களைக்காட்டிலும் சிறந்ததாகும். தீர்த்தங்களை அடையாமையாலும், (அடைந்தும்) மூன்றுநாள் உபவாசம் இராமையாலும், பொன்னையும் பசுக்களையும் கொடாமையாலும், மனிதன் தரித்திரனாகப் பிறக்கிறான் அன்றோ? (மனிதன்) தீர்த்தாடனத்தினால் எந்தப் பலனை அடைகிறானோ அந்தப்பலனை அதிக தக்ஷிணைகளுள்ள அக்நிஷ்டோமம் முதலிய யாகங்களைச் செய்தும் அடையான்.

ராஜஶ்ரேஷ்டனே! மிக்க பாக்யசாலியானவன் எல்லாத்தீர்த்தங்களுள்ளும் மூவுலங்களிலும் ப்ரஸித்திபெற்ற [1] புஷ்கரம் என்கிற பெயர் பெற்ற தீர்த்தத்தை அடையவேண்டும். பேரறிவுள்ளவனே! குருநந்தன! பதினுபிரங்கோடி தீர்த்தங்கள் புஷ்கரத்தில் மூன்று ஸந்தியாகாலங்களிலும் வருகின்றன. பிரபுவே! ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்ரர்களும் மருத்கணங்களும் ஸாத்யர்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுக்களும் எப்பொழுதும் புஷ்கரத்தில் வஸிக்கிறார்கள். மஹாராஜனே! அந்தத் தீர்த்தத்தில் தேவர்களும் அஸுரர்களும், அப்படியே பிரம்மரிஷிகளும், தவத்தைச்செய்து சிறந்தயோகமுள்ளவர்களும் பெரும் புண்ணியத்தையடைந்தவர்களும் அதிகதேஜஸுள்ளவர்களுமாகிப் பல சிறந்த தவங்களால் (அடையக்கூடிய) ஸ்தானங்களை அடைந்தார்கள். நல்ல எண்ணமுள்ளவனுக்குப் புஷ்கரதீர்த்தங்களை

1 சில தீர்த்தங்கள் பலமுறை வருகின்றன. சில தீர்த்தமுதலியவற்றுக்கு நீலகண்டவியாக்யான பாடத்தில் பெயர்கள் வேறுபடுகின்றன.

அடைய மனத்தினால் விரும்புவனாலும் பாவங்களனைத்தும் நாசமடைகின்றன. (அவன்) ஸ்வர்க்கத்திலும் பூஜிக்கப்படுகிறான். மிக்கபுகழ் பெற்றவரும் தேவாஸுரர்களுள் மிக்க மேன்மைபெற்றவருமான பிரமதேவர், அந்தப் புஷ்கரதீர்த்தத்தில் எப்பொழுதுமே நிகரற்ற பிரியமுடையவராக வஸித்தார். புகழுள்ளவனே! முற்காலத்தில் ரிஷிக்கூட்டங்களுடன் கூடின தேவர்கள் பெரிய புண்ணியத்துடன் சேர்ந்தவர்களாகிப் புஷ்கரதீர்த்தத்தில் ஸித்தியை நன்கு அடைந்தார்கள். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பித்ருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணஞ் செய்பவன் எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டுப் பிரமலோகத்திலும் பூஜிக்கப்படுகிறான். ஓ! பீஷ்ம! புஷ்கரதீர்த்தத்தின் கரையிலுள்ள வனத்தை அடைந்து ஒரு பிராம்மணனை யாவது உண்பிப்பவன் அந்த நற்செய்கையால் இம்மையிலும் மறுமையிலும் மகிழ்கிறான். கற்றறிந்த மனிதன் கீரைகளாலோ கிழங்குகளாலோ பழங்களாலோ எதனால் தான் ஜீவனம் செய்கிறானோ அதனை மாத்ஸர்யமுள்ளவனாகவும் அஸூயை இல்லாதவனாகவும் (அங்கே) பிராமணனுக்குக் கொடுக்கக் கடவன்; அதனாலேயே அச்வமேத பலனை அடைவான். தீர்த்தபாத்திரங்களையாவது (கொடுத்துப்) பிராம்மணர்களைக் கொண்டு மங்கள ஆசீர்வாதத்தைச் சொல்லுவிக்க வேண்டும். அந்தப் பூஜையினாலும், இறந்தபின் விரைவில் மோக்ஷத்தை அடைகிறான். ராஜச்ரேஷ்டனே! (புஷ்கர)தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்த மஹாத்மாக்கள் பிராமணர்களாயினும் க்ஷத்திரியர்களாயினும் வைசியர்களாயினும் சூத்திரர்களாயினும் பிறவியை அடையார். பரதர்களுள் சிறந்தவனே! முக்கியமாகக் கார்த்திகை மாதத்துப் பௌர்ணமாஸியில் புஷ்கரத்தை அடைகிறவன் அந்தத் தீர்த்தத்தில் அக்ஷயமான பலனை அடைகிறான். பரதகுலத்தில் தோன்றியவனே! காலையிலும் மாலையிலும் கைகூப்பிக்கொண்டு புஷ்கரத்திலுள்ள தீர்த்தங்களை நினைப்பவன் எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்தவனாவான். அந்த மனிதன் பிரம்மலோகத்தில் அழிவற்ற இடங்களையும் அடைவான். ஸ்திரீகளுக்கோ புருஷர்களுக்கோ பிறந்தது முதல் உள்ள பாவமனைத்தும் புஷ்கரத்தில் ஸ்நானஞ்செய்த மாத்திரத்திலேயே நீங்கிவிடுகின்றது. அரசனே! மதுஸூதனர் எல்லாத்தேவர்களுக்கும் முதன்மையாயிருப்பது போல புஷ்கரமானது எல்லாத்தீர்த்தங்களுக்கும் முதன்மையாயிருப்பதென்று சொல்லப்படுகிறது. நியமமுள்ளவனாகவும் சுத்தனாகவும் புஷ்கரத்தில் பன்னிரண்டு வர்ஷகாலம்

வஸிப்பவன் எல்லா யாகங்களின் பலனையும் அடைந்து பிரம்மலோகத்தையும் அடைகிறான். ஒருவன் பூரணமாக நூறு வருஷகாலம் அக்நிஹோத்ரத்தைச் செய்தாலும், அல்லது புஷ்கரத்தில் கார்த்திகைமாதத்துப் பூர்ணிமை ஒருதினம் மாத்திரம் வஸித்தாலும் அவ்விரண்டிற்கும் பலன் ஒன்றே. வெண்மையான மூன்று மலைசிகரங்களும் மூன்று நீரோட்டங்களும் தொன்று தொட்டுப் புஷ்கரமென்னும் பெயரால் வழங்குகின்றன. அது விஷயத்தில் காரணத்தை நாம் அறியோம். புஷ்கரத்தை அடைவதும் அரிது, புஷ்கரத்தில் தவஞ்செய்வதும் அரிது; புஷ்கரத்தில் தானங்கொடுப்பதும் அரிது, புஷ்கரத்தில் வஸிப்பதுவே மிக அரிது. (மனிதன்) நியமமுள்ளவனாகவும் ஆகார நியமமுள்ளவனாகவும் புஷ்கரத்தில் பன்னிரண்டுநாள் வஸித்துவிட்டு அதனை வலமாகச்சுற்றி வந்து ஜம்பூமார்க்கத்தை அடையவேண்டும். தேவர்களாலும்ரிஷிகளாலும் பிதருக்களாலும் அடையப்பட்ட ஜம்பூமார்க்கத்தை அடைந்தால் அஸ்வமேத பலனை அடைந்து விஷ்ணுலோகத்துக்குஞ்செல்லுகிறான். மனிதன் பசியில் [1] ஆறாவது காலம்வரையில் பசியைப்பொறுத்துக்கொண்டு அந்த ஜம்பூமார்க்கத்தில் ஐந்து இரவுகள்வஸித்தால் நரகத்தை அடையான்; உத்தமமான ஸித்தியையும் அடைகிறான். அறிவுமிக்கவனான மனிதன் அங்குச்சென்று உறுதியான விரதத்துடன் ஸ்ராத்தத்தைச் செய்யக்கடவன். (அப்படிச் செய்பவன்) வாஜபேயயாகத்தின்பலனை அடைகிறான். அவனுடைய பாவமும் தொலைகிறது. ஜம்பூமார்க்கத்தினின்று திரும்பி ஸதண்டிலகாஸ்ரமத்துக்குச் செல்லவேண்டும். (அப்படிப்போகிறவன் நரகத்தை அடையான்; பிரம்மலோகத்தையும் அடைகிறான். அரசனே! அகஸ்தியருடைய ஸரஸை அடைந்து பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பதில் பற்றுதலுள்ளவனாக மூன்று நாள் உபவாஸமிருப்பவன் அக்னிஷ்டோமயாகத்தின் பலனை அடைவான். (அங்கே) இலைகளையாவது பழங்களையாவது உணவாகக் கொண்டிருப்பவன் ஸௌப்ரம்மண்யருடைய ஸ்தானத்தை அடைகிறான். பரதர்களுள் சிறந்தவனே! பிறகு, லக்ஷ்மீ வாஸமும் பொருந்தியதும் உலகத்தால் பூஜிக்கப்பட்டதுமான கண்வாஸ்ரமத்துக்குச் செல்லவேண்டும். அந்தத் தர்மாரண்யம் புண்யமானதும் ஆதியில் உண்டானதுமன்றோ? அந்த இடத்தில் ப்ரவேசித்த மாத்திரத்திலேயே (மனிதன்)

---

1 சாந்திபர்வம் 900-ம் பக்கத்திலும், ஆஸ்வமேதிகபர்வம் 248-ம் பக்கத்திலும் குறிப்பிற்காண்க.

எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுகிறான். நியமமுள்ளவனாகவும் ஆஹார நியமமுள்ளவனாகவும் பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பவன், விரும்பிய எல்லாம் நிரம்பினவன் ஆவான்; யாக பலனையும் அடைகிறான். பிறகு, (அதனை) வலம் செய்து யயாதிபதனம் என்னுமிடத்தை அடையவேண்டும். (அடைபவன்) அங்கே அச்வமேத யாகத்தின் பயனை அடைகிறான். பிறகு, நியமமுள்ளவனாகவும் நியமமான ஆஹாரமுள்ளவனாகவும் மஹாகாலமென்னும் இடத்தைக் குறித்துச் செல்லவேண்டும். (அங்குள்ள) கோடி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் அச்வமேத பலனை அடைவான். பிறகு, தர்மங்களை அறிந்த மனிதன் பத்ரவடமென்கிற பெயருள்ளதும் மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்றதுமான உமாபதியாகிய ஸ்தாணுவினுடைய தீர்த்தத்தை அடையவேண்டும். அந்தத் தீர்த்தத்தில் ஈசானனை அடைந்து (வணங்கினால்) ஆயிரம் பசுக்களைத் தானம் செய்வதனாலுண்டாகும் பலனை அடைவான்; மஹாதேவருடைய அருளால் கணங்களுக்குத் தலைமையையும் அடைகிறான். மனிதச்ரேஷ்டன் அவ்விடத்தில் சென்று செல்வப் பெருக்குள்ளதும் பகைவரில்லாததும் அழகியதுமான அரசாக்கு அரசனாயிருக்கும் பதவியையும் அடைவான். அந்த மனிதன் மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற நர்மதாநதியை அடைந்து பிதருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்பணம் செய்தால் அக்நிஷ்டோமத்தின் பலனை அடைவான். பிரம்மசர்யமுள்ளவனும் பொறிகளை வென்றவனுமான மனிதன் தென்திசையிலுள்ள 1 ஸிந்துநதியை அடைந்தால் அக்நிஷ்டோமயாகத்தின் பலனை அடைவதுடன் விமானத்தின் மீதும் ஏறுகிறான். நியமமுள்ளவனாகவும் ஆகாரநியமமுள்ளவனாகவும் 2 சர்மண்வதீ நதியையடைந்து ரந்திதேவனால் அனுமதிகொடுக்கப்பட்டிருக்கிற அக்நிஷ்டோமபலனை அடைவான். 3 யுத்தத்தில் ஸ்திரமாயிருப்பவனே! அங்கிருந்து எந்த இடத்தில் முற்காலத்தில் பூமியில் துவாரமிருந்ததோ ஹிமவானுடைய பிள்ளையும் தர்மங்களை அறிந்ததுமான அந்த அற்புதத்தை அடையவேண்டும். அந்தஇடத்தில் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற வஸிஷ்டருடைய ஆச்ரமம் இருக்கிறது.

1. 'தக்ஷிணம் ஸிந்தும்' என்பது மூலம்; 'தென்கடலை' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு. 2. துரோண பர்வம் 217-ம் பக்கத்திலும் சாந்தி பர்வம் 95 ம் பக்கத்திலும் பார்க்க. 3. 'யுதிஷ்டிர!' என்பது மூலம்; பீஷ்மருக்கானமையால் இங்ஙனம் பொருள் செய்யப்பட்டது. இந்த ஸம்பாஷணையில் பின்வருமிடங்களிலும் இங்ஙனமே கொள்க.

அங்கே ஓர் இரவு வாஸம் செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனைப் பெறுவான். மனிதர்களுள் சிறந்தவனே! பிரம்ம சர்யமுள்ளவனும் ஐம்புலன்களையும் வென்றவனுமான மனிதன் பிங்க தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தலால், நூறு கபிலைப் பசுக்களைக் கொடுக்கும் பலனைப் பெறுகிறான். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, உலகத்தில் புகழ்பெற்றதும் தேவகணங்களால் பூஜிக்கத்தக்கதும் ரிஷிகளால் அடையப்பட்டதுமான பிரபாஸதீர்த்தத்துக்குச் செல்லவேண்டும். வீரனே! அந்த பரபாஸதீர்த்தத்தில் ஹவிஸைப்புண்பவனும் தேவதை களுக்கு வாயாக இருப்பவனும் காற்றை ஸாரதியாகவுடையவனுமான அக்னியானவன் தானே எப்பொழுதும் நேரிலிருக்கிறான். மனிதன் சுத்தனாகவும் மனத்தை நன்கு அடக்கினவனாகவும் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணுவதால் அக்நிஷ்டோமத்தினாலும் அதிராத்ரத்தா லும் உண்டாகிற பலனை அடைகிறான். பிறகு, ஸரஸ்வதீநதியும் ஸமுத்திரமும் சேருமிடத்தில் சென்று (ஸ்நானம் செய்தால்) அவ னுக்கு ஆயிரம் பசுக்களைத் தானஞ்செய்த பலன் உண்டாகிறது. (அவன்) ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். பரதஸ்ரேஷ்டனே! ராஜேந்திரனே! அதில் ஸ்நானஞ்செய்து மாசற்ற ஸூர்யன்போன்ற காந்தியுடையவனாகி ஒளியினால் எப்பொழுதும் அக்நிபோலப் பிரகாசிக் கிறான். அந்த இடத்தில் மூன்று நாள் வஸித்து ஸ்நானம் செய்து பிதருக்களையும் தேவர்களையும் திருப்தியடையச் செய்யவேண்டும். அப்படிச் செய்பவன் சந்திரன்போலப் பிரகாசிப்பதுடன் அச்வமே தத்தின் பலனையும் அடைகிறான். பரத குலத்தில் பிறந்தவர்களுள் உத்தமனே! யுத்தத்தில் ஸ்திரமாயிருப்பவனே! பிறகு, எதில் துர் வாஸரிஷியினால் விஷ்ணுவுக்கு வரம் அளிக்கப்பட்டதோ அந்தவர தானமென்கிற தீர்த்தத்தைக் குறித்துச்செல்லவேண்டும். மனிதன் வர தானத்தில் ஸ்நானஞ்செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானஞ்செய்தபலனை அடைவான். பிறகு, மனிதன் நியமமுள்ளவனாகவும் நியமமான ஆகார முள்ளவனாகவும் த்வாரகையைக் குறித்துச் செல்லவேண்டும். ஒருவன் பிண்டாரகத்தில் ஸ்நானம் பண்ணினால் பல ஸுவர்ணங்களைத் தானஞ் செய்தபலனை அடைவான். மஹாபாக்கியமுள்ளவனே! அந்தத் தீர்த் தத்தில் தாமரைமலர் முத்திரை இடப்பட்ட நாணயங்கள் இன்றும் காணப்படுகின்றன. பகைவரையடக்குபவனே! அது ஆச்சரியம். குருநந்தன! மூவிலைச் சூல அடையாளமுள்ள தாமரை மலர்கள் காணப்படுகின்றன. மனிதருட்சிறந்தவனே! அங்கே மஹாதேவ

னுடைய ஸாந்நித்யம் இருக்கின்றது. பரதர்களுள் சிறந்தவனே! அடைவதற்கு அரியதும் கடலும் ஸிந்துநதியும் கூடுவதுமான இடத்தை அடைந்து மனம் அடக்கத்துடன் தீர்த்தராஜனான வருணனுடைய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் திருப்திசெய்து தன் தேஜஸினால் [1] ஜ்வலிக்கின்ற வருண லோகத்தை அடைகிறான். யுத்தத்தில் ஸ்திரமாயிருப்பவனே! தேவரான சங்குகர்ணேச்வரரை அர்ச்சித்து அச்வமேதயாக பலனுக்குப் பத்து மடங்கான பலனை அடைகிறானென்று புத்திமான்கள் கூறுகின்றனர். பரதர்களுள் சிறந்தவனே! சிறந்த கௌரவர்களுள் சிறந்தவனே! வலமாகச்சென்று மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதும் எல்லாப் பாவங்களையும் போக்குவதும் சமியென்னும் பெயர் வழங்குவதுமான தீர்த்தத்தை அடையவேண்டும். அந்தத் தீர்த்தத்தில் பிரம்மா முதலிய தேவர்கள் மஹேச்வரரை உபாஸிக்கிறார்கள். அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தேவகணங்களால் சூழப்பட்டிருக்கிற ருத்திரரை அர்ச்சித்தால் அர்ச்சிப்பவனுக்குப் பிறந்தது முதலுள்ள பாவம் அழிந்துவிடுகிறது. புருஷச்ரேஷ்டனே! இங்குள்ள [2] சமீதீர்த்தமானது எல்லாத் தேவர்களாலும் புகழப்பட்டிருக்கிறது. நரச்ரேஷ்டனே! பேரறிவுள்ளவனே! அரசனே! முற்காலத்தில் பிரபுவான விஷ்ணு தேவசத்ருக்களைக் கொன்றபின் சென்று சுத்தி செய்துகொண்டதான சமீ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் அச்வமேதபலனை அடைவான். தர்மங்களை அறிந்தவனே! பிறகு, துதிக்கப்பட்டிருக்கிற வஸோர்த்தாரைக்குச் செல்லவேண்டும். மனிதன் அங்கே செல்வதனாலேயே அச்வமேதபலனை அடைவான். கௌரவர்களுள் சிறந்தவனே! ஒருவன் மனத்தை அடக்கினவனும் இந்திரியங்களை அடக்கினவனுமாகி அதில் நீராடித் தேவர்களையும் பித்ருக்களையும் திருப்தி செய்தால் விஷ்ணுலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். பரதச்ரேஷ்டனே! இந்தத் தீர்த்தத்தில் வஸுக்களுடைய புண்ணியமான தடாகம் இருக்கிறது. ஒருவன் அதில் ஸ்நானம் செய்தும்

---

1 'தீப்யமாநஃ' என்ற பாடங்கொண்டு, 'ஜ்வலிக்கின்றான்' என்பது இங்கிலிஷ மொழிபெயர்ப்பு.

2 'சமீச' என்பது மூலம், 'சமீ ச' என்று சகாரம் கொடுத்திருப்பதனால், சமீ, அங்குள்ள மரமாயிருக்கலாமென்றும் அதனாலேயே அந்தத் தீர்த்தத்துக்கு, சமீதீர்த்தமென்று பெயர் வந்திருக்கலாமென்றும் தோன்றுகிறது.

தீர்த்தத்தைப் பானம் பண்ணியும் வஸுக்களுக்குப் பிரியனுவான். நரஶ்ரேஷ்டனே! எல்லாப்பாவங்களையும் போக்குவதான ஸிந்தூத்தமம் என்கிறப்ரஸித்தமான தீர்த்தம் இருக்கிறது. ஒருவன் அதில் ஸ்நானம் செய்து அநேக ஸுவர்ணங்களைத் தானஞ்செய்த பலனை அடைவான். ஒருவன் பரிசுத்தனாகி நன்னடையுடன் பிரமம் தீர்த்தத்தை அடைந்து (ஸ்நானம் செய்தால்) பிரமமலோகத்தை அடைவதுடன் உத்தமமான கதியையும் அடைவான். ஸித்தர்களாலே அடையப்பட்ட இந்திரனுடைய குமாரிகளின் தீர்த்தம் இருக்கிறது. ஒருவன் அதில் ஸ்நானஞ்செய்தால் விரைவில் ஸ்வர்க்கலோகத்தை அடைவான். அந்த இடத்திலேயே ஸித்தர்களால் அடையப்பட்ட ரேணுகையின் தீர்த்தம் இருக்கிறது. ஒரு பிராம்மணன் அதில் ஸ்நானம் செய்தால் சந்திரன் போல நிர்மலனுவான். பிறகு, ஒருவன் நியமமுள்ளவனுகவும் நியமமான ஆகாரமுள்ளவனுகவும் பஞ்சநத்தத்தையடைந்து ஒன்றின்பின் ஒன்ருகச் சொல்லப்பட்ட ஐந்துயாகங்களின் பலனை அடைகிருன். ராஜஶ்ரேஷ்டனே! பிறகு, ஒருவன் உத்தமமான பீமையினுடைய ஸ்நானத்தை அடையவேண்டும். பரதர்களுள் சிறந்தவனே! அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் பிறவியில் பிறக்கமாட்டான். அரசனே! ஒரு மனிதன் புடமிட்ட பொன்னுலாகிய குண்டலங்களை அணிந்து தேவியின் புத்திரனுவான்; லக்ஷம் பசுக்களைத் தானம் செய்த பலனையும் அடைவான். ஒருவன் மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற கிரிகுஞ்சத்தை அடைந்து பிரம்மதேவரை வணங்கினுல் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனைப் பெறுவான். தர்மங்களை அறிந்தவனே! பிறகு ஒருவன் பொன்னிறமுடைய வெள்ளி நிறமுமுள்ள மீன்கள் இப்பொழுதும் காணப்படுகின்ற உத்தமமான விமலமென்கிற தீர்த்தத்தைக்குறித்துச் செல்லவேண்டும். ஒருவன் அதில் ஸ்நானம் செய்து இந்திரலோகத்தை விரைவில் அடைவான்; எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுச் சுத்தனுகிச் சிறந்த கதியை அடைவான். பரதவம்சத்தில் பிறந்தவனே! ஒருவன் விதஸ்தையை அடைந்து பிதருக்களுக்கும் தேவர்களுக்கும் நன்கு தர்ப்பணம் செய்து வாஜபேயத்தின் பலனை அடைகிருன். காஶ்மீரதேசத்திலேயே தக்ஷகன் என்கிற ஸர்ப்பத்துக்கு இருப்பிடமும் எல்லாப்பாவங்களினின்றும் விடுவிப்பதும் விதஸ்தை

எனகிறபெயரினுல் பரஸிததிபெற்றதுமான தீர்ததம இருககிறது. ஒருவன அதில ஸநானமசெய்து நிசசயமாக வாஜபேய யாகததின பலனை அடைவான. எல்லாபபாவஙகளினின்றும் விடுபட்டுச சுததனுகிச சிறநதகதியையும் அடைவான. பிறகு, ஒருவன் மூவுலகஙகளிலும பிரஸிததிபெற்ற மலையை அடையவேணடும. அரசனே! ஸாயஸந்தியாகாலததில விதிபபடி அதில ஸநானம் செயது தன சகதிக்குததக்கவாறு அகனிககுச் [1] சருவை நிவேதனம செய்யவேணடும. விதவான்கள பிதருககளுக்கு (அஙகே செய்யபபடும) தானததை அக்ஷயமானதாகச் சொலலுகிறார்கள. மனிதர்களுககுததலைவனே! ரிஷிகளும பிதருக்களும தேவர்களும கநதாவர்களுடைய கூட்டஙகளும அப்ஸரஸ்ஸுகளுடைய கூட்டங்களும குஹயகர்களும கினனரர்களும யக்ஷர்களும ஸிததர்களும் விதயாதரர்களும மனிதர்களும ராக்ஷஸர்களும தைதயர்களும் ருதரர்களும் பிரமமாவும நியமமுளளவர்களாக ஆயிரம வருஷ காலம் சிகரற்றதீக்ஷையை அடைந்து விஷ்ணுவுக்கு அருள்வரச் செய்பவர்களாகி அப்படியே சருவையும நன்கு பக்குவமசெய்து (நிவேதனம செய்தார்கள்.) ஏழு ஏழு ரிக்குக்களால கேசவரை ஸதோததிரம செய்தார்கள கேசவரோ, ஸந்தோஷமடைநது, அவர்களுககு எட்டுமடஙகான ஐஶ்வர்யததைக் கொடுததார். வேநதே! அந்தத்தேவர் மற்றும் அவர்கள விரும்பியவற்றையும் விரும்பினவணணம கொடுதது மேகங்களில் மினனல் மறைவதுபோல அவ்விடததிலேயே மறைநதுவிட்டார். பரதவமசததில் பிறநதவனே! அதனுல், (அநதத தீர்ததம) உலகஙகளில ஸபதசரு என்கிற பெயரினுல் ப்ரஸிததிபெற்றதாயிறறு. அநத இடததில அகநிக்குச சருவை நிவேதனமசெய்வது லக்ஷம பசுககளின் தானததைக்காட்டிலும் நூறு ராஜஸூய யாகஙகளைககாட்டிலும் ஆயிரம் அஶ்வமேதஙகளைககாட்டிலும மேன்மையுள்ளது. ராஜஶ்ரேஷ்டனே! பிறகு, அங்கிருந்து திருமபி ருதராபததை அடையவேணடும. ஒருவன் அஙகே மஹாதேவரை ஆர்ச்சிதது அஶ்வமேதபலனை அடைவான். அரசனே! ஒருவன் மணிமான் எனகிற தீர்ததததை

[1] தேவர்களையாவது பிதருககளையாவது உததேசிதது வைதிகாக்நியில விதிபபடி யவை அலலது நெலலரிசியில் பாலவிட்டுப பககுவஞ்செயயபபடுவதும் கஞ்சிவடியாததும பககுவமானதும சூடாறினதுமான அனனம்.

அடைந்து ஸ்நானஞ்செய்து பிரமசர்யமுள்ளவனாகவும் மனமடக்க முள்ளவனாகவும் ஓர் இரவு அங்கு வஸித்ததனால் அக்நிஷ்டோமபலனை அடைவான். ராஜேந்திரனே! பரதஸ்ரேஷ்டனே! பிறகு, ஒருவன் பிராம்மணர்களுக்கு உத்பத்தி ஸ்தானம் என்று கேட்கப்படுவதும் உலகங்களில் ப்ரஸித்திபெற்றதுமான தேவிகையைக் குறித்துச் செல்லவேண்டும். மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற திரிசூல பாணியினுடைய ஸ்தானமும் (அங்கு) இருக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! ஒருவன் தேவிகையில் ஸ்நானஞ்செய்து மஹேச்வரனை நன்கு பூஜித்து அந்தப் பூஜையில் சக்திக்குத்தக்கவாறு சருவை நிவேதனஞ் செய்தால் விரும்பின எல்லாம் நிரம்பின யாகத்தினுடைய பலனை அடைகிறான். பரதவம்சத்தில் உதித்தவனே! அந்த இடத்தில், தேவர்களால் அடையப்பட்டிருக்கிற காமமென்று பெயர்பெற்ற ருத்ரருடைய தீர்த்தம் இருக்கிறது. ஒருவன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சீக்கிரம் ஸித்தியை அடைகிறான். (அங்குள்ள) யஜனம், யாஜனம், ப்ரம்மவாலுகம், புஷ்பாம்பஸ் என்கிற தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்த மனிதன், மரணமடைந்த பிறகு, துக்கிக்கவேண்டாம். தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்டதும் புண்யமுமான இந்தத் தேவிகையை அரையோஜனை அகலமுள்ளதும் ஐந்துயோஜனை நீளமுள்ளதுமாகவென்று சொல்லுகிறார்கள். தர்மத்தை அறிந்தவனே! பிறகு, வரிசைப்படி தீர்க்கஸத்ரத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்த இடத்தில் பிரம்மா முதலிய தேவர்களும் ஸித்தர்களும் நிகரில்லாத ரிஷிகளும் தீக்ஷைபெற்றவர்களாகவும் தவறாத விரதமுள்ளவர்களாகவும் தீர்க்கஸத்ரமென்னும் யாகத்தைச்செய்கிறார்கள். ராஜேந்திரனே! பகைவரை அடக்குபவனே! பரதவம்சத்தில் உதித்தவனே! ஒருவன் தீர்க்கஸத்ரமென்னும் அந்த இடத்தை அடைவதனாலேயே ராஜஸூயத்தாலும் அஸ்வமேதத்தாலும் உண்டாகக்கூடிய பலனைப் பெறுகிறான். பிறகு, ஒருவன் மேருவின்மேல் எந்தவிடத்தில் ஸரஸ்வதீ நதியானது பூமியினுள் மறைந்து ஓடி, பிறகு சமஸத்திலும் சிவோத்பேதத்திலும் நாகோத்பேதத்திலும் காணப்படுகிறதோ அந்த விநசனத்தை நியமமுள்ளவனும் ஆகாரவரையறையுள்ளவனுமாக அடையவேண்டும். நரஸ்ரேஷ்டனே! அதில் ஸ்நானஞ்செய்பவன் சந்திரன்போல எப்பொழுதும் பிரகாசிக்கிறான். சமஸோத்பேதத்தில் ஸ்நானஞ்செய்பவன் அக்நிஷ்டோமபலனை அடைகிறான். ஒரு மனிதன்

சிவோத்பேதத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்தபலனை அடைகிறான். ஒருமனிதன் நாகோத்பேதத்தில் நீராடினால் நாகலோகத்தை அடைவான். ராஜேந்திரனே! பாரத! மஹாராஜனே! நரஶ்ரேஷ்டனே! ஸரஸ்வதிநதியில் எந்தச் சசயான தீர்த்தத்தில் நூறு வருஷங்களாகத் தாமரை மலர்கள் கார்த்திகை மாதத்துப் பூர்ணிமைதோறும்[1] பலநிறமுள்ளவையாகக் காணப்படுகின்றனவோ அடைதற்கரிதான அந்தத் தீர்த்தத்தை ஒருவன் அடைந்து அதில் ஸ்நானம் செய்து எப்பொழுதும் சந்திரன் போலப் பிரகாசிக்கிறான்; பரதரேறே! ஆயிரம் பசுக்களைத் தானம் செய்வதால் விளையும் பலனையும் அடைவான். குருநந்தனனே! ஒருவன் நியமமுள்ளவனாகக் குமாரகோடி தீர்த்தத்தை அடைந்து பிதருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில் பற்றுதலுள்ளவனாகி அதில் நீராடக்கடவன்; அவன் பதினாயிரம் பசுக்களைத் தானஞ்செய்த பலனை அடைவதுடன் குலத்தையும் நன்கு கரையேற்றுவான். தர்மங்களை அறிந்தவனே! பிறகு, அடக்கமுள்ளவனாக ருத்ரகோடியைக் குறித்துச் செல்லவேண்டும். மஹாராஜனே! முற்காலத்தில் அந்த இடத்தில் கோடிரிஷிகள் பெருமகிழ்ச்சியுடன் ருத்ரரைத்தரிசிக்கும் விருப்பத்தால் கூடினார்கள். பாரத! அரசனே! ரிஷிகள், 'விருஷபத்வஜரை நான் முந்திப் பார்ப்பேன்; நான் முந்திப் பார்ப்பேன்' என்று இவ்வண்ணம் புறப்பட்டு வந்தார்களாம். பூமிக்கு நாதனே! பிறகு, மனத்தை அடக்கினவர்களான அந்த ரிஷிகளின் விவாதம் ஒழிவதற்காக யோகீசுவரரால் யோகத்தை அடைந்து உண்டுபண்ணப்பட்ட கோடிருத்ரர்கள் (அந்த) ரிஷிகளின் முன்னிலையில் வந்து நின்றார்கள். அந்த ரிஷிகள், 'ருத்ரர் என்னாலேயே முதல் முதலில் பார்க்கப்பட்டார்' என்று தனித்தனியாக நினைத்தார்கள். அரசனே! மஹாதேவர் மனத்தை அடக்கினவர்களான அந்தரிஷிகளுடைய உத்தம பக்தியினால் மகிழ்ந்து அவர்களுக்கு, 'இன்றுமுதல் உங்களுக்குத் தர்மப் பெருக்கம் உண்டாகும்' என்று வரன் அளித்தார். நரஶ்ரேஷ்டனே! ஒரு மனிதன் சுத்தனாக அந்த ருத்ரகோடியில் ஸ்நானம் செய்து அஶ்வமேதபலனைப் பெறுவதுடன் குலத்தையும் நன்கு கரையேற்றுவான். ராஜேந்திரனே!

[1] சிறிது வேறுபாடங்கொண்டு, 'ஸாரஸப்பறவைகள் சசங்களில் மறைந்துபோய வருஷந்தோறும் கார்த்திகைப் பூர்ணிமையில் காணப்படுகின்றன' என்பது இங்கிலிஷ்மொழிபெயர்ப்பு.

பிறகு, எந்தத் தீர்த்தத்தில் பிரம்மாவை முதன்மையாகக் கொண்ட தேவர்களும் தவத்தைத் தனமாகக் கொண்ட ரிஷிகளும் கேசவனை உபாஸிப்பதற்காகச் சித்திரைமாதத்து வளர்பிறைச் சதுர்த்தசியில் வருகிறார்களோ, மிகப் புண்யமானதும் உலகத்தில் ப்ரஸித்திபெற்றது மான அந்த ஸரஸ்வதியினுடைய ஸங்கமத்தை அடையவேண்டும். நரஶ்ரேஷ்டனே! ஒருவன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பல ஸுவர்ணங்களைத் தானஞ்செய்த பலனை அடைவான்; எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுச் சுத்தமான ஆத்மாவுடன் பிரம்மலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! ஒரு மனிதன் எந்த இடத்தில் ரிஷிகளுடைய ஸத்ர யாகங்கள் நிறைவேறினவோ அந்த ஸரஸ்வதி ஸங்கமத்தை அடைந்து ஆயிரம் பசுக்களைத் தானம்செய்வதன் பலனை அடைவான்.

---

எண்பத்தோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(புலஸ்தியர் பற்பல தீர்த்தங்களின் மகிமையைப் பீஷ்மருக்குச் சொல்லியது.)**

ராஜேந்திரனே! பிறகு, ஒருவன், (எல்லாராலும்) புகழப்பட்ட [1] குருக்ஷேத்திரத்தை அடையவேண்டும். அந்தக் குருக்ஷேத்திரத்தை அடைந்த எல்லா ப்ராணிகளும் பாவங்களினின்று விடப்படுகின்றன. எவன், 'நான் குருக்ஷேத்திரம் செல்வேன்; குருக்ஷேத்திரத்தில் வஸிப்பேன்' என்று இவவண்ணம் எப்பொழுதும் சொல்வனோ அவனும் பாவங்களால் விடப்படுகிறான். குருக்ஷேத்திரத்தில் காற்றினால் தூற்றப்பட்ட புழுதிகளும் (மேனியில் பட்ட மாத்திரத்திலேயே) பாவச் செயலுள்ளவனையும் மேலான கதியை அடையச் செய்கின்றன. ஸரஸ்வதீ நதிக்குத் தெற்கிலும் தருஷத்வதீ நதிக்கு வடக்கிலுமுள்ள குருக்ஷேத்திரத்தில் எவர்கள் வஸிக்கிறார்களோ அவர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிக்கிறார்கள். போர் புரிபவர்களுள் உத்தமனே! பூபதியே! பாரத! தீரனாயிருப்பவன் எந்தக் குருக்ஷேத்திரத்தில் ப்ரம்மாதி தேவர்களும் ரிஷிகளும் ஸித்தர்களும் சாரணர்

---

1 'பாவத்தைப் போக்கிக் காப்பாற்றுவதனாலே குருக்ஷேத்ரம் என்றாயிற்று' என்பது பழையவுரை.

களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் யக்ஷர்களும் பன்னகர்களும் மிக்க புண்ணியமான [1] ப்ரம்ம க்ஷேத்திரத்தைக் குறித்து வருகின்றார்களோ அந்தக் குருக்ஷேத்திரத்தில் ஸரஸ்வதிநதிக்கரையில் ஒரு மாதம் வஸிக்க வேண்டும். யுத்தம் செய்பவர்களுள் சிறந்தவனே! குருக்ஷேத்திரத்தை அடைய மனத்தினால் விரும்புகிறவனுக்கும் பாவங்கள் தொலைகின்றன. அவன் பிரம்மலோகத்தையும் அடைகிறான். கௌரவர்களுள் சிறந்தவனே! ஒரு மனிதன் ச்ரத்தையுடன் குருக்ஷேத்திரத்தை அடைந்து ராஜஸூயயாகத்தாலும் அஸ்வமேத யாகத்தாலும் உண்டாகும் பலனை அடைகிறான். அரசனே! பிறகு, வாயில் காப்பவனும் மஹாபலசாலியுமான மந்துகன் என்கிற யக்ஷனை நமஸ்கரிப்பதனாலேயே ஆயிரம் பசுக்களைத் தானஞ்செய்த பலனை அடைவான். தர்மங்களை அறிந்தவனே! ராஜேந்திரனே! பிறகு, ஒருவன் எந்த இடத்தில் ஹரியானவர் ஸாந்நித்தியம் செய்கிறாரோ அந்த ஸததமென்கிற ப்ரஸித்தமான விஷ்ணுவினுடைய சிறந்த ஸ்தானத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்த இடத்தில் ஸ்நானம் செய்தும் மூவுலகங்களுக்கும் காரணமாயிருக்கிற ஹரியை அர்ச்சித்தும் அச்வமேத யாகத்தின் பலனை அடைவதுடன் விஷ்ணுலோகத்தையும் அடைகிறான். பாரத! ஒருவன், பிறகு, மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற பாரிப்லவமென்கிற தீர்த்தத்தை அடையவேண்டும். அவன் அக்னிஷ்டோமத்தாலும் அதிராத்ரத்தாலும் உண்டாகும் பலனை அடைகிறான். ஒருவன் ப்ருதிவீதீர்த்தத்தை அடைந்து ஆயிரம் பசுக்களைத் தானஞ்செய்த பலனை அடைவான். நராதிபனே! தீர்த்தயாத்திரை செய்பவன், பிறகு, சாலூகினியை அடைந்து தசாச்வமேத தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து (அந்தப்) பத்து அச்வமேத யாகங்களின் பலனையே அடைவான். ஒருவன் ஸர்ப்பதர்வி என்கிற நாகங்களுடைய உத்தம தீர்த்தத்தை அடைந்து (ஸ்நானஞ்செய்தால்) அக்னிஷ்டோம யாக பலனை அடைகிறான்; நாகலோகத்தையும் அடைகிறான். தர்மங்களை அறிந்தவனே! ஒருவன், பிறகு, த்வாரரக்ஷகனான அருந்துகனை அடையவேண்டும். அந்த இடத்தில் ஓர் இரவு வாஸம் செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனை அடைவான். பிறகு, பஞ்சநதத்தையடைந்து நியமமுள்ளவனாகவும் நியதமான ஆகாரமுள்ளவனாகவும் கோடிதீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணி அச்வமேதயாகத்தின் பலனைப் பெறுவான்.

---

1 'பிரம்மத்தை அடைதற்கிடமான குருக்ஷேத்திரத்தை' என்பது பழைய வுரை.

அப்ஸரஸ்களுடைய தீர்த்தத்தையடைந்து ஸ்நானம் செய்து நல்ல ரூபமுள்ளவனாகிறான். தர்மங்களையறிந்தவனே! ஒருவன், பிறகு, எந்த இடத்தில் எங்கும் வ்யாபித்தவரான விஷ்ணுவானவர் வராஹவடிவத்துடன் இருந்தாரோ அந்த உத்தமமான வாராஹ தீர்த்தத்தை அடையவேண்டும். நரஸ்ரேஷ்டனே! அந்தத் தீர்த்தத்தில் நீராடி அக்னிஷ்டோமபலனைப் பெறுவான். ராஜேந்திரனே! பிறகு, ஜயந்தியில் ஸோமதீர்த்தத்தை அடையவேண்டும். ஒரு மனிதன் அதில் ஸ்நானஞ்செய்து ராஜஸூயயாகபலனை அடைகிறான். ஒரு மனிதன் ஏகஹம்ஸத்தில் ஸ்நானஞ்செய்து ஆயிரம் கோதானபலனை அடைகிறான். நராதிபனே! தீர்த்தயாத்திரை செய்பவன் கிருதசௌசத்தை அடைந்து பௌண்டரீக யாகபலனை அடைகிறான்; சுத்தி செய்து கொண்டவனுமாவான். அதற்குப் பிறகு, மஹாத்மாவான ஸ்தாணுவினுடைய முஞ்சவடமென்கிற ஸ்தானத்தை அடைந்து அந்த இடத்தில் ஓரிரவு உபவாஸமிருந்து கணநாதருக்குத் தலைமையைப் பெறுகிறான். மஹாராஜனே! அந்த இடத்திலேயே உலகத்தில் கியாதிபெற்ற ஒரு [1] யக்ஷிணி இருக்கிறாள். ராஜேந்திரனே! அவளை அடைந்து வணங்குதல் விரும்பின எல்லாவற்றையும் அடைவான். பரதஸ்ரேஷ்டனே! ராஜனே! அது குருக்ஷேத்திரத்திற்குப் பிரஸித்திபெற்ற வாயிலாக இருக்கிறது. தீர்த்தயாத்திரை செய்பவன் மன அடக்கத்துடன் அதைப் பிரதக்ஷிணமாகச் சுற்றிவந்து புஷ்கரங்களுக்கு ஸமமான அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிதருதேவதைகளை அர்ச்சித்துக் கிருதகிருத்யன் ஆவான்; அச்வமேதபலனையும் அடைகிறான். அந்தத் தீர்த்தமானது பெரிய மஹாத்மாவும் ஜமதக்நிகுமாரருமான பரசுராமரால் உண்டுபண்ணப்பட்டது. தீர்த்தயாத்திரை செய்பவன், பிறகு, மன அடக்கத்துடன் ராமஹ்ரதங்களை அடையவேண்டும். ராஜேந்திரனே! நரஸ்ரேஷ்டனே! ஜ்வலிக்கிற தேஜஸுள்ளவீரரான பரசுராமராலே அந்த இடத்தில் பலத்தினால் க்ஷத்திரியர்களைக்கொன்று அவர்களுடைய ரக்தத்தால் நிறைத்து ஐந்துமடுக்கள் அமைக்கப்பட்டனவென்று நாம் கேட்டிருக்கிறோம். (அந்த இரத்தத்தால்) பிதருக்களும், அவ்வாறே, பிரபிதாமஹர்களுமான அனைவரும் தருப்தி செய்யப்பட்டார்கள். நராதிபனே! பிறகு, அந்தப் பித

---

1 'யக்ஷிணீ' என்பதுமூலம், 'யக்ஷிணீம்' என்ற பாடங்கொண்டு 'யக்ஷிணீ தீர்த்தம்' என்பது இங்கிலீஷ் மொழிபெயர்ப்பு.

ருக்கள் ப்ரீதியடைந்து ராமரைப்பார்த்து, 'ராம! ராம! மஹாபாக்கிய முள்ளவனே! ப்ருகுநந்தனனே! ப்ரபுவே! உன்னுடைய இந்தப் பித்ருபக்தியினாலும் விக்ரமத்தினாலும் உன் விஷயத்தில் த்ருப்தி அடைந்தவர்களாக இருக்கிறோம். மிக்க காந்தியுள்ளவனே! வரத்தைக் கேட்பாயாக. உனக்கு மங்களம். எதை விரும்புகிறாய்?' என்று வினவினார்கள். ராஜஸ்ரேஷ்டனே! இவ்வாறு சொல்லக் கேட்டவரும் அடிப்பவர்களுள் சிறந்தவருமான அந்தப் பரசுராமர், இரு கைகளையும் குவித்துக்கொண்டு, ஆகாயத்தில் நிற்கின்ற பித்ருக்களைப் பார்த்து, 'நீங்கள் என்விஷயத்தில் ப்ரீதியுள்ளவர்களாகில், என்னிடத்தில் (தங்களால்) அநுக்ரஹிக்கப்படத்தக்க தன்மையும் இருந்தால், பித்ருக்களுடைய அருளால் மீண்டும் தவத்தையும் நல்ல வேதாத்தியயனத்தையும் விரும்புகிறேன். மேலும், நான் கோபவசப்பட்டு க்ஷத்திரியர்களைக்கொன்ற பாவத்தினின்றும் உங்களுடைய தேஜஸினால் விடுபடக்கடவேன். என்னால் உண்டுபண்ணப்பட்ட ரக்தமடுக்களும் பூமியில் பிரசித்தியுள்ள தீர்த்தங்களாகவேண்டும்' என்று வேண்டிக்கொண்டார். பித்ருக்கள். ராமருடைய இந்த மங்களவாக்கியத்தைக்கேட்டு, அப்பொழுது அதிக ப்ரீதியடைந்தவர்களாகவும் ஸந்தோஷத்துடன் கூடியவர்களாகவும் ராமரைப் பார்த்து, 'பித்ருபக்தியினால் உன்னுடைய தவமானது மீண்டும் விசேஷமாக விருத்தியடையட்டும். நீ கோபத்துக்கு வசப்பட்டு க்ஷத்ரியர்களைக்கொன்ற பாவத்தினின்றும் விடுபட்டுவிட்டாய். அவர்கள் தங்கள் கர்மங்களாலேயே மாண்டார்கள். உன்னாலுண்டு பண்ணப்பட்ட மடுக்களும் தீர்த்தங்களாகும். இதில் ஸம்சயமில்லை. எந்த மனிதன் அந்த மடுக்களில் ஸ்நானம்செய்து பித்ருக்களுக்கு நன்கு தர்ப்பணம் செய்வானோ அவனுக்குப் ப்ரீதியடைந்தபித்ருக்கள் பூமியில் கிடைத்தற்கரியதும் விரும்பப்பட்டதுமான மனோபீஷ்டங்களையும் சாஸ்வதமான ஸ்வர்க்கத்தையும் கொடுப்பார்கள்' என்று மறுமொழி கூறினார்கள். அரசனே! ராமருடைய பித்ருக்கள் இவ்வாறு வரங்களைக்கொடுத்து அப்பொழுது மகிழ்ச்சியுடன் பார்க்கவரான அவரிடம் விடைபெற்றுக்கொண்டு அங்கேயே மறைந்தார்கள். மகாத்மாவான பார்க்கவருடைய ராமஹ்ரதங்கள் இப்படிப் புண்யமானவை. ராஜேந்திரனே! ஒருவன் பிரமசர்யமுள்ளவனும் சுத்தவிரதமுள்ளவனுமாகி ராமஹ்ரதங்களில் ஸ்நானம்செய்து ராமரைப் பூஜித்துப் பல பொன்னையங்களைத்

தானஞ்செய்தபலனை அடைவான். கௌரவர்களைத் தாங்குபவனே! அரசனே! தீர்த்தயாத்திரை செய்பவன் வம்சமூலகத்தை அடைந்து அந்த வம்சமூலகத்தில் ஸ்நானஞ்செய்து தன் வம்சத்தைக் கரை யேற்றுவான். பரதர்களுள் மிக்க சிறந்தவனே! காய சோதன மென்கிற தீர்த்தத்தை அடைந்து, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தவனுக்குச் சரீரசுத்தி உண்டாவது திண்ணம். (அவன்) சுத்ததேகமுள்ளவனாகி மங்களகரமானவையும் எல்லாவற்றிலும் சிறந்தவையுமான உலகங்களையும் அடைகிறான். தர்மங்களை அறிந்த வனே! ஒருவன், பிறகு, முற்காலத்தில் எந்த இடத்தில் பிரபுவான விஷ்ணுவினால் உலகங்கள் மேலே தூக்கப்பட்டனவோ மூவுலகங்களி லும் பிரஸித்திபெற்ற அந்த தீர்த்தத்தைக் குறித்துச் செல்ல வேண்டும். அரசனே! மூவுலகத்தாராலும் பூஜிக்கப்பட்ட லோகோத்தாரமென்கிற அந்தத் தீர்த்தத்தை அடைந்து அந்த உத்தமதீர்த்தத்தில் நீராடித் தனக்குச் சிறந்த உலகங்களைப் பெறு கிறான். ஸ்ரீதீர்த்தத்தையுமடைந்து மன அடக்கத்துடன் ஸ்நானம் செய்து பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சித்து உத்தமமான ஸ்ரேயஸை அடைகிறான். பிரம்மசர்யமுள்ளவனும் மனத்தை ஒருவழிப்படுத்தினவனுமான மனிதன் கபிலாதீர்த்தத்தை அடைந்து அதில் ஸ்நானஞ்செய்து தன் பிதருக்களையும் தேவதைகளையும் அர்ச் சித்து ஆயிரம் கபிலைப் பசுக்களின் தான பலனை அடைகிறான். ஸூர்யதீர்த்தத்தை அடைந்து மனத்தை நன்கு அடக்கிக்கொண்டு அதில் ஸ்நானம் செய்து பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சித்து உபவாஸமிருப்பவன் அக்நிஷ்டோம பலனை அடைகிறான்; ஸூர்ய லோகத்தையும் அடைகிறான். தீர்த்தாடனம் செய்பவன் கிரமப்படி கோபவனம் என்கிற தீர்த்தத்தை அடைந்து அதில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதானபலனை அடைகிறான். கௌரவர் களைத் தாங்குபவனே! தீர்த்த யாத்திரை செய்கின்ற மனிதன் சங்கினீ தீர்த்தத்தையடைந்து தேவீதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உத்தமமான ரூபத்தைப் பெறுகிறான். ராஜேந்திரனே! பிறகு, துவாரபாலகனை அருந்துகனை அடையவேண்டும். ஸரஸ்வதியில் மஹாத்மாவான யக்ஷராஜனுடைய அந்தத் தீர்த்தம் இருக்கிறது. அரசனே! மனிதன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து அக்னிஷ் டோமபலனை அடைவான். ராஜேந்திரனே! மனிதர்களுள் சிறந்தவ னை ஒருவன் பிறகு, பிரம்மாவர்த்தத்தை அடையவேண்டும். அந்த மனிதன் பிரம்மாவர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிரம்மலோகத்தை

அடைவான. ராஜேந்திரனே! ஒருவன், பிறகு, ஸர்வோத்தமமான ஸுதீர்த்தத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்த இடத்தில் பித்ருக்கள் தேவதைகளுடன் நித்யம ஸாந்நித்யம் செய்கிறார்கள். ஒருமனிதன அந்தத் தீர்த்தத்தில ஸ்நானஞ் செய்யக்கடவன. அவன் பித்ருக்களையும் தேவர்களையும் [1] அர்ச்சிப்பதில பற்றுள்ளவனாகி அஸ்வமேத பலனை அடைகிறான்; பித்ருலோகத்தையும் அடைகிறான. தர்மங்களை அறிந்தவனே! அதனால், அம்புமதியிலுள்ள ஸுதீர்த்தம் எல்லாவற்றிலும் சிறந்ததாகும. பரதர்களுள் சிறந்தவனே! கோசேஸ்வரனுடைய தீர்த்தங்களில ஸ்நானம் செய்பவன எல்லா நோய்களினின்றும் விடுபட்டு பிரமமலோகத்தில பூஜிக்கப் படுகிறான. பாரத! அரசனே! அந்த இடத்திலேயே மாத்ருதீர்த்தம இருக்கிறது. அந்தத்தீர்த்தத்தில ஸ்நானம் செய்தவனுக்கு ஸந்ததியானது விசேஷமாக விருத்தியடைகிறது. அவன் பெருஞ்செல்வத்தை அடைகிறான. மகாராஜனே! பிறகு, மனிதன் நியமமுள்ளவனும ஆகாரநியமமுள்ளவனுமாகிய பெரிதும் வேறிடத்தில கிடையாததுமான அங்குள்ள சீதவனம் என்கிற தீர்த்தத்தை அடையவேண்டும். நராதிபனே! அந்தத் தீர்த்தத்தைநோக்கிச் செல்வதனாலேயே மனிதன் தன் ஒரு குலத்தைப் பரிசுத்தம செய்கிறான. பாரத! அந்தத் தீர்த்தத்தைத் தலைமயிர்களில [2] தெளித்துக் கொண்டால் பரிசுத்தனாகிறான். மகாராஜனே! நரஸ்ரேஷ்டனே! பரதர்களுள் மிகச் சிறந்தவனே! கற்றறிந்தவர்களும் தீர்த்தத்தில பற்றுதலுள்ளவர்களுமான பிராம்மணர்கள் எதில ஸ்நானம்செய்து உயர்ந்தகதியை அடைகிறார்களோ அந்த [3] ஸ்வானலோமாபஹம் எனனும தீர்த்தம அங்கு (இருப்பதாகக்) கருதப்பட்டது. பரதஸ்ரேஷ்ட! பிராமமணோத்தமர்கள் ஸ்வானலோமாபநயன தீர்த்தத்தில் பிராணாயாமங்களால தம தேகத்திலுள்ள ரோமங்

---

1 அர்ச்சித்து என்பது

2 ‘ அப்யுக்ஷ்ய ’ என்பது மூலம்; ‘நீராடி’ என்றும கொள்ளலாம். தெளித்தல மூன்றுவகைப்படும. 1 ப்ரோக்ஷணம—நிமிர்த்தகையால ஜலத்தைத் தெளித்தல, 2 அப்யுக்ஷணம—கையை வளைத்துப பக்கத்தால தெளித்தல்; 3 அவோக்ஷணம—கையைக்கவிழ்த்துத் தெளித்தல் என்பன ‘ க்ஷௌரம செய்து கொண்டு’ என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு

3 ‘ ஸ்வானலோமாப நயநம்’ என்பதும இதுவே. ‘ ஸ்வாவிலலோமாபஹம’ என்பது வேறுபாடம.

களை உதிர்நது போகும்படி செய்கின்றனர். ராஜேந்திரனே! ஆத்மா பரிசுத்தமாகி உததமகதியை அடைகின்றார்கள். பூமிக்கு அரசனே! அநதகதீாததகததில தசாய்வமேதிகம எனகிற தீர்தத மும இருக்கிறது. மனிதர்களுள சிறந்தவனே! ஒருவன் அதில் நீராடினால சிறந்தகதியை அடைவான. அரசர்களுள் சிறந்தவனே! அரசனே! பிறகு, எநத இடததில வேடனால நாற்புறங்களிலும் துனபுறுததபபட்ட கருமைநிறமுளள மான்கள் அங்குள்ள ஸர ஸில விழுந்து மனிதருபததை அடைநதனவோ அநத இடததில் உலகஙகளில பிரஸிநதிபெறற மானுஷமெனகிற தீர்ததததை அடையவேண்டும. ஒருமனிதன பிரமமசர்யததுடனும் மன அடக கத்துடனும அந்தத தீாததததில நீராடி, எலலாப்பாவஙகளினின்றும் விடுபட்டு ஆதமா சுததியடைநதவனாகி, ஸவாககலோகததில் பூஜிக் கப்படுகிறான். பூமிக்கு நாதனே! மானுஷதீர்ததததுக்குக கீழபுறத தில் ஒரு குரோசதூரததில புகழபெறறதும் ஸிததர்களால் அடையப பட்டதுமான ஆபகை என்கிற நதி இருககிறது. அந்த இடததில் எவன் தேவர்களையும பிதருக்களையும் உததேசிததுச சாமை அரிசி யினால்செய்த போஜனததை (ப்ராமமணாகளுக்குக்) கொடுக்கிறானோ அவனுககுப் பெரிதான தர்மபலன் உண்டாகிறது. (அங்கே) ஒரு பராமமணன் போஜனம செய்விககபபட்டால் கோடி ப்ராம்மணர் கள் போஜனம் செயவிக்கப்பட்டவர்களாகிறார்கள். ஒருவன் அந்த ஆபகா தீர்ததத்தில ஸநானமசெயது பிதருக்களையும் தேவதைகளை யும் அர்சசிதது ஓர இரவு அவ்விடததில் வாஸமசெய்தால் அக்நிஷ் டோமபலனைப் பெறுவான். ராஜேந்திரனே! பாரத! பிறகு, பூமியில் பிரம்மோதும்பரமெனனும பெயராலேயே விளஙகுகின்ற உததம மான பிரம்மாவினுடைய ஸதானததைக்குறிததுச செல்லவேண் டும். நரஶ்ரேஷ்டனே! ராஜேநதிரனே! அந்த இடததில் ஒரு வன் சுததனும் மிக்க மன அடககமுளளவனுமாக ஸபதரிஷி குண் டங்களிலும கபிஞசல மஹரிஷியினுடைய கேதாரத்திலும் ஸ்நானம் செய்து பிரம்மாவை வந்தனம செய்தால எல்லாப் பாவங்களினின் றும் விடுபட்டுப பரிசுததமான ஆதமாவுடன் பிரம்மலோகததை அடைகிறான. ஒருவன் கிடைகக மிகஅரிதான கபிஞ்சலருடைய கேதாரத்தை அடைந்து தவததினால் பாவங்களை எரிதது அந்தர்த தானததை (அதாவது, ஒருவர் கண்ணுக்கும புலப்படாமை என்னும் சக்தியை) அடைகிறான். ராஜேந்திரனே! ஒருவன், பிறகு, உலகங் களில் புகழ்பெற்ற சங்கரதீர்ததத்தைக்குறிததுச செல்லவேண்டும்.

கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் விருஷபத்வஜனைத் தரிசித்தால் விரும்பின எல்லாவற்றையும் அடைவதுடன் ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். குருநந்தன! அரசனே! சங்கர தீர்த்தத்திலும் ருத்ர கோடியிலும் அவ்வாறே கூபத்திலும் மடுக்களிலும் மூன்றுகோடி தீர்த்தங்கள் இருக்கின்றன. பரதஸ்ரேஷ்ட! அந்த இடத்திலேயே சுத்தாஸ்பதம் என்கிற தீர்த்தம் இருக்கிறது. அதில் ஸ்நானம் செய்தும் தேவதைகளையும் பித்ருக்களையும் அர்ச்சித்தும் மனிதன் நரகத்தை அடையான்; வாஜபேய யாகத்தின் பலனையும் அடைகிறான். அரசனே! பாரத! ஒரு மனிதன் கிந்தானத்திலும் கிஞ்சபயத்திலும் ஸ்நானம்செய்து அளவிடமுடியாத தானபலனையும் மந்திரஜபத்தின் பலனையும் அடைகிறான். ஒரு மனிதன் ச்ரத்தையுள்ளவனாயும் இந்திரியங்களை வசப்படுத்தினவனாயும் கலசீதீர்த்தத்தில் ஸ்நானம்செய்து அக்நிஷ்டோமயஜ்ஞ பலனைப் பெறுகிறான். குருகுலத்தவருள் உத்தமனே! சங்கர தீர்த்தத்திற்குக் கீழ்புறத்தில் மஹாத்மாவான நாரதருடைய அஜானந்தை என்கிற ப்ரஸித்தமான தீர்த்தம் இருக்கிறது. பரத வம்சத்தில் பிறந்தவனே! ஒரு மனிதன், அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால், பிராணனைவிட்ட பிறகு, நாரதரால் அனுமதி கொடுக்கப்பட்டவனாகி, மிகச் சிறந்த உலகங்களை அடைகிறான். சுக்லபக்ஷ தசமியில் புண்டரீக தீர்த்தத்தை அடையவேண்டும். அரசனே! ஒரு மனிதன் அதில் நீராடினால் பௌண்டரீக யாக பலனைப் பெறுவான். பிறகு, மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற த்ரிவிஷ்டபத்தைக்குறித்துச் செல்லவேண்டும். அந்த இடத்தில் பாவங்களைப் போக்குந் தன்மையுள்ள [1] வைதரணீ என்கிற புண்ணியநதி ஓடுகிறது. அதில் ஸ்நானஞ்செய்தும் சூலத்தைக் கையிலேந்திய வ்ருஷபத்வஜனை அர்ச்சித்தும், எல்லாப் பாவங்களும் விடுபட்டுப் பரிசுத்தனாகி உயர்ந்த கதியை அடைவான். ராஜ ஸ்ரேஷ்டனே! அவ்விடத்திலிருந்து உத்தமமான பலகீவனத்தைக் குறித்து யாத்திரை செய்யவேண்டும். வேந்தனே! தேவர்கள் அவ்விடத்தில் எப்பொழுதும் பலகீவனத்தை அடைந்து பல்லாயிர வர்ஷங்களாகப் பெருந்தவம் புரிகின்றார்கள். பாரத! மனிதன் த்ருஷத்வதியில் ஸ்நானம்செய்தும் தேவதைகளுக்குத் தர்ப்பணம் செய்தும் அக்நிஷ்டோமம் அதிராத்ரம் என்கிற யாகங்களின் பலனை அடைகிறான். பரதர்களுள் சிறந்தவனே!

[1] இது வேறு.

ராஜேந்திரனே! ஒரு மனிதன் ஸர்வதேவர்களுடைய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தும் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனைப் பெறுகிறான். பாரத! ஒரு மனிதன் பாணிகாதத்தில் ஸ்நானம் செய்தும் தேவதைகளைத் திருப்தி செய்தும் அக்நிஷ்டோமம் அதிராத்ரம் என்கிற யாகங்களின் பலனைப் பெறுகிறான்; ராஜஸூய யாக பலனையும் பெறுகிறான்; ரிஷிலோகத்தையும் அடைகிறான். ராஜஶ்ரேஷ்டனே! அவ்விடத்தினின்று உத்தமமான மிஶ்ரகமென்கிற தீர்த்தத்தைக் குறித்துச் செல்லவேண்டும். ராஜேந்திரனே! அரசருள் புலிபோன்றவனே! அந்த இடத்தில் மஹாத்மாவான வ்யாஸரால் பிராமணர்களுக்காகத் தீர்த்தங்கள் ஒன்றோடொன்று மிஶ்ரம்செய்ய (=சேர்க்க)ப்பட்டனவென்று நாம் கேட்டிருக்கிறோம். எந்த மனிதன் மிஶ்ரகத்தில் ஸ்நானம் செய்கிறானோ அவன் எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்தவனாகிறான். ஒரு மனிதன் நியமமுள்ளவனாகவும் நியமமான ஆஹாரமுள்ளவனாகவும் அந்தத் தீர்த்தத்திலிருந்து வ்யாஸவனத்தை அடையவேண்டும்; மனோஜவத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனை அடைவான். ஒரு மனிதன் சுத்தனாகத் தேவியின் ஸ்தானமான மதுவடியையும் அடைந்து அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தும் பித்ருக்களையும் தேவர்களையும் அர்ச்சித்தும், தேவியினால் நன்கு அநுக்ரஹிக்கப்பட்டவனாகி, ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனைப் பெறுவான். பாரத! கௌசிகீ த்ருஷத்வதீ என்கிற இரண்டு மஹாநதிகளின் ஸங்கமத்திலும் ஆகார நியமமுள்ளவனாகி ஸ்நானம் செய்கிறவன் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். அதற்கப்புறத்தில், எந்த க்ஷேத்திரத்தில் புத்திர சோகத்தால் எரிக்கப்பட்ட புத்திமானான வ்யாஸர் தேகத்தை விடுவதில் நிச்சயம் செய்து, பிறகு தேவர்களால் அப்பொழுது மீண்டும் தேகத்துடன் எழுப்பப்பட்டாரோ அந்த வியாஸஸ்தலி என்கிற க்ஷேத்ரம் இருக்கிறது. அந்த வியாஸருடைய ஸ்தலியை அடைந்து, ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பயனைப் பெறுவான். குருவம்சத்தைத் தாங்குபவனே! ஒருவன் கிந்தத்தம் என்கிற கிணற்றை அடைந்து ஒரு [1] பிரஸ்தம் எள்ளைத் தானம் செய்து, கடன்களால் விடுபட்டவனாகி உத்தமமான ஸித்தியை அடைவான்.

---

1 பன்னிரண்டு பிடி தானியம் கொண்டது ஒரு குடவம்; நான்கு குடவம் கொண்டது ஒரு பிரஸ்தம்.

ஒரு மனிதன் வேதீ தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம்செய்த பயனைப் பெறுவான். மனிதரில் சிறந்தவனே! அஹஸ் ஸுதினம் என்கிற இரண்டு தீர்த்தங்களும் உலகங்களில் பிரஸித்திபெற்றவை. அவைகளில் ஸ்நானம் செய்தால் ஸூர்யலோகத்தை அடைவான். அரசர்களுள் சிறந்தவனே! அந்தத் தீர்த்தத்தினின்று மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற மிருகதூமத்தை அடையவேண்டும்; அங்கே, கங்கையில் ஸ்நானம் செய்யவேண்டும்; மஹாதேவரை அர்ச்சித்தால் அச்வமேத யாகத்தின் பலனை அடைவான். ஒருமனிதன் தேவீ தீர்த்தத்தில் நீராடுதலால் ஆயிரம் கோதான பலனைப் பெறுவான். அந்தத் தீர்த்தத்தினின்று மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற வாமனதீர்த்தத்தை அடையவேண்டும். அந்த இடத்தில் விஷ்ணுபதத்தில் ஸ்நானம் செய்தும், வாமனரை அர்ச்சித்தும் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுத் தூயமனமுள்ளவனாகி விஷ்ணு லோகத்தை அடைகிறான். ஒரு மனிதன், பிறகு, குலம்புனத்தில் ஸ்நானம் செய்து தன் குலத்தைப் பரிசுத்தப்படுத்துகிறான். புருஷ ச்ரேஷ்டனே! பவனனுடைய மடுவில் ஸ்நானம் செய்து உத்தமமான மருத்துக்களுடைய தீர்த்தத்தை (அடைந்து) அதிலும் ஸ்நானம் செய்து விஷ்ணுலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். அமரர்களுடைய மடுவில் ஸ்நானம்செய்து அமராதிபனான இந்திரனை நன்கு அர்ச்சித்து அமரர்களுடைய ப்ரபாவத்தினால் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். சிறந்த மனிதருள் சிறந்தவனே! சாலிஹோத்ரருடைய சாலிசூர்ப்பம் என்கிற தீர்த்தத்திலும் விதிப்படி ஸ்நானம் செய்து ஆயிரம் கோதானபலனை அடைவான். பரதர்களுள் உத்தமனே! ஸ்ரீ குஞ்சமென்பது ஸரஸ்வதியினுடைய தீர்த்தம். புருஷ ச்ரேஷ்டனே! ஒருவன் அதில் ஸ்நானம் செய்தால் அக்நிஷ்டோமபலனைப் பெறுவான். கௌரவர்களைத் தாங்குபவனே! ராஜேந்திரனே! பிறகு, நைமிஷகுஞ்சத்தை அடையவேண்டும். ராஜ ச்ரேஷ்டனே! முற்காலத்தில் நைமிஷாரண்யவாஸிகளும் தபஸ்விகளுமான ரிஷிகள் தீர்த்தயாத்திரையை முன்னிட்டுக் கொண்டு குருக்ஷேத்திரத்தை அடைந்தார்களாம். ஒருமனிதன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வதால் அச்வமேதயாகத்தின் பலனை அடைவான். பரத ச்ரேஷ்டனே! பிறகு, ரிஷிகளுக்கு மகிழ்ச்சியை உண்டுபண்ணக்கூடிய பெரிய வெளியிருக்கும்படி ஸரஸ்வதியினுடைய (கரையில்) குஞ்சம் (=கொடிப்பந்தல்) உண்டு

பண்ணப்பட்டது. ஒரு மனிதன் அந்தக்குஞ்சத்தில் ஸ்நானம் செய்தால் அக்நிஷ்டோமபலனை அடைவான். தர்மங்களை அறிந்தவனே! ஒரு மனிதன் அவ்விடத்தினின்று ஸர்வோத்தமமான கன்யா தீர்த்தத்தை அடையவேண்டும்; கன்யா தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் ஆயிரம் கோதானபலனை அடைவான். ராஜேந்திரனே! அந்தத் தீர்த்தத்திலிருந்து உத்தமமான பிரம்ம தீர்த்தத்தை அடைய வேண்டும். தாழ்ந்தவர்ணத்தானான மனிதன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து பிராம்மணத் தன்மையை அடைகிறான். பிராம்மணனும் ஸ்நானம்செய்தால் ஆத்மா பரிசுத்தனாகி உத்தமகதியை அடைவான். மனிதருட் சிறந்தவனே! அந்தத் தீர்த்தத்தினின்று சிறப்புற்ற ஸோமதீர்த்தத்தை அடையவேண்டும். அரசனே! ஒரு மனிதன் அதில் ஸ்நானம்செய்தால் ஸோமலோகத்தை அடைவான். வேந்தே! ஒருவன், பிறகு, எந்தத் தீர்த்தத்தில் உலகத்தில் பிரஸித்தி பெற்ற மங்கணகர் என்கிற மஹரிஷியானவர் ஸித்தியடைந்தாரோ அந்த ஸப்தஸாரஸ்வத தீர்த்தத்தை அடையவேண்டும்.

அரசனே! 'முற்காலத்தில் மங்கணகர் என்கிற ரிஷி தம்முடையகையில் தர்ப்பத்தின் நுனியினால் அறுக்கப்பட்டார். அதினின்று [1] சாகரஸம் பெருகியது. அந்த மங்கணகர் சாகரஸத்தைக்கண்டு களிகொண்டு கூத்தாடினார். வீரனே! பிறகு, அவர் கூத்தாடினபோது ஸ்தாவரமும் ஜங்கமமுமான இருவகைப் பொருள்களும் அந்த ரிஷியினுடைய தேஜஸினால் மயக்கப்பட்டுக் கூத்தாடின. அரசனே! நராதிபனே! பிரம்மவாதிகளும் தேவர்களும் தபோதனர்களான மகரிஷிகளும் மஹாதேவரை, 'தேவரே! இந்த ரிஷி கூத்தாடாமலிருக்கும்படி தேவரீர் செய்யக் கடவீர்' என்று ரிஷியின் நிமித்தம் விண்ணப்பம்செய்தனர். மகாதேவர், தேவர்களுடைய நன்மைக்காக, களிப்பினால் கவரப்பட்ட மனத்துடன் அதிகமாக நர்த்தனம் செய்கின்ற அந்த ரிஷியை அடைந்து, 'ஓ! ஓ! மஹரிஷியே! தர்மங்களை அறிந்தவனே! எதற்காக நீ நர்த்தனம் செய்கிறாய்? முனிஶ்ரேஷ்ட! உனக்கு இப்பொழுது ஸந்தோஷத்திற்குக் காரணம் யாது? எதற்காக நர்த்தனம் செய்கிறாய்?' என்று வினவினார். ரிஷியானவர், 'பிராம்மணஶ்ரேஷ்டரே! பிராம்மணரே! தர்மமார்க்கத்தில் நிலைபெற்றிருக்கிற தபஸ்வியான என்னுடைய கையிலிருந்து சாகரஸம் பெருகுவதை நீர் பார்க்கவில்லையா? அந்தச் சாகரஸத்தை நான் பார்த்து அதிக

1 கீரை அல்லது காய்கறிகளின் சாறு.

ஸந்தோஷத்தோடு [1] மிக்க கூத்தாடுகிறேன்' என்று விடை அளித்தார் மஹாதேவர், ரஜோகுணத்தால் மதிமயக்கமுற்ற அந்த ரிஷியைப்பார்த்து நகைத்து, 'பிராம்மணா! நான் ஆச்சரியத்தை அடையவில்லை என்னைப் பார்' என்றார். நரஸ்ரேஷ்டனே! ராஜேந்திரனே! தோஷமற்றவனே! இவ்வாறு கூறிவிட்டுச் சிறந்தபுத்தியுள்ள மஹாதேவர் விரல்நுனியினால் தமது கட்டைவிரலைத் தட்டினார். அரசனே! அந்தக்காயத்திலிருந்து பனிக்கொப்பான பஸ்மம் வெளிவந்தது. அரசனே! அந்த ரிஷியானவர் அதைப்பார்த்து, வெட்கி, அவருடைய இரு கால்களிலும் தண்டனிட்டுத் தேவரான ருத்திரரைக் காட்டிலும் வேறொன்றைப் பெரிதும் மிகச்சிறந்ததுமாக எண்ணவில்லை. அவர், 'சூலாயுதத்தைத் தரிப்பவரே! தேவரீர் தேவாஸுரர்களுடன்கூடின உலகத்துக்குக் கதியாக இருக்கிறீர். ஜங்கமங்களுடனும் ஸ்தாவரங்களுடனும்கூடின இந்த மூவுலகம் முழுமையும் உம்மால் படைக்கப்பட்டது. யுகமுடிவில் மறுபடியும் தேவரீரே எல்லாவற்றையும் பக்ஷிக்கிறீர். தேவர்களாலேகூட உம்மை அறியமுடியாது; என்னால் எப்படி அறியமுடியும்? தோஷமற்றவரே! தேவரீரிடத்தில் பிரம்மா முதலிய எல்லாத் தேவர்களும் காணப்படுகிறார்கள். நீர் எல்லாமாகவுமிருக்கிறீர். உலகங்களைப் படைப்பவரும் படைக்கும்படி செய்பவரும் நீரே; உம்முடைய அனுக்ரஹத்தினால் எல்லாத் தேவர்களும் ஓரிடத்தினின்றும் பயமில்லாதவர்களாக வஸிக்கிறார்கள்' என்றார். இவ்வண்ணம் மஹாதேவரைத் துதித்து, ரிஷியானவர், 'மஹாதேவரே! உம்முடைய அனுக்கிரகத்தினால் என் தவமானது குறையாமல் இருக்கவேண்டும்' என்கிற வசனத்தை உரைத்தார். பிறகு, மஹாதேவர், மனம் மிகமகிழ்ந்து, பிரம்மரிஷியைப் பார்த்து, 'பிராமமணா! என்னுடைய அனுக்ரஹத்தினால் உன்னுடைய தவம் ஆயிரமடங்காக வளரட்டும். மஹாமுனியே! உன்னுடன்கூடவே இந்த ஆச்ரமத்தில் வஸிப்பேன் எவர்கள் ஸப்தஸாரஸ்வதத்தில் ஸ்நானஞ்செய்து என்னை அர்ச்சிப்பார்களோ அவர்களுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் கிடைக்க அரியது ஒன்றுமில்லை. அவர்கள் ஸாரஸ்வத லோகத்தையும் அடைவார்களென்பதில் ஸம்சயமில்லை' என்று சொன்னார். இவ்வண்ணங்கூறி, மஹாதேவர் அவ்விடத்திலேயே மறைந்தார்' என்று நாம் கேட்டிருக்கிறோம். பாரத! பிறகு, எதில் ப்ரம்மா முதலிய தேவர்களும் தவத்தையே

1 வேறு பாடம்.

பொறுமையுள்ளவர்களான ரிஷிகளும் மகிமைபொருந்திய ஸுப்ரம்மண்யரும் பரசுபுத்திரனை சுக்கிரனுக்கு பரியத்தைச்செய்யும் விருப்பத்தால் தினந்தோறும் மூன்று ஸந்த்யாகாலங்களிலும் ஸாந்நித்யம் செய்கிறார்களோ அந்த மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்ற ஔசனஸதீர்த்தத்தை அடையவேண்டும். கபாலமோசன மென்கிற தீர்த்தம் எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பது. புருஷஸ்ரேஷ்டனே! ஒருவன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். நரஸ்ரேஷ்டனே! ஒருவன் அந்தத்தீர்த்தத்திலிருந்து அக்னிதீர்த்தத்தைக்குறித்துச் செல்லவேண்டும். அதில் ஸ்நானம் செய்தால் அக்னிலோகத்தை அடைவதுடன் குலத்தையும் நன்கு கரை யேற்றுவான். பரதருள் சிறந்தவனே! அந்த இடத்திலேயே விஸ்வாமித்ர தீர்த்தம் இருக்கிறது. நரஸ்ரேஷ்டனே! அதில் ஸ்நானம்செய்து ப்ராம்மண்யத்தை அடைகிறான். நரஸ்ரேஷ்டனே! ஒருவன் சுத்தனும் மனஅடக்கமுள்ளவனுமாகி ப்ரம்ம யோநி என்னும் தீர்த்தத்தை அடைந்து அதில் ஸ்நானம் செய்து பிரம்மலோகத்தை அடைகிறான். ஏழு தலைமுறை வரையில் குலத்தைச் சுத்தம் செய்கிறான்; இந்த விஷயத்தில் ஸம்சய மில்லை. ராஜேந்திரனே! அரசனே! பிறகு, ஒருவன் மூவுலகங்களி லும் ப்ரஸித்திபெற்ற ப்ருதூதகமென்கிற ஸுப்ரம்மண்யருடைய தீர்த்தத்தை அடையவேண்டும். பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பதில் பற்றுதலுள்ளவனாகி அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். பரதவம்சத்திலுதித்தவனே! மனிதர்க்குரிய (அல்ப) புத்தியுள்ள ஸ்தரீயினாலோ புருஷனாலோ, தெரிந்தோ தெரியாமலோ, செய்யப்பட்ட பாவமனைத்தும் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்த அளவில் நாசமடைகின்றன. அவனுக்கு அஸ்வ மேதயாக பலன் உண்டாகிறது. அவன் ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். குருக்ஷேத்திரத்தைப் புண்யமானதென்று சொல்லு கிறார்கள். குருக்ஷேத்திரத்தைக் காட்டிலும் ஸரஸ்வதீநதி புண்யமானது. ஸரஸ்வதியைக் காட்டிலும்[1] தீர்த்தங்கள் புண்ய மானவை. (எல்லாத்) தீர்த்தங்களைக் காட்டிலும் ப்ருதூதகம் புண்யமானது. எல்லாத்தீர்த்தங்களுள்ளும் உத்தமமான ப்ருதூத கத்தில் எவன் மந்திரஜபத்தில் பற்றுள்ளவனாகத் தன் சரீரத்தை

---

1 'மற்ற எல்லாத்தீர்த்தங்களும் சேர்ந்து' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

விடுவனே அவனை மறுபடியும் மரணமானது வருத்தாது. அரசனே! ஸநத்குமாரராலும் மஹாத்மாவான வ்யாஸராலும் புகழப்பட்டதும் வேதத்திலும் புகழப்பட்டதுமான ப்ருதூதகத்தைக் குறித்துத் தவறாமல் யாத்திரை செய்யவேண்டும். கௌரவர்களுள் சிறந்தவனே! வேறு ஒரு தீர்த்தமும் ப்ருதூதகத்தைவிடச் சிறந்த தீர்த்தம் அன்று. அது பரிசுத்தமானது. அது பாவத்தைப் போக்குவது; புண்ணியமானது. ஸந்தேகமில்லை. நரஶ்ரேஷ்டனே! பாவஞ்செய்த மனிதர்களுங்கூட அந்த ப்ருதூதகத்தில் ஸ்நானம் செய்து ஸ்வர்க்கத்தை அடைகிறார்களென்று இவ்வாறு அறிஞர்கள் கூறுகின்றனர். பரதர்களுள் சிறந்தவனே! அவ்விடத்திலேயே மதுஸ்ரவமென்கிற தீர்த்தம் இருக்கிறது. வேந்தனே! ஒரு மனிதன் அதில் நீராடினால் ஆயிரம் கோதானத்தின் பலனை அடைவான். ராஜஶ்ரேஷ்டனே! அந்தத் தீர்த்தத்தினின்று க்ரமம் தவறாமல் தேவீதீர்த்தத்தை அடையவேண்டும். ஒரு மனிதன் உலகத்தில் ப்ரஸித்திபெற்ற ஸரஸ்வதீ அருணை என்னும் நதிகளின் ஸங்கமத்தில் மூன்று நாள் உபவாஸமிருந்து ஸ்நானம் செய்தால் பிரமஹத்தி தோஷத்தால் விடப்படுகிறான். ஒரு மனிதன் அக்நிஷ்டோம யாகத்தாலும் அதிராத்ர யாகத்தாலு முண்டாகிற பயனை அடைவான். பரதஶ்ரேஷ்டனே! ஏழாவது தலைமுறை வரையில் குலத்தையும் பரிசுத்தமாகச் செய்கிறான். குருவம்சத்தைத் தாங்குபவனே! அந்த இடத்திலேயே அவதீர்ணமென்கிற தீர்த்தம் இருக்கிறது. அது முற்காலத்தில் பிராம்மணர்களிடமுள்ள கருணையினால் சார்ங்கியினால் உண்டுபண்ணப்பட்டது. ஒரு பராம்மணன் (அந்தத் தீர்த்தத்தில் நீராடி) விரதத்தையும் உபநயனத்தையும் செய்வதனால், அல்லது, உபவாஸமிருப்பதனால், க்ரியைகளுடனும் மந்திரங்களுடனும் கூடினவனாவான்; ஸந்தேகமில்லை. நரஶ்ரேஷ்டனே! க்ரியைகளாலும் மந்திரங்களாலும் விடுபட்டவனும் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் விரதானுஷ்டானம் செய்தவனும் எல்லாவற்றையும் அறிந்தவனுமாவான். இந்த விஷயம் முன்னோர்களால் காணப்பட்டிருக்கிறது. தர்ப்பியினால் நான்கு ஸமுத்திரங்களும் வரவழைக்கப்பட்டன. நரஶ்ரேஷ்டனே! அவைகளில் ஸ்நானஞ்செய்பவன் நரகத்தை அடையமாட்டான். அவன் நாலாயிரம் பசுக்களைத் தானஞ்செய்த பயனையும் அடைவான். தர்மங்களை அறிந்தவனே! பிறகு, அந்த இடத்திலேயே இருப்பவையும் உலகங்களில் ப்ரஸித்திபெற்றவையுமான சதஸஹஸ்ரகம்,

பொருளாகக்கொண்ட ரிஷிகளும் மகிமைபொருந்திய ஸுப்ரமணியரும் ப்ருகுபுத்திரனை சுக்கிரனுக்கு ப்ரியத்தைச்செய்யும் விருப்பத்தால் தினந்தோறும் மூன்று ஸந்த்யாகாலங்களிலும் ஸாந்நித்யம் செய்கிறார்களோ அந்த மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்ற ஔசனஸதீர்த்தத்தை அடையவேண்டும். கபாலமோசனமென்கிற தீர்த்தம் எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பது. புருஷஶ்ரேஷ்டனே! ஒருவன் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். நரஶ்ரேஷ்டனே! ஒருவன் அந்தத்தீர்த்தத்திலிருந்து அக்னிதீர்த்தத்தைக்குறித்துச் செல்லவேண்டும். அதில் ஸ்நானம் செய்தால் அக்னிலோகத்தை அடைவதுடன் குலத்தையும் நன்கு கரையேற்றுவான். பரதருள் சிறந்தவனே! அந்த இடத்திலேயே விஶ்வாமித்ர தீர்த்தம் இருக்கிறது. நரஶ்ரேஷ்டனே! அதில் ஸ்நானம்செய்து ப்ராமண்யத்தை அடைகிறான். நரஶ்ரேஷ்டனே! ஒருவன் சுத்தனும் மனஅடக்கமுள்ளவனுமாகி ப்ரம்மயோநி என்னும் தீர்த்தத்தை அடைந்து அதில் ஸ்நானம் செய்து பிரம்மலோகத்தை அடைகிறான். ஏழு தலைமுறை வரையில் குலத்தைச் சுத்தம் செய்கிறான்; இந்த விஷயத்தில் ஸம்சயமில்லை. ராஜேந்திரனே! அரசனே! பிறகு, ஒருவன் மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற ப்ருதூதகமென்கிற ஸுப்ரமண்யருடைய தீர்த்தத்தை அடையவேண்டும். பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பதில் பற்றுதலுள்ளவனாகி அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். பரதவம்சத்திலுதித்தவனே! மனிதர்க்குரிய (அல்ப) புத்தியுள்ள ஸ்த்ரீயினாலோ புருஷனாலோ, தெரிந்தோ தெரியாமலோ, செய்யப்பட்ட பாவமனைத்தும் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்த அளவில் நாசமடைகின்றன. அவனுக்கு அஶ்வமேதயாக பலன் உண்டாகிறது. அவன் ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். குருக்ஷேத்திரத்தைப் புண்யமானதென்று சொல்லுகிறார்கள். குருக்ஷேத்திரத்தைக் காட்டிலும் ஸரஸ்வதீநதி புண்யமானது. ஸரஸ்வதியைக் காட்டிலும் [1] தீர்த்தங்கள் புண்யமானவை. (எல்லாத்) தீர்த்தங்களைக் காட்டிலும் ப்ருதூதகம் புண்யமானது. எல்லாத்தீர்த்தங்களுள்ளும் உத்தமமான ப்ருதூதகத்தில் எவன் மந்திரஜபத்தில் பற்றுள்ளவனாகத் தன் சரீரத்தை

1 'மற்ற எல்லாத்தீர்த்தங்களும் சேர்ந்து' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு.

அந்தத் தீர்த்தத்தில ப்ரம்மதேவர் ஸ்ரீமந் நாராயணரை முதன்மை யாகக்கொண்ட தேவர்களுடன் தாமே எப்பொழுதும் ஸாந் நித்யம் செய்கிறார். குருவம்சத்தைத் தாங்குபவனே! ராஜேந் திரனே! அந்தத் தீர்த்தத்தில் ருத்ரபத்னியின் ஸாந்நித்யம இருக் கிறது. ஒருமனிதன் அந்தத் தேவியை வணங்கினால் நரகத்தை அடையமாட்டான். மகாராஜனே! அந்த இடத்திலேயே விஶ் வேஶ்வரரும் உமாபதியுமான மஹாதேவரை வணங்கி எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். பகைவரை அடக்குகிறவனே! மஹாராஜனே! தாமரை மலர்போன்ற நாபியுள்ள நாராயணரை யும வணங்கி விளங்குபவனாகி விஷ்ணுலோகத்தையும் அடைகி றான். புருஷஶ்ரேஷ்டனே! அவன ஸர்வதேவர்களுடைய தீர்த் தங்களில் ஸ்நானமசெய்தால, எல்லாத் துக்கங்களாலும் விடுபட்டுச் சந்திரன்போல விளங்குகிறான். நராதிபனே! தீர்த்த யாத்ரை செய்பவன், பிறகு, ஸ்வஸ்திபுரத்தைக் குறித்து யாத்ரை செய்ய வேண்டும. ஒருவன அதை வலமாகச் சுற்றிவந்தால் ஆயிரம் கோதான பலனை அடைவான். பாரத! ஒருவன் பாவனமென்கிற தீர்த்தத்தை அடைந்து பிதருக்களுக்கும் தேவர்களுக்கும் தர்ப்ப ணம் செய்யக்கடவன். (அவன்) அக்நிஷ்டோம யாகத்தினுடைய பலனை அடைகிறான். பரதர்களுள் சிறந்தவனே! அந்த இடத்தி லேயே கங்காஹ்ரதமும் கூபமும் இருக்கின்றன. பூமிக்கு நாதனே! அந்தக் கூபத்தில் மூன்றுகோடி தீர்த்தங்கள் இருக்கின்றன. அர சனே! ஒருமனிதன் அதில் நீராடினால் ஸ்வர்க்கலோகத்தை அடை கிறான். ஒருமனிதன் ஆபகையில் நீராடி மஹேஶ்வரரை அர்ச்சித் தால கணங்களுக்குத் தலைவனாக இருக்கும பதத்தையும் பெறுவ துடன் குலத்தையும கரையேற்றுவான். பிறகு, மூவுலகங்களிலும் புகழ்பெற்ற ஸ்தாணுவடத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அதில நீராடி ஓர் இரவு அங்கு இருந்தால் ருத்ரலோகத்தை அடைவான். ஒருமனிதன் பதரீகானனத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்த இடத்தில் வஸிஷ்டாஶ்ரமத்தை அடைந்து மூன்றுநாள் உபவாஸ மிருந்து இலந்தைப் பழத்தைப் புசிக்கவேண்டும். மனிதர்களுக்கு அதிபதியே! (வேறிடத்தில்) பன்னிரண்டு வருஷகாலம் இலந்தைப் பழத்தைச் சாப்பிட்டுக்கொண்டிருப்பவனோடு, இங்கே மூன்றுநாள் உபவாஸமிருப்பவன் ஒப்பாகிறான். அரசனே! தீர்த்தயாத்ரை செய் பவன் இந்திரமார்க்கத்தை அடைந்து ஓர் இரவும் பகலும் உபவாஸ மிருப்பதனால் இந்திரலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். ஒருமனிதன்

நியமமுள்ளவனும் ஸத்யவாதியுமாகி ஏகராத்ர தீர்த்தத்தை அடைந்து ஒருநாள் வஸித்தால் பிர்ம்மலோகத்தில் பூஜிக்கப்படு கிருன். ராஜஸ்ரேஷ்டனே! பிறகு, எங்கே ஒளித்திரளாயிருப் பவனும் மஹாத்மாவுமான ஆதித்யனுடைய ஆஸ்ரமம் இருக்கிறதோ அந்த மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற தீர்த்தத்தை அடைய வேண்டும். ஒருமனிதன் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸூரியனைப் பூஜித்தால், ஆதித்யலோகத்தை அடைவதுடன் குலத் தையும் கரையேற்றுவான். ஜனநாதனே! தீர்த்த யாத்திரையில் பற்றுள்ள மனிதன் ஸோமதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸோம லோகத்தை அடைகிருன். இதில் ஸம்சயமில்லை. தர்மங்களை அறிந்தவனே! அரசனே! பிறகு, எந்ததீர்த்தத்தில் தவத்துக்கு நிதியாக இருப்பவரும் ஸரஸ்வதி நதியின் புத்ரருமான அந்த அங்கிரஸ[1] பிறந்தாரோ மிக்க புண்யமானதும் பரிசுத்தமானதும் உலகத்தில் புகழ்பெற்றதுமான மகாத்மாவான ததீசருடைய அந்தத் தீர்த்தத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்ததீர்த்தத்தில் ஒரு மனிதன் ஸ்நானம் செய்தால் அஸ்வமேதத்தின்பலனை அடை வான்; ஸரஸ்வதியின் உலகத்தையும் அடைகிருன். இதில் ஸம்சயம் இல்லை. ஒருவன், பிறகு, நியமமுள்ளவனும் பிரம்மசர்யமுள்ளவனு மாகிக் கன்யாஸ்ரமத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அரசனே! நியமமுள்ளவனும் நியமமான ஆகாரமுள்ளவனுமாகி அங்கு மூன்று நாள் உபவாஸமிருப்பவன் தேவகன்னியர் நூற்றுவரை அடை வதுடன் ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிருன். தர்மங்களை அறிந்த வனே! ஒருவன் அந்தத்தீர்த்தத்தினின்று[2] ஸந்நிஹதி என்கிற தீர்த்தத்தைக்குறித்தும் செல்லவேண்டும். அந்ததீர்த்தத்தில் பிரம மாதி தேவர்களும் தவத்தையே பொருளாகவுடைய ரிஷிகளும அதிக புண்யத்துடன் கூடினவர்களாகி மாதந்தோறும் வருகிருர் கள். எந்தமனிதன் ஸூர்யன் ராகுவினுல் பற்றப்படும் போது ஸந்நிஹதியில் ஸ்நானம்செய்கிருனே, அவனுல் அந்த இடத்தில நூறு அஸ்வமேதங்கள் அடிக்கடி செய்யப்பட்டவைஆகும். நராதி பனே! நரஸ்ரேஷ்டனே! பூமியிலுள்ள எல்லாத்தீர்த்தங்களும்ஆகா யத்தில் ஸஞ்சரிக்கின்றதீர்த்தங்களும் நதிகளும் மடுக்களும் தடாகங

1 வேறு பாடம்.

2 'ஸந்நிஹத்யா' என்றும் வழங்குகிறது. 'குருக்ஷேத்திரத்துக்கே ஸந்நி ஹதி என்றும் பெயர்' என்பது பழையவுரை.

களும் எல்லா மலைஅருவிகளும் கிணறுகளும் வாவிகளும் தீர்த்தங்களும் ஆயதனங்களும் மாதந்தோறும் அமாவாஸையையில் ஸந்நிஹதியில நிச்சயமாக வந்துசேருகின்றன. ஸந்தேகமில்லை. தீர்த்தங்கள் வந்து சேர்ந்து ஸாந்நிதயம் செய்வதனாலேயே அந்ததீர்த்தமானது ஸந்நிஹதயா என்று ப்ரஸித்திபெற்றிருக்கிறது. ஒரு மனிதன் அதில் ஸ்நானம்செய்தும் தீர்த்தத்தைப் பானம் செய்தும் ஸ்வர்க்க லோகததில் பூஜிக்கப்படுகிறான். அந்த ஸந்நிஹதியிலேயே அமாவாஸ்யையில் ஸூர்யன் ராகுவினால் பற்றப்படும்போது எந்த மனிதன் ஶ்ராத்தமசெய்கிறானே அவனுடைய புண்ய பலனைக் கேட்பாயாக. ஒருமனிதன் ஸ்நானம் செய்து ஶ்ராத்ததைச் செய்தமாததிரததிலேயே நனகுசெய்யபபட்ட ஆயிரம் அஶ்வமேதயாகங்களின் பலனை அடைகிறான. ஸதரீயினாலோ புருஷனாலோ செய்யப்பட்ட பாவமனைத்தும் அந்ததீர்த்ததததில ஸ்நானம்செய்த மாத்திரத்தினாலே நாசமடைகின்றன. இதில் ஸநதேகமில்லை. தாமரைமலரின் நிறமுள்ள விமானததினால் பிரம்மலோகததை அடைகிறான். ஒருவன், பிறகு, கோடிதீர்த்ததததை அடைந்து அதில் ஸ்நானம்செய்து தவாரபாலனான மசக்ருகனென்கிற யக்ஷனை வணஙகினால் பல பொன்னணயங்களைத தானஞ்செய்த பலனை அடைவான். பரதஶ்ரேஷ்டனே! அந்த இடத்திலேயே கங்காஹ்ரதமென்கிற தீர்ததம் இருக்கிறது. தர்மங்களை அறிந்தவனே! ஒரு மனிதன் பிரம்மசர்யததுடன் மனததை ஒருவழிப்படுத்தி அதில் ஸ்நானம் செய்வதனால் ராஜஸூய யாகததாலும் அஶ்வமேதயாகத்தாலுமுண்டாகிற பலனை அடைகிறான். பூமியில் நைமிசாரண்யததிலுள்ள தீர்த்தம் மிக்க புண்யமானது. அந்தரிக்ஷததில் புஷ்கரதீர்ததம் மிகவும் பாவனமானது. மூவுலகங்களுள்ளும குருக்ஷேத்தரம் மிகச் சிறந்தது. குருக்ஷேதரததினின்று காற்றினால் தூற்றப்பட்ட புழுதிகளும் மேலே பட்ட அளவில், பாவிகளையும் உத்தமகதியை அடையச்செய்கின்றன. ஸரஸ்வதிக்குத் தென்புறததிலும த்ருஷதவதீநதிக்கு வடபுறத்திலுமுள்ள குருக்ஷேத்ரததில் எவர்கள் வஸிக்கிறார்களோ, அவர்கள் ஸ்வர்க்கத்தில் வஸிக்கிறார்கள். ஒருமனிதன், 'குருக்ஷேததிரததிற்குப் போவேன்; குருக்ஷேத்திரததில் நான் வஸிப்பேன்' என்கிற ஒரு வார்த்தையை வெளிப்படுத்தினாலும் எல்லாப் பாவஙகளாலும் விடப்படுகிறான். ப்ரம்மரிஷிகளால் அடையப்பட்டிருக்கிறதும் புண்யமுமான குருக்ஷேததிரமானது ப்ரம்மதேவருடைய யாகவேதி; அந்த இடததில் எவர்கள் வாஸம் செய்கிறார்களோ அவர்கள் எவ்

விதத்தாலும் துக்கிக்கப்படத்தக்கவர்களல்லர். தரந்துகததிற்கும் அருந்துகததிற்கும் ராமஹ்ரதஙகளுக்கும் மசக்ருகததிற்கும் மததியி லிருக்கிற இடமாகிய அப்படிப்பட்ட இந்தக் குருக்ஷேத்திர ஸமந்த பஞ்சகமானது, ப்ரம்மதேவருடைய உத்தரவேதியென்று சொலலப் படுகிறது.

---

எண்பத்திரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

---

(புலஸ்தியர் பீஷ்மருக்குப் பற்பல தீர்த்தங்களின் மகிமையை எடுத்து உரைத்தது.)

மகாராஜனே! பிறகு, ஸர்வோததமமான தர்ம தீர்த்ததைக் குறிதது யாததரை செய்யவேண்டும. அந்த இடததில் மகாபாகயவா னான தர்மதேவன் நிகரற்ற தவத்தைச் செய்து ஸிததிபெற்ருன். அந்தத தர்மதேவனுல் தன் பெயரால் ப்ரஸிததிபெற்ற புண்ய மான தீர்த்தம உண்டுபண்ணப்பட்டது. ராஜனே! ஒரு மனிதன், தர்மசீலனும் மன அடக்கமுள்ளவனுமாகி அதில் ஸநானம் செய் தால் ஏழாவது தலைமுறைவரையில் குலத்தைப் பரிசுததமாக்கு கிருன். இதில் ஐயமில்லை. ராஜேந்திரனே! பிறகு, உத்தமமான ஞானபாவனததை அடையவேண்டும்; அதனை அடைந்தவன் அக் நிஷ்டோமபலனை அடைகிருன்; முனிலோகததையும் அடைகி ருன். அரசனே! ஒருவன் அந்தத் தீர்ததததிலிருந்து ஸௌகந் திக வனததை அடையவேண்டும். அந்த வனததில் ப்ரம்மா முத லிய தேவர்களும் தவததைதத தனமாககொண்ட ரிஷிகளும் ஸித் தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் மஹோர கர்களும் வஸிக்கின்ருர்கள். (ஒருவன்) அந்த வனத்தில் ப்ரவே சிக்கும்பொழுதே, எல்லாப் பாவங்களிலிருந்தும் விடப்படுகி ருன். அந்த வனததினின்று நதிகளுள் சிறந்ததும் புண்யமான தும் தேவியுமான ஸரஸ்வதீநதியானது தேவியான ப்லக்ஷை என்று கருதப்பட்டது. புற்றிலிருந்து பெருகிவருகிற அந்தத் தீர்ததத் தில் ஸ்நானம் செய்யவேண்டும். பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிதது அஸ்வமேத யாகபலனைப பெறுவான். புற்றிலிருந்து

[1] சம்யையைச் சுழற்றி எறிந்தால் எவ்வளவு தூரம்போய் விழுமோ அதைவிட ஆறுமடங்கு தூரத்தில் நிச்சயமாகக் கிடைக்க மிக அரிதான கவேராதபுஷ்பிதமென்கிற தீர்த்தம் இருக்கிறது. நரஸ்ரேஷ்டனே! அதில் ஸ்நானம் செய்து ஆயிரம் கபிலைப் பசுக்களின் தானபலனை அடைவதுடன் அஸ்வமேதயாக பலனையும் அடைகிறான். இது [2] பழைய நூல்களில் காணப்பட்டது. பாரத! புருஷஸ்ரேஷ்டனே! ஒரு மனிதன் ஸுகந்தையையும் சதகும்பையையும் பஞ்சயக்ஞையையும் அடைந்தால் ஸ்வர்க்க லோகத்தில் பூஜிக்கப்படுகிறான். பாரத! அந்த இடத்திலேயே இருக்கிற த்ரிசூலகாதத்தை அடைந்து பிதருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பதில் ஆதரவுள்ளவனாக அதில் ஸ்நானம் செய்யவேண்டும். அவன் தேகத்தைவிட்டுக் கணங்களுக்குப் பதியாக இருக்கும் பதத்தைப் பெறுகிறான். இதில் ஸம்சயமில்லை. ராஜேந்திரனே! பிறகு, கிடைக்க மிக அரிதான தேவியின் ஸ்தானத்தைக் குறித்துச் செல்லவேண்டும். அந்தத் தேவியானவள் சாகம்பரி என்று பெயர் பெற்றவள்; மூவுலகங்களிலும் ப்ரஸித்தி பெற்றவள். நராதிபனே! நல்ல விரதத்தையுடையவளான அந்தத் தேவியானவள் தேவ வருஷத்தில ஆயிரம் வருஷகாலம் மாதமொருமுறை சாகத்தால் ஆகாரம் செய்துகொண்டுவந்தாள். தேவியினுடைய பக்தியினால் தபோதனர்களான ரிஷிகள் அந்த இடத்தில வந்தார்கள். பாரத! அவர்களுக்குத் தேவியினால் சாகத்தாலேயே விருந்துசெய்யப்பட்டது. அதனால், சாகம்பரீ என்றே அவளுக்குப் பெயர் நிலைத்தது. பாரத! ஒருமனிதன் பிரம்மசர்யமுள்ளவனும மனத்தை அடக்கினவனும் சுத்தனுமாகிச் சாகம்பரியை அடைந்து மூன்றுநாள் வஸித்துச் சாகத்தைப் புஜித்தால், பன்னிரண்டு வருஷகாலம் சாகத்தையே ஆகாரம் செய்தவனுக்குள்ள புண்யபலன் அவனுக்குத் தேவியின் இச்சையால் உண்டாகிறது. அவ்விடத்திநின்று மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற ஸுவர்ணமென்கிற தீர்த்தத்தை நோக்கிச் செல்லவேண்டும். அந்த இடத்தில் முற்காலத்தில் விஷ்ணுவானவர் அருளுக்காக ருத்ரரை ஆராதித்தார்; தேவதைகளாலும்

---

1 துரோண பர்வம் 211-வது, சாந்தி பர்வம் 93-வது, 818-வது பக்கங்களின் குறிப்பிற் காணக.

2 'புராதனே' என்பது மூலம், 'பவிஷ்யபுராண முதலியவற்றில்' என்பது பழையவுரை.

அடையமுடியாத அனேக வரங்களை அடைந்தார். பாரத! ஸந்தோஷமடைந்த திரிபுராரியானவர், விஷ்ணுவைநோக்கி, 'க்ருஷ்ண! நீர் உலகத்தில் (எல்லா ப்ராணிகளுக்கும்) மிக்க அனபுக்குரியவராவீர். உலகமனைததும் உம்மைத தலைவராகக்கொண்டதாகும். ஸந்தேகமில்லை' என்று சொல்லினர். ராஜேந்திரனே! ஒருவன் அந்த விருஷபதவஜனை அடைந்து பூஜைசெய்து அஸ்வமேதயாகபலனைப் பெறுகிறான்; ப்ரமதகணங்களுக்குத தலைமையையும் அடைகிறான். ஒரு மனிதன், பிறகு, தூமாவதியைக்குறிததுச் செல்லவேணடும். (அங்கே) மூனறுநாள் உபவாஸமிருந்தால் மனததினால்வேணடப்பட்ட எல்லா அபீஷ்டங்களையும அடைகிறான். இதில் ஸம்சயமிலலை. நராதிபனே! தேவிக்குதெதன்புறததில் ரதாவர்ததமென்கிற பர்வதம இருக்கிறது. தர்மங்களை உணர்ந்தவனே! ஸ்ரத்தையுள்ளவனாகவும் இந்திரியஙகளை வென்றவனாகவும் அதில் ஏறவேணடும. (அவன்) மகாதேவருடைய அருளால் உத்தமகதியை அடைவான். பரத ஸ்ரேஷ்டனே! பேரறிவாளனே! அந்த (மலையை) வலம் வந்து எல்லாப்பாவங்களினின்றும் விடுவிப்பதான தாரை என்கிற தீர்த்தத்தை அடையவேண்டும். நரஸ்ரேஷ்டனே! நராதிபனே! ஒருவன் அதில் ஸ்நானம்செய்தால் துயரததை அடையான். தர்மத்தை அறிந்தவனே! பிறகு, மஹாகிரியை நமஸ்கரித்து அவ்விடத்திலிருநது (கங்காதவாரத்தைக் குறித்து) யாத்திரைசெய்யவேண்டும். 1 ஸ்வர்க்கத்வாரததோடு ஒத்ததென்று உறுதியாகச் சொல்லப்படுகிற கங்காத்வாரத்தை அடையவேண்டும். சித்தத்தை அடக்கினவனாகி அவ்விடததிலுள்ள கோடிதீர்ததததில் நீராடவேணடும். நீராடுபவன் பௌண்டரீகயாகபலனை அடைகிறான்; குலததையும் கரையேற்றுவான். அந்தததீர்த்தத்தில ஓர் இரவு வஸிததால் ஆயிரம கோதான பலனைப்பெறுவான்; ஸப்தகஙகையிலும் த்ரிகங்கையிலும் சக்ராவர்த்தத்திலும விதிப்படி தேவர்களையும் பிதருக்களையும் தருப்தியடையச்செய்பவன் புண்யலோகததில் பூஜிக்கப்படுகிறான். ஒரு மனிதன், பிறகு, கனகலத்தில் ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருந்தால் அஸ்வமேத பலனை அடைகிறான். ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! தீர்த்தயாததிரை செய்பவன், பிறகு, கபிலா வடம் போகவேண்டும். அந்த இடத்தில் ஓரிரவு உபவாஸமிருந்தால் ஆயிரம்பசுக்களைத தானம்செய்தபலனைப் பெறுவான்.

1 அதிக பாடமான இரண்டு ஸ்லோகஙகள் விடபபட்டன.

ராஜேந்திரனே! கௌரவர்களுள் மிகச்சிறந்தவனே! எல்லா உலகங்களிலும் புகழ்பெற்ற மஹாத்மாவான கபிலனென்னும் நாகராஜனுடைய தீர்த்தம் இருக்கிறது. நராதிபனே! ஒருமனிதன் அந்த நாகதீர்த்தத்தில் ஸ்நானம்செய்யவேண்டும். அவன் ஆயிரம் கபிலைப் பசுக்களைத் தானம்செய்த பலனை அடைகிறான். ஒருமனிதன், பிறகு, உத்தமமான சந்தனுவினுடைய லலிதகமென்கிற தீர்த்தத்தை அடையவேண்டும். அரசனே! அதில் ஸ்நானம் செய்தால் நரகத்தை அடையமாட்டான். கங்கையும் யமுனையும் சேருமிடத்தில் அவற்றினிடையில் ஸ்நானம்செய்கிறமனிதன் பத்து அச்வமேதயாகபலன்களை அடைகிறான்; குலத்தையும் கரையேற்றுவான். ராஜேந்திரனே! ஒருவன், பிறகு, உலகத்தில் ப்ரஸித்திபெற்ற ஸுகந்தமென்கிறதீர்த்தத்தை அடையவேண்டும். அதனை அடைந்தவன் எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டு ஆத்மா பரிசுத்தமாகி ப்ரம்மலோகத்தில் கொண்டாடப்படுகிறான். அரசனே! தீர்த்தாடனம் செய்பவன், பிறகு, ருத்ராவர்த்தத்தை அடையவேண்டும். அரசனே! ஒருமனிதன் அதில் ஸ்நானம்செய்தால் ஸ்வர்க்கலோகம் செல்லுகிறான். நரச்ரேஷ்டனே! கங்கையும் ஸரஸ்வதியும் சேருமிடத்தில் நீராடினால் அச்வமேதபலனைப் பெறுகிறான்; ஸ்வர்க்க லோகத்தையும் அடைகிறான். பத்ரகர்ணேச்வரத்தை அடைந்து விதிப்படி தேவரை அர்ச்சிப்பவன் நரகத்தை அடையான்; ஸ்வர்க்கலோகத்திலும் பூஜிக்கப்படுகிறான். அரசனே! பிறகு, தீர்த்த யாத்ரைசெய்பவன் குப்ஜாவதியை அடையவேண்டும். அந்த மனிதன் ஆயிரம்பசுக்களைத் தானம்செய்த பலனைப் பெறுகிறான்; ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! தீர்த்தயாத்ரைசெய்பவன் அருந்ததீவடத்தைக் குறித்துச் செல்லவேண்டும். ஒருமனிதன் பிரம்மசர்யமுள்ளவனும் மனத்தை ஒருவழிப் படுத்தினவனுமாகி அங்குள்ள ஸாமுத்ரகத்தில் ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருந்தால் அச்வமேதபலனை அடைவான்; ஆயிரம்கோதானபலனையும் அடைவான்; குலத்தையும் நன்கு கரையேற்றுவான். அவ்விடத்தினின்று பிரம்மசர்யத்துடனும் மன அடக்கத்துடனும் பிரம்மாவர்த்தத்தை அடையவேண்டும். இந்தப் புண்யபூமியை அடைந்தால் அச்வமேதபலனை அடைகிறான்; ஸோமலோகத்துக்கும் செல்லுகிறான். யமுனையின் உத்பத்தியை அடைந்து, யாமுனதீர்த்தத்தில் நீராடினால், அச்வமேத பலனைப் பெற்று ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். ஒருவன்,

மூவுலகத்தாராலும் பூஜிக்கப்பட்ட தர்விஸங்கிரமண தீர்த்தத்தை அடைந்தால் அஸ்வமேதபலனைப் பெறுகிறான்; ஸ்வர்க்கலோகத்தை யும் அடைகிறான்; ஸித்தர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப் பட்ட ஸிந்துவின் உத்பத்தியை அடைந்து அந்தஇடத்தில் ஐந்து இரவு வாஸம்செய்ததால் மிக்கபொன்னைத் தானஞ்செய்தபலனை அடை வான். ஒருமனிதன், பிறகு, எவ்விதத்தாலும் அடைய முடியாத வேதியைஅடைந்தால், அஸ்வமேதபலனை அடைகிறான்; [1] சுக்ரபதத் தையும் அடைவான். பாரத! ஒருவன் ரிஷிகுல்யையையும் வாஸிஷ்டை யையும் அடையவேண்டும். வாஸிஷ்டையை அடைந்த எல்லா வர்ணத் தார்களும் ப்ராம்மணர்களாகிறார்கள். ஒருமனிதன் ரிஷிகுல்யையை அடைந்து அதில் நீராடினால் பாவமதொலைந்து தேவர்களையும் பிதருக் களையும் அர்ச்சித்து ரிஷிலோகத்தை அடைகிறான். நராதிபனே! ஒருமனிதன் சாக ஆகாரமசெய்துகொண்டு அந்தஇடத்தில் ஒருமாதம வஸித்தால தவாதசாஹயஜ்ஞத்தின்பலனை அடைகிறான்; பருகுதுங கத்தை அடைந்தால அஸ்வமேதபலனைப் பெறுவான்; வீரப்ரமோ க்ஷத்தை அடைந்தும் எல்லாப் பாவங்களாலும விடப்படுகிறான். பாரத! ஒருமனிதன் கிருத்திகா தீர்த்தத்தையும் மாகதீர்த்தத்தையும அடைந்தால் அக்னிஷ்டோமத்தினாலும் அதிராத்ரத்தினாலும் உண் டாகிற பலனை அடைகிறான். அந்த இடத்திலுள்ள ஸர்வோத்தமமான வித்யாதீர்த்தத்தை ஸந்தியாகாலத்தில் அடைந்து, எந்த இடத்தி லாவது ஸ்நானம்செய்து வித்தையை அடைகிறான். எல்லாப் பாவங் களினின்றும் பிராணிகளை விடுவிக்கிற மஹாஸ்ரமம என்னும் இடத் தில் ஓர் இரவு வாஸம்செய்யவேண்டும. (அங்கு) ஒருகாலம் ஆகார மில்லாமலிருப்பவன் நல்ல உலகங்களில் வாஸம் செய்கிறான். மஹா லயத்தில் ஒரு மாதகாலம் பகலின் ஆறுவது காலம வரையில் உபவாஸ மிருப்பதனால் எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டுச் சுத்தமான ஆத்மாவுடன் மிக்க பொன்னைக் கொடுத்த பலனை அடைவான். தன் குலத்தில் பிந்திப் பத்துத்தலைமுறையாரையும் முந்திய பத் துத் தலைமுறையாரையும் கரையேற்றுகிறான். பிறகு, ப்ரம்மதேவ ரால் அடையப்பட்ட வேதஸிகையை அடைந்து அஸ்வமேத பலனை அடைகிறான்; சுக்ரபதத்தையுமடைகிறான். பிறகு, ஸித்தர்களால் அடையப்பட்ட ஸௌந்தரிகாதீர்த்தத்தை அடைந்து சிறந்த வடிவமு

---

1 'ஔசநஸீம்கதிம்' என்பதுமூலம்; 'சுக்ரதவம' எனபது பழைய உரை.

கைப் பெறுகிறான். இந்த விஷயம் முன்னோர்களால் காணப்பட்டது. பிறகு, பிரம்மசர்யமுள்ளவனாகவும் இந்திரிய ஜயமுள்ளவனாகவும் பரம்மதீர்த்தத்தை அடைந்து அதில் ஸ்நானஞ்செய்தால் தாமரைமலர் நிறம்போன்ற நிறமுள்ள விமானத்தினால் பரம லோகத்தை அடைகிறான். பிறகு, ஸித்தர்களால் அடையப்பட்ட புண்யமான நைமிஷத்தைக் குறித்து யாத்திரைசெய்யவேண்டும். அந்த நைமிஷத்தில், ப்ரம்மா, தேவர்களுடைய கூட்டங்களோடு எப்பொழுதும் வாஸம் செய்கிறார். நைமிஷத்தை (எங்கே உள்ளது என்று) தேடுகிறவனுக்குப் பாதிப்பாவம் நாசமடைகிறது. அதில் ப்ரவேசித்த மாத்திரத்தினால் மனிதன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். கோபத்தை வென்றவன் தீர்த்தத்தில் பற்றுள்ளவனாக அந்த நைமிஷத்தில் ஒருமாதம் பூர்ணமாக வஸிக்கவேண்டும். பூமியில் எந்தத் தீர்த்தங்களுண்டோ அந்தத்தீர்த்தங்களனைத்தும் நைமிஷத்தில் இருக்கின்றன. பாரத! நியமமுள்ளவனும் நியமமான ஆகாரமுள்ளவனுமாயிருப்பவன், அதில் ஸ்நானஞ்செய்தவுடனே, கோமேதயஜ்ஞ பலனை அடைகிறான். பாரதர்களுள் மிகச்சிறந்தவனே! ஏழாவது தலைமுறைவரையில் குலத்தையும் பரிசுத்தம் செய்கிறான். 'நைமிஷத்தில் உபவாஸமிருந்து பிராணனைவிடுபவன் எல்லா உலகங்களிலும் ஸந்தோஷத்தை அடைவான்' என்று இவ்வண்ணம் அறிஞர்கள் கூறுகின்றனர். ராஜஸ்ரேஷ்டனே! நைமிஷமானது எப்பொழுதும் சுத்தமானது, புண்யமானது. மனிதன் கங்கோத்பேதத்தை அடைந்து மூன்றுநாள் உபவாஸமிருந்தால் வாஜபேயயாகபலனை அடைவான்; எப்பொழுதும் பிரம்மத்தன்மையை அடைந்தவனாவான். ஒருவன் ஸரஸ்வதியை அடைந்து பிதருக்களையும் தேவர்களையும் திருப்திசெய்யவேண்டும். அப்படிச் செய்பவன் ஸாரஸ்வதியின் உலகங்களில் ஆனந்தத்தை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. ஒருவன், பிறகு, பாஹுதையைக்குறித்துச் செல்லவேண்டும். குருகுலத்தில் தோன்றியவனே! ப்ரம்மசர்யத்துடனும் ஒருவழிப்பட்ட மனத்துடனும் அங்கே ஓர் இரவு வாஸம் செய்தால், ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான்; தேவஸத்ரமென்னும் யஜ்ஞத்தின் பலனை அடைகிறான். அந்தத்தீர்த்தத்தினின்று புண்யமானதும் மிக்க புண்யசாலிகளால் சூழப்பட்டதுமான க்ஷீரவதியை அடையவேண்டும். அங்கே பித்ருக்களையும் தேவர்களையும் அர்ச்சிப்பதில் பற்றுள்ளவனாக இருந்தால், வாஜபேயயாகபலனை அடைகிறான். விமலாசோகத்தை அடைந்து பிரம்மசர்யத

திடனும் மன அடக்கத்துடனும் அந்த இடத்தில் ஓர் இரவு வாஸம் செய்தால், ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப் படுகிறான். மஹா ராஜனே! ஒருவன், பிறகு, எந்தத்தீர்த்தத்தில் ராமர் பரிஜனங்க ளுடனும் சேனையுடனும் யானை குதிரைகளுடனும் தேகத்தை விட்டு அந்தத் தீர்த்தத்தின் தேஜஸினால் ஸ்வர்க்கத்தை அடைந் தாரோ, ஸரயூநதியைச் சார்ந்த கோப்ரதார மென்கிற அந்த உத்தம தீர்த்தத்தை அடையவேண்டும். பாரத! நராதிபனே! மனிதன் உறுதியுடன் அந்தக் கோப்ரதார தீர்த்தத்தில் ஸ்நானம்செய்தால் ராம ருடைய அனுக்கிரகத்தினால் எல்லாப் பாவங்களினின்றும் விடு பட்டுச் சுத்தமான மனத்துடன் தேவலோகத்தில் கொண்டாடப் படுகிறான். குருநந்தன! ஒருமனிதன் கோமதியில் ராமதீர்த்தத் தில் நீராடினால் அச்வமேத பலனை அடைகிறான்; குலத்தையும் பரிசுத்தம் செய்கிறான். பாரதர்களுள் சிறந்தவனே! அந்த இடத் திலேயே சதஸாஹஸ்ரகம் என்கிற தீர்த்தம் இருக்கிறது. பாரத ச்ரேஷ்டனே! நியமத்துடனும் ஆகார நியமத்துடனும் அதில் நீராடினால், புண்யமான ஆயிரம் கோதான பலனை அடைகிறான். ராஜேந்திரனே! பிறகு, மிகச்சிறந்ததான பர்த்ருஸ்தானத்தை அடைய வேண்டும். ஒரு மனிதன், அதனை அடைவதினால் அச்வ மேதபலனை அடைகிறான். அரசனே! ஒருமனிதன், கோடி தீர்த் தத்தில் ஸ்நானம்செய்து ஸுப்ரமண்யரை அர்ச்சித்தால் ஆயிரம் பசுக்களைத் தானம்செய்த பலனை அடைவான். அவன் தேஜஸ்வியு மாவான். ஒரு மனிதன், பிறகு, [1] வாராணஸியை அடைந்து வ்ருஷபத்வஜரை அர்ச்சித்துக் கபிலாஹ்ரதத்தில் ஸ்நானம் செய்தால் ராஜஸூயயாகபலனை அடைவான். குருவம்சத்தைத் தாங்குபவனே! தீர்த்த யாத்திரை செய்பவன் அவிமுக்தத்தை அடைந்து தேவ தேவ ருடைய தரிசனத்தினால் பிரம்மஹத்தி தோஷத்தால் விடப்படுகிறான். ஒருமனிதன் அவ்விடத்திலேயே உயிரை விட்டால் மோக்ஷத்தை அடைகிறான். ராஜேந்திரனே! உலகத்தில் ப்ரஸித்தமான கோமதீ கங்காஸங்கமத்திலுள்ள கிடைக்க அரிதான மார்க்கண்டேய தீர்த் தத்தை அடைந்தால் அக்நிஷ்டோமபலனை அடைகிறான்; குலத்தை யும் நன்கு கரையேற்றுகிறான். ஒருவன், பிறகு, ப்ரம்மசர்யத் துடன் இந்திரியங்களை அடக்கினவனாகிக் கயைக்குச் சென்றால்

---

1 காசி; வரணை அஸி என்கிற இரண்டுநதிகளின் இடையிலிருப்பது.

அஶ்வமேதபலனை அடைகிறான்; குலத்தையும் கரையேற்றுவான். அந்த இடத்தில அக்ஷயவடமென்கிற ஆலமரம் மூவுலகங்களிலும பிரஸித்திபெற்றது. அந்த ஆலமரத்தினடியில் பித்ருக்களை உத்தே சித்துக் கொடுக்கப்பட்டது அக்ஷயமாகிறதென்று சொல்லப்படு கிறது. ஒருமனிதன் மஹாநதியில் ஸ்நானம் செய்து பித்ருதேவதை களைத் திருப்தி அடையச்செய்யவேண்டும். அவன் அக்ஷயலோகங் களை அடைவான்; குலத்தையும கரையேற்றுவான். பிறகு, தர்மா ரண்யத்தினால ப்ரகாசிக்கின்ற பிரம்மஸரஸை அடைந்து ஓர் இரவு விடியுமட்டும வஸித்தால, பிரம்மலோகத்தை அடைகிறான். அந்த ஸரஸில் பிரம்மாவினால ஒரு சிறந்த யூபஸதம்பம நிமிர்த்து நாட்டப் பட்டது. அந்த யூபத்தை ப்ரதக்ஷிணம் செய்தால் வாஜபேயபலனை அடைவான். ராஜேந்திரனே! பிறகு, உலகத்தில் பெயர்பெற்ற தேனுக தீர்த்தத்தை அடையவேண்டும். அரசனே! அவ்விடத்தில் ஓரிரவு வாஸம் செய்து [1] திலதேனுவைத் தானம்செய்ய வேண்டும். அவன் எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டுச் சுத்தாத்மாவாகி நிச்சயமாக ஸோமலோகத்தை அடைவான். அரசனே! பாரத! அந்த இடத்தில மலையில் ஸஞ்சரித்த கபிலை அதன் [2] கன்று இவற் றின பெரிய அடிச்சுவடுகள (அவைகளால்) அமைக்கப்பட்டு இன் றும மிகப் பெரியவையாகக் காணப்படுகின்றன. ராஜஶ்ரேஷ்டனே! அரசர்களுள் மேன்மைவாய்ந்தவனே! பாரத! அந்தக் கபிலையின் காலடிகளில் ஸ்நானம் செய்தவனுடைய பாவமனைத்தும் அழிந்து போகிறது. பிறகு, சிறந்த புத்தியுள்ள மகாதேவருக்கு வாஸ ஸ்தானமான க்ருத்ரவடத்தை அடையவேண்டும். அவ்விடத்தி லுள்ள வருஷபத்வஜரை வணங்கி, பஸ்மத்தினால் ஸ்நானம் செய்ய வேண்டும். அப்படி (பஸ்மஸ்நானம் செய்த) பிராம்மணனால் பன்னி ரண்டு வர்ஷகாலங்களில நிறைவேறும் விரதமானது நன்கு அனுஷ் டிக்கப்பட்டதாகும். மற்ற வர்ணத்தார்களுக்கு எல்லாப் பாவங்க ளும நாசமடைகின்றன. ஒருவன், பிறகு, பாடலால் ஒலியுள்ள தான உதய பர்வதத்தைக் குறித்துச் செல்லவேண்டும். பரத ஶ்ரேஷ்டனே! அந்த மலையில் ஸாவித்ரியினுடைய காற்சுவடு காணப் படுகிறது. அந்த இடத்தில் ப்ராம்மணன் கடுமையான விரத

---

1 அநுசாஸன பர்வம் 357-ம் பக்கத்திலும ஆஶ்வமேதிகபர்வம 293-ம் பக்கத்திலும் குறிப்புக்களில காண்க.

2 இரட்டித்தலால் சில சொற்கள் விடப்பட்டன.

முள்ளவனாகி ஸந்தயையை உபாஸிக்க வேண்டும். அப்படி உபாஸிப்பவனால் பன்னிரண்டுவர்ஷகாலம் ஸந்தி உபாஸிக்கப்பட்ட தாகும். பரதஸ்ரேஷ்டனே! அந்த இடத்திலேயே ப்ரஸித்திபெற்ற யோநித்வாரம் இருக்கிறது. ஒருமனிதன் அந்த இடத்தில் சென்றால் [1] பிறவித்துன்பத்தினின்று விடப்படுவான். அரசனே! கயையில் கிருஷ்ணபக்ஷம் சுக்லபக்ஷம் இந்த இரண்டு பக்ஷங்களும் வஸிப்பவன், ஏழாவது தலைமுறைவரையில் குலத்தைப் பரிசுத்தம்செய்கிறான். இதில் ஸம்சயமில்லை. 'ஒருவனாவது கயைக்குப் போவான்; ஒருவனாவது [2] கௌரியெனனும் கன்னியை மணப்பான்; ஒருவனாவது [3] நீல வ்ருஷத்தை உத்ஸர்ஜனம் செய்வான்' என்கிற எண்ணத்தால் உலகத்தில் மனிதர்கள் அனேகம் புத்திரர்களை அடைய விரும்பவேண்டும். அரசனே! நராதிபனே! தீர்த்தயாத்திரைசெய்பவன், பிறகு, பல்குவை அடையவேண்டும். அதை அடைந்தவன அஸ்வமேதபலனை அடைகிறான்; அதிகமான ஸித்தியையும் அடைவான். ராஜேந்திரனே! ஒருவன், பிறகு, மன அடக்கத்துடன் தர்மபரஸ்தத்தைக் குறித்துச் செல்லவேண்டும். மகாராஜனே! யுதிஷ்டிர! அந்தஇடத்தில் தர்மமானது நித்யவாஸம் செய்கிறது. ஒருவன் அந்தஇடத்தில் கிணறுவெட்டித் தீர்த்தத்தை உண்டுபண்ணி அதனால் ஸ்நானம் செய்து அவ்வண்ணம் சுத்தனாகிப் பிதருக்களுக்கும் தேவர்களுக்கும் நன்கு தர்ப்பணம்செய்தால் பாவத்தினின்று விடுபட்டுத் தேவலோகம்செல்வான். பரமாத்ம த்யானம்செய்கிற மதங்கமஹரிஷியினுடைய ஆஸ்ரமம் அங்கு இருக்கிறது. ஒருமனிதன் இளைப்பையும் துயரையும் போக்குவதும் அழகியதுமான அந்தஆஸ்ரமத்தில்சென்றால் கவாமயநயஜ்ஞ பலனை அடைகிறான். அந்த இடத்தில [4] தர்மத்தை நன்கு அனுஷ்டித்தால் அஸ்வமேதபலனை அடைவான். ராஜஸ்ரேஷ்டனே! ஒருவன், பிறகு, ஸர்வோத்தமமான ப்ரம்மஸ்தானத்தை அடையவேண்டும். ராஜேந்திரனே! புருஷஸ்ரேஷ்டனே! அந்த இடத்தில் ப்ரம்மாவை வணங்கினால், ராஜஸூயத்தாலும் அஸ்வமேதத்தாலும்

---

1 வேறு பாடம். 2 கௌரி = எட்டுவயதுப் பெண், 'அஸ்வமேதம்செய்வான்' என்பது வேறு பாடத்தின் பொருள்.

3 சிவப்பு நிறமும் முகத்திலும் வாலிலும் சிவப்புக்கலந்த வெண்மை நிறமும் குளம்புகளிலும் கொம்புகளிலும் வெண்மை நிறமுமுள்ள காளை.

4 'தாமம் அபிஸம்ஸ்ப்ருஸ்ய' என்பது மூலம், 'தர்மதேவதையின் பிம்பத்தைத் தொடுவதனால்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு

தரும பலனை அடைகிறான். நராதிபனே! நிரதயாதரைச்செய்பவன், பிறகு, ராஜகருஹத்தைக்குறித்துச் செல்லவேண்டும். பிறகு, அந்த இடத்தில் ஸ்நானஞ்செய்தால் கக்ஷீவான்போல மகிழுகிறான். ஒருமனிதன் அந்த இடத்தில் சுத்தனாகி யக்ஷிணிக்கு நிவேதனஞ் செய்ததைப் புஜிக்கவேண்டும். யக்ஷிணியினுடைய அருளால், ப்ரம்மஹத்திதோஷத்தால் விடப்படுகிறான். பிறகு, மணிநாகத்தை அடைந்தால் ஆயிரங்கோதானபலனை அடைகிறான். பாரத! மணிநாக தீர்த்த ஸம்பந்தமானதைப் புசிப்பவன் ஸர்ப்பத்தால் கடிக்கப்பட்டாலும், அவன் தேகத்தில் விஷம் பரவுகிறதில்லை. அந்த இடத்தில் ஓர் இரவு வாஸஞ்செய்தால் ஆயிரங்கோதானஞ்செய்த பயனைப் பெறுவான். அதினின்று பிரம்மரிஷியான கௌதமருடைய பிரியமான வனத்தை அடையவேண்டும். அகலிகையினுடைய மடுவில் ஸ்நானஞ் செய்தால் உத்தமகதியை அடைவான். அரசனே! ஒருமனிதன் அந்த ஆஸ்ரமத்தை அடைந்தால் ஆத்மஸம்பத்தை அடைகிறான். தர்மங்களை அறிந்தவனே! அந்தஇடத்தில் மூவுலகங்களிலும் புகழ்பெற்ற ஒருகிணறு இருக்கிறது. அதில் ஸ்நானஞ்செய்தால் அஸ்வமேதபலனைப் பெறுவான். தேவர்களால் பூஜிக்கப்பட்ட ராஜரிஷியான ஜனகருடைய கிணறு இருக்கிறது. அதில் நீராடினால் விஷ்ணுலோகத்தை அடைவான். ஒருவன், பிறகு, எல்லாப் பாவங்களையும் போக்குகிற விநசனத்தைக்குறித்துச் செல்லவேண்டும்; அவன் வாஜபேய யாகபலனை அடைவான்; ஸோமலோகத்தையும் அடைவான். பரிசுத்தமான எல்லாத்தீர்த்தங்களும் தன்னிடத்தே தோன்றப்பெற்ற கண்டகியை அடைந்து நீராடினால் வாஜபேயயாக பலனை அடைகிறான்; ஸூர்யலோகத்தையும் அடைகிறான். ஒருவன், பிறகு, மூன்று உலகங்களிலும் பிரசித்திபெற்ற விசல்யை என்கிற நதியைஅடைந்தால் அக்னிஷ்டோமபலனை அடைகிறான்; ஸ்வர்க்க லோகத்தையும் அடைகிறான். தர்மங்களை அறிந்தவனே! ஒருவன், பிறகு,அங்கிருந்து வங்கதேசத்திலுள்ள வனத்தை அடைந்து வஸிக்க வேண்டும் மகாராஜனே! அவன் குஹ்யகர்களினிடையில் மகிழுகிறான். இதில் ஸம்சயமில்லை. ஸித்தர்களால் அடையப்பட்ட கம்பனை என்கிற நதியை அடைந்தால் பௌண்டரீகயாகபலனை அடைகிறான்; ஸ்வர்க்கலோகத்தையும் அடைகிறான். பூமிக்கு அதிபதியே! ஒருவன், பிறகு, மஹேஸ்வாருடையதான தாரையை அடைந்தால் அஸ்வமேத பலனை அடைகிறான்; குலத்தையும் நன்குகரையேற்றுகிறான். நராதிபனே! ஒருவன் தேவர்களுடைய புஷ்கரிணியை அடைந்தால் நரகத்தை

அடையான்; அச்வமேதபலனையும் அடைகிறான். ஒருவன், பிறகு, பிரம்மசர்யத்துடனும் மன அடக்கத்துடனும் [1] ஸோம பதத்தை அடையவேண்டும். மாஹேச்வர பதத்தில் ஸ்நானஞ்செய்தால் அச்வமேத பலனை அடைவான். பரதச்ரேஷ்ட! அதில் ப்ரக்யாதிபெற்ற கோடிதீர்த்தங்கள் இருக்கின்றன. ராஜேந்திரனே! மன்னவ! ஆமை வடிவங்கொண்டவனும் கெட்ட எண்ணமுள்ளவனுமான ஓர் அஸுரனால் அபகரிக்கப்பட்ட தீர்த்த கோடியானது பிரபுவான விஷ்ணுவால் மீட்டுக் கொண்டுவரப்பட்டது. யுத்தத்தில் ஸ்திரமாயிருப்பவனே! அந்தத் தீர்த்தகோடியில் மனிதன் ஸ்நானம் செய்யவேண்டும். அவன் பௌண்டரீகயாகபலனை அடைகிறான்; விஷ்ணுலோகத்தையும் அடைகிறான். ராஜச்ரேஷ்டனே! ஒருவன், பிறகு, நாராயணருடைய ஸ்தானத்தைக் குறித்து யாத்திரை செய்யவேண்டும். பாரத! அந்த இடத்தில் எப்பொழுதும் விஷ்ணு ஸாந்நித்யம் செய்துகொண்டிருக்கிறார். அந்த இடத்தில் பரமமா முதலிய தேவர்களும் தபோதனர்களான ரிஷிகளும் ஆதித்யர்களும் வஸுக்களும் ருத்ரர்களும் ஜநார்த்தனரை உபாஸிக்கிறார்கள். ஸாலக்ராமமென்று ப்ரஸித்தி பெற்றவரும் ஆச்சர்யமான செய்கைகளுள்ளவருமான விஷ்ணு இருக்கிறார். மூவுலகத்துக்கும் நாதரும் வரன்களைக் கொடுப்பவரும் அழிவில்லாதவருமான விஷ்ணுவை வணங்கி அச்வமேதபலனை அடைகிறான்; விஷ்ணு லோகத்தையும் அடைகிறான். தர்மங்களை அறிந்தவனே! எல்லாப் பாவங்களினின்றும் விடுவிப்பதான ஒரு கிணறு அந்த இடத்தில் இருக்கிறது. அந்தக் கிணற்றில் நான்கு ஸமுத்திரங்கள் எப்பொழுதும் ஸாந்நித்யம் செய்கின்றன. ராஜேந்திரனே! அதில் ஸ்நானம் செய்தவன் நரகத்தை அடையமாட்டான். மனிதர்களுக்கு இறைவனே! த்ரிலோகநாதரும் வரன்களை அளிப்பவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை வணங்கினால் மேகத்தினின்று விடுபட்ட சந்திரன்போல ப்ரகாசிக்கிறான். ஒருவன் சுத்தனும் மனத்தை நன்கு அடக்கினவனுமாகி ஜாதிஸ்மரமென்கிற தீர்த்தத்தில் ஆசமனம் செய்து ஸ்நானம் செய்தால் முற்பிறப்புகளின் உணர்ச்சியை அடைகிறான். அதில் ஸம்சயமில்லை. வடேச்வரபுரத்தை அடைந்து கேசவரை அர்ச்சித்து உபவாஸத்தால் வேண்டிய வரன்களை அடைகிறான்; ஸந்தேகமில்லை. அந்த இடத்திலிருந்து எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுவிக்கிற வாமனரை அடைந்து தேவ

[1] ஸோமன் = சிவன், உமையுடன் இருப்பவர்.

ரான அந்த ஹரியை வணங்கினால் மனிதன் நரகத்தை அடையமாட்டான். ஒரு மனிதன் எல்லாப்பாவங்களினின்றும் விடுவிக்கிற பரதருடைய ஆஸ்ரமத்திற்குப் போகவேண்டும். அந்த ஆஸ்ரமத்தில் கொடிய பாவங்களையும் போக்குகிற கௌசிகியை அடையவேண்டும். அவன் ராஜஸூயயாக பலனை அடைகிறான். ராஜஸ்ரேஷ்டனே! ஒருவன், பிறகு, உத்தமமான சம்பகாரண்யத்தை அடையவேண்டும். அந்த இடத்தில் ஓர் இரவு வாஸம் செய்பவன் ஆயிரம்பசுக்களைத் தானம் செய்த பலனை அடைவான். பிறகு, அடைதற்கரிய ஜ்யேஷ்டில தீர்த்தத்தை அடைந்து அந்த இடத்தில் ஓர் இரவு வாஸம் செய்தால் ஆயிரம்பசுக்களைத் தானம் செய்த பயனை அடைவான். புருஷஸ்ரேஷ்டனே! அந்த இடத்தில் தேவியையும் மகாகாந்தியுள்ள விஸ்வேஸ்வரரையும் தரிசித்தால் மித்ரா வருணர்களுடைய லோகங்களை அடைகிறான். அவ்விடத்தில் மூன்று நாள் உபவாஸமிருந்தால் அக்கினிஷ்டோமபலனை அடைவான். புருஷஸ்ரேஷ்டனே! ஒருவன் நியமத்துடனும் நியமமான ஆகாரத்துடனும் கன்யா ஸம்வேத்ய தீர்த்தத்தை அடைந்தால் மனு என்னும் ஸ்ருஷ்டிகர்த்தருடைய உலகங்களை அடைகிறான். பாரத! கன்யாதீர்த்தத்தில் செய்யப்படும் அணுஅளவு தானமும் அக்ஷயமானதென்று கடுமையான விரதமுள்ள ரிஷிகள் சொல்லுகிறார்கள். அந்தத் தீர்த்தத்திலிருந்து மூன்று உலகங்களிலும் புகழ்பெற்ற நிர்வீரதீர்த்தத்தை அடைந்து அஸ்வமேத பலனை அடைகிறான்; விஷ்ணுலோகத்தையும் அடைகிறான். மனிதருட் சிறந்தவனே! எந்த மனிதர்கள் நிர்வீரா ஸங்கமத்தில் விறகைக் கொடுக்கிறார்களோ, அவர்கள் துன்பமற்றதான இந்திரலோகத்தை அடைகிறார்கள். அங்கே, மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற வஸிஷ்டருடைய ஆஸ்ரமமிருக்கிறது. அங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவன் வாஜபேயயாகபலனை அடைவான். ஒருவன் பிரம்மரிஷிகளின் கூட்டங்களால் அடையப்பட்ட தேவகூடத்துக்குச் சென்றால் அஸ்வமேத பலனை அடைகிறான்; தன் குலத்தையும் கரையேற்றுவான். ராஜேந்திரனே! பிறகு, எதில் குசிகவம்சத்தில் பிறந்த விஸ்வாமித்திரர் உத்தமமான ஸித்தியைப் பெற்றாரோ கௌசிக முனிவருடைய அந்த மடுவை அடையவேண்டும். வீரனே! பரதஸ்ரேஷ்டனே! கௌசிகியில் ஒரு மாதம் வஸிக்கவேண்டும். அப்படி ஒருமாதம் வஸிப்பதால் அஸ்வமேதத்திற்குரிய புண்யத்தை அடைகிறான். எல்லாத்தீர்த்தங்களிலும் சிறந்த

மஹாஹ்ரதத்தில் வாஸம்செய்பவன் நரகத்தை அடையமாட்டான்; பல ஸுவர்ணங்களின் தானபலனை அடைகிறான். ஒருமனிதன், பிறகு, வீராஸ்ரமத்தில் வஸிக்கின்ற ஸுப்ரம்மண்யரை நமஸ்கரித்தால் அஸ்வமேதபலனை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற அக்நிதாரையை அடைந்து அங்கு நீராடுபவன் அக்நிஷ்டோமபலனை அடைவான். [1] மஹாதேவரும வரன்களை அளிப்பவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை வணங்கி இமயமலைக்கு அருகிலுள்ள பிதாமஹஸரஸை அடைந்து அதில் ஸ்நானம்செய்பவன் அக்னிஷ்டோமபலனை அடைவான். அந்த இடத்திலேயே உலகங்களைப் பரிசுத்தமாகச் செய்கிறதும் மூவுலகங்களிலும பிரஸித்திபெற்றதுமான குமாரதாரையானது பிதாமஹஸரஸினின்று பெருகி வருகிறது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம செய்பவன், 'நான் க்ருதார்த்தன்' என்று தன்னை நினைக்கிறான். (பகலில) ஆறுவது காலம்வரையில் உபவாஸமிருப்பதனால் பிரம்மஹத்திதோஷத்தினால் விடப்படுகிறான். தர்மங்களை அறிந்தவனே! தீர்த்தாடனத்தில் பற்றுள்ளவன், பிறகு, மூவுலகங்களிலும பிரஸித்திபெற்ற மஹாதேவருடைய பத்னியாகிய கௌரியின் மலைச்சிகரத்தை அடையவேண்டும. நரஸ்ரேஷ்டனே! அதில் ஏறி ஸ்தநகுண்டங்களில் செல்லவேண்டும்; ஸ்தநகுண்டத்தில் ஆசமனம் செய்தால் வாஜபேய யாகபலனை அடைவான். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில பற்றுள்ளவன் அஸ்வமேதபலனை அடைகிறான; இந்திரலோகத்தையும் அடைகிறான். ஒருமனிதன பிரம்மசாயத்துடனும் மனஅடக்கத்துடனும் தாம்ராருணதீர்த்தத்தை அடைந்தால் அஸ்வமேதபலனைப் பெறுகிறான்; பிரம்மலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! ஒருவன் நந்தினியில தேவர்களால அடையப்பட்ட கூபத்தை அடைந்தால் நரமேதத்திற்குள்ள புண்யத்தை அடைகிறான். அரசனே! கௌசிகி அருணை என்கிற நதிகளில காளிகா ஸங்கமத்தில் சென்று ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருப்பவன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். கற்றறிந்த மனிதன் ஊர்வசீதீர்த்தத்தை அடைந்து, பிறகு, ஸோமாஸ்ரமத்தையும் கும்பகர்ணாஸ்ரமத்தையும் அடைந்தால், மண்ணுலகில் பூஜிக்கப்படுகிறான். ஒருவன் பிரம்மசர்யத்துடனும் அடக்கமாகிற விர

---

[1] 'வரன்களையளிப்பவரும விஷ்ணுவும் அழிவற்றவருமான மஹாதேவரை' என்றும் கொள்ளலாம்.

தத்துடனும கோகாமுகததில் ஸநானம்செய்தால் முறபிறப்புக்களின் உணர்ச்சியைப் பெறுகிறுன். இது முன்னோர்களால் காணப்பட்டது. பிராம்மணன் ப்ராங்நதியை அடைந்தால மனததூய்மைஉள்ளவன் ஆகிறுன். எலலாப்பாவங்களினின்றும் விடுபட்டுச் சுத்தமான ஆதமாவுடன் இநதிரலோகததையும் அடைகிறுன். பரிசுததமானதும் [1] கிரௌஞ்சகிரியைப் பிளந்த இடமுமான ரிஷபத்வீபத்தை அடைந்து ஸரஸ்வதியில ஸநானமசெய்தால் விமானததிலிருநது கொண்டு பிரகாசிக்கிறுன். மகாராஜனே! ரிஷிகளால அடையப் பட்ட ஔததாலகதீர்ததததை அடைந்து அதில் நீராடினுல் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறுன். ப்ரம்மரிஷிகளால் அடையப்பட்ட புண்யமான தர்மதீர்ததத்தை அடைநதால் வாஜபேயயாகபலனை அடைகிறுன். விமானத்தில் இருந்துகொண்டு பூஜிக்கவும்படுகிறுன். பிறகு, பம்பையை அடைந்து பாகீரதியில் ஜலதர்ப்பணம்செய்து தண்டார்ததததை அடைந்தால் ஆயிரம கோதானபலனைப் பெறு வான். ஒருவன், பிறகு, புண்யமானதும் புண்யாதமாக்களால் அடையப்பட்டதுமான லேலவிகையை அடையவேண்டும்; அவன் வாஜபேயயாகபலனை அடைகிறுன். விமானததிலிருந்துகொண்டு பூஜிக்கவும் படுகிறுன.

---

## எண்பத்துமூன்றுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(நாரதர், புலஸ்தியர் பீஷ்மருக்குச் சொல்லிய தீர்த்த மஹிமையை யுதிஷ்டிரருக்குக் கூறிச் செல்றது.)

மனிதன், பிறகு, உததமமான ஸம்வேத்யதீர்த்தத்தை ஸந்தியாகாலததில் அடைந்து அதில் ஸ்நானம செய்தால் (ப்ரம்ம) வித்தையை அடைகிறுன். இதில் ஸம்சயமில்லை. அரசனே! முற் காலத்தில் ராமருடைய அருளால் உண்டுபண்ணப்பட்ட அந்த லௌஹித்யதீர்ததததை அடைந்தால் அனேகஸுவர்ணங்களைத் தானஞ்செய்தபலனை அடைவான். கரதோயையை அடைந்து மூன்று தினம் உபவாஸமிருக்கிற மனிதன் அஸ்வமேதபலனை

---

1 'கிரௌஞ்சநிஷூதநம்' என்பது மூலம்.

மஹாஹ்ரதத்தில் வாஸம்செய்பவன் நரகத்தை அடையமாட்டான்; பல ஸுவர்ணங்களின் தானபலனை அடைகிறான். ஒருமனிதன், பிறகு, வீராஸ்ரமத்தில் வஸிக்கின்ற ஸுப்ரம்மண்யரை நமஸ்கரித்தால் அஸ்வமேதபலனை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற அக்நிதாரையை அடைந்து அங்கு நீராடுபவன் அக்நிஷ்டோமபலனை அடைவான். [1] மஹாதேவருமவரன்களை அளிப்பவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை வணங்கி இமயமலைக்கு அருகிலுள்ள பிதாமஹஸரஸை அடைந்து அதில் ஸ்நானம்செய்பவன் அக்நிஷ்டோமபலனை அடைவான். அந்த இடத்திலேயே உலகங்களைப் பரிசுத்தமாகச் செய்கிறதும் மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதுமான குமாரதாரையானது பிதாமஹஸரஸினின்று பெருகி வருகிறது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவன், 'நான் க்ருதார்த்தன்' என்று தனனை நினைக்கிறான். (பகலில்) ஆறுவது காலம்வரையில் உபவாஸமிருப்பதனால் பிரம்மஹத்திதோஷத்தினால் விடப்படுகிறான். தர்மங்களை அறிந்தவனே! தீர்த்தாடனத்தில் பற்றுள்ளவன், பிறகு, மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற மஹாதேவருடைய பத்னியாகிய கௌரியின் மலைச்சிகரத்தை அடையவேண்டும். நரஸ்ரேஷ்டனே! அதில் ஏறி ஸ்தநகுண்டங்களில் செல்லவேண்டும்; ஸ்தநகுண்டத்தில் ஆசமனம் செய்தால் வாஜபேய யாகபலனை அடைவான். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில் பற்றுள்ளவன் அஸ்வமேதபலனை அடைகிறான்; இந்திரலோகத்தையும் அடைகிறான். ஒருமனிதன் பிரம்மசர்யத்துடனும் மனஅடக்கத்துடனும் தாம்ராருணதீர்த்தத்தை அடைந்தால் அஸ்வமேதபலனைப் பெறுகிறான்; பிரம்மலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! ஒருவன் நந்தினியில் தேவர்களால் அடையப்பட்ட கூபத்தை அடைந்தால் நரமேதத்திற்குள்ள புண்யத்தை அடைகிறான். அரசனே! கௌசிகி அருணை என்கிற நதிகளில் காளிகா ஸங்கமத்தில் சென்று ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருப்பவன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். கற்றறிந்த மனிதன் உர்வசீதீர்த்தத்தை அடைந்து, பிறகு, ஸோமாஸ்ரமத்தையும் கும்பகர்ணாஸ்ரமத்தையும் அடைந்தால், மண்ணுலகில் பூஜிக்கப்படுகிறான். ஒருவன் பிரம்மசர்யத்துடனும் அடக்கமாகிற விர

---

[1] 'வரன்களையளிப்பவரும விஷ்ணுவும் அழிவற்றவருமான மஹாதேவரை' என்றும் கொள்ளலாம்.

அடைந்து ராமதீர்த்தத்தில் ஸ்நானம்செய்தால் அஸ்வமேத பலனை அடைவான். குருநந்தன! அந்த இடத்திலேயே மதங்கருடைய கேதாரமிருக்கிறது. குருஸ்ரேஷ்டனே! அதில் ஸ்நானம்செய்தால் ஆயிரம் பசுக்களைத் தானம் செய்த பலனை அடைவான். ஒருவன் ஸ்ரீ பர்வதத்தை அடைந்து நதீதீரத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். அவன் வ்ருஷபத்வஜரைப் பூஜித்தால் அஸ்வமேத பலனைப் பெறுகிறான். ஸ்ரீபர்வதத்தில் தேவியுடன் மிக்க காந்தியுள்ள மகாதேவரும் தேவர்களோடுகூட மிக்க ப்ரியமுள்ள பிரமமாவும் வாஸம்செய்தார்கள். ஒருவன் அங்குள்ள தேவஹ்ரதத்தில் சுத்தனாகவும் சுத்த மனமுள்ளவனாகவும் நீராடினால் அஸ்வமேத பலனைப் பெறுகிறான்; குலத்தையுமே கரையேற்றுவான். பாண்டியநாட்டில் அரசர்களால் பூஜிக்கப்பட்ட ரிஷபமலையை அடைந்தால் வாஜபேயயாக பலனை அடைகிறான்; தேவலோகத்திலும் மகிழ்கிறான். பிறகு, அப்ஸரஸுகளுடைய கூட்டங்களால் சூழப்பட்ட காவேரியை அடையவேண்டும். அரசனே! ஒரு மனிதன், அதில் நீராடினால், ஆயிரம் கோதானபலனைப் பெறுவான். ஒருவன், பிறகு, ஸமுத்திரதீரத்தில் கன்யாதீர்த்தத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். ராஜேந்திரனே! அந்தத் தீர்த்தத்தைத் தொட்டால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுகிறான். ராஜேந்திரனே! பிறகு, ஸமுத்திரமத்தியில் எதில் பிரம்மா முதலான தேவர்களும் தபோதனர்களான ரிஷிகளும் பூதங்களும் யக்ஷர்களும் பிசாசர்களும் கின்னரர்களும் மஹோரகர்களும் ஸித்தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் மனிதர்களும் பன்னகர்களும் ஆறுகளும் ஸமுத்திரங்களும் மலைகளும் உமாபதியை உபாஸிக்கிறார்களோ மூவுலகங்களிலும் புகழ்பெற்றதும் எல்லா உலகத்தாலும் வணங்கப்பெற்றதுமான அந்தக் கோகர்ணத்தை அடைந்து அங்கே ஈசானரைப் பூஜித்து மூன்று தினங்கள் உபவாஸமிருக்கும் மனிதன் அஸ்வமேதபலனை அடைகிறான்; ப்ரமதகணங்களுக்குத் தலைமையையும் அடைகிறான். ஒரு மனிதன் (அங்கே) பன்னிரண்டு நாள் வஸித்தால் பரிசுத்தாத்மா ஆவான். அங்கிருந்தே மூவுலகத்தாராலும் பூஜிக்கப்பட்ட காயத்ரியினுடைய ஸ்தானத்தை (அடையவேண்டும்.) அங்கே மூன்றுநாள் வஸிப்பவன் ஆயிரம் கோதான பலனை அடைவான். நராதிபனே! பிராம்மணர்களுக்கு உதாரணம் (அந்த விஷயத்தில்) பிரத்யக்ஷமானதே. அரசனே! அப்படியே கலப்பு ஜாதியாகப் பிறந்தவன் காயத்ரியை (நன்றாக) உச்சரித்தாலும் அது (வசனம்போல) ஸ்வரநியமமில்லாததும்

மஹாஹ்ரதத்தில் வாஸம்செய்பவன் நரகத்தை அடையமாட்டான்; பல ஸுவர்ணங்களின் தானபலனை அடைகிறான். ஒருமனிதன், பிறகு, வீராஸ்ரமத்தில் வஸிக்கின்ற ஸுப்ரம்மண்யரை நமஸ்கரித்தால் அஸ்வமேதபலனை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற அக்நிதாரையை அடைந்து அங்கு நீராடுபவன் அக்நிஷ்டோமபலனை அடைவான். [1] மஹாதேவரும வரன்களை அளிப்பவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை வணங்கி இமயமலைக்கு அருகிலுள்ள பிதாமஹஸரஸை அடைந்து அதில ஸ்நானம்செய்பவன் அக்னிஷ்டோமபலனை அடைவான. அந்த இடத்திலேயே உலகங்களைப் பரிசுத்தமாகச் செய்கிறதும் மூவுலகங்களிலும பிரஸித்திபெற்றதுமான குமாரதாரையானது பிதாமஹஸரஸினின்று பெருகி வருகிறது. அந்ததீர்த்தத்தில் ஸ்நானம செய்பவன், 'நான் க்ருதார்த்தன்' என்று தனனை நினைக்கிறான். (பகலில) ஆறாவது காலம்வரையில் உபவாஸமிருப்பதனால் பிரம்மஹத்திதோஷத்தினால் விடப்படுகிறான். தர்மங்களை அறிந்தவனே! தீர்த்தாடனத்தில் பற்றுள்ளவன், பிறகு, மூவுலகங்களிலும பிரஸித்திபெற்ற மஹாதேவருடைய பத்னியாகிய கௌரியின் மலைச்சிகரத்தை அடையவேண்டும. நரஸ்ரேஷ்டனே! அதில் ஏறி ஸதநகுண்டங்களில் செல்லவேண்டும்; ஸதநகுண்டத்தில் ஆசமனம் செய்தால் வாஜபேயயாகபலனை அடைவான். அந்ததீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில பற்றுள்ளவன் அஸ்வமேதபலனை அடைகிறான; இந்திரலோகத்தையும் அடைகிறான். ஒருமனிதன பிரம்மசர்யத்துடனும் மன அடக்கத்துடனும் தாம்ராருணதீர்த்தத்தை அடைந்தால் அஸ்வமேதபலனைப் பெறுகிறான்; பிரம்மலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! ஒருவன் நந்தினியில தேவர்களால அடையப்பட்ட கூபத்தை அடைந்தால் நரமேதத்திற்குள்ள புண்யத்தைத் அடைகிறான். அரசனே! கௌசிகி அருணை என்கிற நதிகளில காளிகா ஸங்கமத்தில் சென்று ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருப்பவன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். கற்றறிந்த மனிதன் உர்வசீதீர்த்தத்தை அடைந்து, பிறகு, ஸோமாஸ்ரமத்தையும் கும்பகர்ணாஸ்ரமத்தையும் அடைந்தால், மண்ணுலகில் பூஜிக்கப்படுகிறான். ஒருவன் பிரம்மசர்யத்துடனும் அடக்கமாகிற விர

---

[1] 'வரன்களையளிப்பவரும விஷ்ணுவும் அழிவற்றவருமான மஹாதேவரை' என்றும் கொள்ளலாம்.

அடையப்பட்ட சூர்ப்பாரகத்தைக் குறித்துச் செல்லவேண்டும்; ராம தீர்த்தத்தில் ஸ்நானம்செய்தால் பலஸுவர்ணங்களைத் தானஞ் செய்த பலனைப் பெறுவான். ஒருவன் நியமமுள்ளவனும் நியமமான ஆகாரமுள்ளவனுமாகி ஸப்தகோதாவரத்தில ஸ்நானஞ்செய்தால் அதிகமான புண்யத்தைப் பெறுகிறான்; தேவலோகத்தையும் அடைகிறான். ஒரு மனிதன், பிறகு, நியமமுள்ளவனும் நியமமான ஆகாரமுள்ளவனுமாகத் தேவபதத்தை அடைந்தால் தேவஸத்ரத்திற்குரிய புண்யத்தையே அடைகிறான. முற்காலத்தில், ஸாரஸ்வதரிஷியானவர், ப்ரம்மசர்யத்துடன் இந்திரியங்களை அடக்கித் துங்ககாரண்யத்தை அடைந்து அங்கே (முனிவர்களுக்கு) வேதங்களை ஓதுவித்தார். வேதங்கள் மறந்துபோனபொழுது, எவரால எது முன்பு கற்கப்பட்டிருந்ததோ அது அனைத்தும், அங்கிரஸின் குமாரரான அவர் அந்த இடத்தில் ரிஷிகளின் உத்தரீயங்களில் ஸுகமாக நன்கு வீற்றிருந்து ஓங்காரத்தை முறைப்படி நன்கு உச்சரிக்கச் செய்ததால் நன்கு ஞாபகத்துக்கு வந்தது. [1] அந்த இடத்தில் ரிஷிகளும் தேவர்களும் வருணனும் அக்னியும் பிரஜைகளின் பதியும் நாராயணரான ஹரியும் அப்படியே மகாதேவரும் மிக்க காந்தியுள்ள பகவானான பிரம்மதேவரும் தேவர்களுடன் மிக்கதேஜஸுள்ள பிருகுவை யாகம்செய்விப்பதற்காகக் கட்டளையிட்டனர். பிறகு, பகவானான அவர் அப்பொழுது எல்லா ரிஷிகளுக்கும் சாஸ்திரத்தில காணப்பட்ட செய்கையினால் முறைப்படி புநராதானம் செய்வித்தார். அந்த இடத்தில் விதிப்படி ஆஜ்யபாகத்தால் அக்னியைத் திருப்திசெய்து தேவர்களும் ரிஷிகளும் கிரமப்படி தங்கள் தங்கள் வாஸஸ்தானத்திற்குச் சென்றார்கள். ராஜஸ்ரேஷ்டனே! அந்தத் துங்ககாரண்யத்தில் ப்ரவேசித்தவுடனே ஸ்திரீகளுக்கோ புருஷர்களுக்கோ உள்ளபாவங்களெல்லாம் அழிந்து விடுகின்றன. அரசனே! தீரனானவன் நியமமுள்ளவனும நியமமான ஆஹாரமுள்ளவனுமாகி அந்தஇடத்தில் ஒருமாதகாலம் வஸிக்கவேண்டும். அவன் பிரம்மலோகத்தை அடைவான். குலத்தையும் நன்கு கரையேற்றுவான். ஒருவன், மேதாவிகத்தை அடைந்து பித்ருக்களையும் தேவர்களையும் திருப்தியடையச் செய்யவேண்டும. அவன் அக்நிஷ்டோமபலனை அடைகிறான்; ஞாபகசக்தியையும் மேதையையும் அடைகிறான். ஒருவன் இங்கே உலகத்தில் ப்ரஸித்தி பெற்ற காலஞ்சரபர்வதத்தை அடைந்து அங்குள்ள தேவஹ்ரதத்தில்

---

1 இரட்டித்தலால் ஒரு சொல விடப்பட்டது.

மஹாஹ்ரதத்தில் வாஸம்செய்பவன் நரகத்தை அடையமாட்டான்; பல ஸுவர்ணங்களின் தானபலனை அடைகிறான். ஒருமனிதன், பிறகு, வீராஶ்ரமத்தில் வஸிக்கின்ற ஸுப்ரம்மண்யரை நமஸ்கரித்தால் அஶ்வமேதபலனை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்ற அக்நிதாரையை அடைந்து அங்கு நீராடுபவன் அக்நிஷ்டோமபலனை அடைவான். [1] மஹாதேவரும வரன்களை அளிப்பவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை வணங்கி இமயமலைக்கு அருகிலுள்ள பிதாமஹஸரஸை அடைந்து அதில ஸ்நானம்செய்பவன் அக்னிஷ்டோமபலனை அடைவான. அந்த இடத்திலேயே உலகங்களைப் பரிசுத்தமாகச் செய்கிறதும் மூவுலகங்களிலும பிரஸித்திபெற்றதுமான குமாரதாரையானது பிதாமஹஸரஸினின்று பெருகி வருகிறது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம செய்பவன், 'நான் க்ருதார்த்தன்' என்று தன்னை நினைக்கிறான். (பகலில) ஆறுவது காலம்வரையில் உபவாஸமிருப்பதனால் பிரம்மஹத்திதோஷத்தினால் விடப்படுகிறான். தர்மங்களை அறிந்தவனே! தீர்த்தாடனத்தில் பற்றுள்ளவன், பிறகு, மூவுலகங்களிலும பிரஸித்திபெற்ற மஹாதேவருடைய பத்னியாகிய கௌரியின் மலைச்சிகரத்தை அடையவேண்டும. நரஶ்ரேஷ்டனே! அதில் ஏறி ஸதநகுண்டங்களில் செல்லவேண்டும்; ஸதநகுண்டத்தில் ஆசமனம் செய்தால் வாஜபேய யாகபலனை அடைவான். அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து பித்ருக்களையும் தேவர்களையும் பூஜிப்பதில பற்றுள்ளவன் அஶ்வமேதபலனை அடைகிறான; இந்திரலோகத்தையும் அடைகிறான். ஒருமனிதன பிரம்மசாயத்துடனும் மனஅடக்கத்துடனும் தாம்ராருணதீர்த்தத்தை அடைந்தால் அஶ்வமேதபலனைப் பெறுகிறான்; பிரம்மலோகத்தையும் அடைகிறான். நராதிபனே! ஒருவன் நந்தினியில தேவர்களால அடையப்பட்ட கூபத்தை அடைந்தால் நரமேதத்திற்குள்ள புண்யத்தைத் அடைகிறான். அரசனே! கௌசிகி அருணை என்கிற நதிகளில காளிகா ஸங்கமத்தில் சென்று ஸ்நானம்செய்து மூன்றுநாள் உபவாஸமிருப்பவன் எல்லாப்பாவங்களாலும் விடப்படுகிறான். கற்றறிந்த மனிதன் உர்வசீதீர்த்தத்தை அடைந்து, பிறகு, ஸோமாஶ்ரமத்தையும் கும்பகர்ணாஶ்ரமத்தையும் அடைந்தால், மண்ணுலகில் பூஜிக்கப்படுகிறான். ஒருவன் பிரம்மசர்யத்துடனும் அடக்கமாகிற விர

---

[1] 'வரன்களையளிப்பவரும விஷ்ணுவும் அழிவற்றவருமான மஹாதேவரை' என்றும் கொள்ளலாம்.

தரிசித்தும் வந்தனம் செய்தும் பிரதக்ஷிணமாகச் சுற்றிவந்தால் கணங்களுக்குப் பதியாக இருக்கும்பதத்தைப் பெறுவான். கங்கையில் அந்தத தீர்த்தததில ஸ்நானம்செய்தால் பாவங்களால் நன்கு விடப்படுகிறுன். ராஜேந்திரனே! பிறகு, பிரம்மதேவர் முதலிய தேவர்களும் திக்பாலகர்களுடன் கூடின திக்குக்களும் லோகபாலர்களும ஸாததியர்களும் உலகததால்நன்குமதிக்கப்பட்ட பிதருக்களும் ஸநதகுமாரர்முதலிய பரமரிஷிகளும சுததர்களான அங்கிரஸ்முதலிய பிரமமரிஷிகளும நாகர்களும் ஸுபர்ணர்களும் ஸித்தர்களும் ஸூர்யன் முதலிய கிரஹங்களும் நதிகளும் ஸமுத்திரங்களும் கந்தர்வர்களும் அப்ஸரஸுகளும் பிரம்மதேவரால் பூஜிக்கப்பட்ட பகவானுன ஹரியும் எந்த இடததில ஸாந்நித்தியம்செய்கிருர்களோ ரிஷிகளால் புகழப்பட்ட அந்தப் பிரயாகையை அடையவேணடும. எலலாததீர்த்தங்களாலும பூஜிக்கப்பட்ட கங்கையானது எவற்றின் மததியில் ப்ரயாகையினின்று வெளிப்பட்டுவருகின்றதோ அந்த மூன்று அக்னி குண்டங்கள் அவ்விடத்தில் இருக்கின்றன. மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதும் ஸூர்யபுத்திரியும தேவியும் உலகத்தைப் பரிசுத்தமாக்குவதுமான யமுனையானது கங்கையோடு அங்கே கலக்கிறது. கங்கையமுனைகளின் நடுவானது பூமிஎன்கிற பெண்ணுக்கு [1] ஜகனமென்று கருதப்பட்டது. ரிஷிகள ப்ரயாகத்தை ஜகனததின் முடிவிலிருக்கிற ஜநனேந்திரியமாக அறிகிருர்கள். ப்ரதிஷ்டானததுடன் கூடின ப்ரயாகம், அபபடியே கம்பளம், அஶ்வதரம, போகவதீதீர்த்தம் ஆகிய இவைகள் பிரம்மதேவருக்கு யாகவேதி. யுததததில் ஸதிரமா யிருபபவனே! அந்த இடத்தில் வடிவெடுததவையான வேதஙகளும யஜ்ஞங்களும் தபோதனர்களான ரிஷிகளும் பிரம்மாவை உபாஸிக்கின்ருர்கள். தேவர்களும, அவ்வாறே, சக்ரவர்த்திகளான அரசர்களும் யாகஙகளைச் செய்கிருர்கள். பாரதனே! பிரபுவே! அதனுல் ப்ரயாகததை மூவுலகங்களிலும் மிக்க பரிசுததமெனறும் எல்லாத தீர்த்தங்களையுங்காட்டிலும் சிறந்ததென்றும் சொல்லுகிருர்கள். ஒருமனிதன் அந்தப்ப்ரயாகதீர்த்தததின் மகிமையைக் காதால் கேட்பதாலும் அதன்பெயரைச் சொல்வதாலும் மரண

---

1 மேருப்ருஷ்டததைத தலையாகவுடைய பூமி யெனனும பெண்ணுககு ஹரித்வாரம் முதல் (உறுபபுககள் சொல்லி) இநத இடம், 'ஜகனமாகக கருதபபட்டது' என்பது பழைய வுரை.

காலபயத்தினின்றும் பாவத்தினின்றும் விடப்படுகிறான். உலகத்தில் புகழ்பெற்றதான அந்தக் கங்கையமுனைகளின் ஸங்கமத்தில் ஸ்நானம் செய்பவன் ராஜஸூயம் அஸ்வமேதம் என்கிற யாகங்களின் புண்யபலனை அடைகிறான். அது நாற்புறமும் செப்பனிடப்பட்டதான தேவர்களுடைய யாகபூமியன்றோ? பாரத! அந்த இடத்தில் கொடுக்கப்பட்டது சிறிதாயினும் பெரிதாகிறது. ஐயா! வேதவாக்கியத்தாலும் உலகத்தாருடைய வசனத்தாலும் ப்ரயாகத்தில் 1 உயிரை விடுவதைப்பற்றி உன்னுடைய புத்தியானது மாற்றப்படத்தக்கதன்று. குருநந்தன! (ஏனெனில்,) பதினாயிரம் தீர்த்தங்களும் அப்படியே வேறு அறுபதுகோடி தீர்த்தங்களும் இந்தப்ரயாகத்திலேயே ஸாந்நித்யம் செய்கின்றனவென்பது சொல்லப்பட்டிருக்கிறது. நான்குவேதங்களையும் அறிந்தவனுக்கும்உண்மைசொல்லுகிறவர்களுக்குமெந்தப்புண்யமுண்டோ அந்தப்புண்யத்தை மனிதன் கங்கையமுனைகளின் ஸங்கமத்தில் ஸ்நானம் செய்ததனாலேயே அடைகிறான். அந்த இடத்தில் வாஸுகியினுடைய போகவதி என்கிற உத்தமதீர்த்தம் இருக்கிறது. அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்செய்பவன் அஸ்வமேத பலனை அடைவான். குருநந்தன! அந்த இடத்தில் கங்கையில் மூன்று உலகங்களிலும் பிரஸித்திபெற்ற ஹம்ஸப்ரபதனதீர்த்தமும் தசாஸ்வமேதிக தீர்த்தமும் இருக்கின்றன. இவற்றுள், எதில் ஸ்நானம் செய்தாலும் கங்கையானது 2 குருக்ஷேத்திரத்திற்குச் சமமானது. கனகலத்தில் அதனிலும் அதிகபுண்யம் வரும். ப்ரயாகத்தில் அதனிலும் மிகப் பெரும் புண்யம் வரும். எவன் கங்கையில் ஸ்நானம் செய்வனோ அவன் நூறு அகார்யங்களைச் செய்திருந்தாலும் அவனுடைய அந்தத் தீசெயல்களாலுண்டான பாவங்களனைத்தையும் கங்காதீர்த்தமானது, விறகை நெருப்பு எரிப்பதுபோல எரித்து விடுகிறது. க்ருதயுகத்தில் எல்லா இடமும் புண்யமானது; த்ரேதாயுகத்தில் புஷ்கரம் புண்யமானதென்று கருதப்பட்டது; த்வாபரத்தில் குருக்ஷேத்திரம் புண்யமானது; கலியுகத்தில் கங்கை புண்யமானதென்று கருதப்பட்டது. புஷ்கரத்தில் தவம்புரியவேண்

1 'இது காசியில் மரிப்பதுபோலத் தற்செயலாக உயிரை விடுவதைப் பற்றியதேயன்றி, பலாத்காரமாக உயிரை விடுவதான ஹடமரணத்தைப் பற்றியதன்று. ஆதலால், ஹடமரணம் செய்யலாகாது' என்று கூறி, வேதம் ஸ்மிருதி முதலியவற்றிலிருந்து ஆதாரங்காட்டி நிச்சயிப்பது பழைய வுரை.

2 குருக்ஷேத்திரம் தருவது போன்ற புண்யபலனைத் தருமென்பது.

டும். மஹாலயத்தில் தானம் கொடுக்கவேண்டும். மலயமலையிலோ அக்னியில் ஆரோஹணம் செய்யவேண்டும். பருகுதுங்கத்திலோ அநசனவிரதத்தை அநுஷ்டிக்கவேண்டும். புஷ்கரத்திலும் குருக்ஷேத்திரத்திலும் கங்கையிலும் மகத்திலும் ஒருமனிதன் ஸ்நானம் செய்தால் மேலேழுதலைமுறையாரையும் அப்படியே கீழேழுதலைமுறையாரையும் கரையேற்றிவிடுகிறான். கங்கையானது வாக்கினால் சொல்லப்பட்டால் பாவஞ்செய்தவனைப் பரிசுத்தனாக்குகிறது; பார்க்கப்பட்டால் மங்களத்தைக் கொடுக்கிறது; ஸ்நானம் செய்யப்பட்டாலும் பானம் செய்யப்பட்டாலும் ஏழுதலைமுறை வரையில் குலத்தைச் சுத்தியடையச்செய்கிறது. அரசனே! ஒருமனிதனுடைய எலும்பானது எவ்வளவுகாலம்வரையில் கங்கையின் ஜலத்தைத் தொட்டுக்கொண்டிருக்குமோ அவ்வளவு காலம் வரையில் அந்தமனிதன் ஸ்வர்க்கலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். ஒருமனிதன்[1] புண்யதீர்த்தங்களையும் புண்யமான க்ஷேத்ரங்களையும் அடைந்து புண்யத்தைப்பெற்றுத் தேவலோகத்தை அடைந்தவனாகிறான். கங்கைக்கு ஒப்பான தீர்த்தம் இல்லை; கேசவரைக்காட்டிலும் மேலான தெய்வம் இல்லை; பிராம்மணர்களைக் காட்டிலும் மேலான வஸ்து இல்லை. இவ்வண்ணம் பிரமதேவர் கூறுகிறார். மஹாராஜனே! 'எந்த இடத்தில் கங்கை ஓடுகிறதோ அது தேசம்; அது தபோவனம். கங்கையின் கரையை அடுத்திருக்கிற அந்தஇடம் ஸித்திக்ஷேத்திரம்' என்றும் அறியவேண்டும். இது உண்மை. ப்ராம்மணர்கள், ஸாதுக்கள், தனக்கு[2] ஆப்தர்களான ஸ்நேஹிதர்கள், அநுஸரித்துக் கொண்டிருக்கிற சிஷ்யன் ஆகிய இவர்களின் காதில் இதனை ஜபிக்கவேண்டும். இது தன்யமானது; இது பரிசுத்தமானது; இது ஸ்வர்க்கத்துக்கு ஸாதனமானது, இது ஸுகமானது; இது புண்யமானது; இது ரம்யமானது; பாவனமானது; தர்மத்தைவிட்டு விலகாதது; உத்தமமானது; இது மஹரிஷிகளுடைய ரஹஸ்யம்; எல்லாப் பாவங்களினின்றும் மனிதனை விடுவிப்பது. ஒருமனிதன் பிராம்மணர்களுடைய மத்தியில் (இதைக்) கற்றறிந்தால் மாசற்றவனாகி ஸ்வர்க்கத்தை அடைவான். தீர்த்தபரம்பரையைச் சொல்வது ஐஸ்வர்யத்தைத் தருவது; ஸ்வர்க்கலோகத்தை அடைவதற்கும் ஹிதமானது; அவ்வாறே புண்யமானது; பகைவர்களை அடக்

---

[1] 'பொருந்தாமையால் 'யதா' என்னும் ஒரு சொல் விடப்பட்டது.

[2] 'ஆத்மஜ:' என்பது மூலம்; 'தன்னுடைய குமாரன்' என்பது ஆங்கில மொழிபெயர்ப்பு.

குவது; மங்களகரமானது; சிறந்தமேதையை உண்டுபண்ணுவது. (அப்படிச் சொல்வதனால்), புத்திரனில்லாதவன் புத்திரனை அடைகிறான்; பொருளில்லாதவன் பொருளை அடைவான்; அரசன் பூமியை ஜயிப்பான், வைஸ்யன் பொருளை அடைவான்; சூத்ரன் விரும்பின வைகளை விரும்பினபடி அடைவான். பிராம்மணன் படித்தால் (வேதசாஸ்திரங்களில்) கரைகாணுகிறான். சுத்தனாக இருந்து கொண்டு தினந்தோறும் இந்தத் தீர்த்தபுண்யத்தைக் கேட்கும் மனிதன் (முந்தின) பலபிறப்புக்களை அறிகிறான். தேவலோகத்திலும் மகிழ்கிறான். அடையக்கூடியவைவையும் அடைதற்கு அரியவைவையுமாக எந்தத் தீர்த்தங்கள் சொல்லப்பட்டனவோ, அவைகளை, மனிதன் எல்லாத் தீர்த்தங்களையும் தரிசனம் செய்யும் விருப்பத்துடன் மனத்தால் அடையவேண்டும். இந்தத் தீர்த்தங்கள் வஸுக்களாலும் ஸாத்யர்களாலும் ஆதித்யர்களாலும் மருத்துக்களாலும் அஸ்வினீ தேவர்களாலும் தேவர்களுக்கு ஒப்பான ரிஷிகளாலும் புண்யத்தை விரும்பி ஸ்நானம் செய்யப்பட்டன. குருவம்சத்தில் உதித்தவனே! நல்ல விரதமுள்ளவனே! இவ்வண்ணம் நீயும் நியமமுள்ளவனாகவும் புண்ணியத்தைப் புண்ணியத்தால் விருத்தியடையச் செய்பவனாகவும் இந்த விதியினால் தீர்த்தங்களை அடைவாயாக. சாஸ்திரார்த்தங்களைக் கண்டவர்களான பெரியோர்களால் [1] சுத்தமான அந்தக்கரணங்களுடன் முந்தியிருக்கிற ஆஸ்திக்யத்தாலும் ஸ்ருதிகளின் தர்சனத்தாலும் அந்தத் தீர்த்தங்கள் அடையப்படுகின்றன. சாஸ்திரார்த்தங்களின் உண்மையை அறிந்தவர்களும் பெரியோர்களுமான பிராம்மணர்களுடன் நீ தீர்த்தங்களை அடைவாயாக. கௌரவ்ய! விரதங்களைச் செய்யாதவனும், மனத்தை வசப்படுத்தாதவனும், சுத்தி இல்லாதவனும், திருடனும், வக்ரபுத்தியுள்ள மனிதனும், தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யார். ஐயா! நல்ல நடையுள்ளவனும் எப்பொழுதும் தர்மார்த்தங்களைக் காண்பவனுமான உன்னாலோ எல்லாப் பித்ருக்களும் பிரபிதாமஹர்களும் கரையேற்றப்பட்டார்கள். வேந்தே! தர்மங்களை அறிந்தவனே! உன்னுடைய [2] தகப்பனும் பாட்டனும் எல்லா முப்பாட்டன்மார்களும் பிரம்மாவை முதன்மையாகக் கொண்டவர்களும் ரிஷிகளுடைய கூட்டங்களோடு கூடியவர்களுமான தேவர்களும் உன்னுடைய தர்மத்தால் நித்தியமே மகிழ்விக்கப்பட்டார்கள். இந்திரனுக்கு ஒப்பானவனே! நீ வஸுக்களுடைய உலகங்களை அடைவாய். பீஷ்ம! பூலோகத்தில் பெரிதும் அழியா

1 வேறுபாடம். 2 அதிகபாடமான அரைஸ்லோகம் விடப்பட்டது.

ததுமான கீர்த்தியையும அடைவாய்' என்று கூறினார். பகவானான புலஸதியரிஷியானவா ப்ரீதியுள்ள மனததுடன் இவவண்ணம் சொலலிவிட்டுப பீஷ்மரிடததில் அனுமதிபெறறுக்கொண்டு மகிழச்சியுடன் அநத இடததிலேயே மறைந்தார். கௌரவர்களுள் சிறந்தவனே! சாஸதிரஙகளின உணமைப பொருளைக் கண்டறிந்தவரான பீஷமரும புலஸதியருடைய வசனததினால பூமியைச் சுறறிவந்தார்.

மிகக மகிமையுள்ளதும மிகக புண்ணியமானதும எல்லாப்பாவங்களினினறும் விடுவிககினறதுமான இந்தத தீர்த்தயாததிரையானது இவவணணம் 'பிரயாகததில முடிவடைகிறது. எநதமனிதன் இந்த விதியினால பூமியில ஸஞ்சரிப்பனோ அவன் இறந்தபின் நூறு அசுவமேத பலனை முழுமையையும் அனுபவிக்கிறான். குந்தீ நந்தனனே! கௌரவாகளுள மிகச சிறந்தவரான பீஷ்மர் முன்பு அடைந்த தாமததைவிட எட்டுமடஙகான உததமதர்மத்தை அடைவாய். நீ ரிஷிகளையும அழைததுககொண்டு போகிறவனாயிருததலால் உனக்கு எணமடஙகு பலன உண்டாகும. பாரத! குருநந்தன! ராக்ஷஸர்களுடைய கூட்டங்களால் ஆகரமிக்கப்பட்டிருக்கிற இந்ததீர்த்தஙகள உன்னைத தவிர மற்ற அரசாகளால் அடைய முடியாதவைகள். எல்லாத தீர்த்த சரிதஙகளுடனும் கலந்திருப்பதான தேவர்கள் ரிஷிகள் இவாகளுடைய இந்தச சரிததிரததை எவன் படிப்பனோ அலலது கேட்பனோ அவன எல்லாப் பாவஙகளாலும விடபபடுகிறான். மகாராஜனே! ரிஷிகளுள் முக்கியர்களான வால்மீகி, கசுயபர், ஆத்ரேயர், குண்டஜடரர், விசுவாமிததிரர், கௌதமர், அஸிதா, தேவலா, மார்க்கண்டேயர், காலவர், பரதவாஜர், வஸிஷ்டர், உததாலகர், புதரருடனிருக்கும் சௌனகர், தவசிகளுள சிறந்த வ்யாஸர், முனிசுரேஷ்டரான துர்வாஸர், மகா தபஸ்வியான ஜாபாலி ஆகிய தபோதனாகளான இநத ரிஷிசுரேஷ்டர்களனைவரும எந்தத தீர்த்தவிஷயததில எப்பொழுதும் உன்னை எதிர்பார்ததுக்கொண் டிருக்கிறார்களோ அபபடிப்பட்ட இந்ததீர்த்தங்களைக்குறித்து இநதரிஷிகளுடன் தொடர்ந்து செலவாயாக. மகாராஜனே! அளவற்ற தேஜஸுள்ள இந்த லோமசமகரிஷியானவர் வருவார். இவருடன் தொடர்ந்து செல்வாயாக. தர்மஙகளை அறிந்தவனே! என்னோடுகூடவும் இந்தத தீர்த்தங்களை வரிசைப்படி அடைவாயாக. (சந்தனுவாகப் பிறந்த) [1] மகாபிஷ னென்கிற அரசன்போல மிக்ககீர்த்தியை அடை

---

1 வேறுபாடம்.

வாய். கௌரவர்களுள் சிறந்தவனே! தர்மாத்மாவான யயாதி போலவும் அரசனான புரூரவன்போலவும் நீ ஸ்வதர்மத்திலே பிரகாசிக்கிறாய். அரசனான பகீரதன் போலவும் பரஸித்திபெற்ற ராமர் போலவும் நீ எல்லா அரசர்களேயுங்காட்டிலும் (மேன்மையுள்ளவனாக) ஸூர்யன்போல விளங்குகிறாய். மஹாராஜனே! மனுவும் இக்ஷ்வாகுவும் மிக்ககீர்த்தியுள்ள பூருவும் வேனகுமாரனான்ப்ருதுவும் போல நீயும் புகழ்பெற்றிருக்கிறாய். முற்காலத்தில் தேவராஜன் எவ்வாறு வ்ருத்ரனைக் கொன்று எல்லாப் பகைவர்களையும் எரித்து மனக்கவலையை விட்டவனாகி மூவுலகங்களையும் காப்பாற்றினனோ அவ்வாறு நீ பகைவர்களை நாசஞ்செய்து ப்ரஜைகளைப் பரிபாலிப்பாய். தாமரை மலர்போன்ற கண்களையுடையவனே! உன் தொழிலால் ஜயிக்கப்பட்ட பூமியை அடைந்து கார்த்தவீர்யார்ஜுனனைப் போலத் தர்மத்திலே க்யாதியை அடைவாய்' என்று கூறினர்.

மகாராஜனே! ரிஷியான நாரதபகவான் அரசனை இவ்வண்ணம் தேற்றி அனுமதி பெற்றுக்கொண்டு, அந்த இடத்திலேயே மறைந்தார். தர்மாத்மாவான யுதிஷ்டிரரும் அந்த விஷயத்தையே எண்ணிக்கொண்டு, தீர்த்தயாத்திரையைப் பற்றிய புண்யத்தை ரிஷிகளுக்குத் தெரிவித்தார்.

---

## எண்பத்துநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் அர்ஜுனனை விட்டுப்பிரிந்ததனால் தமக்குக் காம்யகவனத்தில் வஸிக்க விருப்பமின்மையைக்கூறி வாஸத்துக்காக வேறு இடத்தைச் சொல்லும்படி தௌம்யரை வேண்டினது.)

யுதிஷ்டிரராஜர், தம்பிமார் புத்திமானான நாரதர் ஆகிய இவர்களின் கருத்தை அறிந்து பிரம்மதேவருக்கு ஒப்பான தௌம்யரைப் பார்த்து, 'புருஷஸ்ரேஷ்டனும் ஸத்யமான பராக்கிரமமுள்ளவனும் மிக்க புஜபலமுள்ளவனும் அளவுகடந்த தைர்யமுள்ளவனுமான அந்த ஜிஷ்ணுவானவன் அஸ்திரங்களைப்பெறுவதற்காகத் தேசாந்தரத்திற்கு என்னால் அனுப்பப்பட்டான். அந்த அர்ஜுனன் வீர்யமுள்ளவன், அன்புள்ளவன்; ஸமர்த்தன்; தவத்தைப்பொருளாகக் கொண்டவன்; பிரபுவான வாஸுதேவரைப்போல அஸ்திரத்தில்

மிக்க தேர்ச்சியுள்ளவன். பிராமமணரே! நான் இந்த இரண்டு க்ருஷ்ணர்களையும் பகைவர்களைக் கொல்லுகிறவர்களென்றும் மிக்க வல்லமையுள்ளவர்களென்றும் அறிகிறேன். அவ்வாறே, வ்யாஸரும், பகைவரை வாட்டுபவர்களான வாஸுதேவர் தனஞ்சயன் இருவரையும்[1] தரியுகர்களென்றும் நேரேவந்த இரண்டு விஷ்ணுக்களென்றும் அறிந்திருக்கிறார். எனக்கு எப்பொழுதும் அவர்களைப் புகழ்ந்துசொல்லிய நாரதரும் அவ்வாறே அறிந்திருக்கிறார். அவ்வண்ணம் நானும் அவ்விருவரையும் நரநாராயணரென்னும் ரிஷிகளென்று அறிகிறேன். 'இவன் ஸாமர்த்தியமுள்ளவன்' என்று எண்ணி, என்னால் அந்த அர்ஜுனன் அனுப்பப்பட்டான். தேவகுமாரனான அர்ஜுனன் இந்திரனைவிடக் குறைந்தவனல்லனென்றெண்ணித் தேவர்களுக்குத் தலைவனான இந்திரனைப் பார்ப்பதற்கும் இந்திரனிடத்திலிருந்து அஸ்திரங்களைப் பெறுதற்கும் அனுப்பப்பட்டான். அதிரதர்களான பீஷ்மத்ரோணர்களும் க்ருபரும் (பிறரால்) ஜயிக்கமுடியாத அச்வத்தாமாவும் திருதராஷ்டிரபுத்திரனால் நன்கு தாங்கப்பட்டவர்கள்; மிக்க பலசாலிகள்; எல்லாரும் வேதங்களை அறிந்தவர்கள்; சூரர்கள்; அப்படியே எல்லாரும் எல்லா அஸ்திரங்களிலும் நல்லதேர்ச்சியுடையவர்கள்; எல்லாரும் மகாரதர்கள்; முக்கியர்கள்; எல்லாரும் சிரமத்தை ஜயித்தவர்கள். மஹாபலசாலிகளான அவர்கள் எப்பொழுதும் அர்ஜுனனோடு யுத்தம்செய்ய விருப்பமுள்ளவர்கள். திவ்யாஸ்திரங்களை அறிந்தவனும் ஸூதபுத்திரனும் மஹாரதனுமான அந்தக் கர்ணனும் அர்ஜுனனுடன் போர்புரிவதில் விருப்ப

---

1 'கிருதயுகத்தில் தாமருடைய மனைவியான மூர்த்தியென்பவளிடம் அவதரித்த நரநாராயணர்கள். அவர்களே த்வாபரயுக முடிவில் கேசவரும் அர்ஜுனனுமாகப் பிறந்தனர். ஆகவே, மூன்று யுகத்திலுமிருந்த புராணபுருஷர்; நம்போன்ற மனிதரல்லர், அல்லது, எல்லாவற்றுக்கும் தலைமை, ஞானம், புகழ், செல்வம், வைராக்கியம், தாமம் ஆகிய பகமென்னும் பெயருள்ள ஆறு ஐச்வர்யமுள்ளவர், அல்லது முற்றறிவுடைமை, த்ருப்தி, அநாதியானபோதம், ஸ்வதந்திரமுடைமை, என்றுமகுறையாத ஆற்றலுடைமை, முடிவில்லாத ஆற்றலுடைமை என்னும் ஆறு அங்கங்களுள்ளவர். சிலர், 'ஞானம் ஐச்வர்யம், வீர்யம் பலம், தேஜஸ் பராக்ரமம் என்னும் மூன்று இரட்டைகளுள்ளவர்' என்பர்; இது ஆதாரமில்லாதது; கூறியது கூறலென்னும் குற்றமுமாகும்: ஆதலால் பொருந்தாது' என்பது பழையவுரை.

முள்ளவன. அஸ்திரவேகமாகிற காற்றின பலமுள்ளதும் பாணங்களாகிறஜவாலையுள்ளதும் கையில நாண்கயிறு உரைவதனுலுண்டாகும சப்தமாகிற ஒலியுள்ளதும் ரஜோகுணத்தின காரியமான குரோதமாகிற புகையுள்ளதும அஸ்திரங்களாகிற வீழ்ச்சியுள்ளதும திருதராஷ்டிர புத்திரர்களாகிற காறறினுல மூட்டப்பட்டதுமான எந்தக் (கர்ணனுகிறநெருப்பானது) காலனுல வைககப்பட்ட ஊழித தீபபோல என்னுடைய ஸைனயரூபமான துருமபுககாட்டை ஸந்தேகமிலலாமல் எரிக்கப்போகிறதோ நனமுகளரிகிற அந்தக கர்ணனுகிற நெருபபை, கிருஷ்ணனுகிற காற்றினுல எழுபபப்பட்டதும திவ்யாஸ்திரஙகளாகிற [1] மினனலுள்ளதும பெரியதும வெண்மையான குதிரைகளாகிற கொககுககளுள்ளதும காண்டீவமென்கிற வானவிலலிருபபதனுல் தாஙகமுடியாததும முழககமுள்ளதும் கிளமபினதுமான இந்த அர்ஜுனனுகிற மேகமானது யுததததில பாணமாகிற (தீர்த) தாரைகளால் அவிக்கப்போகிறது. பகைவரின் பட்டணங்களை ஜயிப்பவனுன அநதப பீபதஸுவானவன இநதிரனிடததினின்று நேரிலேயே திவ்யாஸ்திரங்களனைததையும் முறைப்படி பெறுவான். அவன் அவர்களனைவருக்கும போதுமானவன் என்று எனக்கு எண்ணம இருக்கிறது. சண்டையில் பகைவர்களுக்குப் பிரதிசெய்வது அவனுககுப பெரியகாரியமன்றன்றோ? அபபடிப பட்ட நாஙகள் எலலாரும், அஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டவனும பகைவரை அடக்குபவனுமான [2] அர்ஜுனனைக காணவில்லை. பீபதஸுவானவன் (காரிய) பாரததைததாங்கி வருநதுகிறுனல்லவா? மனிதருட்சிறந்தவரே! நாஙகள் அந்த வீரனை விட்டு இந்தக காம்யகவனததில தரெளபதியுடன் நலவிருபபை அடைகிறேமில்லை. நாங்கள ஸதயமான விக்கிரமமுள்ளவனும வீரனுமான அர்ஜுனனை, மழையில் விருப்பமுள்ளவர்கள் மேகததை எதிர்பார்ப்பதுபோல எதிர்பார்ததுக்கொண்டு சிறிது காலம் வாஸம் செய்யககூடியதும் நல்லதும மிகுதியான ஆகாரங்களுள்ளதும் பழங்களுள்ளதும் சுத்தமானதும் அழகியதும் புண்யஞ்செய்தவர்களால் அடையப்பட்டதுமான அந்த வேறுகாட்டைத் தேவரீர் சொல்வீராக. [3] பிராம்மணர்களிடமிருந்து

---

1 'ஜ்வலந:' என்பது மூலம.

2 'அர்ஜுனனைப பார்ககப்போகிறேமம. பீபதஸுவானவன காரியபாரததைததாஙகி வாட்டமடையமாட்டான' என்பது இஙகிலிஷ் மொழிபெயாபபு

3 'பரதிஶ்ருதாந்' எனபது மூலம்.

கேட்கப்பட்ட பற்பலவிதமான சில ஆஸ்ரமங்களையும் தடாகங்களையும் நதிகளையும் அழகியமலைகளையும் சொல்வீராக. பிராம்மணரே! எனக்கு அந்த அர்ஜுனனைவிட்டு இந்தக் காம்யகவனத்தில் வாஸம் செய்வது ருசிக்கவில்லை. வேறு திசையை நோக்கிச் செல்வோம்' என்று கூறினார்.

---

## எண்பத்தைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(தௌம்யர் யுதிஷ்டிரருக்குக் கீழ்த்திசையிலுள்ள பற்பல தீர்த்தங்களைக் கூறியது.)

(அர்ஜுனனைக் காண்பதில்) ஆவலுள்ளவர்களும் தீனமான மனமுள்ளவர்களுமான அந்தப் பாண்டவர்களனைவரையும் பார்த்துப் பிருஹஸ்பதிக்கு ஒப்பான தௌம்யர் அவ்வாறு தேறுதலடையச்செய்து கூறலானார். பரதஸ்ரேஷ்டனே! தோஷமற்றவனே! அரசனே! நரேஸ்வரனே! எவைகளைச் சொல்லுகின்ற என்னிடத்தினின்று கேட்டு நீ இந்த த்ரௌபதியுடனும் பிராதாக்களுடனும் சோகம் நீங்கினவனாவையோ பிராம்மணர்களால் அங்கீகரிக்கப்பட்ட அந்தப் புண்யாஸ்ரமங்களையும் திசைகளையும் தீர்த்தங்களையும் மலைகளையும் சொல்லுகின்ற என்னிடத்தினின்று கேட்பாயாக. பாண்டவ! அவைகளைக் கேட்பதனாலேயே நீ புண்யத்தை அடைவாய். நரஸ்ரேஷ்டனே! அவைகளுக்குச் சென்றால் நூறுமடங்கு புண்யத்தை அடைவாய். வேந்தனே! யுதிஷ்டிர! தேவகணங்களாலும் ரிஷிகணங்களாலும் அடையப்பட்ட அழகிய கீழ்த்திசையைக் கேள். தோற்றினவரையில் அதனை உனக்குச் சொல்லுவேன். பாரத! எந்தத்திசையில் தனித்தனியாகத் தேவர்களுடைய புண்யதீர்த்தங்கள் இருக்கின்றனவோ தேவர்களாலும் ரிஷிகளாலும் பிரியத்துடன் அடையப்பட்ட அந்தக் கீழ்த்திசையில் நைமிஷம் இருக்கிறது. எந்தத் திசையில் புண்யமானதும் அழகியதும் தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்டதுமான அந்தக் கோமதீநதியும் தேவர்களுடைய யாகபூமியும் ஸூர்ய புத்திரனையமனுடைய யஜ்ஞபசுவின் மாரணஸ்தானமும் இருக்கின்றனவோ, எதில் மங்களமானதும் தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்டதுமான பிரம்மஸரஸ் இருக்கிறதோ

அந்தத திசையில் புண்யமான கிரிவரம் இருக்கிறது. புருஷ ஶ்ரேஷ்டனே! முன்னோர்கள் எவனுடைய விஷயததில், 'பல புததிரர்களை விரும்பவேண்டும; ஒருவனாவது கயைக்குப் போவான்; ஒருவனாவது [1] கௌரி என்கிற கன்னியை மணந்துகொள்வான்; ஒருவனாவது நீலவ்ருஷததை உத்ஸர்ஜனம் செய்வான்; ஒருவனாவது, தனஸந்ததியினால், மூநதிய பத்துத தலைமுறையாரையும் பிந்திய பத்துததலைமுறையாரையும கரையேற்றுகிறான்' என்று சொல்லுகிறார்களோ ராஜரிஷிகளால் பூஜிக்கப்பட்ட அந்தக கயனும் இருக்கிறான. அரசனே! எந்த இடததில் பிதருககளை உத்தேசிததுக் கொடுககப்படும கவ்யஙகளை அக்ஷயமாகச செய்கிற அந்த ஆலமரம் இருக்கிறதென்று பிராம்மணர்கள் சொல்லுகிறார்களோ அந்தஇடத்தில் ஒரு மகாநதியும் இருக்கிறது; அப்படியே கயனுடைய ஸிரஸும் இருககிறது. பிரபுவே! எந்தஇடததில் பிதருக்களை உத்தேசிததுக் கொடுககப்பட்ட அன்னம் அக்ஷயமாகிறதோ புண்யஜலத்துடன கூடின பல்கு என்கிற அந்த மகாநதியும் அந்த இடததில் இருககிறது. பாதஶ்ரேஷ்டனே! தபோதனரான விஶ்வாமிததிரர் எந்தநதியில பிராம்மணத் தன்மையை அடைந்தாரோ அதிகமான கிழங்குகளும் பழங்களுமுள்ள அந்தக் கௌசிகீநதி இருக்கிறது. பகீரதமகாராஜன் எந்த இடத்தில் எந்த நதியின்கரையில் அதிக தக்ஷிணைகளுள்ள பல யாகங்களால் தேவர்களைப் பூஜித்தானோ அந்த இடத்தில் அந்தப் புண்யமான கங்காநதி இருக்கிறது. குருவம்சததில் உதிததவனே! எந்த இடததில் குசிகவம்சததில் பிறந்தவரான விஶ்வாமிதரர் [2] இந்திரனோடு யாகம் செய்தாரோ அந்த உதபலாவததைப் பாஞ்சால நாட்டிலுள்ளதாகச் சொல்லுகிறார்கள். பகவானான பரசுராமர் மனிதர்களின் ஐஶ்வரியத்தை மீறிஇருக்கிற விஶ்வாமிததிரருடைய அந்த ஐஶ்வர்யத்தைக்கண்டு எந்த இடத்தில் அவருடைய வம்ச பரம்பரையில் வந்த கதையை அவ்வாறு பாடினாரோ, அந்தக் கான்யகுப்ஜத்தில் விஶ்வாமிதரர் இந்திரனுடன் ஸோமரஸத்தைப் பானம் செய்தார். பிறகு, அவர் க்ஷத்திரியஜாதியினின்று விலகினார்; 'பிராம்மணனாகிறேன்' என்றும் சொன்னார். வீரனே! எந்த இடததில் பூதாதமாவான பிரமமதேவர் முந்தியே யாகம் செய்தாரோ உலகங்களில் பிரஸித்திபெற்ற அந்தக் கஙகையமுனைகளின்

---

1 எட்டுவயதுபபெண். 'அஶ்வமேதம் செய்வான்' என்பது வேறு பாடததின் பொருள். 2 'புததிரனோடு' என்பது வேறுபாடம.

ஸங்கமம் [1] பவித்ரமானது; ரிஷிகளால் அடையப்பட்டது; தர்மம வளரக் காரணமானது; பாவத்தைப் போக்குவது; சிறந்தது; பரதாசஞுள் மிகச்சிறந்தவனே! அந்தப் (பிரம்மதேவர் யாகஞ்செய்த ஸ்தலமாக இருப்பதால்) பிரயாகமென்று பிரஸித்தி பெற்றது. ராஜஸ்ரேஷ்டனே! அரசனே! அந்தப்ரயாகத்தில் அகஸ்தியருடைய சிறந்த ஆஸ்ரமம் இருக்கிறது. அப்படியே ரிஷிகளால் ப்ரகாசிக்கின்ற அந்தத் தாபஸாரண்யமும் இருக்கிறது. காலஞ்சரகிரியில் பெரிதும் அழகியதும் பரிசுத்தமானதும் மலைகளுள் சிறந்ததும் மங்களகரமானதுமான ஹிரண்யபிந்து என்கிற அகஸ்தியபர்வதம் சொல்லப்பட்டது. கௌரவ்ய! மஹாத்மாவான பரசுராமருக்கு இருப்பிடமான மஹேந்திரமென்கிற மலையும் இருக்கிறது. குந்திநந்தன! அந்த மகேந்திரகிரியில் முந்தியே பிரம்மதேவர் யாகம் செய்தார். யுதிஷ்டிரனே! பிரஜைகளுக்கு அதிபதியே! எந்த இடத்தில் புண்யமான பாகீரதியானது மணிகர்ணிகை என்கிற ஸரஸில் ப்ரவேசித்ததோ, எந்த இடத்தில் புண்யமானதும் பாவத்தை உதறினவர்களால் நிறைந்ததுமான அந்தப் பாகீரதி பிரம்மசாலையென்று பிரஸித்திபெற்றதோ அந்த இடத்தில் அந்தப் பாகீரதியினுடைய தர்சனமும் புண்யமானது. பரிசுத்தமானதும் மங்களத்தை உண்டு பண்ணுகிறதும் உலகத்தில் பிரஸித்திபெற்றதும் தொன்று தொட்டிருப்பதும் மிகச்சிறந்ததுமான மதங்கருடைய கேதாரமென்னும் பெரிய ஆஸ்ரமமும் இருக்கிறது. எந்த இடத்தில் தாகம் கொண்ட நிஷதராஜன் ஜலத்தையும் ஸுகத்தையும் அடைந்தானோ, எந்த இடத்தில் புண்யமானதும் ரிஷிகளால் விளங்குகின்றதுமான தேவவனம் இருக்கிறதோ, எந்த இடத்தில் மலையுச்சியில் பாகுதாநதியும் நந்தையும் பெருகுகின்றனவோ மிகுதியான கிழங்குகளும் பழங்களும் ஜலமுமுள்ள அழகிய அந்தக் குண்டோதமென்கிறமலை இருக்கிறது. மகாராஜனே! கீழ்த்திசையிலுள்ள தீர்த்தங்களும் நதிகளும் மலைகளும் புண்யமான [2] ஆயதனங்களும் என்னால் உனக்குச் சொல்லப்பட்டன. மற்ற மூன்று திக்குகளிலுமிருக்கிற புண்யமான தீர்த்தங்களையும் நதிகளையும் மலைகளையும் புண்யமான ஆயதனங்களையும் என்னிடமிருந்து கேள்.

---

1 பவியென்னும் வஜ்ராயுதம் போன்ற பிறப்பு இறப்பு முதலிய துக்கங்களினின்று காப்பாற்றுவது. 2 இடங்கள்.

## எண்பத்தாறுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(தௌம்யர் தென்திசையிலுள்ள பற்பல தீர்த்தங்களை யுதிஷ்டிரனுக்குச் சொல்லியது)

பாரத! எந்தத்திசையில புண்யமானதும அநேக உத்யான வனங்களுள்ளதும மிகக்ஜலமுள்ளதும தவசிகள வஸிப்பதும் மங்கள காமுமான கோதாவரீநதியானது சொல்லப்படுகிறதோ அந்தத தென் திசையிலுள்ளவையும என்புததிககு எட்டினவரையில விரிவாகக் கூறப்படுகின்றவையுமான அந்தப புண்யதீர்ததங்களைக் கேள. மிரு கங்களாலும பக்ஷிகளாலும் சூழப்பட்டவையும தவசிகளுடைய ஆஸ்ரமங்களால் அலங்கரிக்கப்பட்டவையும பாப பயததைப் போககு கின்றவையுமான வேணை, பீமரதி என்கிற நதிகள இருககின்றன. பரதஸ்ரேஷ்டனே! ரம்யமான துறைகளுள்ளதும அதிக ஜலமுள்ள தும் பராமமணர்களால் அடையப்பட்டதுமான பயோஷ்ணி எனகிற அந்த ந்ருகனென்னும ராஜரிஷியினுடைய நதியும் இருககிறது. மேலும், மகாயோகியும் மிக்க புகழுளளவருமான மார்ககண்டேயர் இங்கே யாகம் செய்கின்ற ந்ருகனுடைய முனனிலையில் பூபதியான அந்த ந்ருகனுடைய வம்சத்தைப பற்றிய காதையைப் பாடினு ரென்று நாம் கேட்டிருக்கிறோம. பயோஷ்ணியிலுள்ள உத்தமமான வராஹ தீர்ததததில யாகம் செய்கின்ற ந்ருகனுடைய யாகத்தில, இந்திரன் ஸோமபானததால் களிப்படைந்தான்; பிராம்மணர்கள தக்ஷிணைகளால் களிப்படைந்தார்கள்; மருததுககள் பரிமாறினார்கள்; தேவர்கள் ஸதஸ்யர்களாக இருநதார்கள். பயோஷ்ணியின் ஜலமானது, கொண்டு வரப்பட்டதானுலும் (அங்கேயே) தரையிலிருப்பதானுலும் காற்றினுல் வீசப்பட்டதானுலும் (அதனைஉபயோகித்தவனுக்கு) மரணம் வரையிலுள்ள பாவத்தைப் போக்குகிறது. ஒருவன், எங்கே ஸ்வர்க்கததைக்காட்டிலும் மிகஉயர்ந்ததும் மாசறறதும் ஆத்மாக்களின் உஜ்ஜீவனார்ததமாக ஏற்படுத்தப்பட்டதும் சிவதனமுமான 1 விஷாணமிருக்கிறதோ அங்கே அதனைத தரிசிததால் மனிதன சிவ புரத்தை அடைவான். ஜலம் மிகுதியாகவுள்ள கஙகை முதலிய

---

1 விஷாணம் எனபது சிவனுடைய வடிவம என்பது இங்கிலிஷ் மொழி பெயர்ப்பு

எல்லா நதிகளும் ஒருபக்கம், (எல்லாத்) தீர்த்தங்களேயுங்காட்டிலும புண்யமான பயோஷ்ணியானது ஒருபககம் என்பது எனது எண்ணம. மிருதியான கிழங்குகளும் கனிகளுமுள்ளதும் மங்களகரமானதும புண்யமுமான மாடராருடையவனம இருக்கிறது. பரதஸ்ரேஷ்டனே! வருணஸ்ரோதஸமென்கிற மலேயில் யூபஸதம்பமும் இருக்கிறது. ப்ரவேணியின் வடபாகததிலும் அவ்வாறே புண்யமான கணவாஸ்ரமத்திலும் தவசிகளுடைய அரண்யங்கள் நான் கேட்டிருநதபடி சொல்லபபட்டன. அப்பா! சூர்ப்பாரகத்தில் மகாத்மாவான ஜமதகனியின் யாகவேதி இருக்கிறது. பாரத! அழகிய பாஷாணதீரததமும் புரஸ்சந்தரையும் இருக்கின்றன. கௌநதேய! அந்த இடத்திலேயே பலஆஸ்ரமங்களுள்ள அசோக தீர்ததமும் இருககிறது. யுதிஷ்டிர! பாண்டியதேசததில் அகஸ்திய தீர்ததமும் வருணதீர்ததமும் இருக்கினறன. புருஷஸ்ரேஷ்டனே! பாண்டியநாட்டிலேயே புண்யமான குமாரீதீர்ததஙகள் சொல்லப்பட்டன. குநதியின் புதல்வனே! தாம்ரபர்ணியைப் பற்றிச் சொல்லுவேன்; அதனைக்கேள். பாரத! மோக்ஷபலனை விரும்புகிற தேவர்களால் எந்த இடததில ஆஸ்ரமததில் தவம் செய்யப்பட்டதோ கோகர்ணமென்று மூவுலகங்களிலும ப்ரஸித்திபெறற அந்த க்ஷேத்திரம இருக்கிறது. ஐயா! அவ்விடத்தில், குளிர்ந்த ஜலமுள்ளதும் அதிக ஜலமுள்ளதும புண்யமானதும் மஙகளகரமானதும மனத்தை அடக்காத மனிதர்களால் அடைய மிகஅரியதுமான அந்தமடு இருக்கிறது. அந்த இடத்திலுள்ள தேவஸஹமென்கிற கிரியில் மரங்களாலும் புல் முதலியவைகளாலும நிறைந்ததும் கனிகளும் கிழஙகுகளுமுள்ளதும் புண்யமானதுமான அகஸ்தியசிஷ்யருடைய ஆஸ்ரமம இருககிறது. அந்தஇடததில் காநதியுள்ளதும் மணிமயமானதும் மங்களமானதுமான வைடூர்யமலே இருக்கிறது. ஏராளமான கிழங்குகளும் பழங்களும் ஜலமுமுள்ள அகஸ்தியருடைய ஆஸ்ரமமும் இருக்கிறது. நராதிபனே! ஸௌராஷ்டிரதேசததிலுள்ள புண்யமான ஆயதனங்களேயும் ஆஸ்ரமஙகளேயும்நதிகளேயும் தடாகஙகளேயும் சொல்லுவேன். பிராம்மணர்கள் அநதஇடத்தில் சமஸோதபேதனததையும் கடலில் மூவுலகங்களிலும் ப்ரக்யாதிபெற்ற பிரபாஸதீர்ததததையும் சொல்லுகின்றனர். அந்தஇடத்தில் தவசிகளால் வசிக்கப்பட்ட மங்களகரமான பிண்டாரகம் இருககிறது. விரைவில் ஸித்தியை உண்டுபண்ணுகிறதும் பெரிது

மான உஜ்ஜயந்தமென்கிறமலையும் இருக்கிறது. யுதிஷ்டிர! அந்த உஜ்ஜயந்தகிரியில தேவரிஷிகளுள சிறந்தவரான நாரதரால் சொலலப் பட்ட புராதனமான ஶ்லோகம் ஒன்று கேட்கப்படுகிறது. அதை நீ தெரிந்துகொள். (அதன்பொருள்), 'மிருகங்களாலும் பக்ஷி களாலும அடையப்பட்டதும புண்யமானதுமான ஸுராஷ்ட்ர தேசததிலுள்ள உஜஜயநதமென்கிற பர்வததில தவத்தால் வாட்டப் பட்ட மேனியை உடையவன் ஸவர்க்கலோகததில கொண்டாடப படுகிறுன்' என்பது. லக்ஷ்மியோடிருப்பவரும பாற்கடலை இருப்பிட மாககொண்டவருமான இநத நாராயணர் ஆதிசேஷனென்கிற கட்டிலை விட்டு மதுராபட்டணததிற்கு வந்துவிட்டாரனறே? எந்தப பட்ட ணததில் புராணரும தேவருமான இந்த மதுஸூதனர் நேரில வஸிககிறுரோ அந்தப் புண்யமான துவாரகையும அங்கே இருக் கிறது. அநதக் கோவிந்தர் ஸநாதனமான தர்மஸ்வரூபியன்றே? எந்தப்பிராம்மணர்கள் வேதங்களை அறிநதிருக்கிறுர்களோ, எந்த ஜனங்கள் வேதாநதசாஸதிரததை உணர்நதிருககிறுர்களோ அவர்கள மஹாதமாவான வாஸுதேவரை ஸநாதனமான தர்மமென்று சொலலு கிறுர்கள. கோவிநதர் பரிசுததவஸ்துக்களுள் சிறந்த பரிசுததவஸது வெனறு சொல்லப்படுகிறுர். தேவர்களுக்குத் தேவரும் ஸநாதனரு மான இந்தப்புண்டரீகாக்ஷர் மூவுலகங்களிலும் புண்யஙகளுக்கும் புண்யமும் மங்களங்களுக்கும் மங்களமுமாயிருக்கிறுர். அழிவற்ற உருவமுள்ளவரும் அழியக் கூடிய வஸதுக்களில் வியாபிததிருப் பவரும் க்ஷேத்ரஜ்ஞரும் பரமேஶ்வரரும் மனத்தினுல் நினைக்க முடியாத ஸ்வரூபமுள்ளவரும மதுவென்கிற அஸுரனை வதமசெய்த வருமான ஸ்ரீ ஹரியானவர் அவவிடததிலேயே இருக்கிறுர்.

---

## எண்பத்தேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(தௌம்யர் மேல்திசையிலுள்ள தீர்த்தங்களை யுதிஷ்டிரருக்குக் கூறியது.)

மேல்திசையில் அவந்தி தேசத்திலிருக்கும் பவித்ரமானவை யும் புண்யமானவையுமான ஆயதனங்களை உனக்குச் சொல்லு

வேன். பாரத! [1] ப்ரியங்கு வ்ருக்ஷங்களடர்ந்த தோப்புக்களாலும் மாமரங்களடர்ந்த தோப்புக்களாலும் அலங்கரிக்கப்பட்டதும் பழுத்திருக்கிற வஞ்சிமரங்களின் வரிசைகளுடன் கூடியதும் பரிசுத்தமுமான நர்மதாநதியானது அந்த இடத்தில் மேற்குமுகமாக ஓடுகிறது. கௌரவர்களுள் சிறந்தவனே! பாரத! மூவுலகங்களிலுமுள்ள [2] தீர்த்தங்களும் புண்யமான ஆயதனங்களும் நதிகளும் காடுகளும் சிறந்த மலைகளும் ப்ரம்மதேவருள்ளிட்ட தேவர்களும் ஸித்தர்களோடும் ரிஷிகளோடும் சாரணர்களோடும்கூட நாமதையிலுள்ள தீர்த்தங்களில் புண்யத்தினமிகுதியால் ஸ்நானஞ்செய்வதற்காக எப்பொழுதும் வருகிறார்கள். எதில் நிதிகளுக்குத்தலைவனும் மனிதர்களை வாகனமாகக்கொண்டவனுமான குபேரன் பிறந்ததான விஸ்ரவஸமுனிவருடைய புண்யமானவீடு இருப்பதாகக் கேட்கப்படுகிறதோ, பரிசுத்தமும் மங்களகரமுமான அந்த வைதூர்யசிகரமென்கிற சிறந்தமலை இருக்கிறது. அந்தமலையில் மரங்கள் எப்பொழுதும் மலர்களாலும் கனிகளாலும் நிறைந்தவைகளாகவும் பசுமைநிறமான இலைகளுள்ளவைகளாகவும் இருக்கின்றன. பூமிக்கு அதிபதியே! மகாராஜனே! அந்தமலையின் உச்சியில் புண்ணியமானதும் மலர்ந்ததாமரைமலர்களுள்ளதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதுமான தடாகம் இருக்கிறது. மகாராஜனே! புண்யமானதும் ஸ்வர்க்கம்போன்றதும் தேவர்கள் ரிஷிகள் ஆகிய இவர்களுடைய கூட்டங்களால் அடையப்பட்டதுமான அந்தமலையில் பலஆச்சர்யங்கள் காணப்படுகின்றன. எந்தநதியின்கரையில் நகுஷனுடைய குமாரனான யயாதிமகாராஜன் (ஸ்வர்க்கத்திலிருந்து) ஸாதுக்களின்நடுவில் விழுந்து மீண்டும் தர்மமானவைகளும் சாஸ்வதமானவைகளுமான உலகங்களை அடைந்தானோ, விஸ்வாமித்திரரால் தவத்தினால் உண்டுபண்ணப்பட்டதும் எல்லாரையும் பரிசுத்தம் செய்வதும் மடுவுள்ளதும் புண்யமானதுறைகளையுடையதுமான ராஜரிஷியினுடைய அந்தநதியானது அந்தமலையில் ஓடுகிறது. அந்த நதியில் புண்யமான ஒருமடு இருக்கிறது. பிரஸித்திபெற்ற மைநாகமென்கிற மலையும் இருக்கிறது. அளவற்ற கிழங்கும் கனிகளுமுள்ள அஸிதமென்கிறமலை இருக்கிறது. யுதிஷ்டிர! அந்தமலையில் கக்ஷஸேனருடைய பாவனமான ஆஸ்ரமம் இருக்கிறது. பாண்டவ! அந்தமலையில்

---

1 ஒருவகைக்கொடி எனினுமாம்.

2 அவற்றின் அதிதேவதைகள் என்பது

ப்ரஸித்திபெற்ற ச்யவனருடைய ஆஸ்ரமமும் இருக்கிறது. பிரபுவே! அந்தஇடத்தில் மனிதர்கள் சிறிதுதவத்தினாலேயே ஸித்தியை அடைகிறார்கள். மகாராஜனே! சாந்தியுள்ளவர்களுள் சிறந்தவனே! மிருகங்களாலும் பக்ஷிகளாலும் அடையப்பட்டதான மனத்தை அடக்கினவர்களான ரிஷிகளுடைய ஜம்பூமார்க்கமென்கிற ஆஸ்ரமம் இருக்கிறது. வேந்தனே! பூமிக்கு நாதனே! அதற்கு அப்புறத்தில் மிக்கபுண்யமானதும் எப்பொழுதும் ரிஷிகளுடன்கூடியதுமான கேதுமாலையும் மேதையையும் கங்காத்வாரமும் இருக்கின்றன. பிரஸித்தியுள்ளதும் புண்யமானதும் பிராம்மணர்களால் அடையப்பட்டதுமான ஸைந்தவாரண்யம் இருக்கிறது. புஷ்கரமென்னும் பெயரால் பிரஸித்திபெற்ற புண்யமான பிரம்மஸரஸும் இருக்கிறது. (தவத்தில்) ஸித்திபெற்றவர்களான வைகானஸர்களென்கிற ரிஷிகளுக்குப் பிரியமான ஆஸ்ரமம் இருக்கிறது. கௌரவர்களுள் சிறந்தவனே! புண்யவான்களுள் சிறந்தவனே! பிரஜைகளைப்படைப்பவரான பிரம்மதேவர், இந்தப் புஷ்கரங்களிலுள்ள புண்யஸ்தலங்களை அடைந்து வஸிப்பதன் பொருட்டு, 'மனத்தினாலாவது புஷ்கரங்களை அடைய விரும்புகிற நல்லமனமுள்ளவனுடைய பாவங்கள் முற்றிலும் நாசமடைகின்றன. அவன் ஸ்வர்க்கத்திலும் ஆனந்தத்தை அடைகிறான்' (என்னும்பொருளுள்ள) காதையைப் பாடினார்.

---

எண்பத்தெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(தௌம்யர் வடதிசையிலுள்ள தீர்த்தங்களை யுதிஷ்டிரனுக்குக் கூறியது)

ராஜஸ்ரேஷ்டனே! வடதிசையிலுள்ள [1] புண்யமான ஆயதனங்களை உனக்குச் சொல்வேன். பிரபுவே! சொல்லுகின்ற என்னிடத்தினின்று எல்லாவற்றையும் அவதானத்துடன் கேள். வீரனே! கதைகளை மனத்தில் அமைத்தல் மங்களகரமான ஸ்ரத்தையை உண்டுபண்ணுகிறது. பாண்டவ! குற்றமற்றவனே! பாரத! யுதிஷ்டிர! குருஸ்ரேஷ்ட! எந்தஇடத்தில் மிக்கபுண்யமானதும் மடுக்களுடன்கூடியதும் தீர்த்தங்களின் வரிசைகளுள்ளதுமான

1 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

ஸரஸ்வதீநதி இருக்கிறதோ, எந்தஇடத்தில் யமுனாநதியானது மிக்க வேகத்துடன்கூடியதாகி ஸமுத்திரத்தைக்குறித்துச் செல்லுகிறதோ, எந்த இடத்தில மிக்கபரிசுத்தமானதும் மிக்கபுண்யமுமான பிலக்ஷாவ தரணமென்கிறதீர்த்தம் இருக்கிறதோ, எந்த இடத்தில் பிராமம ணர்கள் ஸரஸ்வதியில் ஸ்நானத்துக்காக வந்திருக்கிறவர்களுடன் யாகம்செய்து அவப்ருதத்தைச் செய்கிறார்களோ, எந்தஇடத்தில் புண்யமானதும் திவ்யமானதும் மங்களகரமுமான அக்னிசிரஸ் என்கிற க்ஷேத்ரமானது சொல்லப்படுகிறதோ, எந்தஇடத்தில் (ஸ்ருஞ்சயனுடையபுத்திரனை) ஸஹதேவன், இதேவிஷயத்தில இந்திரனால் கானம்பண்ணப்பட்டதும இவ்வுலகத்தில பிராம்மணர் களால கானம்செய்யப்படுகின்றதும், 'ஸஹதேவனால் யமுனை ஆற்றின அருகில் செய்யப்பட்ட அவனுடைய அக்னிசயனங்கள் லக்ஷக்கணக்கான தக்ஷிணையுள்ளவையாயிருந்தன' (என்னும் பொரு ளுள்ளதுமான) அந்தக்காதை உலவுகின்ற [1] சம்யாக்ஷேபமென்னும யாகத்தைச் செய்தானோ, அந்த இடத்திலேயே பெரும புகழ்பெற்ற சக்கரவர்த்தியான பரதனென்கிற அரசன் [2] நூற்றுநாற்பத்தெட்டு அஸ்வமேதயாகங்களைச் செய்தான். ஐயா! எந்த ஆஸ்ரமமானது முனபோலவே பிராம்மணர்களுக்கு விரும்பினவற்றை உண்டுபண்ணு கிறதென்று கேட்கப்படுகிறதோ, மிக்க புண்யமானதும் பிரஸித்தி பெற்றதுமான அந்தச் சரபங்கருடைய ஆஸ்ரமம் இருக்கிறது. மகா ராஜனே! குந்திபுத்திரனே! எந்தஇடத்தில் முற்காலத்தில் வால கில்யரிஷிகளால் யாகம் செய்யப்பட்டதோ எப்பொழுதும் ஸாதுக் களால பூஜிக்கப்பட்ட அந்த ஸரஸ்வதீ நதியானது ஓடுகிறது. யுதிஷ்டிர! மனிதருட்சிறந்தவனே! குந்திபுத்ர! மனிதர்க்கதிபதியே! பரதர்களுள் மிகச்சிறந்தவனே! எந்தஇடத்தில் மிக்க பரிசுத்தமான தும பிரஸித்தியுள்ளதுமான த்ருஷத்வதீநதியானது ஓடுகிறதோ எந்த இடத்தில் ந்யக்ரோதரென்கிற பெயருள்ளவரும் பாஞ்சால தேசத் துக்கு நன்மையைச் செய்பவருமான பாஞ்சால்யரும் தால்ப்யகோ ஷரும தால்ப்யரும் வஸிக்கிறார்களோ, எந்தப் பூமியில் அழி வற்ற புகழ்பெற்றவரும் அளவற்றகாந்தியுள்ளவரும் மஹாத் மாவுமான ஸுவ்ரதருடைய மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற

---

1 பலசாலியான ஒருவன் எறியும் சம்யையென்னும் தடி போய விழுந் தூரம இடமமைத்துச் செய்யும யாகம்.

2 'முப்பத்தைந்து' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

புண்யாஶ்ரமமானது இருப்பதாகச் சொல்லப்படுகிறதோ எந்த இடத்தில கிருஷ்ணமென்கிற மானின் நிறமுள்ளவர்களும் [1] நிறமில்லாதவர்களும் பிரஸித்தர்களும் வேதங்களை அறிந்தவர்களும் வேதங்களிலுள்ள நுட்பமான அர்த்தங்களை நன்கு கற்றறிந்தவர்களும் [2] வேதங்களையும் வித்தைகளையும அறிந்தவர்களுமான நரநாராயணர்கள் இருவரும் புண்யமான முக்கிய யாகங்களைச் செய்தார்களோ, முற்காலத்தில இந்திரனோடும வருணனோடும் கூடின தேவர்கள் பலவாறாக ஒன்றுசேர்ந்து வந்து அந்த விசாகயூபத்தில் தவம புரிந்தார்கள். அதனால அந்த இடம மிகக பரிசுத்தமானது. மகா பாக்கியமுள்ளவரும் மிக்க புகழுள்ளவரும் பிரபுவுமான ஜமதக்னி மஹரிஷியானவர், எந்த யாகத்தில சிறந்த எல்லா நதிகளும் தத்தம் தீர்த்தத்தை எடுத்துவந்து சூழ்ந்துகொண்டு ரிஷிகளுள் சிறந்தவரான (அவரை) நேரில உபாஸித்தனவோ அந்த யாகத்தைப் புண்யமாகவும் ரம்யமாகவுமிருக்கிற பலாசகங்களில் செய்தார். மகாராஜனே! வீரனே! மேலும், அந்த இடத்தில் மஹாதமாவான ஜமதக்னியினுடைய தீக்ஷையைப் பார்த்து விஶ்வாவஸுவானவன, அப்பொழுது 'யாகஞ் செய்கின்ற மஹாதமாவான ஜமதக்னியினுடைய யாகத்தில் நதிகள் வந்து பிராமமணர்களை மதுவினால திருப்தியடையச் செய்தன' (என்னும பொருளுள்ள) இந்த ஶ்லோகத்தைத் தானாகவே பாடினான். யுதிஷ்டிர! கந்தர்வர்களாலும் யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் அப்ஸரஸுகளாலும் அடையப்பட்டதும் கிராதர்களுக்கும் கின்னரர்களுக்கும் இருப்பிடமானதும் மலைகளுள் சிறந்ததுமான மலையைக் கங்கையானது வேகத்தால் பிளந்தது. அது கங்காதவாரமென்று சொல்லப்படுகிறது. வேந்தே! பிரம்மரிஷிகளுடைய கூட்டங்களால அடையப்பட்ட அந்தக் கங்காத்வாரமானது புண்யமானதென்று சொல்லப்படுகிறது. கௌரவ்ய! அப்படியே, ஸநத்குமாரர் கனகலத்தைப் புண்யமானதென்று கூறுகிறார். எந்த மலையைப் புரூரவமகாராஜன் அடைந்தானோ அந்தப் புரு என்கிற ப்ரஸித்தமான மலையும் இருக்கிறது. அரசனே! மஹரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்ட எந்த இடத்தில் ப்ருகு மஹரிஷி தவம்செய்தாரோ [3] ப்ருகுதுங்கமென்கிற பெரிய மலையானது அந்த ஆஶ்ரமமென்று பிரஸித்தி

---

1 'செமமை வெணமை கருமை ஆகிய ரஜஸ் ஸத்வ தமோகுணங்களில்லாதவர்கள்' என்பது பழையவுரை. 2 வேறு பாடம.

4 'ப்ருகுதுங்கம்' என்பதும் இதுவே.

பெற்றது. பரதஸ்ரேஷ்ட! எவர், சென்றதும் வருவதும் நிகழ்வதுமாயிருப்பவரோ அவர் நாராயணர்; பிரபு; விஷ்ணு; சாஸ்வதர்; புருஷோத்தமர். மிக்க புகழுடையவரான அவருடைய மூவுலகங்களிலும் ப்ரஸித்திபெற்ற புண்யாஸ்ரமமானது புண்யமான விசாலை என்கிற பதரியின் ஸமீபத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. வேந்தே! முற்காலத்தில் விசாலை என்கிற பதரியின ஸமீபத்தில் கங்கையானது உஷ்ணஜலமுள்ளதாகவும் குளிர்ந்த ஜலமுள்ளதாகவும் ஸவர்ணமயமான மணலுள்ளதாகவும் ஓடிற்று. எந்த இடத்தில ரிஷிகளும், மஹா பாக்கியசாலிகளும மிக்க தேஜஸுள்ளவர்களுமான தேவர்களும், தேவரும் பிரபுவுமான நாராயணரை அடைந்து எப்பொழுதும நமஸ்கரிக்கின்றார்களோ, எந்த இடத்தில் தேவரும் பரமாத்மாவும் ஸநாதனருமான நாராயணர் இருக்கிறாரோ அந்த இடத்தில் எல்லா உலகங்களும தீர்த்தங்களும் ஆயதனங்களும் மிச்சமின்றி இருக்கின்றன. எதை அறிந்து சாஸ்திரங்களைக் கண்ணாகக் கொண்டிருக்கிற வித்வான்கள் சோகத்தை அடைகிறதில்லையோ அது புண்யமானது; அது பரப்ரம்மம்; அது தீர்த்தம்; அது தபோவனம்; அது மேன்மையுள்ளது; சிறந்த தெய்வம்; பிராணிகளுக்குச் சிறந்த அதிபதி; அது சாஸ்வதமாயுள்ளது; எல்லாவற்றிலும் சிறந்தது; (உலகத்தைப) போஷிக்கிறது; அது சிறந்த ஸ்தானம். அந்த இடத்தில தேவரிஷிகளும் ஸித்தர்களும் எல்லாத தபோதனர்களும் வஸிக்கிறார்கள். எந்த இடத்தில் தேவர்களுக்கெல்லாம் ஆதியாக இருப்பவரும் மகாயோகியுமான மதுஸூதனர் இருக்கிறாரோ அந்த இடமானது புண்யக்ஷேத்திரங்களுள் புண்யமான க்ஷேத்திரம். இதில உனக்கு ஸம்சயம் உண்டாகவேண்டாம். பூமிக்கு இறைவனே! அரசனே! புருஷஸ்ரேஷ்டனே! பூமியிலுள்ள புண்யமான இந்தத் தீர்த்தங்களும் ஆயதனங்களும சொல்லப்பட்டன. இவைகள் வஸுக்களாலும் ஸாத்தியர்களாலும் ஆதித்யர்களாலும் மருத்துக்களாலும் அஸ்வினீ தேவர்களாலும் தேவர்களுக்கு ஸமானர்களும் மஹாத்மாக்களுமான ரிஷிகளாலும் அடையப்பட்டவை. குந்தீநந்தன! பிராம்மணஸ்ரேஷ்டர்களோடும் மஹா பாக்கியசாலிகளான ஸஹோதரர்களோடும் சேர்ந்து நீ இவைகளில் யாத்திரை செய்கின்ற வனுகிக் கவலையை வெல்வாய்' என்றார்.

---

## எண்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசர், இந்திரன் கட்டளைப்படி, அர்ஜுனன் பாசுபதம் முதலிய அஸ்திரங்களைப் பெற்றுக்கொண்டதை யுதிஷ்டிரருக்குச் சொல்லி இந்திரன் சொல்லிய செய்தியையும் தெரிவித்தது.)

கௌரவநந்தனரே! தௌம்யர் இவ்வண்ணம் சொல்லிக் கொண்டிருக்கையில், மஹாதேஜஸ்வியான அந்த லோமசரிஷியான வர் அங்குவந்தார். பரிஜனங்களுடனிருப்பவரும் பாண்டவர்க ளுள் மூத்தவருமான அரசரும அந்தப பிராம்மணர்களும், மிக்க பாக்கியமுள்ளவரான அந்த லோமசரை, ஸ்வர்க்கத்தில் இந்திரனைத் தேவர்கள் உபசரிப்பதுபோலத தக்கபடி உபசரித்தார்கள். தர்ம நந்தனரான யுதிஷ்டிரர் நியாயப்படி நன்றாகப்பூஜித்து அவருடைய வரவின் காரணத்தையும் தேசாடனததிலுள்ள பயனையும் வினவினார். பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரால் கேடகப்பட்டவரும் உதாரமன முள்ளவருவான அந்தலோமசர் பிரீதியுள்ளவராக மதுரமான வாக்கி னால் பாண்டவர்களை மகிழ்வித்துககொண்டு பின்வருமாறு கூற லானார்.

'குந்தீ நந்தன! எல்லா உலகங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருக் கிறேன். தற்செயலாக இந்திரனுடையமாளிகையை அடைந்தேன். அந்தஇடத்தில் தேவராஜனைப் பார்த்தேன். வீரனும் ஸவ்யஸாசியும் இந்திரனுடைய அர்த்தாஸனத்தில்வீற்றிருப்பவனுமான உன்னுடைய ஸஹோதரனையும் பார்த்தேன். புருஷச்ரேஷ்டனே! அப்படி அடைந்திருக்கிற அர்ஜுனனைக்கண்டு எனக்குப் பெரிதான ஆச்சர்யம் உண்டாயிற்று. அந்தஇடத்தில் தேவராஜன் என்னைநோக்கி, 'பாண்டு புத்திரர்களைக் குறித்துச் செல்வீராக' என்று சொன்னான். அப்படிப் பட்டநான் இந்திரனுடையவசனததினாலும் மஹாத்மாவான பார்த்த னுடையவசனததினாலும் இளையஸஹோதரர்களுடனிருக்கும்உன்னைப் பார்க்கவிருப்பமுள்ளவனாகி விரைவாகவந்தேன். ஐயா! பாண்டவர் களை ஆனந்தமடையச்செய்பவனே! உனக்குப் பெரிய பிரியததைச் சொல்வேன். அரசனே! பிராதாக்களுடனும் திரௌபதியுடனும் சேர்ந்து அதனைக் கேட்பாயாக. பரதர்களுள்சிறந்தவனே! பிரபு வே! மிக்கபுஜபலமுள்ள அர்ஜுனன் எந்த அஸ்திரத்தைப் பெறும்

படி உன்னால் சொல்லப்பட்டானோ ஒப்பற்ற அந்தஅஸ்திரமானது பார்த்தனால ருத்திரரிடத்தினின்று பெற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது. பிரமமசிரஸென்றுபிரஸித்திபெற்ற எந்த அஸ்திரமானது தவத்தினால் ருத்திரரை வந்தடைந்ததோ அம்ருதத்திலிருந்து உண்டான அந்த ரௌத்ராஸ்திரமானது (ப்ரயோக) மந்திரத்துடனும் திருப்பியழைக்குமுறையுடனும் பிராயச்சித்த மங்களத்துடனும் ஸவ்யஸாசியினால் அடையப்பட்டது. யுதிஷ்டிர! குருநந்தன! வஜ்ரத்தையும் தண்டம முதலிய வேறுஅஸதிரங்களையும் திவ்யாஸதிரங்களையும் அளவுகடந்தவிக்கிரமமுள்ள அர்ஜுனன் யமனிடத்தினின்றும் குபேரனிடத்தினின்றும வருணனிடத்தினின்றும் இந்திரனிடத்தினின்றும் கற்றுக்கொண்டான. விப்வாவஸுவின் குமாரனிடமிருந்து கானத்தையும் நர்த்தனத்தையும ஸாமகானத்தையும் நான்குவித வாத்தியங்களையும் முறை தவறாமல விதிப்படி பெற்றுக்கொண்டான. மனோதைர்யமுள்ளவனும் குந்தீ புத்ரனும் உன்னுடைய தம்பிக்குத் தம்பியுமான பீபத்ஸுவானவன் இவ்வண்ணம் அஸதிரங்களில் தேர்ச்சியடைந்து காந்தர்வவேதத்தையும் (கற்று) ஸுகமாக வஸிக்கிறான். யுதிஷ்டிர! எதற்காகத் தேவராஜன் என்னைநோக்கி இந்த வசனத்தைச் சொன்னானோ அதனையும் உனக்குச்சொல்லுவேன். என்னிடமிருந்து தெரிந்துகொள்.

இந்திரன், 'பிராம்மணோத்தமரே! தேவரீர் மானிட உலகத்துக்கும் போவீர். இதில் ஐயமில்லை. அங்கே யுதிஷ்டிரனைப் பார்த்து, 'உன்னுடைய தம்பியான அர்ஜுனன் அஸதிரங்களில் தேர்ச்சியடைந்தவனாகித் தேவர்களால் செய்யமுடியாத பெரிதான தேவகார்யத்தைச் செய்து விரைவில வருவான். நீ ப்ராதாக்களோடுகூட உன்னைத் தவத்துடன் சேர்ப்பாயாக. தவத்தைவிடச் சிறந்தது இல்லையன்றோ? தவத்தினால (மனிதன்) மகிமையை அடைகிறான. பரதர்களுள் சிறந்தவனே! நானும் கர்ணனை ஸத்யம் தவறாதவனும் மிக்க உத்ஸாகமுள்ளவனும் மிக்க வீர்யமுடையவனும் மிக்க பலமுள்ளவனும் மகா யுத்தங்களில் நிகரற்றவனும் மகா யுத்தங்களில் ஸாமர்த்தியமுள்ளவனும் பெரிய வில்லைத் தரித்தவனும் வீரனும் பெரிய அஸ்திரங்களையுடையவனும் மிக்க அழகுள்ளவனும் மஹேப்வரருடைய குமாரரான ஸுப்ரமண்யருக்கு ஒப்பானவனும் ஸூர்யனுடைய புதல்வனும் ப்ரபுவுமானவனென்று உள்ளபடி அறிவேன். அப்படியே அர்ஜுனனையும் உன்னதமான தோள்களுள்ளவனும் பிறப்பிலமைந்த மிக்க ஆண்மையுள்ளவனுமாயிருப்

பவனென்றும் உள்ளபடி அறிவேன். அந்தக் கர்ணன் யுத்தத்தில் அர்ஜுனனுடைய பதினாறில் ஓர் அம்சத்துக்கும் ஈடாகான். பகைவரை அடக்குகிறவனே! கர்ணன் காரணமாக எந்தப்பயம் உன்னுடைய மனத்தில் நிலைபெற்றிருக்கிறதோ அந்தப்பயத்தையும் ஸவ்யஸாசியானவன் வந்தவுடனே (கர்ணனுடைய கவசகுண்டலங்களைப் பறிப்பதால்) போக்குவேன். வீரனே! இந்தத் தீர்த்தயாத்திரையைக் குறித்து நீ அறியக் கருதுவதை உனக்கு அந்த லோமசமஹரிஷியானவர் ஸந்தேஹமின்றிக் கூறுவார். பாரத! தவத்துடன் கூடினதாகத் தீர்த்தங்களிலுள்ள பலனை இந்த ப்ரம்மரிஷியானவர் உனக்குச் சொல்வார். அது வேறுவிதமாக எண்ணத்தக்கதன்று' என்று என் வசனத்தால் சொல்வீராக' என்று சொன்னான்.

---

## தொண்ணூறுவது அத்தியாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(லோமசர் தம்முடன் சேர்ந்து தீர்த்தயாத்திரை செய்யவேண்டுமென்று அர்ஜுனன் சொல்லியதை யுதிஷ்டிரருக்குத் தெரிவித்ததும், யுதிஷ்டிரர் லோமசருடைய கட்டளையினால் அதிக பரிஜனங்களை விட்டதும்.)**

யுதிஷ்டிர! தனஞ்சயன் சொல்லியதையும் கேட்பாயாக. 'தபோதனரே! என் பிராதாவான யுதிஷ்டிரரைத் தர்மத்திலமைந்த புத்தியுடன் சேர்ப்பீராக. நீரோ உத்தம தர்மங்களையும் தவங்களையும் அறிந்திருக்கிறீர். ஸ்ரீமான்களான மன்னர்களுடைய ஸநாதன தர்மத்தையும் அறிகிறீர். அப்படிப்பட்ட தேவரீர் மனிதனுக்கு எது பரமபாவனமோ அதை அறிகிறீர். தேவரீர் அந்தத் தீர்த்த புண்யத்துடன் பாண்டவர்களைச் சேர்ப்பீராக. அந்த அரசர் எவ்வாறு தீர்த்தங்களைக்குறித்து யாத்திரை செய்வரோ, பசுக்களை எவ்வாறு தானம் செய்வரோ அவ்வாறு எல்லாவிதத்தாலும் செய்யக்கடவீர்' என்று என்னை அர்ஜுனன் சொன்னான். 'இவர் உம்மால் ரக்ஷிக்கப்பட்டவராகி எல்லாத்தீர்த்தங்களையுங் குறித்து யாத்திரை செய்யவேண்டும். நுழைய முடியாத மேடுபள்ளமான காடுகளில் ராக்ஷஸர்களிடத்திலிருந்து காப்பாற்றப்படவேண்டும். பிராம்மணனைத்

தமரே! ததிசர் தேவேந்திரனைக் காத்ததுபோலவும் அங்கிரஸ்மகரிஷி ஸூர்யனைக் காத்ததுபோலவும் குந்தீபுத்திரர்களை ராக்ஷஸர்களிடத்தி லிருந்து பாதுகாப்பீராக. ராக்ஷஸர்கள் அனேகர்கள் இருக்கிறார் களன்றோ? மலைக்கு ஒப்பான உருவங்களுள்ள ராக்ஷஸர்கள் உம்மால் காக்கப்பட்ட குந்தீபுத்ரர்களின் பக்கத்தில் திரும்பமாட்டார்கள்' என்றான். அப்படிப்பட்ட நான் இந்திரனுடைய வசனத்தினாலும் அர்ஜுனனுடைய தூண்டுதலாலும் பயங்களினின்று உன்னை ரக்ஷித் துக்கொண்டு உன்னுடன்கூட ஸஞ்சரிப்பேன். குருநந்தன! என் னால் முந்தித் தீர்த்தங்கள் இரண்டுமுறை பார்க்கப்பட்டிருக்கின்றன. அந்தத் தீர்த்தங்களையே உன்னுடன்கூட இதோ மூன்றாவது முறை பார்க்கப்போகிறேன். யுதிஷ்டிர! மகாராஜனே! புண்யம்செய்த வர்களான மனுமுதலிய ராஜ ரிஷிகளாலும் (நரக) பயத்தைப் போக்குகிற இந்தத் தீர்த்தயாத்திரையானது செய்யப்பட்டிருக் கிறது. கௌரவ்ய! உள்ளும்புறமும் ஒத்திராதவனும் மனத்தை அடக்காதவனும் (வேத) வித்தை இல்லாதவனும் பாவத்தைச் செய் பவனும் வக்ரபுத்தியுள்ளவனுமான மனிதன் தீர்த்தங்களில் ஸ்நா னம் செய்யமாட்டான். நீயோ எப்பொழுதும் தர்மத்தில் புத்தியுடை யவன்; தர்மங்களை அறிந்தவன்; சொல்தவறாதவன். மீண்டுமே எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டவனாவாய். கௌந்தேய! பாண்டவ! பகீரதராஜனும் கயன்முதலிய அரசர்களும் யயாதியும் இருந்ததுபோலவே நீயும் இருக்கிறாய்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'மஹரிஷியே! ஸந்தோஷத்தினால் இந்த வாக் கியத்திற்கு ஓரிடத்திலும் உத்தரத்தை நன்றாகக் காணவில்லை. தேவராஜன் என்னை நினைக்கிறானென்பதைக் காட்டிலும் மேலா னது எது இருக்கிறது? எவனுக்குத் தேவரீரோடு சேர்க்கையோ, எவனுக்குத் தனஞ்சயன் பிராதாவோ, எவனை இந்திரன் நினைக்கி றானோ அவனைவிட மேலானவன் யார்? தீர்த்தங்களுக்குச் செல்வ தைக்குறித்துப் பகவானான இந்திரன் என்னை நோக்கிச் சொல்லுகிற இந்த நிச்சயமானது தௌம்யருடைய வசனத்தினால் முந்தியே என் னால் செய்யப்பட்டிருக்கிறது. பிராம்மணரே! ஆதலால், தீர்த்தங் களைத் தரிசனம் செய்வதற்காக எப்பொழுது தேவரீர் செல்ல விரும்புகிறீரோ, அப்பொழுதே தீர்த்தங்களை உத்தேசித்து நான் புறப்படுவேன்; இது எனனுடைய சிறந்த நிச்சயம்' என்று சொன் னார். லோமசர், தீர்த்தயாத்திரையில் மனம்வைத்தவரான பாண் டவரைப்பார்த்து, 'மகாராஜனே! நீ சொற்ப பரிவாரங்களுள்ளவனாக

வேண்டும். லகுபரிவாரமுள்ளவனாகல் நீ உன்னிஷ்டப்படி செல்வாய்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'எந்தப்ராம்மணர்களும் ஸன்யாஸிகளும் பிக்ஷை எடுத்துப் புஜிக்கிறார்களோ அவர்கள் திரும்பக் கடவர். எவர்கள பசி தாஹம வழிநடையினாலுண்டாகிற ச்ரமம் ஆயாஸம் குளிர் ஆகிய இவைகளாலுண்டாகும துன்பம் பொறுக்க மாட்டார்களோ, எந்தப்ராம்மணர்கள் ம்ருஷ்டான்னபோஜனம செய்பவர்களோ அவர்களனைவரும திரும்பககடவர். எவர்கள் பக்குவமான அன்னங்களையும், நக்கிச் சாப்பிடததககவைகளையும், பருகத்தக்கவைகளையும், மாம்ஸங்களையும் 1 பலவகையாகப்பக்குவம் செய்பவர்களோ, எவர்கள் சமையற்காரர்களைப் பின்தொடர்ந்து வருகிறார்களோ அவர்களனைவரும திரும்பக்கடவர். என்னாலே பட்டணத்து ஜனங்களான எவர்கள் வேலைக்காரர் முதலியோராலும் மானியமுதலியவற்றாலும் பகுததுக்கொடுக்கப்பட்டு ராஜபக்தியை முன்னிட்டுககொண்டு என்னைப் பின்தொடர்ந்து வருகிறார்களோ அவர்களும் திருதராஷ்டிர மகாராஜனை அடையக்கடவர். அவர் யாருக்கு எது உசிதமான சம்பளமோ அதைக் காலம்தவறாமல் கொடுப்பார். மனிதர்களுககதிபதியான அந்தத் திருதராஷ்டிரர் தக்க ஜீவனததைக் கொடாமல் போனால் நம்முடைய பிரியத்திற்காகவும ஹிதத்திற்காகவும் பாஞ்சால ராஜன் உங்களுக்கு ஜீவனத்தைக் கொடுப்பான்' என்று சொன்னார். பிறகு, திருதராஷ்டிரனிடததில் பாரம் வைக்கப்பட்டவுடன், பட்டணத்துஜனங்களும் பிராம்மணர்களும் முக்கியமான யதிகளும் பெரும்பாலும் ஹஸ்தினபட்டணததைநக்குறித்துச் சென்றார்கள். அம்பிகாபுததிரனை அரசன் அவர்களனைவரையும் தர்மராஜரிடத்திலுள்ள அன்பினால் விதிப்படி வரவேற்றான்; தனஙகளாலும் நன்கு திருப்தியடையச்செய்தான். பிறகு, குந்திபுத்திரரான அரசர் ஸ்வல்ப ப்ராம்மணர்களுடனும் லோமசருடனும் மிக்க ப்ரீதியுள்ளவராக மூன்றுநாள் காம்யகவனத்தில் வஸித்தார்.

---

1 வேறு பாடம் கொண்டு, 'நன்றாயிருக்கின்றன, நன்றாயில்லையென்று வேறுபாடு கூறுபவர்கள்' என்பது பழைய வுரை.

தொண்ணூற்றோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் லோமசர் முதலியவர்களோடு தீர்த்தயாத்ரைக்குப் புறப்பட்டதும், வழியில் பிராம்மணர்பலர் உடன் வருவதாகச்சொல்ல, அவர் அழைத்துச் செல்ல ஸம்மதித்ததும்.)

அரசரே! பிறகு, வனத்தில் வஸிக்கிற பிராம்மணர்கள், அப்பொழுது, புறப்பட்டுச் செல்லுகிற குந்திபுத்திரரை அடைந்து இந்த வசனத்தை உரைக்கலானார்கள். 'வேந்தரே! பிராதாக்களோடும் தேவரிஷியும் மஹாத்மாவுமான லோமசரோடும்சேர்ந்து புண்யதீர்த்தங்களை அடைகிறவராயிருக்கிறீர். மகாராஜரே! பாண்டவரே! எங்களையும் அழைத்துச் செல்லக்கடவீர். குருவம்சத்திலுதித்தவரே! உம்முடைய உதவி இல்லாவிடில் அந்தத் தீர்த்தங்கள் எங்களால் அடைய முடியாதவைகளன்றோ? மனிதர்களுக்குத் தலைவரே! துஷ்டமிருகங்களால் அடையப்பட்டவைகளும அடைதற்கரியவைகளும் மேடு பள்ளங்களிலிருப்பவைகளுமான தீர்த்தங்கள் அல்பமனிதர்களால் அடைய முடியாதவைகள். உம்முடைய பிராதாக்கள் சூரர்கள்; எப்பொழுதும் விற்பிடித்தவர்களுள் சிறந்தவர்கள்; நாங்களும், சூரர்களான உங்களால் பாதுகாக்கப்பட்டவர்களாக வருகிறோம். பூமிபாலரே! ப்ரஜைகளுக்கு அதிபரே! உம்முடைய அருளாலன்றோ நாங்கள் தீர்த்தங்களையும் வனங்களையும அடைவதன் பலனைச் சுகமாக அடைவோம். அரசரே! உம்முடையவீர்யத்தால் காப்பாற்றப்பட்டுச் சுத்தர்களும் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்தவர்களும் தீர்த்த [1] ஸநதர்சனத்தினுல் பாவத்தை உதறினவர்களும் ஆகக்கடவோம். பாரதரே! அரசரே! நீரும், தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, அரசனான கார்த்தவீர்யனும், அஷ்டகனென்கிற ராஜரிஷியும், ரோமபாதனும், வீரனும் உலகமுழுதுமுடையவனுமான பரதனும் அடைந்தவையும் அடைதற்கரியவையுமான உலகங்களை நிச்சயமாக அடைவீர். பூமியைக்காப்பவரே! நாங்கள், உம்முடன்கூடச் சூரர்களான உங்களால் பாதுகாக்கப்பட்டு, பிரபாஸமுதலியதீர்த்தங்களையும் மஹேந்

1 'ஸம்ஸ்பாசனம' என்பது வேறு பாடம். அதற்கு, 'ஸ்நானம் செய்தல்' என்பது பொருள்.

திரமுதலிய மலைகளையும் கங்கைமுதலிய நதிகளையும் பிலக்ஷமுதலிய மரஙகளையும (மற்றுமுள்ள) தீர்த்தஙகளையும் ஆயதனஙகளையும் பார்க்க விரும்புகிறோம. ஜநாதிபரே! உமக்கு பராம்மணாகளிடததில அனபு சிறிதிருக்குமாகில் எங்களுடைய வசனததை விரைவாகச செயவீராக. அதனால், நன்மையை அடைவீர். மிக்க பாகுபலமுளள வரே! தீாத்தங்கள எப்பொழுதும் தவததுககு இடையூறு செய்கிற ராக்ஷஸர்களால வியாபிக்கப்பட்டிருக்கின்றன அல்லவா? அவாகளிட மிருந்து எஙகளைக் காக்கககடவீா. நராதிபரே! தௌம்யராலும புததிமானான நாரதராலும் எநதத தீாததஙகள் சொலலபபட்டனவோ, மிக்கதவமுள்ள தேவரிஷியான லோமசா எவைகளைச் சொன்னாரோ அந்த எலலா ததீர்ததஙகளையும குறிதது நீா லோமசரால் பாதுகாக்கப்பட்டுப் பாவததை உதறினவராகி எஙகளுடன விதிப்படி யாததிரை செய்வீராக' என்றனர்.

அவர்களால பூஜிககப்பட்டவரும் பாண்டவர்களுள சிறந்தவருமான அந்தத்தர்மராஜா ஸந்தோஷததால கணணீரால நனைக்கபபட்டவராகவும் வீரர்களான பீமஸேனன முதலிய ஸஹோதரர்களால் சூழப்பட்டவராகவும, 'அப்படியே ஆகட்டும்' என்று அநத எலலா ரிஷிகளையும் பார்ததுக் கூறினார். பிறகு, இந்திரியங்களை அடக்கி அநதப் பாண்டவஶ்ரேஷ்டர், பிராதாக்களுடனும் குற்றமற்ற அங்கஙகளுள்ள த்ரௌபதியுடனும், லோமசரையும் புரோகிதரான தௌம்யரையும் விடைகேட்டுககொண்டு செல்ல மனம்வைததார். பிறகு, புத்திமான்களான மகாபாக்கியசாலியான வயாஸரும் அப்படியே பர்வதரும் நாரதரும் காம்யகததில் பாண்டவரைப பார்பபதற்காக வந்தார்கள். யுதிஷ்டிரராஜா அவாகளுககு விதிப்படி பூஜைசெய்தார். பூஜிக்கப்பட்ட மிக்க பாக்கியசாலிகளான அவர்கள், பிறகு, யுதிஷ்டிரரைப்பார்தது, 'யுதிஷ்டிர! இரட்டையரே! பீம! நீங்கள் மனததினால் உள்ளும்புறமும் ஒததவராகக் கடவீர். மனத்தினால் சுத்தி செய்துகொண்டு சுத்தர்களாகித் தீர்ததங்களை அடையக்கடவீர். பிராம்மணர்கள் சரீரநியமததை மானுஷ விரதமென்று சொல்லுகிறார்கள். அவர்கள் மனத்தினால் சுத்தமான புத்தியைத தெய்வ விரதமென்றும் சொல்லுகிறார்கள். நராதிபனே! மனம் தோஷமற்றிருப்பதே சுததிககுப் போதுமானது. மிததிரபாவனையுளள புத்தியை அடைந்து சுத்தர்களாகத் தீர்ததங்களை அடையுங்கள். அபபடிசசெல்லும் நீங்கள், அந்தக்கரணங்களாலும் சரீர நியமஙகளாலும் சுததர்களாகித் தெய்வ விரதத்தைக் கைககொண்டு சாஸ்தி

ரங்களில் சொல்லப்பட்டபடி பலனை அடையக்கடவீா’ என்று சொன்ஞர்கள். ராஜஸ்ரேஷ்டரே! வீரர்களான அந்த எல்லாப பாண்டவாகளும திரௌபதியுடன கூட, ‘அப்படியே’ என்று பாதிஜ்ஞை செய்து தேவரிஷிகளாலும் மனுஷ்ய ரிஷிகளாலும் மஙகலவாழ்ததுக கூறபபெற்று லோமசா தவைபாயனர் தேவரிஷியான நாரதர் பர்வதர் ஆகிய இவர்களுடைய அடிகளை வணங்கித தெளம்யரோடும அப படியே வனவாஸிகளான அவர்களோடும் மார்கழிமாதம சென்ற பிறகு, பஷ்ய மாதததில புறப்பட்டார்கள். ஜனமேஜயரே! வீரர்களான அந்தப் பாண்டவாகள், தடிகளை எடுததுககொண்டு, மரவுரியும் மானதோலும் சடையும் தரிததும் பிளக்கமுடியாத கவசங்கள் பூண்டும் அந்த இடததினின்று தீர்ததங்களைக் குறிததுச் சென்ருர்கள். இநதிரஸேனன் முதலிய வேலைககாரர்களோடும் பதினுனகுக்கு மேற்பட்ட ரதஙகளோடும் அப்படியே மடைப்பள்ளியிற் சூழ்ந்துள்ள மற்றப் பரிசாரகர்களோடும் கூடினவர்களாகவும் ஆயுதங்களுள்ளவர்களாகவும் கததிகட்டினவர்களாகவும் அம்புத்தூணிகளும அமபுகளுமுள்ளவர்களாகவும் கிழ்ததிசையை நோக்கிச் சென்ருர்கள்.

---

## தொண்ணூற்றிரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(லோமசர் தர்மமும் அதர்மமும் முறையே செல்வத்துக்கும் வறுமைக்கும் காரணமென்பதை யுதிஷ்டிரருக்குச் சொல்லியது)**

யுதிஷ்டிரர், ‘தேவரிஷிகளுள் மிகசசிறந்தவரே! என்னைக் குணமில்லாதவனென்று நான் நினைக்கவில்லை. ஆயினும், வேருேர் அரசன் பட்டிராத அப்படிப்பட்ட துக்கத்தால் மிக எரிக்கப்பட்டவனக இருககிறேன். லோமசரே! பகைவர்களைக் குணங்களில்லாதவர்களாகவும் தர்மங்களை அடையாதவர்களாகவும் நினைக்கிறேன். யாதுகாரணத்தால் அவர்கள் இவ்வுலகததில் மிகவும் செழிக்கிருர்கள்?’ என்று வினவ, லோமசர் சொல்லலானுர்.

‘அரசனே! குந்திபுத்திர! அதர்மததில் ருசியுள்ள ஜனங்கள் அதர்மத்தினல் விருததியடைவார்களென்னும் இந்த விஷயத்தில்

உன்னால் எவ்விதத்தாலும் மனவருத்தம் அடையத்தக்கதன்று. மனிதன் அதர்மத்தினால் விருத்தியடைகிறான்; அதனால, மங்களங்களைக் காணகிறான்; அதனால், பகைவர்களை ஜயிக்கிறான; பிறகு, அடியோடு அழிந்துவிடுகிறான். அரசர்களுள் மிகச்சிறந்தவனே! எங்கே அரசர்கள் தர்மத்தினால் விருத்தியடைகின்றார்களோ, எல்லாப்பகைவர்களையும அழிக்கிறார்களோ, அங்கே அவர்களுடைய ராஜ்யமானது விருத்தியடைகிறது. வேந்தே! தைத்யர்களும தானவர்களும், அதர்மத்தினால வளர்ந்ததும மறுபடியும் அழிவை அடைந்ததும் என்னால் பார்க்கப்பட்டிருக்கின்றன. பிரபுவே! என்னால் முன்பு தேவயுகத்தில் எல்லாம பார்க்கப்பட்டன. தேவர்கள தர்மத்தை விரும்பினார்கள. அஸுரர்கள் தர்மத்தை விட்டார்கள். பாரத! தேவர்கள் தீர்த்தங்களை அடைந்தார்கள். அஸுரர்கள அவைகளை அடையவில்லை. அதர்மத்தால் உண்டுபண்ணப்பட்ட கொழுப்பானது அந்த அஸுரர்களை முந்தியே அடைந்துவிட்டது. கொழுப்பினால் அகங்காரமானது உண்டாயிற்று. அகங்காரத்தால் கோபம் உண்டாயிற்று. கோபத்தினால (அகார்யங்களில) வெட்கமில்லாமை உண்டாயிற்று. அதனால, நிந்தை என்கிற தோஷத்தில் பயமின்மை உண்டாயிற்று. அதனால், அவர்களுடைய நடை கெட்டுவிட்டது. பிறகு, நிந்தைவருமென்ற பயமில்லாதவர்களும செல்வத்தை இழந்தவர்களும் கெட்டநடையுள்ளவர்களும் பயனற்ற விரதமுள்ளவர்களுமான அந்த அஸுரர்களைப் பொறுமையும், லக்ஷ்மியும், ஸ்வதர்மமும், சீக்கிரத்தில் விட்டுவிட்டன. அரசனே! லக்ஷ்மியோ தேவர்களை அடைந்தாள். அலக்ஷ்மியானவள் அஸுரர்களை அடைந்தாள். பிறகு, அலக்ஷ்மியினாலே நன்கு அடையப்பட்டவர்களும் கொழுப்பினால் கெடுக்கப்பட்ட மனமுள்ளவர்களுமான அந்தத் தைத்யர்களையும் தானவர்களையும் கலியும் அடைந்தான். குந்தீ புத்திர! அலக்ஷ்மியினால் நன்கு அடையப்பட்டவர்களும, கலியினால் கெடுக்கப்பட்டவர்களும், கொழுப்புமேலிட்டவர்களும், நற்செய்கைகளால் விடுபட்டவர்களும், புத்தியில்லாதவர்களும், அகங்காரம் மேலிட்டவர்களுமான அவர்களை விரைவில் விநாசம் வந்தடைந்தது. வேந்தே! அப்படி கீர்த்தி இழந்தவர்களும், அதர்மத்தில் ருசியுள்ளவர்களும், அலக்ஷ்மியினால் ஆக்ரமிக்கப்பட்டவர்களுமான தைத்யர்கள் முழுமையும் நாசமடைந்தார்கள். தர்மத்தை இயற்கையாகக்கொண்ட தேவர்களோ கடல்களையும், ஆறுகளையும், குளங்களையும், புண்யமான ஆயதனங்களையும் குறித்துச் சென்றார்கள். பாண்டவ! தவங்களாலும், யாகங்களா

லும், தானங்களாலும், ஆசீர்வாதங்களாலும், தேவர்கள் எல்லாப பாவங்களையும் தொலைத்தார்கள; மேன்மையும பெற்றார்கள். இவ வண்ணம தேவர்கள உள்ளும் புறமும் ஒததிருததலமுதலிய நியம முள்ளவர்களாகவும் தேவர்கள் முதலியவர்களாலும் தடை உண்டு பண்ணப்படாதவர்களாகவும தீாததங்களை அடைந்தார்கள். அதனால், உததமமான ஸமபததை அடைநதார்கள். ராஜேந்திரனே! அப் படியே, நீயும இளையஸகோதரர்களோடு தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து அந்தலக்ஷ்மியை மீண்டும் அடைவாய். இது சாஸ்வதமான வழி. மஹாராஜனே! ராஜஸ்ரேஷ்டனே! ந்ருகன் என்கிற அரச னும், உசீநரதேசாதிபதியான சிபியும், பகீரதனும், வஸுமநஸும், கயனும, பூருவும், புரூரவஸும, தவததைச செய்கின்றவர்களாகியும, தினந்தோறும புண்ணியதீாததங்களில் ஸ்நானம்செய்வதனாலும் தீர்த தங்களைக்குறித்துச செல்வதனாலும் மகாதமாக்களினுடைய தாச னத்தினாலும பரிசுத்தர்களாகியும், எப்படி புகழையும் புண்ணியததை யும தனங்களையும அடைநதார்களோ அப்படியே நீயும் மிகப்பெரிய செல்வததை [1] அடைவாய். புததிரர்களுடனும் ஜனங்களுடனும பந்துக்களுடனும கூடின இக்ஷ்வாகுவும் முசுகுந்தனும் மாந்தாதாவும் மருததராஜனும் தேவரிஷிகளும தபோபலததினால் எவ்வாறு புண் ணியமான கீர்ததியைப் பெற்றார்களோ அவ்வாறே நீயும் எல்லாவற் றையும் அடைவாய். அதாமததினாலும் அஞ்ஞானததினாலும் வசப் படுததபபட்ட தருதராஷ்டிர புததிரர்களோ, அஸுரர்கள்போல விரை வில நாசமடைவார்கள்; இதில் ஐயமில்லை' என்றார்.

---

தொண்ணூற்றுமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர்முதலியவர்கள் அடைவில் பிரம்மஸரஸை அடைந் ததும், அங்கே சமடர் கயனுடைய யாகத்தை அவர்களுக் குச் சொல்லியதும்.)

பூமியைப் பாதுகாக்கிறவரே! வீரர்களான அந்தப் பாண்ட வர்கள், அவ்வண்ணம் ஒன்றுசேர்ந்து அங்காங்கு வஸித்துக்கொண்டு அடைவில் நைமிசாரண்யத்தை வந்தடைந்தார்கள். அரசரே! பாரதரே!

1 வேறுபாடம்.

பிறகு, பாண்டவர்கள் புண்யமான கோமதீநதியின் தீர்த்தஙகளில் ஸ்நானஞ்செய்து பசுக்களையுமதனததையும் கொடுத்தாாகள். பாரதரே! பூமியைப் பாதுகாப்பவரே! குருவம்சததவாகளான அனைவரும் அந்தக் கோமதியில தேவர்களையும பிதருக்களையும் பிராம்மணாகளை யும் மறுபடியும் மறுபடியும திருப்தியடையச் செய்து கன்யா தீாததததிலும அஸ்வதீாததததிலும் கோதீர்தததததிலு ம காலகோடி யிலும விஷபரஸதமென்கிற மலையிலும் வஸிததுப் பாகுதாநதியில ஸ்நானம செய்தார்கள். பூமிக்கு அதிபதியே! தேவர்களுடைய யாகபூமியான பிரயாகையில் ஸ்நானஞசெய்து அங்கு வஸிததார்கள்; உததமமான தவததையும் செய்தார்கள. சொல் தவறுதவாகளும் பாவமிலலாதவர்களும் மஹாதமாககளுமான அவர்கள் கஙகையமுனை களின ஸங்கமததில தனததைப் பிராம்மணர்களுககுக் கொடுததார் களா. அரசரே! பாரதரே! பிறகு, பாண்டுவின் புதல்வர்கள், பிராம் மணாகளுடன்கூடத தவஸிகளால் அடையப்பட்ட பிரமமதேவ ருடைய யாகவேதியை அடைந்தாாகள். வீரர்களான அவாகள் எப் பொழுதும் வனத்தில் கிடைததவறறால் செய்த ஹவிஸினால பிராம் மணர்களைத திருபதி செய்பவாகளாகி அந்த இடததில் வாஸஞசெய்து கொணடு உததமமான தவத்தையும் செய்தார்கள். நிகரறறகாநதியு டையவரே! பிறகு, எந்த இடத்தில் கயசிரஸஎன்கிற மலையும புண்ய மானதும் [1] வாநீரத்தூறுகளை இரணடுபக்கங்களிலுமுடையதும் அழ கியதும் மணல்திட்டுக்களால் விளங்குவதுமான நதியும் இருக் கினறனவோ, எந்தவிடததில் திவ்யமானதும் பரிசுததமான சிக ரஙகளுள்ள பவிதரபர்வதத்தையுடையதும் ரிஷிகளால் அடை யப்படடதும மிகக புண்யமானதும் ஒப்பற்றதுமான பிரம்மசிர ஸென்கிற அந்ததீர்ததமும் இருக்கிறதோ, எந்த இடததில் அகஸ் தியபகவான் வைவஸவதனிடம் சென்றாரோ, தர்மங்களையறிநதவ னும் புண்யஞ்செய்தவனுமான கயனென்னும ராஜரிஷியினால் சென்று பூஜிக்கப்பட்ட அந்த மலையை அடைநதார்களா. அரசரே! எந்த இடமானது எல்லாநதிகளுக்கும் உற்பததிஸ்தல மோ அந்த இடத்தில் ஸனாதனனான தர்மராஜன் தானே வஸித தான். எந்த இடததில் பிநாகம் என்கிற வில்லைததாங்கியவரும பரிபூர்ணரும் சிறநத ஜ்யோதிஸ்வரூபியும் பரமாதமாவும் ஸநாதன ரும் பிரம்மதேவர்முதலியவர்களால் உபாஸிக்கத்தக்கவரும் பக

---

[1] வாநீரம் = நீரவஞ்சி, ஒருவகைக்கரும்பு, அல்லது பிரம்பு.

வானும் மஹாதேவருமான பரமேஸ்வரர் நித்யம் ஸாந்நித்யஞ்செய்கிறாரோ, அந்த இடத்தில், நான்கு புருஷார்த்தரூபமான பயன்களைக் கொடுப்பவரான அந்தமஹாதேவரை நமஸ்காரஞ்செய்து, மோக்ஷத்தை விரும்புகிறவர்களனைவருக்கும் இது ஸித்திக்ஷேத்ரமென்று எண்ணி, வீரர்களான பாண்டவர்கள் அந்த இடத்தில் அப்பொழுது சாதுர்மாஸ்ய விரதங்களால் பூஜித்தார்கள். எந்த இடத்தில் பெரிதான அக்ஷயவடம் இருக்கிறதோ, அக்ஷயமான எந்தத் தேவயஜன க்ஷேத்ரத்தில் பெரிய ரிஷியஜ்ஞத்தினால் அக்ஷயமான பலன் கிடைக்கிறதோ அந்த இடத்தில் [1] அவர்கள் மனவுறுதியுடன் உபவாஸத்தைச் செய்தார்கள். அந்த இடத்தில் தபோதனர்களான பிராம்மணர்கள் நூற்றுக்கணக்காக வந்தார்கள். (அவர்கள்) அப்பொழுது வேதவிதிப்படி சாதுர்மாஸ்யயாகத்தைச் செய்தார்கள். அந்த யாகத்தில் ஸதஸிலிருப்பவர்களும் வித்தையினாலும் தவத்தினாலும் முதிர்ந்தவர்களும் வேதங்களின் கரையைக் கண்டவர்களுமான பிராம்மணர்கள் மஹாத்மாக்களுடைய புண்ணியமானகதையைக் கூறினார்கள். அரசரே! அந்த இடத்தில் வித்யாஸ்நானத்தையும் வ்ரதஸ்நானத்தையும்செய்து [2] கௌமாரவிரதத்தைக் கைக்கொண்ட சமடர் ஆதூர்த்தரஜஸின் குமாரனான கயனைப் பற்றிச் சொல்லானார்.

'பாரத! ராஜரிஷிகளுள் மிகச்சிறந்தவனான கயன் ஆதூர்த்தரஜஸினுடைய புத்திரன். அவனுடைய அந்தப் புண்ணியமான செயல்களை என்னிடத்தினின்று கேள். அரசனே! எந்தக்கயனுடைய யஜ்ஞமானது இங்கே மிக்க அன்னமுள்ளதாகவும் மிக்கதக்ஷிணையுள்ளதாகவுமிருந்ததோ, எந்தயஜ்ஞத்தில் அன்னமலைகள் நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும், நெய்யாறுகளும் அப்படியே தயிராறுகளும் பலநூற்றுக்கணக்காகவும், விலையுயர்ந்த வியஞ்சன ப்ரவாஹங்கள் ஆயிரக்கணக்காகவும், நாள்தோறும், யாசிக்கிறவர்களுக்கு இவ்வண்ணம் நன்கு கொடுக்கப்பட்டனவோ, மற்றப் பிராம்மணர்களும் நன்கு பக்குவஞ்செய்யப்பட்ட அன்னத்தைப் புஜித்தார்களோ, அந்த யாகத்தில் தக்ஷிணைகள் கொடுக்கும் ஸமயத்தில் (ப்ராம்மணர்களின்) வேதகோஷமானது வானுலகை அளாவியது. பாரத! வேதகோஷத்தால் ஒன்றும் அறியப்படவில்லை. அரசே! பரவுகின்ற புண்யமான வேதகோஷத்தால் பூமி

1 வேறு பாடம்.

2 ப்ரம்மசாரி வ்ரதம் என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

யும் எல்லாததிசைகளும ஆகாயமும் அவ்வாறே அநதரிக்ஷமும் நிரம்பினவாயின. அதுவும பெரிய ஆச்சரியமாக இருந்தது. பாதர்களுள் சிறந்தவனே! குருநநதன! எந்தயஜஞததில் மனிதர்கள் மங்களகரமான அன்னபானஙகளால் திருபதியடைந்தவர்களாகவும நல்ல தேஜஸுள்ளவாகளாகவும் தேசநதோறும, 'கயனுடைய யாகததில் (புசிதத) எநதப் பிராணிகள் இப்பொழுது புசிககவிரும்பும? அஙகே சாபபிட்ட மிச்சம் இருபததைநது மலைகள் இருந்தன. அளவிறநத காந்தியுள்ளவனும ராஜரிஷியுமான கயன் யஜஞததில் எதைச் செய்தானே அதை முந்தியிருநத ஜனஙகளும செயயவிலலை; பிநதினவர்களும செய்யார். கயனால ஹவிஸினால திருப்திசெய்யப்பட்ட தேவர்கள மற்றவர்களால கொடுககப்பட்டவைகளை மறுபடியும் வாஙகிக்கொளவதறகு எவ்வாறு சகதியுள்ளவர்களாவாாகள்? உலகததில எப்படி மணல்களும் ஆகாயததில் நக்ஷததிரஙகளும் பொழிகிற மேகததினுடைய நீர்த்தாரைகளும் ஒருவராலும் எணணமுடியாதவைகளோ அப்படியே கயனுடைய யஜ்ஞததில தக்ஷிணைகள் எணணமுடியாமலிருநதன' என்னும (பொருளுளள) காதைகளைப் பாடுகிறார்களோ இப்படிப்பட்ட அந்தக் கயராஜனுடைய மிகபபல யாகங்கள் இந்தப்பிரமமசிரஸின் ஸமீபததில் நடந்தேறின' என்று கூறினர்.

---

## தொண்ணூற்றுநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசர் யுதிஷ்டிரருக்கு அகஸ்தியருடைய சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கி வாதாபி இல்வலன் ஆகிய இவர்களின் வரலாற்றையும் லோபாமுத்திரையினுடைய உத்பத்தியையும் சொல்லியது.)

பிறகு, (தீர்த்த யாததிரைக்காகப்) புறப்பட்டவரும் மிக்க தக்ஷிணை கொடுப்பவரும் அரசருமான யுதிஷ்டிரர், அகஸ்தியருடைய ஆஶ்ரமத்தை அடைந்து, துர்ஜயை (என்கிற வாதாபியினுடைய மணிமதிநகரி) யில் வஸிததார். பேசுகிறவர்களுள் சிறந்தவரான அரசர், அந்த இடததிலேயே லோமசரைப்பார்த்து, 'இந்த இடததில் அகஸ்தியரால் வாதாபி எதற்காக நாசம்செய்யப்பட்டான்? மனிதர்களுக்கு முடிவைச் செய்துகொண்டிருந்த

அந்த அஸுரன் என்னபெருமை உள்ளவனாக இருந்தான்? மகாத்மாவான அகஸ்தியருக்கு எதற்காகக் கோபம் மூட்டப்பட்டது?' என்று வினவினர்.

லோமசர், 'கௌரவநந்தன! முற்காலத்தில் மணிமதி என்கிற பட்டணத்தில் இல்வலனென்கிற ஓர் அஸுரன் இருந்தான். அவனுக்கு வாதாபி என்கிற தம்பி ஒருவன் இருந்தான். அந்த அஸுரன், தவத்துடனிருக்கும் ஒரு ப்ராம்மணனைப் பார்த்து, 'பகவானே (நீர்) எனக்கு இந்திரனைபோன்ற ஒரு பிள்ளையைக் கொடுக்க வேண்டும்' என்று சொன்னான். அந்தப் பிராம்மணன் அவனுக்கு இந்திரனுக்கு நிகரான புத்திரனைக் கொடுக்கவில்லை. பிறகு, அந்த அஸுரன் அந்தப்பிராம்மணன்விஷயத்தில் மிகவும் கோபங்கொண்டான். ராஜேந்திரனே! அதுமுதல் இல்வலன் என்கிற அஸுரன் பிராம்மணர்களைக் கொல்பவனாகிவிட்டான். பிறகு, கோபமுள்ளவனும் மாயாவியுமான அவன் தம்பியை ஆடாகச்செய்தான். நினைத்த உருவங்களை எடுக்கும் வாதாபியானவன் ஒரு நொடியில் ஆட்டின் உருவமுள்ளவனானன். (இல்வலன்) அதனைப் பக்குவம் செய்து போஜனம் செய்வித்துப் பிறகு பிராம்மணனைக் கொல்ல விரும்பினான். அந்த இல்வலன் யமலோகத்தை அடைந்த எவனை வாக்கினால் அழைக்கிறானோ அவன் மீண்டும் தேகத்தை எடுத்துக் கொண்டு உயிருள்ளவனாக நேரில் காணப்பட்டான். பிறகு, வாதாபி என்கிற அஸுரனை ஆடாகச் செய்து நன்கு சமைத்து அதனைப் பிராம்மணனைப் புஜிப்பித்து மறுபடியுமே அழைத்தான். அரசனே! ஜனாதிப! இல்வலனால் உரத்த குரலால் சொல்லப்பட்ட அந்தச்சொல்லைக்கேட்டு மாயை மிகுந்தவனும் பலசாலியும் பிராம்மணருக்குப் பகைவனும் பெரிய அஸுரனுமான அந்த வாதாபி அந்தப் பிராம்மணனுடைய விலாவை விரைவில் பிளந்து கொண்டும் உரக்கச் சிரித்துக்கொண்டும் வெளிப்பட்டான். வேந்தே! கெட்டபுத்தியுடைய அந்த இல்வலன் என்கிற அஸுரன் இவ்வண்ணம் மறுபடியும் மறுபடியும் பிராம்மணர்களைப் புஜிப்பித்துக் கொன்றுவந்தான். இந்த ஸமயத்திலேயே அகஸ்தியபகவானும் தம பிதருக்கள் ஒருபள்ளத்தில் தலைகீழாகத் தொங்குவதைக் கண்டார். அவர், தொங்குகிற அந்தப் பிதருக்களைப் பார்த்து, 'பகவான்களான நீங்கள் எதில் விருப்பமுள்ளவர்கள்? இந்தப்பள்ளத்தில் நீங்கள் தலைகீழாக எதற்காகத்தொங்குகிறீர்கள்?' என்று கேட்டார். பிரம்மவாதிகளான அவர்கள்,

'ஸந்தானத்தின்பொருட்டு' என்று மறுமொழி கூறினார்கள். அவர்கள், 'நாங்கள் உன்னுடைய சொந்தப் பிதருக்கள். இந்தப் பள்ளத்தை அடைந்து ஸந்ததியை எதிர்பார்த்துக்கொண்டு தொங்குகிறோம். அகஸ்திய! எங்களுக்காக உத்தமமான பிள்ளையை நீ உண்டு பண்ணுவாயாகில் எங்களுக்கு இந்த நரகத்தினின்று மோக்ஷம் உண்டாகும். புத்திரனே! நீயும் நற்கதியை அடைவாய்' என்று அவருக்குச் சொன்னார்கள். தேஜஸுள்ளவரும் ஸத்யத்திலும் தர்மத்திலும் நிலைபெற்றிருப்பவருமான அவர், அவர்களைப் பார்த்து, 'பிதருக்களே! (உங்களுடைய) விருப்பத்தைச் செய்வேன். உங்களுடைய மனத்திலுள்ள நோய் நீங்குக' என்று சொன்னார். பிறகு, பகவானான முனிவர் ஸந்ததியின் தொடர்ச்சியைப்பற்றி ஆலோசித்துப் பிள்ளையை அடையும் விஷயத்தில் தமக்குத் தகுதியுள்ள மாதைக் காணவில்லை. அவர் ஒவ்வொரு பிராணிக்கும் ஒவ்வோர் அங்கம் சிறந்திருப்பதை நன்கறிந்து அந்த அங்கங்களுக்குச் சமமான அங்கங்களுடன் ஒப்புயர்வற்ற ஒரு ஸ்திரீயை [1] உண்டுபண்ணினார். பெருந்தவமுள்ள அந்த முனிவர் தமக்காக உண்டுபண்ணப்பட்ட அந்தப்பெண்ணைப் புத்திரனை விரும்புகிறவனும் வாடுகிறவனுமான விதர்ப்பதேசத்தரசனுக்குப் (பிறக்கும்படி) கொடுத்தார். மிக்க பாக்ய சாலியான அவள் மிக்க ஒளி பொருந்திய மின்னல்போல அங்கே பிறந்தாள்; சரீரத்தால் விளங்குகின்றவளாகவும் மங்களகரமான முகமுள்ளவளாகவும் வளர்ந்தாள். பாரத! விதர்ப்பராஜன், பிறந்த மாத்திரத்தில் அந்தப்பெண்ணைக்கண்டு மிக்க மகிழ்ச்சியுடன் பிராம்மணர்களுக்குத் தெரிவித்தான். பூமிக்கு அதிபதியே! எல்லாப் பிராம்மணர்களும் அந்தப்பெண்ணைப் புகழ்ந்தார்கள். அந்தப் பிராம்மணர்கள் அவளுக்கு [2] லோபாமுத்திரையென்று பெயரையும் இட்டார்கள். மஹாராஜனே! அந்தப்பெண் உத்தமரூபத்தைத் தரித்தவளாக ஜலத்தில் தாமரைக்கொடிபோலவும் அக்கினியினுடைய மங்களகரமான ஜ்வாலைபோலவும் சீக்கிரம் வளர்ந்தாள். ராஜேந்திரனே! யௌவனத்திலிருப்பவளும் கல்யாணியுமான அவளை நன்றாக அலங்கரித்துக்கொண்ட நூறுகன்னியர்களும் நூறு தாதியர்களும்

---

1 உண்டாகும்படி மனத்தால் எண்ணினார்.

2 பிராணிகளிடமுள்ள அழகிய இடை, கண் முதலிய சிறந்த முத்திரைகளுக்கு (= லக்ஷணங்களுக்கு) லோபத்தை (= அவமதிப்பை) உண்டுபண்ணுகிறவள்; அதாவது அழகைக் கவர்கிறவள்' என்பது பழையவுரை.

அவளுக்கு வசப்பட்டவர்களாகிச் சூழ்ந்திருந்தார்கள். அந்தக் கன்னியானவள் நூறு கன்னியரின் நடுவில் நூறுதாதிமார்களால் சூழப்பட்டு ஆகாயத்தில் பிரகாசிக்கின்ற ரோஹிணிபோல ஒளியுள்ளவளாயிருந்தாள். நல்லியற்கையுடனும் ஆசாரத்துடனும் கூடியவளான அவளை, யௌவனப்பருவத்தில் இருந்தும், மஹாத்மாவான அந்த அகஸ்தியருடைய பயத்தினால் ஒரு புருஷனாவது வரிக்கவில்லை. ஸத்யமுள்ளவளும் உருவத்தினால் அப்ஸரஸைவிட மேற்பட்டவளுமான அந்தக்கன்னியானவள் நன்னடையினால் பிதாவையும் அப்படியே பந்துஜனங்களையும் மகிழ்வித்தாள். அப்படிப்பட்ட (ஸ்வபாவத்துடனும் ஆசாரத்துடனும்) கூடிய வைதர்ப்பி யௌவனமடைந்ததைப் பிதா பார்த்து, 'யாருக்கு இந்தப் பெண்ணைக்கொடுப்பேன?' என்று மனத்தினால் ஆலோசித்தான.

---

தொண்ணூற்றைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(விதர்ப்பராஜன் ஸந்தானத்துக்காகக் கன்னியை விரும்புகிற அகஸ்தியருக்கு லோபாமுத்திரையை விதிப்படி கொடுத்ததும், அகஸ்தியர் லோபாமுத்திரையை விலையுயர்ந்த ஆடையாபரணங்களைவிட்டு மரவுரி முதலியவற்றை அணிவித்துத் தம் ஆச்ரமத்திற்கு அழைத்து வந்ததும், ருதுகாலத்தில் அழைக்கப்பட்ட அவள் சிறந்த ஆடையாபரணங்களை விரும்ப அகஸ்தியர் அவற்றைத் தேடிவரப் புறப்பட்டதும்.)

அகஸ்தியர், எப்பொழுது அவளை இல்லறத்தில் தகுதியுள்ளவளென்று நினைத்தாரோ அப்பொழுது விதர்ப்பதேசத்தரசனை அடைந்து, 'அரசனே! புத்திரனை அடைவதற்காக எனக்கு விவாகம் செய்துகொள்வதில் எண்ணம் இருக்கிறது. பூபாலனே! உன்னிடம் லோபாமுத்திரையை வரிக்கிறேன்; எனக்குக் கொடு' என்று சொன்னார். முனிவரால் இவ்வண்ணம் உரைக்கப்பட்ட அந்த அரசன், ப்ரஜ்ஞையை இழந்தவனாகி, மறுப்பதற்கும் சக்தியற்றவனானான்; கொடுப்பதற்கும் விரும்பவில்லை. பிறகு, அந்த

அரசன், மனைவியிடம் சென்று, 'வீர்யமுள்ள இந்த மஹரிஷியானவர் கோபங்கொண்டால் சாபாக்னியினால் எரித்துவிடுவார்' என்று சொன்னான். அவ்வண்ணம் துக்கமடைந்தவனும் மனைவியுடனிருப்பவனுமான அந்த அரசனைக்கண்டு, லோபாமுத்திரையானவள், அருகில் சென்று, 'பூமிபாலரே! எனக்காக வருத்தத்தை அடையத் தக்கவரல்லீர். பிதாவே! என்னை அகஸ்தியருக்குக் கொடும். என்னால் உம்மைக் காப்பாற்றிக்கொள்ளும்' என்கிற இந்த வசனத்தை ஸமயத்தில் சொன்னாள். வேந்தே! பிறகு, அந்த விதர்ப்பராஜன் பெண்ணினுடைய வசனத்தால் மஹாத்மாவான அகஸ்தியருக்கு லோபாமுத்திரையைச் சாஸ்திரவிதியை முன்னிட்டுத் தானஞ்செய்தான். அகஸ்தியரோ, லோபாமுத்திரையை மனைவியாக அடைந்து, 'மிகுவிலையுள்ளவைகளான இந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் விட்டுவிடு' என்று சொன்னார். பிறகு, வாழைமரம்போன்ற தொடைகளுள்ளவளும் நீண்ட கண்களுள்ளவளுமான அவள் அழகுள்ளவைகளும் விலையுயர்ந்தவைகளும் மெல்லியவைகளுமான ஆடைகளை எறிந்துவிட்டாள்; பிறகு, மரப்பட்டைகளையும் தோல்களையும் ஆடையாகக்கொண்டாள். நீண்ட கண்ணுள்ள அவள் ரிஷியோடு ஒத்தவிரதமும் ஒழுக்கமும் உள்ளவளானாள். பிறகு, ரிஷிகளுள் மிகச்சிறந்த அகஸ்தியபகவான் கங்காத்வாரத்திற்குவந்து அனுகூலையான பத்தினியுடன் கடுந்தவம்புரிந்தார். அப்பொழுது, அவள் பதியை அன்பினாலும் நன்மதிப்பினாலும் உபசரித்தாள். பிரபுவான அகஸ்தியரும் பார்யையினிடத்தில் அதிகப்ரீதியை அடைந்தார். அரசனே! பிறகு, பலநாட்கள் செல்லவே, பகவானான அகஸ்தியரிஷியானவர் தவத்தினால் விளங்குகின்றவளும் (ருது) ஸ்நானஞ்செய்தவளுமான லோபாமுத்திரையைப் பார்த்தார். அவர், அவளுடைய பணிவிடையாலும் சுத்தியாலும் அடக்கத்தாலும் காந்தியாலும் ரூபத்தாலும் பிரீதியடைந்தவராகி, அவளைச் சேர்வதற்காக அழைத்தார். பிறகு, அந்தப் பெண், வெட்கமுள்ளவளாகி, கரங்களைக் குவித்துக்கொண்டு, அப்பொழுது பகவானான அகஸ்தியரைப் பார்த்து, 'ரிஷியே! பதியானவன் பார்யையை அடைவது பிரஜைகளை அடைதற்காகவே என்பதில் ஐயமில்லை. உம்மையடையும் விஷயத்தில் என்னுடைய விருப்பம் எதுவோ அதனை நீர் செய்யக்கடவீர். பிராம்மணரே! பிதாவினுடைய அரண்மனையில் உள்ள உப்பரிக்கையில் எப்படி என்னுடைய படுக்கை இருந்ததோ அப்படிப்பட்ட படுக்கையில் நீர் என்னை இந்த இடத்தில் அடையக்கடவீர். புஷ்பமாலைகளை அணிந்தவரும் ஆபர

ணங்களால் அலங்கரிக்கப்பட்டவருமான உம்மைத் திவ்யாபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட நான் இஷ்டப்படி அடைவதற்கு விரும்புகிறேன். நான் வேறுவிதமாகக் காஷாயவுடை உடுத்து உம்மை அடையமாட்டேன். பிரமமரிஷியே! இப்பொழுது அணிந்துள்ளவை எவ்விதத்தாலும் அசுத்தமாதல் கூடாது' என்ற வசனத்தைக் காதலுடன் கூறினாள். அகஸ்தியர், 'அழகிய இடையுள்ளவளே! கல்யாணி! லோபாமுத்ரையே! உன் தகப்பனாருக்கு எவ்விதமான தனங்கள் இருக்கின்றனவோ அவ்விதமான தனங்கள் உனக்குமில்லை; எனக்குமில்லை' என்று சொன்னார். லோபாமுத்ரை, 'தபோதனரே! ஜீவலோகத்திலிருக்கிற தனமெல்லாவற்றையும் ஒரு க்ஷணத்தில், தவத்தினால் கொண்டுவருவதற்குத் தேவரீர் ஸமர்த்தராக இருக்கிறீர்' என்றுசொன்னாள். அகஸ்தியர், 'நீ சொல்லுகிற இது இவ்வண்ணமே. ஆனால், அது தவத்தைக் குறைப்பதாகும். என்னுடைய தவம் அழியாதபடி என்னை ஏவுவாயாக' என்று சொன்னார். லோபாமுத்ரை, 'தபோதனரே! என்னுடைய இந்த ருதுகாலமானது சிறிதே மிகுதியுள்ளதாக இருக்கிறது. நான் வேறுவிதமாக உம்மை அடைவதற்கு எவ்விதத்தாலும் விரும்பவில்லை. உம்முடைய தர்மத்தையும் எவ்விதத்தாலும் அழிப்பதற்கும் நான் விரும்பவில்லை. இவ்விதமான என்னுடைய விருப்பத்தை நீர் நிறைவேற்றக் கடவீர்' என்று சொன்னாள். அகஸ்தியர், 'ஸௌபாக்யவதியே! கல்யாணி! இந்த விருப்பமானது உன்னுடைய புத்தியினால் நிச்சயிக்கப்பட்டிருந்தால் நான் (அவற்றைக்) கொண்டுவருகிறதற்குப் போகிறேன். நீ இந்த இடத்திலிருந்து (என்) விருப்பப்படி நடப்பாயாக' என்று சொன்னார்.

---

## தொண்ணூற்றொருவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ரா பர்வம். (தொடர்ச்சி.)

---

**(பொருளுக்காக ச்ருதர்வா முதலிய மூவரை அடைந்த அகஸ்தியர் அவர்களுடையபொருள் வரவும் செலவும் ஒத்திருப்பதை அறிந்து அவர்களுடன் இல்வலனிடம் சென்றது.)**

கௌரவனே! பிறகு, அந்த அகஸ்தியர் அரசர்களுள் எவனை (பொருள்) மிகவுமென்று அறிந்தாரோ அந்தச்ருதர்வா என்கிற

அரசனைப் பொருளை யாசிப்பதற்காக அடைந்தார். அந்த அரசனோ அகஸ்தியர் தன்னுட்டெல்லையில் வந்ததை அறிந்து மந்திரிகளோடு (போய்) நன்கு பூஜித்து வரவேற்றான். அரசன அவருக்கு முறைப்படி அர்க்கியத்தைக் கொண்டுவந்து கைகூப்பி மிக்க அடக்கமுள்ள வனாகி வரவின் விருப்பத்தை வினவினன.

அகஸ்தியர், 'பூபதியே! என்னைப் பொருளை வேண்டி வந்தவனென்று தெரிந்துகொள். பிறரைத் துன்புறுத்தாமல சக்திக்குத் தக்கபடி கொடுக்கக்கூடிய பாகத்தைக் கொடு' என்று சொன்னார். பிறகு, அரசன், 'கற்றறிந்தவரே! வரவு செலவுகள் ஒத்திருக்கின்றன. ஆதலால், இந்தத் தனத்தில் மிச்சமிருந்தால எடுத்துக்கொள்ளுங்கள்' என்று அவருக்குத் தெரிவித்தான். ஸமபுத்தியுள்ள பிராம்மணர், பிறகு, வரவு செலவுகள் ஒத்திருப்பதைக்கண்டு (பொருளைப்) பெற்றுக்கொள்வதில் பிராணிகளுக்கு எல்லாவிதத்தாலும் துன்பம் உண்டாவதை நினைத்தார். அவர் ச்ருதர்வாவை அழைத்துக் கொண்டு ப்ரதச்வனை அடைந்தார். அவனும் அவர்களைத் தன் தேசத்தினுடைய எல்லையில் விதிப்படி வரவேற்றான். ப்ரதச்வன அவ்விருவருக்கும் அர்க்யத்தையும் பாத்யத்தையும் கொடுத்து அனுமதிபெற்று, 'முனிச்ரேஷ்டரே! விருப்பத்தைச் சொல்லும். உம்முடைய வரவினால் தன்யனாகிறேன்' என்று அவருடைய வரவின் காரணத்தை வினவினான். அகஸ்தியர், 'பூமிப! எங்களிருவரையும் தனத்தில் விருப்பமுள்ளவர்களாக இங்கு வந்தவர்களென்று நீ அறி. பிறரைத் துன்புறுத்தாமல் உன் சக்திக்குத் தக்கபடி எங்களுக்குத் தனத்தைக் கொடு' என்று சொன்னார். பிறகு, அரசன், 'வரவும் செலவும் ஒத்திருக்கின்றன. இதை அறிந்து இந்தத் தனத்தில் மிச்சமிருப்பதாகத் தெரிந்தால பெற்றுக்கொள்ளுங்கள்' என்று அவர்களுக்குத் தெரிவித்தான். பிறகு, ஸமபுத்தியுள்ள பிராம்மணர் வரவு செலவுகள் ஒத்திருப்பதைக் கண்டு பொருளைப் பெறுவதனால் எல்லாவிதத்தாலும் பிராணிகளுக்குத் துன்பமுண்டாவதை நினைத்தார். அதற்குப் பிறகு, அகஸ்தியரும் ச்ருதர்வாவும் அரசனான ப்ரதச்வனும் மிக்க பொருளுள்ள புருகுத்ஸனுடைய குமாரனான த்ரஸதஸ்யுவை அடைந்தார்கள். மஹாராஜனே! பெரிய மனமுள்ள த்ரஸதஸ்யுவோ அவர்களைத் தன் தேசத்தின் எல்லையிலே எதிர்சென்று கண்டு விதிப்படி வரவேற்றான். இக்ஷ்வாகு வம்சத்தவனான (அந்த) ராஜச்ரேஷ்டன், முறைப்படி அர்ச்சித்து, பிறகு, எல்லோரையும் வரவின் ப்ரயோஜனத்தை வினவினான். அகஸ்தியர், 'அரசனே!

எங்களைத் தனத்தில் விருப்பத்துடன் இங்கு வந்தவர்களாக நீ அறி. பிறரைத் துன்புறுத்தாமல் சக்திக்குத்தக்கபடி எங்களுக்குப் பொருளைக் கொடு' என்று சொன்னார். பிறகு, அரசன், 'வரவும் செலவும் ஒத்திருக்கின்றன. இதை அறிந்து இந்தத் தனத்தில் மிச்சமிருந்தால் பெற்றுக்கொள்ளுங்கள்' என்று அவர்களுக்குத் தெரிவித்தான். ஸமபுத்தியுள்ள பிராம்மணர், பிறகு, வரவு செலவுகள் ஸமமாக இருப்பதைக்கண்டு (தனத்தை) க்ரஹிப்பதனால் எல்லா விதத்தாலும் பிராணிகளுக்குத் துன்பமுண்டாவதை நினைத்தார். மகாராஜனே! பிறகு, அந்த அரசர்களனைவரும் ஒன்று சேர்ந்து ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு அந்த மஹாமுனிவரை நோக்கி, 'பிராம்மணரே! இல்வலனென்கிற இந்த அஸுரன் பூமியில் மிக்க தனமுள்ளவனாக இருக்கிறான். அவனை அடைந்து நாமெல்லாரும் இப்பொழுது பொருளை யாசிப்போம்' என்று இந்த வசனத்தைக் கூறினார்கள். அரசனே! இல்வலனையாசிப்பதே உசிதமென்று அவர்களுக்கு அப்பொழுது தோன்றியது. பிறகு, அவர்கள் ஒன்று சேர்ந்தவர்களாக இல்வலனிடம் விரைந்து சென்றார்கள்.

---

## தொண்ணூற்றேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(இல்வலன் அகஸ்தியருக்கு ஆடாகச்செய்யப்பட்ட வாதாபியின் மாம்ஸத்தைப் பரிமாறியதும், இல்வலன் வாதாபியை அழைக்க அகஸ்தியர் தாம் அவனை ஜீர்ணமாக்கியதைச் சொல்லியதும், பயந்த இல்வலன் பொருள்கொடுத்தலை முன்னிட்டு அவரைக்கொல்ல எண்ணிப் பின்தொடர்ந்ததும், அவர் ஹுங்காரத்தால் இல்வலனைச் சாம்பலாக்கி லோபாமுத்ரைக்கு ஏராளமான தனத்தைக் கொடுத்து அவளிடத்தில் குணசாலியான ஒரு பிள்ளையை உண்டுபண்ணியதும்.)

இல்வலனோ அந்த அரசர்கள் மஹரிஷியுடன் சேர்ந்து தன் தேசத்தின் எல்லையில் வந்ததை அறிந்து மந்திரிகளுடன் கூடினவனாகி (அவர்களைப்) பூஜித்தான். குருவம்சத்தில் உதித்தவனே!

பிறகு, அஸுரஸ்ரேஷ்டன், அப்பொழுது நன்றாகப் பக்குவம் பண்ணப்பட்ட பிராதாவான வாதாபியினால் அவர்களுக்கு விருந்து செய்தான். பிறகு, பெரிய அஸுரனான வாதாபி ஆடாகிப் பக்குவம் பண்ணப்பட்டதைக் கண்டு எல்லா ராஜரிஷிகளும் துயரமடைந்தவர்களும் பிரஜ்ஞையை இழந்தவர்களும் ஆனார்கள். பிறகு, ரிஷிகளுள் மிகச் சிறந்தவரான அகஸ்தியர், அந்த ராஜரிஷிகளைப் பார்த்து, 'நீங்கள் துயரமடைய வேண்டாம். பெரிய அஸுரனை நான் பக்ஷிப்பேன்' என்று சொன்னார். பிறகு, மஹரிஷியானவர், அக்ராஸனத்தை அடைந்து அதில் வீற்றிருந்தார். அஸுரஸ்ரேஷ்டனான இல்வலன் உரக்கச் சிரித்துக்கொண்டு அதனைப் பரிமாறினான். பிறகு, அகஸ்தியரே வாதாபிமாமஸம் முழுமையையும் பக்ஷித்தார்; தாம் பக்ஷித்துக் கொண்டே, 'எனக்கு உன்னுடைய அன்னத்தில் மிக்க ஆசை இருக்கிறது' என்று சொன்னார். அவர் போஜனம் செய்த பிறகு, இல்வலனென்கிற அஸுரன், 'வாதாபியே! தவத்தினால் ஜயிக்கப்பட முடியாத இந்த அகஸ்தியர் உன்னை மீறுவதற்குமுன் பலத்தையும் தேஜஸையும் காண்பித்துக்கொண்டு விழித்துக்கொள்' என்று அவனை அழைத்தான். பிறகு, வாதாபி அவருடைய வயிற்றைப் பிளப்பதற்கு வேகத்தைக் கைக்கொண்டான். பெருந்தவமுள்ளவரும் தேஜஸ்வியுமான கும்பமுனிவர் அதனைத் தெரிந்துகொண்டார். தவத்தினால் உக்கிரமானவரும் பகவானுமான அந்தமுனிவர் வீர்யத்தால் கர்ஜித்தார்; தேஜஸினால் நன்றாகஜ்வலித்துக் கொண்டு, மிகுந்த பரபரப்புடன், 'வாதாபியே! உலகத்தின் க்ஷேமத்துக்காக இதோ என்னால் ஜீர்ணமாக்கப்படுகிறாய்' என்று இவ்வண்ணம் மூன்று முறை சொல்லித் தம் கைநுனியினால் வயிற்றைத் தட்டினார். ஐயனே! பிறகு, மகாத்மாவான அந்த அகஸ்தியருக்குக் கர்ஜிக்கின்ற மேகம்போலப் பெரிய சப்தத்தோடு வாயுவானது கீழ் நோக்கிப் புறப்பட்டது. இல்வலன், 'வாதாபியே! வெளிக்கிளம்பு' என்று திரும்பவும் திரும்பவும் சொன்னான். அரசனே! ரிஷிகளுள் மிகச் சிறந்தவரான அகஸ்தியர், அந்த இல்வலனைப் பார்த்து, உரக்கச் சிரித்து, 'எங்கிருந்து வெளிப்படுவதற்கு வல்லவனாவன்? என்னால் அந்த அஸுரன் ஜீர்ணமாக்கப்பட்டு விட்டானன்றோ?' என்று சொன்னார். இல்வலனோ, பெரிய அஸுரன் ஜீர்ணமாக்கப் பட்டதைக் கண்டு துயரமடைந்தவனானான். அவன், மந்திரிகளுடன் சேர்ந்து கரங்குவித்துக்கொண்டு, 'எதற்காக நீங்கள் வந்தீர்கள்? உங்களுக்கு என்ன செய்யக்கடவேன்? சொல்லுங்கள்' என்ற சொல்லைச்

சொன்னான். பிறகு, அகஸ்தியர், அப்பொழுது இல்வலனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு, 'அஸுர! நீ பிரபுவாக இருக்கிறாய். நாங்கள் எல்லோரும் உன்னைத் தனங்களுக்கு உடையவனென்று அறிகிறோம். இவர்கள் அதிக தனமுள்ளவர்களல்லர். எனக்குத் தனத்தில் ஆசை அதிகமாக இருக்கிறது. பிறரைத் துன்புறுத்தாமல் சக்திக்குத் தக்கபடி எங்களுக்குப் பாகம் கொடு' என்று மறுமொழி உரைத்தார். பிறகு, இல்வலன், அந்த ரிஷியை அவமதித்து, 'நான் கொடுக்க விரும்பியதை நீர் அறிகிறீராகில், பிறகு, உமக்குத் தனத்தைக் கொடுப்பேன்' என்ற வசனத்தைச் சொன்னான். அகஸ்தியர், 'அஸுரனே! பெரிய அஸுரனே! இந்த அரசர்கள் ஒவ்வொருவருக்கும் நீ கொடுக்க விரும்பினவை பதினாயிரம் பசுக்களும் அவ்வளவே பொன்களுமாம். மகாஸுரனே! எனக்கு நீ கொடுக்க விரும்பினவை அவற்றைவிட இரண்டு மடங்கும் ஸ்வர்ணமயமான ஒரு ரதமும் மனோவேகமுள்ள இரண்டு குதிரைகளுமாம்' என்று சொன்னார். இல்வலனோ, முனிவரைப் பார்த்து, 'நீர் என்னை நோக்கிச் சொல்லுகின்றவை அனைத்தும் இருக்கின்றன. பொன்னும் பசுக்களுமாகிய இந்தத் தனமனைத்தையும் கொடுப்பேன். என்னை நோக்கிச் சொல்லிய ஸ்வர்ணமயமான ரதத்தை நான் அறியேன்' என்று சொன்னான். அகஸ்தியர், 'மஹாஸுரனே! பொய்யான வசனம் ஒன்றுகூட என்னால் முந்திச் சொல்லப்பட்டதில்லை. நன்கு ஆலோசித்தறியக் கடவாய். பொன்மயமான ரதம் இருக்கிறது நிச்சயம்' என்று சொன்னார். கௌந்தேய! ஆலோசித்தபோது அந்த ஸ்வர்ணமயமான ரதம் இருந்தது. பிறகு, அஸுரன் அதிக மனவருத்தமுள்ளவனாக அதிகமான தனத்தைக் கொடுத்தான். பாரத! அந்த ரதத்தில் பூட்டப்பட்ட விராஜி ஸுவாஜி என்கிற அந்தக் குதிரைகள் அந்தத் தனங்களுடனும் அகஸ்தியருடனும் கூடிய எல்லா அரசர்களையும் ஒரு நிமிஷத்திற்குள்ளாக அகஸ்தியருடைய ஆச்ரமத்தைக் குறித்து விரைவில் சுமந்துகொண்டுவந்தன. இல்வலனோ இந்த அகஸ்தியரைப் பின்தொடர்ந்து கொல்ல விரும்பினான். மகாதேஜஸ்வியான அகஸ்தியர் ஹுங்காரத்தால் மகாஸுரனைச் சாம்பலாகச்செய்தார். அப்பொழுது, ராஜரிஷிகள் அகஸ்தியரால் அனுமதி கொடுக்கப்பட்டுச் சென்றார்கள். அகஸ்தியமுனிவர் லோபாமுத்திரையினால் விரும்பப்பட்ட எல்லாவற்றையும் செய்தார். லோபாமுத்திரை, 'பகவானே! எனக்கு விருப்பமான அந்தத் தனத்தையும் செய்துவிட்டீர். ஒருமுறை சிறந்த பராக்கிரம

முள்ள குழந்தையை என்னிடத்தில் உண்டுபண்ணும்' என்று சொன்னாள். அகஸ்தியர், 'கல்யாணி! மங்களகரியே! உன்னுடைய சரித்திரத்தினால் நான் ஸந்தோஷமுள்ளவனாக இருக்கிறேன். குழந்தை விஷயத்தில் ஓர் ஆலோசனையை உனக்குச் சொல்லுவேன்; அதைக் கேள். உனக்கு ஆயிரம் பிள்ளைகள் வேண்டுமா? அல்லது, ஆயிரம் பிள்ளைகளுக்குச் சமமான நூறுபிள்ளைகள் வேண்டுமா? அல்லது, நூறுபிள்ளைகளுக்குச் சமமான பத்துப் பிள்ளைகள் வேண்டுமா? அல்லது ஆயிரத்தையும் வெல்லக்கூடிய ஒருபிள்ளை வேண்டுமா?' என்று வினவினார். லோபாமுத்திரை, 'தபோதனரே! ஆயிரம் பிள்ளைகளுக்கு ஸமனான ஒரு புத்திரன் உண்டாகட்டும். கற்றறிந்தவனும் தார்மிகனுமான ஒரு புத்திரன் துஷ்டர்களான பல பிள்ளைகளைக் காட்டிலும் சிறப்புடையவன்' என்று சொன்னாள். அந்த முனிவர், 'அப்படியே ஆகட்டும்' என்று ப்ரதிஜ்ஞை செய்து ஸ்ரத்தையுள்ளவராகி ஸ்ரத்தையுள்ளவளும் தம்மோடு ஒத்த ஒழுக்கமுள்ளவளுமான அவளுடன் தக்க சமயத்தில் சேர்ந்தார்.

பிறகு, அந்த அகஸ்தியர் அந்தக் கர்ப்பத்தை உண்டுபண்ணிவிட்டுக் காட்டுக்குச் சென்றார். அவர் காட்டுக்குப் போன பிறகு, கர்ப்பமானது ஏழுவருஷம் வளர்ந்தது. பாரத! ஏழாவது வருஷமும் சென்றபிறகு, அந்தக் கர்ப்பம் மகிமையால் விளங்கிக்கொண்டு த்ருடஸ்யு என்னும் மஹாகவியாகப் பிறந்தது. மிக்க தவமுள்ளவனும் தேஜஸ்ஸுள்ளவனும் மஹானுமான அந்த ரிஷி அங்கங்களுடனும் உபநிஷத்துக்களுடனும் கூடிய வேதங்களை ஜபித்துக்கொண்டே அந்த அகஸ்தியரிஷிக்குப் புத்திரனாகப் பிறந்தான். தேஜஸ்ஸுள்ள அவன் பாலனாக இருந்துகொண்டே அந்தப் பிதாவினுடைய வீட்டில் ஸமித்துக்களுடைய சுமையைக் கொண்டுவந்தான். அதனால், அவன் இத்மவாஹன் என்கிற பெயருள்ளவனானான். அப்படி (வேதமோதலுடனும் ஸமித்துக் கொண்டுவருதலுடனும்) கூடின அந்தப் பிள்ளையைப் பார்த்து அந்த அகஸ்தியமுனிவர் அப்பொழுது மகிழ்ந்தார். பாரத! அவர் இவ்வண்ணம் உத்தமமான குழந்தையை உண்டுபண்ணினார். அரசே! அவருடைய பிதருக்களும் விரும்பப்பட்ட உலகங்களை அடைந்தார்கள். பிரஜைகளுக்கு அதிபதியே! மஹாராஜனே! அதற்குமேல், இந்த அகஸ்தியருடைய ஆஸ்ரமமானது புத்திமானான அந்தப் புத்திரனுடைய தேஜஸினால் உலகில் க்யாதியை அடைந்தது. வேந்தே! பிரஹ்லாதனுடைய குலத்தில் பிறந்தவனான வாதாபி இப்படி பிராம்மணர்களைக் கொல்பவனும்

துஷ்டபுத்தியுள்ளவனுமாயிருந்தான்; மகாத்மாவான அகஸ்தியரால் இவ்வண்ணம் அழிக்கப்பட்டான். அரசனே! மகிழத்தக்க குணங்களுடன் கூடின இந்த ஆஸ்ரமமானது அந்த அகஸ்தியருடையது. புண்யமானதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதுமான இந்தப் பாகீரதியானது ஆகாயத்தில் காற்றினால் அசைக்கப்பட்ட கொடித்துணிபோல விளங்குகிறது. இந்தப் பாகீரதியானது, எப்பொழுதும் பள்ளங்களில் ஓடுவதுபோலச் சிகரங்களில் நன்கு பரவிக்கொண்டும் ஸர்ப்பம்போலக் கற்களுடைய அடிகளில் மறைந்துகொண்டும் செல்லுகிறது; தாய்போலத் தென்திசை முழுமையும் நனைத்துப் போஷிக்கிறது. ஸமுத்ரராஜனுக்குப் பிரியமஹிஷியாக இந்தக் கங்கையானது முற்காலத்தில் சிவனுடைய ஜடையினின்று நழுவி விழுந்தது. மிக்க புண்யமான இந்நதியில் இஷ்டப்படி ஸ்நானம் செய்யவேண்டும்.

---

## தொண்ணூற்றெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(யுதிஷ்டிரர் ப்ருகுதீர்த்தம் சென்றதும், தசரதராமர் பரசுராமருடைய தேஜஸைக் கவர்ந்ததையும் பரசுராமர் பிதுருக்களின் கட்டளையினால் ப்ருகுதீர்த்தத்தில் ஸ்நானம் செய்து மீண்டும் அந்தத் தேஜஸைப் பெற்றதையும் லோமசர் யுதிஷ்டிரருக்குச் சொல்லியதும்.)**

யுதிஷ்டிர! மஹாராஜனே! மூவுலகங்களிலும் பிரஸித்திபெற்றதும் மஹரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டதுமான இதனை, பரசுராமர் எந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம்செய்து (ரகுராமரால்) கவரப்பட்ட அந்தத்தேஜஸைப் பெற்றாரோ அந்த ப்ருகு தீர்த்தமென்று தெரிந்துகொள். பாண்டுநந்தன! இந்தத் தீர்த்தத்தில் நீ ஸஹோதரர்களுடனும் திரௌபதியுடனும் ஸ்நானம் செய்து (ரகுராமருடன்) பகைத்த பரசுராமர் தேஜஸை எவ்வாறு மீண்டும் அடைந்தாரோ அவ்வாறு துரியோதனனால் கவரப்பட்ட தேஜஸை மீண்டும் அடையக்கடவாய்' என்று சொன்னார். பாரதரே! பாண்டவரான அவர் அந்தப் பிருகு தீர்த்தத்தில் தம்பிமார்களுடனும் பாஞ்சாலியுடனும் ஸ்நானம்செய்து தேவர்களையும்

பிதருக்களையும திருப்தியடையச்செய்தார். அந்தத்தீர்த்தத்தினுடைய ரூபமானது காந்தியுள்ள பொருள்களைக்காட்டிலும அதிக காந்தியுள்ளதாக விளங்கியது. புருஷஶ்ரேஷ்டரே! (யுதிஷ்டிரர்) பகைவர்களால் சிறிதும அவமதிக்கமுடியாதவரும் ஆனார்.

ராஜேந்திரரே! பாண்டுபுத்திரரான தர்மராஜர், லோமசரைப் பார்த்து, 'பகவானே! பிரபுவே! எதற்காகப பரசுராமருடைய தேஜஸானது அபஹரிக்கப்பட்டதாயிற்று? எவ்வாறு அது மீண்டும பெற்றுக்கொள்ளப்பட்டது? இதனை வினவுகின்ற எனக்குச சொல்வீராக' என்று வினவினார். லோமசர், 'ராஜேந்திரனே! தாசரதிராமர் சிறந்தபுத்தியுள்ள பரசுராமா இவர்களுடைய வரலாற்றைக் கேள். விஷ்ணுவானவர் ராவணனுடைய வதத்துக்காகத் தம் சரீரத்தால் மஹாத்மாவான தசரதருக்கு ராமரென்கிற புதல்வராகப பிறந்தார். அதிலிருந்து அந்தவிஷ்ணுவை அயோத்தியில் தசரதபுத்ரராகப் பிறந்தவராகக் காணகிறோம. [1] ரிசீகருடைய பேரரும ப்ருகுவின் ப்ரபௌத்ரரும் ரேணுகையின்புத்ரருமான (பரசு) ராமர் இகழ்தத்தகாத செய்கைகளுள்ள அந்தத தாசரதிராமருடைய (பராக்ரமத்தைக்) கேட்டு அபபொழுது குதூஹலமுள்ளவராகவும தசரதகுமாரரான ராமருடைய வீர்யத்தை அறிய எண்ணம்கொண்டவராகவும் க்ஷத்திரியர்களை அடக்குவதான அப்படிப்பட்ட திவ்யமானவில்லை எடுத்துக்கொண்டு மறுபடியும் அயோத்தியை அடைந்தார். தசரதர், அந்தப் பரசுராமர் தம்தேசத்து எல்லையை அடைந்ததைக்கேட்டுப் பரசுராமருடைய வரவேற்புக்காகத தம் புத்ரரான ராமரை அனுப்பினார். குந்தீ நந்தன! அந்தப் பரசுராமர், எதிர்கொண்டுவந்தவரும் ஆயுதம்பிடித்து நிற்பவருமான அந்த ராமரைப்பார்த்து, பரிகஸிக்கிறவர்போல, 'ராஜஶ்ரேஷ்டனே! பிரபுவே! இந்தவில் என்னால் நெடுங்காலமாக உபயோகிக்கப்பட்டதன்றோ? அரசனே! நீ வல்லமையுள்ளவனாக இருந்தால் பிரயத்தனத்தால் இதனை நாணேற்றுவாயாக' என்கிற வசனத்தைச் சொன்னார். இவ்வண்ணம் சொல்லக்கேட்ட (தாசரதிராமர்), 'பகவானே! நீர் (என்னை) அவமதிப்பதற்குத தகுதியுள்ளவரல்லீர். க்ஷத்திரியர்களுடைய தர்மத்தில நானும மிகத்தாழ்ந்தவனல்லேன். இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தவர்களுக்குப் புஜபல விஷயத்தில் பிராம்மணர்களிடம் விசேஷமாகப் புகழ்ந்துபேசுவது தக்கதன்று' என்று சொன்னார். இவ்வண்ணம் சொல்லுகிற அவ

---

1 'ரிசீகநந்தந:' என்பது மூலம்.

ரைப் பரசுராமர் அப்பொழுது, 'ராகவனே! பெருமை பேசாதே. வில்லில் நாணேற்றுவாயாக' என்கிற வசனத்தை உரைத்தார். பிறகு, தசரதகுமாரரான ராமர் ரோஷத்தோடு சிறந்த க்ஷத்திரியர்களைப் பிளப்பதான திவ்யமான வில்லைப் பரசுராமருடைய கையிலிருந்து வாங்கிக்கொண்டார். பாரத! வீர்யவானான ராமர் விளையாடுகிறவர் போல வில்லில் நாணேற்றினார். புன்னகைசெய்துகொண்டு நாணொலியையும் செய்தார். பிராணிகள் அந்த ஒலியைக்கேட்டு இடியைக் கேட்டுப் பயப்படுவதுபோலப் பயந்தன. பிறகு, தாசரதிராமர்[1] அப்பொழுது பரசுராமரைப்பார்த்து, 'பிராம்மணரே! இது நாணேற்றப்பட்டது. வேறு எதை உமக்கு நான் செய்யக்கடவேன?' என்று சொன்னார். ஜமதக்னிகுமாரரான ராமர், அந்த மஹாத்மாவான ராமருக்கு, 'இந்த அம்பைக் காதோரமவரையில் இழு' என்று திவ்யமான ஓர் அம்பைக் கொடுத்தார். ராமர், இந்த வார்த்தையைக்கேட்டுக் கோபத்தால் ஜ்வலிப்பவர்போலப் பரசுராமரைப் பார்த்து, 'பார்க்கவரே! நீர் அகங்காரத்தால் நிறைந்திருக்கிறீர் என்று கேட்டிருக்கிறேன்; பொறுக்கவும் பொறுக்கிறேன். பிதாமஹருடைய அநுக்ரஹத்தினால், உம்மால், க்ஷத்திரியர்களை வென்றதிலிருந்து பராக்ரமமும் விசேஷமாக அடையப்பட்டது. அதனால், என்னை எறிந்துபேசுகிறீர்; இது நிச்சயம். என்னை ஸ்வரூபத்தோடு பாரும். நான் உமக்கு ஞானக்கண்ணைக் கொடுக்கிறேன்' என்று சொன்னார். பாரத! யுதிஷ்டிர! பிறகு, பரசுராமர் ராமருடைய சரீரத்தில் ஆதித்யர்களையும் வஸுக்களையும் ருத்ரர்களையும் மருத்கணங்களையும் ஸாத்யர்களையும் பிதருக்களையும் அக்னியையும் நக்ஷத்திரங்களையும் அவ்வாறே க்ரஹங்களையும் கந்தர்வர்களையும் அரக்கர்களையும் இயக்கர்களையும் நதிகளையும் தீர்த்தங்களையும் பிரம்மமானவர்களும் ஸநாதனர்களுமான வாலகில்ய ரிஷிகளையும் தேவரிஷிகளையும் எல்லா ஸமுத்ரங்களையும் அப்படியே எல்லா மலைகளையும் வஷட்காரங்களையும் யாகங்களையும் உபநிஷத்துக்களையும் வேதங்களையும் [2] சைதன்யமுள்ள ஸாமங்களையும் தனுர்வேதத்தையும் மேகக்கூட்டங்களையும் மழைகளையும் மின்னல்களையும் பார்த்தார். பாரத! பிறகு, பகவானும் விஷ்ணுவுமான அந்த ராமர் அந்தப் பாணத்தைவிட்டார் (அப்பொழுது) பூதலமானது பெரிய உற்கைகளாலும் பெரிய புழுதிமழையாலும் மேகங்களின்

---

1 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது. 2 சரீரமுள்ள.

மழைகளாலும் பூகம்பஙகளாலும் பெரிய இடிமுழக்கங்களாலும் நெருப்பிடிகளாலும நிரமபியது. ராமருடைய கையால விடபபட்ட அந்தப் பாணமானது பரசுராமரை மயஙகியவராகச செய்து தேஜஸை மாததிரம் போக்கிவிட்டுப் பிரகாசததுடன் திருமபிவநதது. அநதப் பரசுராமரோ, மயக்கத்தை அடைநது, பின்பு, நினைவை மீண்டும் பெற்று, உயிர்திரும்பி வந்தவராகி, விஷ்ணு தேஜஸுள்ளவரான ராம ரைத தண்டனிட்டார். (அந்த) விஷ்ணுவால விடையளிககப்பட்ட அந்தப் பரசுராமர் மறுபடியும் மஹேந்திரமலைககுச் சென்றார். பெருந்தவமுள்ள பரசுராமர் வெட்கமுள்ளவராகவும பயநதவ ராகவும அந்தமலையில் வாஸம செய்தார். பிறகு, ஒரு வர்ஷகாலம் சென்றபின், பிதருக்கள், வல்லமை கவரப்பட்டிருக்கிற பரசுராமரை மதமறறவரும் துக்கமுள்ளவருமாகக் கண்டு, 'புததிர! விஷ்ணுவை (=ராமரை) எதிர்தது (ப்பட்டம) இந்த மனவருததமானது நல்ல தன்று. அவர் மூவுலகஙகளிலும எபபொழுதும் பூஜிக்கப்படத தக்கவரும, நன்குமதிககததக்கவரும அல்லவோ? புததிரனே! வதூஸரம் என்கிற பெயர்கொணட புண்யநதிககுச் செல்வாயாக அதிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து மீணடும் சரீரததை (=பலததை) அடைவாய். ராம! எந்தததீர்ததத்தில் உன்னுடைய பிரபிதாமஹரான பிருகுவானவர் தேவயுகததில உததமமான தவத தைச் செய்தாரோ அந்ததீர்த்தமானது தீப்தோதம் என்று பிர ஸித்திபெற்றது' என்று சொன்னார்கள். கௌந்தேய! ராமர் [1] பித ருக்களுடைய வாக்கியததினால் அதை அவ்விதம செய்தார். பாண்டு நந்தன! இந்தததீர்ததத்தில தேஜஸை மீண்டும அடைந்தார். ஐயா! மஹாராஜனே! முற்காலததில் சிறந்த செய்கையுள்ள பரசுராமரால் விஷ்ணுவான ராமரை எதிர்த்து இப்படிப்பட்ட இந்தத் தேஜோ பஙகமானது அடையப்பட்டதாயிற்று' என்று சொன்னார்.

---

1 'பிது:' என்பது மூலம.

நூற்றெண்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(விருத்ராஸுரனால் துன்புறுத்தப்பட்ட இந்திரன் முதலியவர்கள் பிரம்மதேவரின் கட்டளைப்படி வஜ்ராயுதம் செய்வதற்காகத் ததீசரை அடைந்து அவருடைய எலும்பை வேண்டியதும், த்வஷ்டா ததீசருடைய எலும்பினால் வஜ்ராயுதத்தைச் செய்ததும்)

யுதிஷ்டிரர், 'பிராம்மணோத்தமரே! புத்திமானான அந்த அகஸ்தியமகரிஷியினுடைய செய்கைகளின் விரிவை மறுபடியுமே நான் கேட்கவிரும்புகிறேன்' என்று வினவ, லோமசர் சொல்லானார். 'அரசனே! மகாராஜனே! திவ்யமானதும் ஆச்சர்யமானதும் மனிதர்களுடைய சரித்திரத்தைத் தாண்டியிருப்பதுமான அளவிறந்த தேஜஸுள்ள அகஸ்தியருடைய கதையையும் பிரபாவத்தையும் கேள். கிருதயுகத்தில் கோரமானவர்களும் யுத்தத்தில் கெட்டமதமுள்ளவர்களும் காலகேயர்களென்று பிரஸித்தி பெற்றவர்களும் மிக்க பயங்கரர்களுமான அஸுரர்கள் கூட்டங்களாக இருந்தார்கள். அவர்கள் விருத்ரனை அடுத்துப் பலவித ஆயுதங்களை எடுத்துக்கொண்டு மஹேந்திரன் முதலிய தேவர்களை நோக்கி நாற்புறங்களிலும் (எதிர்த்து) ஓடினார். பிறகு, தேவர்கள் முற்காலத்தில் வ்ருத்ரனைக் கொல்வதில் முயற்சியைச் செய்தார்கள்; இந்திரனை முன்னிட்டுக்கொண்டு பிரமமாவை அடைந்தார்கள். பிரம்மதேவர், அஞ்சலிபந்தம் செய்துகொண்டிருக்கிற அவர்களனைவரையும் பார்த்து, 'தேவர்களே! நீங்கள் செய்ய விரும்பின காரியமனைத்தும் எனக்குத் தெரிந்தது. வ்ருத்ரனைக் கொல்லத்தக்க உபாயத்தைச் சொல்லுவேன். ததீசர் என்று ப்ரஸித்திபெற்ற உதாரபுத்தியுள்ள ஒரு மஹரிஷி இருக்கிறார். நீங்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து அவரை அடைந்து ஒருவரத்தை நன்கு வேண்டிக்கொள்ளுங்கள். தர்மாத்மாவான அவர் மிக்கப்ரீதியுள்ள உள்ளத்தோடு உங்களுக்கு அளிப்பார். ஜயத்தை விரும்புகின்றவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களுமான நீங்களனைவரும், 'மூன்று உலகத்துக்கும் நன்மைக்காகத் தேவரீருடைய எலும்புகளைத் தரக்கடவீர்' என்று அவரைக் கேட்கவேண்டும். அவர் சரீரத்தை விட்டு எலும்புகளைக் கொடுப்பார். அவருடைய எலும்புகளால் மிக்கபயங்கரமானதும் பெரிய

தும் பகைவர்களைக்கொல்வதும் அச்சந்தருவதும் ஆறுபட்டையுள்ளதும் அச்சந்தரும் பேரொலியுள்ளதுமான வஜ்ராயுதமானது உறுதியாகச் செய்யப்படவேண்டும். இந்திரன் அந்த வஜ்ராயுதத்தால் வ்ருத்ரனைக் கொல்லுவான். இதுமுழுமையும உங்களுக்குச் சொல்லப்பட்டது. ஆதலால், விரைவாகச் செய்யக் கடவீர்' என்று சொன்ஞர். பிறகு, இவ்வண்ணம் சொல்லப்பட்ட தேவர்கள், பிரமமாவிடம் விடைபெற்றுக்கொண்டும நாராயணனை முன்னிட்டுக் கொண்டும் ததீசருடைய ஆஶ்ரமத்தை நோக்கிச் சென்றனர். ஸரஸ்வதி நதியினுடைய அக்கரையிலிருப்பதும, பலவிதமரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டதும், [1]ஸாமகானம பண்ணுகிறவாகள்போன்ற வண்டுகளினுடைய உரத்தபாடலோசைகளால் முழக்கப்பட்டதும், ஆணகுயில்களுடைய ஒலியுடன்கலந்ததும், சகோரங்களால ஒலிக்கப்பெற்றதும், புலியின் பயத்தால் விடுபட்ட எருமைகளாலும பன்றிகளாலும் ஸ்ருமரங்களாலும் சமரஙகளாலும் ஆங்காங்கு ஸஞ்சரிக்கப்பட்டதும், பெண்யானைகளாலும மதம்பெருக்கும் துவாரங்களின் வாய்பிளந்திருப்பவைகளும் தடாகங்களில மூழ்கி விளையாடுகின்றவைகளுமான ஆண்யானைகளாலும் நாற்பக்கங்களிலும் முழக்கப்பட்டதும், பேரொலிசெய்கின்ற சிஙகங்களாலும் புலிகளாலும் முழக்கப்பட்டதும், குகைகளிலும் மலைப்பொந்துகளிலும் படுத்திருப்பவைகளும் பதுங்கி இருப்பவைகளுமான மற்றவைகளாலும் அந்த அந்த இடங்களில் பிரகாசிக்கின்றதும், மனத்திற்கு மிகக மகிழ்ச்சியைத்தருகின்றதும, ஸ்வர்க்கத்துக்குச் சமமான ஒளியுள்ளதுமான ததீசருடைய ஆஶ்ரமத்தை அடைந்தார்கள். அந்தத் தேவர்கள் அந்த ஆஶ்ரமத்தில் சூரியனுக்குச் சமமான காந்தியுள்ளவரும் சரீரத்தால நேரே வந்த பிரம்மதேவர் போல மிக ஜ்வலிப்பவருமான ததீசரைக் கண்டார்கள். அரசனே ! தேவர்கள் எல்லாரும் அவருடைய கால்களில் நமஸ்கரித்து அபிவாதனம் செய்து பிரம்மதேவர் சொல்லியவண்ணம் வரத்தை வேண்டினார்கள். பிறகு, ததீசர், மிக நம்பினவராகி அந்தத தேவஶ்ரேஷ்டர்களைப் பார்த்து, 'தேவர்களே ! இப்பொழுது உங்களுக்கு எது நன்மையோ

1 'ஸாமகை:' என்பது மூலம். 'ஸாமகானம் செய்பவர்களால்' என்பது அதன்பொருள்; உபமானஉபமேயஙகள் பொருந்தாமையால, தொழிற் பெயராகக் கொண்டு, 'ஸாமகானஙகள்' என்றே கொள்ளலாம். ஆர்ஷமாதலால் இஙஙனம் வந்தது என்க.

அதைச் செய்கிறேன். என தேகத்தையும் நானே விட்டுவிடுகிறேன்' என்று சொன்னார். மனிதர்களுள் மிகச்சிறந்தவரும் இந்திரியங்களை அடக்கினவருமான அந்தத் ததீசர் இவ்வண்ணம் சொல்லித் தம் உயிரை விட்டார். பிறகு, அந்தத் தேவர்கள் மரித்த அந்தத் ததீசருடைய எலும்பைப் பிரமதேவர் உபதேசித்தவண்ணம் எடுத்தார்கள். தேவர்கள் மிக்க களிப்புள்ளவர்களாக ஜயத்தின்பொருட்டு த்வஷ்டாவை அடைந்து அந்தக்காரியத்தைச் சொன்னார்கள். த்வஷ்டாவோ, அவர்களுடைய சொல்லைக்கேட்டு, மிக்கமகிழ்ச்சியுள்ளவனும் நியமமுள்ளவனுமாகி முயற்சியினால் மிகவும் பயங்கரமான ரூபமுள்ள வஜ்ராயுதத்தைச் செய்தான். அவன், அந்த ஆயுதத்தைச் செய்து ஸந்தோஷமுள்ளவனாக இந்திரனைப்பார்த்து, 'தேவனே! இந்தச் சிறந்த வஜ்ரத்தினால் உக்கிரனான தேவசத்ருவைஇப்பொழுது சாம்பலாகச் செய்வாயாக. பிறகு, பகைவனைக்கொன்ற நீ (தேவ) கணங்களுடன் ஸ்வர்க்கத்தில் நிலைபெற்றுத் தேவலோகம் முழுமையையும் ஸுகமாகப் பரிபாலனம் செய்வாயாக' என்று சொன்னான். த்வஷ்டாவினால் அவ்வண்ணம் சொல்லப்பட்ட புரந்தரனோ, அதிகஸந்தோஷமுள்ளவனாகவும் நியமமுள்ளவனாகவும் அந்த வஜ்ராயுதத்தைப் பெற்றுக்கொண்டான்.

---

## நூறாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரன் விருத்ரனைக் கொன்றதும், அஸுரர்கள் தேவகணங்கள்செய்த துன்பத்தைப் பொறாமல் கடலுள்சென்று உலகத்தை அழிக்க நிச்சயித்ததும்.)

பிறகு, வஜ்ராயுதம் பிடித்தவனும் வலாஸுரனைக் கொன்றவனுமான அவன், தேவர்களால் நாற்புறங்களிலும் பாதுகாக்கப்பட்டவனாகி, ஆகாயத்தையும் பூமியையும் வ்யாபித்துக்கொண்டிருப்பவனும், பெரிய சரீரமுள்ளவர்களும் ஆயுதமெடுத்தவர்களும் கொடுமுடிகளுடன்கூடிய மலைகள்போன்றவர்களுமான காலகேயர்களால் நான்குபக்கங்களிலும் சூழ்ந்து காக்கப்பட்டிருக்கிறவனுமான வ்ருத்ரனை எதிர்த்தான். பரதஸ்ரேஷ்டனே! பிறகு, தேவர்களுக்கு அஸுரர்களோடு உலகத்துக்குப் பயத்தை உண்டுபண்ணுகிற பெரிய யுத்தமானது ஒரு முகூர்த்த காலம் நடந்தது.

வீரர்களுடைய கைகளால் ஓங்கி வீசப்பட்டவைகளும் சரீரங்களில் போடப்படுகின்றவைகளுமான கதிகளுடைய சப்தமானது மிக நெருங்கினதாயிற்று. மஹாராஜனே! ஆகாயத்திலிருந்து விழுகின்ற தலைகளால் பூமியானது காம்பிலிருந்து நழுவிவிழுந்த பனம் பழங்களால் நிறைந்ததுபோலக் காணப்பட்டது. அந்தக் [1] காலேயர்கள் பொற்கவசங்களைப் பூண்டவர்களும் பரிகங்களை ஆயுதமாகக் கொண்டவர்களுமாகிக் காட்டுத்தீயினால் எரிக்கப்பட்ட மலைகள் போலத் தேவர்களை எதிர்த்தார்கள். சிறந்த வேகமுள்ளவர்களும் ஒன்றுசேர்ந்தவர்களும் எதிர்த்து ஓடிவருகிறவர்களுமான அந்தக்காலேயர்களுடைய வேகத்தைத் தாங்குவதற்குத் தேவர்கள் சக்தியற்றவர்களானார்கள். அந்ததேவர்கள் தோற்றுப் பயத்தினால் ஓடினார்கள். ஆயிரம்கண்களுள்ள புரந்தரன், பயந்து ஓடுகின்ற அந்தத் தேவர்களைப்பார்த்து, வ்ருத்ரனும் விருத்தியடையும்பொழுது பெரிய மதிமயக்கத்தை அடைந்தான். காலேயர்களுடைய பயத்தால் நடுக்கமுற்ற தேவனானபுரந்தரன் தானே அந்தப் பிரபுவான நாராயணரை விரைவாகச் சரணமடைந்தான். ஸநாதனரான விஷ்ணுவானவர், அந்தஇந்திரன் மதிமயக்கத்தால் கவரப்பட்டதைக் கண்டு அவனுடைய பலத்தை அதிகமாக வ்ருத்திசெய்பவராகி, தம்முடையதேஜஸை இந்திரனிடத்தில் வைத்தார். பிறகு, தேவக்கூட்டத்தார்களும் அப்படியே குற்றமற்ற பிரம்மரிஷிகளும், இந்திரன் விஷ்ணுவினால் ரக்ஷிக்கப்பட்டதைக்கண்டு, தம்தம் தேஜஸையும் அவனிடம் வைத்தார்கள். அந்தஇந்திரன், விஷ்ணுவினாலும் தேவதைகளாலும் மிக்கபாக்யசாலிகளான ரிஷிகளாலும் நன்றாகத் தேஜஸினால் வ்ருத்தியடையும்படி செய்யப்பட்டுப் பலமுள்ளவனானான். வ்ருத்ரன் தேவராஜனைப் பலமுள்ளவனாக அறிந்து உரத்த சப்தங்களை (வெளியிட்டுக்கொண்டு) கர்ஜித்தான். அவனுடைய பேரொலியினால் பூமியும் திசைகளும் ஆகாயமும் ஸ்வர்க்கமும் மலைகளும்ஆகிய எல்லாம் அசைந்தன. அரசனே! பிறகு, மஹேந்திரன், கோரமான பேரொலியைக் கேட்டு மிக்க வாட்டமடைந்தவனும் பயத்தில் முழுகினவனும் விரைபவனுமாகி, அந்த வ்ருத்ரனைக் கொல்லும்பொருட்டுப் பெரியவஜ்ரத்தை எறிந்தான். இந்திரனுடைய வஜ்ரத்தால் அடிக்கப்பட்டவனும் பொன்மாலை தரித்தவனுமான அந்த மஹாஸுரன், முற்காலத்தில் விஷ்ணுவினுடைய கையினின்றுவிடுபட்ட அந்த மந்தரமென்கிற பெரிய சிறந்த

[1] கச்யபருடைய மனைவியான காலை என்பவளின் பிள்ளைகள்.

மலைபோல் விழுந்தான். அந்த அஸுரஸ்ரேஷ்டன் கொல்லப்பட்டவுடனே, இந்திரன் பயத்தால் பீடிக்கப்பட்டவனாகி ஒரு தடாகத்தினுள் பிரவேசிப்பதற்கு விரைவாக ஓடினான்; தன்கையினின்று வஜ்ராயுதம் விடப்பட்டதைப் பயத்தால் நினைக்கவில்லை; வ்ருத்ரன் கொல்லப்பட்டதையும் நினைக்கவில்லை. எல்லாத்தேவர்களும் மஹரிஷிகளும், மகிழ்ந்தவர்களாகவும் மிக்ககளித்தவர்களாகவும் இந்திரனைத் துதித்துக்கொண்டு, வஜ்ரத்தால் அடிக்கப்பட்டுச் சிதறின மலைபோலக் [1] கொல்லப்பட்ட வ்ருத்ரனைப் பூமியில் கண்டார்கள். தேவர்கள் விரைவாக ஒன்றுசேர்ந்து வ்ருத்ரனுடைய வதத்தினால் வாடியிருக்கிற எல்லா அஸுரர்களையும் கொன்றார்கள். ஒன்றுசேர்ந்த தேவர்களால் கொல்லப்படுகின்ற அந்த அஸுரர்கள் பயத்தினால்பீடிக்கப்பட்டவர்களாகிக் கடலிலேயே பிரவேசித்தார்கள். அளந்தற்கரியதும் மீன்களால் நிரம்பியதும் முதலைகளால் மிக நிரம்பியதுமான ஸமுத்திரத்தில் நுழைந்து அப்பொழுது தக்க முயற்சியினால் மூவுலகங்களையும் அழிப்பதற்காக ஒன்றுசேர்ந்து ஆலோசனைசெய்தார்கள். புத்திநிச்சயத்தை அறிந்தவர்களான சிலஅஸுரர்கள் அந்த அந்த உபாயங்களை விரித்துரைத்தார்கள். அங்கே ஆலோசனை செய்கின்ற அந்த அஸுரர்களுக்கு, 'எவர்கள் கல்வியும் தவமும் நிரம்பியிருக்கிறார்களோ அவர்களுடைய விநாசத்தையே முதலில் செய்யவேண்டும். உலகங்களனைத்தும் தவத்தினால் நிலைபெற்றிருக்கின்றனவல்லவா? ஆதலால், தவத்தை அழிப்பதற்கு விரைவுபடுங்கள். பூமியில் தவசிகளாகவும் தர்மங்களை அறிந்தவர்களாகவும் தவசிகளையும் தர்மவித்துக்களையும் அறிந்தவர்களாகவும் எவர்கள் இருக்கிறார்களோ அவர்களுடைய வதத்தை விரைவாகவே செய்யவேண்டும். அவர்களழிந்தால் உலகம் அழிந்தது' என்கிற கோரமான எண்ணமானது, அடைவில் செல்லும் காலவசத்தால் உண்டாயிற்று. இவ்வெண்ணம் எல்லோரும் உலகங்களை அழிப்பதில் புத்திநிச்சயத்தை அடைந்தவர்களாகிப் பெரிய அலைகளோடு கூடியதும் ரத்னங்களுக்கு இருப்பிடமுமான ஸமுத்திரமாகிற துர்க்கத்தை அடைந்து மிக்க மனக்களிப்புள்ளவர்களாக இருந்தனர்.

---

1 இந்த வ்ருத்ரவதம் வேறுவிதமாகவும் கூறப்பட்டிருக்கிறது, உத்யோக பர்வம் ௬௧-௬௨-ம் பக்கங்களிலும், ஆச்வமேதிக பர்வம் ௬௦-௬௧-ம் பக்கங்களிலும் காண்க.

நூறறேராவது அதயாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம் (தொடர்ச்சி.)

(கடலில் மறைந்துகொண்டிருந்த அஸுரர்கள் இரவுதோறும் வெளிவந்து ஆஶ்ரமங்களிலுள்ள ரிஷிகணங்களைக் கொன்றதும், தேவகணங்கள் நாராயணரைச் சரணமடைந்ததும்)

அந்தக் காலேயர்கள் ஜலஙகளுக்கு நிதியும் வருணனுக்கு இருப்பிடமுமான சமுததிரததை அடைநது மூவுலகஙகளையும் அழிபபதில நன்ருக முயற்சிசெய்தார்கள். அவர்கள் ஆஶ்ரமஙகளிலும் புண்யமான ஆயதனஙகளிலும் எநத ரிஷிகளிருககின்ருர்களோ அவர்களை எப்பொழுதும இரவில் மிக்க கோபததுடன் பக்ஷிததார்கள். துராதமாக்களான அவர்களாலே வஸிஷ்டருடைய ஆஶ்ரமததில் நூற்றெண்பததெட்டுப பிராம்மணர்களும் வேறு ஒன்பது தவசிகளும பக்ஷிக்கப்பட்டார்கள். புண்யமானதும் பிராம்மணர்களால் அடையபபட்டதுமான ச்யவனருடைய ஆஶ்ரமததை அடைந்து கனிகிழஙகுகளைப புசிப்பவர்களான நூறுரிஷிகள் தின்னப்பட்டார்கள். துராதமாக்களும தபோதனர்களைப் பக்ஷிக்கிறவர்களுமான அநதக் காலேயர்கள் இரவில இவ்வண்ணம் செய்தார்கள; பகலில் கடலில் பிரவேசிததார்கள். பரதவாஜருடைய ஆஶ்ரமததிலும், நியமமுள்ளவர்களும பிரம்மசர்யமுள்ளவர்களும் காற்றைப் புசிப்பவர்களும் ஜலததைப் புசிப்பவர்களுமான இருபதின்மர் கொல்லப்பட்டார்கள். அப்பொழுது, இப்படி நாளடைவில் அந்த அஸுரர்கள் கடல்நீரின் பலததை அடைந்திருந்துகொண்டு இரவில் அந்த எல்லா ஆஶ்ரமஙகளையும் பிடித்தார்கள். அனேகம் பிராம்மணக் கூட்டங்களைக் கொல்லுகிற அந்தக காலேயர்கள் காலததினுல் பற்றப்பட்டார்கள். மனிதர்களுள் சிறந்தவனே! பரிதாபப்படத்தக்க தவசிகளின் விஷயததில் இவ்விதம் தொடங்கின இப்படிப்பட்ட அந்த அஸுரர்களை மனிதர்கள் அறியவில்லை. குரூரர்களான அவர்கள உலகததை அழிபபதன் பொருட்டுப் பூமியில் எங்கும் திரிந்தார்கள். ஆகார நியமங்களால் மெலிநதிருக்கிற முனிவர்கள் உயிர் போன சரீரங்களோடு தரையில் விழுந்திருப்பவர்களாகக் காலையில்

காணப்பட்டார்கள். தசை குறைந்தவைகளும் ரசுத மில்லாதவைக ளும் மஜ்ஜையும் நரம்புமில்லாதவைகளும் பொருத்துக்களற்றவைக ளும் எங்கும் சிதறிக்கிடக்கின்றவைகளுமான (சரீரங்களால்) நிறைக் கப்பட்ட பூமியானது, சங்குகளின் குவியல்களால் நிறைக்கப்பட்டது போலிருந்தது. உடைக்கப்பட்ட கலசங்களாலும் அப்படியே ஓடிக்கப்பட்ட ஸ்ருவங்களாலும் இறைக்கப்பட்ட அக்னிஹோத்ர ஸாதனங்களாலும் பூமியானது மறைக்கப்பட்டதாயிற்று. உலக மானது வேதாத்தியயனமும் ஹோமமுமில்லாததும் யஜ்ஞங்களும் உத்ஸவங்களும் கர்மானுஷ்டானங்களுமற்றதும் உத்ஸாஹம் நீங்கி யதும் காலேயர்களின் பயத்தினால் துன்பமடைவிக்கப்பட்டதும் ஆகியது அரசனே! இவ்வண்ணம் அழிகின்ற மனிதர்கள் தங்க ளைப் காப்பாற்றிக்கொள்வதில் நோக்கமுள்ளவர்களாகவும் பயந்த வர்களாகவும் பயத்தினால் திக்குக்களில் ஓடினார்கள். சிலர் குகை களில் நுழைந்தார்கள். சிலர் மலையருவிகளை அடைந்தார்கள். சிலர் மரணத்தில் பயந்து பயத்தினாலே உயிரைவிட்டார்கள். இச் சமயத்தில் பெரியவில்லைக் கையில் தாங்கினவர்களான சில சூரர்கள் மிக்க மகிழ்ச்சியுள்ளவர்களாகவும் தானவர்களைத் தேடுகின்றவர்க ளாகவும் அதிக முயற்சியைச் செய்தார்கள். அவர்கள் ஸமுத்தி ரத்தில் ஒளிந்துகொண்டிருக்கிற இந்த அஸுரர்களைக் காண வில்லை; அதிக ஸ்ரமத்தையும் அடைந்தார்கள்; அழிவையுமே அடைந்தார்கள். மனிதர்களுக்கு அதிபதியே! உலகமானது யஜ்ஞங் களும் உத்ஸவங்களும் கர்மானுஷ்டானங்களும் அழிந்து நாசத்தை அடையவே, தேவர்கள் மிக்க துன்பத்தை அடைந்தார்கள். தேவர் கள் ஒன்றுசேர்ந்து மஹேந்திரனோடிருந்து பயத்தினால் ஆலோசனை செய்தார்கள்.

பிறகு, அந்தத்தேவர்கள் அனைவரும், ரக்ஷிப்பதில் ஸமர்த் தரும் ரக்ஷகரும் பிரகாசிப்பவரும் பிறப்பில்லாதவரும் எங்கும் வியாபித்திருப்பவரும் வைகுண்டரும் தோல்வி அடைவிக்கப் படாதவரும் மதுஸூதனருமான நாராயணரை அடைந்து நமஸ் கரித்து அப்பொழுது சொல்லலாயினர்: 'பிரபுவே! நீர் எங்க ளைப் படைத்தவர்; போஷிப்பவர். உலகத்தை அழிப்பவரும் நீர். ஜங்கமஸ்தாவரங்களான இந்த உலகம் உம்மால் உண்டுபண் ணப்பட்டது. செந்தாமரைக்கண்ணரே! மீண்டும் உம்மிடத்தி லேயே அந்த உலகம் லயத்தை அடைகிறது. தாமரைக் கண்ணரே! முற்காலத்தில் காணமற்போயிருந்த பூமியானது,

உலகங்களின் நன்மைக்காகப் பன்றிவடிவமெடுத்து உம்மால் ஸமுத்திரத்தினின்று தூக்கிக்கொண்டுவரப்பட்டது. புருஷோத்தமரே! முற்காலத்தில் மகாவீரியமுள்ளவனும் தைத்தியர்களுள் முந்தினவனுமான ஹிரண்யகசிபுவானவன் நருஸிம்ம சரீரத்தை எடுத்து உம்மால் கொல்லப்பட்டான். எல்லாப்பிராணிகளாலும் கொல்லமுடியாதவனான பலி என்கிற மஹாஸுரனும் உம்மால் வாமன வடிவத்தை அடைந்து மூவுலகங்களினின்றும் விலக்கப்பட்டான். பெரியவில்லுள்ளவனும் யஜ்ஞங்களுக்குக் கலக்கத்தைச் செய்கிறவனும் குரூரனும் ஜம்பனென்று பிரஸித்திபெற்றவனுமான அஸுரனும் உம்மாலேயே வீழ்த்தப்பட்டான். இவை முதலிய செய்கைகளுக்குக் கணக்கில்லை. மதுஸூதனரே! பயத்தால் நடுக்கமுற்றிருக்கிற எங்களுக்கு நீரே கதி. தேவ தேவர்களுக்கெல்லாம் அதிபதியே! ஆகையால், உலகங்களுக்காக உம்மை நினைவு மூட்டுகிறோம். உலகங்களையும் தேவர்களையும் இந்திரனையும் பெரியபயத்தினின்று காப்பாற்றுவீராக; சரணமடைந்தவர்களைப் பாதுகாப்பதில் நீர் ஒருவர் உறுதியான விரதமுடையவராக இருக்கிறீர்.

---

## நூற்றிரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(விஷ்ணு கடலில் மறைந்த அஸுரர்களைக் கொல்வதற்காக அதனை வற்றச்செய்ய உபாயங் கூறியதும், தேவர்கள் பிரம்மலோகம் சென்றதும், பிரம்மதேவர்கட்டளையினால் அவர்கள் அகஸ்தியரிடம்சென்று கடலை வற்றச்செய்ய வேண்டினதும்.)**

உம்முடைய அருளால் [1] நான்குவிதமான பிரஜைகள் எல்லாம் விருத்தியடைகின்றன. (உம்மால்) போஷிக்கப்பட்ட அந்தப் பிரஜைகள் ஹவ்யகவ்யங்களால் தேவர்களைப்போஷிக்கிறார்கள். இவ்வண்ணம் உலகங்கள் ஒன்றை மற்றொன்று அடுத்து விருத்தி அடைகின்றன; உம்முடைய அருளால் பயமற்றவைகளாக இருக்கின்றன; உம்மாலேயே காப்பாற்றப்படுகின்றன. உலகங்களுக்கு இந்தப் பெரிதான பயம் வந்திருக்கிறது; எதனால் என்று அறியோம்; இரவில் பிராம்மணர்கள் கொல்லப்படுகிறார்கள். பிராம்மணர்கள் க்ஷீணித்துப்போனால் பூமியானது க்ஷயத்தை அடைந்துவிடும். பிறகு,

---

1 'தேவர், மனிதர், விலங்கு, தாவரம்' என்பது பழையவுரை.

பூமியானது க்ஷீணித்துவிட்டால், தேவலோகம க்ஷயததை அடையும். மிக்க பாகுபலமுள்ளவரே! ஜகதபதியே! உமமுடைய அருளால, எல்லா உலகஙகளுமம உமமாலேயே காப்பாறறப்பட்டு விநாசததை அடையாமலிருக்கவேணடும்' என்று சொனனாகள்.

விஷ்ணுவானவர், 'தேவாகளே! பிரஜைகளுடைய அழிவுக்குக் காரணமனைததும எனக்குத தெரிந்தது. உஙகளுக்கும் சொல வேன். மனககவலை அறறுக கேளுஙகள். காலேயாகள் எனறு பிரஸிததிபெறற மிகக உக்கிரமான (அஸுரர்களின்) கூட்டஙகள் இருககின்றன. விருதரனை அடுதது அந்தக் கூட்டஙகளால, உலக மனைததும் நாசமசெய்யப்பட்டது. அந்தக கூட்டததார்கள், புததிமானான இநதிரனால விருதரன கொல்லப்பட்டதைக்கணடு, உயிரைப் பாதுகாககிறவர்களாகி ஸமுததிரததில பிரவேசிததார்கள. அவாகள் கோரமானதும் முதலைகளாலும க்ராகஙகளாலும் நிரமபியதுமான ஸமுததிரததில பிரவேசித்து உலகங்களை அழிபபதற்காக இராக்காலத்தில் இவவுலகததில் ரிஷிகளைக் கொலலுகிறார்கள. அவர்கள் நாசததை அடைவிககப்பட முடியாதவர்கள். ஸமுததிரததை அடைந்திருக்கிறாகளனறோ? ஸமுததிரததை வற்றச்செய்வதில உஙகள் எணணததை நிசசயிபபீர்களாக' என்று சொன்னார். அநததேவர்கள, விஷ்ணுவினால சொலலப்பட்ட இந்த வசனததைக்கேட்டு அவரையே முனனிட்டுககொணடு பிரம்மதேவரை அடைந்து, பிறகு, வணங்கினவர்களாகி, 'எலலா உலகஙகளையும் அழிபபதற்காகக் காலேயாகள நிச்சயம செயதிருககிறார்கள்' என்கிற அதே விஷயத்தைத தெரிவிததாாகள. ஸநாதநரான பிரம்மதேவர், இவர்களுடைய அந்தவசனததைக்கேட்டு மிக்க பிரியததுடன இந்தத தேவாகளைப் பார்தது, 'தேவர்களே! அஸுரர்களுடைய செய்கையையும் காலததால தூணடப்பட்ட காலேயர்களால் மனுஷ்யர்கள் முதலியவர்களின அழிவையும் நான் அறிந்துகொண்டேன. எவர்கள காலததால கெடுக்கபபட்டார்களோ அவர்களுககு நாசம் வநதுவிட்டது. ஸமுததிரததை வற்றசசெய்வதில் உபாயத்தை நன்கு சொல்வேன். மிக்க அடக்கமுள்ளவரும் மிதரனுககும் வருணனுக்கும் புததிரருமான அகஸ்தியர் என்பவர் புகழ்பெறறிருக்கிறார். நீங்கள் ஒன்றுசோந்து அவரை அடைந்து இந்தப்ரயோஜனததை வேண்டிக்கொள்ளுங்கள். மிக்க தேஜஸுளள அவர் ஒரு க்ஷணத்தில் பெரியகடலைப் பானமபண்ணுவதற்குச சக்தியுள்ளவரல்லரோ? ஸமுததிரததை வற்றச்செய்வதில் அகஸ்

தியையைத்தவிர வேறு எவன் சக்தியுள்ளவன்? ஸமுத்திரத்தைவற்றச் செய்ததாலன்றி வேறுவிதத்தால அந்த அஸுரர்கள் (அழிக்கப்படக்) கூடியவராகார். ஸமுத்திரம் வற்றச் செய்யப்பட்டால் காலேயர்களைக் கொல்வீர்கள்' என்னும் பயனுள்ள சொல்லைச் சொல்லினர்.

தேவர்கள், பரமேஷ்டியான பிரம்மதேவருடைய இவ்வாறான வசனத்தைக் கேட்டு அவரிடம் விடைபெற்று அகஸ்திய ருடைய ஆஸ்ரமத்துக்குச் சென்றார்கள். அங்கே மஹாத்மாவும் ஜ்வலிக்கிறதேஜஸுள்ளவரும் தேவர்களால் பிரம்மதேவர் உபாஸிக் கப்படுவதுபோல ரிஷிகளால் உபாஸிக்கப்படுகிறவருமான அகஸ்தி யரைப் பார்த்தார்கள். அவர்கள் மகாத்மாவும் (விரதத்திலிருந்து) நழுவாதவரும் ஆஸ்ரமத்திலிருப்பவரும் தபோநிதியும் மித்ரா வருணகுமாரருமான அகஸ்தியரை அடைந்து அவருடைய செய்கை களால் துதிக்கலாயினர். தேவர்கள், 'தேவரீர் முற்காலத்தில் நகுஷனால் தவிக்கச் செய்யப்பட்ட உலகங்களுக்குக் கதியானீர். உலகங் களுக்கு முள்போலிருந்த நகுஷன் உம்மால் உலகங்களின் நன்மைக் காகத் தேவராஜ பதவியிலிருந்து தள்ளப்பட்டான். ஸூர்யன் தன் னைத் தாண்டிச் செல்வதை(ப் பொறுமல்) கோபத்தால் மிக வளர்ந்து ஆகாயத்தை அளாவின விந்திய மலையானது உம்முடைய வசனத்தை மீறமாட்டாமல் வளராமலிருக்கிறது. உலகம் இருளால் சூழப்பட்ட பொழுது மிருத்யுவினால் துன்புறுத்தப்பட்ட பிரஜைகள் உம்மையே காப்பவராக அடைந்து மிகச் சிறந்த ஸுகத்தை அடைந்தார்கள். பயத்தால் நடுக்கமுள்ள எங்களுக்கு எப்பொழுதும் பகவானான தேவரீர் கதியாக இருக்கிறீர். ஆதலால், துன்பத்தை அடைந்த நாங்கள் தேவரீரிடம் வரத்தை யாசிக்கிறோம். தேவரீர் வரங்களைக் கொடுப்பவரல்லரோ?' என்றனர்' என்று சொன்னார்.

---

## நூற்றுமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(விந்தியமலை வளர்ந்ததும் அகஸ்தியர் அதனைத் தடுத்ததும் காரணமும், தேவர்கள், கடலை வற்றச் செய்யவேண்ட அகஸ்தியர் அவர்களுடன் ஸமுத்திரத்திற்குச் சென்றதும்)**

யுதிஷ்டிரர், 'மகா முனிவரே! விந்திய மலையானது யாதுகார ணம்பற்றிக் கோபம் மூண்டு விரைவாக வளர்ந்தது? நான் இதனை

விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன்' என்று வினவ, லோமசர் சொல்லலானார் :

'மலைகளுள் சிறந்ததும் மிகுந்த அச்சந்தருவதுமான மேருவென்கிற பொன்மலையை ஸூர்யன் உதயாஸ்தமய விஷயத்தில் வலமாகச் சுற்றிவந்தான். அப்படி (சுற்றிவருகிற) அவனைப்பார்த்து, விந்திய மலையானது, 'சூரியனே! நீ மேருவைத் தினந்தோறும் அடைந்து பிரதக்ஷிணம் செய்வதுபோல என்னையும் அடைந்து பிரதக்ஷிணம் செய்வாயாக' என்று சொல்லியது. இவ்வண்ணம் சொல்லப்பட்ட சூரியன், பிறகு, விந்தியத்தைப் பார்த்து, 'பர்வதமே! நான் என்னுடைய இச்சையினால் இந்த மேருவை ப்ரதக்ஷிணம் செய்யவில்லை. எவரால் இந்த உலகம் படைக்கப்பட்டதோ அவரால் இந்த வழி எனக்கு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது' என்று மறுமொழி கூறினான். பகைவரை வாட்டுபவனே! இவ்வாறு சொல்லக்கேட்ட அந்த விந்திய மலையானது சூரிய சந்திரர்களுடைய வழியைத் தடுக்க விரும்பிக் கோபத்தால் விரைவாக வளர்ந்தது. பிறகு, இந்திரனுள்ளிட்ட எல்லாத் தேவர்களும் கூடிப் பெரியமலைகளுள் சிறந்த அந்த விந்தியத்தை அணுகி உபாயத்தால் தடுத்தார்கள். அவர்கள் சொல்லியபடி அந்தமலை செய்யவில்லை. பிறகு, அந்தத் தேவர்கள் ஒன்றுகூடி, தவம் செய்பவரும் தார்மிகர்களுள் மிக மேலானவரும் மிக்க ஆச்சர்யமான வீர்யத்தால் பிரகாசிப்பவரும் ஆஸ்ரமத்திலிருப்பவருமான அகஸ்திய முனிவரை அடைந்தார்கள். அவரைப் பார்த்து, 'மஹரிஷியே! மலைகளுள் சிறந்த இந்த விந்தியமானது கோபத்திற்கு வசப்பட்டு ஸூர்ய சந்திரர்களுடைய மார்க்கத்தையும் அவ்வாறே நக்ஷத்திரங்களுடைய வழியையும் தடுக்கிறது. பிராம்மணோத்தமரே! மஹா பாக்கியமுள்ளவரே! உம்மைத் தவிர வேறு ஒருவரும் அதனைத் தடுப்பதற்கு வல்லவரல்லர். ஆதலால், அதனைத் தடுப்பீராக' என்று அந்த விஷயத்தை உரைத்தார்கள். பிராம்மணர், தேவர்களுடைய அந்த வசனத்தைக்கேட்டு, விந்தியத்தைக் குறித்துச் சென்றார். அந்த அகஸ்தியர், மனைவியுடன் விந்தியத்தை அடைந்து ஸமீபத்திலிருந்துகொண்டு, 'பர்வதோத்தம! நான் உன்னால் வழி விடப்பட விரும்புகிறேன். ஒரு கார்யத்தினால் தென் திசையைக் குறித்துச் செல்லுவேன். நான் திரும்பிவரும் வரையில் (வளராமல் என்னை) எதிர்பார்த்திரு. மலைகளுள் சிறந்தவனே! நான் திரும்பி வந்த பிறகு, உன் இஷ்டப்படி வளரக்கடவாய்' என்று சொன்னார். பகைவர்களை அழிப்பவனே! அந்த வருணகுமாரரான அகஸ்தியர்

விந்தியமலையோடு இவ்வாறு உடன்பாட்டைச் செய்து (சென்றவர்) தென்னாட்டினின்று இன்னும் திரும்பிவரவில்லை. அரசனே! விந்தியமலையும் அகஸ்தியரிடம் பயத்தினால் தன அங்கத்தை ஒடுக்கிக் கொண்டு வளராமல் இருக்கிறது. நீ என்னைக் கேட்டதும் அகஸ்தியருடைய பிரபாவத்தால விந்தியமலை வளராமலிருப்பதுமான இந்த விஷயமனைத்தும் உனக்குச சொல்லப்பட்டது. அரசனே! அகஸ்தியரிடத்தினின்று வரத்தைபபெற்று எல்லாத தேவர்களாலும் எவ்வாறு காலேயர்கள் நாசம பண்ணபபட்டார்களோ அந்த விருத்தாந்தத்தைச சொல்லுகின்ற என்னிடத்தினின்று கேட்பாயாக.

அகஸ்தியர் தேவர்களுடைய வசனத்தைக கேட்டு, 'நீஙகள் எதற்காக என்னிடம வந்திருக்கின்றீர்கள? என்னிடத்தினின்று எந்த வரத்தை விருமபுகிறீர்கள்?' என்று வினவினார் பிறகு, அந்த முனிவரால் இவவண்ணம் சொல்லப்பட்ட தேவர்களனைவரும் புரந்தரனை முன்னிட்டுக கைகூப்பிககொண்டு முனிவரைப்பார்த்து, 'மஹாத்மாவே! மஹாஸமுத்திரம் உம்மால் குடிக்கபபடுவதை விரும்புகிறோம். இப்படி காரியமானது செய்யபபட்டால, பிறகு, காலத்தால் பற்றப்பட்ட அந்தத் தேவசத்ருககளைப பந்துவாக்கஙகளோடு கூடக் கொல்வோம்' என்று சொன்னார்கள். முனிவர், தேவர்களுடைய மொழியைக்கேட்டு, 'அப்படியே உஙகளுடைய விருப்பத்தைச் செய்வேன். உலகங்களுக்கும் பெரியஸுகத்தை உண்டுபண்ணுவேன்' என்று சொன்னார். நல்லவிரதமுள்ளவனே! இவ்வாறு கூறிவிட்டு, பிறகு, தவத்தினால ஸித்தியடைந்தரிஷிகளோடும தேவர்களோடும் கூட நதிகளுக்கு நாதனான ஸமுத்திரத்தைக்குறித்துச் சென்றார். மனிதர்களும் உரகர்களும் கந்தர்வர்களும் இயக்ஷர்களும் கிம்புருஷர்களும் அந்த ஆச்சர்யத்தைப் பார்க்க விருப்பமுள்ளவர்களாக அப்படியே அந்த மஹாத்மாவைப் பின்தொடர்ந்தார்கள. பிறகு, (அவர்கள்) ஒன்றுசேர்ந்து பயங்கரமாக முழங்குகின்ற ஸமுத்திரத்தை நோக்கிச் சென்றார்கள். அகஸ்தியரோடு கூடியவர்களும் கந்தர்வர்களோடும் மஹோரகர்களோடும கூடியவர்களுமான தேவர்களும் மஹாபாக்கியசாலிகளான ரிஷிகளும் அலைகளால் நர்த்தனஞ்செய்வதுபோலவும் காற்றினால் துள்ளிக்குதிப்பதுபோலவும் நுரைக்கூட்டங்களால் நகைப்பதுபோலவும் இருப்பதும் குகைகளில இடறிவிழுவதும் பலவித முதலைகளால் நிரம்பினதும் பலவகைப பறவைக்கூட்டத்தோடு கூடியதுமான ஸமுத்திரத்தை அடைந்தார்கள்.

---

நூற்றுநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(அகஸ்தியர் கடலைக்குடித்ததும், தேவர்கள் அஸுரர்களைக்கொன்றதும், தேவர்கள் மறுபடியும் கடலை நிரப்புவதற்காகக் குடித்த நீரை வெளியில் விடும்படி அகஸ்தியரை வேண்டினதும், அவர் அந்த நீரை ஜீர்ணமாக்கிவிட்டதாகச் சொல்ல அவர்கள் அதற்காகப் பிரம்மதேவரை வேண்டியதும்.)

மித்ராவருணர்களுக்குப் புத்திரரும் பகவானுமான அந்த ரிஷியானவர், ஸமுத்திரத்தை அடைந்து கூடியிருக்கிற தேவர்களையும் வந்திருக்கிற ரிஷிகளையும் பார்த்து, 'இதோ நான் உலகங்களின் நன்மைக்காக ஸமுத்திரத்தைப் பானம்பண்ணுகிறேன். நீங்கள் செய்ய வேண்டியதை விரைவில் செய்யுங்கள்' என்றுசொன்னார். (தவத்தினின்று) நழுவாதவரான அகஸ்தியர், இவ்வளவு வசனத்தைச்சொல்லிக் கோபமுள்ளவராகி எல்லாஉலகமும் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே ஸமுத்திரத்தைக் குடித்தார். அப்பொழுது அந்தக்கடல் குடிக்கப்படுவதைப்பார்த்து இந்திரனுள்ளிட்ட தேவர்கள் அதிக ஆச்சர்யத்தை அடைந்தார்கள்; 'உலகங்களை நிலைநிறுத்துகிறவரே! நீர் எங்களைப் பாதுகாப்பவர். உலகங்களையும் படைப்பவர். உம்முடைய அனுக்ரஹத்தினாலே தேவர்களுடன்கூடின உலகமானது அழிவை அடையாமலிருக்கவேண்டும்' என்று ஸ்தோத்திரங்களால் பூஜையுஞ்செய்தார்கள். மஹாத்மாவான அவர், தேவர்களால் பூஜிக்கப்படுகின்றவரும் எங்கும் கந்தர்வர்களுடைய தூரியவாத்தியங்கள் ஒலிக்கத் தேவலோகத்து மலர்களால் இறைக்கப்படுகின்றவருமாகி, மஹாஸமுத்திரத்தை ஜலமற்றதாகச் செய்தார். மஹாஸமுத்ரம் நீரில்லாததாகச் செய்யப்பட்டதைக்கண்டு, தேவர்கள் அனைவரும் மிக்கமனக்களிப்புள்ளவர்களாகவும் தளராத பலமுள்ளவர்களாகவும் திவ்யமான சிறந்த ஆயுதங்களைஎடுத்து அந்த அஸுரர்களைக் கொன்றார்கள். மஹாத்மாக்களும், மிக்கபலமுள்ளவர்களும், வேகமுடையவர்களும், உரக்க ஸிம்மநாதம் செய்பவர்களுமான தேவர்களால் கொல்லப்படுகின்ற அந்த அஸுரர்கள் மஹாத்மாக்களும் வேகமுள்ளவர்களுமான தேவர்களுடைய வேகத்தைத் தாங்குவதற்கு அப்பொழுது

சக்தியற்றவர்களானார்கள். பாரத! தேவர்களால் வதம்செய்யப்படு கின்ற அந்தத் தானவர்கள் பயங்கரமான சபதமுள்ளவர்களாக மிக்ககோரமான யுத்தத்தை ஒருமுகூர்த்தகாலம் செய்தார்கள். மனத்தையடக்கின ரிஷிகளால் முந்தியே தவத்தினால் எரிக்கப்பட்ட வர்களும் சக்தியினால் மிகமுயல்கின்றவர்களுமான அந்த அஸுரர்கள் தேவர்களால் நாசம்பண்ணப்பட்டார்கள். பொற்பதக்கம் தரித்தவர்களும் குண்டலங்களையும் தோள்வளைகளையும் தரித்தவர் களுமான அந்த அஸுரர்கள் கொல்லப்பட்டுப் பூத்திருக்கின்ற பலாசமரங்கள்போல அதிகமாகப் பிரகாசித்தார்கள். புருஷோத்த மனே! பிறகு, கொல்லப்பட்டவர்கள்போக மிகுந்திருக்கின்ற சில காலேயர்கள் பூதேவியைப் பிளந்துகொண்டு பாதாள தலத்தை அடைந்தார்கள். தேவர்கள், தானவர்கள் கொல்லப்பட்டதைப் பார்த்து, ரிஷிகளுள் சிறந்த அவரைப் பலவித வசனங்களால் மகிழ்வித்தார்கள்.

தேவர்கள், 'மிக்க புஜபலமுள்ளவரே! தேவரீருடைய அருளால் உலகங்கள் அதிகமான ஸுகத்தை அடைந்தன. கொடிய பராக்ரமமுள்ள காலேயர்களும் தேவரீருடைய தேஜஸினால் கொல் லப்பட்டார்கள். மகாபாஹுவே! உலகங்களை நிலைநிறுத்து பவரே! கடலை நீரால் நிரப்புவீராக. உலகங்களைக் காப்பவரே! உம்மால் பானம்பண்ணப்பட்ட ஜலத்தை மீண்டும் இந்தக்கட லில் விட்டுவிடும்' என்ற இந்த வசனத்தை உரைத்தார்கள். இவ் வாறு சொல்லக் கேட்டவரும் ரிஷிகளுள் சிறந்தவருமான அகஸ் தியபகவான், அப்பொழுது இந்திரனுடன்கூடியவர்களும் ஒன்று சேர்ந்தவர்களுமான அந்தத் தேவர்களைப்பார்த்து, 'என்னால் அந் தத்தீர்த்தமானது ஜீர்ணம் செய்யப்பட்டுவிட்டது. கடலைநிரப்பு வதன்பொருட்டு முயற்சியடைந்த நீங்கள் வேறு உபாயத்தை ஆலோசியுங்கள்' என்று மறுமொழி கூறினார். மனத்தை அடக்கிய மகரிஷியினுடைய இந்த வசனத்தைக்கேட்டு ஒன்று சேர்ந்திருக் கின்ற தேவர்கள் ஆச்சரியமுள்ளவர்களும் துயரமுள்ளவர்களும் ஆனார்கள். மஹாராஜனே! எல்லாப்ரஜைகளும் ஒருவரிடத்தொரு வர் அநுமதிபெற்று ரிஷிஸ்ரேஷ்டரான அகஸ்தியரை வணங்கி வந்தபடியே திரும்பிச்சென்றார்கள். தேவர்கள் ஸமுத்திரத்தை நிரப்புவதன்பொருட்டு விஷ்ணுவுடன்கூட மறுபடியும் மறுபடியும் ஆலோசனைசெய்து பிரம்மதேவரை அடைந்தார்கள். அந்தத் தேவர்கள் எல்லோரும் விஷ்ணுவுடன் பிரம்மதேவரை அடைந்து

கைகுவித்துககொண்டு ஸமுத்திரத்தை நிரப்புவதைப்பற்றிச் சொன்னார்கள்.

---

## நூற்றைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பிரம்மதேவர் பகீரதனால் ஸமுத்திரம் நிரப்பப் படுமென்றதும், யுதிஷ்டிரர் வினவ, லோமசர் ஸகரனுக்குப் பிள்ளைகள்பிறந்ததைச் சொல்லியதும்)

அரசனே! உலகங்களுக்குப் பிதாமஹரான பிரம்மதேவர், ஒருங்கு திரண்டுவந்திருக்கிற தேவர்களைத் தேற்றிக்கொண்டு அப்பொழுது, 'தேவர்களே! நீங்களனைவரும் இஷ்டப்படி விருமபின இடத்துக்குச் செல்லுங்கள். வெகுகாலங்கழிந்தபிறகு ஸமுத்திரமானது தனது நிலைமையை அடையும். மஹாராஜனான பகீரதன் ஞாதிகளைக் காரணமாகச்செய்து ஜலப்பெருக்குக்களால ஸமுத்திரத்தைத் தீர்த்தங்களுக்கு நிதியாக நிரப்புவான்' என்று உரத்த குரலுடன்கூடிய வாக்கினால் சொல்லினர். தேவஸ்ரேஷ்டர்களனைவரும் பிதாமகரின் சொல்லைக்கேட்டு (உரிய) காலங்கூடுவதை எதிர்பார்க்கின்றவர்களாக வந்தபடியே திரும்பிச்சென்றார்கள்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'பிராம்மணரே! முனிவரே! இந்தக்கடலை நிரப்புவதில் எவ்வாறு ஞாதிகள் காரணமானார்கள்? இந்த விஷயத்தில் காரணம் என்ன? பகீரதனுடைய பரிஸ்ரமத்தினால் எவ்வாறு ஸமுத்திரம் நிறைக்கப்பட்டது? தபோதனரே! பிராமமணரே! உம்மால் சொல்லப்படுகின்ற அரசர்களுடைய இந்த உத்தமசரித்திரத்தை நான் விஸ்தாரமாகக் கேட்கவிரும்புகின்றேன்' என்று சொன்னார். மஹாத்மாவான தர்மராஜரால் இவ்வாறு சொல்லப்பட்ட பிராம்மணோத்தமர், மஹாத்மாவான ஸகரனுடைய மகிமையை எடுத்துரைத்தார். லோமசர், 'ரூபத்துடனும் சௌரியத்துடனும் பலத்துடனும் கூடின ஸகரன் என்கிற அரசன் இக்ஷ்வாகு வம்சத்தினரின் குலத்தில் உதித்தான். பிரதாபமுள்ளவனான அவன் புத்திரனில்லாதவனாக இருந்தான். பாரத! அவன் ஹைஹயர்களையும் தாலஜங்கர்களையும் நாசம்செய்து அரசர்களை வச

மும் செய்து தன் ராஜ்யத்தை ஆண்டுவந்தான. பரதஸ்ரேஷ்டனே! பரதரேறே! அவனுக்கு அழகினாலும யௌவனததினாலும கர்வமுடையவர்களான வைதர்பபி, சைப்யை என்னும இரண்டு மனைவிகள இருந்தாரகள. ராஜேந்திரனே! அந்த அரசன் புததிரர்களை விருமபினவனாக மனைவிகளுடன் கைலாஸகிரியை அடைந்து பெருந்தவம புரிநதான. யோகத்துடன்கூடி மிகப் பெருநதவமபுரிகிற அவன் மிகக மகிமைபுள்ளவரும மூன்றுகண்களுள்ளவரும் முப்புரஙகளை அழிததவரும சஙகரரும பவரும ஈசானரும் பினாகமெனகிற விலலைத தாஙகியவரும் சூலததைக கையில் ஏந்தியவரும் [1] மஙகளரூபியும உக்ரமான (கணஙகளுக்குத) தலைவரும பல ரூபஙகளுளளவரும உமையவளுக்கு நாயகருமான பரமசிவனை அடைந்தான். புஜபலமிக்க அந்த அரசன் வரததைக்கொடுப்பவரான அவரைப் பார்ததவுடனே, மனைவிகளுடன் சேர்ந்து நமஸ்காரம செய்து புத்திரன் வேணடுமெனறு வேண்டிக்கொண்டான்.

பிரீதியுள்ள ஹரர், மனைவிகளுடனிருக்கும் அநத ராஜஸ்ரேஷ்டனைப் பார்தது, 'அரசனே! சிறநத மனிதர்களுள் சிறந்தவனே! உன்னால் இநத முகூர்ததததில் நான் வரம் வேண்டப்பட்டேனாதலால், சூரர்களும், மிகக கொழுப்புளளவர்களுமான அறுபதினாயிரம் பிள்ளைகள் ஒரு மனைவியினிடம உண்டாவார்கள். அரசனே! அவர்களெலலோரும் சேர்ந்து நாசமடைவார்கள். வம்சததைத தரிக்கிற சூரனான ஒருபுததிரன் ஒருமனைவியினிடத்தில் உண்டாவான்' என்றார். ருத்திரர் அவனுக்கு இவ்வண்ணம்கூறி அவ்விடத்திலேயே மறைந்தார். அந்த ஸகரராஜனும் மனைவிகளுடன் கூடத் தன் இருப்பிடத்துக்குச் சென்றான். அநத இடத்தில் அவன் அப்பொழுது மனம் மிகக்களிததவனும் சிவனுடைய வரத்தால் அடையப்பட்ட காலத்தை எதிர்பார்க்கின்றவனுமாகிக் காலததைக் கழிததான். புருஷஸ்ரேஷ்டனே! தாமரைமலர்போன்ற கண்களுள்ளவர்களான வைதர்ப்பி சைப்யை என்னும் அவனுடைய இரண்டு மனைவிகளும் கர்ப்பிணிகளானார்கள். பிறகு, வைதர்ப்பியானவள் வெகுகாலம் சென்றபிறகு, சுரைக்காய்போன்ற கர்ப்பததைப் பெற்றாள். சைப்யையும் தேவன்போன்ற ரூபமுள்ளவனும் புத்தென்னும் நரகத்தினின்று காப்பவனுமான ஒருகுமாரனைப் பெற்றாள். அந்த அரசன் அபபொழுது சுரைக்காய்போன்ற கர்ப்பத்தை எறிந்துவிடுவதற்கு மனததில் எண்ணினான். அரசே! பிறகு, 'ஸாஹஸம்

---

1 பொருள் இரட்டிததலால் ஒருசொல் விடப்பட்டது.

செய்யாதே. புத்திரர்களை நீ எறிந்துவிடத் தக்கவனல்லை. சுரைக்காயின் நடுவினின்று வித்துக்களை வெளியில் எடுத்து நெய்யினால் நிறைக்கப்பட்டவையும் ஸமீபத்தில் 1 ஆவியுடன் கூடியவையுமான பாத்திரங்களில் தனித்தனி போட்டு முயற்சியுடன் பாதுகாக்கக் கடவாய். அரசே! பிறகு, அறுபதினாயிரம் பிள்ளைகளை அடைவாய். நராதிபனே! உனக்கு மஹாதேவரால் இந்த முறையாகப் புத்ரோத்பத்தியானது கொடுக்கப்பட்டது. உன்னுடைய புத்தியானது, இதைவிட்டு, வேறுவிதமாகவேண்டாம்' என்று ஆகாயத்தினின்று உண்டானதும் கம்பீரமான குரலுள்ளதுமான வாக்கைக் கேட்டான்.

---

## நூற்றுஆறாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(யாகதீக்ஷை பெற்ற ஸகரன்கட்டளைப்படி அவனுடைய அறுபதினாயிரம் பிள்ளைகள் குதிரையைத் திரியவிட்டதும், அது கடற்கரையில் மறைந்ததும், பிதாவின் நியமனப்படி குதிரையைத்தேடிக் கடற்கரையைத் தோண்டின ஸகரபுத்திரர்கள் பாதாளலோகத்தில் கபிலர் தவம்புரிவதையும் பக்கத்தில் குதிரை திரிவதையும் கண்டதும்)

பரதர்களுள் சிறந்தவனே! ராஜச்ரேஷ்டனான அந்த அரசன் ஆகாயத்தில் தோன்றின இந்த வாக்கைக்கேட்டு ச்ரத்தையுள்ளவனாகி, பிறகு, ஆகாயவாக்குச் சொல்லியவண்ணம் அதனைச் செய்தான். பிறகு, அரசன் அந்தக் கர்ப்பபிண்டத்தினின்று வித்துக்களை ஒவ்வொன்றாக எடுத்து, பிறகு, எல்லாப்பாகங்களையும் நெய்யினால் நிரப்பப்பட்ட குடங்களில் வைத்தான்; புத்திரர்களைப் பாதுகாப்பதில் ஊக்கமுள்ளவனாக வளர்ப்புத்தாய்மாரிடமும் ஒருவரிடம் ஒருகுடம்வீதம் கொடுத்தான். பிறகு, நெடுங்காலம் கழிந்து அந்தக் குடங்களிலிருந்து மஹாபலசாலிகளான (புத்திரர்கள்) எழுந்திருந்தார்கள். அரசே! ஒப்பற்ற வல்லமையுள்ள ராஜரிஷி

---

1 'ஸோஷ்மஸு' என்பது மூலம்; 'In steaming vessels' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

யான அவனுக்கு ருத்ரருடைய அருளால் அறுபதினுயிரம்பிள்ளைகள் உண்டானூர்கள். பயங்கரமானவர்களும் கொடிய செய்கையுள்ளவர்களும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவர்களும் பலராயிருப்பதனால் தேவர்களுள்ளிட்ட எல்லா உலகங்களையும் அவமதிக்கின்றவர்களும் சூரர்களும் போர்புரிகிறவர்களுமான அவர்கள் தேவர்களையும் கந்தர்வர்களையும் அரக்கர்களையும் எல்லாப்பிராணிகளையும் துன்பம்செய்தார்கள். மந்தபுத்தியுள்ளவர்களான ஸாகரர்களால் அப்பொழுது வதம் செய்யப்படுகின்ற ஜனங்கள், எல்லாத்தேவர்களோடுங்கூடிப் பிரம்மதேவரைச் சரணமடைந்தார்கள். மஹா பாக்யமுள்ளவரும் எல்லா உலகங்களுக்கும் பிதாமஹருமான பிரம்மதேவர், அவர்களைநோக்கி, 'தேவர்களே! நீங்களெல்லாரும் உலகத்து ஜனங்களுடன்கூட வந்தவண்ணம் திரும்பிச்செல்லுங்கள். தேவர்களே! தங்களால் செய்யப்பட்ட தீவினைகளால் ஸாகரர்களுக்குச் சிறிதுகாலத்திலேயே மிக்ககோரமான பெரிய அழிவு உண்டாகும்' என்று சொன்னூர். மனிதர்களுக்கு அதிபதியே! இவ்வாறு சொல்லக்கேட்ட அந்தத் தேவர்களும் உலகத்து ஜனங்களும் பிதாமஹரிடம் அனுமதிபெற்று வந்தவண்ணம் திரும்பிச் சென்றூர்கள். பரதர்களுள் சிறந்தவனே! பிறகு, நெடுங்காலம் சென்றபோது, வீர்யவானுன ஸகரராஜன் அச்வமேதத்தில் தீக்ஷைபெற்றுன். அரசே! அவனுடைய குதிரையானது பெரிய உத்ஸாஹமுள்ள எல்லாப் புத்திரர்களாலும் நன்கு பாதுகாக்கப்பட்டுத் தன்னிஷ்டப்படி திரிவதாகப் பூமியில் ஸஞ்சரித்தது. அந்தக் குதிரையானது, முயற்சியுடன் காக்கப்பட்டும், ஜலமற்றதும் பயங்கரமான காட்சியுள்ளதுமான ஸமுத்திரத்தை அடைந்து அந்த இடத்திலேயே மறைந்துபோயிற்று. ஐயனே! பிறகு, அந்த ஸாகரர்கள், உத்தமமானகுதிரையானது கவரப்பட்டதென்றெண்ணித் தந்தையிடம் திரும்பிவந்து, குதிரை கவரப்பட்டுக் காணுமல் போனதைச் சொன்னூர்கள். அவன், 'பிள்ளைகளே! குதிரையை எல்லாத்திசைகளிலும் தேடுங்கள்' என்று சொல்லினன். மஹாராஜனே! பிறகு, அந்தஸாகரர்கள் பிதாவினுடைய (விருப்பத்தை) அறிந்து அந்தக்குதிரையைப் பூதலமுழுமையும் எல்லாத்திசைகளிலும் தேடினூர்கள். பிறகு, (பிரிந்துசென்ற) அந்த ஸாகரர்களெல்லாரும் ஒருவரோடொருவர் சேர்ந்தும் குதிரையையும் குதிரையைக் கொண்டுபோனவனையும் அறியவேயில்லை.

பிறகு, (ஸாகரர்கள்,) திரும்பிவந்து பிதாவின் முன்னிலையில் கைகுவித்துக்கொண்டு, 'மனிதரைக்காப்பவரே! அரசரே! மகீ

பதியே! உம்முடைய உத்திரவினால் எங்களால் ஸமுத்திரங்களுடனும் காடுகளுடனும் தீவுகளுடனும் கூடியதும் நதிகளுடனும் நதங்களுடனும் குகைகளுடனுஞ் சேர்ந்ததும் மலைகளுடனும் காட்டுவெளிகளுடனும் இருப்பதுமான பூமிமுழுவதும் தேடப்பட்டுவிட்டது. குதிரையையும் குதிரையைக் கொண்டுபோனவனையுமே நாங்கள் அறியோம்' என்று சொன்னார்கள். அரசனே! அவர்களுடைய சொல்லைக்கேட்டு அந்த அரசன் கோபத்தினால் மயங்கி அப்பொழுது தெய்வவசத்தால் அவர்களெல்லாரையும் பார்த்து, 'திரும்பிவாராமலிருப்பதன்பொருட்டுச் செல்லுங்கள். மீண்டும் குதிரையைத் தேடுங்கள். புத்திரர்களே! யாகத்துக்குரிய அந்தக்குதிரையின்றி நீங்கள் திரும்பிவரக்கூடாது' என்ற சொல்லைச் சொன்னான். அந்தஸகரகுமாரர்கள், பிதாவினுடைய கட்டளையை ஏற்றுக்கொண்டு மறுபடியுமே பூமியனைத்தையும் தேடத்தொடங்கினார்கள். பூமியைக்காப்பவனே! பிறகு, அந்த வீரர்கள் பூமி தோண்டப்பட்டிருப்பதையும் ஸமுத்திரத்தில் குதிரையினுடைய காலடியையும் வழியையும் கண்டார்கள். ஸகரகுமாரர்கள் அந்தப்பிலத்தை அடைந்து முயற்சியைக்கைக்கொண்டு ஸமுத்ரத்தைக் குந்தாலிகளாலும் முஸலங்களாலும் தோண்டினார்கள். சேர்ந்திருக்கிறஸாகரர்களால் வெட்டப்படுகிற அந்த வருணாலயமான கடலானது எங்கும் பிளக்கப்படுவதாகி மிக அதிகமான துன்பத்தை அடைந்தது. ஸாகரர்களால் துன்பப்படுத்தப்படுகின்ற அஸுரர்களும் உரகர்களும் அரக்கர்களும் பலவிதமான பிராணிகளும் துன்பஒலியைச் செய்தனர். நூறு நூறாகவும் ஆயிரமாயிரமாகவும் பிராணிகள் தலையறுக்கப்பட்டவைகளும் உடலற்றவைகளும் முழங்கால் எலும்புகளும் தலைகளுமுடைந்தவைகளுமாகக் காணப்பட்டன. அவர்களுக்கு இப்படி ஸமுத்திரத்தை வெட்டுவதிலேயே மிகநெடுங்காலம் சென்று விட்டது; குதிரையும் காணப்படவில்லை. அரசனே! பிறகு, மிக்ககோபமுள்ளவர்களான ஸகரகுமாரர்கள் ஸமுத்திரத்தின் வடகிழக்கான இடத்தில் பாதாளத்தைப்பிளந்து பின்பு அந்த இடத்தில் பூமியில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற குதிரையையும் மஹாத்மாவும் தேஜஸுகளின் கூட்டமாக இருப்பவரும் (ஒப்பு) உயர்வு அற்றவருமான கபிலரையும் கண்டார்கள். ஜ்வாலைகளால் அக்நி பிரகாசிப்பதுபோலத் தேஜஸினால் பிரகாசிக்கின்ற அந்தக் கபிலரைக்கண்டு ஸகரகுமாரர்களனைவரும் ஆச்சர்யம் அடைந்தவர்களானார்கள்.

[1] நூற்றேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(குதிரையைத் திருடினவரென்றெண்ணிக் கொல்லவந்த ஸாகரர்களைக் கபிலர் கண்ணழலால் சாம்பலாக்கியதும், ஸகரன் கட்டளையினால் புறப்பட்ட அம்சுமான் கபிலரை மகிழ்வித்துக் குதிரையைக் கொண்டுவந்து ஸகரனுடையயாகத்தை நிறைவேற்றியதும், ஸகரனும் அம்சுமானும் ஸ்வர்க்கத்தை அடைந்தபிறகு திலீபன் கங்கையைப் பூமியில் கொண்டுவர முயன்றும் நிறைவேறமலே ஸ்வர்க்கத்தை அடைந்ததும்.)

அரசனே! அவர்கள் அந்தக்குதிரையைக்கண்டு மயிர்சிலிர்த்தவர்களும் காலத்தால்தூண்டப்பட்டவர்களும் மஹாத்மாவான கபிலரை அவமதித்து மிகுந்தகோபமுள்ளவர்களும் குதிரையைக் கைப்பற்றுவதில் விருப்பமுள்ளவர்களுமாகி, மஹாத்மாவான கபிலரை அலக்ஷ்யம்செய்து எதிர்த்து ஓடினார்கள். மஹாராஜனே! பிறகு, முனிஸ்ரேஷ்டரான கபிலர் கோபங்கொண்டார். எந்த முனிபுங்கவரான கபிலரை வாஸுதேவரென்று சொல்லுகிறார்களோ ரிஷிகளுள்மேன்மையுள்ளவரும் மிகப்பெரியதேஜஸுள்ளவருமான [2] அவர் தம்கண்ணை விகாரப்படுத்தி (அதிலுண்டான) தீயை அவர்களின்மீது தாக்கச்செய்து மதியற்றவர்களான அந்த அறுபதினாயிரம் ஸாகரர்களையும் ஒரேஸமயத்தில் எரித்தார். அவர்கள் சாம்பலானதைக்கண்டு மஹாதபஸ்வியாகிய நாரதர் ஸகரனிடம் வந்து அவனுக்கு அதனை உரைத்தார். அந்த அரசன் ரிஷியினுடையவாக்கினின்று வெளிவந்த கோரமான அந்தவசனத்தைக் கேட்டு ஒருமுகூர்த்தகாலம் மனவருத்தமுற்றவனாகி ஸ்தாணுவினுடைய வாக்யத்தை நினைத்தான். புத்திரர்களுடையநாசத்தால உண்டான துக்கத்தில் நன்குமுழுகின அந்த ஸகரன் தன்னைத் தானே தேற்றிக்கொண்டு குதிரையையே நினைத்தான். பரதஸ்ரேஷ்டனே!

1 இந்த நூற்றேழாவது அத்யாயத்துக்குப்பதிலாக 25 ஸ்லோகத்தில ஓர் அத்யாயம் சிறிது பாடபேதத்துடன் ஒரு புஸ்தகத்தில இருப்பதாக கருஷ்ணாசார்யர் பதிப்பில் குறித்திருக்கிறது.

2 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

ஸகரன் அப்பொழுது அஸமஞ்சனுடையபுத்திரனும் தனக்குப் பேரனுமான அம்சுமானை அழைத்து, 'ஐயனே! அளவிறந்த பராக்கிரமசாலிகளான அறுபதினாயிரம்பிள்ளைகள் கபிலருடைய (கண்) நெருப்பைஅடைந்து என்நிமித்தம் நாசமடைந்தார்கள். அப்பா! தோஷமற்றவனே! தர்மத்தைப்பாதுகாக்கிறவனும் பட்டணத்து ஜனங்களுக்கு நன்மையைவிரும்புகிறவனுமான என்னால் உன்னுடையபிதாவும் விடப்பட்டான்' என்கிற இந்தவசனத்தை உரைத்தான்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தபோதனரே! அரசர்களுள் சிறந்தவனான ஸகரன், வீரனும் எவ்விதத்தாலும் விடத்தகாதவனுமான ஔரஸபுத்திரனை எதற்காக விட்டான்? அதனை எனக்குச் சொல்வீராக' என்று வினவினர். லோமசர், 'அரசே! எவனைச் சைப்யை பெற்றாளோ ஸகரனுடைய அந்தப் பிள்ளையானவன் அஸமஞ்சனென்று பிரஸித்திபெற்றிருந்தான். அந்த அஸமஞ்சன் ஆங்காங்கு விளையாடிக்கொண்டிருப்பவர்களும் பலங்குறைந்தவர்களுமான பட்டணத்து ஜனங்களுடைய குழந்தைகளை விரைவில் அடைந்து மயிர்களைப்பிடித்து அலறும்பொழுதே நதியில் எறிந்தான். பிறகு, பயத்திலும் சோகத்திலும்மூழ்கின பட்டணத்து ஜனங்கள் (ஸகரனிடம்) வந்தார்கள். எல்லோரும் கைகளைக்குவித்துநின்று ஸகரனைப்பார்த்து, 'மஹாராஜனே! பகைவர்களுடையபடை முதலியவைகளால் (உண்டாகின்ற) பயத்தினின்று எங்களை நீ காக்கிறாய். அதனைவிடக் கோரமான அஸமஞ்சபயத்தினின்றும் எங்களைக் காக்க வேண்டியவனாகிறாய்' என்று சொன்னார்கள். ராஜச்ரேஷ்டனான ஸகரன், கோரமான நகரஜனங்களுடைய வசனத்தைக்கேட்டு, ஒரு முகூர்த்தகாலம் மனவருத்தமுற்றவனாகி மந்திரிகளைப்பார்த்து, 'என்னுடையபுத்திரனான அஸமஞ்சன் பட்டணத்திலிருந்து இப்பொழுது துரத்தப்படவேண்டும். நீங்கள் எனக்குப் பிரியத்தைச் செய்வதானால் இது சீக்கிரம்செய்யப்படவேண்டும்' என்கிற இதனைச்சொன்னான். நராதிபனே! அரசன் இவ்வண்ணம் சொல்லக்கேட்ட அந்த அமைச்சர்கள், அரசன் எவ்விதம் ஆணையிட்டானோ அவ்விதமே விரைவாகச் [1] செய்தார்கள்.

மஹாத்மாவும் நகரவாஸிகளின்ஹிதத்தில் விருப்பமுள்ளவனுமான ஸகரனால் எவ்வாறு புத்திரன் துரத்தப்பட்டானோ இவ்விதனைத்தும் உனக்குக் கூறப்பட்டது. பெரியவில்லுள்ள அம்சுமா

---

1 பொருந்தாமையால் 'யதோக்தம்' என்பது விடப்பட்டது.

னுக்கு ஸகரன் சொல்லியதனைத்தையும் உனக்குச் சொல்வேன். சொல்லப்படுவதை என்னிடத்தினின்று தெரிந்துகொள். ஸகரன், 'குழந்தாய்! உன் தகப்பனைவிட்டதாலும் புத்திரர்களுடைய நாசத்தாலும் அப்படியே குதிரை அகப்படாமையாலும் நான் பரிதவிக்கின்றேன். பௌத்ரனே! ஆதலால், துக்கத்தால் நன்கு எரிக்கப்பட்டவனும் யாகம் தடைப்பட்டதனால் மதிமயங்கினவனுமான என்னைக் குதிரையைக் கொண்டுவருவதனால் நரகத்தினின்று கரையேற்றுவாயாக' என்று சொன்னான். மஹாத்மாவான ஸகரனால் இவ்விதம் சொல்லப்பட்ட அம்சுமானே, எந்த இடத்தில் பூமி பிளக்கப்பட்டிருக்கிறதோ அந்த இடத்தைத் துக்கத்துடன் அடைந்தான். அவன் அதே வழியினால் கடலில் பிரவேசித்தான்; மஹாத்மாவான கபிலரையும் அந்தக் குதிரையையும் கண்டான். அவன் தேஜஸ்ஸுகளுடைய ராசியாக இருப்பவரும் பழமையானவருமான ரிஷிஸ்ரேஷ்டரைக் கண்டு தலையினால் பூமியில் நமஸ்கரித்து அந்த ரிஷியினிடம் கார்யத்தைத் தெரிவித்தான். மஹாராஜனே! பிறகு, கபிலர் அம்சுமானிடத்தில் பிரீதியுள்ளவரானார். பாரத! தர்மாத்மாவான அவர் இவனைப் பார்த்து, 'வரன்களைக் கொடுப்பவனாக இருக்கிறேன்' என்றும் சொன்னார். அந்த அம்சுமான் அந்தச் சமயத்தில் யஜ்ஞம் பூர்த்திஅடைவதன் பொருட்டு முதலில் குதிரையை வேண்டினான்; பித்ருக்களுக்குப் பரிசுத்தி உண்டாக்கும் விருப்பத்தால் இரண்டாவதாகத் தீர்த்தத்தை வேண்டினான். மிக்க தேஜஸ்வியும் முனிவர்களுள் சிறந்தவருமான கபிலர் அவனைப்பார்த்து, 'குற்றமற்றவனே! நீ எதை எதை வேண்டுகின்றாயோ அதை அதை உனக்குக் கொடுக்கக்கடவேன். உனக்கு மங்களம். உன்னிடத்தில் பொறுமையும் தர்மமும் ஸத்யமும் நிலைபெற்றிருக்கின்றன. ஸகரன் உன்னால் கிருதார்த்தனானான். உன் தகப்பன் உன்னால் புத்திரனுள்ளவனானான். என்னுடைய கோபத்தால் உண்டான நெருப்பில் எந்த ஸாகரர்கள் விட்டிற்பூச்சிகளின் தன்மையை அடைந்தார்களோ அவர்கள் உன்னுடைய பிரபாவத்தினால் ஸ்வர்க்கத்தையும் அடைவார்கள். உன்னுடைய பேரனும் ஸாகரர்களைப் பரிசுத்தப்படுத்துவதற்காக மஹேஸ்வரரை மகிழ்வித்துக் கங்கையைத் தேவலோகத்தினின்று கொண்டுவருவான். மனிதருட் சிறந்தவனே! யாகத்துக்குரியதான குதிரையைக் கொண்டுபோ. உனக்கு மங்களம். குழந்தாய்! மஹாத்மாவான ஸகரனுடைய யாகத்தை நிறைவேற்றக் கடவாய்' என்று சொன்னார்.

மஹாத்மாவான கபிலரால் இவ்வண்ணம் கூறப்பட்ட அம்சுமானே குதிரையைப் பிடித்துக்கொண்டு மஹாத்மாவான ஸகரனுடைய யாகசாலையை வந்தடைந்தான். பிறகு, அவன் மஹாத்மாவான ஸகரனுடைய கால்களில் தண்டனிட்டு, அந்த ஸகரனாலும் உச்சியில் முகரப்பட்டு, ஸாகரர்களுடைய அழிவு முழுமையையும் தான் கண்டபடியும் கேட்டபடியும் அவனுக்குத் தெரிவித்தான். அந்தக் குதிரை யாகசாலைக்கு வந்துவிட்டதையும் அவனுக்குச் சொன்னான். அதைக்கேட்டு, ஸகரராஜன், புத்திரர்களுடைய நாசத்தால் உண்டான துக்கத்தை விட்டான்; அம்சுமானையும் மிகுதியாகக் கொண்டாடி அந்த யாகத்தையும் முடிவுபெறச் செய்தான். யாகத்தை முடித்தவனும் எல்லாத் தேவர்களாலும் ஸம்மானிக்கப்பட்டவனுமான ஸகரன் வருணனுக்கு ஆலயமான ஸமுத்திரத்தைத் தனக்குப் புத்திரனாயிருத்தலில் அமைத்துக்கொண்டான். தாமரை மலர்போன்ற கண்களுள்ள ஸகரன் ராஜ்யத்தை மிக நீண்டகாலம் ஆண்டு பேரனிடத்தில் (ராஜ்ய) பாரத்தை வைத்து அப்பொழுது ஸ்வர்க்கத்தை அடைந்தான். மஹாராஜனே! தர்மாத்மாவான அம்சுமானும் கடலை மேகலையாகவுடைய பூமியைத் தன் பாட்டன் ஆண்டதுபோலவே ஆண்டுவந்தான். தர்மங்களை அறிந்தவனான திலீபனென்பவன் அவனுக்குப் புத்திரனாகப் பிறந்தான். அம்சுமானும் அவனிடத்தில் ராஜ்யத்தை வைத்து முடிவை அடைந்தான். பிறகு, திலீபனே பித்ருக்களுக்கு நேர்ந்த பெரிய நாசத்தைக் கேட்டுத் துக்கத்தால் பரிதவித்தான்; அவர்களுடைய கதியை ஆலோசித்தான். அரசன் கங்கையைப் (பூமியில்) இறங்கச் செய்வதில் மிகப் பெரியமுயற்சியையும் செய்தான்; தன்பலத்துக்கு இயன்றவரையில் காரியங்களைச் செய்தும் (கங்கையைப் பூமியில்) இறங்கச்செய்ய மாட்டாமற் போனான். அவனுக்கு ஐச்வர்யமுள்ளவனும் தர்மத்தில் பற்றுதலுள்ளவனும் மெய்பேசுகிறவனும் அஸூயை இல்லாதவனுமான பகீரதன் என்கிற கியாதிபெற்ற புத்திரன் உண்டானான். அவனுக்கு ராஜ்யத்தில் முடிசூட்டித் திலீபன் கானகத்தை அடைந்தான். பாரதர்களுள் சிறந்தவனே! பாரத! அந்தத் திலீபன் தவஸித்தியின் சேர்க்கையினால் காட்டினின்று காலவசத்தால் ஸ்வர்க்கம் சென்றான்.

---

## நூற்றெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பகீரதன் கங்கையைப் பூமியில் இறங்கச்செய்வதற்காக அதனைக் குறித்துத் தவம்புரிந்ததும், பூமியிலிறங்கும் கங்கையின் வேகத்தைத் தாங்குவதற்காக அதன் கட்டளைப்படி தவத்தால் சங்கரரை மகிழ்வித்ததும்.)

பெரிய வில்லுள்ளவனும் சக்கரவர்த்தியும் மஹாரதனுமான அந்த அரசனே, எல்லா ஜனங்களின் உள்ளத்தையும் கண்களையும் மகிழ்விப்பவனானான். மிக்க புஜபலமமைந்த அவன் மஹாத்மாவான கபிலரால் பிதருக்களுடைய பயங்கரமான நாசத்தையும் ஸ்வர்க்கத்தை அடையாமையையும் கேட்டான். அந்த அரசன் ராஜ்யத்தை மந்திரியினிடத்தில் வைத்துவிட்டுத் துயரப்படும் மனத்துடன் தவம் புரிவதற்கு இமயமலையின் தாழ்வரையை அடைந்தான். நரச்ரேஷ்டனே! தவத்தினால் பாவத்தை எரித்தவனான அவன் கங்கையை ஆராதிக்க விருப்பங்கொண்டு மலைகளுள் மிகச்சிறந்த இமயமலையைக் கண்டான். பகீரதன் பலவித வடிவமுள்ளவைகளும் தாதுவர்க்கங்களுள்ளவைகளுமான சிகரங்களால் அலங்கரிக்கப்பட்டதும், காற்றின் வழியிற் செல்லுகிற மேகங்களால் நாற்புறமும் நனைக்கப்பட்டதும், ஜலத்துடன் கூடின நதிகளாலும் புதர்களாலும் தாழ்வரைகளாலும் விளங்குகின்றதும், குகைகளிலும் கற்சந்துகளிலும் பதுங்கிக்கொண்டிருக்கிற சிங்கங்களாலும் புலிகளாலும் அடையப்பட்டதும், விசித்திரமான அங்கங்களுள்ளவைகளும் பலவித ஒலிகளுடன் கூவுகின்றவைகளுமான பக்ஷிகளாலும் அவ்வாறே சிறந்த வண்டுகளாலும் அன்னங்களாலும் நீர்க்காக்கைகளாலும் நீர்க்கோழிகளாலும் மயில்களாலும் சதபத்ரங்களாலும் ஜீவஞ்சீவகங்களாலும் குயில்களாலும் அப்படியே [1] கறுத்த கடைக்கண்களுள்ளவைகளும் குஞ்சுகளிடத்தில் ப்ரீதியுள்ளவைகளுமான சகோரபக்ஷிகளாலும் சூழப்பட்டதும், அழகிய ஜலமுள்ள இடங்களில் தாமரைகளால் நெருங்கியதும், ஸாரஸங்களின் இனிய ஒலிகளால் அலங்கரிக்கப்பட்டதும் கின்னரர்களாலும் அப்ஸரஸ‍்

---

1 'சகோரங்களாலும் அஸிதாபாங்கங்களாலும் அவ்வாறே புத்ரப்ரியங்களாலும்' என்றும் கொள்ளலாம்.

களாலும் அடையப்பட்ட கல்தரைகளுள்ளதும், திக்குயானைகளுடைய கொம்பு நுனிகளாலே நாற்பக்கத்திலும் உரையப்பட்ட மரங்களுள்ளதும், வித்யாதரர்களால் ஸஞ்சரிக்கப்பட்டதும், பலவித ரத்னங்களால் நிரம்பியதும், விஷம் மிகுந்தவைகளும் பிரகாசிக்கின்ற நாக்குள்ளவைகளுமான ஸர்ப்பங்களாலும் சூழப்பட்டதும், சிலவிடங்களில் பொன்போன்றதும் சிலவிடங்களில் வெள்ளிபோன்றதும் சில இடங்களில் மைக்குவியல்களைப்போலப் பிரகாசிக்கின்றதுமான இமய மலையை அடைந்தான். புருஷஸ்ரேஷ்டனான அந்தப் பகீரதனே, அந்த மலையில் பழங்களையும் கிழங்குகளையும் தீர்த்தத்தையும் ஆகாரம் செய்துகொண்டு ஆயிரவருஷகாலம் கடுந்தவம் புரிந்தான். ஆயிரம் தேவவருஷங்கள் சென்ற பிறகு, மஹாநதியான கங்கையானவள் தானே சரீரமுள்ளவளாகி அப்பொழுது அவனைத் (தனனைத்) தரிசிக்கச்செய்தாள். கங்கை, 'மஹாராஜனே! என்னிடத்தினின்று நீ எதை விரும்புகின்றாய்? நரஸ்ரேஷ்டனே! உனக்கு எதைக் கொடுக்கவேண்டும்? அதைச் சொல். நீ சொல்வதைச் செய்வேன்' என்று சொன்னாள். அரசே! இவ்வாறு சொல்லக்கேட்ட அரசனான பகீரதன், கங்கா நதியை அப்பொழுது நமஸ்காரம்பண்ணிக் கைகூப்பிக்கொண்டு, 'வரங்களைக் கொடுப்பவளே! மஹாநதியே! குதிரையைத் தேடுகின்ற என்பாட்டன்மார்கள் கபிலரால் யமனுடைய வீட்டை அடைவிக்கப்பட்டார்கள். மஹாத்மாக்களான அந்த அறுபதினாயிரம் ஸாகரர்கள் கபிலதேவரை அடைந்து க்ஷணத்தில் நாசமடைந்தார்கள். இவ்வாறு நாசமடைந்த அவர்களுக்கு ஸ்வர்க்கத்தில் வாஸம் இல்லை. மஹாநதியே! நீ ஜலங்களால் அந்தச் சரீரங்களை நனைக்காதவரையில் அந்த ஸாகரர்களுக்கு நற்கதியில்லை. மஹாபாக்யமுள்ளவளே! என் பித்ருக்களான ஸகரகுமாரர்களை ஸ்வர்க்கத்தை அடையும்படி செய். மஹாநதியே! அவர்களுக்காக நான் உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன்' என்று மறுமொழி சொன்னான்.

அரசனுடைய இந்தச் சொல்லைக்கேட்டு, உலகங்களால் வணங்கப்பட்ட கங்கையானவள், மிக்க ப்ரீதியுடன் பகீரதனைப் பார்த்து, 'மஹாராஜனே! உன் வசனத்தைச் செய்வேன். இதில் சந்தேகமில்லை. அரசே! ஆகாயத்தினின்று பூமியில் விழுகிற என்னுடைய தாங்குதற்கரிய வேகத்தைத் தாங்குவதற்குத் தேவஸ்ரேஷ்டரும் நீலகண்டருமான மஹேஸ்வரரைத் தவிர, வேறொருவரும் மூவுலகங்களிலும் சக்தியுள்ளவராகார். நீண்ட கைகளையுடையவனே! வரன்களைக் கொடுப்பவரான அந்த ஈஸ்வரரைத் தவத்தினால் மகிழ்வி

அந்தத்தேவரோ, (ஸ்வர்க்கத்தினின்று) வேகமாக விழுகின்ற என்னை முடியினால் தாங்குவார். மஹிமையுள்ளவரும் உலகங்களைக்காப்பவருமான அந்தச் சமபுவானவர் தவத்தினால் ஆராதிக்கப்பட்டு உன்பிதருக்களுக்கு ஹிதத்தைச் செய்யும் விருப்பத்தால் உன்னுடைய விருப்பத்தை நிறைவேற்றுவார்' என்ற இந்தவாக்கியத்தைச் சொன்னாள். அரசனே! பகீரதமஹாராஜன், இந்த வசனத்தைக் கேட்டு, பிறகு, கைலைமலையை அடைந்து சங்கரரைமகிழ்வித்தான். அரசனே! அரசன், பிறகு, சிறிது காலத்துக்குப்பின், அவரையடைந்து, கங்கை இறங்கிவருதலை வேண்டினான். அரசே! புருஷோத்தமனான அவன் பிதருக்களுக்கு ஸ்வர்க்கத்தில் வாஸத்தைக்கருதி அவரிடத்தினின்று கங்கையைத் தாங்குவதில் வரத்தையும் பெற்றான்.

---

நூற்றெண்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(சங்கரர் பகீரதனுடைய பிரார்த்தனையினால் விழுகின்ற கங்கையைத் தாங்கினதும், பகீரதன் தன்னைத் தொடர்ந்துவருகின்ற கங்கையினால் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்து ஸாகரத்தை நிரப்பியதும்)

பகவான், பகீரதனுடைய வசனத்தைக் கேட்டும், தேவர்களுடைய விருப்பத்தைச் செய்யக்கருதியும், அரசனைப்பார்த்து, 'இப்படியே ஆகட்டும். மஹாபாக்யமுள்ளவனே! ராஜஸ்ரேஷ்டனே! ஆகாயத்தினின்று நழுவிவிழுகின்றதும் மங்களமானதும் தேவலோகத்ததும் புண்யமுள்ளதுமான கங்கையை உனக்காகத் தாங்குவேன்' என்று மறுமொழி உரைத்தார். நீண்ட கைகளையுடையவனே! இவ்வண்ணம் உரைத்துக் கோரரூபிகளும் பலவித ஆயுதங்களை எடுத்தவர்களுமான பார்ஷதர்களால் சூழப்பட்டவராக இமயமலையை அடைந்தார். அந்தமலையில் நின்றுகொண்டு புருஷஸ்ரேஷ்டனான பகீரதனைப்பார்த்து, 'தோள்வலிமைமிக்கவனே! சைலராஜனுக்குப் புத்திரியான நதியை வேண்டிக்கொள். அரசனே! நான் உன் பித்ருக்களுடைய பரிசுத்தியின்பொருட்டுத் தேவலோகத்தினின்று விழுகின்ற அந்தச் சிறந்த நதியைத் தாங்

குவேன்' என்று சொன்னார். அரசன, சர்வரால் சொல்லப்பட்ட இந்த வசனததைக்கேட்டு, மிக்க அடக்கமுள்ளவனும் வணங்கின வனுமாகிக் கஙகையை நனகு தியானம் பணணினன். பிறகு, புண்ய மான ஜலமுள்ளதும ரம்யமானதும் அரசனால் நன்கு தியானிக்கப் பட்டதுமான கங்கையானது ஈசானர் நிற்பதைக்கண்டு ஆகாயத்தி னின்று விரைவாக விழுந்தது. பிறகு, அந்தக்கங்கை நழுவி விழு வதைப் பார்தது மஹரிஷிகளுள்ளிட்ட தேவர்களும், கந்தர்வர் களும உரகர்களும் இயக்கர்களும் பார்க்க எண்ணமுள்ளவர்களாக வந்தார்கள. பிறகு, இமயமலையினுடைய மகளான கஙகையானது சுழிததுக்கொணடு வருகின்ற பெரிய நீர்ச்சுழல்களுள்ளதும் மீன் களாலும முதலைகளாலும் நிரமபியதுமாக ஆகாயததினின்று விழுந் தது. அரசனே! ஹரர் முததுமயமான மாலைபோல நெற்றியில் விழுகின்றதும் ஆகாயததுக்கு மேகலை போன்றதுமான அந்தக் கங்கையைத தாஙகினர். அரசனே! அன்னப்பறவைகளுடைய வரிசைபோன்ற நுரைக்கூட்டங்களால் சூழப்பட்ட ஜலமுள்ள அந்த நதியானது மூன்றாக ஓடுவதாயிற்று. அந்தக் கங்கை ஓரிடததில விரிவும் வளைவுமுள்ளதாகவும் ஒவ்வோர் இடததில் தடுமாற்ற முள்ளதாகவும நுரைகளாகிற வஸ்திரத்தை உடுததததாகவும் மத முள்ளமங்கைபோல் சென்றது. ஓரிடததில் ஜலததின் ஒலிகளால் பேரொலியைச் செய்வதும் ஓரிடததில் ஆகாயததை நீர்ச்சுழல் களால் நாற்புறங்களிலும சுருக்குவதுபோன்றதும் இவ்விதமான மிகப்பலசெயல்களைச் செய்வதுமாகி ஆகாயததினின்று நழுவின அந்தக் கங்கையானது, பூமியை அடைந்து, பிறகு, பகீரதனைப் பார்தது, 'மஹாராஜனே! வழியைக் காட்டு எந்த வழியினால் நான் செல்வேன்? பூமிக்கு அதிபதியே! உனக்காகப் பூமியில் இறஙகியிருக்கிறேன்' என்று சொல்லியது. நரஶ்ரேஷ்டனே! பகீரதராஜன் இந்தவசனத்தைக்கேட்டு மஹாத்மாக்களான ஸாகரர் களுடைய அந்தச்சரீரங்கள் இருந்தவிடததில் அவற்றைப் புண்ணிய தீர்த்தத்தினால் நனைப்பதற்காகப் புறப்பட்டான். ஹரர், கங் கையைத் தாங்கி உலகங்களால் நமஸ்கரிக்கப்பட்டுத் தேவர்களு டன் மலைகளுள் சிறந்த கைலாஸததை அடைந்தார். அரசன் கங்கையுடன் சேர்ந்து ஸமுததிரததையும் அடைந்து வருணனுக்கு இருப்பிடமான அநத ஸமுததிரத்தை வேகததோடு நிரப்பினான். அரசன், கஙகையைத தனக்கு மகளாயிருத்தலிலும் அமைததுக் கொண்டான். விருப்பம் நிறைவேறினவனாகி அந்தக் கங்கையில்

உதககதானததையும் செய்தான. மஹாராஜனே! பிரபுவே! ஸமுத்திரததை நிரபபுவதற்காக மூன்று வழியாகச்செல்லுகின்ற கங்கை பூமியில் வருவிககப்பட்டவிதமும தேவர்களால காலேயர்கள் அழிக்கப்பட்ட விதமும் மஹாதமாவான அகஸ்தியரால காரணார்ததமாக ஸமுததிரம பானம்பண்ணப்பட்டவிதமும் பிராம்மணர்களைக்கொலபவனான அந்த வாதாபி நாசததை அடைவிககப்பட்டவிதமும ஆகிய நீ [1] என்னைககேட்ட இவையெல்லாம என்னால் உனககு உரைககபபட்டன' என்று சொன்னார்.

---

நூற்றுப்பததாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் ரிஷபகூடமலையில் நந்தைஅபரநந்தைஎன்னும் நதிகளை அடைந்ததும், ரிஷபமுனிவர் நந்தைஇவர்களின் மகிமையை லோமசர் சொல்லியதும்)

பரதஸ்ரேஷ்டனே! பிறகு, குந்தீபுததிரர், பாவபயததைப்போக்கக்கூடிய நநதை அபரநந்தையென்கிறநதிகளை முறையே அடைந்தார். அநதஅரசா ஆரோக்யததுககு இருப்பிடமான ஹேமகூடமலையைஅடைந்து நினைததற்கரியவைகளும ஆச்சர்யமானவைகளுமான பலபொருள்களைக் கண்டார். எந்தமலையில் கோரமான மழையும் ஆயிரக்கணக்கான பாறைகளுமிருககின்றனவோ அம்மலையின்மீது ஜனங்கள் துயரமுற்றமனமுள்ளவர்களாக ஏறுவதற்குச் சக்தியற்றவர்களாகிறார்கள். அந்தமலையில் காறறு எப்பொழுதும் வீசுகிறது; (பர்ஜன்ய) தேவன் எபபொழுதும் மழைபொழிகிறான். அப்படியே வேதவொலியும் கேட்கப்படுகிறது. (வேதாதயயனம் செய்கிறவன்) காணப்படுகிறதில்லை. அக்னிபகவான் மாலையிலும் காலையிலும் காணப்படுகிறான். அந்தமலையில் தவத்துக்குஇடையூற்றைச்செய்கின்ற [2] கதண்டுகள் (மனிதர்களைக்) கடிக்கின்றன. அங்கே செல்வதில் வேண்டாமென்ற எண்ணம் உண்டாகிறது. ஜனங்கள் வீடுகளை(அடைய) நினைக்கிறார்கள். பாண்டவர், இவ்வண்ணம் ஆச்சரியமான பலவிதவஸ்துக்களைப் பார்தது, பிறகு, மறுபடியுமே லோமசரைநோக்கி, 'பகவானே! மிக்ககாந்தியுள்ளவரே! மிக்கஒளிபொருந்திய இம்மலையிலிருக்கிற

---

1 ஒருசொல் விடபபட்டது. 2 'மக்ஷிகா:' என்பது மூலம, ஒருவகை ஈ.

இந்த ஆச்சரியம் அனைத்தையும் விஸ்தாரமாக எனக்குச் சொல்வீராக' என்று அந்த ஆச்சர்யத்தைப்பற்றி வினவினர். லோமசர், 'பகைவரை இளைக்கச்செய்பவனே! அரசனே! இது நம்மால் முற்காலத்தில் எவ்வாறு கேட்கப்பட்டதோ அவ்வாறு சொல்லுகின்ற என்னிடத்தினின்று அதனை (அது) ஒன்றிலேயே மனம்பற்றினவனாகித் தெரிந்துகொள். இந்த ரிஷபகூடத்தில் பலநூறுவருஷங்கள் ஆயுளையுடையவரும் மிகுந்தகோபமுள்ளவரும் தவஞ்செய்பவருமான ரிஷபர்என்கிற ஒரு ரிஷி இருந்தார். அவர், பிறரால் பேசப்படுகின்றவராகிக் கோபத்தினால் [1] மலையைப்பார்த்து, 'எவன் ஒருவன் இவ்விடத்தில் பேசுவனோ அவன்மீது அப்படிக் கற்களைப்போடுவாயாக' என்றுசொன்னார். அந்தரிஷியானவர், காற்றையும் அழைத்து, 'நீ சத்தம் போடாதே' என்றும் சொன்னார். இந்தமலையில் பேசுகிற மனிதன் மேகத்தினுடைய சப்தத்தினால் தடுக்கப்படுகிறான். அரசனே! அந்தமஹரிஷியினால் இவ்வண்ணம் கோபத்தினால் இந்தச் சிலகாரியங்கள் செய்யப்பட்டன; சிலகாரியங்கள் தடுக்கப்பட்டன. அரசனே! 'தேவர்கள் முற்காலத்தில் நந்தாநதியை அடைந்தார்கள்; மனிதர்கள் தேவர்களைப்பார்த்து விரைவாகப் பின்தொடர்ந்தார்கள். ஆதலால், அவர்கள் பாராமலிருப்பதைவிரும்பி, இந்திரனைத்தலைவனாகக்கொண்ட தேவர்கள், இந்தஇடத்தை அடைதற்கு அரிதாகவும் தடைவடிவமான மலையாகவும் செய்துகொண்டார்கள்' என்று கேள்வி. குந்திநந்தன! மனிதர்கள் அதுமுதற்கொண்டு எப்பொழுதுமே இந்த மலையை ஏறிட்டுப் பார்ப்பதற்குச் சக்தியற்றவர்களானார்கள். ஏறுவதற்கு எப்படிமுடியும்? குந்திநந்தன! தவம்புரியாத மனிதனாலே இந்த மலையானது பார்ப்பதற்காவது ஏறுவதற்காவது கூடுவதாகாது. ஆதலால், நீ வாக்கை அடக்கியவனாக இரு பாரத! இந்த இடத்தில் அப்பொழுது எல்லாத்தேவர்களும் உத்தமமான யாகங்களைச் செய்தார்கள். அவைகளுடைய அடையாளங்கள் இன்னும் காணப்படுகின்றன. பிரஜைகளுக்கு அதிபதியே! இதோ அறுகம்புல்லுகள் தர்ப்பங்களுடைய வடிவம்போன்ற வடிவமுள்ளவைகளாகவும் இதோ பூமியானது தர்ப்பங்களால் பரப்பப்பட்டதுபோலவும் இதோ பல மரங்கள் யூபஸ்தம்பங்கள்போலவும் இருக்கின்றன. பாரத! தேவர்களும் ரிஷிகளும் இப்பொழுதும் வஸிக்கிறார்கள். ஸாயங்காலத்திலும் அப்படியே காலையிலும் அவர்களுடைய அக்னியானது காணப்படுகின்றது. குந்திபுத்திரனே! இதில் ஸ்நானம்செய்கிறவர்களுடைய

[1] வேறுபாடம்.

பாவமானது உடனே நாசஞ்செய்யப்படுகிறது. குருஸ்ரேஷ்டனே! ஆதலால், நீ தம்பிமார்களுடன்கூட ஸ்நானஞ்செய்வாயாக. நீ நந்தையி னுடைய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சரீரமுள்ளவனாகி, பிறகு, விஸ்வாமித்திரரால் எந்நதியில் ஒப்புயர்வற்ற கடுந்தவம் புரியப் பட்டதோ அந்தக் கௌசிகீநதியைக்குறித்துச் செல்வாய்' என்று சொன்னார். பிறகு, அரசர் பரிவாரங்களுடன் அந்நதியில் சரீரங் களை ஸ்நானஞ்செய்வித்துப் பரிசுத்தமாயிருப்பதும் அழகியதும் குளிர்ந்தஜலமுள்ளதும் மங்களத்தை உண்டுபண்ணுகிறதுமான கௌசிகீநதியை அடைந்தார்.

---

## நூற்றுப்பதினோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(யுதிஷ்டிரர் கௌசிகீதீரத்தில் ரிஸ்யஸ்ருங்கருடைய ஆஸ்ரமத்தை அடைந்ததும், லோமசர் ரிஸ்யஸ்ருங்கருடைய உற்பத்தியையும் லோமபாதன் மழையில்லாமையை நீக்குதற்காக ரிஸ்ய ஸ்ருங்கரை அழைத்துவரத் தாஸிகளை அனுப்பியதை யும் அவர்கள் அவ்வனஞ்சென்றதையும் யுதிஷ்டிரருக்குக் கூறியதும்.)

லோமசர், 'பரதஸ்ரேஷ்டனே! இது கௌசிகீயென்னும் பரி சுத்தமான தேவநதி. இங்கே இந்த அழகியதான விஸ்வாமித்திரரு டையஆஸ்ரமம் விளங்குகிறது. எவருக்குத் தவமுள்ளவரும், இந் திரியங்களையடக்கியவரும், தவத்தின்பெருமையினால் இந்திரனை மழைபொழியச்செய்தவரும், பலனையும் வ்ருத்ரனையுங்கொன்ற இந் திரன் மழையற்றுப்போனகாலத்தில் தம்மிடம்பயந்து மழைபெய் யக் காரணமானவரும், காஸ்யபருக்குப் பெண்மானிடத்தில் தேஜஸ் வியானபிள்ளையாகப் பிறந்தவரும், பிரபுவும், லோமபாதனுடைய தேசத்தில் பயிர்களழிந்துபோனபோது பெரிய ஆச்சரியத்தைச் செய்தவரும், ஸூர்யன் ஸாவித்ரியைக்கொடுத்ததுபோல லோம பாதராஜன் தன்மகளானசாந்தையைக் கொடுக்கப்பெற்றவருமான ரிஸ்யஸ்ருங்கர் புத்ரரோ, அந்த மஹாத்மாவான காஸ்யபகோத் திரத்தில்தோன்றின விபாண்டகருடைய புண்யமென்கிற பெய ருள்ள ஆஸ்ரமமும் விளங்குகிறது' என்றுசொல்ல, யுதிஷ்டிரர், 'ரிஸ்யஸ்ருங்கர் பெண்மானிடத்தில் எவ்வாறு காஸ்யபருக்குப்புத்

திரமாகத் தோன்றினர்? விரோதமான ஜாதிகளுக்கு ஸம்பந்த மானது எப்படி தவத்தால் கூடிற்று? பலனையும் வ்ருத்ரனையும் கொன்ற இந்திரன் மழையின்மை நேர்ந்திருந்த தருணத்தில் புத்தி மானான அந்தச்சிறுவரிடம் பயத்தால் எதற்காக மழைபொழிந் தான்? எவள் மிருகமாக இருக்கிற அந்த ரிஸ்யஸ்ருங்கருடைய மனத்தை (விஷயானுபவத்தில்) ஆசைப்படும்படி செய்தாளோ பதிவிரதையும் ராஜபுத்ரியுமான அந்தச் சாந்தை எவ்விதமான வடிவழகுள்ளவள்? லோமபாதன் தார்மிகனென ராஜரிஷி என்று கேட்கப்படுகிறானே; அவனுடைய தேசத்தில் இந்திரன் யாது கார ணத்தால மழை பொழியாமலிருந்தான்? பகவானே! ரிஸ்யஸ்ருங்க ருடைய செய்கையைக் கேட்க விரும்புகிற எனக்கு இவையெல்லாவற் றையும் விஸ்தாரமாக உள்ளபடி உரைக்கக்கடவீர்' என்று வினவ', லோமசர் கூறலானார்.

'மஹாஹ்ரதத்தில் பிரம்மரிஷியும தவத்தினால் மனத்தை அடக்கினவரும் வீண்போகாத வீர்யமுள்ளவரும் பிரம்மாவுக்கு ஸமமான காந்தியுள்ளவருமான விபாண்டகருக்கு, பிரதாபசாலி யும் மிக்க தேஜஸுள்ளவரும சிறுவரும் பெரியோர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டவருமான ரிஸ்யஸ்ருங்கர் புத்ரராகப் பிறந்த விதத்தைக் கேள். கஸ்யபகுலத்தில் பிறந்த தேவரிஷிபோன்ற விபாண்டக முனிவர் மஹாஹ்ரதத்தை அடைந்து நெடுங்காலம் தவத்திலிருந்து மிகுந்த களைப்பை அடைந்தார். அரசனே! ஸ்நானம் செய் கின்ற அவருடைய வீர்யமானது, (அவர்) ஊர்வசி என்கிற அப்ஸரஸைப் பார்த்தவுடன் ஜலத்தில் நழுவி விழுந்தது. அதனை அப்பொழுது தாகங்கொண்ட ஒருபெண்மான் தண்ணீருடன் குடித்தது. அதிலிருந்து, அது கர்ப்பமுள்ளதுமாயிற்று. முன்பு, தேவகன்னியாயிருந்த அந்தப்பெண்மானானது உலகங்களைப் படைப்ப வரும் மகிமையுள்ளவருமான பிரமமதேவரால், 'நீ ஒரு பெண் மானாகப்பிறந்து ஒரு ரிஷியைப் பெற்று (அந்தப் பிறப்பிலிருந்து) விடுபடுவாய' என்று சொல்லப்பட்டது. பிரம்மதேவரது வாக்குப் பயன்படாமல் போகாததலாலும் தெய்வத்தாலேற்படுத்தப்பட்டது அவ்வண்ணமே ஆகவேண்டியதாயிருப்பதாலும் அந்தப்பெண்மானி டத்தில் அந்தக்காஸ்யபருக்கு மஹானும் ரிஷியுமாகிய புத்திரர் உண் டானார். (அந்த) ரிஸ்யஸ்ருங்கர் தவத்தில் நிலைபெற்றவராகி வனத்தி லேயே வளர்ந்தார். வேந்தே! மஹாத்மாவான அவருக்குச் சிரத் தில கொம்பு இருந்தது. அதனால் அப்பொழுது அவர் ரிஸ்யஸ்ருங்க

ரென்றே பிரஸித்திபெற்றவரானார். அந்த ரிஷ்யச்ருங்கரால், தம பிதாவைததவிர வேறு மனிதன முன பார்ககபபட்டதில்லை. வேந்தனே! அதனால், அவருடைய மனமானது நிதயம பிரமமசரியததிலேயே ஊன்றியிருந்தது. இநதததருணததில் தசரதருககு மித்திரனும் லோமபாதனென்று பிரஸித்திபெற்றவனுமான ஓர் அரசன் அஙகதேசாதிபதியாக இருநதான். பாரத! தர்மஙகளை அறிந்தவனாக இருநதும தெய்வததால் மனம் கெடுககப்பட்ட அவனால பிராமமணர்களின விருபபம [1] வீணாககபபட்டதென்று கேள்வி. பரதர்களுள மிகசசிறநதவனே! அபபொழுது அவன பிராமமணர்களால் விடபபட்டான். (மேலும) அவ்வரசனுடைய புரோஹிதரது தற்செயலான குற்றததாலும் இநதிரன் மழை பொழியவில்லை. அதனால், பிரஜைகள் துன்புறுததப்பட்டார்கள். பூமிக்கு நாதனே! அவன் தபோபலமுள்ளவர்களும் கற்றறிந்தவர்களும் தேவேநதிரனை மழைபொழியச செய்யவலலவர்களுமான பிராமமணர்களைப்பாரதது, 'மேகம எவ்வாறு மழைபொழியும்? உ[illegible]ததை ஆலோசிப்பீர்களாக' என்று வினவினான். ஏவபபடட அந்த விதவானகள தஙகள் அபிபபிராயஙகளை அவனுக்குக் கூறினார்கள். அவாகளுள ஒரு முனிஸ்ரேஷ்டா அந்த அரசனைப்பார்த்து, 'ராஜேந்திரனே! உன்மீது பிராம்மணர்கள கோபஙகொண்டிருக்கிறார்கள அதற்குப் பிராயச்சிததததைச செய்துகொள். அரசனே! மானிடததினின்று பிறந்தவரும் பெண்களை அறியாதவரும் உள்ளும்புறமும் ஒததிருததலில பற்றுள்ளவருமான ரிஷ்யச்ருங்கரென்கிற ரிஷிகுமாரரையும அழைததுவா. மன்னவனே! மிக்க தவமுள்ளவரான அந்த ரிஷ்யச்ருங்கா உன்னுடைய தேசததை அடைந்தால் உடனே பர்ஜனயன் மழையைப பொழிந்துவிடுவானென்பதில எனக்கு ஐயமில்லை' என்று சொன்னார்.

அரசனே! இந்த வசனத்தைக்கேட்டு, அவன் பிராமமணர்களிடம சென்று தனக்குப் பிராயச்சித்ததைச் செய்துகொண்டு ப்ராம்மணர்கள் பிரஸன்னர்களானபிறகு, மறுபடியும் திருமபிவந்தான். பிரஜைகள் அரசன திரும்பிவந்ததை அறிந்து அவனைப்பிரீதியுடன் வரவேற்றார்கள். தகப்பன்போல எப்பொழுதும ஹிததததைச்செய்கின்ற அவனும அபபொழுது அவர்களை அன்புடன் வரவேற்றான். பிறகு, அஙகதேசாதிபனான (அவன) ஆலோசனையில் வல்லவர்களான மந்திரிகளை அழைத்து ரிஷ்யஸ்

[1] கொடுபபதாக முதலில் சொலலிவிட்டுப பிறகு சொல்லவில்லை என்று மறுபபது.

ருங்கரை அழைத்துவருவதற்குரிய மந்திராலோசனை நிச்சயத்தில் முயற்சியைச் செய்தான். (ராஜ்யத்தைப் பாதுகாப்பதினின்று) தவறுதலுள்ள அவன் சாஸ்திரங்களை அறிந்தவர்களும் (அவற்றின்) ஆத்தங்களை முழுமையும் உணர்ந்தவர்களும் நீதியில் நிலைபெற்றிருப்பவர்களுமான அந்த அமைச்சர்களுடன் உபாயத்தை அறிந்து கொண்டான். அரசன், பிறகு, தாஸிகளுள் சிறந்தவர்களும் எல்லாவிஷயங்களிலும் ஸாமர்த்தியமுள்ளவர்களுமான வேசிகளை அழைத்துவரச் செய்தான். அந்த அரசன், அவர்களைப்பார்த்து, 'கல்யாணிகளே! ரிஷியினுடைய குமாரரான ரிஸ்யஸ்ருங்கரை உபாயத்தால் ஆசையை உண்டுபண்ணி நம்பச்செய்து என்னுடைய தேசத்திற்கு அழைத்துவாருங்கள்' என்று சொன்னான். அந்த ஸ்திரீகள், ராஜபயத்தினின்று பயந்தவர்களும் சாபத்தினின்றும் பயந்தவர்களும் துன்பமுற்றவர்களும் மதிமயக்கமுற்றவர்களுமாகி, அந்தக் கார்யம் தங்களால் செய்யமுடியாததென்று சொன்னார்கள். அவர்களுள் வயதுசென்ற ஒருத்தி, அரசனைப்பார்த்து, 'மகாராஜரே! அந்தத் தபோதனரை அழைத்துவருவதற்கு நான் முயல்வேன். நான் விரும்பிய விருப்பங்களை நீர் கொடுக்கக்கடவீர். அதனால், ரிஷிகுமாரரான ரிஸ்யஸ்ருங்கரை அழைத்துவருவதற்கு நான் திறமையுள்ளவளாவேன்' என்று சொன்னாள். அந்த அரசன் அவளால் விரும்பப்பட்ட எல்லாவற்றையும் (கொடுக்கும்படி) அனுமதியளித்தான். ஏராளமானபொருளையும் பற்பலவித ரத்தினங்களையும் கொடுத்தான். அரசனே! பிறகு, அவள் ரூபத்தோடும் நல்லவயதோடும் கூடின சில ஸ்திரீகளைக்கூட்டிக்கொண்டு விரைவாகக் காட்டை அடைந்தாள்.

---

நூற்றுப்பன்னிரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(ஒரு தாஸி விபாண்டகரில்லாத ஸமயத்தில் அவருடைய ஆஸ்ரமத்தில் வந்து விலாஸங்களால் ரிஸ்யஸ்ருங்கரைமயக்கி ஆசைகாட்டிச் சென்றதும், விபாண்டகர் ஆஸ்ரமத்திற்குவந்து புத்ரர் மயங்கியிருப்பதைப் பார்த்துக் காரணத்தை வினவியதும்.)

பாரத! அவள், ராஜகார்யம் பயன்படும்பொருட்டு அரசனுடைய கட்டளையினாலும் தன் புத்தியினாலும் ஓடத்தில் ஓர் ஆஸ்ர

மத்தை ... நீட்டான அந்த ஆஸ்ரமத்தைப் பல விதபுஷ்பங்க... என்னும் ...டிகளுளும் பலவிதப் புதர்களோடும் கொடிகளோடும் ... ...வகளும் ருசியுள்ள விருப்பமான பழங்களைக் கொடுப்பவைகளும், ஒளிபொருந்தியவைகளுமான போலி மரங்களால் மிகவும் அழ...காகவும் மனத்தை மிகக் கவர்வதாகவும் ரம்யமாகவும் [1] ஆச்சர்யகரமானகாட்சியுள்ளதாகவும் செய்தாள். பிறகு, அவள் விபாண்டகருடைய ஆஸ்ரமத்திற்கு அருகில் ஓடத்தைக்கட்டிவிட்டு, அந்த முனிவர் வெளியில் புறப்பட்டுப்போகும் ஸமயத்தை ஆட்களால் தெரிந்துகொண்டாள்; பிறகு,(அவள்) தன் மனத்துக்குப் பிடித்தவளும் தன்மகளுமான வேசியை இவ்விதம் செய்யவேண்டுமென்பதை நன்கு அறிவித்து விபாண்டகர் இல்லாத ஸமயம்பார்த்து (ஆஸ்ரமத்திற்கு) ...ப்பினள். ஸாமர்த்தியசாலியான அவள் ... என்றும்தவமுள்ள (ரிஸ்யஸ்ருங்க முனிவர்) ... ...ருக்கையில், அந்த ஆஸ்ரமத்தை அடைந்து ரிஷிகுமாரரான ...ரைப் பார்த்தாள். வேசி, 'முனிவரே! முனிவர்களுக்கு க்ஷேமமா? உங்களுக்குக் கிழங்குகளும் கனிகளும் நிரம்ப இருக்கின்றனவா? நீர் இந்த ஆஸ்ரமத்தில் மகிழுகிறீரா? உம்மைப்பார்ப்பதற்காக நான் இப்பொழுது வந்திருக்கிறேன். தவசிகளுடைய தவம் பெருகிவருகிறதா? உம்முடையபிதா தேஜஸ் குறையாமலிருக்கிறாரா? பிராம்மணரே! உம்மால் அவர் ப்ரீதி அடைவிக்கப்படுகிறாரா? ரிஸ்யஸ்ருங்கரே! வேதாத்தியயனம் செய்யப்படுகிறதா?' என்று வினவினள்.

ரிஸ்யஸ்ருங்கர், 'நீர் ஸம்ருத்தியினால் ஜோதிபோலப் பிரகாசிக்கிறீர். நான் உம்மை நமஸ்காரம் செய்யப்படத்தக்கவரென்று நினைக்கிறேன்; உமக்குப் [2] பாத்யத்தைப் பிரியத்துடன் கொடுப்பேன். தர்மம் தவறாமல் பழங்களையும் கிழங்குகளையும் கொடுப்பேன். மான்தோலால் மூடப்பட்டிருக்கிற தாப்பாஸனத்தில் ஸுகானுபவத்தின்பொருட்டு உமதுவிருப்பப்படி வீற்றிருப்பீராக. உம்முடைய ஆஸ்ரமம் எங்கிருக்கிறது? பிராமமணரே! நீர் தேவன்போல இருந்துகொண்டு என்ன பெயருள்ள இந்த விரதத்தை அனுஷ்டிக்கிறீர்?' என்றுகேட்டார். வேசி, காஸ்யபருடைய புதல்வரே! இந்தமலைக்கு மூன்றுயோசனைக்கப்பால ரமணீயமான என்னுடைய ஆஸ்ரமமிருக்கிறது. அந்தஇடத்தில் வந்தனம்பெறாமலிருப்பது எங்களுக்கு ஸ்வதர்மமாக இருக்கிறது. பாத்ய தீர்த்தத்தை நாங்கள் தொடமாட்டோம். உம்மால் நான் நமஸ்கரிக்கப

1 'அத்புதோபமதாசனம' என்பது மூலம். 2 கால கழுவ நீர்.

## நூற்றுப்பதினொன்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(வேசீ விபாண்டகரில்லாதஸமயத்தில் மறுபடியும் ஆஸ்ரமத்துக்குவந்து ரிஸ்யஸ்ருங்கரை ஓடத்தில் ஏற்றிக்கொண்டு அங்கதேசத்திற்கு வந்தவுடன் பெருமழை பெய்ததும், ரிஸ்யஸ்ருங்கர் லோமபாதனுடைய ப்ரார்த்தனையின்படி சாந்தையை மணந்ததும், லோமபாதன் விபாண்டகரைக் கோபம் தணியச் செய்ததும், ரிஸ்யஸ்ருங்கர் பிதாவின்கட்டளைப்படி புத்திரோத்பத்தி வரையில் அங்கே வஸித்துப் பிறகு மனைவியுடன் தம் ஆஸ்ரமம் சென்றதும்.)

விபாண்டகர், 'புத்திர! நிகரற்ற வல்லமையுள்ளவர்களும் அழகுள்ளவர்களுமான இந்த ராக்ஷஸர்கள் அத்புதமான காட்சியுள்ள அந்த உருவத்தோடு ஸஞ்சரிக்கின்றார்கள்; எப்பொழுதும் தவத்துக்கு இடையூற்றை நினைக்கின்றார்கள். ஐயா! நல்லவடிவழகுள்ள அவர்கள் பலவித உபாயங்களால் ஆசைகொள்ளச் செய்கிறார்கள். பயங்கரமான உருவமுள்ள அவர்கள் வனங்களில் முனிவர்களை ஸ்வர்க்கத்தினின்றும் உலகத்தினின்றும் தள்ளிவிடுகிறார்கள். மனத்தை அடக்கியவனும் பெரியோர்களுடைய உலகங்களை வேண்டுகிறவனுமான முனிவன் அந்த ராக்ஷஸர்களை எவ்விதத்தாலும் அடையக்கூடாது. தீச்செயலுள்ளவர்களான அவர்கள் ரிஷிகளுக்கு இடையூற்றை உண்டுபண்ணி ஸந்தோஷமடைகின்றார்கள். தவத்திலிருப்பவன் அவர்களைப் பார்க்கக்கூடாது. புத்திர! கீழோர்களால் குடிக்கப்படுகின்றனவும் குடிக்கத்தகாதனவுமான அந்த மதுக்கள் (நம்மால்) குடிக்கத்தக்கவை அல்ல. பலவிதமாகவிளங்குகிற நறுமணம் பொருந்திய இந்தப் புஷ்பமாலைகளும் முனிவர்களுக்கு (உரியவையென்று) கருதப்படவில்லை. அவர்கள் அரக்கர்கள்' என்று சொல்லிப் புத்திரனைத்தடுத்து அவளைத் தேடினார். அவர் மூன்று தினங்கள் தேடியும் காணாமல் ஆஸ்ரமத்திற்குத் திரும்பிவந்தார். அந்தவிபாண்டகர் விதிப்படி பழங்களைக் கொண்டுவருவதற்காக மறுபடியும் ஆஸ்ரமத்திலிருந்து வெளியிற் சென்ற ஸமயத்தில் அந்த வேசிப்பெண் ரிஸ்யஸ்ருங்கமுனிவரை மறுபடியும் ஆசைப்படும்படி செய்வதற்காகச் சென்றாள். ரிஸ்யஸ்ருங்கர் அவளைப் பார்த்தவுடனே மிக்க மனக்களிப்புள்ளவ

ரும் மயங்கிய உருவமுள்ளவருமாக அப்பொழுது அவளுக்கு எதிரில் ஓடிவந்தார்; 'என்பிதா இங்கே வருமுன்னரே உமமுடைய ஆஸ்ரமததிறகு நாமிருவரும் செல்வோம' என்றும அவளைப பாாத்துச சொன்னார். அரசனே! பிறகு, வேசிகள் விபாண்டக ருடைய ஒரே புததிரரை (ஓடததில்) ஏறசசெய்து வேகததுடன் ஓடததை அவிழ்ததுவிட்டு, பலவித உபாயஙகளால ஆசைப்படச் செய்துகொணடு, அங்கதேசததரசனுடைய ஸமீபததைவந்தடைந் தார்கள. பிறகு, செலுததிவரப்படடதும் மிகக வெண்ணிறமுள் ளதுமான அநத ஓடத்தை அநத ஆஸ்ரமம கணணுககுத தெரியக கூடிய தூரததில நிறுத்திவிடடு, அபபடியே கரைதொடங்கி விசித்ர மான வனததை [1] நாவ்யாஸ்ரமமெனனும் பெயருள்ளதாகச செய தாள. ஒரே பிளளையான அந்த விபாண்டகருடைய புததிரரை அந்தப்புரததிலிருக்கச் செய்தவுடன, உலகமானது மேகஙகளால மிகப்பொழியபபட்டு ஜலததால் எஙகும நிறைக்கப்படுகிறதை (அரசன்) பார்ததான். விருப்பம நிறைவேறியவனை அந்தலோம பாதன் ரிஸ்யஸ்ருங்கருககுச சாந்தை என்கிற (தனது) பெணணைக் கொடுத்தான்; வருகிற விபாண்டகருடைய கோபந்தணியச செய் வனவான காளைகளால் உழவையும் ஏராளமான பசுக்களையும் (இடையர்களையும்) வழிகளில அமைததான். வீரர்களான இடையர் களை, 'புததிரரிடததில் பேராவலுள்ள விபாண்டக மஹரிஷியான வர் உங்களைக் கேட்டால் நீஙகள் கைகுவிததுக்கொண்டு அவரை நோக்கி, 'இந்தப் பசுக்களும் உழுதபூமிகளும உமமுடைய புததிர ருடையவை. மஹரிஷியே! உமக்கு என்னப்ரியததைச் செய்யக்கட வோம? நாஙகளனைவரும் உமககு அடிமைகள; உமமுடையவாக் கில கட்டுப்பட்டவர்கள்' என்று சொலலவேணடும' என்று கட் டளையிட்டான்.

பிறகு, உக்கிரமான கோபமுள்ள அந்த முனிவர் கிழங்குகளையும் பழங்களையும் எடுததுககொண்டு தம்முடைய ஆஸ்ரமததிறகு வநதார். அந்த இடத்தில புத்திரரைததேடியும் காணவில்லை. அதனால், அவர் மிக்க கோபம்கொண்டார். பிறகு, கோபததால் பிளக்கப்படுகின்ற அவர், (அதனை) அரசனுடைய செய்கையென்று ஸந்தேஹிததுப் பட்டணததோடும் ராஜயத தோடும், அந்த அஙகராஜனை எரிப்பவராகிச சம்பாநகரியை நோக்கிச் சென்றார். அநத விபாண்டகர் களைப்படைந்தவரும்

1 வேறு பாடம.

பசித்தவருமாகி மிக்க செழிப்புள்ள அந்த இடைச்சேரிகளை அடைந்தார்; அந்த இடையர்களால் விதிப்படி பூஜிக்கப்படுகிற வராகி அங்கே அந்த இரவு முழுவதும் அரசன்போல வசித்தார். பூஜையைப்பெற்று மிக மகிழ்ந்த விபாண்டகர், 'பசுக்காப்பவர் களே! நீங்கள் யாரைச் சேர்ந்தவரென்று பிரஸித்தி பெற்றவர் கள்?' என்று வினவினார். அதன் பிறகு, அவர்கள் எல்லோரும் (முனிவரின்) எதிரில் நெருங்கிவந்து, 'இது உமது புத்திரருடைய தனமாகச் செய்யப்பட்டது' என்று சொன்னார்கள். இடங்கள் தோறும் பூஜிக்கப்படுகின்ற அவர், மதுரமான அந்த வசனங்களைக் கேட்கிறவரும் பெரும்பாலும் கோபந்தணிந்தவரும் மிக மகிழ்ந்த வருமாகி, நகரத்திலிருக்கின்ற அங்கதேசாதிபதியை அடைந்தார். புருஷச்ரேஷ்டனான அவனால் பூஜிக்கப்பட்ட அவர், ஸ்வர்க்கத்தில் தேவேந்திரன்போலிருக்கும் புத்திரரைக் கண்டார்; அங்கே ஆகா யத்தில் ஸஞ்சரிக்கின்ற மின்னல்போன்ற சாந்தை என்கிற மருமகளை யும் கண்டார். தம் புத்திரருடைய கிராமங்களையும் இடைச்சேரி களையும் சாந்தையையும் பார்த்து அவருடைய அதிகமான அந்தக் கோபம் தணிந்தது. அரசே! விபாண்டகர் அந்த அரசனுக்கு அதிகமான அனுக்கிரஹத்தையே செய்தார். ஸூர்யனுக்கும் அக்கி னிக்கும் ஒப்பான மகிமையுள்ள அந்த மகரிஷியானவர், அந்தப்பட் டணத்தில் புத்திரரை இருக்கச்செய்து, 'இந்த அரசனுக்குப் பிரிய மான எல்லாவற்றையும் செய்துவிட்டு, ஒரு புத்திரன் பிறந்தவுடன், வனத்தைக் குறித்தே வந்து சேருவாயாக' என்று சொன்னார். அந்த ரிச்யச்ருங்கர் அவருடைய வசனத்தை அப்படியே செய்துவிட்டு, தம்முடைய பிதாவான அவரிருந்தவிடம் சென்றார். வேந்தனே! ஆகாயத்தில் ரோகிணியானவள் சந்திரனையும், மிக்க பாக்யசாலியான அருந்ததி வஸிஷ்டரையும், லோபாமுத்திரை அகஸ்தியரையும் உபசரித் ததுபோலச் சாந்தையும் இவரை அநுகூலையாகி உபசரித்தாள். அஜ மீடவம்சத்தவனே! பாண்டுபுத்ர! நரேந்திர! நளனுக்குத் தமயந்தி யும் இந்திரனுக்கு இந்திராணியும் முத்கலருக்கு நாளாயனியான இந்திர ஸேனையும் மஹாத்மாவான தசரதகுமாரருக்கு ஸீதையும் எப்படி வசப்பட்டிருந்தார்களோ, உனக்கு த்ரௌபதி எப்படி வசப்பட்டிருக்கி றாளோ அப்படியே வனத்திலிருக்கிற ரிச்யச்ருங்கருக்குச் சாந் தையானவள் ப்ரீதியுடன் வசப்பட்டிருந்து பணிவிடை செய்தாள். அரசனே! மஹாஹ்ரதத்தை விளக்கச்செய்கின்றதும் நல்ல புகழுள் ளதுமான புண்யமென்னும் அவருடைய ஆச்ரமமானது இதோ

பிரகாசிக்கின்றது. நீ இதில் ஸ்நானஞ்செய்து செய்யவேண்டிய காரியங்களைச் செய்தவனும் பரிசுத்தனுமாகி மற்றத் தீர்த்தங்களைக் குறித்துச் செல்வாயாக' என்று கூறினார்.

---

நூற்றுப்பதினைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் கங்காஸாகரஸங்கமம் முதலிய தீர்த்தங்களுக்குச் சென்றதும், லோமசர் அந்தஅந்தத் தீர்த்தங்கள் ஆச்ரமங்கள் இவற்றின் மஹிமையைச் சொல்லியதும்.)

ஜனமேஜயரே! பாண்டவர் அந்தக்கௌசிகீநதியினின்று புறப்பட்டபின்பு வரிசையாக எல்லா ஆயதனங்களையும் அடைந்தார். அரசரே! அவர் கங்கை வந்து கலக்குமிடத்தில் ஸமுத்திரத்தை அடைந்து ஐந்நூறு நதிகளின் மத்தியில் ஸ்நானஞ்செய்தார். பாரதரே! பிறகு, வீரரான அரசர் ஸஹோதரர்களுடன் சேர்ந்து கடற்கரையோடு கலிங்கதேசங்களைக் குறித்துச் சென்றார். லோமசர், 'குந்தீநந்தன! எங்கே வைதரணீநதி ஓடுகிறதோ, எங்கே தர்மதேவரும் தேவர்களைச் சரணமடைந்து யாகஞ்செய்தாரோ அந்தக் கலிங்கதேசங்கள் இவை. ரிஷிகளால் நன்றாக உபயோகிக்கப்பட்டதும் யாகஞ்செய்வதற்குத் தகுந்ததும், மலைகளால் விளங்குகிறதும் எப்பொழுதும் பிராமணர்களால் அடையப்பட்டதுமான இதுவன்றோ (வைதரணியின்) வடகரை? ஸமமான தேவயான மார்க்கத்தினால் ஸ்வர்க்கத்தை அடைய விரும்பிய மற்ற ரிஷிகளும் இந்த இடத்தில் முற்காலத்தில் யாகங்களால் (தேவர்களை) ஆராதித்தார்கள். ராஜஶ்ரேஷ்டனே! இந்த இடத்திலேயே ருத்ரர் யாகத்தில் பசுவைக் கைப்பற்றினர். ராஜேந்திரனே! பசுவை எடுத்துக்கொண்டு, 'இது (என்) பாகம்' என்றும் சொன்னார். பரதர்களுள் சிறந்தவனே! அப்பொழுது யாகபசுவானது அபஹரிக்கப்பட்டவுடன், தேவர்கள், அந்த ருத்திரரைப் பார்த்து, 'பிறருடைய [1] பொருளை நீர் துரோகம் செய்ய வேண்டாம். தர்மமார்க்கத்தினின்று தவறிப்போகாதீர். ஜகதீஸ்வர! பகவானான நீர் ஸ்வயமே யஜ்ஞேஶ்வரராகவும் கர்மங்களுக்

---

[1] 'பிறருடைய பாகத்தைக் கெடுக்கவேண்டாமென்பது கருத்து' என்பது பழைய வுரை.

குப் பலன்களைக் கொடுப்பவராகவுமிருந்தும் யஜ்ஞத்தை அழிக்கத் தக்கவரல்லீர்' என்று சொல்லினர். அவர்கள் இவ்விதம் மங்கள ரூபமான வாக்குக்களால் ருத்திரரைத் துதித்தார்கள்; அப்பொழுது, அவரை இஷ்டியினாலும் திருப்தியடையச் செய்து பூஜித்தார்கள். பிறகு, அவர் பசுவை விட்டுவிட்டுத் தேவயானத்தால் சென்றார் யுதிஷ்டிர! இந்த விஷயத்தில், 'தேவர்கள் ருத்திரரிடத்தில் பயத்தினால் புதிதும் எல்லாப்பாகங்களையும் விடச் சிறந்ததும் சாஸ்வதமுமான பாகத்தை ருத்திரருக்கு ஏற்படுத்தினார்கள்' என்னும் [1] பரம்பரையாக வழங்கும் ருத்ரருடைய கதையாகிய இதனைச் சொல்லுகிற என்னிடமிருந்துத் தெரிந்துகொள். இங்கே எந்த மனிதன் இந்தக் காதையைப் பாடிக்கொண்டு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்கிறானோ அவனுக்குத் தேவயான மார்க்கமும் கண்ணுக்கு எதிரில் தெரிகிறது' என்று சொன்னார். பிறகு, மஹா பாக்கியசாலிகளான பாண்டவர்களனைவரும் அவ்வாறே திரௌபதியும் வைதரணியில் இறங்கிப் பிதருக்களுக்குத் தர்ப்பணம் செய்தார்கள். யுதிஷ்டிரர், 'லோமசரே! இங்கே இந்த வைதரணி நதியில் விதிப்படி ஸ்நானம்செய்து தபோபலத்தினால் மனிதர்க்குரிய இயற்கையினின்றும் விலகினவனாக இருக்கிறேன்; பாரும் நல்ல விரதமுள்ளவரே! உம்முடைய அருளால் எல்லா உலகங்களையும் காண்கிறேன். மந்திரங்களை ஜபிக்கிறவர்களும் மகாத்மாக்களுமான வைகானஸர்களுடைய ஒலி இது' என்று சொன்னார். லோமசர், 'யுதிஷ்டிரனே! எந்த இடத்தில (இருந்து வருகிற) இந்தத்தவனியைக் கேட்கிறாயோ அந்த இடம் மூன்றுலக்ஷம் யோஜனை தூரத்தில உள்ளது. அரசனே! [2] பேசாமலிரு எந்த இடத்தில் பிரதாபமுள்ளவரான பிரம்மதேவர் யாகம் செய்தாரோ பிரம்மதேவருடைய அப்படிப்பட்ட திவ்யமான இந்தவனம் விளங்குகிறது. அந்தயஜ்ஞத்தில் பிரம்மதேவரால் மலைகளோடும் வனப்பிரதேசங்களோடும் கூடின பூமியானது மகாத்மாவான கஸ்யபருக்குத் தக்ஷிணைக்காகக் கொடுக்கப்பட்டது. குந்தீநந்தன! அப்பொழுது, பூமியானவள், கொடுக்கப்பட்டவுடனே, மனவருத்தத்தையுமடைந்தாள்; கோபம் கொண்டவளாகி உலகங்களுக்கு ஈஸ்வரரும் பிரபுவுமான அவரைப்பார்த்து, 'பகவானே! எந்தமனிதனுக்கும் என்னை

1 அநுவம்சம் என்பது மூலம்.

2 அங்குள்ள ஒலி இங்குக் கேட்பதுபோல அவர் பேச்சு ஒலியும் அங்குக் கேட்டு அவர்களின் தவம் தடைப்படுமென்றபடி.

நீர் கொடுப்பது தகாது. உம்முடைய இந்ததானம் பயனற்றது. இதோ பாதாளத்தை அடைகிறேன' என்கிற இதனைக் கூறினாள். பிரஜைகளுக்கு நாதனே! பிறகு, விசனப்படுகிற அந்தப் பூமியைப் பார்த்து, பகவானான கச்யபரிஷியானவர், அதிலிருந்து அவளை மகிழச்செய்தார். பாண்டுநந்தன! பிறகு, பூமியானவள் அவருடைய தவத்தினால் மகிழ்ந்து மீண்டும ஜலத்தினின்று எழுந்திருந்து வேதி (= மேடை) வடிவமாக இருந்து விளங்கினாள். அப்படிப்பட்ட இவள் வேதியின் வடிவத்தை லக்ஷணமாகக் கொண்டவளாகப் பிரகாசிக்கின்றாள். இந்த வேதியின்மீது ஏறினால நீ வீர்யவானாவாய். அரசனே! அப்படிப்பட்ட [1] இந்த வேதி (உன்னால்) ஸமுத்திரத்தை அடைந்து அடையப்பட்டது. நீ ஒருவனாக இதனமீதேறி ஸாகரத்தைத தாண்டுவாயாக. உனக்கு மங்களம். நீ இப்பொழுது இந்தவேதியில் ஏறத்தக்கபடி உனக்கு நான் மங்களா சீர்வசனத்தைப் பிரயோகிப்பேன். அஜமீடவம்சத்திலுதித்தவனே! இந்த வேதியானது மனிதனாலே தொடப்பட்டால் அந்த இடத்தினின்று ஸமுத்திரத்தில் முழுகிவிடுகின்றது. பாண்டவ! 'ஓம், உலகங்களை (ப்ரளயத்தில் உன்னிடம் மறைத்து) ரக்ஷிப்பவனும் உலகங்களைக்காட்டிலும் சிறந்தவனுமான உனக்கு வந்தனம். தேவேச! உப்புநீருள்ளகடலில் ஸாந்நித்தியம் செய்வாயாக. அக்னியும் ஸூர்யனும் ஜலஸ்வரூபியான உனக்குக் காரணம் பிரகாசிப்பவரும் எங்கும் வியாபித்திருப்பவருமான [2] பரமாத்மாவினுடைய சரீராகார பரிணமத்திற்கு நீ அபிவ்யக்திஸ்தானமாக இருக்கிறாய். நீ அம்ருதத்திற்கு இருப்பிடமாகவுமிருக்கிறாய்' என்னும் பொருளுள்ள ஸத்யவாக்கியத்தை இவ்விதம்சொல்லிக்கொண்டு நீ இந்தவேதியின் மீது விரைவாக ஏறு. பாண்டவ! 'உனக்கு அக்நி காரணம்; யஜ்ஞம் சரீரம்; விஷ்ணுவின்ஜீவன் உன்னிடத்தில் சேர்ப்பிக்கப்படுகிறது. நீ மோக்ஷத்திற்கு ஸாதனம்' என்னும பொருளுள்ள ஸத்யவாக்கியத்தை இவ்விதம் ஜபித்துக்கொண்டு அங்கிருந்து நதிகளுக்குப்பதியான ஸமுத்திரத்தில ஸ்நானம் செய்வாயாக. குருச்ரேஷ்டனே! குந்திபுத்ர! தேவனுக்கு ஸ்தானமானதும் தீர்த்தங்களுக்குப் பதியுமான மஹோததியானது வேறுவிதமாகத் தர்ப்பத்தின் நுனியி

---

1 'இந்தவேதி ஸமுத்ரம் வரையில செல்வது' என்பது இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு. 2 பகவத் ஸ்வரூபம வெளிப்பட்டு விளங்கக் காரணமாயிருக்கிறாய் என்பது.

ஞல்கூடத் தொடத்தக்கதன்று' என்று கூறினர். பிறகு, மகாத்மா வான யுதிஷ்டிரர் ஸ்வஸ்தியயனம் செய்யப்பட்டு ஸமுத்திரத்தை அடைந்தார்; இந்த லோமசருடைய அந்தக்கட்டளையனைத்தையும் செய்துவிட்டு மஹேந்திரமலையை அடைந்து அவ்விடத்தில் ஓர் இரவு வஸித்தார்.

---

## நூற்றுப்பதினாறுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(அக்ருதவ்ரணர் பரசுராமருடைய சரித்திரத்தை யுதிஷ்டிரருக்குச் சொல் லத்தொடங்கியதும், ரிசீகர் தேவலோகத்துக் குதிரைகள் ஆயிரத் தைப் பரிமாகக் கொடுத்துக் காதியின் மகளை மணந்ததும், காதியின் புத்ரியான ஸத்யவதி பிருகுவின் அருளால் ஜமதக்னியைப் பெற்றதும்.)

அந்த அரசர், அங்கே அந்த ஓர் இரவு வசித்து, தம்பிமார் களுடன் தவசிகளுக்குச் சிறந்த பூஜையைச் செய்தார். பிறகு, லோம சர், பிருகுக்களும் அங்கிரஸர்களும் வஸிஷ்டர்களும் காச்யபர்களு மாகிய அந்தத் தவசிகளனைவரையும் அங்கே அவருக்குச்சொன்ன ஞர். ராஜரிஷியாகிய அந்த யுதிஷ்டிரர், அவர்களை அடைந்து நமஸ் கரித்துக் கைகுவித்துக்கொண்டு, பரசுராமருடன் கூடவே ஸஞ்சரிப் பவரும் வீரருமான அக்ருதவ்ரணரைப் பார்த்து, 'பகவானும் தவசியுமான ராமர் எப்பொழுது காட்சி தருவார்? தவத்துடன் கூடின அந்தப்பார்க்கவரை நான் பார்க்கவிரும்புகிறேன' என்று வினவ, அக்ருதவ்ரணர், 'ஆத்மஸ்வரூபத்தை அறிந்தவரான ராமரால் நீ வரும்பொழுதே அறியப்பட்டாய் உன்னிடத்தில் ராமருக்கு ப்ரீதியும் இருக்கிறது. சீக்கிரம் உனக்குக் காட்சி தருவார். சதுர்த்த சியிலும் அஷ்டமியிலும் தவசிகள் ராமரைப் பார்க்கிறார்கள். இந்த ராத்ரி சென்றபிறகு, நாளைச்சதுர்த்தசி வரப்போகிறது. அப்பொழுது, கிருஷ்ணாஜினத்தையும் ஜடைகளையும் தரித்த ராமரைப் பார்ப்பாய்' என்று சொன்னார்.

யுதிஷ்டிரர், 'தேவரீர் மகாபலசாலியும் ஜமதக்னியின் குமார ருமான ராமரைத்தொடர்ந்து செல்லுகிறவர். தேவரீர் முன் நடந்த (அவருடைய) எல்லாச்செய்கைகளையும் நேராகக்கண்ட

வர். எல்லா க்ஷத்திரியர்களும் யுத்தத்தில ராமரால யாதுகார ணம்பற்றி எவ்வாறு ஜயிக்கப்பட்டார்கள்? அதனைத் தேவரீர் இப்பொழுது சொல்வீராக' என்று வினவ, அகருதவாணர், 'அரசப் புலியே! பாரத! ஆச்சரியம். பிருகுக்களுடைய வம்சத்தில் அவதரித்தவரும் ஜமதக்நி புத்ரருமான ராமருடைய உத்தமமான பெரிய தேவசரிதம்போன்ற கதையையும் ஹேஹய தேசாதிபதியாகிய கார்த்தவீர்யார்ஜுனனுடைய கதையையும் உனக்குச் சொல்வேன். பாண்டவ! ராமரால் ஹேஹயதேசாதிபதியாகிய அர்ஜுனனென்பவன் கொல்லப்பட்டான். அவனுக்கு ஆயிரம் கைகள் இருந்தன. பூமிக்கு நாதனே! தத்தாத்ரேயருடைய அருளால (அவனுக்கு) ஸ்வர்ண விமானமும் அப்படியே பூமியில எல்லாப்ராணிகளுக்கும் தலைமையும் இருந்தன. மஹாத்மாவான அந்த அர்ஜுனனுடைய தேரானது (எங்கும்) தடையற்ற ஸஞ்சாரமுள்ளதாக இருந்தது. வரத்தையடைந்ததால, மஹாபலசாலியான அவன எப்பொழுதும் அந்தத்தேரினால தேவர்களையும் இயக்கர்களையும் ரிஷிகளையும் எல்லாப பக்கங்களிலும் துன்பம் செய்தான. அவன் எல்லா இடங்களிலும் எல்லாப்பிராணிகளையும் துன்பப்படுத்தினன். பிறகு, தேவர்களும் மஹாவிரதமுள்ள ரிஷிகளும் ஒன்று சேர்ந்து தேவர்களுக்குத்தேவரும தேவசத்ருக்களைக் கொல்பவரும் ஸத்யமான பராக்கிரமமுள்ளவருமான விஷ்ணுவை அடைந்து, 'பகவானே! பிரபுவே! பிராணிகளைக்காப்பாற்றுவதற்காக அர்ஜுனனை வதம்செய்வீராக. பிரபுவான ஹேஹயதேசாதிபதியானவன, திவ்ய விமானத்தால் இந்திராணியைத் துணைக்கொண்டு விளையாடிக்கொண்டிருக்கிற இந்திரனை அவமதித்தான' என்று சொன்னார்கள். பாரத! பிறகு, தேவரான பகவான அப்பொழுது கார்த்தவீர்யனை அழிப்பதற்காக இந்திரனுடன் சேர்ந்து ஆலோசித்தார். உலகங்களால பூஜிக்கப்பட்ட பகவான, பிராணிகளுக்கு ஹிதமான எந்த எந்தக் கார்யங்கள் தேவராஜனால தெரிவிக்கப்பட்டனவோ அவை அனைத்தையும (செய்வதாக) உறுதி கூறி, அழகிய பதரீவனத்திலிருக்கிற தமமுடைய ஆச்ரமமண்டலத்தையே அடைந்தார். இதே ஸமயத்தில், பூமியில் பூமிக்கு அதிபதியும் மிக்க பலமுள்ளவனும காதி என்று உலகத்தில் பிரஸித்திபெற்றவனும் மஹானுமான ஓர் அரசன் கான்யகுப்ஜத்தில் இருந்தான். அவன் வனவாஸத்தை அடைந்தான். காட்டில் வஸிக்கிற அவனுக்கு அப்ஸரஸுக்கொப்பான ஒருபெண் பிறந்தாள். பாரத! ப்ருகுவினுடைய புத்திரரான ரிசீகர் அந்தப்பெண்ணை (மனைவியாக) வரித

தார். பிறகு, காதியானவன், கடுமையான விரதமுள்ள அந்தப்பிராம் மணரைப்பார்தது, 'நம்முடைய குலததில் முன்னோர்களால் எது அனுஷ்டிக்கப்பட்டதோ அது நமக்கு உசிதம். பிராம்மணோத்த மரே! ஒரு பக்கததில் கருமையான காதுள்ளவைகளும் வெண்மை யானவைகளும் வேகமுள்ளவைகளுமான ஆயிரம குதிரைகளைக் கன்யாசுல்கமென்று அறிவீராக. பார்க்கவரே! (கன்யாசுல்கம்) கொடுக்கவேண்டுமென்று பகவானுன உம்மை நான் சொல்லலாகாது. உமமைப்போன்ற மஹாத்மாவுக்கே என் பெண் கொடுக்கப்படத தக்கவள்' என்று சொன்னன். ரிசீகர், 'ஒரு பக்கம் கருமையான காதுள்ளவைகளும் வெண்மையானவைகளும் வேகமுள்ளவைகளு மான ஆயிரம் குதிரைகளை உனக்கு நான் கொடுப்பேன். உன் னுடைய பெண் எனககுப் பார்யையாகட்டும்' என்று சொன்னர். காதியானவன், 'எனக்கு ஆயிரம் குதிரைகளைக் கொடுப்பீராகில் என் னுடைய புததிரி உமக்குப் பார்யையாகக்கடவள்' என்று சொன்னன். அரசனே! அவர், 'அப்படியே' என்று உறுதி கூறி, வருணனை நோக்கி, 'ஒருபக்கததில் கருமையான காதுள்ளவைகளும் வெண்ணிற முள்ளவைகளும வேகமுள்ளவைகளுமான ஓர் ஆயிரம் குதிரைகளைக் கனயாசுல்கததின்பொருட்டுக கொடுக்கக் கடவாய்' என்று சொன்னர். அப்பொழுது வருணன் அவருக்கு ஆயிரமகுதிரைகளைக் கொடுத தான். (கங்கையில) எந்த இடததில் அந்தக் குதிரைகள் கிளம்பி வந்தனவோ அந்த இடம் அஶ்வதீர்த்தமென்று பிரஸித்தியடைந்தது.

பிறகு, காதியானவன் ஸத்யவதி என்கிற தன்மகளைக் கான்ய குப்ஜததில அந்த ரிசீகருக்குக் கொடுத்தான். அப்பொழுது, தேவர்கள் வரனுடைய பக்ஷத்தைச சேர்ந்தவர்களானர்கள். அவர்கள, ஆயிரம் குதிரைகளும அந்தப் பெண்ணும் அடையப்பட்டதைப் பார்தது மிக்க வியப்பை அடைந்தாகள்; ரிசீகரை [1] ஆநாயததில் நன்கு துதிததார்கள். பிராமமணோததமரான அவர் அந்த ஸதய வதியைத் தர்மப்படி மனைவியாக அடைந்து அழகிய இடையுள்ள அவளுடன் இஷ்டப்படி ஸுகமாக மகிழ்ந்தார். வேந்தனே! விவாஹம் செய்யப்பட்ட பிறகு, மனைவியுடனிருக்கும் அந்தப்புத்திரரை (பார்க்க வர்களுக்குத்) தலைவரான ப்ருகுவானவர் பார்க்க விரும்பி வந்தார்; புததிரரைப்பார்தது ஸந்தோஷத்தையும் அடைந்தார். தேவகணங் களால் அர்ச்சிக்கப்பட்டவரும் வீற்றிருக்கிறவருமான அந்தப்ருகு வை (அந்தத) தம்பதிகள் அப்பொழுது அர்சசித்துப பணிசெய்

1 'ஏவ' என்பது விடபபட்டது.

கின்றவர்களாகிக் கைகூப்பிநின்றார்கள். பிறகு, பகவானான அந்தப் பிருகுவானவர், மிகமகிழ்ந்து மருமகளைப்பார்த்து, 'ஸௌபாக்யவதியே! வரத்தைக்கேள். நீ விரும்பியதைக் கொடுப்பவனாக இருக்கிறேன்' என்று சொன்னார். அவள் தனக்கும் தன் தாய்க்கும் புத்திரர் உண்டாவதற்காகக் குருவான அவரை அருளுள்ளவராகச் செய்தாள். அவரும் அநுக்ரகத்தைச் செய்தார். ப்ருகு, 'நீயும் உன்தாயும் ருதுஸ்நானம் செய்தபின் புத்திரரைப் பெறுவதற்காக அவள் அரசமரத்தையும் நீ அத்திமரத்தையும் தனித்தனி கட்டிக்கொள்ளுங்கள். கல்யாணீ! உனக்கும் உன் தாய்க்குமாகவே விராட்புருஷனை மீண்டும் மீண்டும் தியானித்து என்னால் முயற்சியுடன் ஸித்தம் செய்யப்பட்ட இந்த இரண்டு சருக்களும் ப்ரயத்தையுடன் சாப்பிடவேண்டியவை' என்று அவ்விருவரையும் சொல்லிவிட்டு மறைதலை அடைந்தார். அவ்விருவரும் ஆலிங்கனத்திலும் சருவிலும் மாறுதலைச் செய்தார்கள். பிறகு, பல நாட்கள் சென்றபின் பகவானான [1] அந்தப்ருகுவானவர் திவ்ய ஞானத்தாலறிந்து மறுபடியும் வந்தார். பிறகு, மஹாதேஜஸ்வியான ப்ருகுவானவர், மருமகளான ஸத்தியவதியைப் பார்த்து, 'கல்யாணி! அழகிய புருவங்களுள்ளவளே! உன்தாயால் சருவானது மாறுதலாக உபயோகிக்கப்பட்டது. மரத்தில் ஆலிங்கனமும் மாறுதலாகச் செய்யப்பட்டது. நீயும் வஞ்சிக்கப்பட்டாய். க்ஷத்திரியனுடைய செய்கையுள்ள பிராம்மணன் உனக்குப் புத்திரனாவான். பிராம்மணர்களின் ஆசாரமுள்ளவனும் மஹானும் மிக்க வீர்யமுள்ளவனும் ஸாதுக்களின் வழியிலிருப்பவனுமான க்ஷத்திரியன் உன்தாய்க்குப் புதல்வனாவான்' என்று சொன்னார். பிறகு, அவள், 'எனக்குப் புத்திரன் இவ்விதம் உண்டாகவேண்டாம்; புத்திரனுக்குப் புத்திரன் இஷ்டப்படி உண்டாகட்டும்' என்று மாமனாரைத் திரும்பத் திரும்ப(வேண்டி) அருள்வரச் செய்தாள். பாண்டவ! 'இப்படியே ஆகக்கடவது' என்று அவரால் அநுக்ரகிக்கப்பட்ட அவள் காலத்தை எதிர்பார்த்துக்கொண்டு ஜாக்கிரதையுடன் கர்ப்பத்தைத் தரித்தாள். பிறகு, அவள், பிரஸவகாலம் வந்தவுடன், தேஜஸோடும் வர்ச்சஸோடும் கூடியவரும் ப்ருகுபுத்திரரான ரிசீகரை மகிழ்விப்பவருமான ஜமதக்கினி என்கிற புதல்வனை ஈன்றாள். பாண்டு நந்தன! தேஜஸ்வியாக வளர்கின்ற அவர்

1 இரட்டித்ததலால் 'புந:' 'பகவாந' என்னும் இரண்டு சொற்கள் விடப்பட்டன.

வேதாத்தியயனத்திஞலும் மஹாதேஜஸ்வியாகிப் பலரிஷிகளை மீறி இருந்தார். பரதஸ்ரேஷ்ட! சூரியனுக்குச் சமமான வர்ச்சஸுள்ள அவருக்குத் தனுர்வேத முழுமையும் [1] நான்கு விதமான அஸ்திரங்களும் (தாமே) விளங்கின.

---

நூற்றுப்பதினேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(ஜமதக்னி ரேணுகையினிடத்தில் மானஸிகமான கற்பழிவைக் கண்டு ராமரை ஏவ, அவர் கோடாலியினால் அவள்கழுத்தை வெட்டியதும், ஜமதக்கினிமுனிவர், புத்ரரான ராமருடைய ப்ரார்த்தனையினால் ரேணுகையைப் பிழைப்பித்ததும், கார்த்தவீர்யன் ராமர் இல்லாதபொழுது ஆச்ரமத்துக்கு வந்து ஜமதக்னியினுடைய பசுவின் கன்றைத் திருடி ஆச்ரமத்தை அழித்ததும், ராமர் வந்து கார்த்தவீர்யனைக் கொன்றதும், அவனுடையகுமாரர்கள் ராமரில்லாத பொழுது ஜமதக்னி முனிவரைக் கொன்றதும்.)

வேதாத்யயனத்தில் பொருந்தியவரும் மஹாதபஸ்வியுமான அந்த ஜமதக்னியானவர் தவம்புரிந்தார்; பிறகு, நியமத்தால் தேவர்களைத் தமவசமாக்கினார். அரசே! அவர் ப்ரஸேனஜித் என்கிற அரசனை அணுகி ரேணுகையை வரித்தார். அந்த அரசனும் அவருக்கு (ரேணுகையைக்) கொடுத்தான். பிறகு, ரிசீகருடைய புதல்வரான அவர் ரேணுகையை மனைவியாகப்பெற்று அனுகூலையான அவளுடன் ஆச்ரமத்திலிருந்துகொண்டு தவம்புரிந்தார். அவளுக்கு ராமரை ஐந்தாமவராகவுடைய நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். கடைசியில் பிறந்தவரான ராமரே எல்லாரிலும் முதன்மையாயிருந்தார். பிறகு, ஒரு சமயம் எல்லாப் புத்ரர்களும் பழங்களைக் கொண்டுவரச் சென்றபின் நியமமான விரதமுள்ள ரேணுகையானவள் ஸ்நானம் செய்வதற்காகச் சென்றாள். அரசனே! வந்துகொண்டிருக்கிற அந்த ரேணுகையானவள் சித்திரரதன் என்கிற

1 த்ரோணபர்வம் 26 ம் பக்கம் பார்க்க.

மார்த்திகாவதத்தேசத்தரசனைத் தற்செயலாகக் கண்டாள். ரேணுகை, பாரியையுடனிருப்பவனும் தாமரை மலர்மாலை அணிந்தவனும் செல்வப் பெருக்குள்ளவனும் ஜலத்தில் விளையாடுபவனுமான (அவனைக்) கண்டு, பிறகு அவனிடத்தில் ஆசைகொண்டாள். அவள் அந்தக்கற்பழிவினால் தண்ணீரிலேயே [1] மனவேறுபாட்டை அடைந்தவளாகவும் அறிவையிழந்தவளாகவும் [2] அச்சமுற்றவளாகவும் ஆசிரமத்தில் நுழைந்தாள். பாக்தாவான ஜமதக்னி அவள் (கற்பழிந்ததை) அறிந்துகொண்டார். அதிகதேஜஸுள்ளவரும் வீர்யமுள்ளவருமான அவர், அவள் தைரியத்தினின்று நழுவினதையும் பிரம்மதேஜஸினால் விடப்பட்டதையும்கண்டு, 'சீ' என்னும் சொல்லால் நிந்தித்தார். பிறகு, ஜமதக்னியின் மூத்த குமாரனான ருமண்வானென்பவனும், ஸுஷேணனும், வஸுவும் அப்படியே விஸ்வாவஸுவும் வந்தார்கள். பகவானான அவர் மூத்தவர் வரிசையாக அவர்களைத் தாயாரைக் கொல்வதில் ஏவினார். அவர்கள் மதிமயக்கமுற்றவர்களும் மனமிழந்தவர்களுமாகி ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, அவர் கோபத்தால் அவர்களைச் சபித்தார். அவர்கள் சபிக்கப்பட்டுப் புத்தியை இழந்தார்கள்; விரைவாக மிருகங்களையும் பக்ஷிகளையும் ஒத்தசெய்கையுள்ளவர்களும் (மரங் கொடி முதலிய அறிவற்ற) ஜடப்பொருளை ஒத்தவர்களும் ஆனார்கள். அதன்பிறகு, பகைவீரர்களைக் கொல்பவரானராமர் ஆசிரமத்திற்கு வந்தார். மிக்ககோபமுள்ளவரும் மிக்கதவமுள்ளவருமான ஜமதக்னியானவர், அந்தராமரைப் பார்த்து, 'புத்திர! பாவியான இந்த உன்தாயைக் கொல்வாயாக. நீ மனவருத்தமும்படாதே' என்று சொன்னார். உடனே, ராமர் கோடாலியை எடுத்துத் தாயின் தலையை வாங்கிவிட்டார். மகாராஜனே! பிறகு, மகாத்மாவான அந்த ஜமதக்னியின் கோபமானது உடனே போய்விட்டது. அவர் ப்ரஸன்னருமாகி, 'அப்பா! என்னுடைய கட்டளையால் செய்தற்கரிய இந்தக் காரியம் உன்னால் செய்யப்பட்டது. தர்மங்களை அறிந்தவனே! மனத்தினால் விரும்புகிற விருப்பமுழுமையையும் கேள்' என்னும் இதனைச் சொன்னார். பாரத! அந்த ராமர் மீண்டும் தாயார் (உயிருடன்) எழுந்திருப்பதையும், தாம் வதம் செய்ததைத் தாயார் நினையாமலிருப்பதையும், அந்தத் (தாய்க் கொலையா

---

1 'கலிந்நா' என்பது மூலம் இதற்குப் பழையவுரை வேறுபொருள் கூறுகிறது.

2 பொருந்தாமையால் அதிகபாடமான ஒரு ப்லோகம் விடப்பட்டது.

னுணடான) [1] பாவத்தால (தாம) பற்றப்படாமல் இருப்பதையும், அப்படியே தமையன்மார்களுககு இயற்கையான நிலைமையையும், தாம யுததததில் நிகரிலலாமலிருப்பதையும், நீண்ட ஆயுளையும் வரமாகக்கேட்டார். மஹாதபஸ்வியான ஜமதக்னியானவர் அந்த எல்லா இஷ்டஙகளையும் கொடுததார். பிரபுவே! ஒருஸமயம், அவருடைய எலலாப்புததிரர்களும வெளியில்போயிருநதார்கள். பிறகு, அனுபதேசாதிபதியும் வீரனுமான கார்ததவீர்யன் (ஆஶ்ர மததிற்கு) வந்தான். ஆஶ்ரமஸ்தானத்தை அடைந்த அவனை ரிஷி யானவா பூஜைககுரிய பொருளால் நன்குபூஜிததார். அவன் யுத்தத திலுள்ள மததததால கொழுததவனுகி அவ்வாறன பூஜையில் மகிழ வில்லை. அந்த ஆஶ்ரமததிலிருந்து ஹோமபசுவானது அலறும் பொழுதே, கன்றைப் பலாதகாரமாக அடிததுக்கொண்டு போனன்; பெரிய மரங்களையும ஒடிததான். ராமர் வந்தவுடன், பிதா தாமாகவே அதனைச்சொன்னர். பசு மிக அலறுவதைப் பார்ததும் ராமருக்குக் கோபம மூண்டுவிட்டது. அவா கோபததிற்கு வசப்பட்டவராகிக் கார்த்தவீர்யனைத் தொடர்ந்தோடினர். அரசனே! பிறகு, பகை வீரர்களைக் கொல்லுகிறவரான பார்க்கவராமர் போரில் அழகிய வில்லைப்பிடித்து (அவனை) மிஞசிப் பரிகாயுதமபோனற அவனு டைய ஆயிரமாக எண்ணப்பட்ட கைகளைக் கூர்மையான பல்லங்க ளால் அறுத்தார். ராமரால் வெல்லப்பட்ட கார்த்தவீர்யன் கால கதியை அடைந்தான். பிறகு, அர்ஜுனனுடைய புத்திரர்கள் ராம ரால் கோபம் உண்டுபண்ணபபட்டவர்களாகி ராமரில்லாத தருணத தில் ஆஶ்ரமத்தில் ஜமதக்னியின் அருகில் ஓடிவந்தார்கள். அவர் கள் மகாவீர்யமுள்ளவரும் போர்புரியாதவரும் தவஞ்செய்பவரும் நாதனறறவர்போல அடிக்கடி, 'ராம! ராம' என்று அலறுகிறவரு மான அவரைக் கொனறூர்கள். யுதிஷ்டிரனே! பகைவரை அடக்கு கிறவர்களால் கார்ததவீர்யனுடைய புத்திரர்கள் அம்புகளால் ஜம தக்னியைக் கொன்றுவிட்டு வந்தபடியே சென்றூர்கள். அவர்கள் ஓடிப்போய் ஜமதக்னியும் அவ்வண்ணம் இறந்த பொழுது, பிருகு நந்தனரான பரசுராமர் ஸமித்துக்களைக் கையில்கொண்டு ஆஶ்ர மதுக்கு வந்தார். வீரரான அவர், அப்பொழுது, ம்ருத்யுவின் வசததை அடைந்தவரும் அதற்குத்தகாதவரும் அப்படி ஆனவரு மான பிதாவைப் பார்த்து அதிகதுக்கமுள்ளவராகிப் புலம்பினர்.

---

[1] 'கற்பழிவென்னும் பாவததால தாய் பறறபபடாமலிருப்பதையும' என்றும் கொள்ளலாம.

நாற்பத்தினெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(அக்ருதவ்ரணர், பரசுராமர் பித்ருவதத்தால் கோபங்கொண்டு க்ஷத்ரியரை இருபத்தோருமுறை கருவறுத்தகதையை யுதிஷ்டிரருக்குச் சொல்லியதும், யுதிஷ்டிரர் மறுதினம் சதுர்த்தசியில் வந்த பரசுராமருக்குப் பூஜைமுதலியவற்றைச் செய்து மஹேந்திரமலையினின்று புறப்பட்டுச் சென்றதும்.)

ராமர், 'ஐயா! தேவரீர் என்னுடைய அபராதத்தால் அற்பர்களும் மூர்க்கர்களுமான கார்த்தவீர்யனுடைய புத்திரர்களால் காட்டில் அம்புகளால் மிருகம் கொல்லப்படுவதுபோலக் கொல்லப் பட்டீர். ஐயா! தர்மங்களை அறிந்தவரும் நல்லவழியில் இருப்பவரும் எல்லாப் பிராணிகளிடத்திலும் எவ்விதத்தீங்கும் செய்யாதவருமான தேவரீருக்கு இவ்விதமான மரணம் எவ்வாறு தகும்? தேவரீர் தவத்தில் நிலைபெற்றவரும் யுத்தம் செய்யாதவரும் பிராயமுதிர்ந்தவரும் ஸாதுவுமாயிருந்தும் எவர்களால் கூர்மையுள்ள பல அம்புகளால் அடித்துக்கொல்லப்பட்டீரோ அவர்களால் என்ன பாவந்தான் செய்யப்படவில்லை? யுத்தம் செய்யாதவரும் தர்மங்களை அறிந்தவரும் தனித்திருப்பவருமான (உம்மைக்) கொன்று, வெட்கமில்லாதவர்களான அவர்கள் அங்கே மந்திரிகளிடமும் நண்பர்களிடமும் என்ன சொல்லுவார்களோ?' என்றார். அரசனே! மிக்க தவமுள்ள (ராமர்), இப்படி இரக்கத்துடன் பலவிதமாக மிகப்புலம்பிப் பிதாவுக்குப் பிரேதகார்யங்களெல்லாவற்றையும் செய்தார். பகைவர்பட்டணங்களை ஜயிப்பவரான ராமர் பிதாவை அக்னியில் தகனமும் செய்தார். பாரத! எல்லா க்ஷத்திரியக் கூட்டங்களுடைய வதத்தையும் ப்ரதிஜ்ஞைசெய்தார். அதிக பலசாலியும் வீர்யமுள்ளவரும் எமனுக்கொப்பானவருமான அவர் மிக்க கோபங்கொண்டு ஒருவராகவே ஆயுதமெடுத்து யுத்தத்தில் கார்த்தவீர்யனுடைய புத்திரர்களைக் கொன்றார். க்ஷத்திரியச்ரேஷ்டனே! அடிப்பவர்களுள் சிறந்தவரான ராமர் எந்த க்ஷத்திரியர்கள் அவர்களைத்தொடர்ந்து வந்தார்களோ அவர்களனைவரையும் கொன்றார். பிரபுவான அவர் பூமியை இருபத்தொருமுறை க்ஷத்திரியர்களற்றதாகச் செய்து ஸமந்தபஞ்சகத்தில் ஐந்து இரத்தமடுக்களை உண்டுபண்ணினார். ப்ருகுகுலத்தைத் தாங்குபவரான அவர், அவைகளில்

பிதருக்களைக்குறித்துத் தர்ப்பணம்செய்தார்; ரிசீகரையும் நேரில கண்டார். அவரும ராமரைத் தடுததார். பிறகு, பிரதாபசாலியான ஜாமதக்னியர் பெரிய யாகததால் தேவேந்திரனைத திருப்தி அடையச செயதார்; ரித்விக்குக்களுக்குப் பூமியைத தானம் செய்தார். பிரஜைகளுக்கு நாதனே! நாற்பதுமுழம் நீளமும அகலமுமுள்ளதும, முப்பத்தாறுமுழம் உயரமுள்ளதுமான ஸவர்ணமயமான ஒரு வேதியைச் செய்து மஹாதமாவான கஶ்யபருக்குக் கொடுத்தார். வேந்தனே! அப்பொழுது [1] காண்டவாயனர்களென்று பிரஸித்திபெற்ற அந்தப் பிராம்மணர்கள், கஶ்யபனுடைய அனுமதியினால் அதனைக் கண்டம் கண்டமாகப் பங்கிட்டுக்கொண்டார்கள். மிக்க பலபராக்கிரமங்களுள்ளவரும அளவுகடந்த விக்கிரமமுள்ளவருமான அவா மகாத்மாவான அநதக் கஶ்யபருக்குப் பூமியைக் கொடுத்துவிட்டு மிகப் பெரிய தவததை மேறகொண்டு இந்த மஹேந்திரமென்கிற சிறந்தமலையில் வஸிக்கிறார். உலகததில வஸிககிற க்ஷத்திரியர்களோடு அவருககு இவவிதம வைரமுண்டாயிற்று. அளவற்ற தேஜஸுள்ள ராமரால் பூமியும் ஜயிக்கப்பட்டது' என்றார். பிறகு, பெரியமனமுள்ள ராமர் சதுர்த்தசிதினததில் நியமப்படி அந்தப் பிராம்மணர்களுக்கும் தம்பிமாருடனிருக்கும் தர்மராஜருக்கும் காட்சியளிததார். ராஜேந்திரரே! பிரபுவான அந்தத் தர்மராஜர் பிராதாக்களுடன் சேர்நது அவரைப் பூஜித்தார். அந்த ராஜஶ்ரேஷ்டர் பிராம்மணர்களுக்கும் சிறந்த பூஜையைச் செய்தார். அவர் பரசுராமரை அர்ச்சிதது அவரால பூஜிக்கப்பட்டவரும் ஏவப்பட்டவருமாகி, மஹேந்திர பர்வததில அந்தஇரவு வஸிததுத தென திசையை நோக்கிப் புறப்பட்டார்.

---

## நூற்றுப்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் அடைவில் பிரபாஸதீர்த்தத்தை அடைந்ததும், கிருஷ்ணர் பலராமர் முதலியோர் அவரைப் பார்க்க வந்ததும்.)

பாரதரே! தீர்த்தங்களைக் குறிததுச் செல்லுகின்ற மஹானுபாவரான அந்த அரசர், புண்யமானவைகளும் அழகியவைகளும் சிற்

---

[1] 'பஙகு பிரிததுககொள்ளுகிறவர்கள்' என்பது இஙகிலிஷ் மொழிபெயர்ப்பு.

சில இடங்களில் பிராம்மணர்களால் விளங்குகின்றவைகளுமான ஸமுத்திரத்தினுடைய எல்லாத் தீர்த்தங்களையும் பார்த்தார். ஜனமேஜயரே! நன்னடையுள்ளவரும் கச்யபருடைய புத்திரனான ஸூர்யனுக்குப் [1] பௌத்திரருமான பாண்டுபுத்ரர் தம்பிமார்களுடன் அவைகளில் நீராடி ஸமுத்திரத்தைக் குறித்துச் செல்லுகிறதும் புண்யம் மிக்கதுமான பிரசஸ்தை என்கிற நதியை அடைந்தார். மகானுபாவரான அவர் அதிலும் ஸ்நானம்செய்து பிதருக்களையும் தேவர்களையும் திருப்தியடையச் செய்தார். ப்ராம்மண ச்ரேஷ்டர்களிடம் தனத்தைக் கொடுத்து ஸமுத்திரத்தை நோக்கிச் செல்லுகிற கோதாவரியை அடைந்தார். அரசரே! பிறகு, வீரரான அவர் பாவம் நீங்கினவராகி த்ராவிடதேசத்தில் ஸமுத்திரத்தை அடைந்து உலகத்திலுள்ள தீர்த்தங்களுள் புண்யமானதும் மிக்க பரிசுத்தமுமான அகஸ்திய தீர்த்தத்தையும் அப்பால் நாரீதீர்த்தங்களையும் கண்டார். அந்தப் பாண்டுகுமாரர் அவைகளில் மற்றவர்களால் செய்யமுடியாத சிறந்த விற்பிடித்த அர்ஜுனனுடைய அந்தச் செய்கையைக் கேட்டும், நிகரற்ற ரிஷிகளின் கூட்டங்களால் பூஜிக்கப்பட்டும், அதிக ஸந்தோஷத்தை அடைந்தார். பூமியில் அரசர்க்கரசரான அவர், திரௌபதியுடனும் தம்பிமாருடனும், அந்தத் தீர்த்தங்களில் ஸ்நானம்செய்து, அர்ஜுனனுடைய பராக்கிரமத்தை நன்கு புகழ்ந்து மகிழ்ந்தார். பிறகு, ஸமுத்திரத்தினுடைய அந்தத் தீர்த்தங்களில் ஆயிரம் பசுக்களைத் தானம்செய்து ஸந்தோஷமுள்ளவராக, தம்பிமார்களுடன், அர்ஜுனன் செய்த கோதானங்களை நன்றாகப் புகழ்ந்து பேசினார். அரசரே! அந்த யுதிஷ்டிரர், ஸமுத்திரத்தினுடைய அந்தத் தீர்த்தங்களையும் புண்யமான மற்றெல்லாத் தீர்த்தங்களையும் முறையே அடைந்து விருப்பம் நிறைவேறினவராகிப் புண்யம் மிக்க சூர்ப்பாரகத்தைக் கண்டார்; அங்கே கடல்நாட்டைச் சிறிது கடந்து பூமியில் பிரஸித்திபெற்ற வனத்தை அடைந்தார். அதில் முற்காலத்தில் தேவர்களால் தவம் புரியப்பட்டது. அப்படியே, புண்ணியத்தை முக்கியமாகக்கொண்ட அரசர்களால் யாகம் பண்ணப்பட்டது. நீண்ட பருத்த கைகளுள்ள அவர், அவ்விடத்தில் தவசிகளுடைய கூட்டங்களால் சூழப்பட்டதும் புண்ணியம் செய்தவர்களால் பூஜிக்கத்தக்கதுமான சிறந்த விற்பிடித்த ரிசீகபுத்திரருடைய அந்த வேதியைக் கண்

---

1 'ஸூர்யனுக்குப் பிள்ளை யமன்; யமனுக்குப் பிள்ளை யுதிஷ்டிரர்' என்பது.

டார். அரசரே! பிறகு, பூமிக்கதிபதியும் மஹாத்மாவுமான அந்த அரசர், வஸுக்கள், மருத கணங்கள், அப்படியே அஸ்வினிதேவர்கள், யமன், ஆதித்யன், குபேரன், இந்திரன், விஷ்ணு, பிரபுவான ஸவிதா, பகன், சந்திரன, திவாகரன், வருணன், ஸாத்தியர்களுடைய கணம், பிரமமதேவர், பிதருக்கள், கணங்களுடன கூடின ருத்திரர், ஸரஸ்வதி, ஸித்தகணம், பூஷா, அப்படியே மற்றத் தேவர்கள் ஆகிய இவர்களுடைய புண்யமானவைவயும் நன்கு மனத்தைக் கவருகின்றவைபுமான ஆயதனங்களையும் கண்டார். அந்த அரசர் அவைகளில் ஸமீபத்தில் வஸித்துக்கொண்டிருக்கிற பண்டிதர்களை வஸ்திரங்களாலலங்கரித்து, சிறந்த ரத்தினங்களையும் (அவர்களுக்கே) கொடுத்து, எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானம்செய்து மீண்டும் சூர்ப்பாரகத்தைக் குறித்து வந்தார். அவர் ஸஹோதரர்களோடு மறுபடியும் ஸமுத்திரத்தின் அந்தக்கரைவழியாகச் சென்று மஹான்களான பிராம்மணர்களோடு பூமியில் பிரஸித்திபெற்ற பிரபாஸ தீர்த்தத்தை அடைந்தார். பெரிய சிவந்த கண்களுள்ளவரும் தம்பிமார்களுடனிருப்பவருமான அவரும், அவ்வாறே கிருஷ்ணையும், லோமசருடன் அந்தப் பிராம்மணர்களும், அதில் ஸ்நானம் செய்து தேவகணங்களுக்கும் பிதருக்களுக்கும் தர்ப்பணம் செய்தார்கள். தர்மங்களைத் தரிப்பவர்களுள் மிகச் சிறந்த அவர், அப்பொழுது பன்னிரண்டு நாள் தீர்த்தத்தையும் காற்றையும் பக்ஷிக்கின்றவராகி இரவுகளிலும் பகல்களிலும் (முறையே) ஸ்நானம்செய்தும் நாற்புறங்களிலும் நெருப்புக்களை அருகில் எரியச்செய்தும் தவம்புரிந்தார். அவர் உக்கிரமான தவத்தை மேற்கொண்டு செய்வதைப் பலராமரும் ஜனார்த்தனரும் கேட்டார்கள். எல்லா வருஷ்ணிகளுள்ளும் மிகச் சிறந்த அவர்கள் ஸைனிகர்களுடன் கூடியவர்களாகி ஆஜமீடரான யுதிஷ்டிரரை அடைந்தார்கள். வ்ருஷ்ணிகளான அவர்கள் பூமியில் படுத்திருப்பவர்களும் அழுக்கினால் பூசப்பட்ட மேனியுள்ளவர்களுமான பாண்டு புத்ரர்களைப் பார்த்தும் (அவ்வித கஷ்டத்துக்குத்) தகாதவளான திரௌபதியைப் பார்த்தும் மிக்க துயரமுற்றவர்களாகத் துன்பக்குரல்களை வெளியிட்டுக்கொண்டு அழுதார்கள். பிறகு, தைர்யங் குறையாதவரான அந்த யுதிஷ்டிரர், பலராமரையும் ஜனார்த்தனரையும் பிரத்யும்னனையும் ஸாம்பனையும் சினியினுடைய பௌத்ரனான ஸாத்யகியையும் மற்ற வ்ருஷ்ணிகளையும் அணுகி முறைப்படி பூஜை செய்தார். அரசரே! அந்த வ்ருஷ்ணிகளும், பார்த்தர்களனைவரையும் பிரதி பூஜைசெய்து, அப்படியே அந்தப் பாண்டு புத்திரர்களால் பூஜிக்கப்பட்டவர்களாகி, இந்திரனைத்

தேவகணங்கள் சூழ்ந்திருப்பதுபோல, யுதிஷ்டிரரைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். மிக்க பிரஸித்தி பெற்றவரான அவர், அந்தப் பகைவர்களுடைய செய்கை அனைத்தையும் (தங்களுடைய) வனவாஸத்தையும் அஸ்திரங்களைப் பெறுதற்காக இந்திரனிடம் தேவராஜகுமாரனான அர்ஜுனன் போயிருப்பதையும் க்ருஷ்ணரிடம் சொன்னார். பிரஸித்திபெற்றவர்களும் மிக்க பூஜைக்குரியவர்களும் மஹானுபாவர்களுமான அவர்கள் அவருடைய வசனத்தைக் கேட்டும் மிகமெலிந்திருக்கிற அந்தப் பாண்டவர்களைப் பார்த்தும் துக்கத்தினால் [1] தோன்றிய கண்ணீரைச் சொரிந்தார்கள்" என்று கூறினார்.

---

நூற்றிருபதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ரா பர்வம். (தொடர்ச்சி.)

---

(பலராமர், வ்ருஷ்ணிகளும் பாண்டவர்களும் கூடியிருக்கிற ஸபையில், பீஷ்மர் திருதராஷ்டிரன் முதலியவர்களை நிந்தித்துப் பாண்டவர்களைக் குறித்து வருந்தியது.)

ஜனமேஜயர், "தபோதனரே! பிரபாஸதீர்த்தத்தை அடைந்து பாண்டவர்களும் வ்ருஷ்ணிகளும் என்ன செய்தார்கள்? அந்த இடத்தில் இவர்களுக்கு என்ன பேச்சுக்கள் நடந்தன? வ்ருஷ்ணிகளும் பாண்டவர்களுமாகிய அவர்களெல்லாருமே மஹாத்மாக்களும் எல்லாச் சாஸ்திரங்களிலும் தேர்ச்சியடைந்தவர்களும் அன்னியோன்யம் நேசமுள்ளவர்களுமல்லவோ?" என்று வினவ, வைசம்பாயனர் சொல்லலானார் :

"வீரர்களான வ்ருஷ்ணிகள் கடலின்துறையும் புண்ணியமானதுமான பிரபாஸதீர்த்தத்தை அடைந்து பாண்டவர்களைச் சூழ்ந்திருந்தார்கள். பிறகு, பசுவின்பால், குருக்கத்திப்பூ, சந்திரன், தாமரைத் தண்டு, வெள்ளி இவைகளின் ஒளிபோன்ற ஒளியுடையவரும் வனமாலையை அணிந்தவரும் கலப்பையை ஏந்தியவருமான ராமர், தாமரைக்கண்ணரான கோவிந்தரைப் பார்த்து, 'க்ருஷ்ணா! செய்யப்பட்ட தர்மம் ஜீவனுக்கு நன்மைக்கு ஆவதில்லை; செய்யப்பட்ட

---

1 'துக்காத்திஜம்' என்பது மூலம்.

அதர்மமும் தீமைக்கு ஆவதில்லை. ஏனெனில், மஹாத்மாவான யுதிஷ்டிரர் மரவுரி உடுத்துச் சடை தரித்துக் கானகத்தை இருப்பிடமாகக் கொண்டு வருந்துகிறார்; துர்யோதனனும் பூமியை ஆளுகிறான்; இவனுக்கு (தேகம் மறைந்துபோவதற்கு) பூமியும் (வெடித்து) இடந்தரவில்லையன்றோ? அல்பபுத்தியுள்ள மனிதன் தர்மத்தைக் காட்டிலும் செய்யப்பட்ட அதர்மமே பெரிதென்று எண்ணுவான். துர்யோதனன் விருத்தியடைந்தும் யுதிஷ்டிரரும் ஸுகமில்லாமல் நாடு கவரப்பட்டுமிருக்கும்பொழுது, [1] இவ்விஷயத்தில் ப்ரஜைகளால் யாது செய்யத்தக்கதென்று மனிதர்களுக்கு, சாஸ்திரத்துக்கும் அனுபவத்துக்கும் விரோதமிருந்ததலால், தர்மாதர்மங்களுள் எது சிறந்ததென்னும் ஐயம் உண்டுபண்ணப்பட்டுவிட்டது. தர்மதேவதையின் புத்ரரும் தர்மத்தில் நிலைபெற்றவரும் ஸத்யத்தைத் தரித்தவரும் மிக்க கொடையாளரும் குந்திபுத்ரருமான அப்படிப்பட்ட இந்த அரசர் ராஜ்யத்தினின்றும் ஸுகத்தினின்றும் விலகினாலும் விலகலாம். தர்மத்தைவிட்டு விலகுவாராயின் எவ்வாறு வ்ருத்தி அடைவார்? பீஷ்மரும் க்ருபரும் பிராம்மணரான த்ரோணரும் குலத்தில் பிராயமுதிர்ந்தவரான (திருதராஷ்டிர) ராஜரும் பாண்டவர்களைத் துரத்திவிட்டு எவ்வாறு ஸுகத்தை அடைகிறார்கள்? கெட்ட எண்ணமுள்ளவர்களான பரதகுல முக்யர்களை நிந்திக்கவேண்டும். பூமியை முக்கியமாகக்கொண்ட பாவியான த்ருதராஷ்டிரர் குற்றமற்றவர்களான புத்திரர்களை ராஜ்யத்தினின்று இறங்கச்செய்து, பரலோகத்தில் பிதருக்களை அடைந்து, 'புத்திரர்கள் விஷயத்தில் நான் நன்கு நடந்துகொண்டேன்' என்று எதைத்தான் சொல்லுவார்? இவர், 'நான் எந்த(ப் பாவத்தைச்) செய்து பூமியில் அரசர்களுள் இவ்வண்ணம் பொட்டையனாகப் பிறந்தேனோ' என்றும், 'குந்திபுத்ரனை ராஜ்யத்தினின்று துரத்தி (இன்னும்) எப்படிப்பட்டவனாவேனோ' என்றும் இப்பொழுது புத்தியினால் கண்டறியவில்லை. 'அந்தோ! விசித்ரவீர்யருடைய குமாரரான த்ருதராஷ்டிரர் புத்திரர்களுடன் கூடினவராகி இகழத்தக்க கார்யத்தைச் செய்து பிதருலோக பூமியில் நிறைந்திருப்பவைகளும் மிகப் பூத்திருப்பவைகளுமான மரங்களைத் [2] தங்க நிறமுள்ளவைகளாகக் காண்கிறார்; இது நிச்சயம். ஏனெனில், அந்த த்ருதராஷ்டிரர் ஸந்தேகமுள்ளவராகி ஆயுதமெடுத்த யுதிஷ்டிர

1 பொருந்தாமையால் அதிக பாடமான அரைச்லோகம் விடப்பட்டது.

2 மரணம் நெருங்கியதைத் தெரிவிக்கும் குறிப்பு.

யைத தம்பிமார்களுடன் காட்டிற்குப் புறப்பட்டுப்போகும்படி செய்தார். அவர் இந்தப்பாண்டவர்கள் அகன்று உயர்ந்த தோள்களை உடையவர்களும் நீண்டு சிவந்த கண்களுள்ளவர்களுமாயிருப்பதைக் கேட்டறிந்து [1]மனமுடைந்துபோகிறார்; நிச்சயம். நீண்ட கைகளுள்ள இப்படிப்பட்ட எந்தப் பீமஸேனன் ஆயுதமில்லாதவனாகவே நிறைந்திருக்கின்ற பகைவர்களுடைய படையைக்கொல்வனோ எந்த வ்ருகோதரனுடைய சபதத்தைக்கேட்டே (பகைவர்) சேனைகள் ஜலமலங்களை விடுமோ, பசியினாலும் தாகத்தினாலும் வழிநடையினாலும் இளைத்திருப்பவனான அவன், (போரில்) எதிர்த்துப் பலமுள்ளவனும் பலவித ஆயுதங்களையும் அம்புகளையும் கையில் கொண்டவனுமாகி மிக்க கோரமான இந்த வனவாஸத்தை நினைந்துக்கொண்டு (பகைவரை) மிச்சம் வைக்கமாட்டான் என்பது எனது நிச்சயம். வீர்யத்தாலும் பலத்தாலும் இவனுக்குச் சமமான வேறொருவன் பூமியிலேயே இல்லை. குளிரினாலும் காற்றினாலும் வெய்யிலினாலும் மெலிவிக்கப்பட்ட அங்கங்களுள்ள அவன் போரில் பகைவர்களில் மிச்சம் வைக்கமாட்டான். அதிரதனும் பலமுள்ளவனுமான எந்தப் பீமஸேனன் கீழ்த்திசையில் பரிவாரங்களுடன்கூடின அரசர்களை யுத்தங்களில் ஒரே ரதத்தினால் ஜயித்து க்ஷேமத்துடன் திரும்பிவந்தானோ அப்படிப்பட்ட இவன் மரவுரியுடுத்துக் கானகத்தில் துன்பப்படுகிறான். எவன் ஸிந்து நதியின் கரையில் எதிர்த்துவந்தவர்களும் பூமிகாவலர்களுமான தென்னாட்டரசர்களை வென்றானோ சிறந்தபலமுள்ளவனான அப்படிப்பட்ட இந்த ஸஹதேவன் இப்பொழுது தாபஸர்களுடைய வேஷமும் உருவமுமுள்ளவனாயிருப்பதைப் பாருங்கள். எதிர்த்துப் போர்செய்வதில் வல்லவனான எந்தவீரன் மேற்றிசையிலசென்று யுத்தத்தில் அரசர்களை ஒரே தேரினால் வென்றானோ அப்படிப்பட்ட இந்த நகுலன் இந்தக்காட்டில் அழுக்கினால் பூசப்பட்ட மேனியுடனிருப்பதைப் பாருங்கள். எவள் அதிரதனான த்ருபதராஜனுடைய நிறைந்த யாகத்தில் (அவனுக்குப்) புத்திரியாக வேதியிலிருந்து எழுந்தாளோ, ஸுகத்துக்குத் தகுதியுள்ளவளும் பதிவ்ரதையுமான அப்படிப்பட்ட இவள் இப்பொழுது காட்டில் மிகவும் துக்கமான இந்த வாஸத்தை எப்படிப் பொறுக்கிறாள்? ஸுகத்துக்குத் தக்கவர்களான (அறம் பொருள் இன்பமென்னும்) த்ரிவர்க்கத்துள் முக்யனான அறக்கடவுள், வாயு, இந்திரன்,

1 'ரூரோதி' என்பது 'ரூரோதி' என்று திருத்தப்பட்டது.

அம்ஸவினிதேவர்கள் ஆகிய இந்தத் தேவர்களுடைய புதல்வர்கள் ஸுகத்தை இழந்து எப்படித்தான் காட்டில் ஸஞ்சரிக்கின்றார்கள்? தாமபுத்திரர் ஜயிக்கப்பட்டும் மனைவியுடனும் ஸகோதரர்களுடனும் பரிஜனங்களுடனும் துரத்தப்பட்டும் துர்யோதனனும் விருத்தி யடைந்தும் வருகையில், மலைகளுடன் கூடிய பூமியானது எப்படித் துயரப்படாமலிருக்கும்?' என்று சொன்னார்.

---

நூற்றிருபத்தோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(ஸாத்யகி பாண்டவர்களை எதிர்பாராமல் தாங்களே துர்யோதனாதி யரைக்கொன்று பாண்டவர்களின் வனவாஸ முடியும்வரையில் அபிமன்யுவுக்கு ராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ் செய்ய வேண்டுமென்றதும், கோவிந்தர் பாண்டவர்கள் பிறர் தோள்வலிமையை அடுத்துப் பிழையா ரென்பதையும் அவர்களுடைய மற்றக் குணங்களையும் சொல்லி அதனைத் தடுத்ததும்.)

ஸாத்யகி, 'ராமரே! புலம்புவதற்கு இது காலமன்று. யுதிஷ்டிரர் ஒன்றையும் சொல்லவில்லையாயினும் இந்தச் சமயத்தில் எது மேல் செய்யப்படவேண்டுமோ அதையே எல்லோரும் காலம் கடவாமல் செய்வோம். உலகத்தில் இப்பொழுது எவர்கள் நாதனுள்ளவர்களாக இருக்கிறார்களோ அவர்கள் தாமே தம் காரியத்தைத் தொடங்குகிறதில்லை. ராமரே! [1] யயாதியினுடைய கார்யங்களில் சிபி முதலியவர்கள் நாதரானதுபோல அவர்களுடைய கார்யங்களில் (உறவினர்) நாதராகிறார்கள். ராமரே! அப்படியே உலகத்தில் எவர்களுடைய கார்யங்களை நாதர்கள் தம் இஷ்டப்படி தொடங்குகிறார்களோ, நாதனுள்ளவர்களும் ஆண் பிள்ளைகளுள் சிறந்த வீரர்களுமான அவர்கள் நாதனற்றவர்கள்போலக் கஷ்டத்தை அடையார். இந்த ராமக்ருஷ்ணர்களும் என்னோடு சேர்ந்தவர்களான ப்ரத்யும்னனும் ஸாம்பனும் ஆகிய த்ரிலோகநாதர்களை (நாதர்களாக) அடைந்தும் [2] பிருதாபுத

---

[1] ஆதிபர்வம் 320-ம் பக்கத்திலும், உத்யோகபர்வம் 405-ம் பக்கத்திலும் பார்க்க. [2] 'பார்த்தா:' என்னும் பன்மை உயர்வுபற்றி வந்தது.

ரர் தம்பிமார்களுடன் ஏன் காட்டில் வாஸம்செய்கிருர்? இப்பொழுது தசார்ஹசேனையானது ஏராளமான பலவித ஆயுதங்களும பலவித கவசங்களும் தரித்து நன்கு புறப்படவேண்டும். துர்யோதனன் பந்துக்களுடன வ்ருஷ்ணிகளின் படையால் அடிக்கப்பட்டு யமலோகததைக் குறித்துச் செல்லககடவன. நீரோ கோபததால இந்தப் பூமியைச சுருட்டிவிடுவீர். சார்ஙகததை வில்லாககொணட கிருஷ்ணர் இருக்கட்டும தேவாகளுக்குப் பதியான மகேந்திரன விருததிரனைக் கொனறதுபோல, அப்படிப்பட்ட நீர் துரியோதனனை உறவினாகளுடன கொல்லக்கடவீர். [1] மனிதர்கள் எதற்காகப் பிரதிகூலமாகப் பேசாதவர்களான நல்ல புத்திரனையும் சிஷ்யனையும் குருவையும் விரும்பினர்களோ அநதவிஷயத்தில், (அந்தப் பிள்ளை முதலியோர்), யதனமபண்ணப்பட்டதும் சிறந்ததும முதன்மையானதும் செய்தற்கரியதுமான அந்தக்காரியததைச் செய்கின்றனர். எந்தப் பாரத்தன் எனக்கு ப்ராதாவும் தோழனும் குருவும கோவிந்தருக்கு ஆதமாவைப் போன்றவனுமாயிருக்கிருனே அவனுக்காக நிகரற்ற கர்ணன் முயற்சியுள்ளவனைத் தடுக்கமுடியாத அஸ்திரததை (ஸிததம) செய்கிறன். ராமரே! நான் அநதக் கர்ணனுடைய எல்லா அஸதிரவர்ஷங்களையும் சிறந்த அஸ்திரங்களால் நொறுக்கி யுதததத்தில் தோற்கச் செய்து, ஸர்ப்பங்களுக்கும் விஷததிற்கும் நெருப்புக்குமொப்பான சிறந்த அம்புகளால் அவனுடைய சரீரத்தினின்று தலையைக் கொய்வேன். போரில் நான் கூர்மையுள்ள கததியினுல் அவனுடைய தலையை உடலிலிருந்து வலிய அறுத்து, அதன்பிறகு, அவனைத் தொடர்ந்துவந்த எல்லோரையும் துர்யோதனனையும் கௌரவர்களனைவரையும் கொல்வேன. ரோஹிணியின் புதல்வரே! யுததத்தில் பயங்கரமான கார்யங்களைச் செய்கிற வீரர்கள் ஸந்தோஷமுள்ளவர்களாகி, இந்த விஷயத்தில் ஆயுதமெடுத்தவனும் தனித்திருப்பவனும் கௌரவயுத்தவீரர்களுள் முக்கியமானவர்களைக் கொல்லுகின்றவனுமான என்னை முடிவுக்காலத்தில் பெருமபுதரை எரிக்கிற நெருப்பைப்போலப் பார்க்கக்கடவர். கிருபரும் தரோணரும் விகர்ணனும் கர்ணனும் பிரத்யும்னனால் விடப்படும் கூர்மையுள்ள பாணங்களைத் தாங்குவதற்குச் சக்தியுள்ளவர்களல்லர். கிருஷ்ண குமாரனை பிரத்யும்னன் எப்படி யுதததத்தில் நிற்பனே

1 பொருள் பொருந்தாமையால, இரணடுபேரலோகஙகள் முன்பின்னுக மாற்றிச் சிறிது வலிநது பொருள கொள்ளபபட்டன.

அப்படியே [1] உம்முடைய புத்ரனது வீர்யத்தையும் நீர் அறிவீர். ஸாம்பன், ஸாரதியுடனும் ரதத்துடனுமிருக்கும் துச்சாஸனனைக் கைகளால் வலிந்து மிக அடித்துக்கொல்லக்கடவன். யுத்தத்தில் அதிசஸாமர்த்தியமுள்ள ஜாம்பவதீபுத்திரனுக்குப் போரில் தாங்க முடியாதது ஒன்றுமில்லையன்றோ? பாலனான இந்தப்ரத்யும்னனால் சம்பரனென்னும் அஸுரனுடைய ஸைன்யமானது சௌர்யத்தால் துரத்தப்பட்டது. யுத்தத்தில் நிகரில்லாதவனும் சிங்கம்போன்ற வீர்யமுள்ளவனும் பாவியுமான அந்தச் சம்பரன், தனித்திருந்த இவனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். உருண்ட தொடை களை உடையவனும் மிகவும் நீண்டு பருத்த கைகளுள்ளவனுமான அச்வசக்ரன் யுத்தத்தில் இவனால் கொல்லப்பட்டான். யுத்தத்தில் எவன்தான் மஹாரதனான ஸாம்பனுடைய தேரை நேரில் எதிர்த்து வருவான்? மனிதன் முடிவுக்காலத்தில் யமனுடைய வசத்தை அடைந்து எவ்வாறு வெளிவரமாட்டானோ அவ்வாறே யுத்தத்தில் இவனுடைய வசத்தை அடைந்தும் எவன்தான் உயிரோடு மீண்டும் திரும்பிவருவான்? வாஸுதேவர் அம்புகளினுடைய நெருப்புக்குவியல்களால் மஹாரதர்களான அந்தத் துரோணரையும் பீஷ்மரையும் புத்திரர்களால் சூழப்பட்ட ஸோமதத்தனையும் எல்லாச்சேனைகளையும் எரிப்பார். ஆயுதங்களை எடுத்தவரும் உத்தமமான அம்புகளைக் கையில் பிடித்தவரும் சக்ரத்தை ஆயுதமாகக் கொண்டவருமான யுத்தத்தில் நிகரில்லாதவருமான கோவிந்தருடைய (பராக்ரமத்தைத்) தேவர்களுடன் கூடின எல்லா உலகங்களிலும் தாங்கக் கூடியது எது இருக்கிறது? மேலும், அநிருத்தனும், கத்தியையும் கேடகத்தையும் கையில் தாங்கினவனாகி, யாகங்களில் தர்ப்பங்களால் வேதியை(ப் பரப்புவது) போலப் புத்தியில்லாதவர்களும் கொல்லப்பட்டவர்களும் தலையறுக்கப்பட்டவர்களுமான திருதராஷ்டிர குமாரர்களால் இந்தப் பூமியை (பரப்பப்பட்டதாகச்) செய்யக்கடவன். கதன், உல்முகன், பாஹுகன், பானு, நீதன், யுத்தத்தில் சூரனும் சிறுவனுமான நிசடன், கடும்போர்செய்கின்றவர்களான ஸாரணன், சாருதேஷ்ணன் ஆகிய எல்லோரும் குலத்திற்குத்தகுந்த செய்கையை நன்கு வெளியிடக்கடவர். வ்ருஷ்ணிகள் போஜர்கள் அந்தகர்கள் இவர்களின் போர்வீரர்களுள் முக்கியர்களுடன் கூடியதும் சேர்ந்துவந்தது

1 'ஜயாத்மஜஸ்ய' என்பதும, 'ஜாநாமி' என்பதும, வேறு பாடம்; 'அபிமன்யுவினுடைய' என்பதும, 'அறிவேன்' என்பதும் பொருள்.

மான ஸாத்வத சூரர்களுடைய ஸேனையானது யுத்தத்தில் அந்த த்ருதராஷ்டிரபுத்திரர்களைக் கொன்று உலகத்தில் மிக்கபுகழை அடையட்டும். தர்மங்களை அனுஷ்டிப்பவரும் மிக்க மேன்மையுள்ளவரும் மஹாத்மாவுமான யுதிஷ்டிரர் சூதாட்டத்தில் குரு குலோத்தமரான [1] பீஷ்மரால் சொல்லப்பட்டவண்ணம் வனவாஸ வ்ரதத்தை நிறைவேற்றும் வரையில், அபிமன்யுவானவன் பூமியை ஆளக்கடவன். பிறகு, தர்மராஜர், நம்மால் பிரயோகிக்கப்பட்ட அம்புகளால் பகைவர்களை ஜயித்தவராகி, திருதராஷ்டிர புத்திரர்களற்றதும் கர்ணன் கொல்லப்பட்டதுமான பூமியை அனுபவிப்பார். இது வன்றோ நமக்குப் புகழைத்தரக்கூடிய மிகச்சிறந்த கார்யம்?' என்று சொன்னான்.

வாஸுதேவர், 'மாதவ! இது உண்மை என்பதில் ஐயமில்லை. தைர்யங் குறையாதவனே! உன்னுடைய வாக்கியத்தை நாம ஏற்றுக்கொள்ளுகிறோம். கௌரவஶ்ரேஷ்டர் தம கைகளால் ஜயிக்கப்படாத பூமியையோ எவ்விதத்தாலும் விரும்பமாட்டார். இந்த யுதிஷ்டிரர் காமத்தாலாவது பயத்தாலாவது லோபத்தாலாவது தம்முடையதர்மத்தை ஒருகாலும் விடமாட்டார். அதிரதர்களான பீமார்ஜுனர்களும் நகுல ஸஹதேவர்களும த்ருபதகுமாரியான இந்த க்ருஷ்ணையும் அப்படியே. விருகோதரனும் தனஞ்சயனுமாகிய இருவருமோ பூமியில் யுத்தத்தில் இணையில்லாதவர்கள். (அவர்களாலும்) மாத்ரீபுத்திரர்களாலும் முன்னிடப்பட்ட இவர் என் பூமிமுழுமையையும் ஆளமாட்டார்? எப்பொழுது மகாத்மாவான பாஞ்சாலராஜனும் கேகயனோடு சேர்ந்த சேதிராஜனும் நாமும் ஒன்றுசேர்ந்தவர்களாக யுத்தத்தில் பராக்கிரமத்தைச் செலுத்திப் போர்புரிவோமோ, அப்பொழுதே, பகைவர்கள் அனைவரும இரார்' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'மதுவம்சத்தவனே! நீ சொல்லுகிற இது ஆச்சர்யமன்று. எனக்கு முக்கியமாகக் காப்பாற்றத்தக்கது ஸத்யமே; ராஜ்யமன்று. கோவிந்தர் ஒருவர் என்னை உள்ளபடி அறிகிறார். கோவிந்தரையும் நான் உள்ளபடி அறிகிறேன். சினிகளுள் சிறந்த வீர! மாதவ! ஆண்பிள்ளைகளுள் சிறந்தவீரரான இவர் எப்பொழுது வல்லமையைக் காட்டுதற்குத் தகுந்தகாலத்தை அறிவரோ அப்பொழுதே நீயும் இந்தக் கேசவரும் யுத்தத்தில் துர்யோதனனை ஜயிப்பீர். இப்பொழுது, தசார்ஹவீரர்கள் திரும்பிப்போகக்கடவர்.

1 'குருஸத்தமேந' என்பது மூலம். 'குருகுலத்திற் சிறந்தவரான தம்மால்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

மானிட உலகத்துக்கு நாதர்களான நாதர்களால் நான் பார்க்கப் பட்டேன். அளத்தற்கரியவர்களான நீங்கள் தர்மத்தில் தவறுமை யைச் செய்யுங்கள். ஸுகமுள்ளவர்களும ஒன்றுசேர்ந்தவர்களு மான உங்களை மறுபடியும் பார்ப்பேன்' என்றுசொன்னார். அவர் கள் ஒருவரிடததொருவர் சொல்லிக்கொண்டும், அப்படியே, பிராய முதிர்ந்தவர்களை வணங்கியும, சிறுவர்களனைவரையும் தழுவியும், யாதவவீரர்கள் தங்கள் வீடுகளை அடைந்தார்கள். அந்தப்பாண்ட வர்களும் தீர்த்தங்களை ஒன்றன்பின் ஒன்றாகச் சென்றடைந்தார் கள். பிராதாக்களுடனும் வேலைக்காரர்களுடனும் கூடிய தர்மராஜர், வ்ருஷ்ணிகளை அனுப்பிவிட்டு, பிறகு, லோமசருடன்கூட, விதர்ப்ப ராஜனால விருத்திபணணப்பட்டதும நல்லதீர்த்தமுள்ளதும் புணய மானதுமான பயோஷ்ணி என்கிறநதியை அடைந்தார். மஹாதமா வான அவர் அபிஷவம் (=பிழிதல்) செய்யப்பட்ட ஸோமரசத துடன் கலந்த ஜலமுள்ள பயோஷ்ணியை அணுகி ஸந்தோஷமுள்ள வர்களான பிராம்மணஸ்ரேஷ்டர்களால் சிறந்த ஸ்தோத்திரங்களால் நன்கு துதிக்கப்படுகிறவராகி அந்தப் பயோஷ்ணியில் ஜலத்தை மட்டும் ஆகாரமாகக்கொண்டிருந்தார்.

---

## நூற்றிருபத்திரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசர் பயோஷ்ணியின் கரையில் கயன் யாகஞ்செய்ததையும் ச்யவனர் சர்யாதிக்கு யாகம் செய்வித்தது முதலியவற்றையும் சொல்லியதும், யுதிஷ்டிரர் ச்யவனருடைய சரித்திரத்தை விஸ்தாரமாகச் சொல்லவேண்டியதும்.)

லோமசர், 'அரசனே! இந்த இடத்தில் யாகம் செய்கின்ற கயனால் ஸோமத்தினால் இந்திரன் திருப்தி அடைவிக்கப்பட்டான். திருப்தியடைந்த அவன், ஸந்தோஷத்தை அடைந்தானென்று கேள்வி. இந்த இடத்தில் இந்திரனோடுசேர்ந்த தேவர்களும் ஸ்ருஷ்டி கர்த்தர்களும் மிக்க தக்ஷிணைகளுள்ள பலவித பெரியயாகங்களைச் செய்தார்கள். பிரபுவான ஆமூர்த்தரஜஸனென்கிற கயராஜனும் இந்த இடத்தில் ஏழு அஸ்வமேதங்களில் ஸோமரஸத்தால் இந்திரனைத் திருப்தியடையச்செய்தான். அவனுடைய ஏழுயாகங்களிலும், யாகத்

தில் இனறியமையாதவையும் மரததால் செய்யப்படுகின்றவையும் மண்ணால் செய்யப்படுகின்றவையுமான பொருள்களுள்ளிட்ட எல்லாமும் பொன்னால் செய்யப்பட்டிருந்தன. அவைகளுள், இவனுடைய யாகங்களில் உபயோகிக்கப்பட்ட [1] சஷாலங்கள், யூபஙகள, சமஸங்கள், ஸதாலிகள், [2] பாத்ரிகள், ஸருக்குக்கள், ஸ்ருவங்கள் ஆகிய ஏழும பிரஸித்தமானவை. ஒவ்வொரு யூபத்துக்கும ஏழு ஏழு சஷாலஙகள மேமேல இருந்தன. யுதிஷ்டிர! அவனுடைய யாகங்களில் பிரகாசிக்கின்ற பொன்மயமான யூபஙகளை இந்திரனுள்ளிட்டதேவர்கள் தூக்கி நட்டார்கள. அந்தக் கயராஜனுடைய அந்தச் சிறந்த யாகஙகளில் இந்திரன ஸோமரஸத்தாலும் பிராம்மணர்கள் தக்ஷிணைகளாலும மதமடைந்தார்கள். பிராம்மணர்கள் (எண்ணமுடியாமல் காரீ, தரோணம் என்னும் அளவுக் கருவிகளால்) அளந்து போடப்பட்ட (பொன்னுணயங்களைப்) பெற்றுக்கொண்டாாகள. மகாராஜனே! எப்படி உலகததில மணலகளும் எபபடி ஆகாயததில் நக்ஷத்திரஙகளும் எப்படி பொழிகிற மேகததின தாரைகளும் ஒருவராலும எண்ணமுடியாதவைகளோ அப்படியே கயன அந்த ஏழுயஜ்ஞஙகளிலும் ஸதஸயர்களுக்குக் கொடுதத தனமும் எண்ணமுடியாதது. (என்னல்) சொல்லப்பட்ட இவை எண்ணக்கூடியவையாகலாம் புகழுள்ளவனன அவனுடைய தக்ஷிணைகள் எண்ணமுடியாதவை. பல திக்குக்களிலிருந்தும் வந்த பிராம்மணர்களை (அவன்) விஶ்வகர்மாவினுற செய்யப்பட்ட பொன்மயமான பசுக்களாலும் திருப்தியடையச் செய்தான். பிரஜைகளுககு நாதனே! பூமியானது ஆங்காங்கு யாகம செய்கின்ற கயனுடைய யாகவேதிகளால நிறைககபபட்டுச் சிறிதே மிச்சமிருநதது. பாரத! அவன அநதக் கர்மாவினுல் இந்திரனுடைய உலகங்களை அடைந்தான. பயோஷ்ணியில் ஸநானம் செய்பவன் அவனுடைய ஸாலோக்யததை அடைவான். ராஜஶ்ரேஷ்டனே! தாமந்தவருதவனே! பூமியைக்காப்பவனே! ஆகையால், நீ பிராதாக்களுடன் சேர்ந்து இநதப் பயோஷ்ணியில் ஸ்நானம் செய்தால் பாவங்களை உததறினவனுவாய்' என்று சொன்னர். புருஷஶ்ரேஷ்டரான அவர் பிராதாக்களுடன் பயோஷ்ணியில் [3] ஸநானம் செய்தார். பாண்டவஶ்ரேஷ்டரான அநத அரசர், பிறகு, வைதூர்யபர்வததை யும் நர்மதை

---

1 உதயோகபர்வம் 468-469-ம் பககஙகளின் குறிபபில் காணக சஷாலம் = யூபகடகங்கள். 2 பாத்திரிகள் = ஹவிஸ்ஸைவைககிற பாதரஙகள்.

3 'ஸ்நாதவா' என்பது மூலம்.

என்கிற மகாநதியையுங் குறித்துப் புறப்பட்டார். தோஷமற்றவரே! தேஜஸ்வியான அவர், தம்பிமார்களுடன் சேர்ந்து, (வைதூர்யபர்வ தத்தை) வந்தடைந்தார். பகவானான லோமசரிஷியானவர், அங்கே இந்த யுதிஷ்டிரருக்கு ரமணீயமான எல்லாத் தீர்த்தங்களையும் புண்ய மான ஆயதனங்களையும் கூறினார். அவர், தம்பிமார்களோடுகூடி, சேர்க்கைக்குத் தக்கபடியும் விருப்பத்துக்குத் தக்கபடியும் சென்றார். அந்த அந்த இடங்களில் பிராம்மணர்களுக்கு ஆயிரம் ஆயிரமாகத் தனத்தைக்கொடுத்தார். லோமசர், 'கௌந்தேய! ஒருவன் வைதூர்ய பர்வதத்தைப் பார்த்தும் நர்மதையில் நீராடியும் தேவர்கள் அரசர்கள் ஆகிய இவர்களின் ஸாலோக்யத்தை அடைகிறான். நரஶ்ரேஷ்டனே! இது த்ரேதை த்வாபரம் இவற்றின [1] ஸந்தி. குந்தீபுத்ரனே! இதை அடைந்தால் மனிதன் எல்லாப் பாவங்களாலும் விடப்படு கிறான். ஐயா! மஹாபாக்யமுள்ளவனே! எந்த இடத்தில் இந்திரன் அஶ்வினீதேவர்களுடன் நேராகவந்து ஸோமபானம் பண்ணினானோ, மஹா தபஸ்வியான ச்யவனரும் மஹேந்திரன் விஷயத்தில் கோபம் கொண்டாரோ, பிரபுவான சயவனர் அந்த இந்திரனை அசைவற்று நிற்கும்படியும் செய்தாரோ, அவர் ஸுகன்யை என்கிற ராஜபுத் திரியையும் பார்யையாக அடைந்தாரோ, அஶ்வினீதேவர்களை ஸோமபானம் செய்கிறவர்களாகவும் செய்தாரோ, சர்யாதியினது யாகம் நடந்த அந்த இடம் இதோ விளங்குகிறது' என்று சொல்ல, யுதிஷ்டிரர், 'பகவானான அந்த இந்திரன் அவரால் எவ்வாறு ஸ்தம் பனம் செய்யப்பட்டான்? மஹா தபஸ்வியான ச்யவனரும் எதற்காகக் கோபங்கொண்டார்? பிராம்மணரே! அஶ்வினீதேவர்களை எப்படி ஸோமபானம் செய்பவர்களாகச் செய்தார்? பகவானான (தேவரீர்) இவை அனைத்தையும் எனக்கு நடந்தபடி சொல்லக்கடவீர்' என்று வினவினார்.

---

1 'ஸந்தி ஃ' என்பது மூலம். 'ஸந்திகாலம்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

நூற்றிருபத்துமூன்றாவது அத்யாயம்

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(ஸுகன்யோபாக்யானம்; சர்யாதிராஜன் பரிவாரங்களுடன் ச்யவனருடைய ஆஸ்ரமத்துக்கு வந்ததும், அங்கே அவன் மகளான ஸுகன்யை நெடுங்காலமாகத் தவத்திலிருக்கிற ச்யவனருடம்பில் வளர்ந்திருக்கும் புற்றைக் கண்டு ச்யவனருடைய கண்களை அறியாமையால் குத்தியதும், பிறகு ச்யவனர் கோபந்தணிதற்காகச் சர்யாதி ஸுகன்யையை அவருக்கு மனைவியாகக் கொடுத்ததும்.)

பாரத! பிருகுமஹரிஷிக்கு ச்யவனரென்னும்புத்ரர் உண்டானார். மிக்க காந்தியுள்ளவரான அவர் இந்த ஸரஸினருகில் தவம்செய்தார். பாண்டவ! அரசனே! மிக்க ஒளியையுடைய அவர், வீராஸனத்துடன் கம்பம் போன்றவராகி ஓரேயிடத்தில் நெடுங்காலம் இருந்தார். அரசனே! ரிஷியானவர், வெகுகாலம் செல்லவே, கொடிகளால் நன்கு சுற்றப்பட்ட (மரம்) போலப் புற்றோடு கூடியவரும் 1 கறையான்களால் நிரம்பினவரும் ஆனார். புத்திமானான அவர், அப்படி மண்முட்டுப்போல எல்லாப்பக்கங்களிலும் சூழப்பட்டவரானார்; புற்றினால் சூழப்பட்டுப் பயங்கரமான தவம் செய்தார். பிறகு, நெடுங்காலத்துக்குப் பின், சர்யாதி என்கிற அரசன் விளையாடுதற்காக இனிமையான இந்தச் சிறந்த ஸரஸுக்கு வந்தான். பாரத! அவனுக்கு நாலாயிரம் ஸ்திரீகள் மனைவிகளாக இருந்தார்கள் அழகிய புருவங்களுள்ள ஸுகன்யை என்கிற ஒரே புத்ரி இருந்தாள். திவ்யாபரணங்களாலலங்கரிக்கப்பட்ட அவள், தோழிகளால் சூழப்பட்டு உலாவுகின்றவளாகி, ச்யவனருடைய புற்றை அடைந்தாள். தோழிகளால் சூழப்பட்ட அவள் அங்கே மனத்தை மிக மகிழ்விப்பதான பூமியைப் பார்த்துக்கொண்டும் மரங்களிலிருந்து மலர்களைப் பறித்துக்கொண்டும் விளையாடினாள். அவள் ரூபத்தாலும் பிராயத்தாலும் மன்மதனாலும் மதத்தாலும், மிகப் பூத்திருக்கிற காட்டிலுள்ள மரங்களின் கிளைகளை ஒடித்தாள். புத்திமானான ச்யவனர், ஸகிகளால் விடுபட்டவளும் தனித்திருப்ப

1 'பிபீலிகை:' என்பது மூலம்.

வளும ஒற்றையாடை யுடுத்தவளும் அலங்கரிக்கப்பட்டவளுமான அவளை, ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற மின்னலைப்போலக் கண்டார். மிக்க காந்தியுள்ள அவர், ஜனங்களில்லாத இடத்தில் அவளைப் பார்த்து ஆனந்தமடைந்தார். குரலமெலிந்தவரும் தபோபலத்துடன் சேர்ந்தவருமான பிரம்மரிஷியானவர் மங்களசரியான அவளுடன் பேசினார். அவளுக்கு இவருடைய சொல் கேட்கவில்லை. பிறகு, ஸுகன்யையானவள், புற்றில் ச்யவனருடைய கண்களைப் பார்த்து, அறிவு மயக்கத்தால் வலிமை செய்யப்பட்டவளாகி, குதூஹலத்தால், 'இது என்ன?' என்று சொல்லி, முள்ளினால் இவருடைய கண்களைக் குத்தினாள். அவ்வாறு நேத்திரங்கள் குத்தப்படவே, மிக்க கோபமுள்ள அவர் கோபமடைந்தார். அதன் பிறகு, சர்யாதியினது சேனையின் மலஜலங்களைக் கட்டிவிட்டார். பிறகு, மலஜலங்கள் தடுக்கப்பட்டவுடன், சேனையானது அதிகத் துயரமுள்ளதாயிற்று. அப்படி ஆனதைக்கண்டு, அந்த அரசன், (தன் பரிஜனங்களைப்பார்த்து), 'தவத்தில் எப்பொழுதும் நிலைபெற்றவரும் பிராயமுதிர்ந்தவரும் மிக்க கோபமுள்ளவரும் மஹாத்மாவுமான ச்யவனருக்கு இப்பொழுது இங்கே தெரிந்தோ தெரியாமலோ யாரால் தீமை செய்யப்பட்டது? அதனை விரைவில் சொல்லுங்கள். தாமதம் கூடாது' என்று கேட்டான். ஸைனிகர்கள் அனைவரும், அரசனைப்பார்த்து, 'நாங்கள் தீமை செய்யப்பட்டதை அறியோம். நீர் இஷ்டப்படி எல்லா உபாயங்களாலும் அதனை அறிந்துகொள்ளும்' என்று சொன்னார்கள். பிறகு, அந்த அரசன் தானே நண்பர் கூட்டத்தை நயமாகவும் கடுமையாகவும் கேட்டான். அவர்கள் (ஒன்றையும்) அறியவேயில்லை. பிறகு, ஜலமல பந்தத்தினால் துன்புற்றதும் அசௌக்கியத்தால் வருந்துகிறதுமான அந்தச் சேனையைப்பார்த்தும் துன்பமுற்ற பிதாவைப் பார்த்தும், ஸுகன்யையானவள், 'நான் இந்த இடத்தில் ஸஞ்சரிக்கின்றவளாகிப் புற்றில் எதிரில் ஜ்வலிக்கின்ற ஒரு பிராணியைக் கண்டேன். நான் அதனை மின்மினிப்பூச்சி போன்றது என்றெண்ணி அருகில் சென்று குத்திவிட்டேன்' என்னும் இதனைச் சொன்னாள். இதனைக் கேட்டு, சர்யாதி விரைவாகப் புற்றைநோக்கிச்சென்றான். அதில் சந்திரனும் சூரியனும் போன்ற ஒளியுள்ளவரான தவமுதியவரைக் கண்டான். பிறகு, அரசன், கைகூப்பிக்கொண்டு, 'ஸ்வாமி! அறியாமையால் உமக்குச் செய்ததைப் பொறுக்கக்கடவீர்' என்று வேண்டினான். பிறகு, ப்ருகுவின்

புதல்வரான ச்யவனர், அப்பொழுது அரசனைப்பார்த்து, 'அகங்காரத்தால் நிறைந்த இந்தப் பெண்ணால் நான் அவமதிப்பினால் குத்தப்பட்டேன். வேந்தனே! பூபதியே! ரூபத்துடனும் காம்பீர்யத்துடனும் கூடியவளும் லோபத்தாலும் மோகத்தாலும் வசப்படுத்தப்பட்டவளுமான உன்னுடைய அந்தப்பெண்ணையே நான் மணம் புரிந்தால் பொறுப்பேனென்னும் இதனை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்' என்றார். ரிஷியினுடைய வசனத்தையறிந்து, சர்யாதி ஆலோசியாமலே மஹாத்மாவான அந்த ச்யவனருக்குப் பெண்ணைக் கொடுத்தான். பகவானான அவர் அந்தப் பெண்ணைக் கைப்பற்றி அருளுடசெய்தார். அருளைப்பெற்ற அரசனும் சேனைகளுடன் பட்டணத்திற்கு வந்தான். நிந்திக்கப்படாதவளான ஸுகன்னியும், தவசியைக் கணவராக அடைந்து, அன்புடனும் தவத்துடனும் அடக்கத்துடனும் (அவருக்குத்) தினந்தோறும் பணிசெய்யத்துவங்தாள். அஸூயை இல்லாதவளும் அழகிய முகமுள்ளவளுமான அவள் அக்னிகளுக்கும் அதிதிகளுக்கும் விரைந்து பணிசெய்து ச்யவனரை நன்கு ஆராதித்தாள்.

---

## நூற்றிருபத்துநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(ஸுகன்யோபாக்யானம்; ச்யவனாச்ரமம் வந்த அச்விநீதேவர்கள் ஸுகன்னியைத் தங்களுக்கு மனைவியாக வேண்டினதும், அவள் மறுக்க, அவர்கள் ச்யவனருக்கு அழகையும் யௌவனத்தையும் தம்மோடொத்த வடிவத்தையும் தருவோமென்றும் அப்பொழுது ஒத்தவடிவமுள்ள தம் மூவருள் ஒருவரை மணக்கவேண்டுமென்றும் அவளுக்குச் சொல்லியதும், பர்த்தாவின் கட்டளையால் அவள் சம்மதிக்க, அவர்கள் ச்யவனருடன் குளத்தில் முழுகி ஒத்தவடிவத்துடனெழுந்ததும், அவள் அம்மூவருள் ச்யவனரையே வரித்ததும், அவர் அச்விநீதேவர்களுக்கு யாகத்தில் ஸோமரஸம் கொடுக்கச் செய்வதாக உறுதி கூறியதும்.)

வேந்தே! சிலகாலம் சென்றபிறகு, அச்விநீ தேவர்கள், ஸ்நானம் செய்தவளும் (ஆடையால்) மறைக்கப்படாதவளுமான

அந்த ஸுகன்னியைக் கண்டார்கள். பார்த்தற்கு இனிய அங்கங்களுள்ளவளும் தேவராஜனுடைய புதல்வியைப போன்றவளுமான அவளைப்பார்த்து, நாஸத்யாகளென்கிற அச்வினீதேவர்கள் எதிரில் ஓடிவந்து, 'அழகிய தொடைகளுள்ளவளே! நீ யாருடையவளாக இருக்கிறுய்? இந்தக காட்டில என்ன பண்ணுகிறுய்? கல்யாணி! உன்னை அறியவிரும்புகிறேும். அழகியே! உண்மையைச் சொல்' என்கிற இதனைச சொன்னுர்கள். பிறகு, ஸுகன்னி, (ஆடையைச) சுற்றிக்கொணடு, அந்தத தேவஸ்ரேஷ்டர்களைப்பார்தது, 'என்னை நீஙகள் சர்யாதியின புதல்வியென்றும் ச்யவனருடைய மனைவி என்றும் தெரிநதுகொள்ளுங்கள். இந்த மானிடவுலகத்தில் நான ஸுகன்னி என்கிற பெயர்பெற்றவள். அப்படிப்பட்ட நான் எல்லா விதங்களாலும் எப்பொழுதும பர்ததாவையே அனுசரிததவள்' என்று சொன்னுள். அதன்பிறகு, அச்வினீதேவர்கள், சிரிததுக்கொணடு, மறுபடியும் அந்தப்பெண்ணைப்பார்த்து, 'கல்யாணி! நீ எப்படி பிதாவினுல கொடுக்கபபட்டு வனத்தில் வநதிருககிறுய்? பயநதவளே! இந்த வனததில நீ பிரகாசிக்கிற மின்னலபோல் விளஙகுகிறுய். அழகுள்ளபெண்ணே! தேவர்களுள்ளும் உனககு ஸமமாக இருப்பவளை நாங்கள் பார்ககவில்லை. கல்யாணி! ஆபரணங்களில்லாதவளும சிறநதஆடை தரியாதவளுமான நீ, அலங்கரிக்கப்படாதவளாக இருந்தும், கானகத்தை அதிகமாகப் பிரகாசிக்கச் செய்கிறுய். குற்றமற்ற அவயவங்களுள்ளவளே! எல்லா ஆபரணங்களாலும அலஙகரிககப் படடுச் சிறந்த வஸ்திரததை உடுததால் நீ பிரகாசிப்பாய். இவ்வண்ணம் அழுக்கும் சேறுமுள்ளவளாயிருந்தால் பிரகாசிக்கமாட்டாய். கல்யாணி! இப்படிப்பட்டவளாயிருந்தும், யாதுகாரணம்பற்றி, மூப்பினுல் தளர்ந்தவரும் காமபோகங்களுக்கு விலக்கானவருமான பதியை நீ அடுததிருக்கிறுய்? நிமலமான புன்சிரிப்புள்ளவளே! அப்படிப்பட்ட நீ, ரக்ஷிப்பதிலும் போஷிப்பதிலும் திறமை இல்லாத ச்யவனரை விட்டுவிட்டு, எங்கள் இருவருள் ஒருவரை வரிப்பாயாக. தேவகன்னிகைபோன்ற காந்தியுள்ளவளே! (இந்தப்) பதிக்காக உன் யௌவனததை வீணுகச் செய்யாதே' என்று சொன்னுர்கள்.

இவ்வாறு சொல்லக்கேட்ட ஸுகன்னியும், அந்தத் தேவர்களைப் பார்தது, 'நான் பர்த்தாவான ச்யவனரிடததில் பற்றுதலுள்ளவள். என்னைப்பற்றி இவ்வண்ணம் நீங்கள் சநதேகிக்கவேண்டாம்' என்னும் இதனைச் சொல்லினள். அவ்விருவரும் மறுபடியும் இவளைப்பார்தது, 'நாங்கள் சிறந்த தேவ வைத்தியர்கள். உன்னுடைய பதியை யௌ

வனமுள்ளவரும் அழகுபொருந்தியவருமாகச் செய்வோம். பிறகு, அவரும் நாங்களுமாகிய எங்களுள் ஒருவரைப் பதியாக வரிப்பாயாக. கலயாணி! இந்த உடன்பாட்டினால், இந்தப் பதியை ஆலோசித்துக் கொள்' என்று சொன்னார்கள. அரசனே! அவள் அவர்களுடைய வசனத்தினால ச்யவனரை அடைநது அவர்கள் அந்த ச்யவனரைப் பற்றிச சொல்லிய வாக்கியததைக் கூறினாள். அதனைக் கேட்டு, ச்யவனர், மனைவியை நோக்கி, 'செய்யலாம' என்று கூறினார். பிறகு, பர்ததாவினால அனுமதி கொடுககப்பட்ட அவள், 'செய்யலாம்' எனறு உரைத்தாள். 'செய்யலாம' எனகிற அவளுடைய அந்த வசனத்தை அஶ்வினீதேவர்கள் கேட்டு, அந்த ராஜபுத்திரியைப் பார்த்து; 'உன்னுடைய பதி ஜலததில் பிரவேசிககக கடவர்' என்று சொன்னார்கள. அதன பிறகு, சயவனர் ரூபத்தை விரும்பினவராகச சீக்கிரம் ஜலததில் பிரவேசிததார். அரசனே! அஶ்வினீதேவர்களும், அப்பொழுது அந்தத தடாகததில் பிரவேசிததார்கள். பிறகு, ஒரு முகூர்தத காலத்துக்குப் பின், அமமூவரும், 1 எல்லாருமே திவய ரூபததைத தரிததவர்களும யௌவனமுள்ளவர்களும் மெருகிட்ட குண்டலஙகளை அணிந்தவர்களும ஒதத வேஷததைப் பூண்டவர்களும மனததிற்குப் பிரியத்தைப் பெருககுகிறவர்களுமாகி, அந்தத தடாகத்தினின்று கரையேறினார்கள். அவர்களனைவரும், ஒன்று சேர்ந்தவர்களாக, 'கல்யாணி! மஙகளததை உண்டுபண்ணுகிறவளே! சிறந்த நிறமுள்ளவளே! எங்களுள் இஷ்டமான ஒருவரைப் பதியாயிருத்தலில வரிப்பாயாக. புகழுள்ளவளே! மிக விளங்குபவளே! நீ, அஶ்வினீதேவர்களுள் ஒருவரையாவது ச்யவனரையாவது, யாரிடத்தில விருப்பமுள்ளவளாக இருக்கிறாயோ அவரை வரிப்பாயாக' என்று சொன்னார்கள். அந்தத தேவி, ஒதத ரூபத்தைத் தரிதது நிற்கின்ற அவர்கள் எல்லாரையும் பார்தது மனத்தினாலும் புததியினாலும் நிச்சயிததுத் தன் பர்த்தாவையே வரித்தாள். ச்யவனரோ, மனைவியையும் விரும்பப்பட்ட வயதையும் ரூபததையும் அடைந்து மகிழ்ந்தவரும் மிக்க தேஜஸுள்ளவருமாகி அந்த அஶ்வினீதேவர்களைப்பார்தது, 'பிராய முதிர்ந்தவனாக இருந்த நான் உஙகளால் நல்ல ரூபம் பொருந்தியவனாகவும (யௌவனப்) பிராயததுடன் கூடியவனாகவும் செய்யப்பட்டு இவளையும் பார்யையாக அடைந்தேனாதலால், நான் ப்ரீதியினால் உங்களைத தேவராஜன் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே ஸோமரஸததைப் பருகுகிறவர்களாகச்

1 இரட்டிததலால் ஒருசொல் விடப்பட்டது.

செய்வேன். இது உண்மையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்' என்று சொன்னார். அவர்கள் அதனைக்கேட்டு மனமகிழ்ந்து ஸ்வர்க்கத்திற்குத் திரும்பிச் சென்றார்கள். ச்யவனரும் ஸுகன்னியும் தேவர்கள் போல இனிது வாழ்ந்தார்கள்.

---

## நூற்றிருபத்தைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(ச்யவனருடைய ஆஶ்ரமத்திற்குச் சர்யாதி வந்ததும், அவர் அவனுக்கு யாகம் செய்வித்ததும், அந்த யாகத்தில் அவர் அஶ்விநீதேவர்களுக்கு ஸோமரஸத்தைக் கொடுக்க முயல்கையில் இந்திரன் வஜ்ராயுதத்தை ஓங்கியதும், ச்யவனர் அவன் கையை ஸ்தம்பிக்கச் செய்து பிசாசை உண்டு பண்ணியதும், அது அவனிடம் சென்றதும்.)**

பிறகு, சர்யாதி, ச்யவனர் (யௌவனப்) பிராயத்திலிருப்பவராகச் செய்யப்பட்டதைக் கேட்டு மிகமகிழ்ந்து சேனையுடன் அவருடைய ஆஶ்ரமத்தை அடைந்தான். ச்யவனரும் ஸுகன்னியும் தேவகுமாரனும் தேவகுமாரியும் போலிருப்பதைப் பார்த்து, மனைவியுடனிருக்கும் சர்யாதி, பூமி முழுமையையும் அடைந்தாற்போல் மகிழ்ந்தான். அந்த ரிஷியினால் பூஜிக்கப்பட்டவனும் மனைவியுடனிருப்பவனுமான அரசன், அருகில் உட்கார்ந்துகொண்டு, சுபமானவையும் மனத்தை மகிழ்விப்பவையுமான பேச்சுக்களைப் பேசினான். அரசனே! பிறகு, ச்யவனர், அவனை நோக்கி, இன்சொற்களைச் சொல்லிக்கொண்டு, 'அரசனே! நான் உனக்கு யாகத்தைச் செய்விப்பேன். யாகத்துக்குரிய பொருள்களைச் சித்தஞ்செய்வாயாக' என்று சொன்னார். மஹாராஜனே! பிறகு, சர்யாதிமகாராஜன் மிக்க மனக்களிப்புற்று ச்யவனருடைய அந்த வாக்கியத்தைப் புகழ்ந்தான். அவன், சிறந்ததும் யஜ்ஞத்திற்குரியதுமான தினத்தில் விருப்பிய எல்லாப்பொருளும் நிரம்பின உத்தமமான யாகசாலையைச் செய்வித்தான். அரசனே! அதில் பருகுகுமாரரான ச்யவனர் அவனுக்கு யாகத்தைச் செய்வித்தார். அந்த யாகத்தில் நேர்ந்த அதிசயங்களை என்னிடமிருந்து தெரிந்துகொள். அப்பொழுது, ச்யவனர் அஶ்விநீதேவர்களுக்காக

ஸோமத்தை எடுத்துவைத்தார். அவர்களுக்காகக் [1]கிரகத்தைச் செய்கிற அவரை அந்த இந்திரன் தடுத்தான்.

இந்திரன், 'இந்த அச்விநீதேவர்களிருவரும் ஸோமத்துக்குத் தகாதவர்களென்பது என் எண்ணம். இவர்கள் ஸ்வர்க்கத்தில் தேவர்களுக்கு வைத்யர்கள். அந்தச் செய்கையினால் தகாதவர்கள்' என்று சொன்னான். ச்யவனர், 'மஹேந்திரனே! என்னைத் தேவனைப்போல ஜரை இல்லாதவனாகச் செய்தவர்களும் மஹாத்மாக்களும் மிக்க அழகாகிய செல்வமுள்ளவர்களுமான அந்த நாஸத்யர்களை அவமதிக்காதே. உன்னையும் மற்றத் தேவர்களையும் தவிர, அவர்கள் யாது காரணத்தால் ஸோமத்தை அடையத் தகாதவர்கள்? தேவேந்திர! புரந்தர! அச்விநீதேவர்களையும் தேவர்களென்று நீ அறிவாயாக' என்று சொன்னார். இந்திரன், 'சிகித்ஸை செய்பவர்களும் நினைத்தவண்ணம் ரூபத்தை எடுப்பவர்களும் மனிதர்களுடைய லோகத்தில் ஸஞ்சரிப்பவர்களுமான வேலைக்காரர்கள் இங்கே எவ்வாறு ஸோமபானத்துக்குத் தகுதியுள்ளவர்கள்?' என்று சொன்னான். அப்பொழுது இந்த வாக்கியத்தையே இந்திரன் அடிக்கடி சொல்ல, ச்யவனர், இந்திரனை அலக்ஷ்யம் செய்து, பிறகு, ஸோமக்ரஹத்தைச் செய்தார். அப்பொழுது, அச்விநீதேவர்களுக்காக உத்தமமான ஸோமத்தை எடுக்கப்போகிற அவரைப் பார்த்து, தேவனான இந்திரன், 'இவர்களுக்காக நீர் ஸோமத்தை உம் இஷ்டப்படி கிரஹிப்பீராகில் கோர ரூபமுள்ளதும் தன்னிலும் சிறந்ததில்லாததுமான வஜ்ரத்தால் உம்மை அடிப்பேன்' என்கிற இந்த வசனத்தை உரைத்தான். இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பார்க்கவர், இந்திரனைப் பார்த்து நகைத்துக்கொண்டு, அச்விநீதேவர்களுக்காக விதிப்படி உத்தமமான ஸோமக்ரஹத்தைக் கிரகித்தார். பிறகு, இந்திரன் இவரைக் குறித்துக் கோரரூபமுள்ள வஜ்ராயுதத்தை எறிந்தான். எறிகிற அவனுடைய கையை ச்யவனர் அசைவற்று நிற்கும்படி செய்தார். மிகப்பெரிய வல்லமையுள்ள அவர், அதனை ஸ்தம்பிக்கச் செய்து, தேவனான அவனைக் கொல்ல முயல்பவராகி [2] க்ருத்யையை உண்டுபண்ண விரும்பி மந்திரத்தினால் அக்னியில் ஹோமஞ்செய்தார்.

1 ஒவ்வொரு தேவதையையும் உத்தேசித்து, உரல் வடிவமாகச் செய்த மரப்பாத்திரத்தில் ஸோமரஸத்தை மந்திரத்துடன் எடுத்துவைத்துக்கொள்வது; க்ரஹம் = கிரஹித்தல் = எடுத்தல்.

2 காண்ட பர்வம் 446-ம் பக்கம் குறிப்பிலும், சாந்திபர்வம் 762-ம் பக்கம் குறிப்பிலும், இதன் 939-ஆம் பக்கம் குறிப்பிலும் பார்க்க.

பிறகு, அந்த முனிவருடைய தவ வலிமையினால் அந்த அக்னியி லிருந்து மிக்க வீர்யமுள்ளதும் பெரிய சரீரமுள்ளதும் மதமென் கிற பெயருள்ளதுமான பெரிய அஸுர ரூபியான க்ருத்யை உண்டா யிற்று. அதனுடைய சரீரமானது தேவர்களாலும் அஸுரர்களா லும் இவ்விதமென்று சொல்லப்பட முடியாமலிருந்தது. அத னுடைய வாயானது பயங்கரமாகவும் முனை கூர்மையான பற்களுள்ள தாகவும் பெரிதாகவுமிருந்தது. அதனுடைய ஒரு மோவாய் பூமியி லிருந்தது; மற்றொன்று ஆகாயத்தை அடைந்தது. நான்கு தெற் றுப்பற்கள் நூறு நூறு யோஜனம் நீண்டிருந்தன. அதனுடைய மற்றப் பற்கள் பத்து யோஜனை தூரம் நீண்டவைகளாகவும் மாளிகை களின் சிகரம்போன்ற வடிவமுள்ளவைகளாகவும் சூலாயுதத்தின் முனைபோன்ற தோற்றமுள்ளவைகளாகவும் இருந்தன. கைகள் பரிகாயுதம்போன்றவைகளாகவும் பதினாயிரம் யோஜனை நீளமுள்ள வைகளாகவும் ஒத்தவைகளாகவும் இருந்தன. இரு கண்களும் ஸூர்ய சந்திரர்கள்போலப் பிரகாசித்தன. வாயானது ஊழித தீப் போன்றிருந்தது. அந்தப் பிசாசானது மின்னல் அசைவதுபோல் அசைகின்றதும் ஆவலுள்ளதுமான நாவினால் வாயை நக்கிக்கொள்வ தும் வாயைத் திறந்துகொண்டதும் கோரமான கண்களுள்ளதும் உலகத்தை வலிமைசெய்து விழுங்குகின்றதுபோன்றதும் மிக்க கோபங்கொண்டதும் பயங்கரமாகத் தோற்றும் பேரொலியால் உலகங்களை எதிரொலியிடச் செய்வதுமாகி இந்திரனைத் தின்ன விரும்பி அருகில் ஓடியது.

---

நூற்றிருபத்தாறுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(இந்திரனால் துதிக்கப்பட்ட சியவனர் அவன்மீது ஏவின கிருத் யையைத் திருப்பி ஸ்திரீகள் முதலியவற்றில் பிரித்துவிட்ட தும், லோமசர் ஸுகன்யோபாக்யானத்தை முடித் துப் பல தீர்த்தங்களின் மகிமையைக் கூறியதும்.)

பிறகு, பயங்கரமான முகமுள்ளதும் யமன்போல் வாயைத் திறந்துகொண்டு வருகின்றதும் தின்னப்போவதுமான அந்த மதத் தைக்கண்டு, தேவனும் நூறு யாகங்களைச் செய்தவனும் அசை

யாதபடி செய்யப்பட்ட கையுள்ளவனும் பயத்தினால் அடிக்கடி கடைவாய்களை நக்குகிறவனும பயததினால் பீடிக்கப்பட்டவனுமான தேவராஜன், சயவனரைப் பார்தது, 'ப்ருகுநந்தனரே! இன்றுமுதல் இந்த அஸ்வினிதேவர்கள (யாகஙகளில) ஸோமபானததுககுத தகுதியுள்ளவர்களாவர். இந்த வசனம் உணமை. பிராமமணரே! என் விஷயததில் அருளபுரிவீராக. உம்முடைய நன்முயற்சி வீணாக வேணடாம். இநதச செய்கை சிறநததாகுக. பிரமமரிஷியே! நீர் பயனில்லாத கார்யததைச செயயமாட்டீர் என்று நான அறிகிறேன. பிராமமணரே! நீர் இந்த அஸ்வினிதேவர்களை இப்பொழுது ஸோமததைக குடிபபவர்களாகச் செய்ததுபோல என்னையும க்ஷேமத தோடு சேர்ககக கடவீர். பார்ககவரே! 'உம்முடைய வல்லமை அதிகமாகவே பிரகாசிக்கவேண்டும். ஸுகன்னியின் பிதாவான இவனுடைய கீர்த்தியும் உலகததில் ப்ரஸித்தியடையவேண்டும' என்னும் எணணததால உமமுடைய வலலமையைப் பிரகாசப்படுததக் கூடிய இநதக் கார்யம என்னால் செய்யப்பட்டது. ஆதலால், நீர் விரும்புகிறபடியே ஆகுக. என் விஷயத்தில் அருள் செய்வீராக' என்று சொன்னான். இநதிரனால இவ்வாறு சொல்லப்பட்ட மஹாத்மாவான ச்யவனருடைய அந்தக் கோபமானது விரைவில் போய்விட்டது. இந்திரனையும விடுவிததார்.

அரசனே! மிக்க வல்லமையுள்ள ச்யவனர் முன்பு படைத்த மதத்தையும், மதயபானததிலும் ஸ்திரீகளிடததிலும் பாச்சிகைகளிலும் வேட்டையிலும் மறுபடியும் மறுபடியும் பகுத்து வைத்தார். பேசுகிறவர்களுள் சிறந்த ச்யவனர், அப்பொழுது மதததை நன்கு அமைததுவிட்டு, இந்திரனையும அஸ்வினிதேவர்களுள்ளிட்ட தேவர்களையும் ஹோமததால் நன்கு திருப்தியடையச் செய்தும் அந்த அரசனுக்கு யாகததைச் செய்விததும் எல்லா உலகங்களிலும் தமது சக்தியைப் பிரஸிததப்படுததியும் ஒத்து நடப்பவளான ஸுகன்னியுடன் வனத்தில் இனிது வாழ்ந்து வந்தார். வேந்தனே! பக்ஷிகள் ஒலித்துக்கொண்டிருக்கிற அவருடைய தடாகமானது இதோ விளங்குகிறது. இதில் ஸகோதரர்களுடன் நீ பித்ருக்களையும் தேவர்களையும் தருப்தியடையச் செய்வாயாக. பாரத! வேந்தனே! இதனையும் ஸிகதாக்ஷத்தையும் தரிசித்து ஸைந்தவாரணயத்தை அடைநது [1] குல்

1 குல்யை = வெட்டபபட்ட வாய்க்கால், அல்லது சிறுஆறு.

யைகளுடைய தரிசனத்தைச் செய்வாயாக. மஹாராஜனே! எல்லாப் புஷ்கரங்களிலும் ஜலத்தில் ஸ்நானம் செய்வாயாக. பாரத! ஸ்தாணுவின் மந்திரங்களை ஜபித்து ஸித்தியை அடைவாய். நரஸ்ரேஷ்டனே! குந்திபுத்திரா! எல்லாப் பாவங்களையும் போக்கும் திறமையுள்ள த்ரேதை த்வாபரம் இரண்டின் ஸந்திக்குத் துல்யமான காலம் இதோ காணப்படுகிறது. இது எல்லாப் பாவங்களையும் போக்குவது. இதிலும் நீ ஸ்நானம் செய்வாயாக. கற்றறிந்தவர்களுக்கு இருப்பிடமானதும் எப்பொழுதும் பழங்களுள்ளதும் எப்பொழுதும் பிரவாகமுள்ளதும் தேவதைகளுடைய உத்தம ஸ்தானமுமான ஆர்ச்சீக பர்வதமும் இருக்கிறது. யுதிஷ்டிர! இதோ பலவிதமான தேவதைகளினுடைய யாகவேதிகளும் இருக்கின்றன. இந்தச் சந்திரதீர்த்தத்தை வைகானஸர்கள் முதலிய ரிஷிகளும் அப்படியே வாலகில்ய ரிஷிகளும் அடைகிறார்கள். புண்யமான முக்கோண வடிவமுள்ள வாராணஸியும் திரிவேணி ஸங்கமமான ப்ரயாகையும் இருக்கின்றன. எல்லாவற்றையும் முறையே பிரதக்ஷிணம் செய்து இஷ்டப்படி ஸ்நானம் செய்வாயாக. ராஜேந்திர! மன்னவ! இங்கே சந்தனுராஜனும் சுனக ராஜனும் நரநாராயணரிருவரும் ஸர்வதயானத்தில் பற்றுதலுள்ளவர்களாக நெடுங்காலம் தவம்புரிந்து அழிவற்ற ஸ்தானத்தை அடைந்தார்கள். யுதிஷ்டிர! இந்த ஆர்ச்சீக பர்வதத்தில் மஹரிஷிகளோடுகூடத் தேவர்களும் பித்ருக்களும் நித்திய வாஸம் செய்துகொண்டு தவம்புரிந்தார்கள். அவர்களை நீ பூஜிப்பாயாக. பிரஜைகளுக்கு அதிபதியே! இந்த இடத்தில் அந்த ரிஷிகள் சருக்களையும் புஜித்தார்கள். இந்த இடத்தில் யமுனையும் வற்றாத பெருக்குள்ளது; [1] கிருஷ்ணர் என்னும் வியாஸரும் தவம்புரிவதில் பற்றுதலுள்ளவர். பகைவர்களை அழிப்பவனே! பாண்டவ! நகுல ஸஹதேவர்கள், பீமஸேனன், திரௌபதி ஆகிய எல்லோரும் உன்னுடன்கூடவே இந்த இடத்தில் செல்வோம். மனிதர்களுக்கு அதிபதியே! எந்த இடத்தில், தாதாவும், விதாதாவும், வருணனும், மேலே வந்தார்களோ புண்யமான இந்திரனுடைய அந்த ப்ரஸ்ரவணதீர்த்தம் இது. அரசனே! சாந்தியுள்ளவர்களும், சிறந்த தர்மமுள்ளவர்களுமான அவர்களும் இங்கே வஸித்தார்கள். கபடமற்ற புத்தி

---

1 'க்ருஷ்ண:' என்பது மூலம்; 'கிருஷ்ணன்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

யுடையவர்களான மித்திரகுமாரர்களுடைய மங்களகரமான சிறந்த மலை இதோ இருக்கிறது. [1] வேந்தனே! மஹரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டதும், பலவித யாகங்களால் நிரம்பியதும புண்யமானதும் பாப பயத்தைப் போக்குகிறதுமான அந்த யமுனை இது. கௌந்தேய! இங்கே பெரியவில்லுள்ளவனும் அரசனுமான மாந்தாதாவும [2] ஸஹதேவன்மகனும் கொடுப்பவர்களுள் சிறந்தவனுமான ஸோமகனும் தாங்களே யாகஞ் செய்தார்கள்' என்று கூறினர்.

---

## நூற்றிருபத்தேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசர் மாந்தாதா என்னும் பெயர்க் காரணத்தையும் மாந்தாதாவின் சரித்திரத்தையும் கூறியது.)

யுதிஷ்டிரர், 'மஹாப்ராமமணரே! மூவுலகங்களிலும் பிரஸித்தி பெற்றவனும் அரசர்களுள் புலிபோன்றவனும் யுவனாஸ்வன் புத்ரனுமான மாந்தாதா என்னும் ராஜஸ்ரேஷ்டன் எவ்வாறு பிறந்தான்? எவனுக்கு, மூவுலகங்களும் மஹாத்மாவான விஷ்ணுவுக்கு வசப்பட்டிருந்ததுபோல் வசப்பட்டிருந்தனவோ, அளவிறந்த காந்தியுள்ள அந்த மாந்தாதா எவ்விதம் இந்தப் பெரும் புகழையும் பெற்றான்? தோஷமற்றவரே! மெய்யான கீர்த்தி பெற்றவனும் புத்திமானுமான அந்த மாந்தாதாவினுடைய இந்தச் சரித்திரம உம்மால் சொல்லப்படுவதை நான் கேட்க விரும்புகிறேன். இந்திரனுக்குச் சமமான ஒளியுள்ளவனும் நிகரற்ற வீர்யமுள்ளவனுமான அவனுக்கு மாந்தாதா என்கிற பெயரும் பிறப்பும் உண்டான விதத்தைச சொல்லுவதற்கு நீர் வல்லவர்' என்று வினவ, லோமசர் கூறலானர்.

'அரசனே! மஹாத்மாவான அந்த அரசனுக்கு உலகங்களில மாந்தாதா என்கிற பெயர் சொல்லப்படுகிற காரணத்தைக் கருத்துடன் கேள். யுவநாஸ்வனென்கிற அரசன் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவன். அந்த அரசன் மிகுதியான தக்ஷிணைகளுள்ள யாகங்

---

1 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

2 'ஸ்ருஞ்சயனுடைய பௌத்ரன' என்பது பழையவுரை.

களைச செய்தான். தர்மத்தை வளர்ப்பவர்களுள் சிறந்தவனான அவன் ஆயிரம் அஸ்வமேதங்களைச் செய்து மிக நிரம்பின தக்ஷிணைகளுள்ள முக்கியமான மற்ற யாகங்களையும் செய்தான். புததிரனில்லாதவனும் பெருந்தன்மையுள்ளவனுமான அநத ராஜரிஷி யானவன, மந்திரிகளிடம அநத ராஜ்யத்தை வைததுவிட்டுப் பெரிய விரதமுள்ளவனும் மனததை வென்றவனுமாகிச் சாஸ்திரங்களில் கண்ட விதிப்படி மனததைக் கடவுளிடம சேர்ததுத் தினமும் வனத தில் வசிததுக்கொண்டிருந்தான். வேந்தனே! அந்த அரசன் ஒரு ஸமயத்தில பட்டினியால் துன்பமுற்றவனாகவும் தாகத்தால் நெஞ் சுலர்ந்தவனாகவும் ப்ருகுவினுடைய ஆஸ்ரமததில் நுழைந்தான். ராஜஸ்ரேஷ்டனே! மகாத்மாவும் ப்ருகு நந்தனருமான மஹரிஷி யானவா ஸுதயும்னனுடைய குமாரனான (அந்த) யுவனாஸ்வனுககுப் புததிரோதபததிக்காக அதே இரவில ஓர் இஷ்டியைச செய்தார். ராஜேந்திரனே! அவனுடைய மனைவியானவள் பருகி இந்திரனுக்குச் சமனான புத்திரனைப் பெறுதற்குரியதும் மந்திரங்களால் பரிசுதத மானதுமான தீர்த்தத்தால் நிறைக்கப்பட்ட பெரிய குடம் முந்தியே அங்கேவைக்கப்பட்டிருந்தது. அரசனே! நன்கு ஸிததமசெய்யப்பட்ட அந்தத் தீர்ததம வைக்கப்பட்டிருநத கலசததை அந்த மகரிஷிகள் வேதியில் வைததுவிட்டு உறஙகினார்கள். தொண்டை யுலர்ந்தவனும், மிகவும் தாகததால் வருந்துகின்றவனுமான அநத யுவனாஸ்வராஜன் குடி தண்ணீரை விரும்பி, இரவில் விழித்திருந்ததனால் களைத்த அந்த ரிஷிகளைத் தாண்டி அந்த ஆஸ்ரமத்தில் நுழைந்து சாந்தனாகிக் குடி நீரை யாசிததான். அப்பொழுது, களைத்தவனும் பறவையின் ஒலி போல உலர்நததொண்டையால் அழைக்கிறவனுமான அவனுடைய குரல் ஒருவருக்கும் கேட்கவில்லை. பிறகு, அந்த அரசன் ஜலம் நிரம்பி யிருநத அநதக்குடத்தைப் பார்தது வேகத்துடன் அருகில் ஓடித் தண்ணீரைக் குடித்து (க்குடததை) எறிந்துவிட்டான். தாகத்தால் வருததப்பட்ட புத்திமானான அந்த அரசன் குளிர்ந்த நீரைக் குடித் துத் தாகசாந்தியை அடைந்து அப்பொழுது மிக்க ஸுகமுள்ளவனா னான். பிறகு, தபோதனர்களுடனிருக்கும் அந்த முனிவர்கள் விழித் துககொண்டார்கள். அவர்கள் எல்லாருமே அந்தக் கலசம் நீரில்லாம லிருப்பதைக் கண்டார்கள். அவர்கள் ஒன்றுசேர்ந்து, 'இது யாரு டைய செய்கை?' என்று வினவினார்கள். யுவனாஸ்வன், 'இவ்விதச்

செய்கை என்னுடையது' என்று உண்மையை ஒப்புக்கொண்டான். அப்பொழுது, பகவானான பார்க்கவர் அவனைப் பார்த்து, 'நீ செய்த காரியம் தக்கதன்று. ஏனெனில், புத்திரனை உண்டுபண்ணுவதற்காகத் தவத்தினால் ஸித்தஞ் செய்யப்பட்ட தீர்த்தம் வைக்கப்பட்டிருந்தது. ராஜரிஷியே! மிக்க பலபராக்கிரமங்களுள்ளவனே! உனக்குப் புத்திரனுண்டாவதற்காக உக்கிரமான தவத்தைச்செய்து இந்தக் கலச தீர்த்தத்தில் [1] ஒரு திவ்ய சக்தியானது வைக்கப்பட்டிருந்தது. அரசனே! தன் திறமையால் இந்திரனையும் யமன் வீட்டை அடைவிக்கக்கூடியவனும் மிக்க வலிமையுள்ளவனும் மிக்க வீர்யமுள்ளவனும் தவ வன்மையுடன் சேர்ந்தவனுமான புத்திரன் உண்டாகத் தக்க இந்த விதியினால் என்னால் இது ஸித்தஞ் செய்யப்பட்டிருந்தது. அரசனே! உன்னால் இப்பொழுது செய்யப்பட்ட தீர்த்தபானமானது தக்கதன்று. இப்பொழுது இதனை நம்மால் இதைக் காட்டிலும் வேறு விதமாகச் செய்யமுடியாது. நீ இப்படிச் செய்தது தெய்வத்தாலேயே செய்யப்பட்டதென்பது நிச்சயம். மஹாராஜனே! என்னுடைய தவ வலிமையினால் நிறைக்கப்பட்டதும் விதிப்படி மந்திரங்களால் பூஜிக்கப்பட்டதும் தாகங்கொண்ட உன்னால் பருகப்பட்டதுமான தீர்த்தத்தால் நீ உன்னாலேயே இப்படிப்பட்ட புத்திரனைப் பெறுவாய். மஹாராஜனே! எப்படி, வீர்யமுள்ளவனான நீ இந்திரனுக்கு ஒப்பான புத்திரனைப் பெறுவாயோ, உனக்குப் பிராணனோடு பிரிவும் உண்டாகாதோ, காப்பத்தைத் தாங்குவதனாலுண்டாகும் ஶ்ரமத்தையும் நீ அடையமாட்டாயோ, அப்படிப்பட்ட ஆச்சரியமான இஷ்டியை நாம் உனக்குச் செய்வோம். ராஜேந்திர! நீ துயரப்படாதே. விதி மிக வலிதன்றோ?' என்று சொன்னார். பிறகு, நூறு வருஷம் நிரம்பினவுடன், மகாத்மாவான அந்த அரசனுடைய இடவிலாவைப் பிளந்துகொண்டு, ஸூர்யன் போலிருப்பவனும் மகாதேஜஸ்வியுமான புதல்வன் வெளிப்பட்டான். அரசனை அந்த யுவனாஶ்வனையும் மரணம் அணுகவில்லை. அது ஆச்சர்யமாயிருந்தது. பிறகு, மகாதேஜஸ்வியான இந்திரன் அந்தப் புத்திரனைப் பார்க்க விரும்பி வந்தான். பிறகு, தேவர்கள், அந்த மகேந்திரனைப் பார்த்து, 'இந்தக் குழந்தை தாயின் பாலில்லாமையால் எதைப் பருகும்?' என்று வினவினார்கள். பிறகு, இந்திரன், 'இவன் (மாம=) என்னை (தாஸ்

---

1 'பரம்ம' என்பது மூலம்.

யதி=) பருகுவன்' என்று இவன் வாயில் தன் சுட்டுவிரலை வைத்தான். இந்திரனால் இவ்வண்ணம் சொல்லப்படவே, இந்திரனுடன்கூடின தேவர்கள், இவனுக்கு, 'மாந்தாதா' என்று பெயரிட்டார்கள். அரசனே! அப்பொழுது அந்தக் குழந்தை இந்திரனால் கொடுக்கப்பட்ட சுட்டுவிரலைப் பருகி மகாதேஜஸ்வியாகப் பதின்மூன்று [1] முழ உயரம் வளர்ந்தான். தனுர்வேதத்துடன் கூடிய வேதங்களும் தேவ ஸம்பந்தமான அஸ்திரங்களும் தியானம் செய்யப்பட்டவுடனே பிரபுவான அந்த மகாராஜனை முழுமையும் வந்தடைந்தன. ஆஜகவமென்கிற விலலும் ஸ்வர்க்கலோகத்தில் உண்டான அம்புகளும் பிளக்க முடியாத கவசமும் உடனே அவனை வந்தடைந்தன. பாரத! பகவானான இந்திரனால் நேரில் பட்டாபிஷேகம் செய்விக்கப்பட்ட அந்த மாந்தாதா, மூன்று உலகங்களையும், விஷ்ணுவானவர் காலடிகளால் ஜயித்ததுபோலத் தர்மத்தால் ஜயித்தான். மகாத்மாவான அவனுடைய கட்டளையானது தடையற்றதாக நடைபெற்றது. ராஜரிஷியாகிய அவனை ரத்தினங்கள் தாமே வந்தடைந்தன. பூமிக்கு அதிபதியே! அவ்வரசனுடைய இந்தப் பூமியானது தனங்களால் நிறைந்திருந்தது. அந்த அரசனால் மிக நிரம்பின தக்ஷிணையுள்ள பலவகைப்பட்ட அனேக யாகங்கள் செய்யப்பட்டன. அரசனே! அக்னிசயனங்களைச் செய்தவனும் பேராற்றலுள்ளவனும் அளவிறந்த காந்தியுள்ளவனுமான அவன் மிக்க தர்மங்களைச்செய்து இந்திரனுடைய அர்த்தாஸனத்தைப் பெற்றான். தர்மத்தில் எப்பொழுதும் நிலைபெற்றவனும் புத்திமானுமான அவனால் ஸமுத்திரங்களுடனும் பட்டணங்களுடனும் கூடிய பூமியானது கட்டளையினாலேயே ஒரே தினத்தில் ஜயிக்கப்பட்டது. மகாராஜனே! மிக்க தக்ஷிணைகளுள்ள அவனுடைய யாகங்களின் மேடைகளால் நான்கு (ஸமுத்திரங்களை) எல்லையாகக் கொண்ட பூமியானது நிரம்பியதாயிற்று. (மேடைகளால்) மறைக்கப்படாத இடம் சிறிதுமில்லை. மகாராஜனே! அந்த மகாத்மாவினால் பிராம்மணர்களுக்கும் பத்துலக்ஷம் கோடி பசுக்கள் கொடுக்கப்பட்டனவென்று சொல்லுகிறார்கள். பன்னிரண்டு வர்ஷகாலம் மழை இல்லாமற் போனபொழுது, அந்த மகாத்மாவினால் பயிர்கள் விருத்தி அடைவதற்காக வஜ்ரபாணியான இந்திரன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மழை பொழியும்படி செய்யப்பட்டது.

---

1 'சாண் எனினுமாம்' என்பது பழையவுரை.

அவனால், சந்திர வம்சத்தில் தோன்றினவனும் மகிமையுள்ளவனும் மகாமேகம்போலக் காஜிப்பவனுமான காந்தார தேசாதிபதியானவன் அம்புகளால் மிக அடித்துக் கொல்லப்பட்டான. அரசே! மனத்தை அடக்கின அவனால் நான்குவிதமான பிரஜைகள் ரக்ஷிக்கப் பட்டன. மிக்க வல்லமையுள்ள அவனால, தன் தவத்தினால், உலகங்கள் வாட்டப்பட்டன. குருக்ஷேத்திரத்தின் மத்தியில் [1] மிகக புண்யமான தேசத்தில ஆதித்யனுடைய காந்திபோன்ற காந்தியுள்ள அவனுடைய யாகம் நடந்த இடம் இது. ராஜஶ்ரேஷ்டனே! பூபதியான மாந்தாதாவைப்போல நீயும் தர்மத்தைச் செய்து பூமியைக் காக்கக்கடவாய்; ஸ்வர்க்கலோகத்தையும் அடைவாய. பூபாலனே! நீ என்னைக் கேட்ட மாந்தாதாவினுடைய பெரிய சரித்திரமும சிறந்த பிறப்பும் ஆகிய இவை முழுமையும என்னால் உனக்குக் கூறப்பட்டன' என்று சொன்னார். பாரதரே! பிறகு, லோமசமஹரிஷியினால இவ்வாறு கூறப்பட்ட அந்த யுதிஷ்டிரர் மறுபடியும் ஸோமகனைப்பற்றி வினவலானார்.

---

## நூற்றிருபத்தேட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸோமகனென்னும் அரசனுடைய நூறு மனைவியருள் மூத்தவளுக்கே ஒரு பிள்ளை பிறந்ததும், அவன் எறும்பு கடித்து வருந்துவதைக் கண்ட அரசன் பல பிள்ளைகளை அடைய உபாயங்கேட்டதும், புரோகிதர் அந்த ஒரு புத்ரனைப் பசுவாக்கி ஹோமம் செய்து அந்தப் புகையை முகர்வதனால் நூறு மனைவியரிடத்திலும் நூறு புத்திரர்கள் உண்டாவரென்றதும்.)**

யுதிஷ்டிரர், 'கொடுப்பவர்களுள் சிறந்தவனான ஸோமகனென்கிற அந்த அரசன் எவ்வித வீர்யமுள்ளவனாக இருந்தான்? அவனுடைய செய்கைகளையும பெருமையையும் உள்ளபடி கேட்க விரும்புகிறேன்' என்று வினவ, லோமசர், 'யுதிஷ்டிர! ஸோமகனென்று பிரசித்திபெற்ற தர்மவானான ஓர் அரசன் இருந்தான். அரசனே! அவனுக்கு அப்பொழுது ஒத்தவர்களான நூறுமனைவியர் இருந்

---

1 பொருந்தாமையால ஒருசொல விடப்பட்டது.

தனா. அநத அரசன் நெடுஙகாலம பெருமுயறசி செய்தும் அவர்களிடம் ஒரு புததிரனைக்கூட அடையவிலலை. பிராய முதிர்நதவனும முயலகினறவனும புததிமானுமான அவனுககு, ஒரு ஸமயததில, அவனுடைய மூதத மனையாளிடததில் ஜநதுவெனகிற ஒரு புததிரன் உணடானன். பிரஜைகளுக்கு நாதனே! எலலாத தாய்மாாகளும் காமபோகங்களை அலக்ஷ்யம செய்து, பிறந்திருககிற அவனை எப்பொழுதும் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். பிறகு, ஒரு ஸமயம் (அந்த) ஜந்துவை ஓர் எறும்பு அரையில கடித்தது. வேந்தே! கடிககப்பட்ட அந்தச் சிறுவன் அந்தத துக்கததால அழுதான். அதனல், அந்தத தாய்மார்களெல்லாரும் மிகக துக்கததை அடைநதவர்களாக ஜந்துவை விரைவாகச் சூழ்ந்துகொணடு மிக அழுதார்கள். அந்தச் சப்தமானது நெருஙகியதாயிற்று. மந்திரிகளின் ஸபைநடுவில் புரோகிதருடன உட்கார்நதுகொணடிருநத அநத அரசன, அந்தத துனபக்குரலைச சடிதியிற் கேடடான. பிறகு, அரசன், 'இது என்ன!' என்று (அறிநதுவர) வாயில்காப்பவனை அனுப்பினன். வாயிலகாப்பவன புததிரனைப பற்றி நடநததை அவனுக்குச் சொனனன். பகைவரை அடக்குகிறவனன அந்த ஸோமகன் மந்திரிகளோடுகூட விரைவாக எழுந்திருநது அந்தப்புரததில் நுழைந்து புத்திரனைத தேற்றினன. அரசே! அரசன், அந்தப் புத்திரனைச் சமாதானப்படுததி, அநதப புரததினின்று வெளிவநது, புரோகிதருடனும மந்திரிகளுடனும் சேர்ந்து உட்கார்ந்தான்.

ஸோமகன், 'இவவுலகத்தில் ஒரே புததிரனையுடைமை இகழ்ததககது. (அதனினும) புத்திரனில்லாமை சிறந்ததாகும். பிராணிகளுக்கு எப்பொழுதும நோயுண்டாதலால் ஒரே புததிரனையுடைமை துககமே. பிராம்மணரே! பிரபுவே! புததிராகளை விரும்பின எனனல பரீக்ஷிதது (எனககுத) தகுந்தவர்களான இந்த நூறு மனைவிகள விவாகம செய்யப்பட்டார்கள். அவர்களுககு ஸந்ததியில்லை. முயலுகின்ற எல்லா மனைவிகளுள்ளும (ஒரு மனைவியினிடததில) எனக்கு இந்த ஜந்து என்கிற ஒரே புததிரன் அதிகப்ரயாஸததால் பிறந்தான். இதைககாட்டிலும் மேலான துககம் என்ன இருககிறது? பிராமணேத்தமரே! மனைவியருடனிருககும் எனக்குப் பிராயமும்சென்றுவிட்டது. இந்த ஸதிரீகளுடைய பிராணன்களும் என்னுடைய உயிரும இந்த ஒரு சிறிய புத்திரனையே பொறுத்திருக்கின்றன.

பெரிதாகவோ அல்லது சிறிதாகவோ செய்வதற்கரியதாகவோ இருக்கிற எந்தச் செய்கையினலை நூறுபுத்திரர்கள உண்டாவார்களோ அப்படிப்பட்ட தகுந்த கர்மாவானது இருக்கிறதா ?' என்று வினவ, புரோஹிதர் கூறலானார்: 'ஸோமக! எதனல் நூறு புத்திரர்கள் உண்டாவார்களோ அப்படிப்பட்ட கர்மாவானது இருக்கிறது. அதை நீ செய்ய வல்லவனாயின் சொல்லுவேன்' என்று கூறினார். ஸோமகன், 'எதனல் நூறுபிள்ளைகள் உண்டாவார்களோ அந்தககாரியம், செய்யக் கூடியதானாலும் செய்யக்கூடாததானாலும், என்னால் செய்யப்பட்ட தென்றே நீர் அறியக்கடவீர். பகவானான தேவரீர் (அதனை) எனக்குச் சொல்லக்கடவீர்' என்று வினவ, புரோஹிதர், 'அரசனே! என்னால் உனக்குச் (செய்விக்கப்படும்) விரிவான யாகத்தில் நீ ஜந்து (என்கிற புத்திரனைப் பசுவாக்கி) அதனல் யாகம் செய்வாயாக. பிறகு, உனக்கு ஒளிபொருந்தின நூறுபிள்ளைகள் சீக்கிரம் உண்டாவார்கள். வபை யானது ஹோமம் செய்யப்படும்பொழுது, அந்தத் தாய்மார்கள் புகையை முகர்ந்தால, பிறகு, மிகுந்த வீர்யமுள்ள புத்திரர்களை உனக் குப் பெறுவார்கள். ஜந்துவானவன் மீண்டும் அந்தத் தாயினிடத்தி லேயே உனக்குப் புத்திரனாகப் பிறப்பான். இவனுடைய இடவிலாவி லுள்ள பொன்னிறமான மச்சமும் இருக்கும்' என்று கூறினார்.

---

## நூற்றிருபத்தோன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(புரோகிதர் கட்டளையால் ஸோமகன் ஜந்துவின்வபையை ஹோமஞ் செய்ததும், அதன் வாசனையை முகர்ந்ததனல் அவனுடைய நூறு மனைவியரிடமும் நூறு புத்திரர்கள் உண்டானதும், அரசனும் புரோஹிதரும் இறந்தபின் தமது வினை களின் பயனைச் சேர்ந்து அனுபவித்ததும்.)**

ஸோமகன், 'பிராம்மணரே! எதை எதை எப்படி எப்படிச் செய்யவேண்டுமோ அதை அதை அப்படி அப்படிச் செய்வீராக. புத்திரர்களின் விருப்பத்தால் உம்முடைய வசனம் முழுமையையும் செய்வேன்' என்று சொன்னன்.

பிறகு, அந்தப் புரோகிதர் அந்த ஜந்துவைப் (பசுவாக்கி) ஸோமகனுக்கு யாகம் செய்வித்தார். தாய்மார்களோ, 'ஆ! ஆ!

நாங்கள் கெட்டுவிட்டோம்' என்று அலறுகிறவர்களும் கடுந்துயரத்தால் வருந்துபவர்களும் இரங்குபவர்களுமாகிப் புத்திரனை வலிந்து இழுத்தார்கள். அவர்கள் அவனை வலக்கையில் பிடித்து இழுத்தார்கள். யாகம் செய்விக்கிற பிராமமணரும் இடக்கையிலபற்றி இழுததார். (அவர்கள்) அன்றிற்பேடுகள்போலத் துன்புற்றிருக்கும பொழுதே (அவர்) அந்தப் புத்திரனைப்பற்றி இழுதது அவனை விதிபபடி கொன்று அவனுடைய வபையை ஹோமம் செய்தார். குருநந்தன! வபையானது ஹோமம் செய்யப்படுபொழுது, தாய்மார்கள் மணத்தை முகர்ந்து துன்பமுற்றவர்களாக உடனே பூமியில் விழுந் தார்கள். பிறகு, அந்த ராஜஸ்திரீகளனைவரும கர்ப்பம தரித்தார்கள். பிரஜைகளுக்கு நாதனே! பாரத! பிறகு, பததுமாதங்கள் சென்ற வுடன், ஸோமகனுக்கு அந்த எல்லாரிடமும குறைவின்றி நூறு புத்திரர்கள் உண்டானார்கள. ஜந்துவென்பவன் முன்போலத் தன் தாயினிடத்திலேயே மூதத பிள்ளையாகப் பிறந்தான. அவன் அவர் களுக்கு இஷ்டமாக இருந்ததுபோல (அவர்களுடைய) மற்றச சொந் தப்பிள்ளைகள் இருக்கவில்லை. அந்த ஜந்துவுககு இடவிலாவில பொன் னிறமான அந்த மச்சமும் இருந்தது. அந்த நூறு பிள்ளைகளுள் அவன் குணங்களாலும் மூத்தவனாகவே இருநதான்.

பிறகு, ஸோமகன் பாரததுககொண்டிருக்கும பொழுதே, அந்தக் குருவானவர் பரலோகத்தை அடைந்தார். பிறகு, ஸோம கனும் பரலோகம் சென்றான். பிறகு, அவன், கோரமான நரகத தில வேவிக்கப்படுகின்ற அவரைக் கணடான். 'பிராமமணரே! நீர் யாது காரணம்பற்றி நரகத்தில் வேவிக்கப்படுகின்றீர்?' என்று அவரை வினவினான். பிறகு, அக்னியினால் மிகவும் வேவிககப்படு கின்ற அந்தக் குரு, அவனைப் பார்தது, 'அரசனே! நீ என்னால யாகம் செய்விக்கப்பட்டாய. இது அந்தச் செய்கையின் பயன்' என்று கூறினார். பிறகு, அந்த ராஜரிஷியானவன், அதனைக் கேட்டு யமதர்மராஜனை நோக்கி, 'நான் இநத நரகததில் பிரவேசிப்பேன். எனக்கு யாகம் செய்விததவர் விடப்படவேண்டும். மிக்க புண்ய சாலியான இவர் எனக்காகவன்றோ நரகத் தீயினால் வேவிக்கப்படு கிறார்? அப்படிப்பட்ட நான் என் தேகத்தை நரகத்தில் போடு வேன். குருவானவர் விடப்படவேணடும்' என்று சொன்னான். யமதர்மராஜன், 'அரசனே! ஒருவன் செய்த வினையின் பயனை மற்றொருவன் ஒருபொழுதும அனுபவிபபதில்லை. பேசுகிறவர்க

ளுள் சிறந்தவனே! உன்னுடைய கர்மபலன்கள் இதோ காணப் படுகின்றன' என்றான். ஸோமகன், 'நான் பிரம்மவாதியான (குரு) இன்றிப் புண்ணியலோகங்களை விரும்பவில்லை. தேவலோகத்திலோ நரகத்திலோ நான் இவருடன் கூடவே வஸிக்க விரும்புகிறேன். தர்மராஜனே! நான செய்கையினால இவருககுச் சமமானவன். தேவனே! இந்தப் புண்ணியபாவஙகளுடைய பலனுனது எங்களுககுச் சமமாக இருக்கவேண்டும்' என்றான். தர்மராஜன, 'அரசனே! உனக்கு இபபடி விருபபமிருந்தால இவனுடைய (பாப) பலனைச் சேர்ந்து அனுபவிப்பாயாக. பிறகு, இவனோடுகூட ஒரே ஸமயததில் நறகதியை அடைவாய்' என்று சொனனான. தாமரை மலர்போன்ற கண்களுள்ள அந்த அரசன் அபபடியே எல்லாவற்றையும் செய்தான். அவன் பாவங்தொலைந்து குருவுடன அந்த நரகததினின்று விடுபட்டான. அரசனே! குருவினிடம பிரியமுள்ள அவன, நல்வினையினால வசப்படுததப்பட்டவையும சுபமானவையுமான விரும்பப்பட்ட (உலகங்களைச) குருவான அந்த அந்தணருடன கூடவே அடைந்தான். அவனுடைய ஆஶ்ரமமானது இதோ எதிரில் விளஙகுகிறது. ஒரு மனிதன் பொறுமையுள்ளவனாக இங்கு ஆறுதினஙகள் வஸிததால் நற்கதியை அடைகிறான். ராஜஶ்ரேஷ்டனே! கவலையற்றவர்களாகவும் மனத்தை அடக்கினவர்களாகவும் இந்த இடததிலும் ஆறுநாள் வஸிப்போம். குருவம்சததைத தாங்குபவனே! நீ ஸித்தமாக இரு' என்று சொன்னார்.

---

## [1] நூற்றுமுப்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(யுதிஷ்டிரர், மார்க்கண்டேயாஶ்ரமம்சென்றதும், லோமசர் மார்க்கண்டேயருடைய சரித்திரத்தைச் சுருக்கமாகச் சொல்லியதும்.)**

நியமமுள்ளவரும் பகைவரை அடக்குபவரும் தர்மராஜருமான யுதிஷ்டிரர், பரிசுத்தமான ஸோமகனுடைய ஆஶ்ரமத்தில்

1 இநத அதயாயம் வியாகயான பாடததில் இல்லை; கிருஷ்ணுசாரியர் புததகததில் அதிகபாட அடையாளததினுள் போடப்பட்டிருக்கிறது.

தம்பிமார் முதலியவர்களோடு ஆறுதினங்கள் வஸித்து, அந்த இடத்தினின்று புறப்பட்டு அப்படியே விரைவாக வடதிசையை நோக்கிச் சென்றார். அந்த அரசர், அவ்விடத்தினின்று வெகு தூரம் சென்று, அங்கே மனத்தைக் கவருகின்றதும் மிக்க மலர்களாலும் கனிகளாலும் நிரம்பியதும மஹாநதியினால் விளங்குவதுமான காட்டைப் பார்த்து, முனிவர்களுள் சிறந்தவரான லோமசரை நோக்கி, 'அழகியதும் பல மிருகங்களும் பக்ஷிகளுமுள்ளதும் அனேக புஷ்பங்களோடும் பழங்களோடும் சேர்ந்ததும் முனிவர்களுடைய கூட்டங்களால் அடையப்பட்டதும் புண்ணியமான ஜலமுள்ள பெரிய நதியோடுகூடியதுமான வனம் காணப்படுகிறது. இது என்ன? முனிவரே! பற்பல விதமான ரிஷிகளுடைய புண்ணியமான ஆஶ்ரமங்கள் காணப்படுகின்றன. புண்ணியமான இந்த ஆஶ்ரமம் யாருடையது? தோஷமற்றவர்களான இந்த ரிஷிகள் எவரைச் சேர்ந்தவர்கள்? பேசுகிறவர்களுள் சிறந்தவரே! இதனை நான் கேட்க விரும்புகிறேன்; நீர் சொல்லும்' என்று வினவினார்.

லோமசர், 'ராஜேந்திரனே! தோஷமற்றவனே! உனக்கு மங்களம். இப்பொழுது என்னால் சொல்லப்படுகின்ற புராதனமான இந்த வனத்தின் வரலாற்றை முழுமையும் கேள். மேதாவியும் விசாலமான புத்தியுள்ளவரும் எல்லா வித்தைகளிலும் தேர்ச்சி அடைந்தவரும் ம்ருகண்டுவின் புதல்வருமான மார்க்கண்டேய மஹாமுனிவர் சிறுவராயிருக்கையிலேயே தாய் தந்தையருக்குப் பிரியத்தைச் செய்துகொண்டு தவம்புரிவதற்கு வனத்தில் பிரவேசித்தார். இங்கே ஆஶ்ரமஸ்தானத்தை அமைத்துக்கொண்டு மிக்க பயங்கரமான தவத்தைச் செய்தார். வெய்யில் காலத்தில ஐந்து அக்னிகளின் மத்தியில் நின்று தவஞ்செய்பவரும் மாரிக்காலங்களில் திறந்த வெளியிலிருப்பவரும் குளிர்காலத்தில் ஜலத்திலிருப்பவருமாகி, நெடுங்காலம் தவத்தில் நிலைபெற்றிருந்தார். அவர், கைகளை உயரத் தூக்கினவரும் பிடிப்பில்லாதவரும் காற்கட்டைவிரல் நுனியினால் நிற்பவரும் இந்திரியங்களை வென்றவரும் சுவாஸத்தை அடக்கினவரும் அழிவற்ற பரமாத்மாவைத் திடமாகச் சிந்திக்கின்றவரும் ஆகாரமில்லாதவரும் கோபத்தை அடக்கினவருமாகி இவ்வண்ணம் நெடுங்காலம் இருந்தார். அரசனே! இந்த ஸமயத்தில், எல்லாவற்றையும் அழிக்கின்றதும் மிக்க பயங்கரமுமான மழையின்மையானது உண்டாயிற்று. அதனால், சராசரங்கள்

எரிக்கப்பட்டன. பஞ்சம் நேர்ந்தவுடன், எல்லாரும் நாசமடைந்தார்கள். மகாத்மாக்களான வேறு சில முனிவர்களும் பிராம்மண ஸ்ரேஷ்டர்களும் பிராம்மணர்களும் க்ஷத்திரியர்களும் வைஸ்யர்களும் சூத்திரர்களும் எல்லா ஸதிரீகளும் பசுக்களும் பக்ஷிகளும் மிருகங்களும் ஆகிய எல்லாரும், பசியினாலும் தாகத்தாலும் மிக வருத்தப்பட்டவர்களும், இளைத்தவர்களும், உதடுகளும் தொண்டைகளும் வறண்டவர்களும், களைத்தவர்களும், பிரமித்தவர்களும், மனத்தை இழந்தவர்களுமாகி, ஏதோ ஒரு புண்ணியவசத்தால புத்திமானான மார்க்கண்டேயருடைய ஆஸ்ரமத்தை மெள்ள வந்தடைந்து மூர்ச்சை அடைந்தவர்களாகி உடனே கீழேவிழுந்தார்கள். பாரத! ஸமாதி கலைந்தெழுந்தவரும [1] யோகியும் மிக்க தவமுள்ளவருமான அந்த மார்க்கண்டேயர் பசியினாலும் தாகத்தினாலும் நன்கு வருத்தப்பட்ட ஜனங்களால் நெருங்கியிருக்கிற அந்த வனத்தைக்கண்டு இரக்கத்தினால் இளகிய மனமுள்ளவராக ஹ்ருதய கமலத்தில சிவனை த்யானம செய்து அவர்களைக் காப்பாற்றுவதற்காக அப்பொழுது தவ மஹிமையினால் வேத ஸம்பந்தமான ஸ்வரத்தினால் கங்கையை அழைத்தார். அவரால் அழைக்கப்பட்டதும் மிக்க பரிசுத்தியுள்ளதும் வேதநதி யென்னும் பெயராலேயே பிரஸித்திபெற்றதும் உலகங்களைப் பரிசுத்தம் செய்வதுமான கங்கையானது விரைவில் வந்தது. பாரத! அழைக்கப்பட்ட பர்ஜன்யனும் ஸுகமாக மழை பொழிந்தான். ராஜேந்திரனே! இங்கே பயிர்களும் செழித்தன; பழங்களும் கிழங்குகளும் மிகுதியாக உண்டாயின; அந்த எல்லா ஜனங்களும் காப்பாற்றப்பட்டார்கள். அரசனே! எல்லாப் பிராம்மண ஜனங்களும் மார்க்கண்டேயரைப் புகழ்ந்துகொண்டு அவரால் நன்கு காப்பாற்றப்பட்டவர்களாக நெடுங்காலம் ஸுகமாக இருந்தார்கள். அவர், புண்ணியமான செய்கைகளுள்ள எல்லாருக்கும இவ்வாறு பாதுகாவலைச் செய்து பரமேஸ்வரருடைய மகிழ்ச்சியின்பொருட்டு மீண்டும் தவம்புரிந்தார். இவ்வண்ணம் பலகாலம் சென்றபிறகு, மஹேஸ்வரர் எதிரில் தோன்றினார். எல்லாத் தேவர்களுக்கும் ஈஸ்வரரும் சந்திரனை முடியில தாங்கியவரும் உமையவளுக்குப் பதியும் பிரம்மா விஷ்ணு முதலிய தேவர்களாலும் ஸித்தர்களாலும் வித்யாதரர்களாலும் உரகர்களாலும்

---

[1] இரட்டித்தலால் ஒரு சொல விடப்பட்டது.

சிறந்த கந்தர்வர்களாலும் இயக்கர்களாலும் கின்னரர்களாலும் பறவைகளாலும் துதிக்கப்படுகிறவரும் மஹாதேவரும் அழிவற்றவரும் எங்கும் நிறைந்தவருமான சிவனைப் பார்த்து மார்க்கண்டேயமுனிவர் பக்தியோடு அடிக்கடி [1] ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தார். முனிவர் நமஸ்கரித்தெழுந்து விரைவாகக் கைகுவித்துக்கொண்டு உலகங்களுக்குப் பதியான மஹாதேவரைப் பலவித ஸ்தோத்திரங்களால் துதித்தார். மஹாதேவர், அந்த மார்க்கண்டேய மஹா முனிவரை, 'முனியே! உனக்கு மங்களம். வரத்தைக்கேள். உனக்கு வரங்களைக் கொடுப்பவனாக இருக்கிறேன' என்று சொன்னார். பரமாத்மாவான அந்தச் சிவனால் இவ்வண்ணம் தெரிவிக்கப்பட்ட அவர், பரமேஸ்வரரைப் பார்த்து, 'சம்புவே! ஸ்வாமி! உம்முடைய சரணாரவிந்தத்தில் மற்றவர்களால் எளிதில் அடையமுடியாததும் வேறிடத்துச் செல்லாததுமான பக்தியைத் தவிர வேறு வரத்தை நான் வேண்டவில்லை' என்கிற இந்த வாக்யத்தைத் தடுமாற்றமுள்ள குரலுடன் சொன்னார். முனிவரால் இவ்வாறு சொல்லப்பட்டவரும் ஈஸ்வரர்க்கெல்லாம் ஈஸ்வரருமான பகவான், மறுபடியுமே மார்க்கண்டேய மஹாமுனிவரைப் பார்த்து, 'உன்னுடைய பிதாவினால் புத்திரன் உண்டாவதற்காகப் பக்தியுடன் நன்கு ஆராதிக்கப்பட்டேன். நான், 'நூறு பிராயமுள்ள குணமில்லாத புத்திரன் ஒருவன், பதினாறு பிராயமுள்ள நல்ல புத்திரன் ஒருவன் ஆகிய இருவருள் ஒருவனை விரும்பும்' என்று சொன்னேன. அவர் என்னைப்பார்த்து, 'தேவர்களுக்கு ஈஸ்வரரே! நூறு பிராயமுள்ள குணக்கேடனான புத்திரன் எனக்கு வேண்டாம். பதினாறு பிராயமுள்ள குணசாலியான புத்திரன் இப்பொழுது எனக்கு உண்டாகட்டும' என்று சொன்னார். முற்காலத்தில் உன்னுடைய தகப்பனால் இவ்வாறு வரம வேண்டப்பட்டது. முனியே! நான உன்னால் செய்யப்பட்ட தவத்தினால் மிகவும் மகிழ்விக்கப்பட்டேன். என்னால் நீண்ட ஆயுளானது (உனக்குக) கொடுக்கப்பட்டது. மிருத்யுவும தடுக்கப்பட்டது' என்கிற வாக்கியத்தைச் சொன்னார். பகவானான ஈஸ்வரர் இவ்வண்ணம் சொல்லிவிட்டு அவ்விடத்திலேயே மறைந்தார். புண்யமான இந்த ஆஸ்ரமம அந்த

---

1 பாதங்களும் முழங்கால்களும கைகளும் மாரபும் தலையும் பூமியில பட, புத்தியும் சொலலும பார்வையும் வந்தனம பெறுபவரையே அடையச் செயயும நமஸ்காரம்; இருகாலும இருகையும இருதோளும மாரபும் நெற்றியும் பூமியில படச் செயயும வணக்கம எனபா சிலா.

மார்க்கண்டேயருடையது. பாவமில்லாதவர்களான இந்த ரிஷிகள் அவரைச் சார்ந்தவர்கள். இங்கே ஒருதினம் வஸிப்பவர்கள் அனை வரும் மிருத்யுவைக் கடக்கிறார்கள். பரதஸ்ரேஷ்டனே! பூமியைப் பாதுகாப்பவனே! இந்த ஆஸ்ரமத்திலேயே நியமமுள்ளவனாக வஸிக்கக்கடவாய்.

---

## நூற்றுமுப்பத்தோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசர் பல தீர்த்தங்களின் மகிமையைச் சொல்லியது.)

அரசனே! முற்காலத்தில் பிரம்மதேவர் இந்த இடத்தி லன்றோ ஆயிரம் வருஷங்களில் நிறைவேறுவதான இஷ்டீக்ருத மென்கிற ஸத்ரத்தைத் தாமே செய்தார். நாபாகனுடைய குமார னான அம்பரீஷனும் யமுனையாற்றின் அருகில் யாகம் செய்தான். அந்த இடத்தில் யாகம்செய்து ஸதஸ்யர்களுக்குப் பத்துப் [1] பத்மம் (தனங்களைக்) கொடுத்தான். அவன் யாகங்களாலும் தவத்தினாலும் சிறந்த ஸித்தியைப்பெற்றான். குந்திபுத்திர! யாகம் செய்தவனும்புண் ணியகர்மங்களுள்ளவனும் உலகமுழுதுமுடையவனும் அளவிறந்த சௌர்யமுள்ளவனும் நஹுஷகுமாரனுமான யயாதியினுடைய தேசம் இது. இந்த இடத்தில் இந்திரனோடு பகைக்கின்ற அவனு டைய யாகபூமி இதோ இருக்கிறது. பலவித வடிவங்களுள்ள அக்னி (வைகரும மேடை) களால் நிறைக்கப்பட்டதும் முழுகுகின்றது போல யயாதியினுடைய யாக காரியங்களால் நிரம்பியதுமான பூமி யைப் பார். அந்த ஓர் இலையுள்ள வன்னிமரத்தின் கிளை இது. உத்த மமான சகடம் இது. இந்த ராமஹ்ரதங்களைப் பார். நாராயண ருடைய ஆஸ்ரமத்தையும் பார். பூமியைக் காப்பவனே! அபரிமித மான சௌர்யமுள்ளவரும் யோகங்களால் பூமியில் ஸஞ்சரிப்பவ ருமான ரிசீகபுத்திரருடைய ஸஞ்சாரபூமியும் இதோ [2] வெண் ணிறமுள்ள ஸ்தலத்தில் இருக்கிறது. குருநந்தன! இங்கே உரல் களாகிய காதணிகளோடு கூடின ஒரு பெண்பேய் சொல்லியதும்

---

1 'பத்மம = நூறு கோடி' என்பது பழையவுரை. அநுசாஸன பர் வம், 583 ம் பக்கம் குறிப்பில் பார்க்க.

2 'ரௌப்யை யென்னும் நதியில் என்றும் கொள்ளலாம்' என்பது பழையவுரை.

பரம்பரையாக வந்ததுமான கதையை, சொல்லுகின்ற என்னி டத்தினின்றும் கேள். [1] பிசாசானது, (புத்திரனுடன்கூட ஸ்நானம் செய்வதற்காக வந்த ஒரு பார்ப்பனியைப்பார்த்து), 'புத்திரனுட னிருக்கும் நீ யுகந்தரத்தில் தயிரைக்குடித்து அச்சுதஸ்தலத்தில் வஸித்து அப்படியே பூதலயத்தில் ஸ்நானம் செய்தமையால் இவ்விடத்தில் (ஒரே ராத்ரி) வஸிக்கத் தகுதியுள்ளவளாவாய். இந்த இடத்தில் நீ ஒரு ராத்திரி வஸித்து இரண்டாவது ராத் திரி வஸிப்பாயாகில் பகல் வஸிப்பதற்காக உனக்கு நடப்பது இது. இரவில் வஸிப்பதற்காக நடப்பது இதைக்காட்டிலும் வேறு விதமாகும்' என்று சொல்லியது. பாரதர்களுள் சிறந்தவனே! இப்பொழுது இந்த இடத்தில் ஓர் இரவு வஸிப்போம். குந்தீபுத்ர! பாரத! இது குருக்ஷேத்திரத்திற்கு வாயிலன்றோ? அரசனே! இந்த இடத்திலேயே நகுஷனுடைய குமாரனான யயாதிராஜன்,

---

1 "இங்கே, 'ஒரு பெண்பேய், நீராடுவதற்காகப் புத்ரனுடன்வந்த ஒரு பார்ப்பனியைப்பார்த்து, 'யுகந்தரமென்னும் தேசத்தில் ஒட்டகம் கழுதை முதலியவற்றின் பால் தயிராக்கப்படுகிறது. அச்சுத ஸ்தலமென்னும் கிராமத் தில் கலப்பு ஜாதியிற் பிறந்தவர்கள் வஸிக்கிறார்கள். பூதலய மென்னும் திருடரூரில் தீயினால் சுடப்பட்ட பிணங்களை எறியும் ஆறு ஒன்று இருக் கிறது. நீ யுகந்தரத்தில் தயிர் குடித்தாய்; அச்சுதஸ்தலத்தில் வஸித்தாய், பூதலயத்தில் நீராடினாய். ஆகவே, இப்படி மூன்று பாவங்களை நீ செய்த வளாகிறாய். இவற்றுக்கு மனுமுதலியவற்றில் பிராயச்சித்தம் விதிக்கப் படுகிறது. இங்ஙனம் பாவியான நீ இந்த இடத்தில் வஸித்தல் தகாது' என்றுசொல்லியும், அவள் கேளாமல் நீராடல் முதலியன செய்தாள். அப் பொழுது, பேய் அவளுடைய செம்பு ஸதாலி முதலியவற்றை உடைத்து, 'பகல் வஸித்ததன் பயன் இது. இரவு வசித்தால் அதன் பயனைக் காண் பாய். அதாவது, உன்மகனையும் கொல்வேன் மேலும், இரண்டாம் இரவும் வஸிக்கவிரும்பினால் மிக்க தீமையைச் செய்வேன்' என்றது' என்பது முன் னோர்களின் அபிப்பிராயம். பிற்காலத்தவர்கள், 'பேய், 'நீ இந்த மூன்றை யும் செய்தமையால், விரும்பினால் இங்கே ஓரிரவு வஸிக்கலாம். இரண் டாம் நாளும் வசிக்க விரும்பினால் (செம்பு முதலியவற்றை உடைப்பதாகச் சைகை காட்டி), 'பகல் வஸித்தலின் பயன் இது; இரவின்பயன் உயிரைக் கவர்வது வரையுமாம்' என்றது என்று கொள்ளல் வேண்டும்' என்கின்றனர்" என்றுகூறி வேறு யோகபரமாகவும் விரிவாகப் பொருள் கூறுவது பழைய வுரை. இந்தக் கதை கர்ணபர்வம், 162-ம் பக்கத்தில் சிறிது மாறுபாட்டு டன் வந்திருத்தல் காண்க. பூதலயம் என்பதே பூதிலயம்.

இந்திரன் மகிழ்ச்சியை அடைவதற்குக் காரணமானவையும் பல ரத்னக்குவியல்களுடன் கூடினவையுமான அந்த யாகங்களைச் செய்தான். இது ப்லக்ஷாவதரணமென்கின்ற உத்தமமான யமுனையினது துறை. அறிஞர்கள் இதனைத் தேவலோகத்திற்கு வாயிலாகச் சொல்லுகிறார்கள். ஐயனே! சிறந்த ரிஷிகள் இந்த இடத்தில் [1] ஸாரஸ்வத ப்ராம்மணர்களான ரித்விக்குக்களைக் கொண்டு யாகம் செய்து யூபங்களையும் உரல்களையும் எடுத்துக் கொண்டு அவப்ருதஸ்நானத்தைக் குறித்துச் செல்லுகிறார்கள். அரசனே! இந்த இடத்தில் ராஜாவான பரதன் யாகங்களைச் செய்தான; தர்மத்தால் பூமியை அடைந்து அஸ்வமேத யாகத்தில் கருமையானதும் உறுதியான அங்கங்களுள்ளதும் யாகத்துக்குரியதுமான குதிரையைப் பலமுறை விட்டான். புருஷஶ்ரேஷ்டனே! மருத்தன் இந்த இடத்திலேயே ரிஷிகளுள் சிறந்தவரான ஸம்வர்த்தரால் பாதுகாக்கப்பட்டவனாக உத்தம யாகத்தைச் செய்தான். ராஜேந்திரனே! இந்த இடத்தில் ஸ்நானம் செய்தால் மனிதன் எல்லா உலகங்களையும் நன்கு காண்கிறான்; பாவத்தினின்றும் (விடுபட்டுப்) பரிசுத்தனாக்கப்படுகிறான். இதிலும் நீ ஸ்நானம் செய்வாயாக' என்று சொன்னார். பாண்டவஶ்ரேஷ்டர் தம்பிமார்களுடன் அதில் ஸ்நானம்செய்து மஹரிஷிகளால் துதிக்கப்படுகின்றவராக லோமசரைப்பார்த்து, 'ஸத்யபராக்கிரமமுள்ளவரே! இங்கிருந்தே தவத்துடன் (கூடியவனாகி) எல்லா உலகங்களையும் பார்க்கிறேன்; பாண்டவ ஶ்ரேஷ்டனான அர்ஜுனனையும் பார்க்கிறேன்' என்று சொன்னார். லோமசர், 'தோள்வலிமை மிக்கவனே! இது உண்மையே. சிறந்த ரிஷிகள் இதில் ஸ்நானம்செய்து [2] தவத்துடன் கூடியவர்களாகிச் சராசரங்களுடன் கூடின மூவுலகங்களையும் காண்கிறார்கள். நரஶ்ரேஷ்டனே! எதில் நீராடிப் பாவத்தை உதறினவனாவாயோ புண்யமானதும் புண்யத்தையே சரணமாகப் பற்றினவர்களால் சூழப்பட்டதுமான இந்த ஸரஸ்வதியை (ப்பார்.) குந்திபுத்ர! தேவரிஷிகளும் (பிரம்ம) ரிஷிகளும் அப்படியே ராஜரிஷிகளும் இந்த இடத்தில் ரித்விக்குக்களாக வரிக்கப்பட்ட ஸாரஸ்வத ப்ராம்மணர்களால் யாகங்களைச் செய்தனர். நான்குபக்கங்களிலும் ஐந்து யோஜன விஸ்தாரமுள்ள பிரம்ம

---

1 ஸாரஸ்வதை யஜனைஃ' என்பது மூலம்; 'ஸாரஸ்வத முறைப்படி செய்கிற யாககிரியைகள்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

2 'தபோயுக்தாந்' என்பது, 'தபோயுக்தாஃ' என்று மாற்றப்பட்டது.

தேவருடைய யாகவேதி இது இது யாகம் செய்வதையே சீல மாகக்கொண்ட மகாதமாவான குருவினுடைய க்ஷேத்ரம்.

---

நூற்றுமுப்பத்திரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(லோமசர் ஸரஸ்வதீநதி முதலியவற்றின் மகிமையைக் கூறியதும், ச்யேன கபோதோபாக்கியானத்தைச் சொல்லத் தொடங்கியதும்.)

பாரத! இங்கே மனிதர்கள் சரீரங்களை விட்டு ஸ்வர்க்கத்தை அடைகிறார்கள். வேந்தனே! மனிதாகள் இங்கே மரிக்க விருப பததுடன் ஆயிரம் ஆயிரமாக வருகிறார்கள். 'எந்த மனிதர்கள் இங்கே மரிப்பார்களோ, அவர்கள் ஸ்வர்க்கததை ஜயிததவர்கள்' என்கிற இவ்வித ஆசீர்வாதமானது முற்காலததில் (இங்கே) யாகம் செய்கின்ற தக்ஷனால் செய்யப்பட்டிருக்கிறதன்றோ? அழ கியதும் திவ்யமானதும் பெருக்குமுள்ளதுமான ஸாஸவதீ நதி யானது இதோ இருக்கிறது. ஜனாதிப! வீரனே! எவர்களு டைய குற்றத்தால் ஸாஸ்வதியானது, 'என்னை நிஷாதர்கள் அறியவேண்டாம்' என்று பூமியில் பிரவேசிதததோ அநத நிஷாதர்களுடைய ராஜ்யததிற்கு தவாரமான ஸாஸ்வதிநதியி னுடைய அந்த விநசனமென்கிற க்ஷேததிரம் இது. எந்த இடத் தில் ஸாஸ்வதியானது பார்க்கத்தக்கதாகிறதோ, எந்த இடத்தில் காந்தியுள்ளவையும் கடலைக் குறிததுச் செல்லுகின்றவையுமான புண்யநதிகள் இந்தஸாஸ்வதியை அடைகின்றனவோ அந்தச் சமஸோதபேதம் இது. பகைவரை அடக்குபவனே! எந்த இடததில் லோபாமுதரை வந்து அகஸ்தியரைப் பர்த்தாவாக வரித்தாளோ, அநத ஸிநதுவினுடைய பெரியதீர்த்தம் இது. சூரியன்போன்ற ஒளியுள்ளவனே! இந்திரனுக்குப் பிரியமானதும் புண்யமானதும் பரிசுத்தமானதும பாவததை அழிக்கிறதுமான ப்ரபாஸதீர்த்தம் இதோ விளங்குகிறது. இதோ விஷ்ணுபதமென் கிற உததம தீர்த்தம் காணப்படுகிறது. அழகியதும் மிகப் பரி சுத்தமானதுமான விபாசை என்கிற நதியும் இதோ காணப்படு கிறது. பகவானான வஸிஷ்டரிஷியானவர் புத்திரசோகத்தால் தம்மை (க் கயிற்றால்) கட்டிக்கொண்டு இந்த நதியில் விழுந்தார்.

கயிற்றுக் கட்டுக்களற்றவராகி மீண்டும் எழுந்தார். பகைவர்களை அடக்குபவனே! பாரத! எந்த இடத்தில் வடதிசையிலுள்ளவர்களான எல்லா ரிஷிகளுக்கும் நகுஷகுமாரனான யயாதிக்கும் அக்னிக்கும் காஸ்யபருக்கும் [1] ஸம்வாதம் நடந்ததோ எல்லாவற்றையும் காட்டிலும் புண்யமானதும் மஹரிஷிகளாலும் வஸிக்கப்பட்டதுமான அந்தக காஸ்மீர மண்டலம் இது. தம்பிமார்களுடன் இதைப் பார். மஹாராஜனே! மானஸஸரஸுக்குத் துவாரமான இது பிரகாசிக்கிறது. இந்த மலையின் நடுவில், தவறுத பராக்ரமமுள்ளவரென்று பிரசித்திபெற்ற ஸ்ரீமானான பரசுராமரால் வாஸஸ்தானம் அமைக்கப்பட்டது. அது விதேக தேசத்தின் வடக்கிலிருக்கிறது. அதன் துவாரத்தைக் [2] காற்றினால் கொண்டுவரப்பட்ட (தாமரை முதலியவற்றின்) குவியல் கடந்து செல்லவில்லை. புருஷஶ்ரேஷ்டனே! கௌந்தேய! இந்தத் தேசத்தில் (ஸௌர ஸாவன பார்ஹஸ்பத்ய நாக்ஷத்ர சாந்த்ர ஸம்வத்ஸரங்களின் முடிவுககாலமாகிற) யுகமுடிவுக்காலத்தில் ப்ரமதகணங்களுடனும் உமையவளுடனும்கூட நினைத்த உருவத்தை எடுக்கக்கூடிய ருத்திரருடைய தர்சனமானது உண்டாகிறதென்னும் இந்த வேறோர் ஆச்சர்யமிருக்கிறது. யாகம் செய்பவர்கள் மங்களத்தை விரும்பினவர்களாக இந்த ஸரஸில் சித்திரை மாதத்தில் பிநாகியை ஸ்தோத்ரங்களால் அடிக்கடி நன்கு ஆராதிக்கின்றார்கள். ஒரு மனிதன் ஶ்ரத்தையுள்ளவனும் இந்திரியங்களை வென்றவனுமாகி இந்த ஸரஸில் ஸ்நானம் செய்தால் பாவந்தொலைந்து நல்ல உலகங்களை அடைகிறான். இதில் ஸம்சயமில்லை. ஸுப்ரம்மண்யரும், அருந்ததியின் துணைவரும் பகவானும் ரிஷியுமான வஸிஷ்டரும் எந்த இடத்தில் சாந்தியை அடைந்தார்களோ அப்படிப்பட்ட உஜ்ஜானகமென்கிற புண்யதீர்த்தம் இது. எதில் தாமரைமலர்கள் நூறு இதழ்களுடனிருக்கின்றனவோ அந்த ஜலமுள்ள மடுவும் இது. எந்த இடத்தில் (ருக்மிணியானவள்) கோபத்தை அடக்கிச் சாந்தியை அடைந்தாளோ அந்த ருக்மிணியினுடைய ஆஸ்ரமமும் இது. பாண்டுநந்தன! மஹாராஜனே! (பார்த்தவுடன்) நிஷ்டை செய்வதன் பயன் கைகூடுமிடமென்று நீ கேட்டிருக்கிற அந்த ப்ருகுதுங்கமென்கிற பெரிய மலையை நீ பார்ப்பாய். ராஜேந்திரனே! எல்லாப் பாவங்களினின்றும் விடுவிக்கிறதும்

---

1 பொருந்தாமையால் ஒருசொல் விடப்பட்டது.

2 'வாதிகஷண்டர்' என்பது மூலம். 'காற்றினால் கொண்டுவரப்பட்ட தாமரை முதலியவற்றின் குவியல்' என்பது பழையவுரை.

மஹரிஷிகளால் வஸிக்கப்பட்டதும் குளிர்ந்த ஜலமுள்ளதும் மிக நிர்மலமாயிருப்பதுமான விதஸ்தா நதியையும், உசீநர தேசாதிபதி யானவன் எந்த இடத்தில் யாகம்செய்து இந்திரனைக்காட்டிலும் மேன்மைபெற்றானோ யமுனைக்கு இருபக்கங்களிலுமிருக்கிற அந்த ஜலை உபஜலை என்கிற நதிகளையும் பார். அரசனே! பாரத! இந்திரனும் அக்னியும் அரசர்களுள் சிறந்த அவனை அறிவதற்காக அவனுடைய அந்த யாக ஸபையை நோக்கி வந்தார்கள். வரன்களை கொடுப்பவர்களான இந்திரன் கழுகும், அக்னி புறுவுமாகி மகாத்மாவான உசீநரனைப் பரீக்ஷித்தறிய எண்ணங்கொண்டு அவனுடைய யாகசாலையில் வந்தார்கள். அரசனே! கழுகினிடமிருந்து உண்டான பயத்தால் துன்பமுற்ற புறுவானது புகலிடத்தை வேண்டினதாக அப்பொழுது அரசனுடைய தொடையை அடைந்து ஒளிந்து கொண்டது.

---

நூற்றுமுப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(சிபியைப் பரீக்ஷிப்பதற்காகக் கழுகாகிவந்த இந்திரன் புறுவாகி வந்த அக்னியைத் துரத்தியதும், புறு சிபியைச் சரணமடைந்ததும், அரசன் புறுவைக் காக்கக் கருதித் தன் தசையை அறுத்துப் புறுவுக்கு ஈடாகத் தராசில் வைத்ததும், புறுத்தட்டுத் தாழ அவன் தானே தராசுத்தட்டில் ஏறியதும், இந்திரனும் அக்னியும் மகிழ்ந்து அவனைப் புகழ்ந்து தங்கள் உலகம் சென்றதும்.)**

கழுகு, 'அரசனே! எல்லா அரசர்களும் உன்னை ஒருவனையே தர்மாத்மாவென்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட நீ யாது காரணம்பற்றித் தர்மவிரோதமான காரியத்தைச்செய்ய விரும்புகிறாய்? அரசனே! பசியினால் வருத்தப்படுகிற எனக்கு அமைந்த உணவைத் தர்மத்திலுள்ள பேராவலால் நீ கெடுக்காதே. தர்மத்தை விட்டு நீ கெடாதே' என்றது. அரசன், 'பெரிய பறவையே! இந்தப் பறவையானது மிகப் பயந்த உருவமுள்ளதும் உன்னிடத்தினின்று பயந்ததும் உயிரில் விருப்பமுள்ளதும் பாதுகாப்பை

விரும்பினதுமாகி என் ஸமீபத்தை அடைந்தது. கழுகே! இவ்வண்ணம் இவ்விடத்தில் வந்திருக்கிறதும் அபயத்தை வேண்டுகிறதுமான புறாவைக் கொடாமலிருப்பதில் சிறந்த தர்மம் இருக்கிறது. இந்த விஷயத்தில் நீ எப்படி எண்ணுகிறாய்? கழுகே! புறாவானது மிக நடுங்குகிறதும் பரபரப்புள்ளதும் என்னிடமிருந்து உயிரை விரும்பினதுமாகக் காணப்படுகிறது. அதைக் (காப்பாற்றாமல்) விடுவது இகழத்தக்கது. பிராமணர்களைக் கொல்பவனுக்கும் உலகத்துக்குத் தாயான பசுவைக் கொல்பவனுக்கும் சரணமடைந்தவனைக் கைவிடுகிறவனுக்கும் பாவம் ஸமானமன்றோ!' என்று கூறினான். கழுகு, 'பூமிக்கு இறைவனே! எல்லாப் பிராணிகளும் உணவினால் உண்டாகின்றன; உணவினால் வளர்கின்றன. அதனால், ஜந்துக்கள் உயிர்வாழ்கின்றன. விடமுடியாத விருப்பங்களை விட்டும் உயிர்வாழ முடியும்; உணவைவிட்டு நெடுநாள் உயிரோடிருப்பதற்கு முடியாது. அரசனே! உணவிலிருந்து விலக்கப்பட்ட என்னுடைய பிராணன் உடலை விட்டுவிட்டு, திரும்பிவராதவழியை அடையப்போகின்றது. தர்மாத்மாவே! நான் மாண்டுபோனால், என் புத்திரன் மனைவி முதலியவர்களெல்லாம் நாசமடைவார்கள். நீ புறா ஒன்றைப் பாதுகாக்கின்றவனாகி அனேக உயிர்களைப் பாதுகாக்கவில்லை. எந்தத் தர்மம் பலரைக் கெடுக்குமோ அது தர்மமாகாது. அது கொடியவழி. ஸத்யமான பராக்கிரமமுள்ளவனே! எந்தத்தர்மம் (மற்றவைகளுக்கு) விரோதமில்லாமலிருக்குமோ அதுதான் தர்மம். பூமியைக் காப்பவனே! விரோதமான தர்மங்களுள் (தீமையின்) மிகுதியையும் குறைவையும் நிச்சயித்து எதில் (அதிக) தீமை இல்லையோ அந்தத் தர்மத்தைச் செய்யவேண்டும். அரசனே! தர்மாதர்ம நிச்சயத்தில் (நன்மையின்) மிகுதியையும் குறைவையும் நன்கு அறிந்து எதில் நன்மை அதிகமோ அதில் தர்மநிச்சயத்தைச் செய்வாயாக' என்று கூறியது. அரசன், 'சிறந்த பறவையே! நல்ல விஷயங்களுடன் பல பேசுகிறாய். தர்மத்தை அறிந்து பேசுகிறாய். ஆதலால், நீ பக்ஷிராஜனான கருடனா? என்ன? அப்படி தர்மங்களோடு கூடியவையாகவும் ஆச்சர்யகரமாகவும் பலவற்றைப் பேசுகிறாயன்றோ? உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை என்று நான் உன்னை அறிகிறேன். ரக்ஷணத்தை வேண்டிவந்தவனை விடுவதை எவ்வாறு நல்லதென்று நினைக்கிறாய்? பறவையே! உன்னுடைய இந்த முயற்சியானது ஆகாரத்திற்காக. உன்னால் (இதைக்காட்டிலும்) அதிகமான ஆகாரங்கூட வேறு விதத்தால் செய்துகொள்ளமுடியும். காளையையோ பன்றியையோ

மஹரிஷிகளால் வஸிக்கப்பட்டதும் குளிர்ந்த ஜலமுள்ளதும் மிக நிர்மலமாயிருப்பதுமான விதஸ்தா நதியையும், உசீநர தேசாதிபதியானவன் எந்த இடத்தில் யாகம்செய்து இந்திரனைக்காட்டிலும் மேன்மைபெற்றானோ யமுனைக்கு இருபக்கங்களிலுமிருக்கிற அந்த ஜலை உபஜலை என்கிற நதிகளையும் பார். அரசனே! பாரத! இந்திரனும் அக்னியும் அரசர்களுள் சிறந்த அவனை அறிவதற்காக அவனுடைய அந்த யாக ஸபையை நோக்கி வந்தார்கள். வரங்களைக் கொடுப்பவர்களான இந்திரன் கழுகும், அக்னி புறவுமாகி மகாத்மாவான உசீநரனைப் பரீக்ஷித்தறிய எண்ணங்கொண்டு அவனுடைய யாகசாலையில் வந்தார்கள். அரசனே! கழுகினிடமிருந்து உண்டான பயத்தால் துன்பமுற்ற புறவானது புகலிடத்தை வேண்டினதாக அப்பொழுது அரசனுடைய தொடையை அடைந்து ஒளிந்து கொண்டது.

---

## நூற்றுமுப்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(சிபியைப் பரீக்ஷிப்பதற்காகக் கழுகாகிவந்த இந்திரன் புறவாகி வந்த அக்னியைத் துரத்தியதும், புற சிபியைச் சரணமடைந்ததும், அரசன் புறவைக் காக்கக் கருதித் தன் தசையை அறுத்துப் புறவுக்கு ஈடாகத் தராசில் வைத்ததும், புறத்தட்டுத் தாழ அவன் தானே தராசுத்தட்டில் ஏறியதும், இந்திரனும் அக்னியும் மகிழ்ந்து அவனைப் புகழ்ந்து தங்கள் உலகம் சென்றதும்.)**

கழுகு, 'அரசனே! எல்லா அரசர்களும் உன்னை ஒருவனையே தர்மாத்மாவென்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட நீ யாது காரணம்பற்றித் தர்மவிரோதமான காரியத்தைச்செய்ய விரும்புகிறாய்? அரசனே! பசியினால் வருத்தப்படுகிற எனக்கு அமைந்த உணவைத் தர்மத்திலுள்ள பேராவலால் நீ கெடுக்காதே. தர்மத்தை விட்டு நீ கெடாதே' என்றது. அரசன், 'பெரிய பறவையே! இந்தப் பறவையானது மிகப் பயந்த உருவமுள்ளதும் உன்னிடத்தினின்று பயந்ததும் உயிரில் விருப்பமுள்ளதும் பாதுகாப்பை

இந்திரன். இந்தப் புறு அக்னிதேவன். தர்மததை அறிய எண்ணி யாகசாலையில் உன்னை வந்தடைந்தோம. அரசே! உன்னுடைய அவயவஙகளினின்று மாம்ஸஙகள அறுககபபட்டன என்னும் உனது இந்தச சாஶ்வதமான கீர்த்தியானது உலகஙகளைக கீழ்ப்படுததும். அரசே! உலகததில உன்னை மனிதர்கள் எவ்வளவு காலமவரையில் சொல்லுவார்களோ அவ்வளவு காலம்வரையில உனனுடைய கீர்ததி யும புணய லோகஙகளும் சாஶ்வதமாக இருக்கும' என்று சொல்லி யது. அரசே! இந்திரனும் அகனியும் இவ்வண்ணம் கூறி, அந்த அரசனுக்கு வேண்டிய வரன்களைக் கொடுததுப் புகழ்ந்து மனமகிழ்ந்து சென்றுர்கள. தர்மாதமாவான உசீநராஜனும சரீரததால் நனகு விளஙகுபவனுகித தர்மததால் ஆகாயததையும் பூமியையும் வியாபித துக்கொண்டு ஸவர்க்கததில் ஏறினுன். வேந்தே! அபபடிப்பட்ட இந்த மாளிகை மஹாதமாவான அநத அரசனுடையது. புண்யமான தும் பாவங்களைப் போக்குகிறதுமான இதனை என்னுடன் தர்சனம் செய்வாயாக. அரசனே! அந்த இடததில் தேவர்களும் பழமையான ரிஷிகளும புணயமுள்ள மகாதமாக்களான பிராமமணர்களால் எப பொழுதும் காணப்படுகிறுர்கள்.

---

## நூற்றுமுப்பத்துநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(யுதிஷ்டிரர் ஶ்வேதகேதுவின் ஆஶ்ரமத்தை அடைந்ததும், லோமசர் அஷ்டாவக்ரோபாக்யானத்தைச் சொல்லத் தொடங்கியதும், ஜனகனுடைய பட்டணத்தை அடைந்த கஹோளரை வந்தி வென்று ஜலத்தில் அமிழ்த்தியதும், அதனை அறிந்த அஷ்டாவக்ரர் வந்தியை வெல்லுவ தந்து ஶ்வேதகேதுவுடன் சென்றதும்.)

பாண்டு புததிரர்களே! பூமியில் மந்திரஙகளை அறிந்தவரென்றும் சிறந்த புததியுள்ளவரென்றும் சொல்லப்படுகிறவரும் உத்தாலகருடைய புதல்வருமான ஶ்வேதகேதுவினுடையதும் எப்பொழுதும் பழங்களுள்ள மரங்களோடு கூடினதுமான ஆஶ்ரமத்தைப் பாருங்கள். ஶ்வேதகேதுவானவர் ஸரஸ்வதியை இங்கே மானிட வடிவமும்

உருவமுமுள்ளவளாக நேரில் கண்டார். 'வாக்கை நானறிவேன' என்று வாதம் செய்வதற்குத் தொடங்கின ஸரஸ்வதியுடன் ஸ்வேத கேது இந்த இடத்தில் ஸம்பாஷித்தார். இந்த யுகத்தில் பிரம்மவித்துக் களுள் சிறந்தவர்களும் மாமனும் மருமானுமான உத்தாலகருடைய புதல்வரான ஸ்வேதகேதுவும் [1] கஹோளருடைய புதல்வரான அஷ்டாவக்ரரும் ஆகிய இரண்டு முனிவர்கள் பூமியில் இருந்தார்கள். தீரர்களும் அளத்தற்கரியவர்களும் அம்மானும் மருமானுமான அவ் விருவரும் விதேஹராஜனுடைய யாகசாலையில் பிரவேசித்துக் கஹோ ளரை ஜயித்த வந்தியை, அவ்வரசனருகில் விவாதத்தில் வென்றார்கள். குந்தீநந்தன! வாதம் செய்வதில் வன்மையுள்ளவரும் பிராம்மணர் களுள் தலைமை பெற்றவரும் சிறுவராயிருக்கையிலேயே ஜனகனு டைய யாகசாலையில் சென்று வாதத்தில் வந்தியைத் தோற்கச்செய்து நதியில் அமிழச் செய்தவருமான அஷ்டாவக்ரரை எவருக்குப் பேரனு க்ச சொல்லுகிறார்களோ, அந்த (உத்தாலகருடைய) மிகக பரிசுத்த மான ஆஸ்ரமத்தில் நீ தம்பிமார்களுடன் பிரவேசித்து (அதனை) வழி படுவாயாக' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'அப்படிப்பட்ட வந்தி யைத் தோல்வியடையச் செய்த அந்தப் பிராம்மணர் எவ்வித மகிமை யுள்ளவராயிருந்தார்? விதேஹராஜனுடைய ஸமீபத்தில் எந்த விஷ யத்தைப்பற்றி அவ்விருவருக்கும் விவாதம் நடைபெற்றது? அவர் யாது காரணத்தால் அஷ்டாவக்ரர் என்கிற பெயருள்ளவரும் ஆனார்? லோமசரே! எனக்கு அவை எல்லாவற்றையும் உள்ளபடி சொல்வீ ராக' என்று வினவ, லோமசர் சொல்லலானார்.

'அரசனே! உத்தாலகருக்கு நியமமுள்ளவரும் கஹோளர் என்கிற பெயருள்ளவருமான ஒருவர் சிஷ்யராக இருந்தார். அவர் குருபணிவிடை செய்துகொண்டு ஆசார்யருடைய விருப்பத்தைப் பின்பற்றினவராக நெடுங்காலம் வேதாத்தியயனம் செய்தார். [2] அவரை (மற்ற) ப்ராம்மண சிஷ்யர்களோ அவமதித்தார்கள். அந்த ஆசார்யர் அந்த அவமானத்தை அறிந்து அவருக்கு உடனே வேதசாஸ்திரங்களை (உபதேசித்து) ஸுஜாதை என்கிற தம் குமாரியையும் மனைவியாகக் கொடுத்தார். அவளிடத்தில் அக்

---

1 'கஹோடருடைய' என்பது வேறுபாடம்.

2 'அந்தச் சிஷ்யரான பிராம்மணர் அவருக்குப் பணிவிடை செய்தார். குருவான அவர் அந்தப் பணிவிடையை அறிந்து' என்பது வேறு பாடத்தின் பொருள்.

நிக்குச் சமமான கர்ப்பம உண்டாயிற்று. பிறகு, அது, அத்திய யனம செய்யும பிதாவைப் பார்த்து, 'பிதாவே! இரவு முழுவதும் அத்தியயனம் செய்கிறீர். இது திருத்தமாயில்லை போலும' என்று சொல்லிற்று. சிஷ்யர்களுடைய மத்தியில இகழப்பட்ட அந்த மஹரிஷியானவர் வயிற்றினுள்ளிருக்கிற அந்தக் கர்ப்பத்தை, 'நீ (கர்ப்பத்தில் கைகால்கள் முடங்கி) வக்ரமாயிருக்கையிலேயே பேசுகிறாயாதலால, எட்டுவிதமான கோணலுள்ளவனாகவே பிறப்பாய்' என்று கோபத்தால் சபித்தார். அவர் அப்படியே வக்ரமாகப் பிறந்தார்; மனிதர்களுள் அஷ்டாவக்ரர் என்று ப்ரஸித்தியும் பெற்றார். இவருக்கு ச்வேதகேது என்கிற அம்மான் ஒருவர் இருந்தார். அவர் பிராயத்திலே அந்த அஷ்டாவக்ரருக்குச் சமமானவர். வயிற்றில் வளர்கின்ற புத்திரனால மிக்க துன்புறுத்தப்படுகின்றவளும தனமில்லாதவளும தனத்தில் விருப்பமுள்ளவளுமான ஸுஜாதையானவள், அப்பொழுது ஏகாந்தத்தில் பர்த்தாவை அடைந்து மகிழ்வித்து, 'மஹரிஷியே! எனக்கு இந்த மாதமும பத்தாவதாக இருக்கிறது. எதனால் இந்த ஆபத்தைத் தாண்டுவேனோ அப்படிப்பட்ட பொருளை எனக்குச் சிறிதும் கொடுப்பவன் ஒருவனுமே இல்லை. இப்பொழுது என்ன செய்வேன்?' என்று சொன்னாள். மனைவி இவ்வண்ணம் சொல்லக்கேட்ட கஹோளர், பிறகு, தனத்திற்காக ஜனகராஜனை அடைந்தார். அந்தப் பிராம்மணர், அப்பொழுது வாதத்தில் வல்லவனான வந்தியினாலே தோல்வியடைவித்து ஜலத்தில் மூழ்கும்படி செய்யப்பட்டார். அப்பொழுது, உத்தாலகர், ஸூதனால் வாதத்தில் கஹோளர் அப்படி ஜலத்தில் முழுகுவிக்கப்பட்டதைக் கேட்டு, பிறகு, அங்கே அந்த ஸுஜாதையைப் பார்த்து, 'இந்த விஷயத்தை அஷ்டாவக்ரனிடம் (தெரிவியாமல்) மறைத்துவைக்கவேண்டும்' என்று சொன்னார். அவளும் இவருடைய அந்த ஆலோசனையை (வெளியிடாமல்) காப்பாற்றினாள். அந்த அஷ்டாவக்ரர் பிறந்தபின்னும் இந்த விஷயத்தைக் கேட்டதேயில்லை. அந்த அஷ்டாவக்ரர் உத்தாலகரைப் பிதாவாகவும் அப்படியே ச்வேதகேதுவை ப்ராதாவாகவும எண்ணிக்கொண்டிருந்தார். பிறகு, பன்னிரண்டாம் பிராயத்தில் ச்வேதகேதுவானவர், தம் பிதாவினுடைய மடியில் உட்கார்ந்திருக்கிற அஷ்டாவக்ரரை அழும்பொழுதே கையில்பிடித்து இழுத்து விட்டார்; 'இது உன் பிதாவினுடைய மடி அன்று' என்றும் சொன்னார். அவரால் அப்பொழுது சொல்லப்பட்ட கடுஞ்சொல் அந்த அஷ்டாவக்ரருடைய உள்ளத்தில நிலைபெற்று மிக்க துயரத்தைச் செய்வதாயிற்று. பிறகு,

அந்தபராம்மணர், வீட்டுக்குச்சென்று தம்தாயைப்பார்த்து, 'என்னுடைய பிதா எங்கே?' என்றுகேட்டார். பிறகு, ஸுஜாதையானவள் மிக்கதுயருற்ற உருவத்துடன சாபததினின்றுபயநது இவருக்கு உணமையை உரைததாள். அநதப்ராம்மணர், அந்த உண்மை எல்லாவற்றையும தெரிநதுகொணடு இரவில் ஸ்வேதகேதுவைப பார்ததது, 'ஜனகராஜனுடைய யாகத்தைக்குறித்துச் செல்வோம். அவனுடைய யாகமானது மிக்க அற்புதமாக இருககிறதென்று கேள்வி. அஙகே பிராமமணர்களுடைய (சாஸ்திர) விவாததததைக் கேட்போம. அஙகே சிறந்த அன்னத்தையும புஜிப்போம். நமககு (க் கல்வியில்) மிகக தேர்சசியும் உண்டாகும். வேதகோஷமானது மஙகளகரமானதும் மனததைக்கவாவதுமன்றோ?' எனறு சொன்னார். அம்மானும் மருமானுமான அவர்கள் செல்வப் பெருக்குள்ள ஜனகராஜனுடைய யாகததைக் குறிததுச சென்றார்கள. அஷ்டாவக்ரர், வழியில அரசனை எதிரிலவந்து, 'வழியைவிட்டு விலகிசசெல்' என்றுசொலலப்பட்டவராகி இந்தவாக்கியத்தைச் சொல்லலானார்.

---

## நூற்றுமுப்பத்தைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(ஸ்வேதகேதுவுடன் ஜனகனுடையயாகசாலைக்குச் செல்லக் கருதின அஷ்டாவக்ரரை வாயில்காப்போன் தடுத்ததும், அஷ்டாவக்ரருக்கும் அவனுக்கும் ஸம்வாதமும், அரசன் அஷ்டாவக்ரருக்கு ஸபைக்கு வர அனுமதிகொடுத்ததும்.)**

அஷ்டாவக்ரர், 'குருடனுக்கும செவிடனுககும் ஸதிரீகளுக்கும் சுமைகொண்டுவருகிறவனுக்கும் (விலகி) வழிவிடவேண்டும். பிராம்மணன் அருகில் வாராதபோது வழி அரசனுடையதாகும; நெருங்கிவிட்டாலோ வழி பிராம்மணனுடையதேயாகும்' என்று சொன்னார். அரசன், 'இப்பொழுது என்னால் உமக்கு இதோ வழி விடப்பட்டது. எந்தவழியினால் போகவிரும்புகிறீரோ அந்தவழியினால் உமதுஇஷ்டப்படி செலலும். நெருப்பில் மிகவும் சிறியதான

நெருப்பு இல்லை. இந்திரன்கூட ப்ராயமமணாகளைத் தினம நமஸ்காரம பண்ணுகிறுன்' என்று சொன்ஞன். இவ்வாறு சொலலக்கேட்ட அவர் தம மாதுலனோடுகூடவே இஷ்டமான வழியினுல சென்று யாகசாலையை அடைந்து வாயில்காப்பவனுல முறைபபடி தடுக்கப் பட்டு, அவனைபபார்தது, 'ஐயா! நாஙகள் யாகத்தைப பார்க்க வநதோம். ஆவலானது மிகப் பெருகியிருககிறது. நாஙகள் அதிதி களாக வநதிருக்கின்றேம. வாயிலகாப்பவனே! உள்ளே நுழை வதற்கு உன்னுடைய கட்டளையை விரும்புகிறேம. இவவிடததில் இநதிரதயும்னனுடைய குமாரனுன [1] ஜனகனுடைய யாகததைக காணவந்த நாங்கள் வாதமசெய்ய விருப்பமுள்ளவர்களாகவும ஜனக ராஜனைப் பார்க்க விருப்பமுள்ளவாகளாகவும் இருக்கிறேம. வாயில காப்பவனே! நீ கோபம்கொளளலாகாது. உததமனுன வந்தியுடன் க்ஷணததில் சேர்ப்பிப்பாயாக' என்கிற வசனததைக் கூறினுர். வாயில் காப்போன, 'நாஙகள் வந்தியினுடைய கட்டளையைச செய்பவர்களா. என்னுல் சொல்லப்படுகிற வாககியததை நீர் தெரிந்துகொள்ளும். இந்த இடததில் சிறுவர்களான பிராம்மணர்கள் பிரவேசிக்கிறதில்லை. முதிாந்தவர்களும் கற்றறிந்தவர்களுமான பிராம்மணஶ்ரேஷ்டாகளே பிரவேசிக்கின்றுர்கள்' எனறு சொன்ஞன். அஷடாவக்ரர், 'வாயில் காப்பவனே! இந்த இடததில் உள்ளே செலவது முதிர்ந்தவர்கள் விஷயததில் நியமிக்கப்பட்டிருக்குமாறுல் நான பிரவேசிப்பது தக்கதே. ஏனெனில, நாங்கள், முதிர்ந்தவர்களும் விரதஙகளை அனுஷ்டிததவர்களும் வேதமோதுவதனுலுண்டான பெருமையோடு கூடிய வர்களும் (வேத சாஸ்திரங்களைக கேட்பதில்) விருபபமுள்ளவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் வேதாநத சாஸ்திரத்திலும் நிச்சயத்தை அடைந்தவர்களுமாயிருக்கிறேம். (பெரியோர்கள், சிறு வனைச) சிறுவனுக நினைக்கக் கூடாதென்று சொல்லுகிறுர்கள். அக்நி சிறியதாயிருந்தாலும் தொட்டால் எரிக்கிறது' என்று சொன்ஞர். தவாரபாலன், 'முனிவர்களால் அடையப்பட்டதும் அழிவற்ற பிரம் மத்தை அறிவிககின்றதும (மந்திரம் அர்ததவாதம் முதலியவை களால்)அனேக ரூபமுள்ளதும் கர்மகாண்டத்தைக் காட்டிலும சிறந்து விளங்குவதுமான சொல்லை (= உபநிஷத்தை) நீ அறிவாயாகில் சொல். ஏ! உன்னைச் சிறுவனென்றறி. ஏன் புகழ்நது கொள்ளுகிறுய்?

[1] இவன் ஸீதையின் தந்தையல்லன்; முநதினவனுயிருககவேணடும்.

வாதஸித்தியானது உன்னால் எவ்விதத்தாலும் அடையமுடியாதது' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'இலவங்காயின் நடுவிலுள்ள பஞ்சு நன்கு பருத்திருப்பதுபோலச் சரீரம் பருத்திருப்பதைக் கொண்டு (அறிவு) முதிர்ச்சி கருதப்படுகிறதில்லை. ஒருவன் குட்டையானவனும் உடல் சிறியவனுமாயினும் (ஞான ரூபமான) பயனுள்ளவனாயிருந்தால் மிக முதியவனே. எவன் (ஞானப்) பயனில்லாதவனோ அவனுக்கு முதுமைத்தன்மை யில்லை' என்று கூறினார். த்வாரபாலன், 'சிறுவர்கள் இவ்வுலகில் முதிர்ந்தவர்களிடத்தினின்றே ஞானத்தைப் பெற்றுக்கொண்டு நாளடைவிலே வ்ருத்தர்களாகிறார்களல்லவா? சிறிது காலத்தால் ஞானத்தை அடைவதும் ஸாத்யமன்று. பாலனான நீ யாதுகாரணத்தால் முதிர்ந்தவன்போலப் பேசுகிறாய்?' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'தலை நரைத்ததனால் மனிதன் முதிர்ந்தவனாகான். எவன் பாலனாக இருந்தாலும் வேத சாஸ்திரங்களை மிக அறிகிறானோ அவனைத் தேவர்கள் முதிர்ந்தவனென்று அறிகிறார்கள். ரிஷிகள் பிராயங்களாலும் நரைகளாலும் பொருள்களாலும் உறவினர்களாலும் (முதிர்ந்தவரை அறியும்) முறையை ஏற்படுத்தவில்லை. எவன் அங்கங்களுடன் கூடின வேதத்தை அத்தியயனம் செய்திருக்கிறானோ அவனே நமக்கு முதிர்ந்தவன். நான் ராஜ ஸபையில் வந்தியைப் பார்க்க விரும்பி வந்திருக்கிறேன். வாயில் காப்பவனே! 1 பொன்மாலையை அணிந்துகொண்டிருக்கிற அரசனுக்கு நான் வந்திருப்பதைத் தெரிவிப்பாயாக. வாயில் காப்பவனே! நாம் விதவான்களோடு வாதம் செய்கின்றதை இப்பொழுது பார்ப்பாய். வந்தியோடுகூட வாதம் பெருகினால் அவனை ஜயிக்கப்பட்டவனாகவும் பார்ப்பாய். கல்வி நிரம்பினவர்களும் பிரதான புரோஹிதர்களுடன் கூடினவர்களுமான பிராம்மணர்கள் அரசனோடு கூடவே இப்பொழுது எல்லாரும் பேசாமலிருக்குந்தருணத்தில் உயர்வையோ தாழ்வையோ பார்க்கக்கடவர்' என்று சொன்னார். த்வாரபாலன், 'பத்து வயதுள்ளவனான நீ மிகக் கற்றவர்களான விதவான்களால் நுழையத்தக்க யாகசாலையில் எவ்வாறு நுழையலாம்? நான் உனக்காக உபாயத்தால் முயல்வேன். உள்ளே செல்வதில் உள்ளபடி முயற்சியைச்செய். இதோ அரசர் உன்னுடைய சொல்

1 'புஷ்கரமாலிநே' என்பது மூலம்; 'பொன் மாலையைத் தரித்த' என்பது பழையவுரை. 'தாமரை மலர் மாலையணிந்த' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

கேட்கக்கூடிய இடத்தில் வீற்றிருக்கிறார். நீ இவரைத் திருத்தமான சொற்களால் துதிப்பாயாக இவர் உள்ளே வருவதில் அநுமதியை யும் உனக்கு இஷ்டமான அனைத்தையும் ப்ரீதியுடன் கொடுப்பார்' என்று சொன்னான்.

அஷ்டாவக்ரர், 'ஓ! ஓ! அரசனே! ஜனக வம்சத்தில் பிறந்த அரசர்களுள் மேன்மை வாய்ந்தவனே! நீயே ஸம்ராட் (= பேரரசன்). உன்னிடத்தில் எல்லாம் நிறைந்திருக்கின்றன. (இக்காலத்தில்) நீயும் முற்காலத்தில் யயாதி மஹாராஜன் ஒருவனுமே யாக கர்மாக்களைச் செய்கிறவர்கள். வித்வானான வந்தியானவன் வாதம் அறிந்தவர்களைத் தனக்கு எதிரியில்லையென்றெண்ணி, வாதத்தில்வென்று தோற்றவர்க ளனைவரையும் உன்னால் கட்டளையிடப்பட்டவர்களும் உன்னிஷ்டத் தைச் செய்பவர்களுமான வேலைக்காரர்களைக்கொண்டு ஜலத்தில் அமிழ்த்துவிக்கிறானென்று எங்களுக்குக் கேள்வி. அப்படிப்பட்ட நான் (இதனைக்) கேட்டுப் பிராம்மணர்களினருகில் [1] வேத வேதாந்த அர்த்தங்களை ஸபையில் சொல்வதற்கன்றோ வந்திருக்கிறேன்? அந்த வந்தி எங்கே? அவனை எதிர்த்துச் சூரியன் நக்ஷத்திரங்களை மறையச் செய்வதுபோல நாசஞ் செய்வேன்' என்று சொன்னார்.

அரசன், 'நீ எதிரியான வந்தியினுடைய வாக்கிய பலத்தை அறி யாமலே அவனை ஜயிப்பதற்கு விரும்புகிறாய்; (வந்தியின்) வல்லமையை நன்கறிந்தவர்கள் இவ்வண்ணம் சொல்லுதல்கூடும். வாதஞ்செய் வதில் தேர்ந்த பிராம்மணர்கள் இவனுடன் (வாதம் செய்து) பார்த் தும் விட்டார்கள். முற்காலத்தில் இந்த வந்தியினுடையபலத்தை அறியாமல் இவனை வெல்லவிரும்பின பிராம்மணர்கள் இவனோடு எதிர்த்து ஸூர்யனால் நக்ஷத்திரங்கள் ஒளியற்றனவாவதுபோல ஒளி யற்றவராயினர். உனக்கு இதில் முயற்சியுண்டானது ஆசைபற்றிய தன்றோ? அது வந்தியையெதிர்த்தால் அவ்வாறே நாசமடையும். குழந் தாய்! மிக்க அறிவுடையவர்களே தோல்வி அடைவிக்கப்பட்டார்கள். நீ எவ்வாறு இந்த ஸபையை வெல்வதற்கு வல்லவனாவாய்?' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'இவன் எம்போன்றவர்களோடு விவாதம் செய்விக்கப்படவில்லை. ஆதலால், சூரனாகக்கருதப்பட்டு அச்சமற் றுப் பேசுகிறான். இப்பொழுது என்னை எதிர்த்து (என்னால்) வெல்லப்பட்டவனாக, வழியில் முறிந்துகிடக்கிற வலிமையற்ற

---

1 'பரம்மாத்வைதம்' என்பதும் 'பரமமாத்யம்வை' என்பதும் வேறு பாடங்கள்.

அச்சுள்ள வண்டிபோலக் கிடக்கப்போகிறான்' என்றுசொன்னார். அரசன், 'ஆறு [1] நாபியுள்ளதும் பன்னிரண்டு அச்சுக்களுள்ளதும் இருபத்துநான்கு பொருத்துக்களுள்ளதும் முந்நூற்றறுபது ஆர்களுள்ளதுமான (சக்கரத்தின்) பயனை எவன் அறிவனோ அவன் சிறந்த கவி' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'இருபத்துநான்கு பொருத்துக்களுள்ளதும ஆறு நாபியுள்ளதும் பன்னிரண்டு அச்சுக்களுள்ளதும் முந்நூற்றறுபது ஆர்களுள்ளதும் எப்பொழுதும ஓடிக்கொண்டே யிருக்கிறதுமான [2] (கால) சக்கரம உன்னைப்பாதுகாக்க வேண்டும' என்றுசொன்னார். அரசன், '(தேரில்) பூட்டப்பட்ட இரண்டு பெண்குதிரைகள்போலச் சேர்ந்திருப்பவைகளும் பருந்துகள் போல விழுகின்றவைகளுமான (இரண்டுவஸ்துக்களிருக்கின்றன.) தேவர்களுள் எவன் அவற்றைக் காப்பதில் தரிக்கிறான்? அவ்விரண்டும் எதைக்கர்ப்பத்தை உண்டுபண்ணுகின்றன?' என்றுகேட்டான். அஷ்டாவக்ரர், 'அரசனே! [3] உன்னுடைய வீட்டிலும் உன்பகைவரின் வீட்டிலுங்கூட அவ்விரண்டும் [4] (மின்னலும் இடியும) நேரவேண்டாம். [5] மேகமானது (அவ்விரண்டையும்) உண்டுபண்ணுகிறது. அவை அந்த மேகத்தையே உண்டுபண்ணுகின்றன' என்றுசொன்னார். அரசன், 'எந்தப் பிராணி தூக்கத்தில் கண்ணை மூடாமல இருக்கிறது? எந்த வஸ்துவானது பிறந்து அசைவற்றிருக்கிறது? எதற்கு இருதயம் இல்லை? எது வேகத்தால் வ்ருத்தியடைகிறது?' என்று வினவ, அஷ்டாவக்ரர், '[6] மீன் தூக்கத்தில் கண்ணை மூடுகிறதில்லை. [7] முட்டையானது பிறந்தும் அசைகிறதில்லை. [8] சரீரமில்லாததற்கு இருதயமில்லை. [9] நதியானது வேகத்தால் வ்ருத்தி

1 ஆதிபர்வம 64-ம பக்கம குறிப்பிற்காண்க.

2 'காலந்தவறாமல செய்தஅறம' என்பது பழையவுரை.

3 வேறுபாடம். 4, 5 'துயரமும் மரணமும் என்பதும, மனம் என்பதும கருத்து' என்பது பழையவுரை.

6 'ஜீவாத்மா என்பது கருத்து' என்பது பழையவுரை.

7 'பிரமமாண்டம என்பது கருத்து' என்பது பழையவுரை.

8 'உடலில் பற்றற்றவனுக்கு என்பது கருத்து' என்பது பழையவுரை.

9 'சித்தம என்பது கருத்து' என்பதும, 'ஸ்வரூப ஞானத்துக்கு அழிவில்லை யென்பதும், காணப்படுவன எல்லாம ஜடமென்பதும், சரீரத்தில பற்றற்றவனுக்கே முக்தி யென்பதும், மனமே பிரபஞ்சமென்பதும இந்த விடைகளால விளக்கப்பட்டன' என்பதும் பழையவுரை.

அடைகிறது' என்று சொன்னார். அரசன், 'தேவன்போன்ற திறமை வாய்ந்தவனே! நான் உன்னை மனிதனாக எண்ணவில்லை. நீ பாலனல்லை. என்றால் முதிர்ந்தவனாகக் கொள்ளப்படுகிறாய். வாக்குகளின் பிரஸங்கத்தில் உனக்கு ஒப்பான மனிதன் இல்லை. கற்றறிந்தவனே! ஆதலால், ஸபையில் நுழைவதற்கு இதோ நான் வழியைக் கொடுக்கிறேன்' என்று சொன்னான்.

---

## நூற்றுமுப்பத்தாறுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

**(அஷ்டாவக்ரருக்கும் வந்திக்கும் வாதம் நடந்ததும், தோற்ற வந்தி ஜலத்தில் அமிழ்ந்ததும், ஜலத்தில் அமிழ்த்தப்பட்டிருந்த எல்லாப் பிராம்மணர்களும் எழுந்ததும், அஷ்டாவக்ரர் தந்தையுடனும் அம்மானுடனும் தமதாஸ்ரமம் சென்றதும், அஷ்டாவக்ரர் பிதாவின் கட்டளையால் ஸமங்கை என்கிற நதியிலிறங்கியதும், அவருடம்பின் கோணல் நிமிர்ந்ததும்)**

அஷ்டாவக்ரர், '[1] உக்ரமான சேனையுள்ளவனே! அரசனே! இங்கே வந்து கூடியிருப்பவர்களும் ஒப்பற்றவர்களுமான இந்த அரசர்களுள், மஹாஜனத்தில் பிரம்மத்தைப்பற்றிப்பேசுகிற வாதிகளுக்கு வேறு தெரிந்துகொள்ளவேண்டிய விஷயமில்லாததுபோல, எனக்கும், (வந்தியை அறிவதைத் தவிர) வேறு தெரிந்துகொள்ள வேண்டிய விஷயமில்லை. வாதஞ்செய்து (தோற்றவர்களை) முழுகச்

---

1 'உக்ரமான சேனையுடன் கூடியவனே! அரசனே! இச் சபையினகண் வந்து கூடியிருப்பவர்களும் நிகரற்றவர்களுமான அரசர்களின் நடுவில் வாதிகளுள் சிறந்தவனான வந்தியை நான் அறியவில்லை. பெரிய நீர் நிலையில் அன்னப் பறவையைத் தேடுவதுபோல நான் அவனைத் தேடி அறிகிறேன். அதிவாதி யென்று காவம் கொண்டவனே! பந்தயத்தை ஒப்புக்கொண்டவனும் நதியின் நீரோட்டம் போன்றவனுமான நீ இப்பொழுது நன்கு மூண்டெரிகின்ற (ஊழித்) தீப்போன்ற என்னை மீறிச் செல்லப் போகிறதில்லை. வந்தியே! இப்பொழுது இந்தச் சபையில் என் முன்னிலையில் உறுதியுள்ளவனாக இரு' என்பது வேறுபாடத்தின் பொருள்.

செய்துகொண்டிருந்த நீ, தனமில்லாதவன் ஆற்றின் ஜலத்தில் விழுந்து மீளாமற்போவதுபோல விடுபடமாட்டாய். வந்தியே! நன்கு மூட்டப்பட்ட தீபோலிருக்கிற என் விஷயத்தில் இப்பொழுது இங்கே ஸ்திரமாக இரு' என்று சொன்னார். [1] வந்தி, 'தூங்கிக் கொண்டிருக்கிற புலியை எழுப்பாதே. கடைவாய்களை நக்கிக்கொண்டிருக்கிற ஸர்ப்பத்தைத் தலையில் மிதித்தால், காலால் மிதிக்கப்பட்ட அதனிடமிருந்து நீ கடிக்கப்படாமல் விடுபடமாட்டாய். அதனைத் தெரிந்துகொள். திடமான தேகமுள்ளவனும் (புத்தி) பலம் சிறிது மில்லாதவனுமான ஒரு மனிதன் கொழுப்பினால் மலையைக் குத்தினால் அவனுடைய கையே நகங்களுடன் பிளக்கப்படுகிறது. மலைக்குக் காயம் காணப்படுகிறதேயில்லையன்றோ?' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'மைநாகத்துக்கு மற்ற மலைகள் போலவும் வண்டியிழுக்கிற காளைக்குக் கன்றுக்குட்டிகள்போலவும் மிதிலாதிபதியான அரசனுக்கு எல்லா அரசர்களும் கீழ்ப்பட்டவர்களாக இருக்கிறார்கள். எப்படி தேவர்களுள் மஹேந்திரன் மிகச் சிறந்தவனோ, எப்படி நதிகளுள் கங்கை மிகச் சிறந்ததோ அப்படியே அரசர்களுள் நீ ஒருவனே மிகச் சிறந்தவன். வந்தியை என்னருகில் அழைத்துவரச் செய்வாயாக' என்று சொன்னார்.

அரசனே! அஷ்டாவக்ரர் ஸபையில் இவ்வண்ணம் கர்ஜித்துக் கோபம் மூண்டவராக வந்தியைப் பார்த்து, 'என்னால் சொல்லப்படும் வாக்கியத்துக்கு நீ விடைகூறுவாயாக. உன்னுடைய வாக்கியத்திற்கும் நான் விடை கூறுகிறேன்' என்று சொன்னார். வந்தி, 'அக்னி ஒருவனே பலவாறு மூட்டப் படுகிறான். ஸூர்யன் ஒருவனே இந்த உலகம் முழுமையினும் பிரகாசிக்கிறான். வீரனான தேவராஜன் ஒருவனே பகைவரைக் கொல்லுகிறான். யமன் ஒருவனே பிதருக்களுக்குத் தலைவன்' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'நண்பர்களான இந்திரனும் அக்

---

1 இந்தப் பகுதியும் அஷ்டாவக்ரர் சொன்னதாகவே கொண்டு, 'என்னைப் படுத்துக்கொண்டிருக்கிற புலியென்று அறிவாயாக. பிதாவினுடைய நிக்ரஹத்தினால் முந்தியே காலால் மிதிக்கப்பட்டிருக்கிறவனும் கடைவாய்களை நக்கிக் கொண்டிருக்கிற ஸர்ப்பம் போன்றவனுமான அப்படிப்பட்ட என்னுடைய தலையை மிதித்து என்னிடத்தினின்று கடிக்கப்படாமல் நீ விடுபடமாட்டாய்' என்று பொருள் செய்வது பழையவுரை.

ஷியும் இருவராகவே ஸஞ்சரிக்கிறார்கள். நாரதர் பர்வதர் என்கிற தேவரிஷிகளும் இருவரே. அச்வினி தேவர்களும் இருவரே. ரதத்திற்குச் சக்கரங்களும் இரண்டே. பரமேதேவரால் ஏற்படுத்தப்பட்ட கணவனும் மனைவியும் இருவரே' என்று சொன்னார். வந்தி, 'இந்த ப்ரஜையானது தன்னுடைய வினையினால் [1] மூன்று விதமாகப் பிறக்கிறது. மூன்று வேதங்கள் (தாத்பர்யத்தோடு) சேர்ந்தவைகளாக (மூன்று ஆச்ரமங்களுக்கும் உரிய) எல்லாக் கர்மக்கூட்டங்களையும் தாங்குகின்றன. யாகத்தை நடத்துகின்ற மூன்று வர்ணத்தார்கள் [2] மூன்று ஸவனங்களைச் செய்கின்றார்கள். (ஸ்வர்க்கம் நரகம் பூமி என வினைப்பயனை அனுபவித்தற்கிடமான) உலகங்கள் மூன்றே என்றும், (ஸூர்யன் சந்திரன் அக்னி என) ஒளிகள் மூன்றே என்றும் சொல்லுகிறார்கள்' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'பிரம்ம வித்துக்களுக்கு ஞானத்தை அடைவதற்கிடமான ஆச்ரமங்கள் நான்கு. நான்கு வர்ணத்தார்கள் இந்த ஞான யாகத்தை நடத்துகிறார்கள். விராட் ஸூத்ராத்மா அந்தர்யாமி தூரீய மூர்த்திகளின் ஸாக்ஷாத்காரரூபமான நிலைமைகள் நான்கு உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளைத் தெரிவிப்பனவான அகாரம், உகாரம் மகாரம், அர்த்தமாத்ரை ஆகிய அக்ஷரங்களும் நான்கு. வாக்கும், பரா பச்யந்தீ மத்யமா வைகரீ என்கிற நான்குபாதங்களுள்ளதென்று எப்பொழுதுமே சொல்லப்பட்டது' என்று கூறினார். வந்தி, 'அக்னிகள் [3] ஐந்து. [4] பங்க்தீச்சந்தஸானது ஐந்து பாதங்களுள்ளது. [5] யாகங்கள் ஐந்தே. இப்படியே சப்தம் முதலியவற்றை க்ரஹிக்கிற இந்திரியங்களும் [6]ஐந்து. சரீராகாரமாகப் பரிணமிக்கின்ற ஜலப்ரதான

---

1 நலவினையினால, தேவா, தாவரம, மனிதா என மூன்று, தீவினையினால நரகர், தாவரம, திர்யக என மூன்று.

2 ப்ராதஸ்ஸவனம், மாத்தியந்தினஸவனம, ஸாயம்ஸவனம.

3 கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணாக்னி, ஸப்யம, ஆவஸத்யம.

4 'உக்தா, அத்யுக்தா, மத்யா, ப்ரதிஷ்டா, ஸுப்ரதிஷ்டிதா, காயத்ரீ, உஷ்ணிக, அநுஷ்டுப, ப்ருஹதீ, பங்க்தீ, த்ரிஷ்டுப, ஜகதீ, அதி ஜகதீ, சக்வரீ, அதிசக்வரீ, அஷ்டி, அத்யஷ்டி, த்ருதி, அதித்ருதி, க்ருதி, ப்ராக்ருதி, ஆக்ருதி, விக்ருதி, ஸங்க்ருதி, அதிக்ருதி, உத்க்ருதி என்ச் சந்தஸுகள் இருபத்தாறு' என்பன வ்ருத்தரத்னாகரம் முதல் அத்யாயம் 19, 20, 21-ஆவது ச்லோகங்கள்.

5 அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸங்கள், சாதுர்மாஸ்யங்கள், பசு, ஸோமம.

6 கண், மூக்கு, நாக்கு, செவி, த்வக்.

மான ஐந்து பூதங்களில் சஞ்சரிக்கின்ற சித்சக்தியும் ப்ரமாணம், விபர்யயம், விகல்பம், நித்ரை, ஸ்ம்ருதி என்கிற ஐந்து வ்ருத்திகளாகிற ஐந்து சிகைகளுடன் கூடியதாக வேதத்தில் காணப்பட்டிருக்கிறது. உலகத்திலும் ஐந்து விஷய ப்ரவாஹங்கள் புண்யமானவை என்று ப்ரஸித்திபெற்றிருக்கின்றன' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'ஆதானத்தில் ஆறு கோக்களைத் தக்ஷிணையாகச் சிலர் சொல்லுகிறார்கள். காலசக்ரத்தை நடத்துகிற இந்த ருதுக்களும் ஆறே. ஞானேந்திரியங்களும்[1] ஆறு. க்ருத்திகைகளும் ஆறு. எல்லா வேதங்களிலும் ஸாத்யஸ்கங்களென்கிற யஜ்ஞவிசேஷங்களும் ஆறு என்று காணப்பட்டிருக்கின்றன' என்று சொன்னார். வந்தி, 'இந்திரியங்களால் அனுபவிக்கத்தக்க உலக விஷயங்களில் பசுக்கள் போலப் பற்றுதலுள்ள[2] ஏழு கிராம்ய பசுக்களும் ஆமுஷ்மிக விஷயங்களில் பற்றுதலுள்ள ஏழு வந்ய பசுக்களும் ஏழு சந்தஸ்ஸுகளும் ஒரு யாகத்தை நடத்துகின்றன. ரிஷிகளும் ஏழுவர். பூஜைகளும் ஏழு. வீணையும் ஏழு தந்தியுள்ளதென்று ப்ரஸித்தமாக இருக்கிறது' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'நூற்றுக்கணக்கானவைகளை அடக்கிக்கொண்டிருக்கிற சணல் நாக்கோணிகள்[3] எட்டு. அப்படியே சிங்கத்தைக் கொல்லுகிற சரபம் எட்டுக்கால்களை உடையது. தேவதைகளுள் வஸுக்கள் எட்டுப் பேர்களென்று கேட்டிருக்கிறோம். எல்லா யஜ்ஞங்களிலும் யூபமும் எட்டுப் பட்டையுள்ளதாக விதிக்கப்பட்டிருக்கிறது' என்று சொன்னார். வந்தி, 'பித்ருக்களை உத்தேசித்துச் செய்கிற யாகத்தில் ஸாமிதேனீ என்கிற அக்கினியை மூட்டுகிற ருக்குக்கள்[4] ஒன்பதென்று சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே, முக்குண

---

1 முன் சொல்லிய கண் முதலிய ஐந்தோடு மனமும் சேர்ந்து ஆறு.

2 முன் சொல்லிய கண் முதலிய ஆறுடன் புத்தியும் சேர்ந்து ஏழு. இவற்றின் விஷயங்களை இம்மைப்பயனில் வந்தபோது கிராம்ய பசுக்கள்; மறுமைப் பயனில் வந்தபோது வந்ய பசுக்கள்.

3 முன் சொல்லிய கண் முதலிய ஏழும் அஹங்காரமும் சேர்ந்த எட்டின் விஷயங்கள்.

4 ஒரே ருக்கு மூன்றுமுறை ஜபிக்கப்பட்டு ஒவ்வொரு முறையிலும் மும்மூன்று ஸமித்துக்கள் ஹோமம்செய்யப்படுதலால் ஸாமிதேனிகள் ஒன்பதாகின்றன.

மயமான ப்ரக்ருதியானது தன் குணங்களின் ஏற்றம் தாழ்ச்சி ஸமம் எனகிற நிலைமைகளால் ஒனபது எண்ணிக்கையைப் பெற்றுப் பல வித வஸ்துக்களை உண்டுபண்ணுகிறதெனறு சொல்லுகிறார்கள். ப்ருஹதீச் சந்தஸானது (தனித்தனி) ஒன்பது அக்ஷரங்களடங்கின நான்கு பாதங்களுடன் கூடியதென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒனபதுவரையிலுள்ள எணகளே வரிசைக்ரமம மாறியிருந்து பல எண்களாகின்றன' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'இவ்வுலகத்தில் தேகமென்கிற பெயருள்ள புரத்தில் வஸிக்கின்ற ஜீவனுக்குத் [1] திசைகள் பத்தென்று சொல்லப்பட்டிருக்கின்றன. பத்து நூறுகளை நிறைந்த ஆயிரமாகச் சொல்லுகிறார்கள். கர்ப்பிணிகள் கர்ப்பங்களைப் பத்துமாதம சுமக்கிறார்கள். தத்துவத்தை உபதேசிக்கிறவர்கள் பத்துப்பேர்கள். தத்துவத்தை நிராகரிப்பவர்கள் பத்துப்பேர்கள். தத்துவ விதயோபதேசத்தைப் பெற்றுக்கொள்ளத் தக்க அதிகாரிகள் பத்துப்பேர்கள்' என்று சொன்னார். வந்தி, 'ஜீவபசுக்களுக்கு இந்திரியங்களால் அறியப்படுகிற விஷயங்கள் பதினொன்று. இந்தப் பதினொரு விஷயங்களே இந்த ஸம்ஸாரத்தில் ஜீவ பசுக்களுக்கு யூபங்களாக இருக்கின்றன. ப்ராணிகளுக்கு ஸந்தோஷம் துக்கம் முதலிய விகாரங்கள் பதினொன்று. தேவர்களுள் ருத்திரர்கள் பதினொருவர் என்று சொல்லப்பட்டிருக்கிறார்கள்' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'வருஷத்தைப் பன்னிரண்டு மாதங்களுள்ளதாகச் சொல்லுகிறார்கள். ஜகதீச் சந்தஸின் பாதமானது பன்னிரண்டு அக்ஷரங்களையே உடையது. [2] ப்ராக்ருதியாகமானது பன்னிரண்டு நாள்களால் முடிக்கத்தக்கதென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வுலகில் அறிஞர்கள் ஆதித்யர்களைப் பன்னிருவர்களென்று சொல்லுகிறார்கள்' என்று கூறினார். வந்தி, 'த்ரயோதசி திதியானது சிறந்ததென்று சொல்லப்பட்டிருக்கிறது. பூமியும் பதின்மூன்று தவீபங்களுடன் கூடியது' என்று சொன்னான். வந்தியானவன இவ்வளவு மட்டிலும் சொல்லி ஓய்ந்தான்.

அஷ்டாவக்ரர் ஸ்லோகத்தினுடைய பிந்தியபாதியை உரைத்தார். 'ஸங்கமில்லாத ஜீவாத்மாவானவன் பத்து இந்திரியங்கள் புத்தி மனம் அஹங்காரம் ஆகப் பதின்மூன்றையும் ஆஸ்ரயித்து விஷயேந்திரிய ஸம்பந்தரூபமான போகமென்கிற யஜ்ஞத்தில்

---

1 'வாக்கு முதலிய இந்திரியங்கள் பத்து' என்பது பழையவுரை.

2 'பிரஸித்தமான யாகம்' என்றும கொள்ளலாம்.

நிலைபெற்றிருக்கின்றன. [1] அதிஜகதீச்சந்தஸ்ஸுகளைப் பாதம் ஒன்றுக்குப் பதின்மூன்று முதலான அக்ஷரங்களுள்ளவைகளென்று சொல்லுகிறார்கள்' [2] என்று கூறினர்.

பிறகு, ஸூதபுத்ரனான வந்தி பேசாமல் தலைகுனிந்து மிகக கவலையுள்ளவனாக இருப்பதையும் அஷ்டாவக்ரர் மேலமேல் (விஷயங்களைச) சொல்லிக்கொண்டே இருப்பதையும் பார்த்து, அப்பொழுது, ஸபையில பெரியஆரவாரம எழுந்தது. ஜனகராஜனுடைய எல்லாம் நிரமபின அந்தயஜ்ஞமானது அவ்வாறு ஜனங்களுடைய ஆரவாரத்தால் குழப்பமடைந்திருக்கும தருணத்தில், பிரஸித்தர்களான எல்லாப் பிராம்மணர்களும கைகளைக்குவித்துக்கொண்டும் அஷ்டாவக்ரரைப பூஜித்துக்கொண்டும நேரில வந்தார்கள. அஷ்டாவக்ரர், 'அரசனே! இவனாலேயே, முறகாலத்தில, பண்டிதர்களான பிராமமணாகள வாதத்தில ஜயிக்கபபட்டு ஜலத்தில அமிழ்த்தபபட்டார்கள். இந்த வந்தி இபபொழுது அந்த முறைகளையே அடையககடவன. இவனை விரைவாகப்பிடித்து ஜலத்தில் அமிழ்த்து' என்று சொன்னார். வந்தி, 'ஜனகமகாராஜனே! நான் வருணராஜனுடைய புத்திரன. உன்னுடைய யாகம் இங்கு நடக்கும்போதே அந்த வருணலோகத்தில் பன்னிரண்டு வருஷங்களால நிறைவேற்றத்தக்க ஸத்ரயாகம் நடந்துகொண்டிருந்தது. அதற்காக அந்தச் சிறந்தபிராமமணர்கள் என்னால அனுப்பப்பட்டார்கள். வருணனுடைய யஜ்ஞத்தைப் பார்ப்பதற்காகப் போயிருந்த அவர்களெல்லாரும இதோ மீண்டும வருகிறார்கள. எவரால் நான் தந்தையை அடையப்போகிறேனே அந்தப் பூஜிக்கத்தக்க அஷ்டாவக்ரரைப் பூஜிக்கிறேன்' என்றுசொன்னான். அஷ்டாவக்ரர், 'பண்டிதர்களான எந்தப்பிராம்மணர்கள் வாக்குடனும் மேதையுடனும் தோல்வி அடைவிக்கப்பட்டவர்களாக ஸமுத்திர ஜலத்தில் மூழ்

---

[1] 'ஜ்ஞானவரணமான அஜ்ஞானத்தை அதிக்ரமித்திருக்கிற தாமம முதலியவைகள புத்தி முதலிய பதின்மூன்று இந்திரியங்களைப பக்ஷிக்கிறவைகளென்று சொல்லுகிறாகள' என்பது வேறுபொருள்.

[2] அஷ்டாவக்ரருக்கும வந்திக்கும் ஒன்றுமுதல பதின்மூன்று வரையுள்ள எண்களைக்கொண்டு நடந்த வாதத்தைத தெரிவிக்கும் இந்த ஶ்லோகங்களுக்கு, வெளிப்படையாகத் தோற்றுகிற பொருள் ஒருவாறு இங்கே எழுதப்பட்டது. இவற்றுள ஒவவோா எண்ணுக்கும தாதபரியமாக ஒவவொரு சுலோகம எழுதி அவவவற்றின உள்ளுறைப பொருளை விளக்குவது பழையவுரை. அதனை அவ்வுரையிற காணக.

குட்படி செய்யப்பட்டார்களோ அவர்களுடைய வேதமயமான அந்த வாக்கை மேதையுடன் நான் மீட்டேனென்பதை ஸாதுக்கள் ஆராய்ந்து பார்க்கக்கடவர். நடந்ததை அறியும் நெருப்பானது எரிக்கும் ஸ்வபாவமுள்ளதாக இருந்தாலும் மெய் பேசுபவர்களுடைய சரீரங்களை விட்டுப் பொய் சொல்பவர்களுடைய சரீரங்களை எரிப்பது போல, ஸத்புருஷர்கள், [1] சிறுவர்களோ புத்திரர்களோ பேசுந்திறமை குறைந்தவர்களாயினும் அவர்களுடைய பேச்சில் ஸாரத்தை ஆராய்வார்கள். [2] நறுவிலி மரத்தின் இலையில் போஜனம் செய்தோ பழத்தைச் சாப்பிட்டோ தேஜஸை இழந்தவனாக இருந்துகொண்டு வந்தியின் வசனத்தைக் கேட்கிறாயோ; அல்லது, அவனால் செய்யப்படும் ஸ்தோத்திரங்கள் உன்னை மதமடையும்படி செய்கின்றனவோ; ஜனக! நீ யானையைப்போல வந்தியினால் அதிகமாகத் தூண்டப்பட்டவனாகி என்னுடைய இந்த வசனத்தைக் கேட்கவில்லை' என்று சொன்னார். ஜனகன், 'திவ்ய ரூபத்துடன் கூடியதும் மனுஷ்ய சக்திக்கு மேற்பட்டதுமான உம்முடைய வாக்கைக் கேட்கிறேன். நீர் நேரில் திவ்யரூபத்துடன் கூடியவராக விளங்குகிறீர். நீர் விவாதத்தில் வந்தியைத் தோல்வியடையச் செய்ததனால் இவன் இப்பொழுது உம்முடைய இஷ்டப்படி உமது வசத்திலிருப்பவனாக ஒப்பிக்கப்பட்டுவிட்டான்' என்று சொன்னான். அஷ்டாவக்ரர், 'வேந்தே! இந்த வந்தி உயிரோடிருப்பதனால் எனக்கு யாதொரு பிரயோஜனமுமில்லை. இவனுக்குப் பிதா வருணனேயாகில் ஸமுத்திரத்தில் இவனை மூழ்கும்படி செய்வாயாக' என்று சொன்னார். வந்தி, 'நான் வருணராஜனுடைய புத்திரனே. ஜலத்தில் முழுகச் செய்யப்படுவதில் எனக்குப் பயமில்லை. இந்த அஷ்டாவக்ரர், நெடுங்காலமாகக் காணாமல் போயிருந்த பிதாவான கஹோளரை இந்த முகூர்த்தத்தில் பார்ப்பார்' என்று சொன்னான்.

பிறகு, மகாத்மாவான வருணனால் பூஜிக்கப்பட்ட அந்தப் பிராமணர்கள் எல்லாரும் ஜனகனுடைய ஸமீபத்தில் அந்த ஜலத்

---

1 'ஸத்புருஷர்கள், (பேசுகிறவர்கள்) சிறுவர்களானாலும் புத்ரர்களானாலும் பேசுந்தன்மை குறைந்தவர்களானாலும் அவர்களுடைய பேச்சில் ஸாரத்தை ஆராய்வார்கள்' என்றும் கொள்ளலாம்.

2 'ஶ்லேஷ்மாதகீ' என்பது மூலம்; 'அதன் இலையில் உண்பதும் அதன் பழத்தைப் புசிப்பதும் புத்தியைக் கெடுப்பவை, அதனால், குற்றமுள்ளவை' என்பது பழையவுரை.

திலிருந்து மேலே எழுந்து வந்தார்கள். கஹோளர், 'ஜனங்கள் புத்திரனைப் பெறுவதற்குரிய புண்யகாமங்களால் இதற்காகவே புதல்வர்களை விரும்புகிறார்கள். நான் செய்யமுடியாத அந்தக் கார்யத்தை என்னுடைய புத்திரன் செய்தான். ஜனக! பலமில்லாதவனுக்குப் பலமுள்ள பிள்ளையும், அறிவினால் குறைந்தவனுக்குப் பண்டிதனான பிள்ளையும், கற்றறியாதவனுக்குக் கற்றறிந்த பிள்ளையும் உண்டாகின்றனர்' என்று சொன்னார். வந்தி, 'அரசே! யமன் தானாகவே யுத்தத்தில் கூர்மையுள்ள கோடாலியினால் உன் பகைவர்களுடைய தலைகளை அறுத்துக்கொண்டு (இருக்கிறான்). உனக்கு மங்களமுண்டாகுக. இங்கே ஜனகராஜனுடைய இந்த யாகத்தில் உக்தயமென்கிற க்ரது விசேஷத்தில் கானம் பண்ணத்தக்கதும் பெரிதும் சிறந்ததுமான ஸாமமானது கானம் பண்ணப்படுகிறது; ஸோமரஸமும் நன்கு பானம் பண்ணப்படுகிறது. தேவர்கள் சந்தோஷத்துடன் பரிசுத்தமான ஹவிர்ப்பாகங்களை நேரில் பெற்றுக்கொண்டார்கள்' என்று சொன்னான்.

அரசனே! பிறகு, அந்த எல்லாப் பிராம்மணர்களும் மிக நல்ல ஒளியுள்ளவர்களாக எழுந்தவுடன், ஜனகராஜனால் அனுமதி கொடுக்கப்பட்ட வந்தியானவன் ஸமுத்திர ஜலத்தில் பிரவேசித்தான். அஷ்டாவக்ரர் அந்தப் பிராம்மணர்களால் பிதாவான கஹோளரைப் பூஜிக்கச்செய்து தாமும் உள்ளபடி பூஜிக்கப்பட்டு வந்தியைவென்று அம்மானான ச்வேதகேதுவுடன் சிறந்த ஆச்ரமத்தைக் குறித்தே திரும்பிவந்தார். பிறகு, பிதாவான கஹோளர், மாதாவான ஸுஜாதையின் பக்கத்தில் நிற்கிற இந்த அஷ்டாவக்ரரைப்பார்த்து, 'நீ இந்த ஸமங்காநதியில் சீக்கிரம் ஸ்நானம் செய்வாயாக' என்று சொன்னார். அவர் அவ்வண்ணமே ஸ்நானம் செய்தார். உடனே, கோணல் நிமிர்ந்த அங்கங்களுடன் கூடியவரானார். [1] ஸமங்காநதியும் பாவனமாயிற்று. இதில் ஸ்நானம் செய்கிறவன் பாவத்தினின்று விடுபடுகிறானன்றோ? நீயும் பிராதாக்களுடனும் பார்யையுடனும்கூட [2] ஸ்நானபானாவகாஹநங்களுக்காக இந்த நதியில் பிரவேசிப்பாயாக. குந்தீநந்தன! அஜமீட வம்சத்தில் பிறந்தவனே! பிரஸித்தனாக

---

1 'அதுமுதல் புண்யமான அந்த நதியும் ஸமங்கை என்னும் பெயருள்ளதாயிற்று' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

2 ஸ்நானம், அவகாஹம் இரண்டும் ஒருபொருட்சொற்கள், 'ஸ்நானம், மந்திரங்களோடு நீராடுவது; அவகாஹம், மந்திரங்களின்றி நீராடுவது' என்று வேறுபாடு கொள்ளலாம்.

இருக்கிறீர். இந்த இடத்தில் பிராதாக்களுடனும் பிராம்மணர்களுடனும் ஸுகமாக வஸித்து என்னோடுகூடப் பரிசுத்தமான கர்மங்களிலேயே பற்றுதலுள்ளவனாக வேறு புண்ணியஸ்தலங்களுக்குச் செல்லக்கடவாய்.

---

## நூற்றுமுப்பத்தேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(யுதிஷ்டிரர் ரைப்யருடைய ஆஶ்ரமத்தை அடைந்ததும், லோமசர் யவக்ரீதருடைய உபாக்கியானத்தைச் சொல்லத்தொடங்கியதும், யவக்ரீதர் தம் தகப்பனுக்குமித்திரரான ரைப்யரிடமும் பராவஸுவினிடமும் அர்வாவஸுவினிடமும் பொறுமையினால் உபதேசமில்லாமலே வேதங்களை அறிவதற்காகத் தவம்புரிந்ததும், இந்திரன் தடுத்தும் அவனிடத்தினின்று வலிந்து வரத்தைப் பெற்றதும், பரத்வாஜர் யவக்ரீதருக்குப் பாலதியின் உபாக்யானத்தைச் சொல்லியதும்)

இதோ மதுவிலை என்கிற ஸமங்கையானது நன்கு விளங்குகிறது. பரதன் ஸ்நானஞ்செய்த கர்த்தமிலமென்கிற தீர்த்தம் இது. தர்மத்தினின்று நழுவாதவனே! வ்ருத்ரனைக்கொன்றதனால் செல்வம் குன்றிய இந்திரன் ஸமங்கையில் நீராடி எல்லாப் பாவங்களினின்றும் விடுபட்டானும். புருஷஶ்ரேஷ்டனே! முற்காலத்தில் [1] அதிதியானவள் புத்ரர்களை விரும்பி எந்த இடத்தில் அதற்குரிய அன்னத்தைச் சமைத்தாளோ அந்த விநசனமானது இதோ மைநாகத்தினுடைய மத்தியில் இருக்கிறது. பரத ஶ்ரேஷ்டர்களே! இந்தச் சிறந்த மலையின்மீதேறிப் புகழை அழிக்கின்றதும் வாக்கினால் சொல்லத்தகாததுமான துன்பத்தை விலக்கிக்கொள்ளுங்கள். அரசனே! ரிஷிக

---

1 ‘மைநாகமலை பூமியினுள் மறைந்த இடம் இது. ஆதலால், இது விநசனமெனப்படும். முற்காலத்தில் இங்கே அதிதி புத்ரர்களை விரும்பி, பிரமமௌதனமென்னும் அன்னத்தைச் சமைத்தாள்’ என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

ருக்குப் பிரியமான கனகலங்களென்னும் மலைகள் இவை. யுதிஷ்டிரா! கீர்த்திபெற்ற கங்கையானது இதோ விளங்குகிறது. முற்காலத்தில் பகவானான ஸநத்குமாரர் இந்த இடத்தில் தவத்தின் ஸித்தியை அடைந்தார். அஜமீட வம்சத்தில் பிறந்தவனே! இதில் ஸ்நானம் செய்தால் எல்லாப் பாவங்களாலும் விடப்படுவாய். குந்தியின் புதல்வனே! புண்யமென்று பெயருள்ள மடுவையும் ப்ருகுதுங்கம் என்கிற மலையையும் [1] ஓசையில்லாமல் செல்லுகிற கங்கையையும் அடைந்து ஸஹோதரர்களுடன்கூடி நன்கு ஸ்நானம்செய்வாயாக. ஸ்தூலசிரஸினுடைய ஆஸ்ரமமானது அழகியதாகப்பிரகாசிக்கிறது. குந்தீநந்தன! இந்த இடத்தில் அகங்காரத்தையும் கோபத்தையும் விட்டுவிடு. பாண்டு நந்தன! எந்த இடத்தில் பரத்வாஜபுத்ரரும் வித்வானுமான [2] யவக்ரீதர் நாசமடைந்தாரோ அந்த அழகிய ரைப்யருடைய ஆஸ்ரமம் இதோ விளங்குகிறது' என்று சொன்னார். யுதிஷ்டிரர், 'பிரதாபசாலியான பரத்வாஜ ரிஷியானவர் எவ்வாறு யோக மகிமையுள்ளவராக இருந்தார்? முனிபுத்ரரான யவக்ரீதர் எதற்காக நாசமடைந்தார்? இவையனைத்தையும் நடந்தவண்ணம் உண்மையாகக் கேட்க விரும்புகிறேன். தேவர்களுக்கொப்பான ரிஷிகளுடைய செய்கைகள் சொல்லப்படுவதனால் மிக்க மனக்களிப்படைகிறேன்' என்று சொன்னார்.

லோமசர், 'பரத்வாஜரும் ரைப்யரும் தோழர்களாயிருந்தார்கள். அவர்கள் இந்தக்காட்டின் மத்தியில் மிக்க அன்புபாராட்டிக்கொண்டு வஸித்தார்கள். ரைப்யருக்குப் பராவஸு அர்வாவஸு என்கிற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். பரதகுலத்தில் உதித்தவனே! பரத்வாஜருக்கு யவக்ரீ என்கிற ஒரு புத்திரன் இருந்தான். ரைப்யர் புத்திரர்களோடுகூடி வித்வானாக இருந்தார். மற்றவர் (= பரத்வாஜர்) தவமுள்ளவராக இருந்தார். பரதஸ்ரேஷ்டனே! அவ்விருவருக்கும் நிகரில்லாத அன்பு உண்டாயிற்று. தேஜஸ்வியும் குற்றமற்றவருமான யவக்ரீயானவர் தவசியான தமது பிதா பிராம்மணர்களால் நன்கு மதிக்கப்படாமலிருப்பதையும் ரைப்யர் புத்திரர்களோடுகூடப் பிராம்மணர்களால் நன்கு மதிக்கப்பட்டிருப்பதையும் பார்த்துத் துக்கத்தால் நன்கு கவரப்பட்டவராகி மனவருத்தமடைந்தார். பாண்டவ! பிறகு, அவர், வேதங்களை அறிவதன்பொருட்டுக் கடுந்தவம் புரிந்தார். மிக்க

---

[1] தாக்ஷிணி அல்லது உஷிணி என்றும், கங்கை என்றும் இரண்டாகக் கொள்வது வேறுபாடு. [2] இந்தப் பெயர் யவக்ரீ என்றும் வழங்குகிறது.

பெருந்தவமுள்ள அவர் நன்கு மூட்டப்பட்ட பெரிய நெருப்பில் தேகத்தை வாட்டிக்கொண்டு இந்திரனுக்கு ஸந்தாபத்தை உண்டு பண்ணினர். யுதிஷ்டிர! பிறகு, இந்திரன் யவக்ரீதரிடம் வந்து, 'நீர் எதற்காகக் கடுமையான தவத்தைச் செய்கிறீர்?' என்று வினவினன். யவக்ரீதர், 'தேவகணங்களால் பூஜிக்கப்பட்டவனே! 1 பிராம்மணர்களால் அத்தியயனம் செய்யப்பட்டிராத வேதங்கள் (எனக்குத் தாமாகவே) தோற்றவேண்டுமென்று நான் இந்தச் சிறந்த தவத்தைச் செய்கிறேன். இந்திர! என்னுடைய இந்த முயற்சியானது வேதங்களை அடைவதற்காக. 2 கௌசிக! தவத்தினல் எல்லாச் சாஸ்திரங்களையும் அறிய விரும்புகிறேன். பிரபுவே! குருமுகத்தினின்று வேதங்கள் நீண்டகாலத்தால் அடையத்தக்கவைகளாக இருக்கின்றன. ஆகையால், (அவைகளை) அடைவதற்காக நான் இந்தப் பெருமுயற்சியை அடைந்திருக்கிறேன்' என்று சொன்னர். இந்திரன், 'பிரம்மரிஷியே! நீர் செல்ல விரும்புகிற இது வழியல்லாவழி. பிராம்மணரே! உம்முடைய ஆத்மாவைத் துன்பமடையச் செய்வதால் உமக்கு என்ன பயன்? செல்லும்; குருவினுடைய வாக்கினின்று அத்யயனம் செய்வீராக' என்று சொன்னன். பாரத! இவ்விதம் சொல்லிவிட்டு இந்திரன் சென்றன். பாரத! அளத்தற்கரிய வல்லமையுள்ள யவக்ரீதரும் மீண்டுமே தவம்புரிவதில் முயற்சியைச் செய்தார். அரசனே! பெரிய தவத்தைச் செய்கின்ற யவக்ரீதர் பயங்கரமான தவத்தினல் தேவேந்திரனை மிகவும் ஸந்தாபத்தை அடையும்படி செய்தாரென்று நமக்குக் கேள்வி. அவ்வண்ணம் கடுந்தவம் செய்கின்ற அந்த மஹா முனிவரை அடைந்து, தேவேந்திரன், 'செய்ய இயலாத விஷயம் உம்மால் தொடங்கப்பட்டிருக்கிறது. உம்முடைய இந்தக் காரியம் ஆலோசனையுடன் செய்யப்பட்டதன்று. வேதங்கள் உமக்கும் உமது

---

1 'ப்ராம்மணுநாம' என்பது மூலம், பொருட் பொருத்தத்திற்காக மூன்றும் வேற்றுமையாகக் கொள்ளப்பட்டது.

2 கௌசிகன் என்பது இந்திரனுக்குப் பெயர். 'குசிகராஜன் இந்திரனுக்கு நிகரான புத்திரன் வேண்டுமென்று தவஞ்செய்ய, தன்னைப்போல வேறொருவன் உண்டாவானே என்ற பயத்தால் இந்திரன் குசிகராஜனுக்குத் தானே புத்திரனுனன். அதனல், அவனுக்குக் கௌசிகன் என்னும் பெயர் வந்தது' என்றும், 'இந்திரன் பிறந்தபோது குசத்தால் சூழப்பட்டிருந்தமையால் கௌசிகனென்ற பெயர் பெற்றன்' என்றும் ஹரிவம்சம் கூறும்.

பிதாவுக்குமே (ஓதாமல்) 1 விளங்கா' என்று சொன்னான். யவக்ரீதர், 'தேவராஜனே! என் விருப்பமானது இவ்விதம செய்யப்படாமல போகுமானால் நான் அதிக நியமத்தோடு மிகவும கடுமையான தவத தைச் செய்வேன. இந்திர! தேவராஜனே! இவ்வண்ணமாக என்னால விரும்பப்பட்ட எல்லா விருப்பங்களையும இச்சமயத்தில் நீ செய்யா மல் போவாயாகில் நன்றாக மூட்டப்பட்ட நெருப்பில் ஒவ்வோர் அங்கததையும் அறுதது ஹோமததைச செய்வேன். அதனை நீ தெரிந்துகொள்' என்று சொன்னார்.

புத்திமானான இந்திரன், மஹாத்மாவான அந்த முனிவருடைய அந்த நிசசயததைத தெரிந்துகொணடு, அவரைத தடுப்பதற்காகப் புததியினால் நனறாக ஆலோசிதது, பிறகு, பல நூறு பிராயமுள்ள வரும் வலிமை குறைந்தவரும் க்ஷயரோகமுள்ளவரும தவமுளள வருமான ஒரு பிராம்மணருடைய வடிவததை எடுததுககொணடான். அவன் அந்தக் கங்கையில் யவக்ரீதருககு ஸ்நானம முதலிய காரியங களுககுத் தக்கதாயிருந்த துறையில் மணல்களால் அணைபோட்டான்; சொல்லுகின்ற இநதிரனுடைய சொல்லை அநதப் பிராம்மணஸ்ரேஷ் டர் செய்யாமற் போனபொழுது, அவன் கங்கையை மணல்களால் நன்கு நிரப்புகிறவனாகிக் கங்கையில் மணறபிடிகளை ஓயாமல போட் டுககொண்டிருநதான். இந்திரன் ஸ்நானம் செய்வதற்காகவநத யவக்ரீ தரை அதனைப் பார்க்கும்படி செய்தான். யவக்ரீதர் அணைகட்டுவதில் முயற்சியுள்ள அவனைப் பார்த்தார். அந்த முனிஸ்ரேஷ்டர், உரககச் சிரிததுக்கொண்டு, 'பிராமண! இது என்ன நடககிறது? நீ செய்ய விரும்பியது என்ன? பிரயோஜனமிலலாத இநதப் பெரிய முயற்சி யானது அதிகமாகச் செய்யப்படுகிறதன்றோ?' என்கிற இந்த வசனததை உரைத்தார். இந்திரன், 'கங்கையை அணையினால் கட்டப் போகிறேன். (இதனால்) ஸுகமானவழி ஏறபடும. ஐயா! (இதனைத) தாண்டுகிற ஜனஙகள் அடிக்கடி கஷ்டப்படுகிறார்களன்றோ?' என்று சொன்னான். யவக்ரீதர், 'தபோதன! பெரிதான இந்த நீர்ப்பெருக் கானது உன்னால் கட்டமுடியாதது. முடியாதகாரியததினின்று திருமபி விடு; செய்யக்கூடிய காரியததைத் தொடங்கு' என்று சொன்னார். இந்திரன், 'எப்படி உம்மால் வேதங்களைப் பெறுவதற்காகச் செய் தற்கரிய இந்தத் தவமானது தொடங்கப்பட்டதோ அப்படியே எம்

---

1 நீலகணடா அபிபபிராயபபடி, முன் சுலோகத்திலுள்ள நகாரம் இஙகும் கூட்டிப பொருள்செய்யப்பட்டது.

மால் இந்தப் பொறுப்பானது மேற்கொள்ளப்பட்டிருக்கிறது' என்று சொன்னான். யவக்ரீதர், 'தேவர்களுக்கு இறைவனே! பாகாஸுரனைக் கொன்றவனே! தேவகணங்களுக்குத் தலைவனே! உன்னுடைய இந்த முயற்சியைப்போல என்னுடைய இந்த முயற்சியையும் பயனற்றதென்று எண்ணுகிறாயாகில் உன்னால் செய்யக்கூடிய காரியத்தைச்செய். எவைகளால் நான் விதவானாவேனோ அப்படிப்பட்ட வரங்களையும் வேறுவரங்களையும் எனக்குக்கொடு' என்று சொன்னார். இந்திரன், யவக்ரீதரைநோக்கி, 'உம்மால் விரும்பப்பட்ட வேதங்கள் உமக்கும் உமது பிதாவுக்கும் (தாமாகவே) தோற்றும். இன்னும் நீர் விரும்புகிற வேறு விருப்பங்களையும் யவக்ரீதரான நீர் அடையக் கடவீர்' என்று மிக்க தவமுள்ள அவர் சொல்லிய வரன்களைக் கொடுத்தான். விரும்பியவற்றை அடைந்த அவர், பிறகு, பிதாவை அணுகி, 'எனக்கும் எனக்குப் பிதாவான உமக்கும் வேதங்கள் (ஓதாமலே) விளங்கும். பிறரை மிஞ்சி இருப்போம். அப்படிப்பட்ட வரங்கள் என்னால் அடையப்பட்டன' என்று சொன்னார்.

பரதவாஜர், 'ஐயனே! உன்னிஷ்டப்படி வரன்களை அடைந்ததனால் உனக்கு அகங்காரம் உண்டாகும். அகங்காரத்தால் நிறைந்தவனும் அல்பனுமான நீ சீக்கிரமாக நசிப்பாய். இந்த விஷயத்திலும், தேவர்களால் சொல்லப்பட்ட இந்தக் காதைகளை (ப் பெரியோர்கள்) சொல்லுகிறார்கள். புத்திர! முற்காலத்தில் பாலதி என்று பிரஸித்திபெற்ற ஒரு முனிவர் இருந்தார். அவர், புத்திரசோகத்தால் அதிக மனவருத்தமடைந்து, 'எனக்குச் சாகாத பிள்ளை உண்டாக வேண்டும்' என்று செய்ய மிக அரிய தவத்தைச் செய்தார். அவர் அப்படிப்பட்ட பிள்ளையை அடையவும் அடைந்தார். தேவர்களால் அந்தப் பாலதிக்கு, 'உமது புத்ரன் அமரர்களுக்கு ஸமனாகான். ஏனெனில், மரிக்குந் தன்மையுள்ளவன் மரியாத தன்மையுள்ளவனாகானன்றோ? ஆதலால், [1] நிமித்தமான ஆயுள் உள்ளவன் ஆவான்' என்று அனுக்கிரகம் செய்யப்பட்டது. பாலதி, 'தேவஸ்ரேஷ்டர்களே! இந்த மலைகள் எதுவரையில் சாஸ்வதமாக இருக்குமோ அதுவரையில் என்மகன் ஜீவித்திருக்கக்கடவன். அப்படியானால் எனக்கு ஆனந்தமாகுமென்பது என் எண்ணம்' என்று கூறினார். அப்பொழுது, அவருக்குக் கோபமுள்ளவனான மேதாவி என்கிற புத்திரன் உண்

1 வேறொரு பொருளின் ஆயுளுள்ள அளவான ஆயுளுள்ளவன.

டானுன். வரன்களைப் பெற்ற அந்த மேதாவி அகங்காரத்தினுல் ரிஷிகளையுமே அவமதித்தான். அந்த மேதாவி மஹரிஷிகளுக்குத் தீமையைச் செய்துகொண்டு இவ்வுலகில் திரிந்தான். மஹா வீர்ய முள்ளவரும் கற்றறிந்தவருமான தனுஷாக்ஷரை அடைந்தான். மேதாவியானவன் அவருக்கு அபகாரம் செய்தான். வீர்யவானுன அவர் அவனைச் சபித்தார். 'சாமபலாகக் கடவாய்' என்று சொல்லப்பட்டும், அவன் சாமபலாகவில்லை. முனிவரான தனுஷாக்ஷரோ அந்த மேதாவி துன்பமடையாமலிருப்பதைப் பார்த்து அதன் காரணத்தை அறிந்து தாமே எருமைக்கடாவின உருவ மெடுத்துக் கொம்பினுல் மலைகளை அசைத்தார். பிறகு, அவன் சாமப லானுன். மஹரிஷியானவர் இவனுடைய (வாழ் நாட்களுக்குக்) காரணமான மலைகளைப் பிளந்தார். நிமித்தம் நாசமடையவே அந்தச் சிறுவன் உடனே உயிர்துறந்தான். பிறகு, பிதா, மரித்த அந்தப் புத்திரனை எடுத்துக்கொண்டு புலம்பினுர். அவர் அதிக துக்கமடைந்து புலம்புகின்றதைப் பார்த்து, வேதங்களை அறிந்த எல்லா முனிவர்களும் கூறிய 'தெய்வத்தால் ஏற்படுத்தப்பட் டதை மனிதன் எவ்விதத்தாலும் தாண்டுவதற்குச் சக்தியுள்ளவனு கான். தனுஷாக்ஷமஹரிஷியானவர் மலைகளைப் பிளந்தாரன்ருே?' என்னும் பொருளுள்ள காதையை என்னிடமிருந்து தெரிந்து கொள்வாயாக. தவத்தைச் செய்பவர்களான சிறுவர்கள் இவ்வண் ணம் வரன்களைப்பெற்று அஹங்காரத்தால் நிரம்பினவர்களாகிச் சீக்கிரமே நாசமடைகிருர்கள். நீ அப்படி ஆகவேண்டாம். இந்த ரைப்யர் மஹாவீர்யமுள்ளவர். இவருடைய புத்திரர்களும் அவ் வித வீர்யமுள்ளவர்கள். குழந்தாய்! நீ அவரை அணுகாமல் ஜாக் கிரதையாயிரு. புத்ர! அவர், கோபிப்பாராயின், கோபத்தால் உனக் குத் துன்பஞ்செய்யத் திறமையுள்ளவர். அவர் பெரிய ரிஷி; தவமுள்ளவர்; கோபமுள்ளவர்' என்று கூறினுர். யவக்ரீதர், 'தந்தையீர்! இவ்வண்ணமே செய்வேன். எவ்விதத்தாலும் மன வருத்தத்தை நீர் அடையவேண்டாம். எப்படி எனக்குப் பிதாவான தேவரீர் பூஜிக்கத் தக்கவரோ அப்படியே ரைப்யரும் எனக்குப் பூஜிக்கத்தக்கவர்' என்று சொன்னுர். அந்த யவக்ரீதர் பிதாவைப் பார்த்து இவ்வண்ணம் அழகான வசனத்தைக் கூறிவிட்டு, ஓரிடத் தினின்றும் பயமில்லாதவராக வேறு ரிஷிகளுக்கு அபகாரங்களைச் செய்துகொண்டு பரமானந்தத்தால் களிப்படைந்தார்.

---

## நூற்றுமுப்பத்தெட்டாவது அத்யாயம்.

# தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(ரைப்யருடைய ஆஶ்ரமத்தில் பராவஸுவினுடைய மனைவியைப் பார்த்து யவக்ரீதர் ஏகாந்தத்தில் அவளை வலிமை செய்ததும், ரைப்யர் அதனையறிந்து யவக்ரீதரைக் கொல்வதற்காக ஒரு பெண் பேயையும் ஒரு ராக்ஷஸனையும் உண்டுபண்ணியதும், அந்தப் பேய் யவக்ரீதரை மயக்கிக் கமண்டலுவைப் பறித்ததும், ராக்ஷஸன் துரத்த யவக்ரீதர் தம் பிதாவின் அக்நிஹோத்ர சாலையில் நுழையப் போனதும், வாயில்காப்பவன் தடுத்ததும், அரக்கன் அவரைக் கொன்றதும்)

*அப்பொழுது, ஓரிடத்திலுமும் பயமில்லாதவரும் ஸஞ்சரிக்கின்றவருமான அந்த யவக்ரீதர் வைசாகமாஸத்தில் ரைப்யருடைய ஆஶ்ரமத்தைக் குறித்துச் சென்றார். பாரத! அவர் அழகியதும் பூத்திருக்கிற மரங்களால் அலங்கரிக்கப்பட்டதுமான ஆஶ்ரமத்தில் கின்னர ஸ்திரீபோல ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிற அந்த ரைப்யருடைய மருமகளைப் பார்த்தார். லஜ்ஜையில்லாதவரும் காமத்தால் அறிவு கவரப்பட்டவருமான யவக்ரீதர், வெட்கத்தோடு கூடினவளான அவளைப்பார்த்து, 'என்னை வந்து அடைவாயாக' என்று சொன்னார். அந்தப்பெண் அவருடைய ஸ்வபாவத்தை அறிந்து அவருடைய சாபத்துக்குப் பயந்தவளாக ரைப்யருடைய தேஜஸ்ஸையும் நினைத்து, 'அப்படியே' என்று சொல்லிச் சென்றாள். பாரத! பிறகு,[1] அவளை ஏகாந்தமான இடத்திற்கு அழைத்துப்போய் வெட்கமடையச் செய்தார். பகைவரை அடக்குபவனே! அப்பொழுது, ரைப்யர் தம் ஆஶ்ரமத்திற்கு வந்தார். யுதிஷ்டிர! தமது மருமகளான பராவஸுவின் மனைவி துயரப்பட்டு அழுவதைப் பார்த்து இனிமையான சொல்லால் அவளைத் தேறுதலடையச் செய்துகொண்டு (துக்க காரணத்தை) வினவினார். மங்களகரியான அவள், யவக்ரீதரால் சொல்லப்பட்ட எல்லாவற்றையும் அப்படியே விவேகத்தை முன்னிட்டுத் தன்னால்*

[1] '*அவள் அவரைத் தனியிடத்துக்கு அழைத்துப்போய் லஜ்ஜையடையச் செய்தாள்' என்றும் கொள்ளலாம்.*

அவர் மறுக்கப்பட்டதையும் ரைப்யரிடம் சொன்னாள். யவக்ரீதருடைய அந்தச் செய்கையைக் கேட்கிற ரைப்யருக்கு அப்பொழுது உள்ளத்தை எரிக்கின்றதுபோன்ற பெருங்கோபம் உண்டாயிற்று. மிக்ககோபமுள்ளவரும் தவசியுமான அவர் அப்பொழுது கோபத்தினால் ஆவேசங்கொண்டவராகி, ஒரு சடையைப் பிடுங்கி விதிப்படி நன்கு மூட்டப்பட்ட அக்கினியில் ஹோமஞ் செய்தார். அந்த அக்கினியிலிருந்து அந்தமருமகளுடைய உருவத்தோடொத்த உருவமுள்ள ஒருபெண்பேய் தோன்றியது. அவர் மீண்டும் மற்றொரு சடையையும் பிடுங்கி அக்கினியில் ஹோமம் செய்தார். பிறகு, அந்த அக்னியிலிருந்து ஜ்வலிக்கின்றவாயுள்ளவனும் பயங்கரமான தோற்றமுள்ளவனுமான ஒரு ராக்ஷஸன் தோன்றினன். அவ்விருவரும், ரைப்யரைப் பார்த்து, அப்பொழுது, 'யாதுகாரியத்தைச் செய்யக்கடவோம்?' என்று கேட்டார்கள். ரிஷியானவர், கோபங்கொண்டு, அவர்களை நோக்கி, 'யவக்ரியைக் கொல்லுங்கள்' என்று சொன்னார். அவ்விருவரும், 'அப்படியே' என்று சொல்லிவிட்டு யவக்ரீதரைக் கொல்லும் விருப்பத்தோடு சென்றார்கள். பாரத! பிறகு, மஹாத்மாவினால் அனுப்பப்பட்ட பிசாசானது அந்த யவக்ரீதரை அடைந்து அவரை மயக்கிக் கமண்டலுவைப் பிடுங்கிக்கொண்டது. கமண்டலு பறிக்கப்பட்டு (அதனால்) அசுத்தரான யவக்ரீதரை நோக்கி அந்த ராக்ஷஸன் சூலாயுதத்தை ஓங்கிக்கொண்டு அருகில் ஓடினன். யவக்ரீதர், கொல்லும் விருப்பத்தோடு சூலத்தைக் கையிற்கொண்டு ஓடிவருகிற அந்த ராக்ஷஸனைப்பார்த்து, விரைவாக எழுந்திருந்து தடாகமிருக்கிற இடத்துக்கு ஓடினார். குளம் ஜலமில்லாமலிருப்பதைப் பார்த்து அவர் மறுபடியும் விரைபவராகி எல்லாநதிகளையும் நோக்கி ஓடினார். அவைகளும் வற்றியிருந்தன. பயங்கரமானவனும் சூலத்தைக் கையில் ஏந்தியவனுமான அரக்கனால் துரத்தப்படுகிற அந்த யவக்ரீதர் பயந்து பிதாவின் அக்னிஹோத்திர சாலையில் விரைந்து நுழைந்தார். அரசனே! நுழைகின்ற அந்த யவக்ரீதர், காவற்காரனும் குருடனுமான சூத்திரனால் வாயிலில் வலிந்து தடுக்கப்பட்டார். அவர் வெளியிலேயே நின்றார். சூத்திரனால் தடுக்கப்பட்ட யவக்ரீதரை அந்த ராக்ஷஸன் சூலத்தினால் அடித்தான். அவர் மார்பு பிளக்கப்பட்டுக் கீழே விழுந்தார். அந்த அரக்கன் யவக்ரீதரைக் கொன்றுவிட்டு ரைப்யரிடம் வந்தான். ரைப்யரால் அனுமதி கொடுக்கப்பட்டு அந்தப் பிசாசியுடன் வசித்தான்.

---

நூற்றுமுப்பத்தொன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பாரத்வாஜர் தமது புத்ரர் மரித்ததை வாயில்காப்பவனாலறிந்து ரைப்யரும் மூத்தகுமாரனால் கொல்லப்படவேண்டுமென்கிற சாபத்தைக் கொடுத்துப் புத்திரரைத் தஹனம் செய்து தாமும் புத்திர சோகத்தால் தீக்குளித்தது)

குந்திபுத்ர! பாரத்வாஜரோ பிரதிதினமும் செய்யத்தக்க பிரம்ம யஜ்ஞத்தைச் செய்துவிட்டு ஸமித்துக்களினகட்டை எடுத்துக்கொண்டு தமமுடைய ஆஸ்ரமத்தில் நுழைந்தார். எல்லா அக்கினிகளும், அதற்குமுன், அவரைக் கண்டவுடன் வரவேற்றுவந்தன. புத்திரன் கொல்லப்பட்ட அவரை அன்று அக்னிகள் வரவேற்கவில்லை. மிக்க தவமுள்ள அவர் அக்னிஹோத்திரசாலையில் வேறுபாட்டைக்கண்டு, பிறகு, வீட்டைக் காப்பவனும் உட்கார்ந்திருப்பவனும் குருடனுமான சூத்திரனைப் பார்த்து, 'சூத்ர! யாது காரணத்தால் அக்னிகள் என்னுடைய தாசனத்தைக் கொண்டாடவில்லை? நீயும் முன்போல இல்லை. இந்த ஆஸ்ரமத்தில (எல்லாரும) க்ஷேமமா? அற்ப அறிவுள்ள என்னுடைய புத்திரன ரைப்யரை அடையாமல் இருந்தானா? இதனை எனக்கு விரைவாகச் சொல. என்மனம ஸந்தேகப்படுகிறதன்றோ?' என்று வினவினார். சூத்திரன், 'உமமுடைய அல்பபுத்தியுள்ள இந்தப் புதல்வர் ரைபயரை அடைந்தாரென்பது நிச்சயம்; மிக்க பலசாலியான ராக்ஷஸனால் கொல்லப்பட்டுக் கீழே படுத்திருக்கிறானன்றோ? சூலாயுதத்தைக் கையில் ஏந்தின அந்த ராக்ஷஸனால் துரத்தப்பட்டு இன்றவரும் அக்னிஹோத்திர சாலையைக் குறித்து (ஓடிவந்தவருமான) இந்த யவக்ரீதர் வாசலில் என்னால் இருகைகளாலும் தடுக்கப்பட்டார். பிறகு, இந்த இடத்தில் ஆசை கெடுக்கப்பட்டவரும் ஜலத்தைவிரும்பினவருமான அவர் அசுத்தராயிருந்தாரென்பது திண்ணம். அவர் அதிக வேகமுள்ளவனும் சூலத்தைக் கையிலேந்தினவனுமான ராக்ஷஸனால் கொல்லப்பட்டார்' என்று சொன்னான்.

பாரத்வாஜரோ, சூத்ரனால் செய்யப்பட்டதான (புத்ரனைத் தடுத்ததாகிய) அந்தப் பெரிதான அப்ரியத்தைக்கேட்டு மிக்க துயரத்தை அடைந்தவராகி, உயிரை இழந்த புதல்வரை எடுத்துக்

கொண்டு புலம்பலானுர். பரதவாஜர், 'குழந்தாய்! [1] பிராம்மணர்களால அதயயனம் செய்யப்பட்டிராத வேதங்கள் (உனக்கு) நன்கு தோற்றக்கடவன என்று பிராம்மணர்களுடைய நன்மையின் பொருட்டன்ரே நீ தவததைச் செய்தாய்? மஹாதமாக்களான பிராமமணர் கள்விஷயததில் அவ்வாறு நன்மையைச் செய்யும் ஒழுக்கமுள்ளவனும் எல்லாப் பிராணிகளிடமும் ஒரு தீங்கையும செய்யாதவனுமான நீ கொடிய முடிவை அடைந்தாய். அப்பனே! ரைப்யனுடைய வீட்டைப் பாாப்பதினின்று என்ருல் நீ தடுக்கபபட்டிருந்தும, காலனுக்கும் அந்தகனுககும் எமனுக்கும் ஒப்பான அந்த அல்பனை நீ அடைந்தே இருக்கவேண்டும. மிகக தேஜஸுள்ளவனும மிக்க மதிகேடனுமான அவன், பிராய முதிர்நத எனக்கு நீ ஒரே புதஙிரனென்று தெரிநதிருநதும, கோபததின் வசததையே அடைநதான. குழந்தாய! ரைபயனுடைய செய்கையினுல் புததிர சோகததை அடைந்திருககிற இப்படிப்பட்ட நான், உனனை இழந்தமையால உலகில் இனிமையான உயிரை விடபபோகிறேன. துயரமேலிட்ட நான் எவ்வாறு புததிரசோகத்தால் தேகததை விடப்போகிறேனே அவ்வாறே ரைப்யனைக் குற்றமற்றவனுயிருக்கையிலேயே அவனுடைய மூததமகன விரைவாகக கொல்லக்கடவன். எநதமனிதர்களுககுப் புததிரன் பிறக்கவே இல்லையோ, எவாகள் புததிரசோகததை அடையாமல் ஸுகமாகஸஞ்சரிக்கிருர்களோ அவர்களே ஸுகசாலிகள். எவர்கள் புததிரனுல உண்டுபண்ணப்பட்ட சோகததால் மிக்க வியாகுலமான மனமுள்ளவர்களாகவும் துன்பமுற்றவர்களாகவும் பிரியமான தோழர்களைச் சபிக்கின்ருாகளோ அவர்களைக்காட்டிலும கொடும்பாவி யாா? நான் மரிதத புததிரனையும் பார்ததேன்; இஷ்டனுன தோழனையும் சபிததேன். இவ்விதமான ஆபததை இப்புவியில என்னைத் தவிர வேறு எவன் அனுபவிப்பான?' என்று புலமபினுர். பரதவாஜர் இப்படி பலவாருகப் புலம்பிப புததிரனைத தஹனம செய்தார். அதன் பிறகு, (தாமும) நன்கு மூட்டபபட்ட அக்னியில் புகுந்துவிட்டார்.

---

[1] 'பிராம்மணுநாம்' என்பது மூலம். இதன் 495 - பக்கம் குறிபபிற காண்க.

நூற்றுநாற்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(ப்ருஹத்யும்னன் யாகத்தில் பராவஸுவையும் அர்வாவஸுவையும் உதவிக்காக அழைத்ததும், அவர்கள் சென்றதும், மனைவியைப் பார்ப்பதற்காகத் திரும்பிவந்த பராவஸு இரவில் மான் தோல் போர்த்திருந்த ரைப்யரை மிருகமென்றெண்ணிக் கொன்றதும், பராவஸு தந்தைக்குத் தகன முதலியன செய்து பின் யாகசாலைக்குப்போய்த் தான் யாகத்தை நடத்துவதாகவும் தனக்காக அர்வாவஸுவைப் பிராயச்சித்தஞ் செய்து கொள்ளும்படியும் சொல்லியதும், அர்வாவஸு அப்படியே செய்துவந்தும் பராவஸுவின் தூண்டுதலால் பிருஹத்யும்னன் அர்வாவஸுவைத் துரத்தச் செய்ததும், அர்வாவஸு தவத்தினால் தேவர்களை மகிழ்வித்து யவக்ரீதர் முதலியோர் உயிர்பெற்றெழுதல் முதலிய வரங்களைப் பெற்றதும், தேவர்கள் யவக்ரீதருக்கு நேர்ந்த துக்கத்துக்கு உபதேசமின்றி வேதங்கள் தோற்றுவதே பயனென்பதைக்கூறி ரைப்யர் முதலியவர்களைப் பிழைப்பித்ததும்.)

*மஹாபாக்கியமுள்ளவனும் பிரதாபசாலியும் ரைப்யருக்குச் சிஷ்யனுமான பிருஹத்யும்னனென்னும் அரசன், இந்தச் சமயத்திலேயே யாகம் செய்தான். புத்திமானான அந்த ப்ருஹத்யும்னனால் யாகம் செய்வதற்காக ரைப்யரின் புத்திரர்களான பராவஸு அர்வாவஸு இருவரும் ஸஹாயர்களாக வரிக்கப்பட்டார்கள். குந்திபுத்ர! பிதாவினால அனுமதி கொடுக்கப்பட்ட அவர்கள் யாகத்துக்குச் சென்றார்கள். ஆஸ்ரமத்தில் ரைப்யரும் பராவஸுவினுடைய மனைவியும் இருந்தார்கள். பிறகு, பராவஸுவானவன் தன் மனைவியைப் பார்க்க விரும்பி ஒருவனாகத் தன் வீட்டை நோக்கிச் சென்றான். பின்ராத்*

திரியில் தூக்கமயக்கமுள்ளவனுன பராவஸுவானவன், இருள் நீங்காம லிருக்கையிலேயே கானகத்தில் மான்தோலைப் போர்த்துக்கொண் டிருக்கிற பிதாவைக் கண்டான். அவன் பிரவேசிக்க முடியாத காட் டில ஸஞ்சரிககின்ற பிதாவை மிருகமென்று நினைத்தான். மிருக மென்று எண்ணுகின்றவனும் தன் சரீரததின் பாதுகாப்பை விரும்பு கின்றவனுமான பராவஸுவினுல் அப்பொழுது கொல்லவேண்டு மெனகிற விருப்பமில்லாமலே பிதா கொல்லப்பட்டார். பாரத! பரா வஸுவானவன் பிதாவுக்குச செய்யவேண்டிய ப்ரேத கார்யங்களனைத தையும் செய்துவிட்டு, மறுபடியும், அந்த யாகத்தை அடைந்து பிராதாவைபபார்தது, ' இந்தக் கர்மாவை நீ ஒருவனுக நிர்வஹிப்ப தற்கு எவ்விதத்தாலும் சக்தியற்றவன். என்னுல் பிதா மிருகமென்று எண்ணிக கொல்லப்பட்டார். ஐயா! அப்படிப்பட்ட நீ எனக்காக பிரமமஹததி செய்தவர்கள் செய்யவேண்டிய பிராயசசிததவிரததை அனுஷ்டிப்பாயாக. முனிவனே! நான் ஒருவனுகவே இந்த (யாக) கர்மாவைச் செய்வதற்கு ஸமர்ததன்' என்று சொன்னுன். அர்வா வஸு, 'நீ புததிமானுன ப்ருஹதயும்னனுடைய ஸதரததைச செய்வா யாக. நான் உனக்காக இந்திரியங்களை அடக்கினவனுக இருநது கொண்டு பிரமமஹததியின் பிராயச்சிததவிரதத்தை அனுஷ்டிபபேன்' என்று சொன்னுன்: யுதிஷ்டிர! அநத அர்வாவஸுமுனிவன் அப் பொழுது பராவஸுவினுடைய பிரம்மஹத்தியின் பிராயச்சித்தவிர ததததை முடிதது மீண்டும் யாகத்திற்கு வந்தான். பிறகு, பராவஸு வானவன, தம்பி வந்ததைப்பார்த்து, பிருஹத்யும்னனை நோக்கி, 'பிரமம ஹத்திசெய்த இவன் உன்னுடைய யஜ்ஞத்தைப்பார்ப்பதற்கு (யஜ்ஞ சாலையில்) நுழையக்கூடாது. பிரம்மஹததி செய்தவன் பார்ப்பதனு லுங்கூட ஸநதேகமில்லாமல் உன்னைத துன்பமடையச செய்வான்' என்று மகிழ்ச்சியினுல் தழுதழுதத குரலுடன் இந்த வசனத்தைக் கூறி னுன். அரசனே! அபபொழுது, அந்த வேந்தன், அதனைக் கேட்ட வுடன், வேலைககாரர்களுக்கு (அர்வாவஸுவைத துரத்தும்படி) கட்டளை யிட்டான். அரசனே! அப்பொழுது, வேலைக்காரர்களாலே வெளியில் துரததப்படுகின்ற அர்வாவஸு, ' இந்த ப்ரம்மஹததி என்னுல் செய் யப்பட்டதன்று' என்று மீண்டும் மீண்டும் உரைத்தான். பாரத! ஏவலாளர்களால் பிரம்மஹததி செய்தவனென்று அடிக்கடி சொல் லப்படுகின்ற அர்வாவஸு, ' பிரமமஹத்தியானது என்னுல் செய்யப் படவேயில்லை; ப்ரதிஜ்ஞை செய்கிறேன். இது என்னுடைய ஸஹோ தரனுல் செய்யப்பட்டது. என்னுல் அவன் (அந்தத தோஷத்தி

னின்று) விடுவிக்கப்பட்டான்' என்று சொன்னான். கோபத்தால் அவ்வாறு சொல்லுகின்றவனும், அந்த ஏவலாளர்களால் (பொய் சொல்லுகிறவனென்று) அவமதித்துச் சொல்லப்பட்டவனும், பெருந் தவமுள்ளவனுமான பிரம்மரிஷியானவன் பேசாமல் கானகத்தைக் குறித்துச்சென்றான். பிறகு, பிராமமணோத்தமனான அந்த அர்வாவஸு உக்கிரமான தவத்தை மேற்கொண்டு சூரியனை வழிபட்டு ஸூர்ய ஸம்பந்தமான [1] ரகஸ்யவேதத்தை [2] அறிந்தான். பிறகு, யாகங்களில் முதலில் ஹவிர்ப்பாகத்தைப் புஜிப்பவனும் அழிவற்றவனுமான சூரியன் வடிவமுள்ளவனாகி அவனுக்குத் தரிசனம் கொடுத்தான். அரசனே! தேவர்கள் அந்த அர்வாவஸுவினுடைய செய்கையினால் மகிழ்ச்சியுள்ளவர்களானார்கள். தேவர்கள் அர்வாவஸுவை (ரித்விக்காக) வரித்தார்கள்; பராவஸுவை விலக்கினார்கள். பிறகு, அக்னியை முந்தினவனாகக்கொண்ட தேவர்கள் அர்வாவஸுவுக்கு வரனைக்கொடுத்தார்கள். பிராம்மண ஶ்ரேஷ்டனான அவனும், தன்னுடைய பிதா(உயிரோடு) எழுந்திருப்பதையும் தன் பிராதா குற்றமில்லாதவனாதலையும் பிதா (தமக்கு நேர்ந்த) வதவிஷயத்தில் நினைவில்லாமலிருப்பதையும் பரத்வாஜர் யவக்ரீதர் இருவரும் (உயிரோடு) எழுந்திருப்பதையும் (தன்னால் காணப்பட்ட) சூரிய ஸம்பந்தமான வேதம் நிலைபெற்றிருத்தலையும் வரன்களாகக் கேட்டுக்கொண்டான். தேவர்கள், அவனைக் குறித்து, 'இப்படியே ஆகுக' என்று சொல்லி, வரன்களைக்கொடுத்தார்கள். யுதிஷ்டிர! பிறகு, அவர்களெல்லாருமே (முன்போலத்) தோன்றினார்கள்.

பிறகு, யவக்ரீதர் அக்னியைத் தலைவனாகக்கொண்ட தேவர்களைப்பார்த்து, 'தேவர்களுள் சிறந்தவர்களே! என்னால் வேதம் நன்கு அத்தியயனம் செய்யப்பட்டது. விரதங்களும் செய்யப்பட்டன. வேதங்களை ஓதுகின்றவனும் தவசியுமான என்னை ரைப்யர் அப்படிச் செய்யப்பட்ட முறையினால் எவ்வாறு கொல்ல

---

1 'ரஹஸ்யவேதம் = ஸூர்ய மந்திரத்தைப் பிரவிருத்திப்படுத்துகிற வேதம், க்ருணி என்னும் இரண்டெழுத்தும் ஸூர்ய என்னும்மூன்றெழுத்தும் ஆதித்ய என்னும் மூன்றெழுத்தும் ஆகிய எட்டெழுத்துள்ளது ஸூர்ய அஷ்டாக்ஷரம். இது மிக்க சிறப்புடன் கூடியதென்பது காடகப்ராம்மணம்' என்பது பழைய வுரை. இதில் 'ஸூர்ய' என்பதை ஜபிக்கும்போது, 'ஸூரிய' என்று மூன்றெழுத்தாக உச்சரிக்க வேண்டுமென்பர். 2 'க்ருதவாந்' என்பது மூலம்.

வல்லவரானா?' என்று வினவினர். தேவர்கள், 'யவக்ரீதரே! முனிவரே! நீர் சொல்லுகிறபடி மறுபடியும் சொல்லாதீர். முற்காலத்தில நீர் வேதங்களை ஆசார்யரின்றி ஸ்வயமே ஓதினீரல்லவா? இந்த ரைப்யரோ தம் செய்கையினால் ஆசார்யர்களை அதிகப் பிரயாஸத்தால் மகிழ்வித்து உத்தமமான வேதத்தை நீண்டகாலத்தால் ச்ரமப்பட்டு அடைந்தார்' என்று சொன்னார்கள். பிறகு, அக்னியைத் தலைவனாகக் கொண்ட தேவர்கள் யவக்ரீதருக்கு இவ்வண்ணம் உரைத்து அவர்களனைவரையும் பிழைக்கும்படிசெய்து மீண்டும ஸ்வர்க்கலோகத்திற்குச் சென்றார்கள். யுதிஷ்டிர! பிறகு, அந்த யவக்ரீதர் நாற்பத்தெட்டு வருஷங்கள் பிரம்மசர்யத்தை அனுஷ்டித்தார். எப்பொழுதும் பூத்தும் பழுத்துமிருக்கிற மரங்களுள்ள இந்தப் புண்ணியாச்ரமமானது அந்த யவக்ரீதருடையது. ராஜச்ரேஷ்டனே! இந்த ஆச்ரமத்தில் வஸித்தால் எல்லாப் பாவங்களினின்றும் விடுபடுவாய்.

---

நூற்று நாற்பத்தோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(லோமசருடைய தூண்டுதலால் யுதிஷ்டிரர் கைலாஸ முதலிய மலைகளுக்குச் சென்றது.)

பாரத! கௌந்தேய! அரசனே! உசீரபீஜத்தையும் மைநாகத்தையும் ச்வேதகிரியையும் காலசைலத்தையும தாண்டிவிட்டாய். பரதச்ரேஷ்டனே! ஏழுவிதமாகச் செல்லுகிற கங்கையானது இதோ பிரகாசிக்கிறது. எந்த இடத்தில அக்னியானது நித்தியம் பிரகாசிக்கிறதோ அந்த விரஜஸமென்கிற புண்ணியஸ்தானம் இருக்கிறது. அற்புதமான இந்த ஸ்தானம இப்பொழுது மனிதர்களால் பார்க்க முடியாதது. நீங்கள் ஒரு வழிப்பட்ட மனத்துடன் ஆத்மநிஷ்டையைச் செய்யுங்கள். இந்தத்தீர்த்தங்களைப் பார்ப்பீர்கள். தேவர்களுடைய காலடிகளால் அடையாளம் செய்யப்பட்ட இந்த உத்தியானத்தையும் பார்ப்பாய். குந்தீநந்தன! காலசைலமென்கிற மலையையும் நீ தாண்டிவிட்டாய். அரசே! மாணிபத்ரனென்கிற யக்ஷனும் யக்ஷர்களுக்கு அரசனான குபேரனும் சீக்கிரம் செல்லுகிறவர்களான எண்பத்தெண்ணாயிரம் கந்தர்வர்களும் அவ்வளவு கிம்புரு

ஷர்களும் (அவர்களுக்கு) நான்குமடங்கான யக்ஷர்களும இருக்கிற ஸ்வேதகிரியையும மந்தரபர்வதததையும் அடைவோம். புருஷஸ்ரேஷ்டனே! அவர்கள் பலவித உருவமும் வடிவமுமுள்ளவர்களாகவும் பலவித ஆயுதஙகளுள்ளவர்களாகவும் யக்ஷராஜனை மாணிபத்திரனை உபாஸிககிறார்கள். இங்கே அவாகளுக்குச் செல்வப் பெருக்கு அதிகம். அவர்கள் வேகத்தில் காற்றுக்கு ஒப்பானவர்கள். ஐயா! தேவராஜனையும் தன ஸதானததிலிருந்து நிச்சயமாக நழுவசசெய்யக் கூடியவர்களும் பலசாலிகளுமான அவர்களால காக்கப்பட்டவையும் ராக்ஷஸர்களால் காக்கப்பட்டவையுமான மலைகள் அடைதற்கரியவை. பார்த்த! நீ நிகரற்ற ஸமாதியைச செய்வாயாக. பயஙகரர்களான குபேரனுடைய வேறு மந்திரிகளும் (அவனுக்கு) மித்ரர்களான ராக்ஷஸர்களும் இருக்கிறார்கள். குந்தியின் புதல்வனே! அவர்களோடு ஸந்திக்கப்போகிறோம. எதிர்ப்பதில முயற்சியுள்ளவனாக இரு. அரசனே! பாரத! தேவர்கள் வந்துகூடுவதும் மிகப் பெரிய இலந்தை மரமிருப்பதுமன கைலாஸ மலை அறுநூறுயோஜனை உயர்ந்திருககிறது. குந்தீநந்தன! குபேரனுடைய மாளிகையின் ஸமீபத்தில் கணக்கிட முடியாத யக்ஷர்களும ராக்ஷஸர்களும கின்னரர்களும் நாகர்களும் ஸுபர்ணர்களும் கந்தர்வர்களும் வஸிக்கின்றனர். பார்தத! வேந்தே! இப்பொழுது என்னுடைய பீமஸேனனுடைய பலததாலும் காக்கப்படுகின்றவனாகி நீ தவத்துடனும் இந்திரிய அடக்கத்துடனும் அந்த இடங்களில் செல்வாயாக. வருணராஜனும் போர்வெல்பவனான யமனும் கங்கையும் யமுனையும பர்வதஙகளும அஸ்வினீதேவர்களும் மருத்துக்களும் நதிகளும் தடாகங்களும் உனககு மங்களததைக் கொடுக்கக்கடவர். பேராற்றலுள்ளவனே! தேவர்களிடமிருந்தும் அஸுரர்களிடமிருந்தும் வஸுக்களிடமிருநதும் உனக்கு மங்களமுண்டாகுக' என்றார். அந்த லோமசர், கங்கா நதியைநோக்கி, 'கங்காதேவியே! இந்திரனுடையதான பொன்மலையினின்று உன்னுடைய சப்தத்தைக் கேட்கிறேன். நல்லபாக்கிய முள்ளவளே! அஜமீடவம்சத்தில்பிறந்த எல்லாருள்ளும் சிறந்தவனான இந்த அரசனை மலைகளினிடமிருந்து காப்பாற்றுவாயாக. பர்வத புத்திரியே! இந்த மலைகளில் பிரவேசிக்க விரும்புகிற இந்த அரசனுககு ஸுகத்தைக் கொடுப்பாயாக. எல்லா நதிகளுள்ளும் தலைமைவாய்ந்தவளே! ஸகோதரர்களுடனிருக்கும் யுதிஷ்டிரனுக்கு இந்த இடத்தில் மங்களததைக் கொடுப்பாயாக' என்று இவ்வாறு சொல்லிவிட்டு, யுதிஷ்டிரரை, 'ஜாக்ரதையுள்ளவனாக இரு' என்று கட்டளையிட்டார். யுதிஷ்

டிரர், 'லோமசருடைய இந்த மனக்குழப்பமானது இதற்கு முன்னில்லாததாக இருக்கிறது. எல்லோரும திரௌபதியைப் பாதுகாத்து வாருங்கள். தவறலாகாது. ஏனெனில, இந்த இடமானது அடைதற்கரியதென்பது இவருடைய எண்ணம். ஆகையால், இந்த இடத்தில் சிறந்தவாக்கின் சுததியையும் மனத்தின் சுததியையும் தேக சுததியையும கொள்ளுங்கள' என்று சொன்னார். பிறகு, யுதிஷ்டிரர், மிக்க வீர்யசாலியான பீமனைப்பார்தது, 'பீமஸேன! முயற்சியுள்ளவனுகி த்ரௌபதியைக் காப்பாற்று. அப்பா! திரௌபதியானவள், ஜன ஸஞ்சாரமில்லாத இந்த மலைப்ரதேசததிலும், அர்ஜுனனும் ஸமீபத்தில் இலலாமலிருக்கையிலும், பயங்கள் உண்டாகும் தருணங்களிலும் உன்னையே ரக்ஷகனுக அடைகிருள' என்று சொன்னார். பிறகு, மஹாதமாவான அநதத தர்மராஜா, நகுல ஸகதேவர்களிடம்வநது உச்சிமுகர்ந்து சரீரத்தைத் தடவிககொடுதது அவாகளைபபார்தது, 'பயப்படாதீர்கள ; அஜாக்ரதையினறி வாருஙகள' என்று கணணீரால் விளஙகாத குரலுடன் சொன்னார்.

---

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(நடந்து செல்லமுடியாத இடத்தில் த்ரௌபதி முதலியவர்களை யுதிஷ்டிரர் தடுத்ததும், பீமன் அவர்களைத் தான் தூக்கிச் செல்வதாக ஒப்புக்கொண்டதும், வழியில் அவர்கள் தம்மை உபசரித்த ஸுபாதுவினிடம் தம் பரிஜனங்களை வைத்துவிட்டு அர்ஜுனனைப் பார்க்கும் விருப்பத்தால் கந்தமாதன பர்வதத்தைக் குறித்துச் சென்றதும்.)

யுதிஷ்டிரர், 'பீமா! பலமுள்ளவைகளான பிராணிகளும் ராக்ஷஸகணங்களும் அங்கே மறைந்திருக்கின்றன. அக்னியுடனும் தவத்துடனுமே அங்கே செல்லுதல் கூடும். குந்தீ நந்தன! பலத்தை அடுத்துப் பசிதாகங்களைப் போக்கிக்கொள். வ்ருகோதர! பிறகு, பலததையும் ஸாமர்ததியத்தையும் அடை. கைலாஸ பர்வதததைக்குறிதது ரிஷி சொலலியதை நீ கேட்டிருக்கிருய்.

குந்திநந்தன! த்ரௌபதியானவள் எவ்வாறு செல்லுவாளென்பதைப் புத்தியினால் நன்றாக ஆலோசித்துப்பார். பிரபுவே! விசாலமான கண்களுள்ளவனே! பீமா! இல்லாவிட்டால், ஸஹதேவனோடும் தௌம்யரோடும் ஸூதர்களோடும் சமையற்காரர்களோடும் எல்லாப் பரிசாரகர்களோடும் தேர்களோடும் குதிரைகளோடும் வழியில் கிலேசத்தைப் பொறுக்கத் திறமையில்லாத எல்லாப் பிராம்மணர்களோடுங்கூட நீ திரும்பிவிடு. நானும் நகுலனும் மிக்க தவமுள்ள லோமசருமாகிய நாங்கள் மூவரும் லகுவான ஆகாரமுள்ளவர்களாகவும் விரத நியமமுள்ளவர்களாகவும் செல்வோம். நீ என் வரவை எதிர்பார்த்து ஜாக்கிரதையுள்ளவனாகி த்ரௌபதியைப் பாதுகாத்துக்கொண்டு நான் வருகிறவரையில் இந்தக் கங்காத்வாரத்தில் வஸிக்கக்கடவாய்' என்று சொன்னார். பீமன், 'பாரதரே! ராஜபுத்திரியும் ஸ்ரமத்தால் களைத்தவளும் துக்கத்தால் துன்பமுற்றவளும் கல்யாணியுமான த்ரௌபதியானவள் அர்ஜுனனைப் பார்க்க விருப்பத்தினால் செல்லவே செல்வாள். ஆலஸ்யமில்லாதவனும் அதிகமான மனவலிமையுள்ளவனும் யுத்தங்களில் புறங்காட்டி ஓடாதவனுமான அந்த அர்ஜுனன் ஒருவனைப் பாராமலிருப்பதிலேயே உமக்குக் கடுமையான மனவருத்தம் இருக்கிறது. பாரதரே! ஸஹதேவனையும் என்னையும் த்ரௌபதியையும் பாராமலிருப்பதில் உமக்கு மனவருத்தம் உண்டாகுமென்பது சொல்லவும் வேண்டுமோ? பிராம்மணர்களும் நம்முடைய எல்லாப் பரிசாரகர்களும் ஸூதர்களும் சமையற்காரர்களும் மற்றும் கூடவரவேண்டாமென்று நீர் நினைக்கிறவனும் ஆகிய எல்லாரும் இஷ்டப்படி திரும்பக்கடவர். ராக்ஷஸர்கள் பரவியிருக்கிற இந்த மலையிலும் ப்ரவேசிக்கமுடியாத காடுகளிலும் உம்மைவிட்டுப் பிரிவதற்கு ஒருபொழுதும் நான் விரும்பவில்லை. புருஷஸ்ரேஷ்டரே! மஹா பாக்யமுள்ளவளும் பதிவ்ரதையுமான இந்தப் பாஞ்சாலியும் உம்மைவிட்டுத் திரும்புவதற்கு விரும்பமாட்டாள். அப்படியே, எப்பொழுதும் உம்மை அனுஸரித்திருக்கிற இந்த ஸஹதேவனும் ஒருகாலும் திரும்பான். நான் இவனுடைய எண்ணத்தை அறிந்திருக்கிறேன். மஹாராஜரே! மேலும், இந்த இடத்தில் ஸவ்யஸாசியைப் பார்ப்பதில் எல்லாரும் மிக்க ஆவலுள்ளவர்களாயிருக்கிறோம். ஆகையால், எல்லாரும் சேர்ந்தே செல்வோம். அரசரே! அனேக குகைகளுள்ள இந்த மலையானது ரதங்களால் செல்வதற்குக் கூடாததாயிருந்தால்

கால்களாலேயே செல்வோம். நீர் மன வருத்தமடையவேண்டாம். அரசரே! பாஞ்சாலி நடந்துசெல்ல முடியாத இடங்களிலெல்லாம் அவளை நான் தூக்கிக்கொண்டு செல்வேனென்ற எண்ணம் எனக்கு இருக்கிறது. நீர் கவலையற்றவராக இரும். அப்படியே, மெல்லிய தன்மையுள்ள வீரர்களான மாதரீகுமாரர்களிருவரையும் அவர்கள் நடக்கமுடியாத செலலுதற்கரிய இடங்களில் நான் தாண்டச செய்வேன்' என்று சொன்னான். யுதிஷ்டிரர், 'பீம! இவ்வண்ணம் பேசுகிற உனக்குப் பலமானது மேல்மேல் வளர்வதாகுக. வெகு தூரமுள்ள வழியில் பாஞ்சாலியையும் நகுல ஸஹதேவர்களையும் தூக்கிச் செல்ல விரும்புகிறாயென்னும் இது வேறு மனிதனிடததில் இல்லை. உனக்கு மஙகளம். நீ திரௌபதியையும் நகுல ஸஹ தேவர்களையும் தூக்கிச்செல்ல விருப்பமுளளவனாக இருததலால் உனக்குப் பலமும யசஸுமம தர்மமும் கீரததியும் பெருகுவன வாக. புஜபலமிககவனே! உனக்கு ஶ்ரமம் உண்டாகவேண்டாம். உனக்கு அவமானமும் உண்டாகவேண்டாம்' என்று கூறினார்.

பிறகு, மனத்தை மகிழவிப்பவளான பாஞ்சாலியானவள், சிரிததுக் கொண்டு தர்மராஜரைபபார்தது, 'பாரதரே! நான் நடப்பேன். என்னைப்பற்றி மனவருததம் பாராட்டவேண்டாம்' என்கிற வாக்கியத்தை உரைத்தாள். லோமசர், 'குந்திநந்தன! கந்த மாதன பர்வதமானது தவததினாலே அடையக் கூடியது. நாமெல்லாரும் தவததோடு சேருவோம். அரசனே! குந்தியின் புதல்வனே! நகுலனும் ஸஹதேவனும் பீமஸேனனும் நானும் நீயும் அர்ஜுனனைப் பார்ப்போம?' என்று சொன்னார். அரசரே! இவ்வாறு பேசுகினறவர்களான அவர்கள், இமயமலையில் பெரியதும் மிகுதியான யானைகளும குதிரைகளுமுள்ளதும் கிராதர்களாலும் தங்கணர்களாலும் சூழப்பபட்டதும் பல வேடர்களால் நிரம்பியதும தேவர்களால் அடையப்பட்டதும் அனேக அற்புதங்கள் நிறைநதிருப்பதுமான ஸுபாகுவின் தேசத்தை மகிழ்ச்சியுடன் கணடார்கள். குளிந்தர்களுக்கு அரசனான ஸுபாகுவும், தன் தேசத்தின் எல்லையில் அந்தப் பாண்டவர்களைக் கண்டு அன்பை முன்னிட்டுப் பூஜிதது வரவேற்றான். அந்தப் பாண்டவர்களனைவருமே அவனால் பூஜிக்கப்பட்டு அங்கே ஸுகமாக வஸித்தார்கள். சூரியன் நன்கு பிரகாசிததவுடன், அவர்கள் இமயமலையை நோககிப் புறபபட்டார்கள். அரசரே! மஹாரதர்களும் மகாவீர்யமுள்ளவர்களுமான கௌரவ நந்தனர்கள், இந்திரஸேனன்

முதலிய வேலைக்காரர்களையும் அப்படியே சமையற்காரர்களையும் திரௌபதியினுடைய ஆடை ஆபரணங்களெல்லாவற்றையும் குளிந்தாதிபனான அரசனிடம் அடைக்கலமாக வைத்துவிட்டுக் கால்களாலேயே சென்றார்கள். அந்தப் பாண்டவர்கள் அனைவரும் திரௌபதியுடன் கூட மிக்க மனக்களிப்புள்ளவர்களாகவும் தனஞ்சயனைப் பார்க்க எண்ணங்கொண்டவர்களாகவும் அந்த இடத்திலிருந்து மெள்ள மெள்ள நடந்து சென்றார்கள்.

---

நூற்று நாற்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(தனஞ்சயனைப் பாராமையால் வருந்திய யுதிஷ்டிரர், பீமன் முதலியோரிடம் அர்ஜுனனைப் புகழ்ந்துகொண்டே அவனைக் காண்பதற்காகக் கந்தமாதன மலையில் ஏற நிச்சயித்தது.)**

யுதிஷ்டிரர், 'பீமஸேன! [1] இரட்டையரே! பாஞ்சாலி! கானகத்தில் ஸஞ்சரிக்கின்றவர்களான நம்மைப் பாருங்கள். நாம் வலிமை குன்றினவர்களாகவும் துன்பத்தை அடைவிக்கப்பட்டவர்களாகவும் இருக்கிறோமென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொள்ளுகிறோம். தனஞ்சயனைப்பார்க்கும் விருப்பத்தினால் செல்லுதற்கரிய இடத்திலும் செல்லுகிறோம். ஆதலால், முன் செய்த வினைக்கு அழிவு இல்லையென்று நன்கு அறிந்துகொள்ளுங்கள். வீரனான தனஞ்சயனை அருகில் காணாமலிருப்பது, பஞ்சுக் குவியலை நெருப்பு எரிப்பதுபோல, என் அங்கங்களை எரிக்கிறது. வீரனே! அவனைக் காணாமையால் எரிக்கப்பட்டவனும் தம்பிமாருடனிருப்பவனும் வனத்தை அடைந்தவனுமான என்னைத் திரௌபதியின் (கூந்தலைப்பற்றி இழுத்ததான) அந்த அவமானமும் எப்பொழுதும் எரிக்கிறது. விருகோதரனே! நகுலனுக்கு முந்திப் பிறந்தவனும் அளவிறந்த சௌர்யமுள்ளவனும் (பகைவர்களால்) ஜயிக்க முடியாதவனும் உக்கிரமான வில்லையுடையவனுமான பார்த்தனை நான் காணவில்லை. அதனால், தவிக்கிறேன். நான் அவனைப் பார்க்கும் விருப்பத்தாலே உங்களுடன் தீர்த்தங்களிலும் அழகிய காடுகளிலும் தடாகங்களிலும் ஸஞ்சரிக்கிறேன். விருகோதர! வீரனும் ஸத்யஸந்தனும் தனஞ்சயனுமான பீபத்ஸுவை ஐந்து வருஷ

---

1 பொருந்தாமையால் ஒரு சொல் விடப்பட்டது.

காலமாக நான் பாராமையால் தவிக்கிறேன். விருகோதர! கருமை நிறமுள்ளவனும் ஸிம்மம்போன்ற கம்பீர நடையுள்ளவனும நீண்ட கைகளுள்ளவனுமான அந்த [1] அர்ஜுனனை நான் காணமையால் தவிக்கிறேன். குருஶ்ரேஷ்டனே! அஸ்திரங்களை நன்கு கற்றறிந்தவனும் ஸமர்த்தனும யுத்தத்தில் விற்பிடித்தவர்களுள் நிகரற்றவனுமான அர்ஜுனனை நான் காணவில்லை. அதனால், தவிக்கிறேன். தோஷமற்றவனே! பகைவர்களுடைய ஸங்கங்களில் கோபங்கொண்ட யமன்போல ஸஞ்சரிப்பவனும் மதப்பெருக்குள்ள யானைபோன்றவனும் சிங்கம்போன்ற தோள்களையுடையவனுமான தனஞ்சயனைக் காணவில்லை. பீம! வீர்யத்தாலும பலத்தாலும இந்திரனுக்குக் குறையாதவனும் நகுல ஸகதேவர்களுக்கு முந்திப்பிறந்தவனும் வெண்மையான குதிரைகளுள்ளவனும் அளவற்ற பராக்ரமமுள்ளவனும யுத்தத்தில் நாராயணருக்கு ஒப்பானவனும் ஸத்யஸந்தனும உறுதியான விரதமுள்ளவனுமான அந்த அர்ஜுனனைப் பாராமலிருக்கிற எனனுள்ளத்திற்கு ஆறுதலே இல்லை. விருகோதர! நான், அதிகமான துக்கத்தால் கவரப்பட்டு, உக்கிரமான வில்லுள்ளவனும் பகைவர்களால ஜயிக்க முடியாதவனுமான அர்ஜுனனை இரவும்பகலும் நினைக்கிறேன்; அதனால், தவிக்கிறேன். மிக்க அற்பனால் அவமதிக்கப்பட்டாலும் எப்பொழுதும் பொறுக்குந் தன்மையுள்ளவனும் நேர்வழியை அடைந்தவனுக்கும் பயந்தவனுக்கும் ஸுகத்தைக் கொடுக்கிறவனுமான அர்ஜுனன், கபடமாகத் தொடங்கிக் கபடத்தால் கொல்லக் கருதினவன் வஜ்ரபாணியான இந்திரனேயானாலும அவனுக்கும் கொடிய விஷத்திற்கு ஸமானனாக இருப்பான். பகைவனேயானாலும் சரணமடைந்தவனிடத்தில் அவன் மன இரக்கமுள்ளவன்; பிரதாபசாலி; அபயம் கொடுப்பவன்; போர்க்களத்தைப் பார்க்க வழங்காதபடி செய்பவன்; பெரியமனமுள்ளவன்; வலிமைமிக்கவன்; நம்மனைவருக்கும் ஆதாரமாக இருப்பவன். யுத்தத்தில பகைவரை நொறுக்குகிறவன்; சிறந்த பொருள்களையெல்லாம கொண்டுவருகிறவன்; நம்மெல்லோருக்கும் ஸுகத்தை உண்டுபண்ணுகிறவன். பாண்டவ! வீர! துரியோதனன் கவர்ந்துகொண்ட ஏராளமான பலஜாதி திவ்ய ரத்னங்கள் எவனுடைய வீர்யத்தினால் எனக்கு முற்காலத்தில் இருந்தனவோ எவனுடைய கைவன்மையால் எல்லா ரத்தினங்களாலு மிழைக்கப் பெற்றதும் மூவுலகங்களிலும் பிரசித்திபெற்ற

---

[1] 'குடாகேசம' என்பது மூலம்.

துமான ஸபையானது முன்பு எனக்கு இருந்ததோ, வீர்யத்தில் வாஸுதேவருக்கு ஸமானனும் யுத்தத்தில கார்த்தவீர்யனுக்கு நிகரானவனும் ஜயிக்கமுடியாதவனும யுத்தத்தில் அளவுகடந்த வீர்யமுள்ளவனுமான அந்தப்பல்குனனை நான காணவில்லை. பீம! பகைவரைக் கொல்பவனுன அவன், தன் வீரயத்திலை, மிக்கவீர்யமுள்ள பலராமரையும் (பகைவரால்) ஜயிக்கப்படாத உன்னையும வாஸுதேவரையும அனுசரித்தவன். மிக்கதோள்வலிமையுள்ளவனே! வீரனே! எவனுக்குத்தோள்வன்மையிலும் பெருமையிலும புரந்தரன் ஸமானனே, வேகத்தில் வாயு ஒப்பானவனே, முகத்தில் சந்திரன் ஒப்பானவனே, கோபத்தில் பழமையான யமன் ஒப்பானவனே அந்த நரஸ்ரேஷ்டனைப் பார்க்கவிருப்பமுள்ள அப்படிப்பட்ட நாமனைவரும் கந்தமாதன மலையில் செல்வோம் எங்கே விசாலமான பதரீஎன்கிற நரநாராயணர்களின் ஆஸ்ரமமிருக்கிறதோ இயக்கர்களால் எப்போதும வஸிக்கப்பட்ட அந்தச சிறந்தமலையைப் பார்ப்போம். நாம் பெரியதவத்தைச் செய்கின்றவர்களாகி அரக்கர்களால் நாற்புறங்களிலும் அடையப்பட்டதும மகிழ்ச்சிக்குரியதுமான குபேரனுடைய தாமரை ஓடைக்குக் கால்களாலேயே நடந்துசெல்வோம. விருகோதரனே! பாரத! தவம் புரியாதவனும் குரூரனும் உலோபியாலும் மனவடக்கமில்லாதவனும் அந்த இடம் அடையமுடியாதது. பீம! நாமெல்லாரும் ஆயுதங்களுள்ளவர்களாகவும் கத்திகளைக் கட்டிக்கொண்டவர்களாகவும் பெரிய விரதமுள்ள பிராம்மணர்களுடன்கூட அர்ஜுனனுடைய ஸ்தானத்தைக காணபதில் விருப்பமுள்ளவர்களாக அங்கே செல்வோம். குந்தீபுத்ர! நியமமில்லாதவன் ஈக்களையும் காட்டீக்களையும் கொசுகுகளையும் சிங்கங்களையும் புலிகளையும் பாமபுகளையும் அடைகிருன். நியமமுள்ளவன் அவைகளைக் காண்கிறதில்லை அப்படிப்பட்ட நாம் மனத்தை அடக்கினவர்களாகவும் மிதமான ஆகாரமுள்ளவர்களாகவும தனஞ்சயனைப் பார்க்க விருப்பமுள்ளவர்களாகக் கந்தமாதன பர்வதத்தில் பிரவேசிப்போம்' என்று கூறினர்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பாண்டவர்கள் மந்தரகிரிக்குச் சென்று ஆகாச கங்கையை அடைந்ததும், நரகாஸுரனுடைய எலும்புகளின் குவியலைக் கண்டதும், விஷ்ணு நரகாஸுரனைக்கொன்றதையும் பாரத்தால் முழுகிப்போன பூமியை அவர் வராகவடிவமெடுத்து மேலே தூக்கியதையும் லோமசர் சொல்லியதும்.)

லோமசர், 'பார்ப்பவர்களே! (மந்தரத்தைத தவிர) மற்ற மலைகளும் பட்டணங்களும் காடுகளும் நதிகளும் அழகிய தீர்த்தங்களும் ஆகிய எல்லாம் பார்க்கப்பட்டன கைகளால் தீர்த்தமும் தொடப்பட்டது. இந்த வழியானது தேவஸம்பந்தம்பெற்ற மந்தர பர்வதத்துக்குப் போகிறது. பாண்டவர்களே! நீங்கள் எல்லாரும் மனத்தை ஒருவழிப்படுத்தினவர்களும் பயமற்றவர்களுமாகவேண்டும். தேவர்களுடைய வாஸஸ்தானமும் நற்கருமங்களைச் செய்த தேவரிஷிகளுடைய இருப்பிடமுமான இந்தமலை உங்களுக்கு அடையத்தக்கதாகும். ஐயனே! அரசனே! மங்களகரமான ஜலமுள்ளதும் புண்யமானதும் பதரியிலிருந்து உற்பத்தியாவதும் தேவர்கள் ரிஷிகள் ஆகிய இவர்களின் கூட்டங்களால் அடையப்பட்டதுமான மகாநதியானது இதோ செல்லுகிறது. இந்த நதியானது ஆகாயத்தில் ஸஞ்சரிக்கின்ற மகாத்மாக்களான வாலகில்யர்களாலும் மகாத்மாக்களான கந்தர்வர்களாலும் எப்பொழுதும் அர்ச்சிக்கவும் அடையவும் பட்டது. இந்த இடத்தில் ஸாமகர்களான மரீசியும் புலஹரும் ப்ருகுவும் அப்படியே அங்கிரஸும் ஸாமவேதத்தை இனிய குரலுடன் கானம்பண்ணுகிறார்கள். தேவர்களுள் ஶ்ரேஷ்டனான இந்திரன் தேவகணங்களுடன் தினந்தோறும் செய்வதான ஜபத்தைச் செய்கிறான். ஸாத்யர்களும் அஶ்வினீ தேவர்களும் அப்பொழுது அவனுக்குப் பணிசெய்கிறார்கள். ஸூர்யனும் சந்திரனும் க்ரஹங்களும் நக்ஷத்திரங்களும் பகல் இரவு பாகுபாட்டினால் இந்த நதியை அனுஸரித்துச் செல்லுகின்றன. மகாபாக்கியமுள்ளவனே! எந்த வ்ருஷபத்வஜரால் உலகத்திற்கு நிலை ஏற்படுமோ அவர் கங்காத்வாரத்தில் இதன் ஜலத்தை முடியில் தாங்கினார். ஐயா! பகவதியும் தேவியுமான இந்த நதியை நீங்

கள் எல்லோருமே மனத்தையடக்கினவர்களாகி அடைந்து வணங்கக் கடவீர்' என்று சொன்னார். மகாதமாவான அந்த லோமசருடைய அந்த வசனத்தைக்கேட்டு, அந்தப்பாண்டவர்கள் ஆகாச கங்கையை மிக்க அடககத்துடன் நமஸ்கரிததார்கள். தர்மததைச் செய்பவர் களான அநதப் பாண்டவர்களனைவரும் (கங்கையை) வந்தனம் செய்து மகிழ்ச்சி மிக்கவர்களாகி எல்லாரிஷிகணங்களுடனும் மறுபடியும் சென்றார்கள்.

பிறகு, நரஸ்ரேஷ்டர்களான அவர்கள், தூரததில் பிரகா சிக்கின்றதும் வெண்ணிற முள்ளதும் மேருமலை போன்றதும் எல்லாத் திசைகளிலும சிதறிக் கிடப்பதுமான (எலும்புகளின் குவி யலைக்) கண்டார்கள். வாக்கியங்களை அறிநதவரான அந்த லோம சரோ, அந்தப்பாண்டவர்கள் அதைப்பற்றி வினவ எண்ணமுள்ள வர்களாயிருப்பதை அறிந்து, 'பாண்டு நந்தனர்களே! கேளுங்கள். புருஷஸ்ரேஷ்டனே! சிதறி இருப்பவையும் நல்ல ஒளியுள்ளவையும், கைலாஸ சிகரம் போன்றவையும மலை போன்றவையுமாக இதோ நீ காணும் இவைகள், பெரிய சரீரமுள்ளவனான நரகாஸுரனுடைய எலும்புகள். இவை மலையிலுள்ள கல்தரையை அடைந்து மலைபோல விளங்குகின்றன. புராதனரும் தேவரும் பரமாத்மாவும் தேவராஜ னுக்கு நன்மையை விரும்புகின்றவருமான அந்த விஷ்ணுவால் நரகா ஸுரன் நாசம்செய்யப்பட்டான். மிக்கமனவலிமையுள்ளவனான நரகன் பதினாயிரம் வர்ஷம் தவம் புரிந்து தவம் வேதாத்தியயனம் இவற்றின் வலிமையினால் இந்திரனுடைய ஸ்தானததை வேண்டினான். அந்த அஸுரன் பெரிதான தபோபலததாலும் கைகளுடைய வேக பலத்தா லும் ஒருவராலும் அவமதிக்கப்படாதவனாக இருந்துகொண்டு எப் பொழுதுமே(எல்லாரையும) அவமதித்துவந்தான். தோஷமற்றவனே! அந்த இந்திரனோ, அவனுடைய பலததையும் (அவன்) தர்மவிஷயத் தில் விரதங்களைச் செய்தவனாயிருத்தலையும் அறிந்து, அப்பொழுது பயததினால் கவரப்பட்டவனும் மனவருத்தம் மிக்கவனுமானான். அவன்,தேவரும் அழிவற்றவருமான விஷ்ணுவை மனத்தினால் நன்கு தியானித்தான். எவ்விடததிலும் நிறைந்திருப்பவரும பிரபுவும் இணைபிரியாத லக்ஷ்மியையுடையவருமான விஷ்ணுவும் நேரில் வந்து நின்று பிரகாசிததார். ரிஷிகளும் தேவர்களும் ஆகிய அனைவரும் அவரைத துதிசெய்தார்கள். ஜ்வலிககிற காந்தியையுடைய அக்னி பகவான், அவரைப்பார்த்து, அவருடைய தேஜஸுகளால் அடக்கப் பட்டுத் தன்தேஜஸை இழந்தவனானான். வஜ்ராயுதததைத் தரிதத

வருன இந்திரன் வரன்களைக் கொடுப்பவரும் தேவரும் தேவகணங்களுக்கு ஈஶ்வரருமான அந்தவிஷ்ணுவைப் பார்த்துக் கைகளைக் குவித்துக்கொண்டவனும் மிகவணங்கினவனுமாகித் தண்டனிட்டு யாரிடமிருந்து தனக்குப் பயமுண்டாகிறதென்பதை உள்ளபடி உரைத்தான். விஷ்ணு, 'இந்திர! அஸுர ராஜனான நரகனிடத்தினின்று உனக்கு உண்டான பயத்தை நான் அறிவேன். அவன் தவத்தினால் ஸித்தித்த நல்வினையால் இந்திரனுடைய ஸ்தானத்தைப் பிரார்த்திக்கிறான். தேவேந்திர! அப்படிப்பட்ட நான், அவன் தவத்தினால் ஸித்தியடைந்தவனாக இருந்தாலும் உனனிடத்திலுள்ள ப்ரீதியினால் (அவனுடைய) தேகத்தினின்று உயிரை நிச்சயமாகப் பிரித்துவிடுகிறேன். ஒரு முகூர்த்தகாலம் எதிர்பார்த்திரு' என்று கூறினார். மிக்க தேஜஸ்வியான விஷ்ணுவானவர் கையினால் (கன்னத்திலறைந்து) அவனுயிரை வாங்கினார். பிறகு, அவன் அடிக்கப்பட்ட சிறந்த மலைபோலப் பூமியில் விழுந்தான். மாயையினால் கொல்லப்பட்ட அவனுடைய எலும்புக்குவியல் இது. இதோ விஷ்ணுவினுடைய இரண்டாவதான வேறு ஒருசெய்கை விளங்குகிறது. பூமி முழுமையும் பாதாளத்தில் அமிழ்த்தப்பட்டுக் காணமற்போயிற்று. ஒற்றைக் கொம்புள்ள வராக வடிவங்கொண்ட அந்த விஷ்ணுவால் மீண்டும் மேலே தூக்கிக்கொண்டுவரப்பட்டது' என்னும் வசனத்தைச் சொல்லினர்.

யுதிஷ்டிரர், 'பகவானே! இந்தக் கதையை உள்ளபடி விஸ்தாரமாகச் சொல்லக்கடவீர் பிராம்மணரே! அப்பொழுது பாதாளத்தில் அமிழ்ந்து காணமல்போன பூமியானது, தேவநாதரான அவரால் எவ்வாறு நூறுயோஜனைதூரம் மீண்டும் மேலே தூக்கிக் கொண்டுவரப்பட்டது? சராசரங்களைத் தாங்குகின்றதும் அசைவற்றிருப்பதும் மங்கள ஸ்வரூபமுள்ளதும் விளங்குவதும் மிக்க மகிமையுள்ளதும் எல்லாஸஸ்யங்களையும் வளரச் செய்கின்றதுமான பூமியானது யாருடைய மகிமைகாரணமாக எந்தவிதத்தால் நூறு யோஜனைதூரம் பாதாளத்தை அடைந்தது? எதனால் பரமாத்மாவினுடைய அந்த வீர்யமுழுமையும் காண்பிக்கப்பட்டது? பிராம்மணோத்தமரே! இதெல்லாவற்றையும் உள்ளபடி முழுமையும் விஸ்தாரமாகக் கேட்க விரும்புகிறேன் நீர் அதற்கு இருப்பிடமன்றோ?' என்று சொன்னார். லோமசர், 'யுதிஷ்டிர! நீ இந்தக் கதையைச் (சொல்லும்படி) என்னை வினவினையாதலால் இஃதனைத்தையும் இப்பொழுது சொல்லுகிற என்னிடத்தினின்று மிச்சமின்றிக் கேட்கக்

கடவாய். ஐயா! முன்பு க்ருதயுகத்தில், பயங்கரமான ஒரு ஸமயத்தில், புராதனரான ஆதிதேவர் (அஹிம்ஸை, ஸத்யம், அஸ்தேயம், பிரம்மசர்யம், அபரிக்ரஹம என்கிற யோகாங்கமான) யமத்தை அனுஷ்டித்தார். தர்மத்தினின்று நழுவாதவனே! சிறந்த ஸித்தியை உடையவரான அந்தத் தேவதேவர் யோகாங்கமான யமத்தைச் செய்த அந்தக் காலத்தில், ஒரு பிராணியாவது மரணமடையவில்லை; ஆனால், முன்போலவே பிறந்துகொண்டிருந்தது. புருஷஸ்ரேஷ்டனே! பகைவர்களைவாட்டுபவனே! பறவைகளின் கூட்டங்களும் பசுக்களும் [1] கோக்களும் ஆடுகளும குதிரைகளும் மாம்ஸாசிகளான மிருகங்களும் மனிதர்களும் ஆகிய அவையெல்லாம ஆயிரமாயிரமாகவும பதினாயிரம பதினாயிரமாகவும் நீர்ப் (பெருக்குப்) போல விருத்தியடைந்தன. ஐயா! மிக்ககுழப்பமானதும அச்சந்தருவதுமான இந்த ஸமயத்தில், அதிகபாரத்தால் பூமியானது நூறுயோஜன தூரம கீழே அமிழ்ந்து போய்விட்டது. எல்லா அங்கங்களுந் துன்புறுத்தப்பட்டவளும் பாரத்தால அறிவு கவரப்பட்டவளுமான அந்தப் பூமிதேவியானவள் சிறந்த தேவரான நாராயணரிடம் சென்று அவரைச் சரணமடைந்தாள்.

பூமி, 'பகவானே! தேவரீருடைய அருளாலன்றோ நெடுங்காலமாக இங்கு இருக்கக்கூடியவளானேன். (இப்பொழுது) பாரத்தால் நன்கு ஆக்ரமிக்கப்பட்டவளாகிறேன். நிற்பதற்குக் கூடவில்லை. பகவானே! என்னுடைய இந்தப் பாரத்தைப் போக்குவதற்குத தேவரீர் தகுதியுள்ளவராக இருக்கிறீர். தேவரே! நான் உம்மைச் சரணமடைந்தவளாகிறேன். விபுவே! எனக்கு அனுக்கிரஹம் செய்யும' என்று பிரார்த்தித்தாள. அழிவற்றவரும் ப்ரபுவுமான பகவான், அவளுடைய அந்தவசனத்தைக்கேட்டு, 'பூமியே! பாரத்தால் துன்பமடைந்தவளே! தனங்களைத தரித்துக்கொண்டிருப்பவளே! நீ பயப்படவேண்டாம். நீ பாரம் குறைந்தவளாகும்படி நான் இதோ செய்கிறேன்' என்று கேட்பதற்கினிய அக்ஷரங்களுடன் உச்சரிக்கப்பட்ட வசனத்தைச் சந்தோஷத்தோடு சொல்லினர். அவர், மலைகளைக் குண்டலங்களாக அணிந்த அந்தப் பூமிதேவியை அனுப்பிவிட்டு, பிறகு, ஒற்றைக்கொம்புள்ளதும் அதிக காந்தியுள்ளதுமான வராஹமாகத தோன்றினர்; சிவந்த இருகண்களாலும் பயத்தை உண்டுபண்ணிக்கொண்டும் காந்தியினால்

---

1 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

புகையை ஜ்வலிக்கச்செய்துகொண்டும் அந்த இடத்தில் வளர்ந்தார். வீரனே! வேதஸ்வரூபியான [1] அவர் பிரகாசிக்கின்ற ஒற்றைக் கொம்பினால் பூமியை எடுத்து நூறுயோஜனதூரம் மேலே தூக்கினர். அது தூக்கப்படும் தருணத்தில், அதிகக் கலக்கம் உண்டாயிற்று. தேவர்களும் தவத்தைப் பொருளாகக் கொண்ட ரிஷிகளும் ஆகிய அனைவரும் நன்கு கலக்கமடைந்தார்கள். ஸ்வர்க்கம், அந்தரிக்ஷம், பூமி ஆகிய எல்லாம், 'ஆ! ஆ!' என்னும் ஒலியுள்ளனவாயின. தேவனே மனிதனே ஒருவனாவது நல்ல நிலைமையை அடைந்திருக்கவில்லை. பிறகு, ரிஷிகணங்களுடன் கூடின பெரும்பாலரான தேவர்கள், வீற்றிருக்கின்றவரும் காந்தியினால் ஜ்வலிக்கின்றவர்போன்றவருமான பிரம்மதேவரிடம் சென்றனர். அப்பொழுது எல்லோரும், தேவேசரும் உலகங்களுக்கு ஸாக்ஷியாக இருப்பவருமான பிரம்மதேவரை அணுகி கைகளைக் குவித்துக்கொண்டு, 'உலகங்களெல்லாம் மிகக் கலக்கப்பட்டன. ஜங்கமங்களும் ஸ்தாவரங்களும் துன்பத்தை அடைந்தன. தேவநாதரே! ஸமுத்திரங்களுக்கும் கலக்கம் தெரிகிறது. அப்படிப்பட்ட இந்தப் பூமி முழுமையும் நூறுயோஜனதூரம் கீழே சென்று விட்டது. இதென்ன? யாருடைய பிரபாவத்தால் இந்த உலகமானது கலக்கமுற்றது? தேவரீர் எங்களுக்கு இதனை விரைவில் சொல்லக்கடவீர். இந்த ஸமயத்தில், நாங்களெல்லாரும் அறிவை இழந்தவர்களாக இருக்கிறோம்' என்று கூறினார்கள். பிரம்மதேவர், 'ஓரிடத்திலும் ஒருபொழுதும் உங்களுக்கு அஸுரர்களிடமிருந்து பயம் இல்லை. தேவர்களே! எதற்காக இந்தக் கலக்கம் உண்டாகிறதென்பதைக் கேளுங்கள். எல்லா வஸ்துக்களையுமடைந்தவரும் இணைபிரியாத திருவுடனிருப்பவரும் அழிவில்லாத ரூபமுள்ளவரும் எங்கும் நிலைபெற்றிருக்கிறவருமான இவருடைய பிரபாவத்தால் ஸ்வர்க்கத்திற்கு மிகக் குழப்பம் தெரிகிறது. நூறு யோஜனதூரம் ஆழ்ந்து சென்ற இந்தப் பூமி முழுமையும் பரமாத்மாவான அந்த விஷ்ணுவினால் மறுபடியும் உயரத்தூக்கப்பட்டது. அது தூக்கப்படும் தருணத்தில், இந்தக் கலக்கம் உண்டாயிற்று. (இதனை) இவ்வண்ணம் நீங்கள் அறிந்துகொள்ளுங்கள். உங்களுடைய ஸந்தேகத்தையும் விலக்கிக் கொள்ளுங்கள்' என்று சொன்னார். தேவர்கள், 'பகவானே! எந்த இடத்தில் அந்த மகா வராஹமானது ஸந்தோஷமுள்ளதாகப் பூமியை நன்கு மேலே தூக்கிய

[1] இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

தோ அந்த இடத்தைச் சொல்லும். அங்கு நாம் போவோம்' என்று வினவினார்கள். பிரம்மா, 'ஸந்தோஷம்; செல்லுங்கள். உங்களுக்கு மங்களம் நந்தனவனததிலிருக்கிற நாராயணரைப் பாருங்கள். இதோ இநத இடத்தில் சிறந்த காந்தியுடன்கூடின கருட பகவான் பிரகாசிக்கிறார். உலகங்களைக் காப்பவரான பகவான் வராஹ வடிவத்தோடேயே பூமியை மேலே தூக்குகின்றவராகிக் காலாக்கினி போலப் பிரகாசிக்கிறார். இவருடைய மார்பில் ஸ்ரீவதஸமென்கிற மறுவானது நன்கு வெளிப்படையாகப் பிரகாசிக்கிறது தேவர்களே! அனைவரும் இந்த மகாவராஹம் ஶ்ரம'மிலலாம விருப்பதைப் பாருங் கள்' என்று சொன்னார். பிறகு,தேவர்கள் பிதாமஹரை முன்னிட்டுக் கொண்டு மஹாத்மாவான வராஹ மூர்த்தியைப் பார்த்தும், (அவ ருடைய வசனத்தைக்) கேட்டும், அவரிடததினின்று விடைபெற் றுக்கொண்டும், வந்தபடியே சென்றார்கள்' என்று சொன்னார். ஜனமேஜயரே! பாண்டவர்களனைவரும் அந்தக் கதையைக்கேட்டு லோமசரால் காட்டப்பட்ட வழியினால் அதிக ஸந்தோஷ முள்ளவர்க ளாகி விரைவாகச் சென்றார்கள்.

---

நூற்றுநாற்பத்தைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம் (தொடர்ச்சி.)

---

**(கந்தமாதனத்தை நோக்கிப் பாண்டவர்கள் செல்லும்பொழுது நடுவழியில் பெரு மழை பொழிந்ததும், அப்பொழுது அவர் கள் மர முதலியவைகளில் ஒதுங்கியிருந்து மழை ஒய்ந்தவுடன் மறுபடியும் புறப்பட்டதும்.)**

அரசரே! சூரர்களும் நாணேற்றப்பட்ட விற்களுள்ளவர்களும் அம்புத தூணிகளை யுடையவர்களும் அம்புகளுள்ளவர்களும் உடும்புத்தோலாற் செய்த விரலுறை கட்டிக்கொண்டவர்களும் கத்திகளை உடையவர்களும் அளவுகடநத பராக்கிரமமுள்ளவர் களும் எல்லா வில்லாளிகளுள்ளும் சிறந்தவர்களுமான அந்தப் பாண்டவர்கள் பிராம்மண ஶ்ரேஷ்டர்களைக் கூட்டிக்கொண்டு பாஞ்சாலியுடன் கந்தமாதனத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். வீரர்களான பாண்டவர்கள், மனத்தைப் பரமாத்மாவினிடம்

வைத்துக் கிழங்குகளையும் பழங்களையும் புஜிப்பவர்களாகி, தடாகங்களையும நதிகளையும மலைகளையும காடுகளையும் மலையுச்சியில் அதிக நிழலுள்ள மரங்களையும் எப்பொழுதும் பூததும் பழுதது மிருக்கிற (மரங்க) ளுள்ளவையும் தேவர்கள் ரிஷிகள் இவர்களின் கூட்டங்களாலடையப்பட்டவையுமான இடங்களையும் கண்டார்கள். அவர்கள், பற்பலவிதமான அனேக மிருகக்கூட்டங்களைப் பார்த்துக்கொண்டு, பலவித வடிவமுள்ளவையும் காடுமுரடாயிருத்தலால் செல்லுதற்கு அரியவையுமான இடங்களில் ஸஞ்சரிததார்கள். மகாதமாக்களான அவர்கள், ரிஷிகளும் ஸித்தர்களும் தேவர்களுமுள்ளதும் கந்தர்வர்களுக்கும அபஸரஸுகளுக்கும் பிரியமானதும் கின்னரர்களால் அடையப்பட்டதுமான மலையில் சென்றார்கள். பிரஜைகளுக்குப் பதியே! பிறகு, (பாண்டவ) வீரர்கள் கந்தமாதன பர்வதத்தில் செல்லும்போது, உக்கிரமான காற்றுடன் பெருமழை தோன்றியது. பிறகு, மிக்க சருகுகளுடன் கிளம்பின பெரும் புழுதியானது, பூமியையும் ஆகாயததையும் தேவலோகத்தையும் விரைவில் மூடியது. ஆகாயமானது புழுதியினால் மூடப்பட்டபொழுது ஒன்றுமே அறியப்படவில்லை. ஆதலால், ஒருவரோடொருவர் பேசுவதற்கும் சக்தியற்றவர்களானார்கள். பாரதரே! பிறகு, கறபொடிகளுடன் கூடின காற்றினால் இழுக்கப்படுகின்றவர்களாகவும் இருளால் கண்கள் மறைக்கப்பட்டவர்களாகவும் ஒருவரை ஒருவர் பார்க்கவுமில்லை. காற்றினால் முறிக்கப்பட்டு ஓய்வறறுக் கீழேவிழுகின்ற மரங்களும் மற்ற மரங்களுமாகிய இவற்றின் சப்தமானது பெரிதாகத தோன்றியது. காற்றினால் மிக மயக்கப்பட்ட அவர்களனைவரும், 'ஆகாயம் கீழே விழுகிறதோ, அலலது பூமி வெடிக்கிறதோ, அல்லது மலை வெடிக்கிறதோ' என்று நினைததார்கள். அவர்கள், காற்றுக்குப் பயந்து வழி ஓரத்திலிருக்கிற மரங்களையும் புற்றுக்களையும் மேடு பள்ளங்களையும் கைகளால் தேடிப் பாரததுக்கொண்டு ஆங்காங்குப் பதுங்கினார்கள். பிறகு, மகாபலசாலியான பீமஸேனன், வில்லைக் கையில் ஏந்தி, திரௌபதியைத தேடி அழைத்துக்கொண்டு, ஒரு மரத்தை அடைந்து நின்றான். தர்மராஜரும் தௌம்யரும் பெருங்காட்டில் பதுங்கி இருந்தார்கள். ஸஹதேவனோ, அக்னிஹோததிர ஸாமக்ரிகளை எடுததுக்கொண்டு, ஒரு மலையில் மறைந்திருந்தான். நகுலனும் மற்றப் பிராமமணர்களும தவத்தில் சிறந்தவரான லோமசரும் பயந்து அங்கங்கே மரங்களை அடைந்து பதுங்கி இருந்தார்

கள். காற்றுத் தணிந்து அந்தப் புழுதியும் அடங்கியவுடன், மிகுதியான பெரிய நீர்த்திவலைகளுடன் மழை வந்துவிட்டது எறியப்படுகின்ற வஜ்ராயுதங்களுடைய ஒலிபோலச் சடசட என்னும் ஒலி மிகுதியாகத் தோன்றியது. அதன்பிறகு, மேகங்களில் சஞ்சலமான ஒளியுள்ள அப்படிப்பட்ட மின்னல்கள் ஸஞ்சரித்தன. பிறகு, அந்த மலையில் வேகமான காற்றினால் வீசப்பட்ட ஆலங்கட்டி மழைகள் எல்லாப் பக்கங்களையும் மூடிக்கொண்டு எப்பொழுதும் விழுந்தன. அரசரே! அந்த மலையில் எல்லாப் பக்கங்களிலும் பொழியப்படுகிற ஜலங்கள், கலங்கினவையும் நுரையுள்ளவையுமான நதிகளாயின. நுரைகளாகிற தெப்பங்களால் நிரம்பிய மிகுதியான ஜலத்தைக் கொண்டுசெல்லுகின்ற நதிகள், மரங்களைப் பறித்துக் கொண்டு பேரொலியுள்ளவைகளாக ஓடின. பாரதரே! அந்த ஒலி அடங்கிக் காற்றும் தணிந்து தண்ணீரும் பள்ளங்களில் வடிந்து ஸூரியனும் உதிக்கவே, அவர்கள் எல்லாரும் மெள்ள வெளிப்பட்டு ஒன்றுகூடினார்கள். வீரர்களான பாண்டவர்கள் மீண்டும் கந்தமாதன பர்வதத்தைக்குறித்துப் புறப்பட்டார்கள்.

---

## நூற்றுநாற்பத்தாறுவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

---

**(நடக்கமாட்டாமல் கீழேவிழுந்து மயக்கமடைந்த திரௌபதியைப் பாண்டவர்கள் களைதெளிவித்ததும், யுதிஷ்டிரர் பாஞ்சாலி நடந்து செல்வதைப்பற்றிக் கவலைப்பட்டதும், பீமன் தானாவது கடோத்கசனாவது பாஞ்சாலியைத் தூக்கிச் செல்லுவதாகச் சொல்லியதும்)**

பிறகு, மகா பலசாலிகளான பாண்டவர்கள் [1] புறப்பட்டவுடன், கால்களால் வழி நடப்பதில் பழக்கமில்லாதவளான திரௌபதியானவள் (களைத்து) உட்கார்ந்தாள். அந்தக் காற்றினாலும் மழையினாலும் ஸ்ரமமடைந்தவளும் துக்கத்தால் கவரப்பட்டவளும் மென்மை காரணமாக இரக்கப்படத்தக்கவளுமான பாஞ்சாலியானவள் மூர்ச்சை அடைந்தாள். கருமையான கண்களுள்ள அந்தப்

---

1 'க்ரோசமாத்ரம் ப்ரயாதேஷு' என்பது வேறுபாடம்; 'ஒரு க்ரோசம் (= இரண்டு மைல்) சென்றவுடன்' என்பது அதன் பொருள்.

பாஞ்சாலி, பயத்தால் நடுங்குகிறவளாகி உருண்டவைகளும் ஒத்தவைகளுமான இரு கைகளாலும் இரண்டு தொடைகளையும் பிடித்துக்கொண்டாள்; யானையின் துதிக்கை போன்றவைகளும் சேர்ந்திருப்பவைகளுமான இரண்டு தொடைகளையும் பிடித்துக்கொண்டு வாழைமரம்போல நடுங்கிக்கொண்டு உடனே பூமியில் விழுந்தாள். அழகியவளும் ஒடிக்கப்படுகின்ற கொடிபோலக் கீழே விழுகின்றவளுமான அவளை வீர்யவானான நகுலன் விரைவாக ஓடிவந்து பிடித்துக்கொண்டான். நகுலன், 'அரசரே! கரிய கண்களை உடையவளான இந்தப் பாஞ்சாலராஜகுமாரியானவள் களைத்துப் பூமியில் விழுந்துவிட்டாள். பாரதரே! இவளைப் பாரும். துக்கத்தை அனுபவிக்கத் தகாதவளும் மெல்ல நடப்பவளுமான இவள் மிக்க துக்கத்தை அடைந்துவிட்டாள். மஹாராஜரே! ச்ரமத்தால் மெலிந்திருக்கின்ற அப்படிப்பட்ட இவளைத் தேற்றுவீராக' என்று சொன்னான். தர்மராஜரும் பீமனும் ஸஹதேவனும் நகுலனுடைய வசனத்தால் மிக்க துக்கத்துடன் விரைவாக ஓடிவந்தார்கள். தர்மாத்மாவான யுதிஷ்டிரரோ, அவள் முகம் நிறம் மாறி மெலிந்திருப்பதைக் கண்டு, (அவளை) மடியில் எடுத்து வைத்துக்கொண்டு மனவருத்தத்துடன் புலம்பலானார்.

யுதிஷ்டிரர், 'பாதுகாக்கப்பட்ட மாளிகைகளில் நல்ல விரிப்புகளுள்ள படுக்கையில் படுத்துப் பழகினவளும் ஸுகத்திற்கே தக்கவளும் அழகுவாய்ந்தவளுமான பாஞ்சாலியானவள் எவ்வண்ணம் தரையில் விழுந்து கிடக்கிறாள்! சிறந்த ஸுகானுபவத்திற்குத் தகுந்தவளான இவளுடைய மிருதுவான பாதங்களும் தாமரை மலர்போன்று ஒளியுள்ள முகமும் எப்படி என் காரணமாக இப்பொழுது கருமையை அடைந்தன! சூதாட்டத்தில் விருப்பமுள்ளவனும் புத்தியில்லாதவனும் மிருகங்களின் கூட்டங்களால் நிரம்பிய கானகத்தில் பாஞ்சாலியை அழைத்துக்கொண்டு திரிகின்றவனுமான என்னால் இத்தன்மையான காரியம் செய்யப்பட்டது! 'கல்யாணி! பாண்டவர்களைப் பர்த்தாக்களாக அடைந்து ஸுகத்தை அடைவாய்' என்று பிதாவான த்ருபதராஜனால் நீண்ட கண்களை உடைய (இவள்) கொடுக்கப்பட்டாள். இவள் அவற்றையெல்லாம் அடையாமல் களைப்பினாலும் சோகத்தாலும் மெலிந்தவளாகப் பாவியான என்னுடைய செய்கைகளால் பூமியில் விழுந்து கிடக்கிறாள்' என்று புலம்பினார். தர்மராஜரான யுதிஷ்டிரர் அவ்வண்ணம் அடிக்கடி புலம்பிக்கொண்டிருக்கும் தருணத்தில் தௌம்யர் முதலிய எல்லாப் பிராமணோத்தமர்களும் அந்த இடத்திற்கு

வந்தார்கள். அவர்கள் (தர்மராஜனை) நலுக்கு தேற்றினர்கள்; ஆசீர்வாதங்களாலும் கௌரவித்தார்கள்; அப்படியே, ராக்ஷஸர்களைக் கொல்லக்கூடிய மந்திரங்களையும் ஜபித்தார்கள்; (சாந்திக பௌஷ்டிகக) கிரியைகளையும் செய்தார்கள். அநிஷ்ட சாந்தியின்பொருட்டு சிறந்த ரிஷிகளால் மந்திரங்கள் ஓதப்படும்பொழுது, பாண்டவர்களால் குளிர்ச்சியுள்ள கைகளால் அடிக்கடி தொடப்படுகின்றவளும் ஜலத்துடன்சேர்ந்த குளிர்ந்த காற்றினால் வீசப்படுகின்றவளுமான பாஞ்சாலியானவள், ஸௌக்கியத்தை அடைந்து மெள்ள மெள்ளப் பிரஜ்ஞையை அடைந்தாள். பார்த்தர்கள், பிரஜ்ஞையை அடைந்தவளும் இரக்கப்படத்தக்கவளும் எளிமையுற்றவளுமான அந்தக் கிருஷ்ணையை எடுத்து மான்தோற் படுக்கையில் படுக்கச்செய்து களையாற்றினர்கள். நகுல ஸஹதேவர்கள் உள்ளங்கால்கள் சிவந்தவையும் சிறந்த லக்ஷணங்களுள்ளவையுமான அவளுடைய கால்களை (ஆயுதம்பிடித்துக்) தழும்புபட்ட கைகளால் மெள்ளப் பிடித்தார்கள். தர்மராஜரான யுதிஷ்டிரரும் அவளைக் களை தெளிவித்தார்.

குருஸ்ரேஷ்டர், பீமஸேனனைப் பார்த்து, 'பீம! மேடுபள்ளமானவையும் பனியினால் நடந்துசெல்ல முடியாதவையுமான மலைகள் பல இருக்கின்றன. தோள்வலிமையுள்ளவனே! அவைகளில் கிருஷ்ணையானவள் எவ்வாறு ஸஞ்சரிப்பாள்?' என்று சொன்னர். பீமஸேனன், 'அரசரே! புருஷஸ்ரேஷ்டரே! உம்மையும் ராஜபுத்திரியையும் இரட்டையரையும் நானே தூக்கிக்கொண்டு செல்வேன். ராஜேந்திரரே! துயரத்தில் மனத்தைச் செலுத்தவேண்டாம். தோஷமில்லாதவரே! அல்லது, என்னால் உண்டானவனும் ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவனும் என்னுடைய பலத்திற்கு ஸமமான பலமுள்ளவனுமான கடோத்கசன், உம்முடைய கட்டளையினால், நம்மெல்லோரையும் தூக்கிச் செல்வான்' என்று சொன்னன்.

---

## நூற்றுநாற்பத்தேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(பீமஸேனன் நினைத்தமாத்திரத்தில் வந்த கடோத்கசன் திரௌபதியையும் உடன்வந்த ராக்ஷஸர்கள் பாண்டவர்களையும் பிராம்மணர்களையும் தூக்கிச் சென்றதும், எல்லாரும் நரநாராயணாச்ரமத்தை அடைந்து ஸுகமாக வசித்ததும்.)

யுதிஷ்டிரர், 'தர்மங்களை அறிந்தவனும் பலமுள்ளவனும் சூரனும் ராக்ஷஸச்ரேஷ்டனும் பக்தனும் (உன்னுடைய) ஔரஸபுத்திரனுமான கடோத்கசன் நம்மையும் (தனக்குத்) தாயான திரௌபதியையும் உடனே தூக்கிக்கொண்டு செல்லக்கடவன். பயங்கரமான பராக்கிரமமுள்ளவனே! பீம! உன் புதல்வனால் நான் பாஞ்சாலியுடன் சுமந்து செல்லப்பட்டுத் துன்பமில்லாமல் கந்தமாதனம் செல்வேன்' என்று சொன்னார். பலசாலியான பீமஸேனன் தமையனாருடைய வசனத்தைக்கேட்டுப் பலபராக்கிரமமிக்க கடோத்கசனை நினைத்தான். தர்மாத்மாவான கடோத்கசனும், பிதாவினால் நினைக்கப்பட்டவுடன், கைகளைக் குவித்துக்கொண்டு, அப்பொழுது வந்துசேர்ந்தான்.

பிறகு, மிக்க புஜபலமுள்ளவனும் ஸத்யமான விக்கிரமமுள்ளவனுமான கடோத்கசன், பாண்டவர்களையும் பிராம்மணர்களையும் அபிவாதனம் செய்து அவர்களால் புகழப்பட்டு, பிதாவான பீமஸேனனைப் பார்த்து, 'உங்களால் நான் நினைக்கப்பட்டேன். நான் உங்கள் கட்டளையைச் செய்யக்கருதி விரைவாக வந்தேன். மிக்க தோள்வலியமைந்தவரே! கட்டளையிடுவீராக. நான் எல்லாவற்றையும் செய்வேன்; இதில் ஐயமில்லை' என்று சொன்னான். பீமஸேனனோ, அந்த வசனத்தைக்கேட்டு, ராக்ஷஸனைத் தழுவிக்கொண்டான். விருகோதரன், நினைத்தமாத்திரத்தில் வந்த அவனை நோக்கி, 'ஹிடிம்பையின் புதல்வனே! பிறரால் அவமதிக்கமுடியாத உன் தாயான இவள் களைப்படைந்திருக்கிறாள். அப்பா! ஆகாயத்தில் செல்பவனே! இஷ்டப்படி செல்கிறவனும் பலசாலியுமான நீ இவளைத் தூக்கிக்கொள். உனக்கு மங்களம். இவளைத் துன்புறுத்தாமல் தோளில் ஏற்றிக்கொண்டு எங்களுடைய மத்தியில் மெதுவான நடையுடன் ஆகாயமார்க்கமாகச் செல்லக்கடவாய்' என்று சொன்னான். கடோத்கசன், 'தர்மராஜரையும் தௌம்யரையும் கிருஷ்ணையையும் நகுல ஸஹதேவர்களையும் நான் தனியே தூக்கிக்கொண்டு செல்வதற்குத் திறமையுள்ளவன். இப்பொழுது

ஸஹாயர்களுடன் நடக்கையில் சொல்லவும் வேண்டுமா? தோஷ மற்றவனே! ஆகாயத்தில் செல்பவர்களும் நினைத்தவண்ணம் உருவ மெடுப்பவர்களும் சூரர்களுமான நூற்றுக்கணக்கான ராக்ஷஸர்கள் சேர்ந்து பிராமணர்களோடுகூட உங்களனைவரையும் சுமந்து செல்வார்கள். நான் தருமபுத்ரராஜருடைய புதல்வியை எடுத்துக்கொண்டு மெள்ளமெள்ளச் செல்வேன்' என்று சொன்னான். அந்தக் கடோத்கசன், இவ்வண்ணமுரைத்து, பிறகு, பாண்டவர்களுடைய மத்தியை அடைந்து கிருஷ்ணையைச் சுமந்துசென்றான். மற்றவர்களும் பாண்டவர்களைச் சுமந்துசென்றார்கள். நிகரற்ற தேஜஸுள்ளவரான லோமசர், தம்முடைய ப்ரபாவத்தினாலேயே இரண்டாவது சூரியன்போல ஸித்தர்கள் செல்லும் வழியினால் சென்றார். பயங்கரமான பராக்கிரமமுள்ள ராக்ஷஸர்கள் கடோத்கசனுடைய கட்டளையினால் அந்தப் பிராமணர்களனைவரையும் தூக்கிக்கொண்டு போனார்கள். அவர்கள் இவ்விதம் மிக்க அழகுள்ள காடுகளையும் உத்யானவனங்களையும் பார்க்கின்றவர்களாக விசாலமான பதரியைக் குறித்துச் சென்றார்கள். வீரர்களான அந்தப் பாண்டவர்கள், விரைவாகச் செல்பவர்களும் மிக்க வேகமுள்ளவர்களுமான அந்த ராக்ஷஸர்களால் சுமக்கப்பட்டு, நெடுந்தூரமுள்ள வழியைச் சிறிது தூரமுள்ள வழிபோல விரைவாகத் தாண்டிச் சென்றார்கள். பாண்டவர்கள், மிலேச்ச ஜனங்களால் நிரம்பினவைகளும் பலவித ரத்தினச் சுரங்கங்களோடு சேர்ந்தவைகளுமான தேசங்களையும், பலவித தாதுவர்க்கங்கள் நிரம்பினவையும் வித்யாதரர்களால் சூழப்பட்டவையும் வானரங்களோடும் கின்னரர்களோடும் சேர்ந்தவையும் அப்படியே நான்கு பக்கங்களிலும் கிம்புருஷர்களாலும் கந்தர்வர்களாலும் மயில்களாலும் சமரமிருகங்களாலும் மான்களாலும் புள்ளிமான்களாலும் பன்றிகளாலும் கவயங்களாலும் எருமைகளாலும் சூழப்பட்டவையும் நதிகளுடையவரிசைகளால் நிரம்பினவையும் பலவகைப் பறவைகளோடு சேர்ந்தவையும் பலவித மிருகங்களால் அடையப்பட்டவையும் சாரணர்களால் பிரகாசிக்கின்றவையும் மதத்துடன்கூடின பறவைகளோடும் மரங்களோடும் கூடியவையுமான குன்றுகளையும் கண்டார்கள். அவர்கள், ராக்ஷஸர்களின் தோள்களினின்று கீழே இறங்கி அநேக தேசங்களையும் உத்தரகுருதேசத்தையும் பலவித ஆச்சர்யங்களுள்ளதும் பர்வதங்களுள் சிறந்ததுமான கைலாஸமலையையும் கண்டார்கள்; அதன் பக்கத்தில், அற்புதமான காட்சியுள்ளவைகளும் எப்பொழுதும் மலர்களும் பழங்களுமுள்ளவைகளுமான மரங்களோடுகூடியதான நரநாராயண

ஆஸ்ரமத்தையும் கண்டார்கள். பாண்டவர்கள் அடிமரம் உருண்டிருப்பதும், மனத்தை மகிழ்விப்பதும், செழிப்புள்ளதும், இடைவிடாத நிழலுள்ளதும், சிறந்த அழகுள்ளதும், பளபளப்புள்ளவையும் நெருங்கியவையும் மெதுவானவையுமான இலைகளோடு கூடியதும், மங்களகரமானதும், விசாலமான கிளைகளுள்ளதும், விஸ்தாரமானதும், மிக்க காந்தியுள்ளதும், பருத்தவையும் அற்புதமானவையும் ருசியுள்ளவையும் தேனைப் பெருக்குகின்றவையுமான பழங்களால் எப்பொழுதும் மிக நிறைந்திருப்பதும், திவ்யமானதும், மஹரிஷிகளுடைய கூட்டங்களால் அடையப்பட்டதும், மதத்தினால் மிக்களித்திருக்கிற பலவகைப் பக்ஷிக்கூட்டங்களோடு எப்பொழுதும் சேர்ந்திருப்பதும், ஈக்களும் கொசுக்களுமில்லாததும் மிகுதியான கிழங்குகளும் கனிகளும் ஜலமுமுள்ளதும் பசும்புற்களால் நன்கு மறைக்கப்பட்டதும் தேவர்களாலும் கந்தர்வர்களாலும் அடையப்பட்டதும் நல்ல பூமிபாகத்தில் விளங்குகிறதும் 1 இயற்கையாகவே மிகவும் ஹிதமானதும் மங்களகரமானதும் குளிர்ந்ததும் தொடுதற்கினியதும் முட்களற்றதுமான 2 இடத்தில் உண்டாயிருப்பதுமான அந்தப் 3 பதரீவ்ருக்ஷத்தையும் கண்டார்கள். பிறகு, மகாத்மாக்களான பாண்டவர்கள் அனைவரும் அந்தப் பதரியை அடைந்து அந்தப் பிராம்மணஸ்ரேஷ்டர்களோடு கூட ராக்ஷஸர்களுடைய தோள்களிலிருந்து மெதுவாக இறங்கினார்கள்.

அரசனே! பிறகு, பாண்டவர்கள், பிராம்மணஸ்ரேஷ்டர்களுடன் சேர்ந்து, 4 புண்யமானதும், நரநாராயணர்களால் அடையப்பட்டதும், இருளில்லாததும், பாவத்தைப் போக்குகின்றதும், ஸூர்யகிரணங்களால் தொடப்படாததும், பசி தாகம் சீதம் உஷ்ணம் ஆகிய தோஷங்களால் விடுபட்டதும், சோகத்தைப் போக்குவதும், மஹரிஷிகளின் கூட்டங்களால் நெருங்கியதும், 5 பரம தேஜஸோடு கூடியதும், தர்மத்தினின்று விலகின மனிதர்களால் செல்லமுடியாததும், பலிகளாலும் ஹோமங்களாலும் அர்ச்சிக்கப்

---

1 வேறு பாடம்

2 இரட்டித்தலால் ஒருசொல் விடப்பட்டது.

3 இலந்தை மரம். 4 இரட்டித்தலால் ஒரு சொல் விடப்பட்டது.

5 'வேதங்களாலுண்டான பெருமையுள்ளதும்' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

பட்டதும், அத்புதமானதும், நன்கு பெருக்கி மெழுகி இருப்பதும், திவ்யமான புஷ்பபலிகளால் எங்கும் விளங்குகின்றதும், விசாலமான அக்னிக்ருஹங்களாலும் மங்களகரமான ஸ்ருக்கு முதலிய கருவிகளாலும் நிறைக்கப்பட்டதும், பெரிய நீர்க்குடங்களாலும் உறுதியான உறிகளாலும் விளங்குகின்றதும், எல்லாப் பிராணிகளுக்கும் ரக்ஷகமாக இருக்கின்றதும், வேதகோஷத்தால் முழக்கம் உள்ளதாகச் செய்யப்பட்டதும், தெய்வத்தன்மை பொருந்தியதும், அடையத்தக்கதும், ச்ரமத்தைப் போக்குகிறதும், லக்ஷ்மீகரமானதும், இப்படிப்பட்டதென்று குறித்துக் காட்ட முடியாததும், தேவஸ்ரேஷ்டர்களால் விளங்குகின்றதும், பழங்களையும் கிழங்குகளையும் பக்ஷிக்கின்றவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களும் அழகிய மான்தோலுடுத்தவர்களும் ஸூர்யனுக்கும் அக்னிக்கும் ஸமானமாக இருப்பவர்களும் தவத்தினால் ஆத்மாவை அறிந்தவர்களுமான மஹரிஷிகளுடனும் மோக்ஷத்தில் கருத்துடையவர்களும் இந்திரியங்களை அடக்கினவர்களுமான ஸந்யாஸிகளுடனும் பிரம்மபாவத்தை அடைந்தவர்களும் மகாமகிமையுடையவர்களுமான பிரம்மவாதிகளுடனும் கூடியதுமான அந்த ஆச்ரமத்தைக் கண்டார்கள். மிக்க தேஜஸ்ஸுள்ளவரும் இந்திரியங்களை அடக்கினவரும் சுத்தியுள்ளவரும் புத்திமானும் தர்மபுத்திரருமான அந்த யுதிஷ்டிரர் பிராதாக்களுடன் கூட அந்த ரிஷிகளை அடைந்தார். திவ்யஜ்ஞானத்துடன் கூடினவர்களும் தேவலோகத்தவர்களுமான அந்தத் தேவமஹரிஷிகள், யுதிஷ்டிரர் வந்ததைப் பார்த்து, மிக்க மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டழைத்தார்கள். வேதாத்யயனத்தில் மிக்க பற்றுள்ளவர்களும் அக்னிபோன்றவர்களுமான அந்த ரிஷிகள், மகிழ்ச்சியுடன் ஆசீர்வாதங்களைச் செய்துகொண்டு, விதிப்படி அவருக்கு உபசரணை செய்தார்கள்; பரிசுத்தமான ஜலத்தையும் புஷ்பங்களையும் கிழங்குகளையும் பழங்களையும் கொண்டுவந்து கொடுத்தார்கள். பிறகு, அந்த மகரிஷிகளால் பிரியத்துடன் செய்யப்பட்ட உபசரணையைத் தர்மராஜரான யுதிஷ்டிரர் அடக்கத்துடன் பெற்றுக்கொண்டார். தோஷமற்றவரே! யுதிஷ்டிரர், கிருஷ்ணையுடனும் தம்பிமார்களுடனும் வேதவேதாங்கங்களில் கரைகண்டவர்களான பிராம்மணர்களுடனும் பூஜிக்கப்பட்டு மகிழ்ந்து, இந்திரனுடைய மாளிகைபோன்றதும் திவ்ய வாஸனையுள்ளதும் மனத்தை மகிழ்விப்பதும் ஸ்வர்க்கம்போன்றதும் புண்யமானதும் காந்தியுடன் கூடியதுமான அந்த ஆச்ரமத்தில் புகுந்தார். தர்மாத்மாவான அந்த யுதிஷ்டிரர், ஸஹோதரர்களுடன், அங்கே தேனைப் பெருக்குகின்ற பழங்களுள்ளதும

பிரம்மரிஷிகளுடைய கூட்டங்களால் வஸிக்கப்பெற்றதுமான அந்தப் பதரியை அடைந்து, அந்த இடத்தில் தேவர்களாலும் தேவரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டதும் கங்கையினால் பிரகாசிக்கின்றதுமான நரநாராயணர்களுடைய ஸ்தானத்தைப் பார்த்தார். அப்பொழுது மகாத்மாக்களான அவர்கள், அந்த இடத்தில் பலவகைப் பறவைக்கூட்டங்களுள்ளதும் பொன்மயமான சிகரங்களுள்ளதுமான மைநாகத்தையும் மத்தியில் மங்களகரமான பிந்துஸரஸ்ஸையும் பார்த்துப் பிரியத்துடன் கூடியவர்களாக மகிழ்ந்திருந்தார்கள். மஹாத்மாக்களான பாண்டவர்கள், அங்கே நல்ல துறைகளுள்ளதும் குளிர்ந்த மாசற்ற ஜலமுள்ளதும் மங்களத்தை உண்டுபண்ணுகிறதும் ரத்தினங்களாலும் பவழங்களாலும் கட்டிய படித்துறைகளுள்ளதும் பக்கங்களில் மரங்களால் விளங்குகின்றதும் தேவலோகத்து மலர்களால் நிரம்பியதும் மனத்துக்கு மகிழ்ச்சியைப் பெருக்குவதுமான பாகீரதியையும் பார்க்கின்றவர்களாகி அங்கே மகிழ்ந்தார்கள். குந்திபுத்திரர்கள், மிக்க பரிசுத்தியை அடைந்து, தேவர்களாலும் ரிஷிகளாலும் அடையப்பட்டதும் அடைதற்கு மிக அரியதுமான அந்த இடத்தில், பாகீரதியின் புண்ய தீர்த்தத்தினால் பித்ருக்களையும் தேவர்களையும் ரிஷிகளையும் திருப்தியடையச் செய்தார்கள். வீரர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான அந்தப் பாண்டவர்கள், அங்கே தர்ப்பணம் செய்துகொண்டும் ஜபித்துக்கொண்டும் பிராம்மணர்களோடுகூட வஸித்தார்கள். அந்த இடத்தில் தேவர்களின் ஒளிபோன்ற ஒளிபொருந்தியவர்களும் புருஷஸ்ரேஷ்டர்களுமான பாண்டவர்கள், கிருஷ்ணையின் பலவித விளையாட்டுக்களைப் பார்ப்பவர்களாகி மகிழ்ந்தார்கள்.

---

## நூற்று நாற்பத்தெட்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(பாஞ்சாலி காற்றினால் அடித்துவரப்பட்ட அத்புதமான ஒரு ஸௌகந்திக மலரைப் பார்த்து அதுபோன்ற பல மலர்களை விரும்பியதும், பீமன் அவைகளைக் கொண்டுவரப் புறப்பட்டதும், அவனுக்கு வழியில் ஹனுமானுடன் ஸம்வாதமும்)

புருஷஸ்ரேஷ்டர்களும் மிக்க பரிசுத்தியை அடைந்தவர்களும் வீரர்களுமான அந்தப் பாண்டவர்கள், அழகியதும் எல்லாப்

பிராணிகளுடைய மனத்தையும் மகிழ்விப்பதுமான அந்தச் சிறந்த கானகத்தில், விளையாடுகின்றவர்களாகவும் மகிழுகின்றவர்களாகவும், தனஞ்சயனைப் பார்க்கும் விருப்பத்தினால் ஆறு தினம் வஸித்தார்கள். பர்வதமானது, மலர்ந்திருக்கின்ற மலர்களுள்ளவைகளும் பழங்களுடைய பாரத்தால் வளைக்கப்பட்டவைகளும் ஆண் குயில்களுடைய கூட்டங்களால் நிரம்பியவைகளும் பளபளப்பான இலைகளுள்ளவைகளும் நெருங்கியவைகளும் குளிர்ந்த நிழலுள்ளவைகளும் மனத்தை மகிழ்விப்பவைகளுமான மரங்களால் விளங்குவதாகவும் ரமணீயமாகவுமிருந்தது. பாண்டவர்கள், அங்கே பலவிதமானவைகளும் தெளிந்த ஜலமுள்ளவைகளும் உத்பலங்களுடன் கூடின தாமரை மலர்களால் எங்கும் பிரகாசிக்கின்றவைகளும் அழகிய தோற்றமுள்ளவைகளுமான தடாகங்களைப் பார்த்து மகிழ்ந்தார்கள். அந்த இடத்தில் நல்ல வாஸனையுள்ளதும் இனிய பரிசமுள்ளதுமான காற்றானது, கிருஷ்ணையுடனும் சிறந்த பிராம்மணர்களுடனுமிருக்கும் பாண்டவர்கள் அனைவரையும் ஸந்தோஷமடையச் செய்துகொண்டு வீசியது. பிறகு, வடகிழக்கில் வீசுகின்ற காற்றானது, ஆயிரம் இதழுள்ளதும் சூரியனைப்போலப் பிரகாசிக்கிறதும் திவ்யமானதுமான ஒரு தாமரை மலரைத் தற்செயலாகக் கொண்டுவந்தது. பாஞ்சாலியானவள், திவ்யமான மணம்பொருந்தியதும் மனத்தை மகிழச்செய்கின்றதும் காற்றினால் கொண்டுவரப்பட்டதும் பூமியில் விழுந்திருப்பதும் சுத்தமானதுமான அந்தத் தாமரைமலரைப் பார்த்தாள்.

அரசரே! கல்யாணியான அவள், மங்களகரமானதும் தன்னிலும் சிறந்ததில்லாததுமான அந்த [1] ஸௌகந்திக மலரையடைந்து மிக மகிழ்ந்து உடனே பீமஸேனனைப் பார்த்து, 'பீமஸேனரே! திவ்யமானதும் மிக அழகியதும் ஸர்வோத்தமமாக இருப்பதும் நறுமணமுடைய வடிவமும் பொருந்தியதும் என்மனத்தை மகிழ்விப்பதுமான இந்த மலரைப் பார்ப்பீராக. பகைவரை வாட்டுபவரே! இதனைத் தர்மராஜருக்குக் கொடுப்பேன். இதே ஜாதியைச் சேர்ந்த இன்னும் பல புஷ்பங்களையும் பறித்துக் கொண்டுவாரும். அவையோ, காம்யகவனத்திலுள்ள நமது ஆச்ரமத்தில் எனது பிரியத்துக்கு ஆகும். பார்த்தரே! நான் உமக்குப் பிரியமானவளாய் இருந்தால், இந்த மலர்களை மிகுதியாகக் கொண்டுவாரும். நான்

1 'ஒருவகைத் தாமரை மலர்' என்பது பழையவுரை.

அவைகளைக் காம்யகவனத்திலுள்ள நம் ஆஶ்ரமத்திற்குக் கொண்டு போக விரும்புகிறேன்' என்று கூறினாள். இகழப்படாதவளான பாஞ்சாலியானவள், பீமஸேனனைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்து, அப்பொழுது அந்தமலரை எடுத்துக்கொண்டு தர்மராஜரிடம் சென்றாள். புருஷஶ்ரேஷ்டனும் மகாபலசாலியுமான அந்தப் பீமன், மனைவியினுடைய கருத்தை அறிந்து காதலியான அவளுக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பிப் புறப்பட்டான்.

வேறு மலர்களையும் கொண்டுவரக்கருதிய அவன், பின்புறம் பொன்னால் அலங்கரிக்கப்பெற்ற வில்லையும் ஸர்ப்பம்போன்ற அம்புகளையும் எடுத்துக்கொண்டு, மலரைக் கொண்டுவந்த காற்றையே நோக்கி, கோபமூண்ட சிங்கம்போலவும் மதம் பெருகுகின்ற யானை போலவும் விரைவாகச்சென்றான். பெரிய அம்புகளையும் வில்லையும் தரித்த பீமஸேனனை எல்லாப் பிராணிகளும் பார்த்தன. வாயுகுமாரனைப் பார்த்தனை வாட்டமாவது வருத்தமாவது பயமாவது கலக்கமாவது ஒருபொழுதும் அணுகவில்லை. பலமுள்ளவனும் தன் புஜபலத்தையே அடுத்தவனுமான அந்தப் பீமன், திரௌபதிக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி அச்சமும் மதிமயக்கமுமில்லாதவனாகி மலையின்மீது ஏறினான். பகைவரைக் கொல்பவனான அந்தப் பீமன், மரங்களாலும் கொடிகளாலும் புதர்களாலும் மூடப்பட்டதும், கருமையான கற்றரைகளுள்ளதும், கின்னரர்களால் ஸஞ்சரிக்கப்பட்டதும், மங்களகரமானதும், பல நிறங்களுள்ளவையான தாதுக்களாலும் மரங்களாலும் மிருகங்களாலும் பறவைகளாலும் விசித்ரமானதும், எல்லாப் பூஷணங்களும் நிரம்பின மேலே தூக்கப்பட்ட பூமிதேவியின் கைபோன்றதுமான மலையில் ஸஞ்சரித்தான். அளவுகடந்த ஆற்றலுள்ளவனும் மிக்க தேஜஸ்ஸுள்ளவனுமான அவன், எல்லாருதுக்களின் புஷ்பமுதலியவற்றாலும் ரமணீயமான கந்தமாதன மலையின் சரிவுகளில் பார்வை பற்றியவனாகவும், பல அபிப்பிராயங்களை மனத்தினால் அடிக்கடி நினைக்கின்றவனாகவும், ஆண்குயில்களின் சப்தங்களிலும் வண்டுகளால் செய்யப்பட்ட ரீங்காரங்களிலும் செவிகளையும் உள்ளத்தையும் கண்களையும் கட்டிச் செலுத்துபவனாகவும், எல்லா ருதுக்களிலுமுண்டாகும் மலர்களினின்று உண்டாகிற அபரிமிதமான நறுமணத்தை, காட்டில் மதங்கொண்ட யானைபோல, முகர்கிறவனாகவும், தடையற்றவனாகவும் சென்றான். பகைவரை அடக்குபவனான அவன், மிகப் பரிசுத்தமானதும் பலவகை மலர்களின் வாஸனையுள்ளதும் தந்தையினதொடுகைபோலக் குளிர்ந்ததுமான கந்தமாதன

வத்தின் காற்றினால் வீசப்படுகின்றவனும், தந்தையான வாயுவினால் களையாற்றப்படுகின்றவனும், மயிர் புளகித்தவனும், பொன்மையும் கருமையும் வெண்மையுமான மாசற்ற தாதுவகைகளால் பூசப்பட்ட ஏழிலைப்பாலையிலைகளால், விரல்களால் பூசப்படுவதுபோல், பூசப்பட்டவனுமாகி, இயக்கர்கள் கந்தர்வர்கள் தேவர்கள் பிரமரிஷிகள் ஆகிய இவர்களின் கூட்டங்களால் அடையப்பட்டதும், பக்கங்களில் படிந்திருக்கிற மேகங்களால் சிறகுகளுடன் நர்த்தனம் செய்கிறது போன்றதும், பெருகிவருகின்ற அருவிநீர்களால் முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பட்டதுபோன்றதும், அழகிய குகைகளும் கொடிப்பந்தல்களும் அருவிநீரும் சிறு குகைகளுமுள்ளதும், அப்ஸரஸ்திரீகளுடைய சிலம்புகளின் சப்தங்களுடன் நன்கு கூத்தாடுகின்ற சிறந்த மயில்களுள்ளதும், திக்கஜங்கள் கொம்புநுனிகளால் முட்டித் தேய்ந்திருக்கிற கற்களையுடைய கல்தரைகளுள்ளதும், கலக்கமுடியாத நதிகளினின்று பெருகிவருகின்ற ஜலத்தால் ஆடை நழுவுவதுபோல இருப்பதுமான மலையைப் புஷ்பங்களுக்காக அப்பொழுது நன்கு நோக்கினன். காந்தியுள்ள வாயுகுமாரனான கௌந்தேயன், வாயினால் புற்பிடிகளைக் கௌவிக்கொண்டிருப்பவைகளும் கவலைப்பற்றவைகளும் ஸமீபத்தில் ஸஞ்சரிப்பவைகளும் பயத்தை அறியாதவைகளுமான மான்களால் குதூஹலத்துடன் பார்க்கப்பட்டவனாகவும், தன்னுடைய வேகத்தால் கொடிகளின் கூட்டங்களைப் பலவாறு புரட்டிவிடுகின்றவனாகவும், விளையாட்டாகச் சென்றான். தன் காதலியின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக முயன்றவனும், அழகிய கண்களுள்ளவனும், உயர்ந்தவனும், பொன்னின் நிறம்போன்ற நிறமுள்ளவனும், சிங்கம்போன்ற உடலுள்ளவனும், காளைப்பருவமுள்ளவனும், மதயானைபோல் நடப்பவனும், மதயானையின் வேகம்போன்ற வேகமுள்ளவனும், மதயானையின் கண்போலச் சிவந்த கண்களுள்ளவனும், (போரில்) மதயானைகளைத் தடுப்பவனும், காதலர்களின் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்களும் பலவிதச் செய்கைகளிலிருந்து திரும்பினவர்களும் காணப்படாமலிருப்பவர்களுமான யக்ஷஸ்திரீகளாலும் கந்தர்வஸ்திரீகளாலும் பார்க்கப்பட்டவனும், ஸௌந்தர்யத்தினுடைய புதிய அவதாரமுமான பாண்டுநந்தனன், ரமணீயமான கந்தமாதன மலையின் பிரதேசங்களில் விளையாடுபவன்போல் ஸஞ்சரித்தான். வனத்தில் வஸிக்கிற திரௌபதிக்கு விருப்பத்தைச் செய்வதற்கு முயன்ற அவன், துர்யோதனனால் செய்யப்பட்ட பலவாறான கிலேசங்களை நினைத்துக்கொண்டு சிந்திக்கலானான்.

1 'அர்ஜுனனை ஸ்வர்க்கம் சென்று, நானும் புஷ்பங்காரணமாக (இங்கே) வந்துவிட்டபொழுது, பூஜ்யரான யுதிஷ்டிரர் என்ன செய்வார்? நரச்ரேஷ்டரான யுதிஷ்டிரர் நேசத்தாலும் பலத்தில் நம்பிக்கை இல்லாமையாலும் நகுலனையும் ஸஹதேவனையும் 2 விடமாட்டாரென்பது திண்ணம். எவ்வாறு மலர்களை நான் விரைவில் அடைதல் கூடும்?' என்று ஆலோசித்துக்கொண்டு, நரச்ரேஷ்டனான அவன், பக்ஷிராஜனைப்போல் வேகத்துடன் புறப்பட்டான். திரௌபதியின் சொல்லையே வழியுணவாகக் கொண்டவனும் பூதங்கள் இருக்கிற மலைப் பிரதேசங்களில் உள்ளமும் கண்களும் பற்றினவனும் பாண்டுநந்தனனும் காற்றின் வேகம்போன்ற வேகமுள்ளவனும் 3 விருகோதரனும் மிக்க பலமுள்ளவனுமான பீமன், பர்வகாலங்களில் உத்பாதம்போலக் கால்களால் பூமியை நடுங்கச் செய்துகொண்டும் யானைக் கூட்டங்களைப் பயமடையச் செய்துகொண்டும் சிங்கங்களையும் புலிகளையும் மான்களையும் நொறுக்கிக்கொண்டும் பெரிய மரங்களை வேரோடு பறித்துக்கொண்டும் மார்பினால் முறித்துக்கொண்டும் மலையுச்சியில் மேலும் மேலும் ஏறக்கருதிய யானைபோல், வேகத்தால் 4 லதைகளையும் 5 வல்லிகளையும், பிய்த்துக்கொண்டும் மிக விரைவாகச் சென்றான். மிக்க பலசாலியான அந்தப் பீமஸேனன், மிக்க ஜலத்துக்கு ஆதாரமானதும் மின்னலுடன் கூடியதுமான மேகம்போலப் பேரொலியுடன் கர்ஜித்தான். புலிகள் பீமனுடைய அந்தப் பேரொலியால் எழுப்பப்பட்டுக் குகைகளை விட்டகன்றன; வனத்தில் வஸிக்கிற பிராணிகள் பதுங்கின; பறவைகள் பயந்து மேலே எழுந்தன; மான்களின் கூட்டங்கள் ஓடின; கரடிகளும் தாம் வஸித்த மரங்களை விட்டகன்றன; சிங்கங்கள் குகையை விட்டு வெளியில் சென்றன; பெரிய சிங்கங்கள் உறக்கம் கலைந்தன. காட்டில் ஸஞ்சரிக்கின்ற எருமைகள் வாயைப் பிளந்தன. பெண்யானைகளால் சூழப்பட்ட ஆண்யானைகள், அந்தச் சப்தத்தால் பயமுறுத்தப்பட்டு அந்தக் காட்டைவிட்டு வேறு பெரிய காட்டை அடைந்தன. பன்றிக்கூட

---

1 வேறு பாடம்

2 நகுல ஸஹதேவர்கள், தன்னையும் அர்ஜுனனையும் தேடிவரும்படி அனுப்பவுமாட்டாமல் கவலைப்படுவார் என்பது.

3 பொருள் இரட்டித்தலால், 'பலீ' என்பது விடப்பட்டது.

4, 5 கொடிகளின் வகைகள்; தரையிற் படர்வனவென்றும் மரத்திற் படர்வனவென்றும் வேறுபாடுகொள்ளலாம்.

டங்களும மானகூட்டங்களும காட்டில் ஸஞ்சரிக்கின்ற எருமை களும புலிகளும நரிக்கூட்டங்களும கவயங்களுடனகூட உரக்கக் கத்தின. சக்ரவாகபட்சிகளும சாதகங்களும் அன்னங்களும நீர்க் காக்கைகளும வாத்துக்களும கிளிகளும புறுக்களும அன்றில்களும உணர்ச்சியற்றவைகளாகித் திசைகளை அடைந்தன. அப்படியே, கொழுப்புள்ளவைகளும பெண்யானைகளால உண்டுபண்ணப்பட்ட காமவிகாரத்தால பீடிக்கப்பட்டவைகளுமான சில யானைகளும சிங் கங்களும புலிகளும மிக்க கோபங்கொண்டு பீமஸேனனை எதிர்த்து ஓடிவந்தன. மிக்க பயங்கரமான அந்த மிருகங்கள் பயத்தினால் மனம மிக்க கலங்கி மலஜலங்களை விட்டுக்கொண்டும வாயைத் திறந்துகொண்டும பயங்கரமான சத்தங்களைச் செய்தன. பிறகு, பிரபுவும பலசாலியும காந்தியுள்ளவனும வாயுவின புதல்வனுமான பீமன, கோபத்தால தன புஜபலத்தை அடுத்து, யானையினால் மற்ற யானைகளையும சிங்கத்தால சிங்கத்தையும உள்ளங்கை அறைகளால் மற்ற மிருகங்களையும கொன்றான். பீமனால பயங்கரமாக அடிக் கப்படுகின்ற அந்தச் சிங்கங்களும் புலிகளும் சிறுத்தைகளும பயத்தினால் பயங்கரமான (ஒலியை) வெளியிட்டன; மலத்தையும் ஜலத்தையும பெருக்கின. பிறகு, மகா பலசாலியும ஸ்ரீமானுமான பாண்டு குமாரன, அவைகளைத் துரத்திவிட்டுச் சத்தத்தால திசை களை நிரப்பிக்கொண்டு காட்டில் விரைவாகப் பிரவேசித்தான.

பிறகு, புஜபலமிக்க அவன், கந்தமாதன பர்வதத்தின் தாழ வரைகளில், மிகவும் அழகியதும் பல யோஜனை விஸ்தாரமுள்ளது மான வாழைமரங்கள்டர்ந்த ஒரு சோலையைக் கண்டான. மகா பலசாலியான அவன, மதயானைபோலப் பலவகை மரங்களை முறித் துக்கொண்டு அந்த வாழைக்காட்டை அழிக்கக்கருதிச் சென்றான். பலசாலிகளுள் சிறந்தவனும் மிக்க பேரொளியுள்ளவனும நரஸிம்ம மூர்த்திபோலக் கர்வங்கொண்டவனுமான பீமன, பல பனையுயரமுள்ள வாழைமரங்களைப் பிடுங்கி ஒடித்து எல்லாப் பக்கங்களிலும் விரை வாக எறிந்தான். பிறகு, அந்த இடத்தில் பெரியவையும் மிகப் பலவுமான புள்ளிமான் கூட்டங்களும யானைக்கூட்டங்களும் ஜலத் தை அடுத்து வசித்த எருமைகளும் (பீமனை) எதிர்த்துவந்தன. பிறகு, மகாபலசாலியும ஒளிபொருந்தினவனுமான பாண்டுநந்த னன் அவைகளை விரைவாகத் துரத்திவிட்டுச் சிங்கநாதத்தால் திசைகளை நிரப்பிக்கொண்டு காட்டில் நுழைந்தான். பிறகு, அந்த (மிருகங்களின) சத்தத்தாலும பீமஸேனனுடைய சத்தத்தாலும்

வேறு காட்டிலிருக்கிற மிருகங்களும் பக்ஷிகளும் மிகப் பயந்தன. பிறகு, மிருகங்களுக்கும் பக்ஷிகளுக்கும் அப்படிப்பட்ட கலக்கம் உண்டாகவே, ஜலத்தால் நனைந்த சிறகுகளுள்ள பறவைகள், ஆயிரமாயிரமாகக் கிளம்பிவந்தன. பரதஸ்ரேஷ்டனான பீமன், அந்த நீர்ப்பறவைக்கூட்டங்களைப் பார்த்து, அவை (வந்த வழி)களையே நோக்கிச்சென்று, அழகியதும், பொன்மயமானவையும் இளங்காற்றினால் அசைக்கப்பட்டவையும் ஒரு கரையிலிருந்து மறுகரை வரையில் பரவியிருப்பவையுமான வாழைக் கூட்டங்களால் வீசப்படுவது போன்றதும், கலக்கமுடியாததுமான மிகப் பெரிய ஒரு குளத்தைக் கண்டான். பலசாலியான அவன், ஏராளமான தாமரை மலர்களுள்ள அந்தக் குளத்தில் விரைவாக இறங்கிப் பெரிய யானைபோலத் தடையற்றவனாகி உத்ஸாகமாக விளையாடினான். அளவுகடந்த காந்தியுள்ளவனான பீமன், மதம் பெருகுகிற யானைபோல ஜலத்தைக் குழப்பிக்கொண்டு அழகாக விளையாடிவிட்டுக் கரை ஏறினான். பிறகு, பாண்டவன், பல மரங்களுள்ள அந்தக் காட்டில் வேகத்தோடு நுழைந்தான்; நல்ல ஒலியுள்ள சங்கத்தையும் முழுவலிமையோடு ஊதினான். பலசாலியான பீமன், திசைகளை ஒலியிடச்செய்துகொண்டு தோள்களையும் தட்டினான். மலையின் குகைகள், அந்தச் சங்கத்தின் ஒலியினாலும் பீமஸேனனுடைய அட்டஹாஸத்தாலும் பயங்கரமான கைகளின் ஓசையினாலும் அலறுவனபோன்றன. இடியோசை போன்ற அந்தத் தோள்தட்டுதலாகிய பேரொலியைக் கேட்டு மலைகளின் குகைகளில் உறங்கிக்கொண்டிருந்த சிங்கங்கள் பேரொலியை வெளியிட்டன. பாரதரே! சிங்கங்களின் தொனியினால் பயந்த யானைகளும் மலையை நிரப்பிய மிகப் பெரிய ஒலியை வெளியிட்டன. பிறகு, வானரஸ்ரேஷ்டரும் தூங்கிக்கொண்டிருந்தவரும் வானரருமான அந்த ஹநுமான், பீமஸேனனைப் பிராதாவென்று அறிந்து, 'இந்த வழியினால் (அவன்) போகக்கூடாது' என்று ஆலோசித்து, பீமனுக்காக ஸ்வர்க்கம் செல்லும் வழியைத் தடுத்தார். வாழைச் சோலை நடுவிலிருக்கும் (அந்த) வானரர், பிராதாவான பீமனைப் பாதுகாப்பதற்காக, அப்பொழுது, 'பாண்டவன் இந்தவழியில் சாபத்தையும் அவமானத்தையும் அடையவேண்டாம்' என்று இவ்வாறு ஆலோசித்து, வாழைமரச் சோலையினால் அலங்கரிக்கப்பட்ட ஒற்றையடிப் பாதையில் அந்த வழியைத் தடுத்துக்கொண்டிருந்தார். அப்பொழுது, பெரிய சரீரமுள்ள அனுமானென்னும் வானரர் வாழைத்தோட்டத்தின் நடுவிலிருந்துகொண்டு நித்திரையின் வசத்

தை அடைந்து கொட்டாவி விட்டார். பெரிய வானரரான அவர் அந்தப் பேரொலியால் விழித்துக்கொண்டார். மிகப்பெரிதாகக் கொட்டாவிவிடுகின்ற அவர், உயர்த்து நட்பட்ட இந்திர தவஜம் போன்ற வாலை இடிபோன்ற ஓசையுள்ளதாம்படி (தரையில்) சுழற்றி அடித்தார். மலையானது, முககாரம் போடுகிற எருது போல், அந்த அனுமானுடைய வாலினால் உண்டுபண்ணப்பட்ட ஓசைக்கு நல்ல குகைகளாகிற வாய்களால் எதிரொலியை எல்லாப் பக்கங்களிலும் வெளியிட்டது. அந்தப் பெரிய மலையும், வாலைச் சுழற்றி அடித்த ஒலியால் அசைக்கப்பட்டுக் கொடுமுடிகள் சுழல்வதாகி எல்லாப் பக்கங்களிலும் சிதறியது. அவருடைய அந்த வாலொலியானது, மதயானைகளின் பேரொலியை உள்ளடக்கிப் பலவகையான தோற்றங்களுள்ள மலைவெளிகளில் பரவியது. அந்தப் பீமஸேனன், அவ்வொலியைக் கேட்டு மயிர்சிலிர்த்து, வாழைக்காட்டில் அவ்வொலி உண்டாகுமிடத்தைத் தேடிக்கொண்டு திரிந்தான்.

பிறகு, மிக நீண்ட கைகளுள்ள பீமன், அப்பொழுது வாழைக் காட்டின் நடுவில் பருத்த கற்பீடத்திலிருப்பவரும், மின்னல் மின்னியது போலப் பார்ப்பதற்கரியவரும், மின்னல் மின்னியதுபோலக் காஜிப்பவரும், மின்னல் மின்னியதுபோல அசைபவரும், பருத்தும் உருண்டுமிருக்கிற கழுத்தைக் கைகளாலமைந்த ஸ்வஸ்திகத்தின் மீது வைத்திருப்பவரும், சரீரம் மிகப் பருத்த தோள்களை அமைந்திருத்தலால் நடுமெலிந்த இடையுள்ளவரும், நுனி சிறிது வளைந்ததும் நீண்ட உரோமங்களால் அலங்கரிக்கப்பட்டதும் உயரக்கிளம்பியதும் கொடிமரம்போன்றதுமான வாலினால் விளங்குகிறவருமான வானராதிபதியைக் கண்டான்; உதடுகள் குறுகியதும் நாவும் முகமும் சிவந்ததும் காதுகள் சிவந்ததும் புருவங்கள் அசைவதும் கிரணங்களுள்ள சந்திரன்போன்றதும் வாயின் நடுவை அடைந்திருக்கிற வெண்மையான பற்களால் அலங்கரிக்கப்பட்டதும (கேஸரமடர்ந்த) அசோகமலர்க் குவியல்போலக் கேஸர (=பிடரிமயிர்)க் குவியல் அடர்ந்திருப்பதுமான அவருடைய முகத்தையும் பார்த்தான். புத்திசாலியான பீமன், பொன்மயமான வாழைகளின் நடுவிலிருப்பவரும் அதிக காந்தியுள்ளவரும் பிரகாசிக்கின்ற சரீரத்தால் மிக்க ஜ்வாலையுள்ள நெருப்புப்போலிருப்பவரும் தேன்போலப் பிங்கல நிறமுள்ள கண்களால் பார்க்கின்றவரும் பயமில்லாதவரும் பருத்த உடலுள்ளவரும் வலிமை

மிக்கவருமான ஸ்வர்க்கமார்க்கத்தைத் தடுத்துக்கொண்டு இமயமலை போலிருப்பவருமான அந்த வானரஸ்ரேஷ்டரைக் கண்டான். நீண்ட கைகளுள்ளவனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனும் பலசாலியுமான பீமன், அந்தப் பெரிய காட்டில் தனிமையாக இருக்கிற அவரைப் பார்த்து, பிறகு, விரைவாக அருகிற்சென்று, உக்கிரமானதும் இடிபோன்றதுமான சிங்கநாதத்தைச் செய்தான். பீமனுடைய அந்தச் சத்தத்தினால் மிருகங்களும் பக்ஷிகளும் பயந்தன.

பிறகு, வலிமை மிக்க ஹனுமானும், கண்களைச் சிறிது திறந்து தேன்போலப் பிங்கலநிறமுள்ள கண்களால் அவனை அலக்ஷ்யமாகப் [1] பார்த்தார். பிறகு, வாயுகுமாரரும் காந்தியுள்ளவருமான ஹனுமான், அருகிலிருப்பவனும் சௌர்யமிக்கவனுமான அவனைப் புன்சிரிப்புடன் அழைத்து, 'ரோகத்துடன் கூடியவனும் ஸுகமாக உறங்கிக்கொண்டிருந்தவனுமான என்னை எதற்காக நீ எழுப்பினாய்? அறிவுள்ளவனான நீ பிராணிகளிடம் தயை பாராட்டவேண்டுமன்றோ? விலங்குப் பிறவியை அடைந்திருக்கிற நாங்கள் தர்மத்தை அறியோம். பகுத்தறிவுள்ள மனிதர்களோ பிராணிகளிடம் தயையைப் பாராட்டுகிறார்கள். உன்னைப் போன்ற புத்திமான்கள் கொடியவையும் மனமொழிமெய்களைக் கெடுப்பவையும் தர்மத்தையழிப்பவையுமான செய்கைகளில் எவ்வாறு பற்றுதல் வைக்கிறார்கள்? அல்பபுத்தியுடைமையாலும் பால்யத்தாலும் மிருகங்களைக் கொல்லுகிறாயாதலால், நீ தர்மத்தை அறியவில்லை; பெரியோர்களையும் அடுக்கவில்லை; சொல்; நீ யார்? மானிடத்தன்மையுற்றதும் அப்படியே மனிதர்களில்லாததுமான இந்தக் காட்டிற்கு [2] எதற்காக வந்தாய்? புருஷஸ்ரேஷ்டனே! நீ இப்பொழுது எங்கே போகவேண்டும்? சொல். இந்த மலையானது இதற்குமேல் செல்லமுடியாதது; ஏறுவதற்கும் முடியாதது. வீரனே! ஸித்தமார்க்கத்தைத் தவிர இந்த இடத்துக்கு வேறு வழியில்லை. இது தேவலோகத்திற்குப் போகிறவழி; எப்பொழுதும் மனிதர்களால் செல்லமுடியாதது. வீரனே! கருணையினால் நான் உன்னைத் தடுக்கிறேன். நான் சொல்வதைத் தெரிந்துகொள். பிரபுவே! இதற்குமேல் நீ செல்வது முடியாது; நம்பு. புருஷஸ்ரேஷ்டனே! இப்பொழுது இங்கே உன் வரவு எல்லாவிதத்தாலும் நல்வரவாகுக. நரஸ்ரேஷ்டனே! ஹிதமான என் சொல்லை

---

1 'தருஷ்டவா' என்பது மூலம்.

2 ஒரு சொல் விடப்பட்டது.

ஏற்றுக்கொள்வதாலே அம்ருதம்போன்ற இந்தப்பழங்களையும் கிழங்குகளையும் புசித்துவிட்டுத் திரும்பு. வீணாக வதத்தை நீ அடையவேண்டாம்' என்று சொன்னார்.

---

## நூற்றுநாற்பத்தோன்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(பீமன் அனுமானை விலகச் சொல்லியதும், தமக்குச் சக்தியில்லாமையால் தம் வாலைத்தூக்கி அப்பால் போட்டுச் செல்லும்படி அவர் பீமனுக்குச் சொல்லியதும், அவன் அதனை அசைக்கவும் முடியாமல் அவருடைய வரலாற்றை வினவியதும், அவர் தம் வரலாற்றைக்கூறி ராமகதையைச் சொல்லத்தொடங்கியதும்)

புத்திமானும் வானரேந்திரருமான அவருடைய இந்தவசனத்தைக் கேட்டு, அளவற்ற பராக்கிரமுள்ளவனும் வீரனுமான பீமஸேனன், அப்பொழுது கூறலானான்: 'நீர் யார்? எதற்காக வானர சரீரத்தை அடைந்திருக்கிறீர்? பிராம்மண வர்ணத்திற்கடுத்த வர்ணத்தானான க்ஷத்திரியன் உம்மை வினவுகிறான். (அவன்) குருபரம்பரையில் வந்தவன், சந்திர வம்சத்திற்பிறந்தவன், குந்திதேவியினால் கர்ப்பத்தில் தாங்கப்பட்டவன்; பாண்டவன், வாயுவின் புத்திரன், பீமஸேனனென்று பிரஸித்திபெற்றவன்' என்று சொன்னான். வாயுபுத்திரரான அந்த அனுமான், பீமஸேனனுடைய அந்த வாக்கியத்தைப் புன்சிரிப்போடு ஏற்றுக்கொண்டு, வாயுபுத்திரனை அவனைப்பார்த்து, 'நான் ஒரு குரங்கு, உனக்கு இஷ்டப்படி வழியை விடமாட்டேன், போதும்; திரும்பிச்செல். நீ அழிவை அடையாதே' என்று சொன்னார். பீமஸேனன், 'வானரமே! அழிவோ மற்றதோ உண்டாகட்டும். உன்னை நான் கேட்கவில்லை. வழியை விடு; எழுந்திரு. என்னிடத்தினின்று துன்பத்தை நீ அடையவேண்டாம்' என்று சொன்னான். அனுமான், 'எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. நான் முதுமையால் துன்புறுகிறேன். அவச்யம் போகவேண்டுமானால் என்னைத் தாண்டிச்செல்வாயாக' என்று சொன்னார். பீமன், 'நிர்க்குணரான பரமாத்மா உன் தேகத்தை வியாபித்துக்கொண்டிருக்கிறார். ஞானத்தாலறியத்தக்க அவரை நான் அவமதிக்கமாட்டேன், தாண்டமாட்டேன்.

சராசரங்களைப் படைத்துப் பாதுகாப்பவரான அந்தப் பரமாத்மா வைச் சாஸ்திரங்களால் நான் அறியாமலிருந்தால், அனுமான் ஸமுத்திரத்தைத் தாண்டினதுபோல உன்னையும் மலையையும் தாண்டுவேன்' என்று சொன்னான். அனுமான், 'நரஸ்ரேஷ்டனே! கடலைத்தாண்டிய அந்த அனுமானென்பவன் யார்? நான் உன்னைக் கேட்கிறேன். முடியுமானால் சொல்' என்று சொன்னார். பீமன், 'வானரராஜரும் ராமபத்னியைத் தேடுவதற்காக நூறுயோஜனை அகலமுள்ள கடலை ஒரு பாய்ச்சலால் தாண்டியவரும் குணங்களால் புகழத்தக்கவரும் புத்தி பராக்கிரமம் தேகபலம் ஆகிய இவைகளுடன் கூடியவரும் ராமாயணத்தில் மிகவும் புகழ்பெற்று வரும் ஸ்ரீமானுமான வானரஸ்ரேஷ்டர் எனக்கு ப்ராதா. என்னுடைய பிராதாவான அவர் மிக்க வீர்யமுள்ளவர். பலத்திலும் பராக்கிரமத்திலும் யுத்தத்திலும் [1] தேஜஸிலும் நான் அவருக்கு ஒப்பானவன். உன்னைச் சிக்ஷிப்பதில் நான் வல்லவன். ஒரு காரணத்தினால் இந்த இடத்திற்கு வந்தேன். எழுந்திரு எனக்கு வழியைவிடு இப்பொழுது என் ஆண்மையைப் பார். என்னுடைய கட்டளையைச் செய்யாவிடில் உன்னை யமலோகத்தை அடைவிப்பேன்' என்று சொன்னான். ஹனுமான், அவனைப் பலத்தால் அதிகமதங்கொண்டவனாகவும் கைகளின் வீர்யத்தினால் கர்வங்கொண்டவனாகவும் அறிந்து, அவனை உள்ளத்தினால் பரிஹஸித்து, 'தோஷமற்றவனே! கோபம் தணிவாயாக. முதுமையால் எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. என்மீது கருணையினால் இந்த வாலை நகர்த்திவிட்டுச் செல்லக்கடவாய்' என்று சொன்னார்.

ஹனுமான் இவ்வாறு சொல்லியவுடன், தன்னுடைய புஜபலத்தால் கர்வங்கொண்ட பீமன், அவரை, 'வீர்யமும் பராக்கிரமமுமில்லாதவர்' என்றும், 'வீர்யமும் பராக்கிரமுமற்ற இந்தக் குரங்கை இப்பொழுது இங்கே வேகத்தோடு வாலைப்பிடித்து யமலோகத்தை அடைவிக்கிறேன்' என்றும் மனத்தினால் நினைத்தான். பிறகு, பீமன், சிரித்துக்கொண்டு, அந்தப் பெரிய வானரருடைய வாலை அவமதிப்புடன் பிடித்தான்; (அதனை) அசைப்பதற்கும் முடியாதவனானான். மஹாபலசாலியான பீமன், உயர்ந்து நிற்கிற இந்திராயுதம் போன்ற வாலை மறுபடியும் இரண்டு கைகளாலும் மேலே தூக்கினான்; இரு கைகளாலுங்கூடத் தூக்க முடியாதவனானான். பீமன் புருவங்கள் மேலேறினவனும் விழிபிதுங்கினவனும் புருவங்

1 தேஜஸா என்பது மூலம்.

கள் நெரிந்து சோர்ந்த முகமுள்ளவனும் உடல் வேர்த்தவனு
மானான்; அதனைத் தூக்குவதற்கும் இயலாதவனானான். பிறகு,
ஸ்ரீமானான பீமன், வாலைத் தூக்குவதில் முயன்றும் (முடியாமல்),
ஹனுமானுடைய பக்கத்தை அடைந்து வெட்கத்தால் முகங்கவிழ்ந்து
நின்றான். குந்தீ புத்திரன், (அவரைத்) தண்டனிட்டுக் கை குவித்
துக்கொண்டு, 'வானரோத்தமரே! கருணை புரிவீராக. என்னு
டைய துடுக்கான சொல்லைப் பொறுக்கக் கடவீர். நீர் ஸித்தரா?
அல்லது தேவரா? அல்லது கந்தர்வரா? அல்லது யக்ஷரா? நீர்
யார்? என்னால் வினவப்பட்ட நீர் சொல்லக்கடவீர். வானர
உருவத்தைத் தரித்துக்கொண்டிருக்கிற நீர் யார்? மிக்க கைவன்
மையுள்ளவரே! இது ரஹஸ்யமாயில்லாமல் நான் கேட்கத்தக்கதா
கவுமிருந்தால் சொல்லவேண்டும். சிஷ்யன்போல உம்மைக் கேட்
கிறேன். குற்றமற்றவரே! உம்மைச் சரணமடைந்தவனாக இருக்
கிறேன்' என்று சொன்னான்.

ஹனுமான், 'பகைவர்களை அடக்குகிறவனே! பாண்டுநந்தனா!
என்னை அறிவதில் உனக்கு அவா இருத்தலால், முழுமையும் மிச்ச
மின்றி நீ கேள். தாமரையிதழ்போன்ற கண்களுள்ளவனே!
நான், கேஸரி என்கிற வானரனுடைய பத்னியினிடத்தில் உலகங்
களுக்கு ஆயுளான வாயுவுக்குப் பிறந்த ஹனுமானென்கிற பெய
ருள்ள வானரன். மிக்க பலசாலிகளான எல்லா வானரயூதபதி
களும், எல்லா வானரர்களுக்கும் அரசர்களான ஸூர்ய புத்திர
னான ஸுக்ரீவனையும் இந்திர புத்திரனான வாலியையும் அடுத்திருந்
தார்கள். பகைவரை வாட்டுபவனே! காற்றுக்கு நெருப்போடு நட்பு
உண்டாவதுபோல எனக்கு ஸுக்ரீவனோடு நட்பு உண்டாயிற்று.
பிறகு, ஸுக்ரீவன், ஏதோ ஒரு காரணத்தினால் தமையனான வாலி
யினால் துரத்தப்பட்டு என்னுடன் ரிஷ்யமூகமலையில் நெடுங்காலம்
வஸித்தான். பிறகு, விஷ்ணுவானவர் மானிடவடிவத்துடன் தசரத
புத்திரரும் வீரரும் மஹாபலமுள்ளவருமான ராமராக (அவதரித்
து) பூமியில் ஸஞ்சரித்தார். வில்பிடித்தவர்களுள் சிறந்தவரான
அவர், பிதாவுக்குப் பிரியத்தைச் செய்யவிரும்பி, மனைவியுடனும்
தம்பியுடனும் வில்லைக் கையிலேந்தித் தண்டகாரண்யத்தை அடைந்
தார். குற்றமற்றவனே! ராக்ஷஸராஜனும் பலசாலியும் துராத்மாவு
மான ராவணன் அப்பொழுது பொன்போன்றவையும் ரத்னம்போன்
றவையுமான புள்ளிகளால் பலநிறமுள்ள மான்வடிவங்கொண்ட மாரீச
னென்கிற ராக்ஷஸனால் அந்த நரஶ்ரேஷ்டரை வஞ்சிக்கச் செய்து

அவருடைய மனைவியைக் கபடத்தால் ஜனஸ்தானத்தினின்று வலிந்து கவர்ந்தான்.

---

## நூற்றைம்பதாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ரா பர்வம். (தொடர்ச்சி)

(ஹனுமான் ராமகதை முழுமையும் பீமனுக்குச் சொல்லியது)

மனைவி கவரப்பட்ட அந்த ராகவர், தம்பியுடன் மனைவியைத் தேடிக்கொண்டு சென்று, மலைச் சிகரத்தில் வானரஸ்ரேஷ்டனான ஸுக்ரீவனைக் கண்டார். மகாத்மாவான அந்த ராகவருக்கு அவனோடு நட்பு உண்டாயிற்று. அவர் வாலியைக்கொன்று ராஜ்யத்தில் ஸுக்ரீவனை அமர்த்தினார். அந்த ஸுக்ரீவன் ராஜ்யத்தைப்பெற்று ஸீதையைத் தேடுவதில் நூறுநூறாகவும் ஆயிரமாயிரமாகவும் வானரர்களை அனுப்பினான். நரோத்தமனே! புஜபலமுள்ளவனே! பிறகு, நான், கோடிக்கணக்கான வானரர்களுடன், ஸீதையைத் தேடிக்கொண்டு தென்திசையைக் குறித்துக் கிளம்பினேன். பிறகு, மிக்க வலிமைபொருந்திய ஸம்பாதி என்கிற கழுகு, ஸீதை ராவணனுடைய வீட்டில் இருப்பதாக அவளுடைய வரலாற்றைச் சொல்லிற்று. பிறகு, நான் எளிதில் காரியங்களைச் செய்யவல்ல ராமருடைய காரியஸித்தியின்பொருட்டு நூறுயோஜனை விஸ்தாரமுள்ள கடலை விரைவாகத் தாண்டினேன். பரதஸ்ரேஷ்டனே! நான் என்னுடைய வீர்யத்தினால் முதலைகளுக்கிருப்பிடமான ஸமுத்திரத்தைத் தாண்டி ராவணனுடைய வீட்டில் தேவகன்னிகை போன்ற ஜனகராஜன் புதல்வியான ஸீதையைக் கண்டேன். நான், ராகவருடைய காதலியும் விதேஹராஜ குமாரியுமான அந்தத் தேவியை அணுகி (பேசியபின்), மாளிகைகளும் பிராகாரங்களும் வாசல்களும் உள்ள லங்கையை மிச்சமின்றி எரித்து, இந்த ராமருடைய பெயரை அவ்விடத்தில் பிரகாசமடையச்செய்து, மறுபடியும் திரும்பிவந்தேன். தாமரை மலர்போன்ற கண்களை உடையவரான ராமர், என் வாக்கியத்தைக் கேட்டுச் செய்யவேண்டியதை நிச்சயித்து, பிறரால் இதற்குமுன் கட்டப்படாத அணையைப் பெருங்கடலில் விரைவாகக் கட்டி, வானரக்கூட்டங்களால் சூழப்பட்டவராக அந்தப் பெருங்கடலைத் தாண்டினார். பிறகு, ராமர், எல்லா அரக்கர்களையும் கொன்று, ராக்ஷஸக் கூட்டங்களையுடையவனும் உலகங்களை அழச்செய்பவனும் ராக்ஷஸ

ராஜனுமான ராவணனைத் தம்பிமாரோடும் புத்திரர்களோடும் பந்துக்களோடும் கொன்று, தர்மத்தை அனுஷ்டிப்பவரும் (தம்மிடம்) பக்தியுள்ளவரும் [1] அன்புடன் அனுஸரிப்பவர்களிடம் அன்புள்ளவருமான விபீஷணனை ராக்ஷஸர்களுக்கு அரசராக லங்காராஜ்யத்தில் பட்டாபிஷேகஞ்செய்து, பின்பு, ஸீதையை, நஷ்டமாய்ப்போன வேதத்தை மீட்டுவந்ததுபோல மீட்டுவந்தார். பிறகு, புகழ்மிக்கவரும் ரகுநந்தனரும் பிரபுவுமான ராமர், பதிவிரதையான அந்தப் பத்னியுடன் கூடவே அங்கிருந்து பகைவரால் எதிர்த்துப் போரிய முடியாத அயோத்தியென்னும் தமது நகரத்தை அடைந்து அதில் வஸித்தார். பிறகு, அரசர்களுள் மிகச்சிறந்தவரான ராமர் ராஜ்யத்தில் நிலைபெறுத்தப்பட்டார். தாமரைமலர் போன்ற கண்களையுடையவரான அந்த ராமரை, 'பகைவரை அழிப்பவரே! ராமரே! உம்முடைய இந்தக் கதையானது உலகங்களில் எவ்வளவு காலமிருக்குமோ அவ்வளவுகாலம்வரையில் நான் உயிர் வாழக்கடவேன்' என்று நான் வரத்தை வேண்டினேன். அவரும், 'அப்படியே ஆகட்டும்' என்று சொன்னார். பகைவர்களை அடக்குபவனே! பீம! ஸீதையின் அருளாலும், திவ்யமான போகங்கள் இவ்விடத்திலிருக்கிற என்னை, நான் விரும்பியபடி, எப்பொழுதும் வந்தடைகின்றனவன்றோ? ராமர் பதினோராயிரவருஷம் அரசு செலுத்தினார்; பிறகு, தமது இருப்பிடமான வைகுண்டத்தையடைந்தார். ஐயா! தோஷமற்றவனே! அந்த ஸீதையின் அருளால், இந்த இடத்தில் எப்பொழுதும் அப்ஸரஸ்களும் கந்தர்வர்களும் அந்த வீரருடைய சரித்திரத்தைப் பாடி என்னை மகிழ்விக்கிறார்கள். குருநந்தன! இந்த மார்க்கமானது மனிதர்களால் செல்லத்தகாதது. பாரத! அதனால், நான் இந்த வழியினால் செல்லுகிற உன்னை யக்ஷனோ ராக்ஷஸனோ ஒருவனும் அவமதிக்கக் கூடாதென்றும் சபிக்கக்கூடாதென்றும் தேவர்களால் அடையப்படும் இந்த உனது வழியைத் தடுத்தேன். இது தேவலோகம் செல்வதான தேவர்களின் மார்க்கம். இதில் மனிதர்கள் செல்வதில்லை. நீ தேடிவந்த குளமும் இங்கே இருக்கிறது' என்று கூறினார்.

---

1 வேறு பாடம்.

## நூற்றைம்பத்தோராவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

---

(கடலைத் தாண்டும்போது எடுத்த பெரிய உருவத்தைக் காட்டும்படி பீமன் ஹநுமானை வேண்டினதும், அவர் அக்காலத்து மனிதர்கள் முற்காலத்துக்கேற்ற அந்த உருவத்தைப் பார்க்க முடியாதென்பதைச் சொல்லி யுகதர்மங்களைக் கூறியதும்)

பிறகு, இவ்விதம் சொல்லக்கேட்ட நீண்ட கைகளையுடைய பிரதாபசாலியான பீமன், மனங்களித்து, பிராதாவும் வானராதிபதியுமான ஹநுமானை அன்புடன் நமஸ்கரித்து, 'நான் [1] தமையனாரான (உம்மைக்) கண்டேனாதலால் என்னைக் காட்டிலும் அதிக பாக்கியமுள்ளவன் இல்லை. உமது தரிசனத்தால் எனக்கு (நீர் செய்த) அனுக்ரகம் மிகப் பெரிது; (உண்டான) திருப்தியும் மிகப் பெரிது. ஆயினும், ஆர்யரான நீர் எனது விருப்பமான இதனைச் செய்ய விரும்புகிறேன். வீரரே! உமக்கு மகராலயமான ஸாகரத்தைத் தாண்டும்பொழுதிருந்த ஒப்பில்லாத உருவத்தை நான் பார்க்கவிரும்புகிறேன். இவ்வாறு செய்தால் நான் ஸந்தோஷமுள்ளவனாவேன்; உம்முடைய சொல்லையும் நம்புவேன' என்று அழகிய வாக்கினால் கூறினான். இவ்வாறு கூறப்பட்டவரும் தேஜஸ்வியுமான அந்த ஹநுமான், சிரித்துக்கொண்டு, 'அந்த உருவமானது உன்னாலும் மற்ற எவனாலும் பார்க்கமுடியாதது. ஏனெனில், அப்பொழுது காலநிலைமை வேறாக இருந்தது; அது இப்பொழுது இல்லை. நரஶ்ரேஷ்டனே! ஆகையால், இப்பொழுது என்னுடைய (அந்த) ரூபமானது பார்க்கமுடியாதது. கிருதயுகத்தில் காலம் வேறு, த்ரேதாயுகத்தில் வேறு; த்வாபரத்திலும் வேறு. இது (பொருள்களின் சக்தி முதலியவற்றைக்) குறைக்கிற காலம். அந்த ரூபம் இப்பொழுது எனக்கு இல்லை. யுகந்தோறும் பொருள்கள் அனுஸரிப்பதுபோல், பூமியும் நதிகளும் மரங்களும் மலைகளும் ஸித்தர்களும் தேவர்களும் மஹர்ஷிகளும் காலத்தை அனுஸரிக்கிறார்கள். புருஷஶ்ரேஷ்டனே! மனிதர்களுடைய பலமும் தேகமும் பிரபாவமும் அந்தந்தக் காலத்தை அடைந்து குறைவடைகின்றன; வளர்ச்சியையுமடைகின்றன. குரு

---

[1] 'ஆர்யம்' என்பது மூலம்.

குலத்தைத் தாங்குபவனே! ஆதலால், அந்த ரூபத்தைப் பார்ப்பதில் ஆசைவேண்டாம். யுகத்தை நான் அனுஸரிக்கிறேன். காலமானது மீறிச்செல்ல முடியாததன்றோ?' என்று சொன்னார். பீமன், 'யுகங்களின் (கால) அளவையும் ஒவ்வொரு யுகத்திலுமுள்ள ஆசாரத்தையும் அறம்பொருளின்பங்களின் உண்மைகளையும் இருவினைகளையும் ஆற்றலையும் பிறப்பையும் இறப்பையும் சொல்லக்கடவீர்' என்று வினவினான்.

ஹனுமான், 'எந்த யுகத்தில் தர்மம் நிலைபெற்றிருந்ததோ அந்த க்ருதமென்னும் யுகமானது சிறந்தது. அந்த உத்தம யுகத்தில் (செய்யவேண்டிய நல்வினைகளெல்லாம்) செய்யப்பட்டே வந்தன; செய்யப்பட வேண்டியவையாக இல்லை. அந்த யுகத்தில் தர்மங்கள் வாடவில்லை; ப்ரஜைகளும் குறையவில்லை; அதனால், (அது) க்ருதயுகமென்னப்பட்டது. அது காலக்ரமத்தில் குறைவை அடைந்தது. ஐயா! க்ருதயுகத்தில் தேவர்களும் அசுரர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பன்னகர்களும் இருக்கவில்லை. அக்காலத்தில், வாங்குதலும் விற்பதுமில்லை; ருக் யஜுஸ் ஸாம வேதங்களில்லை; (பயிரிடுதல் முதலிய) மனிதருக்குரிய உழைப்பும் இல்லை. அந்த யுகத்தில் நினைத்த மாத்திரத்திலேயே பயனை கைகூடுதலைப் பெற்றார்கள். ஸந்யாஸம் (=பற்றை விடுவது) ஒன்றே தர்மமாயிருந்தது. அந்த யுகத்தில் ரோகங்களில்லை, இந்திரியங்களுக்கு (சக்தி) குறைவதில்லை, அஸூயையும் அழுகையும் அஹங்காரமும் கபடமும் சண்டையும் இல்லை; சோம்பல் ஏது! விரோதமில்லை, கோள் சொல்லுதலும் இல்லை; பயமும் இல்லை; ஸந்தாபமுமில்லை; பொறாமையும் இல்லை; மாற்சரியமும் இல்லை. அதனால், எவர் யோகிகளுக்கெல்லாம் சிறந்த கதியோ, எவர் எல்லாப் பிராணிகளுக்கும் அந்தராத்மாவோ, பரமானந்தமயமான அந்த பரமரூபியான நாராயணர் அப்பொழுது வெண்ணிறமுள்ளவராக இருந்தார். க்ருதயுகத்தில் பிராமணர்களும் க்ஷத்ரியர்களும் வைஶ்யர்களும் சூத்ரர்களும் ஆகிய மனிதர்கள் (சமம் தமம் முதலிய) லக்ஷணங்கள் இயற்கையில் அமைந்தவர்களாகவும் தத்தமக்குரிய கருமங்களில் பற்றுள்ளவர்களாகவும் இருந்தார்கள். அப்பொழுது நான்கு வர்ணத்தார்களும் முக்கியமாகப் பிரமத்தையே புகலிடமாகக் கொண்டவர்களும் பிரமத்தை அடைதற்கே உரிய ஒழுக்கமுள்ளவர்களும் பிரமத்தையே விஷயமாகக்கொண்ட ஞானமுள்ளவர்களும் பிரம

மத்தைப் பற்றின செய்கையுள்ளவர்களாகி (பிரமத்தை அடையும்) கதியை அடைந்தார்கள். வெவ்வேறான (ஜாதி) தர்மங்களையுடையவர்களாயிருந்தாலும், ஒரே தெய்வமான பிரமத்தினிடம் மனத்தைச் செலுத்தியவர்களும் (பரமம்) ஒன்றையே மந்திரமாகவும் (வேதாந்தப்ரணவமாய) ஒன்றையே விதியாகவும் தியானம் ஒன்றையே கிரியையாகவும் உடையவர்களும் வேதம் ஒன்றையே பிரமாணமாகக் கொண்டவர்களும் ஒரே மதத்தைப் பின்பற்றினவர்களுமாகிய பயனில் விருப்பத்தை விட்டுக் காலத்தில் செய்யப்பட்ட நான்கு ஆசிரமங்களுக்குமுரிய செய்கையால் உத்தம கதியை அடைந்தார்கள். ஆத்மயோகத்துடன் கூடினதும் க்ருதயுகத்தைத் தெரிவிப்பதும் அழியாததுமான நான்கு வர்ணத்தார்களுடைய இந்தத் தர்மமானது க்ருதயுகத்தில் நான்கு கால்களுள்ளதாக இருந்தது. மோக்ஷத்தை விரும்புகிற பிரம்மவித்துக்களிடம் காமமானது அற்றுப்போயிற்று. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்கிற முக்குணங்களிலில்லாத இது க்ருதயுகமென்பது. த்ரேதாயுகத்தையும் என்னிடமிருந்து கேள். அந்த யுகத்தில் யாகம் நடக்கிறது; தர்மம் ஒருகாலில் குறைவுபடுகிறது, அச்சுதரும் சிவப்பு நிறத்தை அடைகிறார், மனிதர்கள் ஸத்தியத்திலேயே சென்றார்கள்; (யாகம் முதலிய) காம்யங்களையும் தர்மங்களையும் முக்கியமாகக் கருதினார்கள். ஆதலால், யாகங்களும் தானங்களும் பலவித கிரியைகளும் நடைபெற்றன. த்ரேதாயுகத்தில் (மனிதர்கள்) கிரியையைச் செய்ததனால் பயனை அடையலாமென்று கருதிக் கிரியைகளாலும் கொடையாலும் பயனை அடைந்தார்கள். தவத்தையும் தானத்தையும் முக்கியமாகக்கொண்டு தர்மத்தினின்று தவறுவதில்லை த்ரேதாயுகத்தில் மனிதர்கள் தம் தர்மத்திலிருப்பவர்களும் கிரியைகளைச் செய்பவர்களுமாயிருந்தார்கள். த்வாபரயுகத்தில் தர்மமானது இரண்டுகால்கள் குறைந்து நடந்துவருகிறது; விஷ்ணுவானவர் பொன் நிறத்தை அடைகிறார், வேதமும் நான்குவிதமாகிறது. அதனால், சிலர் நான்குவேதமுள்ளவர்களும் அப்படியே சிலர் மூன்றுவேதமுள்ளவர்களும் சிலர் இரண்டுவேதமுள்ளவர்களும் சிலர் ஒருவேதமுள்ளவர்களும் அப்படியே சிலர் வேதம் இல்லாதவர்களும் ஆகிறார்கள். இவ்விதம் சாஸ்திரங்கள் பிரியவே, கிரியை பலவிதமாகப்படுகிறது. ஜனங்கள் ரஜோகுணம் உள்ளவர்களாகித் தவத்திலும் தானத்திலும் நோக்கமுள்ளவர்களாகிறார்கள். ஒன்றாயிருந்த வேதத்தை (முழுமையும்) அறியமுடியாமையால் அது பலவேதங்களாகப் பிரிக்கப்பட்டது. இந்த யுகத்தில்

1 புத்திசத்தி குறைந்துபோனதால் ஸத்யத்தில் ஒருவனும் நிலைபெற்றிருக்கவில்லை. அப்பொழுது ஸத்யத்தினின்று நழுவின அவர்களுக்குப் பல நோய்களும் காமங்களும் தெய்வச்செயலான உபத்திரவங்களும் உண்டாயின. மனிதர்கள் அவற்றால் மிகவும் பீடிக்கப்பட்டுத் தவத்தைச் செய்கிறார்கள். சிலர் இம்மை இன்பத்துக்குரிய பொருள்களை விரும்பியும் ஸ்வர்க்கத்தை விரும்பியும் யாகங்களையும் செய்கிறார்கள். மனிதர்கள் த்வாபரத்தை அடைந்து அதர்மத்தால் இவ்வாறு க்ஷீணிக்கிறார்கள். குந்திபுத்ர! கலியுகத்தில் தர்மம் ஒருகாலால் நிற்கிறது. தமோகுணப்ரதானமான (கலி) யுகத்தை அடைந்து கேசவா! கருமம் நிறுமளவாகிறது. வேதங்களும் ஆசாரங்களும் அவ்வாறே தர்மங்களும் யாகங்களும் மற்றக் கிரியைகளும் அற்றுப்போகின்றன. 2 ஈதிபாதைகளும் வியாதிகளும் ஆலஸ்யமும் அப்படியே கோபமுதலிய தோஷங்களும் உபத்திரவங்களும் மனோவியாதிகளும் அப்படியே பசியினால் அச்சமும் உண்டாகின்றன. யுகங்கள் செல்லச் செல்லத் தர்மமும் குறைவடைகிறது. தர்மம் குறையக் குறைய உலகமும் குறைகிறது. உலகம் குறைந்தவுடன், உலகத்தை நடைபெறச் செய்கின்ற தர்மம் ஞானம் முதலியவைகள் குறைவடைகின்றன. யுகக்ஷயத்தில் செய்யப்பட்ட தர்மங்கள் விரும்பிய பலன்களை எதிரிடையாக்குகின்றன. ஸமீபத்தில் வரப்போகிற இது கலியுகமென்னப்படும். சிரஞ்சீவிகள் யுகத்தை அனுஸரித்தலாகிற இதனைச் செய்கிறார்கள். பகைவர்களை அடக்குபவனே! என்னை அறியும் விஷயத்தில் உனக்கு ஆவல் இருக்கிறதே. அறிவாளியான மனிதனுக்குப் பிரயோஜனமற்ற விஷயங்களில் என்ன பேச்சு: நீண்ட கைகளையுடையவனே! யுகங்களின் வரலாற்றைப்பற்றி நீ என்னைக் கேட்டது முழுமையும் உனக்குச் சொல்லப்பட்டது. க்ஷேமத்தை அடைவாயாக. நீ (திரும்பிப்) போகலாம்' என்று சொன்னார்.

---

1 வேறுபாடம், 'ஸத்குணம்' என்றும் கொள்ளலாம்.

2 மிகுமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, பகையரசர் அருகிலிருத்தல் என ஆறு, மிகுமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, வேற்றரசு, தன்னரசு, என ஏழு எனவும், மிகுமழை, மழையின்மை, விட்டில், கிளி, வேற்றரசு, தன்னரசு, யானை, காற்று என எட்டு எனவுங் கூறுவர்.

## நூற்றைம்பத்திரண்டாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ரா பர்வம். (தொடர்ச்சி)

(ஹனுமான் ஸமுத்திரத்தைத் தாண்டுகிற ஸமயத்தில் தாமெடுத்த மிகப் பெரிய உருவத்தைப் பீமனுக்குக் காட்டி நான்கு வர்ணங்களையும்பற்றிச் சொல்லியது)

பீமஸேனன், 'உம்முடைய முன்னுருவத்தைப் பாராமல் நான் எவ்விதத்தாலும் போகமாட்டேன். உமக்கு நான் அனுக்ரஹிக்கத் தக்கவனாயிருந்தால் நீர் உமது ரூபத்தைக் காண்பிப்பீராக' என்று வேண்டினான். பீமன் இவ்வாறு சொல்லக்கேட்ட ஹனுமான், நகைசெய்து, கடலைத் தாண்டும்பொழுது இருந்த ரூபத்தைக் காண்பித்தார். முன்னே ஸமுத்திரத்தைத் தாண்டுகிற ஸமயத்தில் தமக்கிருந்த ரூபத்தைக் காட்டப் ப்ராதாவுக்குப் பிரியத்தைச் செய்யவிரும்பிப் பெரிய சரீரத்தை எடுக்க ஆரம்பித்தார். பிறகு, அவருடைய தேகமானது 1 உயரத்தாலும் அகலத்தாலும் மிக வளர்ந்தது. அவ்விருந்த காந்தியுள்ள ஹனுமான் மரங்களுடன் கூடின வாழைக்காட்டை மறைத்துக்கொண்டு விந்தியம் போல உயரத்தையும் அடைந்து மிக உயர்ந்த பருத்த சரீரமுள்ளவராக அந்த இடத்தில் நின்றார். சிவந்த கண்களையுடையவரும் கூர்மையான தெற்றுப்பற்களுள்ளவரும் புருவநெறித்த கண்களுள்ளவருமான ஹனுமான், நீண்ட வாலைச் சுழற்றிக்கொண்டு, இரண்டாவது மலைபோலத் திசைகளை வியாபித்து நின்றார். கௌரவ நந்தனனான பீமன், அப்பொழுது ப்ராதாவினுடைய அந்தப் பெரிய ரூபத்தைப் பார்த்து ஆச்சர்யமடைந்தான், அடிக்கடி ஸந்தோஷத்தையும் அடைந்தான். பீமன், தேஜஸ்ஸோடு கூடின ஸூர்யனைப் போலவும், பொன்னாலாகிய மலையைப் போலவும், மிக விளங்குகிற ஆகாசத்தைப் போலவும் இருக்கிற அந்த ஹனுமானைப்பார்த்துக் கண்களை மூடிக்கொண்டான். ஹனுமான், பீமஸேனனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு, 'குரூத்வஹனே! இப்பொழுது எனது ரூபத்தை இவ்வளவு மட்டிலே நீ பார்க்கச் சக்தி உள்ளவன். இதனைக் காட்டிலும் அதிகமாக என் மனம் விரும்பிய அளவும் நான் வளருவேன். பீம! பகைவரினிடையில் (என்னுடைய) மூர்த்தியானது சக்தியினால் அதிகமாக வளர்கிறது'

---

1 'ஆயாமம்' என்பது மூலம்

என்று சொன்ன வாயுகுமாரனைப் பீமன், அற்புதமாகவும் மகா பயங்கரமாகவும் விந்தியமலைக்கு ஒப்பாகவும் இருக்கிற ஹனுமானுடைய அந்தச் சரீரத்தைப் பார்த்துத் தடுமாற்றமடைந்தான். பிறகு, தளராத தன்மையுள்ள பீமன், மயிர் மிகச் சிலிர்த்துக் கைகளைக் குவித்துக்கொண்டு, நேரிலிருக்கிற ஹனுமானைப் பார்த்து, 'பிரபுவே! உம்முடைய இந்தச் சரீரத்தின் பெரிதான பிரமாணம் பார்க்கப்பட்டது. மகாவீரியமுள்ளவரே! நீர் உமது சரீரத்தை உம்முடைய விருப்பப்படி சுருக்கக் கடவீர். உதித்த ஸூரியன் போன்றவரும் அளத்தற்கரியவரும் அவமதிக்க முடியாதவரும் மைநாகமலை போன்றவருமான உம்மைப் பார்ப்பதற்கு நான் சக்தியற்றவனாக இருக்கிறேன். வீரரே! நீர் பக்கத்திலிருக்கும்பொழுது ராமர் ராவணனைத் தாமே எதிர்த்துச் சென்றாரென்பது என்னுடைய மனத்துக்கு இப்பொழுது மிகப் பெரிய ஆச்சரியமாயிருக்கிறது. நீர் உம்முடைய தோள்வன்மையை அடுத்துப் போர்வீரர்களுடனும் ராவணனுடனும் கூடின அந்த லங்கையை விரைவில் அழிப்பதற்குச் சக்தியுள்ளவர். வாயுபுத்ரரே! உம்மாலடைய முடியாதது ஒன்றுமில்லை. பரிவாரங்களுடன் கூடிய ராவணன் யுத்தத்தில் உமக்குப் போதாதவன்' என்று சொன்ன பீமன் இவ்வாறு சொல்லைக் கேட்ட வானரோத்தமனான ஹனுமான், பிறகு, இனிமையாகவும் கம்பீரமாகவும் இருக்கிற வாக்கினால், 'பாரத! நீண்ட கைகளுள்ளவனே! நீ சொல்லுகிறது உண்மையே. பீமஸேனா! அந்த ராக்ஷஸாதமன் எனக்கு ஒருவனுக்கே போதாதவன். லோககண்டகனான அந்த ராவணன் என்னால் கொல்லப்பட்டால், ராகவருடைய கீர்த்தியானது அழிந்துபோகும். அதனால், இது உபேக்ஷிக்கப்பட்டது. வீரரான அந்த ராமர் பரிவாரங்களுடனிருந்த அந்த ராவணனைக் கொன்று ஸீதையைத் தமது பட்டணத்திற்கு அழைத்துவந்தார், மனிதர்களினிடையில் கீர்த்தியையும் நிலைநாட்டினார். விரிவான அறிவுள்ளவனே! ஆகையால், பிராதாவின் பிரியத்திலும் ஹிதத்திலும் பற்றுதலுள்ளவனான நீ வாயுவினால் பாதுகாக்கப்பட்டு இடையூறில்லாத க்ஷேமமான வழியோடு செல்வாயாக. கௌரவர்களுள் சிறந்தவனே! இது உனக்கு ஸௌகந்திக வனத்திற்குப் போகும்வழி. யக்ஷர்களாலும் ராக்ஷஸர்களாலும் காக்கப்பட்ட குபேரனுடைய உத்யானத்தை நீ பார்ப்பாய். நீ வலிமையினால் ஸ்வயமே புஷ்பங்களைப் பறிக்காதே. மனிதன் தேவதைகளை முக்கியமாகப் பெருமைப்படுத்தவேண்டுமன்றோ! பரதர்களுள் சிறந்தவனே! பாரத! பூஜைகளாலும் ஹோமங்க

னாலும் நக்ஷத்ரங்களாலும் மந்திரங்களாலும் பக்தியினாலும் தேவர்கள் அருளைச் செய்கின்றார்களன்றோ? அப்பா! ஸாஹஸம் செய்யாதே. உன்னுடைய கடமையைக் காக்கக்கடவாய். சொந்தக் கடமையை நிலைநிறுத்துவதையே தர்மமென்று அறி. 1 அவஸரப்படாதே. பிருஹஸ்பதி போன்றவர்களாலும் தம் கடமையை அறியாமலும் பெரியோர்களை அடுக்காமலும் 2 தர்மத்தை அறிதல் இயலாது. எந்த விஷயத்தில், அதர்மமும் தர்மமென்று சொல்லப்படுகிறதோ, தர்மமும் அதர்மமென்று சொல்லப்படுகிறதோ மதிமான்கள் மயங்குகிற அந்த விஷயத்தைப் பகுத்தறியவேண்டும். தர்மமானது ஆசாரத்தினின்று உண்டாகிறது. வேதங்கள் தர்மத்தினின்று உண்டாயின. வேதங்களிலிருந்து யஜ்ஞங்கள் உண்டாயின. யஜ்ஞங்களால் தேவர்கள் நிலைநிறுத்தப்பட்டார்கள். தேவர்கள் வேதங்களாலும் தர்மசாஸ்திரங்களாலும் சொல்லப்பட்ட யாகங்களால் நிலைநிறுத்தப்படுகின்றார்கள். மனிதர்கள், பிருஹஸ்பதியினாலும் சுக்கிரராலும் சொல்லப்பட்ட நீதிகளால் நிலைநிறுத்தப்படுகின்றார்கள். பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களால் வரி வாங்குதல், சுரங்கங்களினின்று பொன் வெள்ளி ரத்னங்கள் முதலியவைகளைத் தோண்டி எடுத்தல், வர்த்தகம், விவஸாயவேலைகள், கால்நடைகளைப் போஷித்தல், கூலிவேலை ஆகிய இந்தத் தொழில்களால் எல்லாம் நிலைநிறுத்தப்படுகின்றன. அறிஞர்களான (முதல் மூன்று வர்ணத்தார்களுக்கும்) 3 த்ரயீ, தண்டநீதி, 4 வார்த்தா என வித்தைகள் மூன்று. நன்கு உபயோகப்படுகிற அவைகளால் உலகத்தின் ஜீவனம் நடைபெறுகிறது. அந்த லோகயாத்திரையானது பூமியில் (தத்தம்) தொழிலால் செய்யப்படாமல் போனால், வைதிக தர்மமில்லாமலும் தண்டநீதியில்லாமலும் இந்த உலகம் வரம்பு அறுபட்டுவிடும். இந்தப் பிரஜைகள் வார்த்தாதர்மத்தில் இல்லாவிட்டால் அழிந்துவிடுவர். நன்றாக நடத்தப்படுகிற இந்த மூன்று தொழில்களாலும் மனிதர்கள் புண்ணியத்தையும் உண்டுபண்ணிக

---

1 'கம்டஸ்வ' என்பது வேறுபாடம், 'போதபூர்வம் அநுதிஷ்டஸ்வ' என்பது பழையவுரை, 'அறிந்து அனுஷ்டிப்பாயாக' என்பது அதன் பொருள்.

2 'தர்மார்த்தௌ' என்பது வேறுபாடம், 'அறப்பொருள்களை' என்பது அதன் பொருள். 3 மூன்று வேதங்கள் 4 பயிரிடுதல், வாணிகம், பசுக்காத்தல்

கொள்ளுகிறார்கள். இருப்பவர்களுக்குக் கேவல ஸாத்விகமான [1] மோக்ஷமென்கிற தர்மம். யாகம்செய்தல், வேதமோதுதல், ஈதல் ஆகிய மூன்றும் மூன்று வர்ணத்தார்களுக்கும் பொதுவான கர்மங்களென்று ஸ்மிருதிகளால் கூறப்பட்டிருக்கின்றன. பிராம்மணர்களுக்கு வேட்பித்தல் ஓதுவித்தல் ஆகிய இரண்டும் ஏற்றலும் தொழில்களாம், க்ஷத்ரியர்களுக்குக் காத்தல் தொழிலாம், வைஸ்யர்களுக்கு (ஆடுமாடுகளை) வளர்த்தல் தொழிலாம், சூத்ரர்களுக்கு த்விஜர்களுக்குப் பணிசெய்வது தொழிலாம், சொல்லப்படுகின்றன. சூத்ரர்கள் பிக்ஷை எடுத்தலையும் ஹோமத்தையும் விரதங்களையும் செய்யலாகாது. குருவினுடைய (=எஜமானனுடைய) வீட்டிலேயே வசிக்கவேண்டும். குந்தீநந்தன! இங்கே இந்தக் கர்மங்களுள் க்ஷத்ரியதர்மமான பாதுகாப்பு உன்னுடைய தொழில். நீ விநயமுள்ளவனும் புலன்களை அடக்கினவனுமாகி உன் தொழிலை அடையக்கடவாய். பெரியோர்களுடன் ஆலோசித்து யோக்யர்களும் புத்திமான்களும் சாஸ்திரங்களில் தேர்ச்சியடைந்தவர்களுமான (மந்திரிகளால்) உதவப்பெற்றவன் தண்டத்தினை ஆள்கிறான் (அங்ஙனமின்றி) [2] வ்யஸனமுள்ளவன் அவமதிக்கப்படுகிறான். அரசன் நிக்ரஹானுக்ரஹங்களால் நன்றாக நீதியைச் செலுத்தும்பொழுது உலகத்தினுடைய வரன்முறைகள் நன்கு அமைக்கப்பட்டவைகளாகின்றன. ஆகையால், தேசத்திலும் (கோட்டை முதலிய) அரண்களிலும் பகைவர்களிடத்திலும் நண்பர்களிடத்திலும் சேனைகளிடத்திலும் நிலைமையையும் வளர்ச்சியையும் அப்படியே குறைவையும் நித்யம் சாரர்களால் அறியவேண்டும். அரசர்களுக்கு உபாயமும் சாரர்களும் புத்தியும் மந்த்ராலோசனையும் பராக்கிரமமும் சிக்ஷையும் ரக்ஷையும் ஸாமர்த்தியமும் கார்யங்களைச் சாதிப்பவையாம். ஸாமம், தானம், பேதம், தண்டம், உபேக்ஷை இவற்றைச் சேர்த்தோ தனித்தனியோ உபயோகித்தலால் காரியங்களை ஸாதிக்கவேண்டும். பரதஸ்ரேஷ்ட! எல்லா நீதிகளும் சாரர்களும் மந்த்ராலோசனையை மூலமாகக் கொண்டவர்கள். நீதிசாஸ்திரத்தை நன்கு ஆராய்ந்தவர்களும் அத்தன்மையுள்ளவர்களுமான பெரியோர்களுடன் மந்த்ராலோசனை

---

1 'ருதம்' என்பது வேறுபாடம், 'ஆத்மஞானம்' என்பது பழைய உரை. 2 ஸபாபர்வம் 19, சாந்திபர்வம் 181, 289-ம் பக்கங்களின் குறிப்புகளில் காண்க.

செய்யவேண்டும். ஸ்திரீயோடாவது மூடனோடாவது சிறுவனோடாவது பேராசையுள்ளவனோடாவது அற்பனோடாவது [1] பயித்தியக் குறியுள்ளவர்களுடனாவது ரஹஸ்யமான விஷயங்களை ஆலோசிக்கக் கூடாது. கற்றறிந்தவர்களுடன் ஆலோசிக்கவேண்டும், திறமையுள்ளவர்களால் காரியங்களைச் செய்விக்கவேண்டும், நண்பர்களைக்கொண்டு [2] நீதி செலுத்தலைச் செய்விக்கவேண்டும். மூடர்களை எல்லாக் காரியங்களிலும் விலக்கவேண்டும். தர்மகாரியங்களில் தார்மிகர்களையும் பொருள் சம்பந்தமான காரியங்களில் கற்றறிந்தவர்களையும் ஸ்திரீகளிடம் (காவலாக) நபும்ஸகர்களையும் குரூரமான காரியங்களில் குரூரர்களையும் ஏவவேண்டும். காரியங்களில் செய்யத்தக்கது தகாததென்னும் விஷயத்தில், பகைவருடைய நிச்சயத்தையும் பலாபலத்தையும் [3] தன்னைச் சேர்ந்தவர்களிடத்தினின்றும் பகைவரைச் சேர்ந்தவர்களிடத்தினின்றும் அறியவேண்டும். நல்லபுத்தியுடன் தன்னைச் சரணமடைந்த ஸாதுக்களின் விஷயத்தில் அனுக்ரஹத்தைச் செய்யவேண்டும். வரம்புமீறிச் செல்லுகிற அயோக்யர்களிடங்களில் நிக்ரஹத்தைச் செய்யவேண்டும். எப்பொழுது அரசன் நிக்ரஹத்திலும் அனுக்ரஹத்திலும் நன்கு செல்லுகிறானோ அப்பொழுது உலகத்தின் மரியாதையானது நன்கு நிலைநாட்டப்பட்டதாகிறது. பார்த்த! பின்பற்றுதற்குரியதான இந்த ராஜதர்மமானது உனக்குச் சொல்லப்பட்டது. நீ, விநயத்தில் நிலைபெற்றவனாகி, அந்தத் தர்மத்தை உனக்கு அமைந்த தர்மப்படியு பரிபாலனம் செய்வாயாக. எப்படி பிராமணர்கள் தவத்தினாலும் தமத்தாலும் பொறிகளின் அடக்கத்தாலும் யாகங்களாலும் ஸ்வர்க்கத்தை அடைகிறார்களோ எப்படி வைசியர்களும் தானத்தாலும் விருந்தளித்தலாலும் கர்மங்களாலும் நல்லகதியை அடைகிறார்களோ, எப்படி சூத்ரர்கள் த்விஜர்களுடைய சுச்ரூஷையினால் உத்தமகதியை அடைகிறார்களோ அப்படியே க்ஷத்ரியர்கள் பூமியில் துஷ்ட நிக்ரஹங்களாலும் சிஷ்டபரிபாலனங்களாலும் ஸ்வர்க்கத்தை அடைகின்றனர். விருப்புவெறுப்பு அற்றவர்களும் பேராசை இல்லாதவர்களும் கோபமில்லாதவர்களுமாகி நன்கு நீதிசெலுத்துகிறவர்கள் ஸாதுக்களடைகிற உலகங்களை அடைகிறார்கள்.

---

1 வேறுபாடம்.    2 வேறுபாடம்.

3 'சாரர்களிடத்தினின்றும், பரிதானம் முதலியவற்றால் ஆசையூட்டப் பண்ணப்பட்ட பகைவர் பக்ஷத்தாரிடத்தினின்றும்' என்பது பழைய உரை.

## நூற்றைம்பத்துமூன்றாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(ஹனுமான் பெரிய உருவத்தைச் சுருக்கிக்கொண்டு பீமனைத் தழுவி வரன்கொடுத்து அனுப்பியதும், அவன் கந்தமாதனமலையில் ஸௌகந்திகமுள்ள குளத்தைக் கண்டதும்.)

பிறகு, ஹனுமான், தம் இச்சைப்படி வளர்ந்திருக்கிற அந்தப் பெரிய தேகத்தை அடக்கிக்கொண்டு, பீமஸேனனை மறுபடியும் கைகளால் தழுவினர். பாரதரே! பிராதாவினால் கட்டிக்கொள்ளப்பட்ட அந்தப் பீமனுடைய ச்ரமமானது உடனே நீங்கிவிட்டது. எல்லாமும் அனுகூலமாயின; பலமும் உண்டாயிற்று. அதிகபலமுள்ள பீமன், 'எனக்கு நிகரான பலசாலி இல்லை' என்று நினைத்தான். பிறகு, ஹனுமான், கண்களில் நீர் ததும்ப மறுபடியும் பீமனை அழைத்து, அன்புகாரணமான கண்ணீரால் தடுமாற்றமுள்ள குரலுடன், 'வீர! உன் இருப்பிடத்தைக் குறித்துப்போ. ஸந்தர்ப்பங்களில் என்னை நினைக்கக் கடவாய். குருச்ரேஷ்டனே! நான் இங்கு இருப்பதாக ஒருவருக்கும் தெரிவியாதே. வலிமைமிக்கவனே! குபேரனுடைய அரண்மனையிலிருந்து அனுப்பப்பட்ட தேவஸ்திரீகளும் கந்தர்வஸ்திரீகளும் இங்கு வருவதற்கு இது ஸமயம். (உன்னைப் பார்த்ததனால்) என்னுடைய கண்ணும் பயனுள்ளதாயிற்று. பீம! உன்னைத் தொட்டு மானிடதேகத்தின் பரிசத்தை அடைந்து, ரகுகுலத்தில் அவதரித்தவரும் ராமனென்கிற பெயருள்ளவரும் உலகத்தாரின் மனத்தை மகிழ்விப்பவரும் ஸீதையின் முகமாகிற தாமரை மலருக்கு ஸூர்யனாயிருப்பவரும் ராவணனாகிற அந்தகாரத்திற்கு ஸூர்யனாயிருப்பவருமான விஷ்ணுவை நினைக்கும்படி செய்யப்பட்டேன். வீரனே! குந்தீபுத்ரா! ஆகையால், என்னைப் பார்த்தது உனக்குப் பயனுள்ளதாகுக. பாரத! நீ ப்ராதாவாயிருத்தலை முன்னிட்டு வரத்தைக் கேட்பாயாக. ஹஸ்திநாபுரத்தை அடைந்து அற்பர்களான திருதராஷ்ட்ர புத்திரர்களைக் கொல்லவேண்டுமானால், நான் இதனை உடனே செய்வேன். மிக்க பலசாலியே! கல்லினால் அந்த ஹஸ்திநாபுரத்தை நொறுக்கவேண்டுமானாலும் துரியோதனனைக் கட்டி

இப்பொழுதே உன்னிடம் கொண்டுவரவேண்டுமென்றாலும் உன்னுடைய இந்த விருப்பத்தை இப்பொழுதே நான் செய்வேன்' என்று சொன்னார்.

பீமஸேனனே, மஹாத்மாவான ஹனுமானுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, மிக்க மனமகிழ்ச்சியுடன் அவரைப் பார்த்து, 'வானரஶ்ரேஷ்டரே! உம்மால் எனக்கு எல்லாம் செய்யப்பட்டவைகளே. மிக்க புஜபலம் அமைந்தவரே! உமக்கு மங்களமுண்டாகுக. உம்மைப் பிரார்த்திக்கிறேன். என் விஷயத்தில் கருணை செய்வீராக. வீர்யமுள்ளவரே! நாதரான உம்மால் பாண்டவர்கள் எல்லாரும் நாதருள்ளவர்களானார்கள். உம்முடைய ப்ரபாவத்தினாலேயே நாங்கள் எல்லாச் சத்ருக்களையும் ஜயிப்போம்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக் கேட்ட ஹனுமான், பீமஸேனனைப் பார்த்து, 'ப்ராதாவாயிருப்பதாலும் ஸ்நேகத்தாலும் உனக்குப் ப்ரியத்தைச் செய்வேன். மிக்க வலிமை உடையவனே! வீரனே! சிறந்த வல்லமையுள்ள பகைவர் படையில் நுழைந்து நீ ஸிம்மநாதத்தைச் செய்யும்பொழுது, நான் உன்னுடைய அந்தச் சத்தத்தை யுத்தத்தில் கேட்டவுடனே, உன்னுடைய பகைவர்கள் உயிர் துறக்கக்கூடிய என்னுடைய சத்தத்தால் விருத்தியடையச் செய்வேன். விஜயனுடைய த்வஜத்தில் இருந்துகொண்டு, பயங்கரமானவையும் பகைவர்களுடைய வலிமையைக் குறைப்பவையுமான ஒலிகளை வெளியிடுவேன். அதனால், நீங்கள் பகைவர்களை எளிதில் கொல்வீர்கள்' என்று சொன்னார்.

ஹனுமான், அப்பொழுது, பாண்டவர்களை மகிழ்விப்பவனை பீமனைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்து அவனுக்கு வழியையுஞ் சொல்லி, அந்தவிடத்திலேயே மறைந்தார். அந்த வானரஶ்ரேஷ்டர் சென்றவுடன், பலசாலிகளுக்குள் சிறந்தவனான பீமனும், அந்த வழியினால் பெரிதான கந்தமாதனத்தில் செல்லலானான்; ஹனுமானுடைய சரீரத்தையும் பூமியில் நிகரில்லாத (அவருடைய) காந்தியையும் நினைத்துக்கொண்டும், தாசரதியினுடைய பெருமையையும் ஆற்றலையும் நினைத்துக்கொண்டும் சென்ற பீமன், அப்பொழுது, ஸௌகந்திகவனத்தை அடையும் விருப்பத்தால், மனத்துக்கினியவையான அந்தக் காடுகளிலும் சோலைகளிலும் மலர்ந்த தாமரை மலர்களால் விசித்ரமான தடாகங்களிலும் நதிகளிலும் பலவகை மலர்களால் விசித்ரமான பூத்திருக்கிற காடுகளிலும் திரிந்தான்.

பாரதரே! மழை பொழிகின்ற மேகங்களின் கூட்டங்கள்போல இருப்பவையும் சேற்றினால் நனைக்கப்பட்டவையுமான மதயானைக் கூட்டங்களை அப்பொழுது பார்த்தான். காந்தியுள்ளவனான அவன், வழியில், வெருண்ட விழியுள்ளவைகளும் பெண்மான்களுடன் இருப்பவைகளும் புல்லைக் கௌவிக்கொண்டிருப்பவைகளுமான மான்களுடன்கூடின காட்டைப் பார்த்துக்கொண்டு விரைவாகச் சென்றான். பீமஸேனன் எருமைகளாலும் பன்றிகளாலும் வேங்கைகளாலும் அடையப்பட்ட மலையில் சௌர்யத்தால் பயமற்றவனாகப் பிரவேசித்தான். த்ரௌபதியின் சொல்லை வழியுணவாக உடையவனும் பயங்கரமான பராக்ரமமுள்ளவனுமான பீமன், காட்டில் மலர்களால் கிளைகள் தாழ்ந்திருப்பவைகளும் சிவந்த தளிர்களால் அழகியவைகளும் காற்றினால் அசைக்கப்பட்டவைகளுமான மரங்களால் அழைக்கப்படுகிறவன் போன்றவனும், தாமரைமொட்டுக்களாகிற கை குவித்தலைச் செய்தவைகளும் மதங்கொண்ட வண்டுகளால் அடையப்பட்டவைகளும் இனிய துறைகளும் வனங்களுமுள்ளவைகளுமான தாமரை ஓடைகளை வழியில் தாண்டிச் செல்லுகிறவனும், பூத்திருக்கிற மலைத் தாழ்வரைகளில் மனமும் கண்களும் பற்றியவனுமாகி, பிறகு, பிற்பகலில் மான்கள் சூழ்ந்துள்ள காட்டில் பொன்மயமான மாசற்ற தாமரை மலர்களுடன் கூடியதும் அன்னங்களோடும் நீர்க்காக்கைகளோடும் கூடியதும் சக்ரவாகப் புட்களால் விளங்குகின்றதும் அந்த மலைக்குத் தொடுத்துப் போடப்பட்ட பரிசுத்தமான தாமரை மலர்களுள்ள மாலைபோன்றதுமான ஒரு[1] நதியைக் கண்டான். மகா பலசாலியான அவன், அந்த நதியில், மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறதும் இளஞ்சூரியனைப்போன்ற காந்தியுள்ளதுமான பெரிய ஸௌகந்திக மலர்களின் கூட்டத்தைக் கண்டான். பாண்டு குமாரனான பீமன், அதனைப்பார்த்து, விரும்பியதை மனத்தினால் அடைந்தவனாகி, வனவாஸத்தால் துன்பத்தை அடைந்திருக்கிற மனைவியை மனத்தால் அடைந்தான்.

---

1 இது சில இடங்களில் ஓடையென்றும் கூறப்படுகிறது.

இப்பொழுதே உன்னிடம் கொண்டுவரவேண்டுமானாலும் உன்னுடைய இந்த விருப்பத்தை இப்பொழுதே நான் செய்வேன்' என்று சொன்னார்.

பீமஸேனனோ, மஹாத்மாவான ஹநுமானுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, மிக்க மனமகிழ்ச்சியுடன் அவரைப் பார்த்து, 'வானரஸ்ரேஷ்டரே! உம்மால் எனக்கு எல்லாம் செய்யப்பட்டவைகளே. மிக்க புஜபலம் அமைந்தவரே! உமக்கு மங்களமுண்டாகுக. உம்மைப் பிரார்த்திக்கிறேன். என் விஷயத்தில் கருணை செய்வீராக. வீர்யமுள்ளவரே! நாதரான உம்மால் பாண்டவர்கள் எல்லாரும் நாதனுள்ளவர்களானார்கள். உம்முடைய ப்ரபாவத்தினாலேயே நாங்கள் எல்லா சத்ருக்களையும் ஜயிப்போம்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக் கேட்ட ஹநுமான், பீமஸேனனைப் பார்த்து, 'ப்ராத்ருபாவத்தினாலும் ஸ்நேகத்தினாலும் உனக்குப் பிரியத்தைச் செய்வேன். மிக்க வலிமை உடையவனே! வீரனே! சிறந்த பாணங்களையுடைய பகைவர் படையில் நுழைந்து நீ ஸிம்மநாதத்தைச் செய்யும்பொழுது, நான் உன்னுடைய அந்தச் சத்தத்தை யுத்தத்தில் கேட்டவுடனே, உன்னுடைய பகைவர்கள் உயிர் துறக்கத்தக்க என்னுடைய சத்தத்தால் விருத்தியடையச் செய்வேன். விஜயனுடைய த்வஜத்தில் இருந்துகொண்டு, பயங்கரமானவையும் பகைவர்களுடைய வலிமையைக் குறைப்பவையுமான ஒலிகளை வெளியிடுவேன். அதனால், நீங்கள் பகைவர்களை எளிதில் கொல்வீர்கள்' என்று சொன்னார்.

ஹநுமான், அப்பொழுது, பாண்டவர்களை மகிழ்விப்பவனான பீமனைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்து அவனுக்கு வழியைச் சொல்லி, அங்கேயே மறைந்தார். அந்த வானரஸ்ரேஷ்டர் சென்றவுடன், பலசாலிகளுள் சிறந்தவனான பீமனும், அந்த வழியினால் பெரிதான கந்தமாதனத்தில் செல்லலானான், ஹநுமானுடைய சரீரத்தையும் பூமியில் நிகரில்லாத (அவருடைய) காந்தியையும் நினைத்துக்கொண்டும், தாசரதியினுடைய பெருமையையும் ஆற்றலையும் நினைத்துக்கொண்டும் சென்றான். பீமன், அப்பொழுது, ஸௌகந்திகவனத்தை அடையும் விருப்பத்தால், மனத்துக்கினியவையான அந்தக் காடுகளிலும் சோலைகளிலும் மலர்ந்த தாமரை மலர்களால் விசித்ரமான தடாகங்களிலும் நதிகளிலும் பலவகை மலர்களால் விசித்ரமான புஷ்பித்திருக்கின்ற காடுகளிலும் திரிந்தான்.

பாரதரே! மழை பொழிகின்ற மேகங்களின் கூட்டங்கள்போல் இருப்பவையும் சேற்றினால் நனைக்கப்பட்டவையுமான மதயானைக் கூட்டங்களை அப்பொழுது பார்த்தான். காந்தியுள்ளவனான அவன், வழியில், வெருண்ட விழியுள்ளவைகளும் பெண்மான்களுடன் இருப்பவைகளும் புல்லைக் கௌவிக்கொண்டிருப்பவைகளுமான மான்களுடன்கூடின காட்டைப் பார்த்துக்கொண்டு விரைவாகச் சென்றான். பீமஸேனன் எருமைகளாலும் பன்றிகளாலும் வேங்கைகளாலும் அடையப்பட்ட மலையில் சௌர்யத்தால் பயமற்றவனாகப் பிரவேசித்தான். த்ரௌபதியின் சொல்லை வழியுணவாக உடையவனும் பயங்கரமான பராக்கிரமமுள்ளவனுமான பீமன், காட்டில் மலர்களால் கிளைகள் தாழ்ந்திருப்பவைகளும் சிவந்த தளிர்களால் அழகியவைகளும் காற்றினால் அசைக்கப்பட்டவைகளுமான மரங்களால் அழைக்கப்படுகிறவன் போன்றவனும், தாமரைமொட்டுக்களாகிற கை குவித்தலைச் செய்தவைகளும் மதங்கொண்ட வண்டுகளால் அடையப்பட்டவைகளும் இனிய துறைகளும் வனங்களுமுள்ளவைகளுமான தாமரை ஓடைகளை வழியில் தாண்டிச் செல்லுகிறவனும், பூத்திருக்கிற மலைத் தாழ்வரைகளில் மனமும் கண்களும் பற்றியவனுமாகி, பிறகு, பிற்பகலில் மான்கள் சூழ்ந்துள்ள காட்டில் பொன்மயமான மாசற்ற தாமரை மலர்களுடன் கூடியதும் அன்னங்களோடும் நீர்க்காக்கைகளோடும் கூடியதும் சக்கரவாகப் புட்களால் விளங்குகின்றதும் அந்த மலைக்குத் தொடுத்துப் போடப்பட்ட பரிசுத்தமான தாமரை மலர்களுள்ள மாலைபோன்றதுமான ஒரு [1] நதியைக் கண்டான். மகா பலசாலியான அவன், அந்த நதியில், மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறதும் இளஞ்சூரியனைப்போன்ற காந்தியுள்ளதுமான பெரிய ஸௌகந்திக மலர்களின் கூட்டத்தைக் கண்டான். பாண்டுகுமாரனான பீமன், அதனைப்பார்த்து, விரும்பியதை மனத்தினால் அடைந்தவனாகி, வனவாஸத்தால் துன்பத்தை அடைந்திருக்கிற மனைவியை மனத்தால் அடைந்தான்.

---

1 இது சில இடங்களில் ஓடையென்றும் கூறப்படுகிறது.

இப்பொழுதே உன்னிடம் கொண்டுவரவேண்டுமானாலும் உன்னுடைய இந்த விருப்பத்தை இப்பொழுதே நான் செய்வேன்' என்று சொன்னார்.

பீமஸேனனே, மஹாத்மாவான ஹனுமானுடைய அந்த வாக்கியத்தைக் கேட்டு, மிக்க மனமகிழ்ச்சியுடன் அவரைப் பார்த்து, 'வானரஸ்ரேஷ்டரே! உம்மால் எனக்கு எல்லாம் செய்யப்பட்டவைகளே. மிக்க புஜபலம் அமைந்தவரே! உமக்கு மங்களமுண்டாகுக. உம்மைப் பிரார்த்திக்கிறேன். என் விஷயத்தில் கருணை செய்வீராக. வீரியமுள்ளவரே! நாதரான உம்மால் பாண்டவர்கள் எல்லாரும் நாதனுள்ளவர்களானார்கள். உம்முடைய பலத்தினாலேயே நாங்கள் எல்லாச் சத்ருக்களையும் ஜயிப்போம்' என்று சொன்னான். இவ்வாறு சொல்லக் கேட்ட ஹனுமான், பீமஸேனனைப் பார்த்து, 'ப்ராதாவாயிருப்பதாலும் ஸ்நேகத்தாலும் உனக்குப் பிரியத்தைச் செய்வேன். மிக்க வலிமையை உடையவனே! வீரனே! சிறந்த வலிமையுள்ள பகைவர் படையில் நுழைந்து நீ ஸிம்மநாதத்தைச் செய்யும்பொழுது, நான் உன்னுடைய அந்தச் சத்தத்தை யுத்தத்தில் கேட்டவுடனே, உன்னுடைய பகைவர்களுடைய உயிரைத் துறக்கச்செய்யும் என்னுடைய சத்தத்தால் விருத்தியடையச் செய்வேன். விஜயனுடைய த்வஜத்தில் இருந்துகொண்டு, பயங்கரமானவையும் பகைவர்களுடைய வலிமையைக் குறைப்பவையுமான ஒலிகளை வெளியிடுவேன். அதனால், நீங்கள் பகைவர்களை எளிதில் கொல்வீர்கள்' என்று சொன்னார்.

ஹனுமான், அப்பொழுது, பாண்டவர்களை மகிழ்விப்பவனான பீமனைப் பார்த்து இவ்வண்ணம் உரைத்து அவனுக்கு விடையைச் சொல்லி, அந்தவிடத்திலேயே மறைந்தார். அந்த வானரஸ்ரேஷ்டர் சென்றவுடன், பலசாலிகளுள் சிறந்தவனான பீமனும், அந்த வழியினால் பெரிதான கந்தமாதனத்தில் செல்லலானான்; ஹனுமானுடைய சரீரத்தையும் பூமியில் நிகரில்லாத (அவருடைய) காந்தியையும் நினைத்துக்கொண்டும், தாசரதியினுடைய பெருமையையும் ஆற்றலையும் நினைத்துக்கொண்டும் சென்றான். பீமன், அப்பொழுது, ஸௌகந்திகவனத்தை அடையும் விருப்பத்தால், மனத்துக்கினியவையான அந்தக் காடுகளிலும் சோலைகளிலும் மலர்ந்த தாமரை மலர்களால் விசித்ரமான தடாகங்களிலும் நதிகளிலும் பலவகை மலர்களால் விசித்ரமான பூத்திருக்கிற காடுகளிலும் திரிந்தான்.

பாரதரே! மழை பொழிகின்ற மேகங்களின் கூட்டங்கள்போல இருப்பவைகளும் சேற்றினால் நனைக்கப்பட்டவைகளுமான மதயானைக் கூட்டங்களை அப்பொழுது பார்த்தான். காந்தியுள்ளவனான அவன், வழியில், வெருண்ட விழியுள்ளவைகளும் பெண்மான்களுடன் இருப்பவைகளும் புல்லைக் கௌவிக்கொண்டிருப்பவைகளுமான மான்களுடன் கூடின காட்டைப் பார்த்துக்கொண்டு விரைவாகச் சென்றான். பீமஸேனன் எருமைகளாலும் பன்றிகளாலும் வேங்கைகளாலும் அடையப்பட்ட மலையில் சௌர்யத்தால் பயமற்றவனாகப் பிரவேசித்தான். த்ரௌபதியின் சொல்லை வழியுணவாக உடையவனும் பயங்கரமான பராக்ரமமுள்ளவனுமான பீமன், காட்டில் மலர்களால் கிளைகள் தாழ்ந்திருப்பவைகளும் சிவந்த தளிர்களால் அழகியவைகளும் காற்றினால் அசைக்கப்பட்டவைகளுமான மரங்களால் அழைக்கப்படுகிறவன் போன்றவனும், தாமரைமொட்டுக்களாகிற கை குவித்தலைச் செய்தவைகளும் மதங்கொண்ட வண்டுகளால் அடையப்பட்டவைகளும் இனிய துறைகளும் வனங்களுமுள்ளவைகளுமான தாமரை ஓடைகளை வழியில் தாண்டிச் செல்லுகிறவனும், பூத்திருக்கிற மலைத் தாழ்வரைகளில் மனமும் கண்களும் பற்றியவனுமாகி, பிறகு, பிற்பகலில் மான்கள் சூழ்ந்துள்ள காட்டில் பொன்மயமான மாசற்ற தாமரை மலர்களுடன் கூடியதும் அன்னங்களோடும் நீர்க்காக்கைகளோடும் கூடியதும் சக்கரவாகப் புட்களால் விளங்குகின்றதும் அந்த மலைக்குத் தொடுக்கப் போடப்பட்ட பரிசுத்தமான தாமரை மலர்களுள்ள மாலைபோன்றதுமான ஒரு [1] நதியைக் கண்டான். மகா பலசாலியான அவன், அந்த நதியில், மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறதும் இளஞ்சூரியனைப்போன்ற காந்தியுள்ளதுமான பெரிய ஸௌகந்திக மலர்களின் கூட்டத்தைக் கண்டான். பாண்டு குமாரனான பீமன், அதனைப்பார்த்து, விரும்பியதை மனத்தினால் அடைந்தவனாகி, வனவாஸத்தால் துன்பத்தை அடைந்திருக்கிற மனைவியை மனத்தால் அடைந்தான்.

---

1 இது சில இடங்களில் ஓடையென்றும் கூறப்படுகிறது.

## நூற்றைம்பத்து நான்காவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(ஸௌகந்திக ஓடையில் இறங்கக் கருதிய பீமனை நோக்கி, அதனைக் காக்கிற அரக்கர்கள் அவனுடைய விருப்பத்தை வினவியது)**

அந்தப் பீமன், கந்தமாதனத்திற் சென்று, அழகிய வனங்களுள்ளதும் அழகியதுமான கைலாஸகிரியின் உச்சியில், அழகியதும் அரக்கர்களால் பாதுகாக்கப்பட்டதும் குபேரனுடைய வாஸஸ்தானத்திற்கு அருகில் மலை அருவிகளால் உண்டானதும் மனத்துக்கு மிக இனியதும் விசாலமான நிழலுள்ளதும் பலவகை மரங்களாலும் கொடிகளாலும் சூழப்பட்டதும் பச்சை நிறமுள்ள தாமரை இலைகளால் மூடப்பட்டதும் திவ்யமானதும் ஸ்வர்ணமயமான தாமரை மலர்களுள்ளதும் பலவகைப் பறவைகளின் இனங்களால் நிரம்பியதும் நல்ல கரைகளுள்ளதும் சேறில்லாததும் மிக அழகியதும் நல்ல ஜலமுள்ளதும் மலையின் தாழ்வரைகளிலமைந்ததும் உலகத்துக்கு விசித்திரமாக இருப்பதும் மங்களகரமானதும் அற்புதமான காட்சியுள்ளதுமான தாமரை ஓடையைக் கண்டான். குந்தீநந்தனனான பீமன், அந்த ஓடையில், அம்ருதம் போல் ருசியுள்ளதும் குளிர்ந்ததும் லேசாக இருப்பதும் மங்களகரமானதும் மாசற்றதுமான ஜலத்தைக் கண்டான்; அதனை அதிகமாகப் பருகவும் பருகினான். அழகியதும், திவ்யமான ஸௌகந்திக மலர்களால் சூழப்பட்டதும், பொன்மயமானவைகளும் சிறந்த வாஸனையுள்ளவைகளும் வைடூர்யமயமான சிறந்த காம்புள்ளவைகளும் பலபல நிறமுள்ளவைகளும் மனமகிழ்ச்சியை உண்டுபண்ணுகின்றவைகளும் அன்னப்பறவைகளாலும் நீர்க்காக்கைகளாலும் அசைக்கப்பட்டவைகளும் நிர்மலமான பூந்தாதுக்களை வெளிவிடுகின்றவைகளுமான தாமரை மலர்களால் மூடப்பட்டதும், ராஜராஜனும் மஹாத்மாவுமான குபேரனுக்கு விளையாடுமிடமும், கந்தர்வர்களாலும் அப்ஸரஸ்களாலும் தேவர்களாலும் நன்கு மதிக்கப்பட்டதும், தேவரிஷிகளாலும் யக்ஷர்களாலும் அப்படியே கிம்புருஷர்களாலும் அடையப்பட்டதும், ராக்ஷஸர்களாலும் கின்னரர்களாலும் குபேரனாலும் காக்கப்பட்டதுமான அந்த ஓடையைப் பார்த்தவுடன், மஹாபலசாலியும் குந்தீநந்தனனுமான பீமஸேனன் மிக்க மகிழ்ச்சியுள்ளவனானான்; தெய்வத்தன்மை பொருந்தியதும் பெரியதுமான ஸௌகந்திக ஓடையை நன்றாகப்

பார்த்து மகிழ்ச்சியடைந்தான். அதனைப் பலவிதமான ஆயுதங்களையும் உடைகளையும் தரித்தவர்களான க்ரோதவசர்களென்ற ராக்ஷஸர்கள் ஆயிரவர் அரசன் கட்டளையினால் பாதுகாக்கின்றார்கள். அவர்கள், மான்தோல்களை உடுத்தவனும் பொன்னாலாகிய தோள்வளைகளை அணிந்தவனும் வீரனும் பயங்கரனும் பயங்கரமான பராக்ரமமுள்ளவனும் ஆயுதங்களையுடையவனும் கத்தி கட்டிக்கொண்டவனும் பயமில்லாதவனும் பகைவர்களை அடக்குகிறவனும் ஸௌகந்திகமலர்களை விரும்பினவனும் அருகில் வந்து நின்றவனுமான பீமனைப் பார்த்தவுடன், 'ஆயுதங்களோடு கூடியவனும் மான்தோலுடுத்தவனுமான இந்தப் புருஷச்ரேஷ்டன் இங்கே செய்ய விரும்பி வந்த காரியத்தை நீங்கள் வினவக்கடவீர்' என்று ஒருவரோடொருவர் கூக்குரலிட்டுச் சொன்னார்கள். பிறகு, எல்லா ராக்ஷஸர்களும், நீண்ட புஜங்களுள்ள தேஜஸ்வியான வ்ருகோதரனை அணுகி, 'நீ யார்? சொல். முனிவேஷத்தைப் பூண்டவனும் ஆயுதங்களையுடையவனுமாகக் காணப்படுகிறாய். பேரறிவாளனே! நீ வந்த காரியத்தைச் சொல்' என்று வினவினார்கள்.

---

## நூற்றைம்பத்தைந்தாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

**(பீமன் தான் ஸௌகந்திக மலர்களுக்காக வந்ததைக் காவற்காரர்களுக்குத் தெரிவித்து மலர்பறிக்க முயன்றதும், அவர்கள் பீமனைத் தடுத்துக் கொல்லக் கருதியதும், அவன் அந்த அரக்கர்களைக் கதையினால் அடித்ததும், அவர்கள் அந்த அடியைத் தாங்கமாட்டாமல் குபேரனிடம் முறையிட்டதும், குபேரன் பீமனுடைய செய்கையைப் புகழ்ந்ததும்.)**

பீமன், 'ராக்ஷஸர்களே! நான் பாண்டு மகாராஜருடைய புதல்வன்; பீமஸேனன் என்னும் பெயருள்ளவன்; தர்மராஜனை அடுத்துப் பிறந்தவன்; ப்ராதாக்களோடு விசாலமான பதரியை வந்தடைந்தேன். அவ்விடத்தில், பாஞ்சாலியானவள், நிச்சயமாக இந்த இடத்திலிருந்தே காற்றினால் அடித்துக் கொண்டுவரப்பட்டதும் மிகச் சிறந்ததுமான ஒரு ஸௌகந்திகமலரைக் கண்டாள். அவள் பல (ஸௌகந்திக மலர்களை) விரும்புகிறாள். ராக்ஷஸர்களே!

யுள்ள ஸௌகந்திகமென்னும் தாமரைமலர்களைப் பறித்துச் சேர்த்தான். பிறகு, பீமனுடையபலத்தால் துரத்தப்பட்ட அந்த க்ரோதவசர்கள், எளிமை மிக்கவர்களாகிக் குபேரனை அடைந்து, யுத்தத்தில் பீமனுக்குள்ள வீர்யத்தையும் பலத்தையும் உள்ளபடி உரைத்தார்கள். தேவனான (குபேரன்), அவர்களுடைய அந்த வசனத்தைக் [1] கேட்டு நகைத்துப் பிறகு அவர்களைப் பார்த்து, 'பீமன் த்ரௌபதிக்காக ஸௌகந்திகமலர்களை இஷ்டப்படி பறித்துக் கொள்ளட்டும். இது எனக்குத் தெரிந்தவிஷயம்' என்று சொன்னான். பிறகு, அவர்கள், குபேரனிடம் அனுமதிபெற்று, கோபமற்றவர்களாகிக் கௌரவச்ரேஷ்டனான பீமனை நோக்கிச் சென்றார்கள்; அந்த இடையில் ஒருவனுக்குத் தனியிஷ்டப்படி விளையாடிக்கொண்டிருக்கிற பீமனையும் கண்டார்கள்.

---

## நூற்றைம்பத்தாறாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி)

(யுதிஷ்டிரர், அபசகுனங்களைக் கண்டு பீமஸேனனைக்காணமல் திரௌபதியிடம் பீமன்சென்ற இடத்தை வினவியதும், அவள் பீமன் மலர் பறிக்கச் சென்றதைத் தெரிவித்ததும், யுதிஷ்டிரர் கடோத்கசனுடைய உதவியினால் பீமனிடம் சென்றதும், அவர்கள் குபேரனால் நன்குமதிக்கப்பெற்று அர்ஜுனனைப் பார்க்க விருப்பத்தால் கந்தமாதனத்தில் ஸுகமாக வசித்ததும்)

பரதஸ்ரேஷ்டரே! பிறகு, பீமன், மிக்கசிறந்தவைகளும் திவ்யமானவைகளும் அநேகமானவைகளும் பலரூபங்களுள்ளவைகளும் மாசற்றவைகளுமான அந்த மலர்களைப் பறிக்கத்தொடங்கினான். பிறகு, [2] பரற்கற்களைக் கொண்டுபோவதும் கடுமையாகத் தாக்குவதுமான பெருங்காற்றானது, யுத்தத்தை நெருங்குவதாகத் தெரிவித்துக்கொண்டு சடிதியில் தோன்றியது. இடியுடன்கூடிய மிக்க பயங்கரமான பெரிய உற்கையும் விழுந்தது. ஸூர்யனும், கிரணங்கள் மறைக்கப்பட்டவனும் இருளால் சூழப்பட்டவனும் ஒளி இழந்தவனுமானான். பீமன் பராக்கிரமத்தைக் காட்டியபொழுது

---

1 வேறுபாடம். 2 ஒருசொல் விடப்பட்டது.

பயங்கரமான இடி முழக்கமும் உண்டாயிற்று; பூமியும் நடுங்கியது; மண்மாரியும் பெய்தது; திசைகள் சிவப்பு நிறமுள்ளவையும் மிருகங்களும் பக்ஷிகளும் பயங்கரமாகக் கத்துகின்றவையுமாயின. எல்லாம் இருளால் மூடப்பட்டனவாயின. ஒன்றுமே அறியப்படவில்லை. பயங்கரமான மற்றும் பல உத்பாதங்களும் அங்கே தோன்றின. பேசுகிறவர்களுள் சிறந்தவரும் தாம தேவதைக்குப் புத்திரருமான யுதிஷ்டிரர், அந்த ஆச்சரியத்தைக் கண்டு, 'எவனோ நம்மை அவமதிக்கப் போகிறான். யுத்தத்தில் கொடிய மதங்கொண்ட பாண்டவர்களே! ஸன்னத்தர்களாக இருங்கள். உங்களுக்கு மங்களம். உத்பாதங்களைப் பார்க்கிறேனாதலால் நம்முடைய பராக்கிரமத்துக்கு இது காலமென்பது வெளிப்படை' என்று கூறினார்.

அரசா, இவ்வாறு சொல்லி, பிறகு, நாற்புறமும் பார்த்தார். தர்மபுத்திரரும் பகைவரை அடக்குபவருமான யுதிஷ்டிரர், பீமனைக் காணாமல், பிறகு, அருகிலிருந்த கிருஷ்ணையையும் நகுல ஸஹதேவர்களையும் பார்த்து, யுத்தத்தில் பயங்கரமான செய்கையுள்ள ப்ராதாவான பீமனைப்பற்றி, 'பாஞ்சாலி! பீமனைக் காணவில்லையே! ஸாஹஸத்தில் விருப்பமுள்ள அந்த வீரன் எந்தக் காரியத்தைச் செய்ய விரும்புகிறான்? அல்லது, எந்த ஸாஹஸமான காரியத்தைச் செய்தான்? பெரிய யுத்தத்தைத் தெரிவிக்கின்றவையும் கடுமையான பயத்தைக் காண்பிக்கின்றவையுமான உத்பாதங்கள் இதோ திடீரென்று நாற்புறங்களிலும் தோன்றி இருக்கின்றன' என்று வினவினார். அவ்வாறு சொல்லுகின்ற அவரைப் பார்த்து, நல்ல மனமுள்ளவளும் காதலியும் பிரியத்தைச் செய்யவிரும்புகிறவளும் அழகிய நகைப்புள்ளவளும் ராஜமகிஷியுமான கிருஷ்ணையானவள், 'அரசரே! காற்றினால் அடித்துக் கொண்டுவரப்பட்ட ஒரு ஸௌகந்திகமலரை நான் ப்ரீதியுடன் பீமஸேனனிடம் இப்போது கொடுத்தேன். மேலும், நான் வீரரான பீமஸேனனை, 'இந்தப் புஷ்பம்போன்ற பல புஷ்பங்களை நீர் பார்த்தால், அவைகளெல்லாவற்றையும் பறித்துக்கொண்டு விரைவில் வரக்கடவீர்' என்றும் சொன்னேன். அரசரே! தோள்வலிமையுள்ள அந்தப் பாண்டவர், எனக்குப் பிரியத்தைச் செய்வதின் பொருட்டு, அந்த மலர்களைக் கொண்டுவருவதற்காக இங்கிருந்து வடகிழக்குத் திசையை நோக்கிச் சென்றார். இது நிச்சயம்' என்று சொன்னாள். க்ருஷ்ணை இவ்வாறு சொல்லக்

கேட்ட வேந்தர், உடனே நகுல ஸஹதேவர்களைப் பார்த்து, 'வ்ருகோதரன் எந்த வழியினால் சென்றானோ அந்த வழியினால் நாமெல்லாரும் சேர்ந்து விரைவாகச் செல்வோம். களைத்தவர்களும் இளைத்தவர்களுமான பிராம்மணர்களை ராக்ஷஸர்கள் தூக்கிச் செல்லக் கடவர். தேவனுக்கு ஒப்பானவனே! கடோத்கச! நீயும் கிருஷ்ணையைத் தூக்கிச் செல்வாயாக. பீமன் இங்கிருந்து நெடுந்தூரம் சென்றிருப்பானென்பது என்னுடைய நிச்சயமான எண்ணம். அவன் சென்று நெடுநேரமாகிவிட்டது. அவனும் வேகத்தில் வாயுவுக்கு நிகரானவன்; பலிஷ்டன், பூமியில் தாண்டுவதில் கருடனுக்கு ஒப்பானவன்; இஷ்டப்படி ஆகாயத்திலும் எழும்பிச் செல்வான்; இறங்கவும் இறங்குவான். அரக்கர்களே! உங்களுடைய பலத்தைக்கொண்டு அவனைப் பின்தொடர்ந்து செல்வோம். ப்ரம்மவாதிகளான ஸித்தர்களிடம் அவன் முதலில் அபராதத்தைச் செய்யான்' என்று கூறினார். பரதஶ்ரேஷ்டரே! ஸௌகந்திக ஸரஸிருக்குமிடத்தை அறிந்தவர்களான கடோத்கசன் முதலிய அவர்களனைவரும் அப்பொழுது, 'அப்படியே' என்று சொல்லிவிட்டு, மனமகிழ்ந்தவர்களாகிப் பாண்டவர்களையும் அநேகர்களான அந்தப் பிராம்மணர்களையும் தூக்கிக்கொண்டு லோமசரோடு கூடியவர்களாகவே சென்றார்கள். அவர்களனைவரும் விரைவாகச் சென்று அந்தக் காட்டில் ஸௌகந்திகமென்னும் தாமரை மலர்களுள்ள மிக்க அழகிய ஓடையைக் கண்டார்கள்; அதன் கரையில் நிற்பவனும் மஹாத்மாவுமான அந்தப் பீமனையும் கொல்லப்பட்டவர்களும் விசாலமான கண்களுள்ளவர்களும் உடைந்த கண்களும் கைகளும் தொடைகளும் பிளக்கப்பட்டவர்களும் கழுத்துக்கள் நொறுக்கப்பட்டவர்களுமான யக்ஷர்களையும் கண்டார்கள். பாரதரே! பிறகு, தர்மராஜரோ, மஹாயசஸ்வியும் அந்த ஓடையின் கரையிலிருப்பவனும் கோபமுள்ளவனும் கண்கொட்டாமல் இருப்பவனும் உதட்டைக் கடித்துக்கொண்டிருப்பவனும் இருகைகளாலும் கதையை ஓங்கிக்கொண்டு நதீதீரத்தில் யுத்தத்திற்கு (ஸன்னத்தனாக) இருப்பவனும் பிரஜைகளை அழிக்கும் தருணத்தில் தண்டாயுதத்தைக் கையிலேந்திய யமனைப் போன்றவனுமான அந்தப் பீமனைப் பார்த்துத் தழுவி, [1] 'குந்தீ

---

1 'குந்தீநந்தன! என்ன காரியம் செய்தாய்? உனக்கு மங்களம். எனக்குப் பிரியத்தை விரும்புவாயாகில் இந்த ஸாஹஸ காரியத்தையும் தேவர்களுக்கு அப்ரியத்தையும் மறுபடியும் செய்யாதே' என்பது இங்கிலிஷ் மொழிபெயர்ப்பு.

நந்தன! உனக்கு மங்களம். தேவர்களுக்கும் கூட அப்ரியமான இந்த ஸாஹஸத்தை ஏன் செய்தாய்? எனக்குப் பிரியத்தை விரும்புவாயாகில் மறுபடியும் இவ்வாறு செய்யாதே' என்று இனிய சொல்லால் சொன்னார். தேவர்களுக்கொப்பான அவர்கள் பீமஸேனனுக்கு இவ்வண்ணம் உபதேசித்துத் தாமரைமலர்களைப் பறித்துக்கொண்டு அந்த ஓடையிலேயே விளையாடினார்கள். இந்தத் தருணத்தில், பருத்த தேகமுள்ளவர்களான அந்தப் பூந்தோட்டத்தினுடைய காவலாளிகள் கற்களாகிற ஆயுதங்களை எடுத்துக்கொண்டு தோன்றினார்கள். பாரதரே! அந்த ராக்ஷஸர்கள், தர்மராஜரையும் மஹரிஷியான லோமசரையும் நகுலனையும் ஸஹதேவனையும் அப்படியே மற்றப் பிராமணஸ்ரேஷ்டர்களையும் பார்த்து, எல்லாரும் விநயத்தோடு (தரையில்) விழுந்து வணங்கி, தர்மராஜரால் இன்சொல் கூறப்பட்டு, மனத்தெளிவை அடைந்தார்கள். அங்கே, அந்தக் கௌரவஸ்ரேஷ்டர்கள், காவலாளிகளால் குபேரனுக்குத் தெரிவிக்கப்பட்டார்கள். குருகுலத்தைத் தாங்குபவர்களான அவர்கள் கந்தமாதன மலையின் தாழ்வரைகளில் மகிழ்பவர்களாகி அர்ஜுனனை எதிர்பார்த்துக்கொண்டு சிலகாலம் வசித்தார்கள்.

---

## நூற்றைம்பத்தேழாவது அத்யாயம்.

## தீர்த்தயாத்ராபர்வம். (தொடர்ச்சி.)

(கந்தமாதனத்தினின்று உத்தரதேசத்தைக் குறித்துச் செல்ல எண்ணிய யுதிஷ்டிரர் அசரீரியின் சொல்லைக்கேட்டு அங்கிருந்து திரும்பித் தம்மைத் தொடர்ந்து வந்தவர்களுடன் நரநாராயண ஆச்ரமத்துக்கு மறுபடியும் வந்தது)

பிறகு, அந்த இடத்தில் வசிக்கின்ற தர்மராஜரான யுதிஷ்டிரர், ஒன்றுசேர்ந்தவர்களும் பிராமணர்களோடு இருப்பவர்களுமான தம்பிமார்களை அழைத்து, 'நாம் மங்களகரமானவைகளும் புண்ணியமானவைகளும் மனத்தை மகிழ்விப்பவைகளும் முற்காலத்தில் தேவர்களாலும் மகாத்மாக்களான முனிவர்களாலும் ஸஞ்சரிக்கப் பெற்றவைகளும் பிராமணர்களால் நன்றாகப் பூஜிக்கப்பட்டவைகளுமான தீர்த்தங்களையும் வனங்களையும் வரிசையாக

முழுமையும் தனித்தனி பார்த்தோம். ரிஷிகளுடைய பூர்வசரித்திரத்தையும் தவத்தையும் தானத்தையும் நடையையும் ராஜரிஷிகளுடைய சரித்திரத்தையும் மங்களகரமான பலவித கதைகளையும் மங்களகரமான ஆஸ்ரமங்களில் ஆங்காங்குக் கேட்டுக்கொண்டு பிராம்மணர்களோடுகூட விசேஷமாக ஸ்நானமும் செய்தோம். நீங்கள் புஷ்பங்களாலும் ஜலங்களாலும் எப்பொழுதும் தேவர்களை அர்ச்சித்தீர்கள்; கிடைத்தமட்டில் கிழங்குகளாலும் பழங்களாலும் பித்ருக்களையும் திருப்தியடையச் செய்தீர்கள். ரமணீயமான மலைகளிலும் எல்லா ஸரஸ்ஸுகளிலும் மகா புண்ணியமான ஸமுத்திரத்திலும் மகாத்மாக்களோடு நன்றாக ஸ்நானம் செய்தோம். இளா, ஸரஸ்வதி, ஸிந்து, யமுனை, நர்மதை ஆகிய ரம்யமான பல தீர்த்தங்களில் பிராம்மணர்களுடன் நன்கு ஸ்நானம் செய்தோம். கங்காத்வாரத்தைத் தாண்டி மங்களகரமான பல மலைகளையும் பலவகைப் பறவைக் கூட்டங்களோடு சேர்ந்த இமய மலையையும் விசாலமான பதரியையும் நரநாராயணாஸ்ரமத்தையும் பார்த்தோம். ஸித்தர்களாலும் தேவர்களாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்ட தேவஸம்பந்தமான ஓடையையும் கண்டோம். பிராம்மணஸ்ரேஷ்டரும் மகாத்மாவுமான லோமசரால் வரிசை தவறாமல் விசேஷத்துடன் எல்லா ஆயதனங்களும் காண்பிக்கப்பட்டன. பீம! [1] புண்யமானதும் ஸித்தர்களால் அடையப்பட்டதுமான இந்தக் குபேரனுடைய இருப்பிடத்தை எப்படி அடைவோம்? உள்ளே எப்படிச் செல்வோம்? ஆலோசிக்கக் கடவாய்' என்று சொன்னான்.

ராஜேந்திர! இவ்வண்ணம் சொல்லும்பொழுது, அசரீரிவாக்கானது, 'அடைதற்கரிய குபேரனுடைய இருப்பிடமானது அடைதற்கு முடியாதது. வேந்தே! இந்த வைஸ்ரவணாஸ்ரமத்திலிருந்து இந்த வழியினாலேயே பதரியென்று பிரஸித்திபெற்ற நரநாராயணஸ்தானத்துக்கு, வந்தபடி, திரும்பிச் செல். கௌந்தேய! அங்கிருந்து ஸித்தர்களாலும் சாரணர்களாலும் அடையப்பட்டதும் மலர்களும் கனிகளும் மிக்கதும் அழகியதுமான விருஷபர்வாவினுடைய ஆஸ்ரமத்தை அடைவாய். குந்திநந்தன! அந்த ஆஸ்ரமத்தைத் தாண்டி ஆர்ஷ்டிஷேணருடைய ஆஸ்ரமத்தில் வஸிப்பாயாக. குந்திநந்தன! அங்கிருந்து குபேரனுடைய வாஸஸ்தானத்தைப் பார்ப்பாய்' என்று உரைத்தது. இதனிடையில், தேவலோகத்து

1 வேறுபாடம்

வாஸனையைக் கொண்டுவருவதும் மங்களகரமானதும் மனத்தை மிக மகிழ்விப்பதும் குளிர்ந்ததுமான காற்று மலர்மாரியைப் பொழிந்தது.

ஆகாயத்தினின்று திவ்யமான அந்த வசனத்தைக்கேட்டு, ரிஷிகளுக்கும் பிராம்மணர்களுக்கும் அரசர்களுக்கும் மிக்க ஆச்சர்யம் உண்டாயிற்று. அந்தப் பெரிய ஆச்சர்யவசனத்தைக் கேட்டு, தௌம்யரென்கிற பிராம்மணர், 'பாண்டவ! (இதற்குமேல்) வடக்கே செல்வது ஸாத்தியப்படாது, திரும்பிச் செல்வோம்' என்று சொன்னார். பிறகு, யுதிஷ்டிரராஜர், ஆச்சர்யத்தினால் மலர்ந்த கண்களுள்ளவராகி, மறுபடியும் அந்த நரநாராயணாச்ரமத்தை வந்தடைந்து, பீமஸேனன் முதலிய எல்லாத் தம்பியர்களாலும் பாஞ்சாலியினாலும் பிராம்மணர்களாலும் சூழப்பட்டு, அப்பொழுது மிகவும் ஸுகமாக வஸித்தார்.

தீர்த்தயாத்ரா பர்வம் முற்றிற்று.

---



# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 62 | 27 | உகரஸேனன | ஆஹுகன் |
| 486 | 1 | தனமில்லாதவன ஆற்றினஜலத்தில் விழுந்து மீளாமலபோவதுபோல | வேறுபாடு கொண்டு பொரிட ஜலாபதிவ ஹமஸத்தைத் தேடிப் போல |